# திருமுன்...

கவிஞர் பொன் முருகப்பா, B.Com.,



சீரிளமைத் திறன் கொண்டவளே!
எங்கள் சிந்தையிடங் கொண்டு
இயங்கி வரும் நுண்கலையே! இன்பத்
தமிழன்னையே!

உலகத் தமிழ்மாநாட்டை ஒட்டி
முகையவிழ்ந்து நகைசெய்யும்
இப்புதுப்பொன் மலரை நின்திருமுன்
படைப்பதில் எல்லையற்ற பெருமையும்
மகிழ்ச்சியும் எய்துகின்றேன்.

அன்பன்,
மா. முத்துசாமி
மலர்க் குழுத் தலைவர்



உலகத் தமிழ் மாநாட்டுத் திறப்பாளர்
இந்தியக் குடியரசுத் தலைவர்
மேதகு டாக்டர் ஜாகீர் ஹுசேன்



உலகத் தமிழ் மாநாட்டு விழா மலரை வெளியிடும்

தமிழக ஆளுநர்

மேதகு சர்தார் உஜ்ஜல் சிங்



உலகத் தமிழ் மாநாட்டுத் தலைவர்

தமிழக முதலமைச்சர்

மாண்புமிகு பேரறிஞர் அண்ணா



திரு. சி. என். அண்ணாதுரை
முதலமைச்சர்



திரு. இரா. நெடுஞ்செழியன்
கல்வி-தொழில் அமைச்சர்



திரு. மு. கருணாநிதி
பொதுப்பணித்துறை அமைச்சர்



திரு. கே. ஏ. மதியழகன்
உணவு அமைச்சர்



திரு. ஏ. கோவிந்தசாமி
வேளாண்மைத்துறை அமைச்சர்



திரு. மா. முத்துசாமி
உள்ளாட்சித்துறை அமைச்சர்



திருமதி சத்தியவாணிமுத்து
செய்தித்துறை அமைச்சர்



திரு. எஸ். ஜே. சாதிக்பாட்சா
பொதுநலத்துறை அமைச்சர்



திரு. செ. மாதவன்
சட்ட—கூட்டுறவுத்துறை அமைச்சர்

''ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.''



# நுழைவாயில்

''கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே
வாளோடு முன்தோன்றி மூத்த குடி.''

''கன்னடமும் களி தெலுங்கும்
கவின் மலேயாளமும் துளுவும்
உன்உதரத் துதித்தெழுந்தே
ஒன்று பலவாயிடினும்
ஆரியம்போல் உலகவழக்கு
அழிந்தொழிந்து சிதையா உன்
சீரிளமைத் திறம் வியந்து
செயல் மறந்து வாழ்த்துதுமே''

''யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்குங் காணேம்''

''தமிழுக்கு அமுதென்று பேர்''

காலத்தின் தூதுவர்களாம் கவிஞர் பெருமக்கள் சூட்டிய புகழ் ஆரத்தைத் தாங்கி, சீரோடும் சிறப்போடும் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக வாழ்ந்து, வளர்ந்து, புகழ்பரப்பி நிற்கும் தமிழ் அன்னை உலகெங்குமுள்ள தமிழ் அறிந்தோர் – தமிழின் தரம் அறிந்தோர் – அறிய வேண்டும் என்ற ஆர்வம் கொண்டோர் – அனைவரையும் தான் பிறந்த

பூமியில் முதன் முறையாக வரவேற்றுப் பெருமை பெறும் இந்நன்னாளில், சான்றோர்களே உங்களை இந்த நுழைவாயிலில் சிறிது நேரம் நிற்க வைப்பதற்குப் பொறுத்தருள வேண்டுகிறேன்.

இரண்டாவது உலகத் தமிழ்க் கருத்தரங்கு மாநாட்டினை ஒட்டி உருவாகி, உங்கள் கரங்களிலே தவழும் இந்த மலரைத் தமிழ்த் தாயின் தாள்களிலே படைக்கும் பேற்றினை எண்ணும் போது இதயம் இன்பத்தால் — எல்லையற்ற மகிழ்ச்சியால் பொங்கிப் பூரிப்படைகிறது.

''யாதும் ஊரே யாவரும் கேளிர்''

என்ற பண்பினை உலகுக்கெல்லாம் வழங்கியவள் தமிழ்த்தாய்.

நிலமும், குலமும், நிறமும், மொழியும் எப்படி எப்படி மாறினாலும், உலகில் உள்ளோர் அனைவரும் அன்பால், அறிவால், அறத்தால் ஒன்றே என்று முழங்கியவள் தமிழ்த்தாய்.

வேற்றுமைகள் வேரோடு சாய்ந்து, போரே இல்லாமல் ஓய்ந்து, பசியும் பிணியும் நீங்கி, வளமும் வாழ்வும் அமைந்து, அன்பால், அறிவால், பண்பால் இணைந்து, பூபாகம் முழுவதும் ''ஒரே உலகமாக'' விளங்க வேண்டுமென்பதுதான் தமிழ்த்தாயின் கனவு. அந்த இன்பக் கனவைச் செயலாக்குவதற்குத்தான் உலகத்திற்கு ''வள்ளுவத்தை'' அளித்தாள் தமிழ் அன்னை.

''அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகுத்திக் குறுகத் தறித்த குறள்'' அறத்தின் பேராட்சிக்கு அடிப்படையாகும்.

மொழி — இலக்கியம் — பண்பாடு — கலை — வரலாறு — சமயம் — மருத்துவம் — இவையெல்லாம் சேர்ந்ததுதான் தமிழறிவு. உலக முழுவதும் பரவிக் கிடைக்கும் தமிழறிவை ஒன்று திரட்டி, உலகுக்கு உணர்த்துவதுதான் உலகத் தமிழ் மாநாட்டின் அடிப்படை ஆகும்.

முதல் உலகத் தமிழ் மாநாடு தமிழகத்தின் புறத்தில் நடந்தது.

இரண்டாவது மாநாடு தமிழ்த்தாயின் அகத்தில் நடைபெறுகிறது. உலகமே கண்டு வியக்கும் பெருவிழாவாகத் தமிழ் மண்ணிலே நடைபெறும் இம்மாநாடு தமிழ்த்தாயின் தலைமகன்—பேரறிஞர் பெருந்தகை — வள்ளுவத்தை வழிகாட்டியாகக் கொண்டு வாழும் அறிவரசர் அண்ணா அவர்களின் நல்லாட்சி என்ற மகுடத்தைத் தமிழ்த் தாய்க்குச் சூட்டித் தமிழக மக்கள் மகிழும் வேளையில் நடைபெறுவது, ஆயிரமாயிரம் ஆண்டுகளாகத் தமிழ்மொழி படைத்து வரும் வரலாற்றிற்குப் புதியதோர் அத்தியாயமாக அமைந்துள்ளது.

நுழைவாயிலில் நீண்ட நேரம் நிற்க வைத்து விட்டேன் ... வாருங்கள் உள்ளே செல்வோம்...

என்ன நின்றுவிட்டீர்கள்...

—உங்கள் அகமும் முகமும் மலர்ச்சியால் ஒளி விடுகிறதே ஏன்... புரிந்து கொண்டீர்களா... தமிழக முதல்வர் பேரறிஞர் அண்ணா அவர்கள் ஆற்றல்மிகு தமிழ் நடையில் அமுது படைத்திருக்கிறார்கள். தமிழகத்திற்குத் தனிச்சிறப்பளிக்கும் முக்கனியின் சுவையை அழகு தமிழிலே ஏற்றி, வள்ளுவத்தோடு குழைத்துப் ''பொற்காலத்தைப்'' படைத்துள்ளார்கள். அதனால்தான் உங்கள் உள்ளத்தை இழுத்து நிறுத்திவிட்டது.

சரி....வாருங்கள்.

தமிழ்த் தாய்க்குப் புகழ் சேர்த்த கவிஞர்களிலே, இந்த நூற்றாண்டில் வாழ்ந்து, சமீப காலத்தில் மறைந்த புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனை மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் நமக்கு இலக்கியமாக்கிக் காட்டுகிறார்கள்.

அடுத்து,

மாண்புமிகு கலைஞர் கருணாநிதி அவர்கள் கடல் கடந்து உலகெல்லாம் வாணிகம் நடாத்திப் புகழோடு விளங்கிய சங்க காலத் தமிழகத்தைப் ''பூம்புகார்'' எனும் எழிலோவியமாக்கி நம்முன் நிறுத்தியிருக்கிறார்கள். இதோ மேலே! இருட் புலத்தில் கவியுலகம் மருட்சியுற்ற நேரத்தில் எழும் வெள்ளியாக வந்த புதுநெறி காட்டிய புலவன் பாரதியை மாண்புமிகு திரு. முத்துசாமி அவர்கள் தெள்ளிய தமிழில் சொல்லோவியமாக்கிக் கருத்தைப் பிணிக்கின்றார்கள்.

அதைத் தொடர்கிறது, ''கவிதைப் போட்டி'' யிலே பரிசு பெற்ற ''புகாரில் — ஒரு நாள் ......'' தேன்சுவைக் கவிதை.... கவிதை இன்பத்திலே திளைத்துத் திரும்பிப் பார்த்தால்... ஒரு புறத்திலே ''மொழி'',—இன்னொரு புறத்திலே ''பண்பாடு,'' — அடுத்தாற்போல் அழகூட்டும் ''கலைகள்'', —தொடர்ந்தாற்போல் ''வரலாறு,'' —இதைத் தொடர்ந்து ''சமயம்'', — சமயத்தைக் கடந்தால் ''சித்த மருத்துவம்'' என்ற பிரிவுகளில், பல்வேறு தலைப்புகளில், அறிஞர் பெருமக்கள்—ஆராய்ச்சியாளர்கள் — மொழித்துறை வல்லுநர்கள் — இசைப் புலவர்கள்— மருத்துவ நிபுணர்கள் — தமிழின் சிறப்பை, அழகை, ஆற்றலை, அறிவுக் கருவூலத்தை அருமையாக விளக்குகிறார்கள்.

தமிழன்தான் மொழியை மூன்று பிரிவாகப் பிரித்து, அதற்கு இலக்கணமும், இலக்கியமும் கண்டவன்.

தமிழ்மொழி பெற்றெடுத்த வள்ளுவப் பெருந்தகைதான் வாழ்க்கையை மூன்றாகப் பிரித்து, அதற்கு இலக்கணமும் வகுத்தவர்.

இத்தகைய சிறப்புக்களை உலகெங்கும் பரவிக் கிடக்கும் ஆங்கில மொழியின் மூலம் நமக்கு

விளக்குகிறார்கள் ஆங்கிலப்புலமை பெற்ற பெரு மக்கள் பலர். மேலைநாட்டுப் பேரறிஞர்கள் எழுதி யுள்ள கட்டுரைகள் நம் மலருக்கு மகுடம் சூட்டு கின்றன.

ஆராய்ச்சிகள் உலகை ஆட்டிப் படைக்கும் இந்தக் காலத்திலும், தமிழ் மொழியால் எதை யும் விளக்க இயலும் என்ற பெருஞ்சிறப்பை, ஆராய்ச்சி அறிவுக்குப் படிக்கட்டாக விளங்கும் ஆங்கிலத்தின் மூலம் உலகுக்கு உணர்த்த வேண்டு மென்றுதான், வைரத்தைத் தங்கத்தில் பதித்துக் காட்டுவதுபோல், உயர்தனிச் செம்மொழியாம் தமிழின் சிறப்பை ஆங்கில மொழியின் மூலம் இந்த அறிஞர் பெருமக்கள் விளக்கியிருக்கிறார்கள்.

இப்படி மலரின் மணத்தை நுகர்ந்து பேரின் பத்தில் மூழ்கியுள்ள வேளையில் பல்வேறு மலர்களி லிருந்து தேன்துளிகளைத் திரட்டிச் செந்தேனை வடித்துக்கொடுக்க உதவும் ஈக்கள் போல, இம்மலர் உருவாகத் தன்னலம் கருதாது கருமமே கண்ணாகி உழைத்த தமிழ் அறிஞர் பெரு மக்களையும், ஓவிய வல்லுநர்களையும், தமிழ்கூறும் நல்லுலகம் மட்டுமன்றி, தமிழ்ப் பெருமையறிந்த உலகெல்லாம் மறக்காது.. மறக்காது...அன்னார் வாழ்க வாழ்க.

அவர்களுக்கெல்லாம் மலர் அமைப்புக்குழு முதல் தொண்டன் என்ற முறையில் எனது நன்றி யையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள் கிறேன்.

தமிழக வரலாற்றில் பொன்னான அத்தியாயத் தைச் சேர்க்கும் இப்புனிதப் பணியில் என்னையும் இணைத்த தமிழக அரசுக்கும், இம்மலரை உரு வாக்க எல்லாம் நல்கி ஊக்குவித்த தமிழகப் பெரு மக்களுக்கும், எனது முத்தான நண்பர் மலர்க் குழுத் தலைவர் மாண்புமிகு மா. முத்துசாமி அவர் களுக்கும், மலரைப் பெருமனத்துடன் வெளியிட இருக்கும் மேதகு தமிழக ஆளுநர் அவர்கட்கும், மலரைச்சிறப்புற ஆக்கிய வடபழனி அச்சக நண் பர்களுக்கும் இதயம் கனிந்த நன்றி கூறி, உங்களை உள்ளே அழைத்துச் செல்கிறேன்.

''இருந்தமிழே உன்னால் இருந்தேன்,
இமயவர்தம்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்''—

என்ற தமிழ் விடுதூதுக் கவியுடன் நாம் செல் வோம்.

வருக! வருக!

அன்பன்,

**எம். ஜி. ராமச்சந்திரன்.**



# உலகத் தமிழ் மாநாடு – சென்னை 1968

செயற்குழு : தலைவர் : மாண்புமிகு திரு. சி. என். அண்ணாதுரை

துணைத்தலைவர்கள் : மாண்புமிகு திரு. இரா. நெடுஞ்செழியன்
மாண்புமிகு திரு. மு. கருணாநிதி
திரு. மீ. பக்தவத்சலம்
முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்
பேராசிரியர் பில்லியாசோ

## மலர்க்குழு

தலைவர் :
**மாண்புமிகு திரு. மா. முத்துசாமி**

அமைப்புச் செயலாளர் :
**திரு. மு. ரா. பெருமாள் முதலியார்**

கட்டுரைக் குழுத் தலைவர் :
**திரு. முத்து இராசாக்கண்ணனார்**

தனி அலுவலர் :
**திரு. கி. வேங்கடசுப்பிரமணியம்**

அமைப்புக் குழுத் தலைவர் :
**மக்கள் திலகம்**
**திரு. எம். ஜி. ராமச்சந்திரன்**

செயலாளர் :
**திரு. மா. சண்முக சுப்பிரமணியம்**

புகாரில் ஒரு நாள் கவிதை ஆய்வுக் குழுத் தலைவர் :
**திரு. மா. கி. தசரதன்**

துணைத் தனி அலுவலர் :
**திரு. சு. செல்லப்பன்**

## உறுப்பினர்கள்

திரு. எஸ். ஜி. ஹாட்ஸன்
திரு. ஆர். கே. சாமி
திரு. கே. கே. கோதண்டராமன், எம்.எல்.சி.
திரு. தாணு
டாக்டர் என். சுப்பிரமணியம்
டாக்டர் எ. எல். வேணுகோபால்
திரு. அறிவழகன், எம்.எல்.சி.
திரு. ஔவை நடராசன்
திரு. கே. எஸ். மகாதேவன்
டாக்டர் கே. கே. பிள்ளை
திரு. வெங்கடகிருட்டினன்
திரு. எஸ். வடிவேலு
திரு. சாமா
திரு. திருமலை முத்துசாமி
திரு. பி. ஜி. சுந்தரராசன்
திரு. அகிலன்
திரு. கீ. இராமலிங்கனார்
திரு. தில்லைநாயகம்
திரு. பீர்முகம்மது, எம்.எல்.ஏ.

டாக்டர் வ. சுப. மாணிக்கம்
திரு. அன்புகணபதி
திரு. செல்லப்பன்
திரு. அப்துல் கபூர்
திரு. சா. கணேசன், எம்.சி.
கவிஞர் திரு. கருணானந்தம்
டாக்டர் மெ. சுந்தரம்
புலவர் அறிவுடைநம்பி
புலவர் ந. சகதீசன்
திரு. ந. இராமநாதன்
திரு. வீரப்பன்
திரு. கண்ணன்
திரு. திருநாவுக்கரசு
செல்வி சரோசினி
செல்வி அரசு மணிமேகலை
திருமதி இளமுருகு பொற்செல்வி
திருமதி அலமேலு அப்பாத்துரை
திரு. துரைமுருகன்
திரு. சனார்த்தனம்
திரு. சி. வேங்கடசாமி, எம்.ஏ.

அச்சு : வடபழநி அச்சகம், சென்னை - 26.

# பொற்காலம் காண!




மாண்புமிகு

## திரு. சி. என். அண்ணாதுரை

முதலமைச்சர், தமிழக அரசு

ஆண்டுதோறும் வருவது பொங்கல் விழா! அப்பெருவிழா நாள் ஒன்றில் பேரறிஞர் அண்ணா அவர்கள் தம்பியை முன்னிலையாக்கித் தமிழகத்திற்கு அளித்திட்ட கருத்துப் படையல், இக்கட்டுரை.

ஈண்டு வந்துள்ள உலகத் தமிழர் மாநாடெனும் பெருவிழா நாளிலும் நல்லோர் இதயங்களில் இருந்து வாழ்ந்திடத்தக்க இக்கருத்துக் கோவையைத் தமிழ் அன்பர்கட்கு விருந்தாக்கிப் படைக்கின்றோம்.

—மலர்க்குழுவினர்.

“நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு”

—(குறள்)

தமிழக மக்கள் தனிச் சிறப்பளித்துக் கொண்டாடி மகிழ்வுபெறும் திருநாள், பொங்கற் புது நாள். எங்கிருந்தோ ஒரு புத்தெழில், இந்த விழாவன்று அரசோச்ச வந்திடும் விந்தை, சிந்தைக்கு இனிப்பளிக்கக் காண்கின்றோம். இன்னல் மிகுந்த வாழ்வில் பின்னிக்கிடந்திடும் நிலையினிலுள்ள மக்களையும், இன்றோர் நாள், கன்னல் கண்டு பேசிட, செந்நெல் குவிந்திருக்க, செவ்வாழை அருகிருக்க, உழைப்பின் பயனாக உருவான பண்டமெலாம் நிறைந்திருக்க, மாடு கன்றுகளும் மேனி மினுக்குடனே – பொங்கிடுவது நாங்கள் தந்திடும் பாலன்றோ எனக் கேட்பது போல் உலவிவர, இதயம் பாடிடும் நாள்! இஞ்சியும் மஞ்சளும் இயற்கை தந்த அணிகலன் என்பதனை உணரும் நன்னாள் என்றெண்ணி, மகிழ்வுதனைப் பெற்றுத் திகழ்தல் மக்கள் இயற்கை; பொருத்தமும்கூட.

நிறைவாழ்வு, கனிச்சுவை போன்றுளது; அதனை நித்தநித்தம் பெற்றிடும் வாய்ப்புக்கிடைக்கப் பெறுதோரும், இன்றோர் நாள், எழில் மாளிகைதனை எட்டிப்பார்த்துக் களிப்படையும் 'இல்லாதான்' போல, இன்னவிதமெல்லாம் இருந்திட்டால், வாழ்வு சிறந்திடும், பயன் மிகுந்திடும், நாடு பொலிவு பெறும், வையகம் கண்டு பெருமைப்படும் என்று எண்ணி மகிழத்தக்க இன்பநாள்.

இந்நாளில், தமிழ் மரபறிந்த எவரும், அறிதுயிலிலிருந்தபடி அண்டந்தனைக் காக்கும் அரி தங்கும் வைகுந்தம்; ஆடுவதில் வல்லவர் யார்! அறிந்திடுவோம் வந்திடு! என்று உமைதனை அழைத்து, மானாட - மழுவாட முக்திக்கு வழிதேடும் பக்தர்கள் மனமாட ஆடிடும் சிவனாரின் கைலையும், இவளழகா - அவளழகா? எவள் இன்று எம் முனிவன் தவம் கலைக்க? என்று தேவர் பேசிப் பொழுதோட்டும் இந்திராபுரியும், பிறவும்பற்றிப் பேசிடுவதுமில்லை, எண்ணமும் கொள்வதில்லை.

தாள ஒலி அல்ல, தையலரின் சிலம்பு இசைக்கும் ஒலிதன்னோடு போட்டியிட்டு, கட்டழகி பெற்றெடுத்த இன்பவடிவத்தை எடுத்தணைத்து, முத்தமிடும் இளைஞன் எழுப்பிவிடும் இச்சொலிக்கும் போட்டி எழ, கண்டு கருத்தறிந்து, பண்டு நடந்ததனை எண்ணி எண்ணிப் பாட்டன் சிரித்திட, இடையே விக்கல் இருமல் கிளப்பிவிடும் ஒலியும், இன்னோரன்ன ஒலியே, இசையாகிடக் காண்கின்றோம் இத்திருநாளில்.

இந்த யுகந்தனிலே, இந்தத் தேசந்தன்னில், இன்ன குலத்தினிலே அவதரித்த மன்னவனும், அவனைக் கெடுக்கவந்த அசுரனும் போரிட்ட போது மன்னவன் முற்பிறப்பில் மாதவம் செய்தான், எனவே, அன்னவனை ரட்சித்து அசுரனைக் கொன்றிடுதல் முறை என்று, திருமாலும் 'சக்கரத்தை' அனுப்பி வைக்க, வந்தேன்! வந்தேன்! என்று துந்திபி என முழக்கி, வந்ததுகாண் திகிரி, அழிந்தான் அசுரன்; அந்தநாள், இந்நாள்; பண்டிகைநாள்! இந்நாளில், பாகும் பருப்பும் பாலினிற் பெய்து பக்குவமாய்ச் சமைத்து சக்கர வடிவமாக்கி, உண்டு உருசி பெறுவதுடன் உத்தமர்க்குத் 'தானமாக'த் தருவோர்கள் அடுத்த பிறவியிலே அரசபோகம் பெறுவார்கள், அத்திரி அருளியது ஆதிகிரந்தமொன்று, அதிலிருந்து பிரித்தெழுதி அளித்திட்டார் மாமுனிவர், அவர் வழியில் வந்தவரே இன்று புராணம் படிப்பவரும், என்றெல்லாம் கதைத்திடும் நாள் அல்ல. வலிந்து சிலர் இதற்கும் கதை கூறமுனைந்தாலும், எவர்க்கும் அஃது இனிப்பதில்லை; நெஞ்சில் புகுவதில்லை; இஃது பொங்கற் புதுநாள்! தமிழர் திருநாள்! அறுவடை விழா! உழைப்பின் பெருமையை உணர்ந்து நடத்தப்படும் நன்றி அறிவிப்பு விழா! என்ற இந்த எண்ணமே மேலோங்கி நிற்கிறது; பெருமிதம் தருகிறது; மகிழ்ச்சி பொங்கி வழிகிறது; அகமும் முகமும் மலருகிறது; வாழ்வின் பொலிவு துலங்கித் தெரிகிறது.

இந்த உலகத்தின் எழில் யாவும் பொய்யல்ல, மெய்! மெய்! எனும் உணர்வும், அந்த எழிலினையும் பயன்தனையும் நுகர்ந்திடவும், வளர்த்திடவும் முனைதல் மாந்தர் கடன் என்ற மெய்யறிவும், அந்தக் கடமையினைச் செம்மையாய்ச் செய்து முடிக்க ஆற்றல் மிகவேண்டும், அவ்வாற்றல், கூட்டு முயற்சியினால் மிகுந்த சிறப்பெய்தும் என்றதோர் நல்லறிவும், இருள் நீங்கி ஒளி காண்போர் இதயம் மலராகி இன்புற்றிருப்பதுபோல, நல்வாழ்வுதனைக் குலைக்கும் நச்சரவு போன்ற நினைப்புகளும் நிலைமைகளும், நிகண்டுகளும், அமைப்புகளும் நீடித்திருக்கவிடல் நன்றல்ல, நலம் மாய்க்கும் என்பதறிந்து, அறிவுக் கதிரினையே எங்கெங்கும் பரவச் செய்து எல்லோரும் இன்புற்று வாழ்ந்திடலே இயற்கை நீதி எனக்கொண்டு பணிபுரியும் ஆர்வமும் பெற்றிடப் பயன்படும், இந்தப் பொங்கற் புதுநாள்.

இயற்கைச் செல்வங்கள் என்னென்ன இங்குண்டு, அவை தம்மைப் புத்துலக நுண்ணறிவால் மேலும் பயன் அளிக்கும் விதமாக, திருத்தி அமைத்திட என்னென்ன முறை உண்டு என்பதெல்லாம் எண்ணி எண்ணி மகிழ்ந்திடலாம், இந்நாள் நமக்களிக்கும் நற்கருத்தைப் புரிந்து கொண்டால். புனலாடிப் பொன்னார் இழை அணிந்து பொட்டிட்டுப் பூமுடித்து, பாற்பொங்கல் சமைத்து அதில் பாகுகலந்து, பாலைச் சிரிப்புடனே பரிவுமிக்காள் தந்திட, சுவைத்திட இதழிருக்க வேறு தரும் விந்தைதான் ஏதுக்கோ என்று கேட்டிட இயலாமல் குறும்புப் பார்வையினால் அவன்கூற, பெற்றோர் அதுகண்டு பேருவகைதான் கொள்ள, இல்லமுள்ளார் எல்லோரும் இன்புற்று இருந்திடுதல் பொங்கற் புதுநாளின் பாங்கு; மறுக்கவில்லை; ஆனால் முழுப்பாங்கு என்றதனை மொழிந்திட மாட்டேன் நான்; தித்திக்கும் சுவையுடனே, சிந்திக்கவும் வைக்கும் எண்ணங்கள் பற்பலவும் பொங்கி வருவதுதான் இந்நாளின் தனிச்சிறப்பு, முழுப்பாங்கு. மலரின் எழில் கண்டு மகிழ்வது மட்டும் போதாது, மணம் பெறவேண்டுமன்றோ! அதுபோன்றே பொங்கற் புதுநாளன்று மனைதொறும் மனைதொறும் காணப்படும் கவர்ச்சிமிகு கோலம் - புறத்தோற்றம் -

கண்ணுக்கு விருந்தாகிறது. ஆனல் அதுமட்டும் போதாது; கருத்துக்கும் விருந்து வேண்டுமன்றோ! உளது! உணர்பவர்களுக்கு. உணர்பவர்களே, பொங்கற் புதுநாளின் முழுப்பயனையும் பெற்றவ ராவர். உடன்பிறந்தோரே! நீவிர், அந்நன்னேக் கத்துடன் இத்திருநாளின் தன்மையினை உணர்ந்து பயன்பெற வேண்டுமெனப் பெரிதும் விழைகின் றேன்.

திருநாளில் தன்மையை மட்டுமல்ல, காணும் ஒவ்வோர் பொருளிலும் தெரிந்திடும் புறத்தழகு மட்டும் கண்டு போதுமென்றிருத்தல் ஆகாது; அப்பொருளின் உட்பொருளை, மெய்ப்பொருளை அறிந்திடுதல் வேண்டும்; அந்த நுண்ணறிவே, நாம் காணும் பொருள்களின் முழுத்தன்மையை யும் துருவிக் கண்டிடவும், காண்பதனல் பயன் பெறவும் வழி காட்டுகிறது. பொருளின் புறத் தோற்றத்தை மட்டுமல்ல அவைகளின் தன்மை யினையும் பயனையும் நுண்ணறிவுடன் கண்டவர் தமிழர்! இன்று தமிழ் பேசிடுவோர் என்று பொதுவாக எண்ணிவிடாதே தம்பி! நான் குறிப் பிடுவது, தமிழராக வாழ்ந்த தமிழர்களை.

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு".

என்று வள்ளுவர் கூறிச் சென்றர்.

காலைக் கதிரவன், மாலை மதியம், ஆடிடும் பூங்கொடி, பாடிடும் அருவி, கொஞ்சிடுங் கிள்ளை, துள்ளிடும் வெள்ளி மீன், மருண்டவிழி மான், ஒளிவிடு விண்மீன், சிரித்திடும் முல்லை, பேசிடும் புருக்கள், பழமுதிர் சோலை, வளமிகு வயல்கள், எதுதான், தம்பி! அழகாக இல்லை! எதுதான் தம்பி! இன்பம் தராதிருக்கிறது. வா! வா! என்று வாயால் அல்ல சிறு கரத்தால் அழைத்திடும் குழவி காண்போன் களித்திடுவதுபோலத்தான், முற்றிய கதிர்நிரம்பிய வயலின் ஓரத்தில் சென்றிடும் உழவனுக்கு காற்றல் அசைந்தாடும் பயிர் மகிழ்ச்சி அளிக்கிறது. அந்தி நேரத்துச் செவ் வானத்தைக் கண்டதுண்டா? கண்டிருப்பாயே? எப்படி அந்த அழகு? உன்னைப்போய்க் கேட் கிறேனே! உன்னை முதன்முதலாகக் கண்டபோது உனக்கு வாய்த்தவளின் முகம் வெட்கத்தால் சிவந் திருக்குமே, நீ அதை அல்லவோ எண்ணிக்கொண் டிருக்கிருய்!! இருப்பினும் இதனைக் கேட்டிடு தம்பி! எழிலோவியம் நிரம்ப உளது நம்மைச் சுற்றி! ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் வகையான அழகு ததும்புகிறது. ஆனல் அந்தப் புறத்தழகு மட்டுந்தான், அதை நமக்களித்திடுகின்றன என்றல், அவை பெருமைக்குரியனவாகா. புறத் தழகு காட்டி நம்மை மகிழ்விப்பதுடன், அவை தமது தன்மையின் காரணமாக நமக்கு மிகுந்த பயனையும் வழங்குகின்றன! நம் வாழ்வு சிறப் படைய அவை துணைசெய்கின்றன! சிறப் படையவா!! வாழ்வே, அவை நமக்கு வழங் கிடுகின்றன

வானத்திலே தோன்றிடும் வண்ணக் குழம்பு, காணற்கரியதோர் ஓவியம்; ஆமாம்; ஆனல் கண் ணுக்காக மட்டுமா அஃது உளது? இல்லை, தம்பி! கருத்துக்காக! என் அழகைக் கண்டிடு, இதயம் மலர்ந்திடும்! என்றுமட்டும் கூறி மையல் ஊட் டிடும் 'சாகசக்காரி' அல்ல, இயற்கையாள்! என் னைக் கண்டிடு, அறிந்திடு, முழுவதும் உணர்ந் திடு, என் தன்மையினை ஆய்ந்து பார்த்திடு, பயன் பெறு!!— என்று கூறிடும் வள்ளல் அந்த வனிதை! இயற்கையாள் நமக்களித்த எண்ணற்ற பொருள் கள் பெற்றோம்; இன்றவை மனையில் மங்கலம் தந்திடக் காண்கின்றோம் ஆயினும் இப்பொருள் தம்மைப் பெற்றோர் எத்தனைபேர் என்ற கணக் கினை மறக்கலாமோ, அதற்கான காரணம் அறி யாதிருக்கப்போமோ! மண்மகள் தந்தாள் இந்த மஞ்சளும் மா பலாவும், வாழையும் வழங்கினளே, செந்நெலும்பிறவும் அந்தச் செல்வியின் கரத்தால் பெற்றோம்; பெற்றதால் பெற்றோம் இன்பம்; பெறுகின்றனரோ அதனை மற்றோர்' என்று எண் ணிடத் தவறல் தீது; ஏனெனில் இயற்கை அன்னை, இங்கு இவை தம்மைத் தந்தது, எவரும் இன் புற்றிருக்க; சிலருக்குப் பலவும், பலருக்குத் துளியு மற்ற பாழ்நிலைக்காக அல்ல. இத்தனை தந்த பின் னும், இத்தரைமிதில், எத்தனை எத்தனையோ மாந்தர், என்செய்வோம் என்றழுதும், இல்லையே என்று கூறி இடும்பையின் பிடியில் சிக்கித் தத் தளித்திடுதல்கண்டு, தாங்கிக் கொள்வதுதான் உண்டோ! மெத்தவும் கோபம்கொண்டு, சிற் சில நேரந் தன்னில், அடித்துக் கேட்கின்றள் போலும், இயற்கையாள்; அட மடமகனே! இது உந்தன் கயமையாலே!! ஆகவே உன்னை உந்தன் கொடுஞ் செயலுக்காக வேண்டித் தாக்குவேன், பார்! என் ஆற்றல்! என் பெருமழை, பேய்க் காற்று, கடற்கொந்தளிப்பு, நிலநடுக்கம் எனும் கணைகளை ஏவிவிடுகின்றள் போலும். இந்நிலையில், விழாவென்று சொல்லிடவோ இயலவில்லை, விழி யில் நீர்த்துளிகள் உனக்கும் எனக்கும், உள்ளம் படைத்தோர் அனைவருக்கும்.

விண்ணிலிருந்து மண்ணுக்கு வளமூட்ட வந் திடும் மாமழையைப் போற்றுகிறோம்; போற் றினர் இளங்கோ அன்றே! மண்மீது உள்ளனவும், அவை நம்பி வாழ்ந்திடும் மாந்தரும் அழிந்துபட, மலையென அலை கிளம்பி, பெருங்காற்றை உடன் கொண்டு பேரிழைப்பை மூட்டினதே, பேச்சற்றுத் திகைத்துக் கிடக்கின்றோம், மூச்சற்றுப் போயினர் பல்லோர் என்றறிந்து.

கடல் சீறி எழுவானேன், கடுங்கோபம் எதனலே, அந்தோ! ஒரு தீதும் செய்திடாத மாந்தர்களைக் கொல்வானேன்!

எத்தனையோ பிணங்கள் மிதந்தனவாம்; நோயால் தாக்குண்டு, மருந்து தேடித்தானுண் டும், பிழைத்தெழ முடியாமல், பிணமானவர் தவிர்த்திட முடிவதில்லை. அது போன்றதோ இஃது? இல்லை! இல்லை! ஒரு துளியும் இதுபோல நடந்திடக் கூடுமென்று, எண்ணம் எழா தநிலையில், இருந்தவர்கள், துயின்றவர்கள் பிணமானர் - அழிவதனை ஆழ்கடலும் ஏவியதால்.

முறிபடு தருக்களும், இடிபடு மலைகளும், உடை படு அமைப்பும், ஓலமிடும் மக்களும், புரண்டோடி

வந்திடும் புனலும், இழுத்து அழித்திடு சுழலும் அம்மவோ! கேட்டிடுவோர் நெஞ்சு நடுக்குறு விதத்தன. என் செய்வர் அந்த மக்கள்; மூழ்கினர்; சேதிகேட்டிடும் அனைவருக்கும் நெஞ்சில் பெரு நெருப்பு, விழியில் நீர்க்கொப்பளிப்பு. எத்தனையோ இன்னல்களைக் கண்டு கண்டு, அவை தம்மால் தாக்குண்டு, எதிர்த்து நின்று வடுப்பெற்று வாட்டம் ஓட்டிடுவோம், வாழ்வின்பம் பெற்றிடுவோம் என்று உழல்கின்றார், ஏழை எளியோர். அறம் மறந்த நிலையினிலே சமூக அமைப்புள்ள காரணத்தால் ஆயிரத்தெட்டுத் தொல்லை, அவர்கட்கு. பிழைக்க வழியில்லாதார், உழைத்து உருக்குலைந்தார், நம்பிக்கைத் தேயத் தேய நலிவுற்றார், இத்தகையோர் மெத்த உண்டு; பெருமூச்செறிந்தபடி, உயிரோடிருக்கின்றார் ஓர்நாள் வாழ்வு கிடைக்கும் என்று. வறுமையின் தாக்குதலும், அகவிலையின் போக்கதனால் ஏற்படும் அலைக்கழிப்பும், நீதி கிடைக்காமல் அவர்கள் பாதி உயிரினராய் உள்ளதுவும் அறிவோம் நாம்; அறியும் அரசு. எனினும் பொழுது புலருமென்று பொறுத்திருந்து வருகின்றார்; அவர் போன்றார்க்கு, ''வாழ்வு கிடைக்குமென வாடிக் கிடப்பதுமேன்! வற்றிய குளத்தினிலே வண்ணத் தாமரை காண்பதுவும் இயலுமோதான்! உழலுகின்றாய் உயிர்காக்க; உலவுகின்றாய் வாழ்வு கிடைக்குமென்று; உண்மையை நான் உரைக்கின்றேன். கேள்! உனக்கு வாழ்வளிக்கும் வழி காண, இன்றுள்ள உலகுக்கு நேரமில்லை, நினைப்புமில்லை; எதிர்பார்த்து ஏமாந்து இதயம்நொந்து செத்திடுவாய்; சாகுமுன்னம், அணு அணுவாய் உன் எண்ணந்தன்னைப் பிய்த்திடும், ஏமாற்றம் மூட்டிவிடும் வாட்டம்; அதனால் உழல்வானேன் வீணுக்கு; உருண்டோடி வந்துன்னை அணைத்துக் கொள்கிறேன்; ஆவியைத் தந்துவிடு; அமைதி பெறு!'' என்று கூறியதோ, கொக்கரித்துப் பாய்ந்து வந்த கொடுமை மிக அலையும்! வாழவைத்திடுதல் எளிதல்ல; வல்லமை மிகவும் வேண்டும்; சாகடித்திடவோ எளிதிலே இயலும், வா! வா! என்று கூறிக் கடல் கிளம்பிப் கொதித்துவந்த அலைகள், மாந்தர் உயிர்குடிக்கும் நச்சரவுகளாயின. அந்தோ !! பிணமாகி மிதந்த அந்த மாந்தர் உள்ளந்தன்னில் என்னென்ன எண்ணங்கள் உலவி இருந்தனவோ, எவரறிவார்! மணவாளனுவதற்கு ஏற்றவர்தான் அவர்! பெற்றோர் என் மனதைக் கண்டறிந்தே செய்கின்றார் இந்த ஏற்பாட்டினை, பெறுவேன் நான் மன நிறைவு என்றெண்ணி மகிழ்ந்திருக்கும் மங்கையரும் இருப்பரன்றோ கத்தும் கடல் அனுப்பப் பாய்ந்துவந்து அலைகொத்திக் கொண்டு சென்ற பல்லோரில்! பூவும் மஞ்சளுடன் போனவர்களும் உண்டே! காய் இது, கனியும் விரைவினிலே என்று கூறத்தக்க பருவமுடன் அழகு தவழ் உருவினரும், அலைக்கு இரையாகிப்போயிருப்பார்! அரும்புகள் பலப் பலவும் அழிந்திருக்குமே. தள்ளாடும் நடையெனினும், தாத்தா! என்றழைத்திடும் மழலை மொழிக் குழவியுடன் மாதரசியும் மகனும் இருக்கின்றார் என்ற எண்ணம் இனிப்பளிக்க இருந்து வந்த பெரியவர்கள் பற்பலரும், மடிந்திருப்பர், உயிர் குடியாமுன் மடிந்திடேன் என உரைத்து எழும்பி வந்த அலைகளாலே. என்னென்ன நடந்திருக்கும், எத்தகு ஓலம் எழும்பியிருந்திருக்கும், உயிர்தப்ப ஏதேது முயற்சிகளைச் செய்திருப்பார், எல்லாம் பயனற்றுப்போயின என்றுணர்ந்து, இறுதியில், இதயத்திலிருந்து அலறல் எவ்விதத்தில் பீறிட்டுக் கிளம்பி வந்திருக்கும் என்பதனை எண்ணிடும்போதே, நம் உள்ளம் நைந்துவிடுவது போலாகிறது. என் செய்வோம்; பேரிழப்பை எண்ணி, பொங்கிடும் கண்ணீரல்லால், தந்திட வேறென்ன உண்டு; இழந்தனனே என் மகனை! இழுத்துச் சென்றதுவே என் அரசை! வாழ்வளிக்க வந்தவனை வாரிக் கொடுத்துவிட்டுப் பாழ்மரமானேனே, பாவி நான்! என்றெல்லாம், பதறிக் கதறிடுவோர்க்கு அவர் ஓலம்கேட்டுக் காலம் மூட்டிவிட்ட கொடுமையிது எனக்கூறி, கண்ணீர் சொரிவதன்றி, பிறந்தவர் இறந்தேபோவர், இறப்பும் ஓர் புது வாழ்க்கையின் பிறப்பாம் என்றெல்லாம், 'தத்துவம்' பேசிடவா இயலும். நாமென்ன, முற்றுந்துறந்து விட்டோம் என மொழியும் முனிவர்களோ ! இல்லையன்றோ ! இருந்தான் பலகாலும், பெற்றான் பலநலனும், நோய்வந்துற்று மறைந்தான், மறையுமுன் மாடு மனையுடனே மகிழ்ந்திருக்கும் விதமாகப் பெரியதோர் குடும்பத்தை அமைத்தான் சீராக, என்று கூறிடத்தக்க நிலையினிலே இறந்துபடுவோர்க்காகக் கூட இதயமுள்ளோர் கண்ணீர் சிந்திடுவர், கவலை கொண்டிடுவர். தெற்கு முனையிலே நேரிட்ட பேரிழப்புக் கண்டோம், மரணம் இயற்கை என்று கூறி எங்ஙனம் ஆறுதல் பெற இயலும்! இது, எந்தமிழ் நாட்டினிலே, என்றும் நடந்திராத, சிந்தையை வெந்திடச் செய்யும் பெருவிபத்து, பேரிழப்பு; ஆறுதல் கூறுவதோ, பெறுவதோ எளிதல்ல.

அணைத்த கரம் அடிக்கிறது, ஆனால் அடித்தது போதுமென்றெண்ணி மீண்டும் அணைத்துக்கொள்கின்றது போலும். தம்பி! இயற்கையாள் தந்திடுவனவற்றைப் பெற்று, வாழ்வில் ஏற்றம் பெற்று, சிலர்மட்டும் வாழ்ந்திருத்தல் நன்றன்று. நாம் எவை எவை பெற்று இன்புற்றிருக்கின்றோமோ, அவை தமை அனைவரும் பெற்று மகிழ்ந்திடுவதே முறை. அதற்கே உளது இயற்கைச் செல்வம். பொங்கற் புதுநாளன்று இக்கருத்து நம் நெஞ்சில் ஊறவேண்டும். கனியெலாம் சிலருக்கு, காய்சருகு பலருக்கு; ஒளியில் சிலர், பாழ் இருளில் பலர்; வாழ்வார் சிலர், வதைபடுவார் பலர்; எனும் நிலைகாண அல்ல; இத்தனைக்கோலம் காட்டி, எண்ணற்றனவற்றை ஈந்து என்றும் இளமையுடன் இயற்கையாள் கொலுவீற்றிருப்பது. அதிலும் தம்பி! இன்பத் தமிழகத்தினிலே, இயற்கையாள் தீட்டிவைத்துள்ள கோலம் எண்ண எண்ண இனிப்பளிப்பதாக உளது. நாமணக்கப் பாடிய நற்றமிழ்ப் புலவோரின் பாக்களில் காண்கின்றோம், பற்பல படப்பிடிப்பு.

இயற்கைப் பொருள் ஒவ்வொன்றுபற்றியும், மிகுந்த நுண்ணறிவுத்திறனுடன் புலவர்கள் கூறியுள்ளனர்; மலை, மரம், மடுவு, அலை, அடவி, கலம், புலம், அருவி, வாவி, குளம் எனும் எவை பற்றியும் அந்நாளில் தாம் கண்டனவற்றைச் சுவைபட எடுத்துக்கூறியுள்ளனர் புலவர் பெரு

மக்கள். இயற்கையின் எழில், அந்த எழிலைக்காட்டும் பலவடிவங்கள், வகைகள், இவை மட்டும் காணக் கிடைக்கும் பட்டியலல்ல அந்தப் பாக்கள். விளக்கின் ஒளிகொண்டு வேறுபொருளைக் காட்டிடும் பான்மைபோல, இயற்கைப் பொருள்களைக் கொண்டு, இன்னுரை, நல்லுரை, வாழ்வுமுறை என்பனவற்றை எடுத்துக்காட்டியுள்ளனர். இவை யாவும் தம்பி! அன்றோர் நாள்!! இன்று ?... அந்த 'அந்தநாள் சிறப்பினை' மீண்டும் கண்டிட ஓர் சீரிய முயற்சியினில் ஈடுபட்டுள்ளனர் இந்நாளில், விழிப்புற்ற, கற்ற தமிழ்மறவாத, மரபழிக்கும் மாபாதகம் வெறுத்திடும் தமிழ்ப்புலவோர். இடையிலேயோ! உயர உயரச் சென்றுவிட்டோம்! கொண்டுசென்று விட்டனர் தமிழர்களை! முல்லை பறித்திடச்சென்ற மங்கையை, வேழம் விரட்டி விருதுபெற்ற வீரன் கண்டனன் என்ற கதை கூறினரன்றோ அந்த நாள் புலவோர்! ஓ!ஓ! இது மட்டுந்தானே கூற இயலும் இவர்களால், நாம் கூறுகின்றோம் கேளீர் 'மேல் உலக'க்காதை என்று அழைத்தனர், இடையில் வந்தோர். பாசுபதம் காட்டினர், பாரிஜாதம் காட்டினர், பாற்கடல் காட்டினர், பற்பல விந்தைகளைக் காட்டினர், தமது கதைகளில்! உள்ளதை மறந்தனர் தமிழர், உருவாக்கப்பட்டனவற்றைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டனர். அதன் காரணமாகவே, பல்வேறு விழாக்கள்—பண்டிகைகள்—தமிழகத்திலே மேற்கொள்ளப்பட்டன. பொங்கற் புதுநாள் அதுபோன்றதல்ல; இது நமது விழா; நம்மை நாம் உணர உதவும் விழா; இடையிலே படர்ந்தனவற்றை நீக்கி, தமிழரின் உள்ளத்தை, மாசறு பொன்னுக்கி, ஒளிவிடு முத்து ஆக்கிடத்தக்க நன்னாள். பொங்கிற்று! பொங்கிற்று! பொங்கலோ பொங்கல்! என ஒலி எழுப்பி விடுவதினால் மட்டும் அல்ல! நான் முன்னம் கூறியுள்ளபடி, பொருள் உணர்ந்து பாடம் பெறுவதனால்!!

பெறவேண்டுவனவற்றைப் பெற்றிடும் முயற்சியில் ஈடுபடுவதிலே ஏற்படக்கூடியது ஆர்வம்; இருந்ததை, இடையில் இழந்ததை மீண்டும் பெற்றிட எடுத்துக்கொள்ளப்படும் முயற்சி இணையற்ற எழுச்சியை ஊட்டிவிடுமன்றோ? அந்த எழுச்சி பெற்ற நிலையினர், பொங்கற் புதுநாளை, புதுமையினைச் சமைத்திடும் பேரார்வம் பொங்கிடும் நாளாகக் கொண்டுள்ளனர். எனவேதான் தம்பி! நாட்டு வளம்பற்றி, அறநெறி குறித்து, தாழாத் தமிழகம் என்ன கருத்துக் கொண்டிருந்தது என்பதனைக் கண்டறியும் ஆர்வம் மிகுந்துள்ளது. இந்த ஆர்வத்தை மேலும் பெற்றிடச் செய்திட வேண்டும், பொங்கற் புதுநாள். இயற்கைச் செல்வம் இத்துணைபெற்றிருந்தும் இன்பத் தமிழகத்தில் இன்னல் கப்பிக்கொண்டிருக்கக் காரணம் என்ன? என்று கண்டறிய வேண்டாமோ? கண்டறிய, உலகின் பல்வேறு இடங்களிலே இயற்கையாள் அளித்துள்ளன யாவை? ஆங்கு உள்ளோர் அவற்றினை எம்முறையில் பயன்படுத்தி ஏற்றம் கண்டனர்? அம்முறையில், நாம் பெறத்தக்க அளவு யாது? பெற்றிடும் வழி என்ன? என்பனவற்றை அறிந்திடவேண்டுமன்றோ? வேண்டுமாயின் உலக நாடுகளின் வரலாற்றினை ஓரளவாகிலும் நாம் அறிந்திட வேண்டுமே? அறிகின்றோமா? மாலைநேரத்தில் மாபெரும் நகரங்களில் கூடிமக்கள் கூட்டம் இதுபோது பல்வேறு நாடுகளின் வரலாறுபற்றிய விரிவுரையையா கேட்டுப் பயன்பெற்று வருகிறது? இல்லையே? போகப் போகும் இடம் பற்றிய கதைகளை அல்லவா, இருக்கும் இடத்திலே, இடரும் இழிவும் நீக்கிடும் முயற்சியை மேற்கொள்ளாத மக்கள், கேட்டு இன்புறுகின்றனர். இந்நிலையில் நாட்டவர் இருந்திடின், உலகின் நிலையினை உணர வழி ஏது, உணர்ந்து நம்நாட்டை நமக்கேற்ற நிலையினதாக்கிடும் முயற்சியில் ஈடுபடுவது ஏது?

இங்கு வயலின் அளவு மிகுதி, விளைச்சலின் அளவு குறைவு என்கிருர்கள்.

பொருள்கள் இங்கு மிகுதியும் பெற்றிடலாம், ஆனல் பெற்றோமில்லை என்கிருர்கள்.

பெருகிடும் பொருளைக்கூட, சீராகப் பகிர்ந்தளித்தால் சமூகநலன்மிகும்; செய்யக்காணோம் என்கின்றார்கள்.

முப்புரம் கடலிருக்கிறது, ஆனல் கப்பல் வாணிகம் தேவைப்படும் அளவு இல்லை; மிகமிகக் குறைவு என்கின்றனர்.

இரும்பு கிடக்கிறது புதைந்து; ஆனல் எஃகு ஆலைதான் அமைக்கப்படவில்லை என்கின்றார்கள்.

கத்தும் கடல்சூழ்ந்த இடம் இது; எனினும் மீன்பிடி தொழிலும் வளரக் காணோம் என்கின்றார்கள்.

பொது அறிவுவளம் மிக்கவர் இவர் என்கின்றார்கள்; எனினும் புத்தறிவு பெற்றிடவில்லை என்று கூறுகிருர்கள்.

விழி உண்டு, பார்வை இல்லை; வாயுண்டு, பேசும் திறனில்லை; வளமுண்டு, வாழ்வு இல்லை; இது போல, நம்நாடுபற்றிப் பேசிடக் கேட்கின்றோம்.

ஏன் இந்த நிலை? எதனல் இம்முரண்பாடு? எவர்செய்த செயலால் இந்தச் சீரழிவு? என்பதனைக் கண்டறிய வேண்டாமோ? வளரவேண்டிய முறையிலும் அளவிலும் பயிர் வளரவில்லை என்றதும், உழவன், தம்பி! என்னென்ன எண்ணுகிருன்? என்னென்ன கேட்கின்றனர் அவனை, பூமிநாதர்கள்!

நாடுமுழுவதிலும் இன்று உள்ளதோர் நலிவு நிலை குறித்து, காரணம் கண்டறிய, கேடு களைந்திட, நலம் விளைவித்திட நன்முயற்சியில் ஈடுபட வேண்டாமோ? இல்லையே. அந்த நன்முயற்சியும், ஒருவரிருவர் சிறு குழுவினர் மேற்கொண்டால் பலன் மிகுந்திராது, கிடைப்பதும் அவர்க்கு மட்டுமன்றோ போய்ச் சேரும். நாடு வளம்பெற, பெற்றவளம் அனைவருக்கும் பயன்பட, பயன்படும் முறையை எவரும் பாழாக்காதிருந்திட, தனித்தனியாக முயற்சி செய்யப்படுவது வளர்ந்துவிட்டுள்ள சமுதாயத்திலே முடியாததாகும்;

இதற்கான முயற்சியினை மேற்கொள்ள வேண்டுவது அரசு.

அரசு, தம்பி! அமைந்துவிடுவது அல்ல, நாம் அமைப்பது. அரசு நடாத்துவோரும், இதற்கென்று எங்கிருந்தோ எல்லாவிதமான ஆற்றலையும் பெற்றுக்கொண்டு இங்கு வந்தவர்கள் அல்லர்; நம்மில் சிலர்; நமக்காக நம்மாலே நமைஆள அமர்த்தப்பட்டவர்-பொருள் என்ன? விதைக்கேற்ற விளைவு! அரசு அமைத்திடும் திறம் நமக்கு எவ்விதம் உளதோ அதற்கு ஏற்பவே அரசு! எனவே நாட்டுவளம் காண அரசு முயற்சியில் ஈடுபடல் வேண்டும் என்று கூறிவிட்டு, நாம் கைகட்டி வாய்பொத்திக் கிடந்திடின் பயன் இல்லை; வல்லரசு அமைத்திடும் முயற்சியினைத் திறம்பட மேற்கொண்டு அதிலே நாம் வெற்றி பெற்றிடல் வேண்டும். உழவன்பெற்ற வெற்றியன்றோ உன்னைச் சுற்றி இன்று! செந்நெல்லும், காயும் கனிவகையும், உண்பனவும் உடுப்பனவும், பூசுவனவும் பூண்பனவும்!! அவன் பெற்ற வெற்றிக்காக எத்துணை உழைப்பினை நல்கினான்! நாடு முழுதும் வளம்பெற, ஓர் நல்லரசாக அமைத்திட வேண்டுமே, அந்தப் பணிக்காக நாம் எத்தனை அளவு உழைத்துள்ளோம்? அது குறித்து நம் மக்கள் எந்த அளவு தமது சிந்தனையைச் செலவிடுகின்றனர்? சிந்தனையில் எந்த அளவு தெளிவு பெற்றுள்ளனர்? தெளிவு பெற்றிடத்தக்க நிலையில் எத்தனை பேர்களுக்கு வாழ்க்கை அமைந்திருக்கிறது? எண்ணிப் பார்த்திடும்போது, தம்பி! ஏக்கம் மேலிடும். ஆனால் ஏக்கம் மேலிட்டு ஏதும் செய்ய இயலா நிலையினராகிவிடின் நாடு காடாகும்; மக்கள் பேசிடும் மாக்களாவர். எனவே அந்த ஏக்கம், நம்மைச் செயல்புரிய வைத்திடும் வலிவாக மாறிடவேண்டும்; மாற்றிடவேண்டும். உலகிலே பல்வேறு நாடுகளில் இடர்ப்பட்ட மக்கள், இழிவு நிலையினில் தள்ளப்பட்ட மக்கள், துக்கத்தால் துளைக்கப்பட்டு, ஏக்கத்தால் தாக்கப்பட்டு, இதயம் வெந்து, இடுப்பொடிந்து ஏதும் செய்ய இயலாத நிலையினராகிவிட்டவர்போக, சிலர்—மிகச்சிலர் துணிந்து எழுந்தனர், எதிர்த்து நின்றனர், வெற்றி கண்டனர். பெருமூச்சிலிருந்து புன்னகை பிறந்தது! சிறைக்கோட்டங்களிலிருந்து மக்களாட்சி மன்றங்கள் அமைந்தன. வெட்டுண்ட தலைகளிலிருந்து கொட்டிய இரத்தத் துளிகள், கொடுமையை வெட்டி வீழ்த்தும் கூர் வாளாயின!

இதுபோல் ஆகும் என்பதனை அன்றே உணர்ந்து உரைத்தார் பொய்யா மொழியார், 'ஏழை அழுத கண்ணீர் கூரியவாளொக்கும்' என்பதாக. கொடுமைக்கு ஆளான மக்கள் கொட்டிய கண்ணீர், ஆதிக்கக் கோட்டைகளைத் தூளாக்கிடும் வெடிகுண்டுகளாயின. வரலாறு காட்டுகிறது, வல்லூரை விரட்டிய சிட்டுக்குருவிகளின் காதையை! நமது மக்களுக்கு இதனை எடுத்துக் கூறுவார் யாருளர்! கூறுவதுமட்டுமோ! கருங்குருவி மோட்சம் பெற்ற காதையும் கரிவலம் வந்த சேதியுமன்றோ அவர்கட்கு இசைநயத்துடன் கூறப்பட்டு வருகிறது.

தம்பி! ஊர்ந்து செல்லும் ஆமையைக்கூட, பாய்ந்து செல்லும் புரவிகள் பூட்டிய வண்டியில் வைத்தால், போய்ச்சேரவேண்டிய இடத்திற்கு விரைவாகவும் எளிதாகவும் போய்ச்சேரும். இங்கு நாம் ஆமைகள் பூட்டிய அலங்கார வண்டியில், பாய்ந்தோடவல்ல குதிரையை ஏற்றிவைத்து, ஒரு விந்தைப்பயணம் நடத்திப்பார்க்கிறோம். கனிபறித்துச் சாறு எடுத்துப்பருகிடுவார் உண்டு; முறை; தேவை; இங்கு நாமோ, கனி எடுத்துச் சாறுபிழிந்து, அந்தச்சாற்றினைக் காய்கள் மேல் பெய்து தின்று பார்க்கிறோம்.

இந்த நாட்டிலேதான் தம்பி! இந்த இருபதாம் நூற்றாண்டில் இத்தனை திரித்துக்கூறுவதும் இருட்டடிப்பிலே தள்ளுவதும், இட்டுக்கட்டுவதும், இழிமொழி பேசுவதும், தாராளமாக நடத்திச் செல்ல முடிகிறது, ஆதிக்கக்காரர்களால்.

இங்கு நாம் மனிதத் தன்மைக்காகவும் பகுத்தறிவுக்காகவும் வாதாடினால், நாத்திகப்பட்டத்தைச் சுமத்திவிடுவதும்,

ஒற்றுமைப்படவேண்டும், பேதம் கூடாது, அதனை மூட்டிடும் ஜாதிகள் கூடாது என்று பேசினால், சமுதாயக் கட்டினை உடைக்கின்றோம் என்று பழி சுமத்துவதும்,

பெண்ணை இழிவுபடுத்தாதீர் என்று பேசினால், ஒழுக்கத்தைக் கெடுக்கிறோம் என்று ஓலமிடுவதும்,

ஏழையின் கண்ணீரைத் துடைத்திடுக! என்று கூறினால், வர்க்கபேத மூட்டிப் புரட்சி நடத்தப் பார்க்கிறான் என்று பேசிப் பகைமூட்டுவதும்,

ஆட்டிப்படைக்கும் அளவுக்கு அதிகாரத்தை ஓரிடத்தில் குவித்து வைத்துக் கொள்வது நல்லதல்ல; அதிகாரத்தைப் பரவலாக்கிடுக! என்று கூறினால் அரசு அமைப்பை உடைக்கப்பார்க்கிறான் என்று கொதித்தெழுந்து கூறுவதும், நாம் மேற்கொள்ளும் முயற்சிக்கு மக்களின் நல்லாதரவு கிடைத்திடுவதைத் தடுத்திடும் நோக்குடன் செய்துவருகின்றனர்.

தம்பி! தம்பி! தூய தமிழுக்காகப் பேசிப்பார்! ஓ! இவனுக்கு 'மொழிவெறி' என்று கூறிக் கிளம்புவர் சில குணக்கேடர்கள்!

சங்கத் தமிழ் மணக்கும் தமிழகத்தவர்க்கும் சேர்ந்தா இந்தியெனும் ஆட்சிமொழி என்று கேட்கின்றோம்; தேசபக்தி அற்றவர்கள் என்றன்றோ தூற்றப்படுகின்றோம்?

மொழித்துறையினிலே புகுத்தப்படும் அக்ரமம் நிறைந்த ஆதிக்கம், அத்துடன் நில்லாது, காலிலோ கரத்திலோ எந்த இடத்திலே கருநாகம் தீண்டினும், உடலெங்குமன்றோ விஷம் பரவி உயிர் குடிக்கும். அதேபோல, மொழித்துறையினிலே ஆதிக்க நச்சரவு பதித்திடும் பல்லினின்றும் கக்கிடப்படும் நஞ்சு, தமிழரின் உடல் முழுவதிலும் பரவும்; வாழ்வு அழியும்.

மொழி ஆதிக்கம், நிர்வாக ஆதிக்கத்துக்கு இடமேற்படுத்தும். அது பொருளாதார ஆதிக்கத்திற்கு வழி கோலும். பிறகோ தமிழர் அரசியலில் அடிமைகளாகி, அல்லற்படுவர். இதனை அறிந்தோர் கூறி வருகின்றனர்; ஆலவட்டம் சுற்றிடுவோர் மறுத்துப்பேசி, ஆளவந்தார் களை மகிழவைக்கின்றனர்.

எமக்கேன் விடுதலை! விடுதலை பெற்றால் நம்மைக் காத்திடும் பொறுப்பினை எவர் ஏற்றுக் கொள்வர்? வேலைக்கு வழி ஏது? சோற்றுக்கு வழி ஏது? செத்துவிடத்தான் இது வழி. ஆகவே விடுதலை வேண்டாம்!! வெள்ளை எஜமானர்களின் பாதமே நமக்குப் பாதுகாப்பு.. என்று நீக்ரோக்களில் சிலரைப் பேசவைத்தனர் வெள்ளை வெறியர்கள்...விடுதலைக் கிளர்ச்சியைத் துவக்கிய நாட்களில்.

இங்கு நம்மிடையே உள்ளோரில் சிலர் இந்தி ஆட்சி மொழியானால் என்ன என்று கேட்கும்போது தம்பி! எனக்கு அந்தப் பழைய நிகழ்ச்சிதான் நினைவிற்கு வருகிறது. உடலிலேயேதான் நோய் தங்கி இருந்து, உடன் இருந்தே கொல்லுகிறது; பாசி குளத்திலேயே தான் உண்டாகிறது; களை, வயலிலேயேதான் முளைக்கிறது; காட்டிக்கொடுப்போரும் அதுபோன்றே நமது சமுதாயத்திலேயே உள்ளனர், மினுமினுப்புடன், மிடுக்குடன், துரைத்தனத்தாரின் மேய்ப்புத் தேய்ப்புப் பெற்று!! காட்டுக் குதிரைக்கு ஏது, தங்கமுலாம் பூசப்பட்ட கடிவாளம்? இல்லையல்லவா? நாட்டிலே, பூட்டுகிறார்கள் விலையுயர்ந்த கடிவாளம் குதிரைக்கு. எதற்கு? தாம் ஏறிச் செல்லும் வண்டியை அக்குதிரை இழுத்துச் செல்ல வேண்டுமே! காண்போர் எப்படிப்பட்ட விலையுயர்ந்த குதிரை என்று கண்டு, அதனை உடையவரைப் பாராட்ட வேண்டுமே...அதற்காக! அதுபோல, தமிழரில் சிலர் உளர். அவர் போன்றோர் மனம் மாறிடல் வேண்டும்; தமிழ் போற்றிடல் வேண்டும்; பொற்காலம் காண!

நாடு வாழ்ந்திட, மக்கள் ஏற்றம்பெற, நம் ஆன்றோர்கள் சான்றோர்கள் கூறியன யாவை என்பதனை ஆய்ந்தறிய இவ்விழா நாளில் முயன்றிட வேண்டும்.

இன்றுள்ள புத்தறிவினர் கூறியுள்ளனவற்றினை அன்றிருந்த நம் ஆன்றோர்கள் கூறியுள்ளனர் என்பது கண்டு, கண்சிமிட்டி மகிழ்ந்திருப்பது மட்டும் பயன் தராது. அன்று முதற்கொண்டு சொல்லியும் இன்றுவரை அம்மொழிவழி நாம் நடந்தோமில்லையே என்றெண்ணி வெட்கித் தலைகுனிதல் வேண்டும்.

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்று ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே நமக்கு வள்ளுவர் கூறியுள்ளார். கூறி? ஜாதிகள் இல்லையடி பாப்பா! என்று இந்நாளில் பாரதியார் கூறிக் காட்டவேண்டியதாயிற்று. அதற்குப் பிறகும், ஜாதிப் பிடிப்பும் பித்தமும் நீங்கியபாடில்லையே!! பேழையில் பொருளை அடைத்து பேதையொருவன் அதன் மீதே, பட்டினிகிடந்த நிலையில் சாய்ந்திருந்தான் என்றால்—அப்படி ஒரு கதை சொன்னால் வியப்படைகின்றோம். அறிவுப் பேழை இங்கு..... ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே!! எனினும் எத்தனை பேதம், பிளவு, மதியற்ற போக்கு, குருட்டுப் பிடிவாதம், முரட்டு வாதம், சே!!

தம்பி! இதனை எண்ணிடும்போது உள்ளபடி வெட்கம் விலாவினைக் குத்திடுகிறது.

ஆகவே அன்றிருந்தோர் கூறிச் சென்ற அரிய கருத்துக்களையும் இன்றுள்ள நூலோர் தந்திடும் நற்கருத்துக்களையும் அறிந்து, மற்றவர்க்கும் அறிவித்து, அதற்கேற்ப, நமது குறைகளை, ஏற்பாடுகளைத் திருத்தி அமைத்துக் கொள்ளவேண்டும். மாக்கோலம் போடக் காண்கிறாயே, உன் மனதை வென்றாள்! வெண்குழம்பினைக் கலயத்திட்டு, தரைதனைக் கூட்டித் துப்புரவாக்கி, என்ன வரைவது எனத் தேர்ந்தெடுத்துத் திட்டமிட்டுக் கோலம் போட்டிடக் காண்கிறாய்—வெண் குழம்பைக் கீழே கொட்டிவிட்டு நடப்போர் கால்பட்டுப் பட்டு ஏதேனும் ஓர் கோலம் உண்டாகட்டும் என்று இருந்து விடுகின்றாள் உன் ஏந்திழை! இல்லையே! சமுதாயம் புதுக்கோலம் கொள்ள, நீயும் நானும் இன்னமும் என்ன வண்ணக் குழம்பு தேவை? எத்தகைய வட்டிலில் இடுதல் வேண்டும்? என்பது குறித்தேகூட, ஒரு திட்டவட்டமான எண்ணம் கொண்டிடத் தயக்கப்படுகிறோமே! புத்துலகு சமைத்திட எங்ஙனம் இயலும்?

புரண்டுகிடந்திடும் சீர்கெட்ட நிலையைமாற்றிட வழிகாண வேண்டும். இயற்கை வழங்கிடும் பொருளின் அளவும், தரமும், வகையும் மிகப் பெரிது. அரசுமுறை நேர்மையானதாக்கப்பட்டால், எல்லோரும் இன்புற்றிருக்கும் பொற்காலம் கண்டிடலாம். இந்தத் திருநாளன்று, அந்தக் குறிக்கோளைக் கொண்டிட வேண்டுகிறேன்.

இன்னல் பல பின்னிக்கிடந்திடும்; எனினும் இன்றோர் நாளாகிலும் அவைதமை மறந்து, இன்புற்று விழா நடாத்தி மகிழ்ச்சி பெற்றிட வேண்டுகிறேன். உனக்கும் உன் மனையுளாருக்கும் என் இதயம் கனிந்த நல்வாழ்த்துக்களை வழங்கி மகிழ்கிறேன். வாழ்க நீ வளமெலாம் பெற்று! வாழ்க தமிழகம் உன் வல்லமைத் தொண்டினாலே!!

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கினென் காவாக்கால் என்

மாண்புமிகு திரு. இரா. நெடுஞ்செழியன்
கல்வி, தொழில் அமைச்சர்—தமிழக அரசு




எடுப்பான தோற்றம் - மிடுக்கான நடை - பரந்த முகம் — விரிந்த நெற்றி — அடர்ந்தெழுந்த மீசை - தூக்கிப் பின்னேக்கி வாரிவிடப்பட்ட கன்னங்கறுத்த தலைமயிர் - அகன்ற கண்கள் - குறுகுறுத்த பார்வை - முகத்திற்குப் பொலிவூட்டும் மூக்கு - மயிரடர்ந்த புருவம் - மூக்கின்மேலே கண்ணுடி - கறுத்தமேனி - மடித்துக் கட்டப்பட்ட வேட்டி - நீண்டு தொங்கும் முழுக்கைச் சட்டை - மார்பிலே குறுக்கே போர்த்தப்பட்ட பொடிநிறப் போர்வை - காலிலே தொடுதோல் - கையிலே புகைந்துகொண்டிருக்கும் சுருட்டு!

இந்தத் தோற்றப் பொலிவோடு மனக்கண் முன் தோன்றிப் பூரிப்பும், பெருமையும், பெருமிதமும் அளிப்பவர்தாம் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் ஆவார்கள்.

தேசியக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் பரம்பரையிலே தோன்றி, இருபதாம் நூற்றுண்டின் ஈடும் எடுப்பும் அற்ற ஒரு பெரும் புரட்சிக் கவிஞராய்த் திகழ்ந்தவர்தாம் பாரதிதாசன். தமிழால் அவர் புகழ் பெற்றூர்; அவரால் தமிழ் பொலிவு பெற்றது. புரட்சிக் கவிஞர் அவர்களது கவிதைகளிலே புரட்சிவாடை வீசும்; கருத்துக் கொண்டல் திகழும்; வீரக்கோடை அடிக்கும்; ஈரத்தென்றல் தவழும்; அழகு மின்னல் பாயும்; கொடுமையை எதிர்க்கும் இடி முழங்கும்; சொல்லருவி வீழும்; பொருளாறு பாயும்; அணிநய மலர்கள் பூக்கும்; கொள்கை மணங்கமழும்; உண்மை ஒளி வீசும்; புகழிசை எழும்பும்; செந்தமிழ்த்தேன் தித்திக்கும்.

'புரட்சிக் கவிஞர்' என்று இன்று நாவார அழைக்கப்படுபவர் முன்பு 'பாரதிதாசன்' என்று குறிப்பிடப்பட்டார்; முன்பு பாரதிதாசன் என்று குறிப்பிடப்பட்டவர் அதற்கும் முன்பு கனகசுப்புரத்தினம் என்று விளிக்கப்பட்டார்.

சுப்புரத்தினம் அவர்கள் புதுவையில் பெருவணிகராக விளங்கிய திரு. கனகசபை என்பார்க்கும், திருமதி மகாலட்சுமி அம்மையாருக்கும் 1891-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 29-ஆம் நாள் திருமகனைப் பிறந்தார். சுப்புரத்தினம் என்பது பாரதிதாசனர் அவர்களுக்கு, அவருடைய தாய் தந்தையர் வைத்த இயற்பெயராகும். சுப்புரத்தினத்திற்கு இளமையிலேயே நல்ல தமிழார்வமும் இயல்-இசை-கூத்து ஆகியவற்றிலே நல்ல விருப்பமேலீடும் இருந்து வந்தன. அவர், புதுவையில் பிரெஞ்சுமொழிப்பள்ளியில் பயிற்றுவிக்கப்பட்டார் என்றுலும் அவருக்குத் தமிழ்மொழியினிடத்து நீங்காப் பற்றும், தணியா ஆர்வமும் இருந்து வந்ததால் தக்க புலவர்களிடத்திலே முறைப்படி முத்தமிழைப் பயிலுவதிலே மிகவும்

நாட்டங் கொண்டார். ஆர்வத்தோடு தமிழ்க் கல்வி பயின்ருர். தமது பதினேழாவது வயதில், அதாவது 1908-ஆம் ஆண்டில் புதுவைக் கல்வே கல்லூரியில் நடந்த புலவர் வகுப்புத் தேர்வில், கல்லூரியிலேயே முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்ருர். அப்பொழுது புதுவையை ஆண்டுவந்த பிரெஞ்சு அரசு அவருக்குத் தமிழாசிரியர் வேலே கொடுத்து, காரைக்காலுக்கு அருகிலுள்ள நிரவி என்ற ஊருக்கு அவரை அனுப்பி வைத்து, அங்கே ஆசிரியர் பணி ஆற்றும்படி செய்தது. அப்பொழுது அவருக்குக் கிடைத்துவந்த ஊதியம் முப்பது ரூபாய்கள். நாளடைவில் அவர் கல்வே கல்லூரிக்கே தமிழ்ப் பேராசிரியராக வந்தார்.

புலவர் சுப்புரத்தினம் அவர்கள் பாரதியாரிடத்தில் அளவுகடந்த பற்றும், மதிப்பும், நட்பும் கொண்டிருந்தார். பாரதியார் அவர்கள் புதுவையைப் புகலிடமாகக்கொண்டு வாழ்ந்து வந்த காலத்தில், அவரோடு பத்து ஆண்டுக்காலம் நெருங்கிப் பழகும் வாய்ப்பு சுப்புரத்தினத்தாருக்கு ஏற்பட்டது. பாரதியாரின் தேசீயப் பாடல்களும், நாட்டு விடுதலேக் கொள்கையும், சமூகச் சீர்திருத்தக் கருத்துக்களும் சுப்புரத்தினத்தாரைப் பெரிதும் கவர்ந்தன. புதுவையில், நண்பர் ஒருவரின் திருமண வீட்டிற்குப் போயிருந்த சுப்புரத்தினம் அவர்கள், பகல் விருந்து முடிந்தவுடன், நண்பர்கள் புடைசூழ உட்கார்ந்து பாரதியாரின் நாட்டியல் பாடல் ஒன்றைத் தமக்கே உரிய வீரங் கலந்த எடுப்பான இசையில், உரக்கப்பாடி அங்கே வீற்றிருந்தோர் அனைவரையும் மகிழ்வித்துக் கொண்டிருந்தார். அந்தத் திருமண வீட்டிற்குப் பாரதியாரும் வந்திருந்தார். அவர்தாம் பாரதியார் என்பதைச் சுப்புரத்தினம் அறியார். அது வரையில் சுப்புரத்தினம் அவர்கள் பாரதியாரின் பாடல்களை அறிவாரேயல்லாமல், அவரை நேரில் கண்டறியார். பாரதியார், சுப்புரத்தினம் பாடுவதைக் கேட்டுத் தாளம் போட்டுச் செவியாரச் சுவைத்து மகிழ்ந்துகொண்டிருந்தார். பாரதியார், சுப்புரத்தினத்தின் பாடுந்திறனையும், கவிதைகளிலே கொண்டுள்ள ஈடுபாட்டினையும் வியந்து பாராட்டினுர். அதுமுதல் இருவரும் ஒருவர்க்கொருவர் அறிமுகமாயினர்.

புதுவையில் பாரதியாரோடு மிக நெருங்கிப் பழகியவர்களிலே சுப்புரத்தினம் தலேசிறந்தவராவார். புலவர் சுப்புரத்தினம் பாரதியார் அவர்களைத் தமக்குரிய சிறந்த நண்பராகவும், வழிகாட்டியாகவும், எடுத்துக்காட்டாகவும் கொண்டிருந்தார். சுப்புரத்தினத்திற்குள்ள நல்ல தமிழார்வத்தையும், மொழிப்பற்றையும், இயல் - இசை —கூத்துக்களிலே உள்ள ஈடுபாட்டையும், கவிதை புனையும் திறத்தையும், புதுமை வேட்கையையும் பாரதியார் நன்கு அறிந்திருந்தார்.

ஒருபொழுது பாரதியாரோடு உரையாடிக் கொண்டிருந்த நண்பர்கள் சிலர், சுப்புரத்தினத்தின் புலமையைப்பற்றி ஐயப்பாடுகொண்டு ஏதேதோ புகன்றனர். அதைக்கேட்ட பாரதியாருக்கு அடங்காத சினம் பீறிட்டு எழுந்தது.

''சுப்புரத்தினம் சிறந்த கவி எழுதக் கூடியவன், தெரியுமா உங்களுக்கு?'' என்று அதட்டிக் கேட்டார். அதற்கு எதிர்ப்பான முறையில் அவர்கள், ''பாடச் சொல்லுங்கள் பார்ப்போம்!'' என்று கடாவினுர்கள். உடனே பாரதியார் சுப்புரத்தினத்தை அழைத்து வரச்சொல்லி ''பாடு ஒரு பாட்டு!'' என்ருர். உடனே அவர் ''எங்கெங்குக் காணினும் சக்தியடா'' என்று தொடங்கும் பாட்டை இரண்டடி — 16 வரிகளாகப் பாடிக் காட்டினுர். அதிலே அழகு, ஆற்றல், இனிமை, பொருள், நயம் எல்லாம் சிறந்து விளங்குவதைக் கண்டு அனைவரும் அவரைப் பாராட்டினர்.

சுப்புரத்தினம் பாரதியார் முன்னிலேயில் முதன்முதலில் பாடிய அந்தக் கவிதையைப் பாரதியாரே தம் கையால் எழுதி, அதன் தலேப்பில், 'ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலத்தைச் சேர்ந்த கனக - சுப்புரத்தினம் எழுதியது' என்று எழுதிச் 'சுதேசமித்திரன்' செய்தித்தாளுக்கு அனுப்பினுர். 'சுப்புரத்தினம் ஒரு கவி' என்று பாரதியார் அடிக்கடி எல்லோரிடத்திலும் சொல்லுவதுண்டு. இத்தகைய மதிப்பைப் பாரதியாரிடம் வேறு யாரும் பெற்றதில்லே.

சுப்புரத்தினம் அவர்கள் சுப்பிரமணிய பாரதியாரிடம் கொண்டிருந்த அளவுகடந்த பற்றின் காரணமாகவும், மதிப்பின் காரணமாகவும் தம் பெயரைப் பாரதிக்குத் தாசன் என்று பொருள் படும்படி 'பாரதிதாசன்' என்று மாற்றி அமைத்துக் கொண்டார். இறுதிவரையில் அவர் 'பாரதிதாசன்' என்றே கையெழுத்துப் போட்டு வந்தார்.

தமிழையும் பாரதியாரையும் போற்றிப் பாராட்டிப் பெருமைப்படுவதிலே பாரதிதாசன் தனி இன்பங் கண்டார். பாரதிதாசன் பாரதியாரைப் பற்றிக் குறிப்பிடும்போதெல்லாம் அவர்பால் தாம் கொண்டிருந்த பேரன்பும் பெருமதிப்பும் வெளிப்பட நன்றியுணர்வோடு புகல்வார். பாரதியாரைப்பற்றிக் குறிப்பிட வந்த பாரதிதாசன்,

''தமிழகம், தமிழுக்குத் தகும் உயர் வளிக்கும்
தலேவனை எண்ணித் தவங்கிடக் கையில்
இலகு பாரதிப் புலவன் தோன்றினுன்.''

என்று தமிழையும், பாரதியையும் நன்கு இணைத்து அழகுற மொழிகிருர்.

பாரதியாரைப்பற்றிப் பாரதிதாசன் புகழ்ந்து பாடியிருப்பதைப்போல், வேறு யாரேனும் அவ்வளவு அருமையாகப் பாட முடியுமா என்று கண்டறிவது அரிதேயாகும். பாரதிதாசனுரின் உள்ளத்தில் பாரதியார் எப்படிப்பட்ட இடத்தைப் பெற்றிருந்தார் என்பதை,

''பைந்தமிழ்த் தேர்ப் பாகன்; அவனொரு
செந்தமிழ்த் தேனீ; சிந்துக்குத் தந்தை!
குவிக்கும் கவிதைக் குயில்! இந்நாட்டினைக்
கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு!
நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா!

காடு கமழும் கற்பகச் சொற்கோ!
கற்பனை ஊற்றும் கவிதையின் புதையல்!
திறம்பாட வந்த மறவன்; புதிய
அறம்பாட வந்த அறிஞன்; நாட்டிற்
படரும் சாதிப் படைம ருந்து!
மண்டும் மதங்கள் அண்டா நெருப்பவன்!
அயலார் எதிர்ப்புக் கணையர விளக்கவன்''

என்ற சொல்லோவியத்தால் தெள்ளிதின் அறியலாம்.

பாரதியாருக்கும் பாரதிதாசனுருக்கும் பல வகைகளிலே ஒற்றுமை உண்டு. பண்புகளும் பழக்க வழக்கங்களும் இருவரிடத்திலும் பெரும்பாலும் ஒரே தன்மையனவாகவே காணப்படும். பாரதியாருக்கு எப்படித் தமிழினிடத்திலே தணியாத காதல் உண்டோ, அப்படியே பாரதிதாசனுருக்கும் உண்டு. பாரதியார் எவ்வாறு மறவனைப்போல் தோற்றமளிப்பாரோ, அவ்வாறே பாரதிதாசனும் தோற்றம் அளிப்பார். பாரதியார் எப்படிக் குனியாமல், கூனுமல் வணங்காமுடிபோல் தலைநிமிர்ந்து நடப்பாரோ, அப்படியே பாரதிதாசனும் தலைநிமிர்ந்தே நடப்பார். பாரதியார் எவ்வாறு யாருக்கும் அஞ்சாமல், எதற்கும் அஞ்சாமல் வாழ்ந்தாரோ அவ்வாறே பாரதிதாசனும் அஞ்சாமல் வாழ்ந்தார். பாரதியார் எப்படித் தம்மோடு மாறுபட்டு எதிர்ப்பவரைக் கடுமொழியில் வெஞ்சினங்கொண்டு எதிர்ப்பாரோ, அப்படியே பாரதிதாசனும் வெஞ்சினங்கொண்டு எதிர்ப்பார். பாரதியார் எவ்வாறு இயல், இசை, கூத்து என்னும் முத்துறையிலும் ஈடுபாடு கொண்டிருந்தாரோ, அவ்வாறே பாரதிதாசனும் ஈடுபாடு கொண்டிருந்தார். பாரதியார் எப்படி விடுதலை வேட்கையும், புதுமை வேட்கையும், சீர்திருத்த நோக்கமும் கொண்டிருந்தாரோ, அப்படியே பாரதிதாசனும் அவற்றிலே பேரார்வங் கொண்டிருந்தார். பாரதியார் எவ்வாறு கிடைத்ததையெல்லாம் செலவழித்துவிட்டு வறுமையிலேயே வாழ்வை முடித்தாரோ, அவ்வாறே பாரதிதாசனும் வறுமையிலேயே வாழ்வை முடித்தார். இந்த நூற்றுண்டில் தமிழகத்தில் மக்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்த கவிஞர்கள் பாரதியாரையும், பாரதிதாசனுரையும் தவிர வேறு யாரும் இல்லை என்று துணிந்து கூறலாம்.

பாரதிதாசன் தமது முப்பதாவது வயதில்தான் திருமணம் செய்து கொண்டார். 1921-ஆம் ஆண்டில், தென் ஆர்க்காடு மாவட்டத்தைச் சார்ந்த புட்டாம்பாக்கம் என்னும் ஊரைச் சேர்ந்த பரதேசி - காமாட்சி என்பாரின் திருமகளார் பழநியம்மாளைத் தம் இல்வாழ்க்கைத் துணைவியாராக ஏற்றுக் கொண்டார். அந்த அம்மையார் அன்பும் பண்பும் ஒருங்கே அமையப் பெற்றுக் கணவரின் மனம் கோணுமல், அவர் விருப்பத்திற்கிணங்க ஒழுகி வந்தார்கள். பாரதிதாசனின் பண்புகளை அறிந்து அவற்றிற்கேற்ப நடப்பதில் அந்த அம்மையார் மிகவும் தேர்ந்திருந்தார்கள். பாரதிதாசனும் அந்த அம்மையாரிடத்தில் பேரன்பு பூண்டிருந்தார். அவருக்கு ஓர் ஆண் மகனும் மூன்று பெண்மக்களும் உண்டு.

பாரதிதாசன் அவர்கள் சுப்புரத்தினமாகக் காட்சியளித்தபோது, சமயப்பற்றும், கடவுட்பற்றும்கொண்டு விளங்கினர். அந்தக் காலத்தில் தான், மைலம் சுப்பிரமணியக் கடவுள்மீது, 'சுப்பிரமணியர் துதியமுது' என்னும் அழகும் அருமையும் சொட்டும் தீந்தமிழ் நூல் ஒன்றினை இயற்றிச் சமயத் தொண்டர்களை மகிழ்வித்தார். அவர் பாரதியாரோடு ஈடுபாடு கொண்டிருந்த காலத்தில் தேசியப் பாடல்கள் பல இயற்றினர். அவர் இயற்றிய கதர்ப்பாட்டு, சமத்துவப்பாட்டு போன்றவை தேசிய வளர்ச்சியையும், எழுச்சியையும் சிறப்பாக ஊட்டுவனவாகும். தமிழகத்தில் சுயமரியாதை இயக்கம் தோன்றிப் பகுத்தறிவு நெறிக் கருத்துக்கள் பரவத் தொடங்கிய காலத்தில் பாரதிதாசனின் உள்ளம் அந்தக் கருத்துக்களிலே ஆழப்பதிந்தது. அவர், கவிதைகளின் மூலம் சமுதாயத்திலே நிலவி வந்த குருட்டு நம்பிக்கைகளையும் மூடப்பழக்க வழக்கங்களையும் அழுத்தந் திருத்தமாகக் கண்டித்தொதுக்கி, பகுத்தறிவு நெறிக்கருத்துக்களை மிகத் தீவிரமாகப் பரப்பத் தொடங்கினர். அவர் அரசியலிலே விடுதலை வேண்டும், சமூகவியலிலே சமத்துவம் வேண்டும், பொருளியலிலே சமதர்மம் வேண்டும் என்று முழங்கினர். புரட்சிகரமான கருத்துக்களை அஞ்சாநெஞ்சுடன் அவர் எடுத்துரைக்க முன்வந்த இந்தக் காலத்தில்தான், அவரைப் 'புரட்சிக் கவிஞர்' என்று அடைமொழி கொடுத்து மக்கள் அழைக்கலாயினர். பின்னர் அவர் திராவிடத்தின் உரிமைகளுக்காகப் பாடுபடத் தோன்றிய திராவிட இயக்கங்களில் பங்குகொண்டு உரிமை வேட்கை - விடுதலை வேட்கைப் பாடல்கள் பல இயற்றினர்.

புரட்சிக் கவிஞர் அவர்கள் தமிழினிடத்தில் காட்டியிருக்கும் அன்பையும், ஆர்வத்தையும், பற்றையும், மதிப்பையும் அவ்வளவு அழகாக - அருமையாக - நேர்த்தியாகக் - கவர்ச்சிகரமாக - இனிமையாக - உணர்ச்சிமயமாக எழுச்சிமயமாக - ஏற்றமாக - உயர்வாகச் - சிறப்பாக எடுத்துக்காட்டியவர் அண்மைக் காலங்களில் வேறு யாருமே இல்லை.

''நல்லுயிர், உடம்பு, செந்தமிழ் மூன்றும்
நான், நான், நான்''

என்று அழுத்தத் திருத்தமாகக் கூறுகிறர்.

தமிழ்ப்பற்று அவர் உள்ளத்தில் எந்த அளவுக்கு ஊற்றெடுத்துப் பொங்கி வழிந்து கரை புரண்டு ஓடிற்று என்பதை,

''கனியிடை ஏறிய சுளையும் — முற்றல்
கழையிடை ஏறிய சாறும்
பனிமலர் ஏறிய தேனும் — காய்ச்சுப்
பாகிடை ஏறிய ருசியும்
நனிபசு பொழியும் பாலும் — தென்னை
நல்கிய குளிரிள நீரும்
இனியன என்பேன் எனினும்—தமிழை
என்னுயிர் என்பேன் கண்டீர்''

என்றும்,

''செந்தமிழே! உயிரே! நறுந்தேனே!
செயலினை மூச்சினை உனக்களித் தேனே!
நைந்தாய் எனில்நைந்து போகுமென்வாழ்வு!''

என்றும்,

"தமிழரின் மேன்மையை இகழ்ந்தவனை என்
தாய்தடுத் தாலும் விடேன்''

என்றும்,

''தமிழுக்கு அமுதென்று பேர்! — அந்தத்
தமிழ்இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்''

என்றும்,

''தமிழுக்கு மணமென்று பேர்! — இன்பத்
தமிழ் எங்கள் வாழ்வுக்கு நிருமித்த ஊர்''

என்றும்,

''தமிழ் எங்கள் இளமைக்குப் பால்! — இன்பத்
தமிழ் நல்ல புகழ்மிக்க புலவர்க்கு வேல்!''

என்றும்,

''தாயெழிற் றமிழை, என்றன்
தமிழரின் கவிதை தன்னை
ஆயிரம் மொழியிற் காண
இப்புவி அவாவிற் றென்ற
தோயுறும் மதுவின் ஆறு
தொடர்ந்தென்றன் செவியில் வந்து
பாயுநாள் எந்தநாளோ
ஆரிதைப் பகர்வார் இங்கே?''

என்றும்,

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு''

என்றும்,

''மங்கையொருத்தித் தரும் சுகமும் எங்கள்
மாத்தமிழுக் கீடில்லை என்றுரைப்போம்''

என்றும் வரும் கவிதைகளின்மூலம் நன்கு அறிந்து இன்புறலாம். இவை அவர் வடித்திறக்கிய செந்தமிழ்த் தேம்பாகு வெள்ளத்தில் ஒரு சில சொட்டுக்களேயாகும்.

தமிழும், தமிழரும், தமிழ்நாடும், தமிழ்நாட்டோடு ஒட்டிய தென்னாடும் உரிய வாழ்வினைப் பெறாமல், பலவகையானும் புறக்கணிக்கப்பட்டுச் சீர்குலைந்த நிலையில் தள்ளப்பட்டிருக்கிற தன்மையை எண்ணி எண்ணிப் புரட்சிக் கவிஞர் மனம் புழுங்கினார். இனிய செந்தமிழ் மணம் வீட்டிலும், நாட்டிலும், ஏட்டிலும் கமழ வேண்டும்; ஆட்சித் துறையிலும், பள்ளியின் பயிற்சித் துறையிலும், கலைத்துறையிலும், வாணிகத் துறையிலும், வழிபாட்டுத் துறையிலும், அறிவியல் துறையிலும், ஆராய்ச்சித் துறையிலும், நிதித் துறையிலும், நீதிமன்றத் துறையிலும், பொதுத் துறையிலும் செந்தமிழ் ஏற்றம் பெற வேண்டும்; தனித்தமிழ் நூல்கள் எங்கும், எல்லாத் துறையிலும், எல்லா வகையிலும் பல்கிட வேண்டும்; தமிழர் யாருக்கும் அடிமையாகாமல், அரசியல்—பொருளாதாரச் சமூகத் துறைகளில் எல்லா வகை உரிமைகளையும் பெற்றுப் பெருவாழ்வு வாழ வேண்டும்; தமிழ்நாடும் தென்னாடும், தமக்குரிய தனிச் சிறப்பியல்புகள் அனைத்தும் கெடா வண்ணம், அவற்றைப் போற்றிக் காப்பாற்றி, வளர்த்துச் செழித்தோங்கும் வண்ணம் செய்ய உரிமை வாழ்வு பெறவேண்டுமென்று எண்ணினார்; வீறிட்டெழுந்தார்; உள்ளத்தில் உவப்பெடுத்த கவிதை மழையைப் பொழிந்தார்.

''என்தமிழ் அன்னை துன்பம் நீங்கித்
தூய்மை எய்தித் துலங்குதல் காண்பேன்;
என்தமிழ் நாடு தன்னாட்சி பெற்றுத்
துலங்கிடுதல் காண்பேன்; தமிழர்
நலங்காண் பேன்நான் நானில மதிலே''

என்று துடிதுடிக்கின்றார்.

புரட்சிக் கவிஞன் பாரதிதாசன் அவர்கள் தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும், தாயகத்திற்கும் பாடுபடுவதைத் தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். அதனை,

''எனையீன்ற தந்தைக்கும் தாய்க்கும் மக்கள்
தனையீன்ற தமிழ்நாடு தனக்கும் என்னால்
தினையளவு நலமேனும் கிடைக்கு மென்றால்
செத்தொழியும் நாள்எனக்குத் திருநாளாகும்''

என்ற கூற்றினால் தெளிவுபடுத்துகிறார். தம்மைப் போலவே பிறரையும் ஊக்குவிக்க வேண்டும் என்று விரும்புகிறார். தம்மோடு பணியாற்ற எல்லோரையும் அழைப்பவர்,

''செந்தமிழ்ச் சொல்லால் செயலால்
தடம்பெருந் தோளால் தொடங்குக பணியை''

என்று கூறுகிறார்.

புரட்சிக் கவிஞர் தம் சிந்தை - சொல் - செயல் எல்லாவற்றிலும் தமிழையே கொண்டிருந்தார். தமிழோடு ஒன்றிப்போய் இருந்தார். தமக்கும், தமிழுக்கும் எப்படிப்பட்ட தொடர்பு இருந்தது என்பதை அழகான உவமைகளால் எடுத்தியம்பினார்.

''வெண்ணிலாவும் வானும் போலே
வீரனும் கூர்வாளும் போலே
வண்ணப் பூவும் மணமும் போலே
மகர யாழும் இசையும் போலே
கண்ணும் ஒளியும் போலே எனது
கன்னல் தமிழும் நானும் அல்லவோ''

இந்தப் பாட்டு இசையிலே மிதந்து வந்து, செவி புகுந்து, நம் இதயத்தைத் தொடும்போது, சிந்தையெல்லாம் குளிரும்; உடலெல்லாம் சிலிர்க்கும்.

தமிழுக்குத் தொண்டு செய்வதை ஒவ்வொருவரும் தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக்

கொள்ள வேண்டும் என்றும், தமிழுக்குத் தொண்டு செய்வதால் புகழும், பெருமையும் ஏற்படும் என்றும் கூறவந்தவர்,

''தமிழுக்குத் தொண்டு செய்வோன் சாவதில்லை''

என்கிறார்.

தமிழுக்கு ஒரு தீங்கு ஏற்பட்டுவிட்டதென்றால், அதனைக் கேள்வியுற்ற அளவானே இளைஞர் கூட்டம் வீறிட்டெழ வேண்டும்; அவர்கள் நரம்பெல்லாம் இரும்பாக வேண்டும்; அவர்தம் நனவெல்லாம் உணர்வாக வேண்டும் என்று முழங்குகிறார்.

''உரம்பெய்த செந்தமிழ்க் கொன்றிங்கு
நேர்ந்ததென உரைக்கக் கேட்டால்,
நரம்பெல்லாம் இரும்பாகி நனவெல்லாம்
உணர்வாகி நண்ணி டாரோ''

இந்த வரிகள் நலிந்த நெஞ்சினரையெல்லாம் மற நெஞ்சினராக மாற்றும் பெற்றி வாய்ந்தனவாகும்.

புரட்சிக் கவிஞர் அவர்கள் தமிழர்களின் ஆட்சியை நிறுவுவதிலே வெறியுணர்வு கொண்டிருந்தார். தமிழரின் ஆட்சியை நிறுவ முயலும் போது, எவ்வளவு இன்னல்கள் மிடுக்குடன் அடுக்கி வந்தாலும், அவற்றையெல்லாம் இன் முகத்துடன் தாங்கிக் கொள்வேன் என்றும், அதற்குத் தமது ஊனைக் கேட்டாலும் கொடுப்பேன், தமது உடலையே கேட்டாலும் கொடுப்பேன் என்றும் வீர முழக்கமிடுகிறார்.

''ஆனஎன் தமிழர் ஆட்சியை நிறுவ
அல்லல்கள் வரின் ஏற்பேன்!
ஊனுடல் கேட்பினும் செந்தமிழ் நாட்டுக்
குவப்புடன் நான் சேர்ப்பேன்!''

தமிழர்க்குத் தொண்டு செய்வேன் என்று தோள்தட்டி, துடை தட்டி, வீறிட்டெழும் தமிழ் மறவனுக்குத் தடையாக நெடுங்குன்றைக் கொண்டுவந்து நிறுத்தினாலும், அது தூள் தூளாய்ப் போகும் என்று புரட்சிக் கவிஞர் எக்காளமிடுகிறார்.

''தமிழ்என்னும் பேருணர்ச்சி இந்நாள் போலே
தமிழ்நாட்டில் எந்நாளும் இருந்ததில்லை;
தமிழர்க்குத் தொண்டுசெய்யும் தமிழனுக்குத்
தடைசெய்யும் நெடுங்குன்றும்
[ தூளாய்ப் போகும்''

என்ற வரிகளில் வீரம் கொப்புளிப்பதைக் காணலாம்.

தமிழனை இழிவாகக் கருதி, அவனுக்குத் தீங்கு இழைத்து, அவனிடத்துக் குற்றம் புரிய வெளிநாட்டான் எவனேனும் முயலுவானேயானால், அவன் முதுகெலும்பு நொறுக்கப்படும் என்றும், அந்தச் செய்தியைக் கேட்டுத் தமிழகம் குதித்துக் கூத்தாடும் என்றும், அத்தகைய நாளைத் தாம் ஆவலோடு எதிர்பார்ப்பதாகவும் புரட்சிக் கவிஞர் முழக்கமிடுகிறார்.

''தறுக்கினாற் பிறதேசத்தார்
தமிழன்பால் - என் - நாட்டான்பால்
வெறுப்புறும் குற்றஞ்செய்தா
ராதலால் விரைந்தன்னாரை
நொறுக்கினர் முதுகெலும்பைத்
தமிழர்கள் என்றசேதி
குறித்தசொல்கேட் டின்பத்திற்
குதிக்கும்நாள் எந்தநாளோ!''

இந்தப் பாடலில் புரட்சிக் கவிஞரின் மறவுணர்வு பொங்கியெழுவதைக் காணலாம்.

தமிழையும், தமிழகத்தையும் காக்கப் புறப்படும் அறப்போர் மறவர் படைக்குத் தலைமை தாங்கி, போர்க்களத்தே நின்று, அறப்போர் வீரர்க்கு அவர் விடுக்கும் சொற்களிலே கனல் தெறிக்கும்; வீரம் கொப்புளிக்கும்; போர் மறம் பொங்கும்.

''பூட்டிய இருப்புக் கூட்டின் கதவு
திறக்கப்பட்டது சிறுத்தையே வெளியில் வா!
எலிஎன உன்னை இகழ்ந்தவர் நடுங்கப்
புலிஎனச் செயல்செய்யப் புறப்படு வெளியில்!
சிங்க இளைஞனே! திருப்புமுகம்! திற விழி!
இங்குன் நாட்டுக் கிழிகழுதை ஆட்சியா?
கைவிரித் துவந்த கயவர், நம்மிடைப்
பொய்வி ரித்துநம் புலன்கள் மறைத்துத்
தமிழுக்கு விலங்கிட்டுத் தாயகம் பற்றி
நமக்குள உரிமை தமக்கென் பார்எனில்
வழிவழி வந்தவுன் மறத்தனம் எங்கே?
மொழிப்பற் றெங்கே? விழிப்புற் றெழுக!''

என்றும்,

''வையம் ஆண்ட வண்டமிழ் மரபே!
கையி ருப்பைக் காட்ட எழுந்திரு!
குறிக்கும் உன்இளைஞர் கூட்டம் எங்கே!
மறிக்கொணுக் கடல்போல் மாப்பகை மேல்
[ விடு!
நன்மொழிக்கு விடுதலை நல்கிட எழுந்திரு!
பொன்மொ ழிக்குநீ புதுமை ஏற்றுவாய்!
மக்களை ஒன்றுசேர்! வாழ்வை உயர்த்துக!
வாழ்க இளைஞனே! வாழ்க நின்கூட்டம்!'

என்றும் அவர் முழங்கும் முழக்கம் வீழ்ச்சியுற்றுக் கிடக்கும் நம் திருநாட்டாரையெல்லாம் எழுச்சியுறச்செய்யக்கூடியதாகும்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் இந்தி மொழி இந்தியாவின் ஒரே தேசீய மொழியாக ஆக்கப்படுவதையும், பொதுமொழியாக நிலைநாட்டப்படுவதையும், ஆட்சி மொழியாகத் திணிக்கப்படுவதையும் மிகக் கடுமையாக எதிர்த்தார். தமிழனுக்குத் தமிழ் நாட்டில் தமிழ் போதும்; தமிழன் தமிழரல்லாத பிறநாட்டாரோடு பழகுவதற்கும், தமிழறியாத பிறவற்றையெல்லாம் அறிந்து கொள்ளுவதற்கும் ஆங்கிலம் போதும்; இந்திமொழியால் தமிழனுக்கு எள்ளளவும் நன்மை இல்லை; இந்தித் திணிப்பால் தமிழுக்கும் தமிழர்க்கும் பெருந்தீங்கே விளையும் என்ற கொள்கையை அழுத்தந் திருத்தமாகக் கொண்டிருந்தார் அவர்.

''இந்திக்குத் தமிழ் நாட்டில் ஆதிக்கமாம்
நீங்கள்
எல்லோரும் வாருங்கள் நாட்டினரே!
செந்தமிழ்க்குத் தீமைவந்தபின்னும் - இந்தத்
தேகம் இருந்தொரு இலாபம் உண்டோ''

என்றும்,

''எப்பக்கம் வந்து புகுந்துவிடும் இந்தி
எத்தனைப் பட்டாளம் கூட்டிவரும்
அற்பமென் போம்அந்த இந்திதனை - அதன்
ஆதிக்கந் தன்னைக் குலைத்திடுவோம்''

என்றும்,

''சிங்க மென்றே இளங்காளைகளே மிகத்
தீவிரங் கொள்ளுவீர் நாட்டினிலே
பங்கம் விளைந்திடில் தாய்மொழிக்கே - உடல்
பச்சை ரத்தம் பரிமாறிடுவோம்''

என்றும்,

''தீங்கனியைச் செந்தமிழைத் தென்னாட்டின்
பொன்னேட்டை உயிராய்க் கொள்வீர்!
ஏங்கவைக்கும் வடமொழியை இந்தியினை
எதிர்த்திடுவீர்! அஞ்ச வேண்டாம்''

என்றும்,

''வெறுப்புடைய இந்தி விளைக்கின்றார் இங்கே!
அறப்போர் தொடுத்திடுவோம்! வெல்வோம்
[நாம்; அன்றி
இறப்போம்; உறுதி இதுவாகும் என்பீர்!
உறக்கம் தவிர்த்துணர்வே உற்றெழுதல்
[உங்கடனே''

என்றும்,

''இந்த அரசினர் செந்தமிழ் ஒழித்துத்
தீய இந்தியைத் திணிக்கின் றார்கள்
தமிழ் அழிந்திட்டால் தமிழர் அழிவார்
நந்தமிழ் காப்பதுநம் கடன் அன்றோ?''

என்றும்,

''வந்தார்க்கோ நாமடிமை? வந்தார்பொருள்
[விற்கும்
சந்தையா நம்நாடு? தாயாம் தமிழிருக்க
இந்தியோ கட்டாயம்? என்ன பெருங்கூத்தோ?
நொந்துமொரு கொத்தடிமை நீக்கிடுதல்
[உங்கடனே!''

என்றும்,

''இன்னலை ஏற்றிட மாட்டோம்;—கொல்லும்
இந்தியப் பொதுமொழி இந்தி என்றாலோ
கன்னங் கிழித்திட நேரும் — வந்த
கட்டாய இந்தியை வெட்டிப் புதைப்போம்''

என்றும் கூறும் புரட்சிக் கவிஞரின் கூற்றுக்களி லிருந்து அவர் உள்ளத்தில் எப்படிப்பட்ட இந்தி எதிர்ப்பு உணர்வு கனன்று கொண்டிருந்தது என் பதைத் தெளிவாக உணரலாம்.

புரட்சிக் கவிஞர் அவர்கள் தொடாத புரட்சிக் கருத்து எதுவும் இல்லை. அவர் தொட்டதெல் லாம் துலங்கவே செய்தன.

தமிழகத்தின் ஈடும் எடுப்புமற்ற ஒரு பெரும் புரட்சிக் கவிஞராய் விளங்கிய பாரதிதாசன் அவர் களின் அருமை பெருமைகளை விரிப்பிற் பெருகும்; தொகுப்பின் எஞ்சும்! வாழ்க அவர் பெயர்! ஓங்குக அவர் புகழ்!



வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்.

மாண்புமிகு மு. கருணாநிதி
பொதுப்பணித்துறை அமைச்சர்




## புகார்க் காட்சி

[பூம்புகார்ப் பெருவணிகன் மாசத்துவான் மகன் கோவலன் தன் மனைவி கண்ணகியுடன் இல்லறம் இனிதே நடாத்திவரும் நாளில் கலையரசி மாதவி யிடம் காதல்கொண்டு அவளோடு தங்கிவிடுகின் றான். மணிமேகலை என்ற பெண்மகவு பிறக்கின் றது. பின்னர்ப் புகாரில் இந்திர விழா நிகழும் ஒரு நாள் . . . . . . . .]

**வீதியில் :**

கோவலனும் மாதவியும் புரவி பூட்டிய தேரில் ஏறிப் போய்க் கொண்டிருக்கிறார்கள் . . . .

விளக்குகள் எரிந்து கொண்டிருக்கும் புகார் நகரின் தெருக்களில் தேர் போகிறது . . . . . .

வெளி நாட்டார் வாணிக நிலையங்கள் . . . . பண்டகசாலைகள் . . . . விளக்குகளால் மின்னுகின் றன . . . . . .

கலங்கரை விளக்கின் ஒளி அவர்கள் தேர்மீது பட்டுப்பட்டுச் சுழல்கிறது . . . . . .

கடற்கரையில், ஆடவர் பெண்டிர் . . . . விளையாடிக் கொண்டிருக்கிறார்கள் . . . . . .

கோவலனும் மாதவியும் புன்னை மரத்தடிக்கு வருகிறார்கள்.

அங்கே அழகிய வேலைப்பாடமைந்த திரை கட் டப்பட்டு, அதன் மறைவில் . . . . கடற்கரையை யும், காவேரி கடலில் கலக்குமிடத்தையும் பார்த்த வாறு . . . . அமைந்த எழில்மிக்கக் கட்டிலில் அமர் கிறார்கள் . . . . . .

அமர்ந்ததும் . . . .

வசந்த மாலை யாழை எடுத்துக் கொடுக்கிறாள் மாதவியிடம்! . . . . . .

மாதவி, யாழைப் பெற்று இசை கூட்டு கிறாள், தன் செங்காந்தள் விரல்களால் . . . . சிறிது நேரம் . . . . பாட்டின்றி யாழொலியால் கோவலனை மயக்குகிறாள் . . . . . .

கடற்கரையில் விளையாடிக் கொண்டிருந்த வர்கள் எல்லாம் யாழ் ஒலியின் இனிமையில் மெய்ம்மறந்து நின்றுவிடுகிறார்கள் . . . . . .

கடல அலைகூட அமைதி பெறுகிறது —குளத் தைப்போல், . . . கடல் மெதுவாக அலைக்கரங்களை அசைக்கிறது.

யாழ் ஒலி . . . . கடற்கரையையே தன் வயப் படுத்தியபின் மாதவி, யாழைக் கோவலன் கையில்தந்து . . . . . .

மாதவி : ம்....முதலில் நீங்கள் பாடுங்கள். (என்கிருள்).

[கோவலன் மாதவியின் விரல்களை எடுத்து ....குளிர் பார்வையை அவைமீது வீசி..:. அவைகளைக் கண்களில் ஒற்றிக்கொண்டு....]

கோவலன் : இந்த விரல்களால் விழிகளில் கூடக் குத்திக் கொள்ளலாம்.... காயம் ஏற்படாது — அவ்வளவு மென்மையான அனிச்சமலர் விரல்கள்!....

இந்த விரல்பட்ட யாழின் நரம்புகளைத் தொடுவதற்கு....என்..... முரட்டு விரல்களுக்குத் தகுதியுண்டா மாதவி!....

மாதவி : இந்த யாழுக்கு மாத்திரம் என்னைப் போல உயிர் இருந்தால் உங்கள் விரல் மேலே படும்போது ஏற்படும் சுகத்தை ....ஒரு கவிதையாகவே பாடிவிடும்.

கோவலன் : அப்படியா?.... மாதவி!

மாதவி : அத்தான்.... பாடுங்கள்.... கண் பெற்ற இன்பம்.... என் செவியும் பெறட்டும்....

[கோவலன் யாழ் மீட்டிப் பாடுகிருன்]

பாட்டு :

''திங்கள் மாலை வெண்குடையான்
சென்னி, செங்கோல் அது வோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்,
புலவாய் வாழி! காவேரி!....
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற் கண்ணாய்!
மங்கை மாதர் பெருங் கற்பென்று
அறிந்தேன், வாழி! காவேரி!....

மன்னும் மாலை வெண்குடையான்
வளையாச் செங்கோ லதுவோச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி! காவேரி!
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவாதொழிதல் கயற் கண்ணாய்
மன்னு மாதர் பெருங் கற்பு என்று
அறிந்தேன் வாழி! காவேரி!

மாதவி : அத்தான் .... அழகான பாடல் ..சுவையான இசை.... ஆனல்..

கோவலன்: என்ன மாதவி?....

மாதவி : பாட்டின் பொருளில்....

கோவலன் : பொருளில்....? சந்தேகமா?.. காவேரி வாழ்த்துப் பாடினேன்.... காவேரிக்கு உரியவனுன கரிகாற் சோழன் கங்கையையும் வெற்றி கொண்டான்... அப்படி அவன் வடநாட்டில் படையெடுத்துக் கங்கையைத் தன்னேடு சேர்த்துக் கொண்டதைக் கண்டும் முதல் மனைவியான காவேரி அவனேடு கோபிக்கவில்லை... பிணங்கவில்லை....
இது கற்புள்ள பெண்களின் இலக்கணம்.... அப்படிப்பட்ட கற்புடைய காவேரி நதியே.... நீ வாழ்க.... என்பதே கருத்து!....

மாதவி : ஓகோ.... சரி....
காவேரியிருக்கும்போது கங்கையைச் சேர்த்துக் கொண்டவன் உங்கள் பாட்டின்படி அதோடு நிற்கவில்லையே....

[இசையுடன் பாடிக் காட்டி]

மன்னும் மாலை வெண்குடையான்
வளையாச் செங்கோல் அது வோச்சி;
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்,
புலவாய், வாழி; காவேரி!....

கோவலன்: ஆமாம்.... பாடினேன்.... காவேரியிருக்கக் கங்கையைக்கூடியவன் ....அதோடு நிற்காமல்.... பாண்டியரை வென்று கன்னியாகுமரியையும் சேர்த்துக் கொண்டான்.... அதைக் கண்டும் கரிகாலனேடு வெறுப் படையாமல்.... பிணங்காமல்.... இருந்த கற்புக்கரசி காவேரியே.... நீ.... வாழ்க!....

மாதவி : சரிதான்!.... கணவன் கங்கையோடும் கூடுவான்.... குமரியோடும் ஓடுவான்...அதைக் காவேரிபோலப் பார்த்துக்கொண்டிருக்கவேண்டுமோ? அத்தான்! இந்தப் பாடல் உங்கள் பாதுகாப்பிற்காகப் பாடினீர்களோ? கண்ணகியைவிட்டு மாதவி....பிறகு மாதவியை விட்டு....
(குறுக்கிட்டு)

கோவலன்: மாதவி! தவருகப் பொருள் கொள்ளாதே!.... நான் பாடியது கரிகாலன் பெருமையையும் காவேரியின் வளத்தையும் எடுத்துக் காட்டத்தான்!....

(யாழை வாங்கி)

மாதவி : இதோ.... நான் பாடுகிறேன். (பாடுகிருள்)

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ ஆடை அதுபோர்த்துக்
கருங்கயற் கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி!
கருங்கயற்கண் விழித்தொல்கி
நடந்த வெல்லாம் நின் கணவன்

திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன்! வாழி! காவேரி! . . . .

கோவலன்: ஓகோ! . . . . காவேரி மங்கை வளங்குறையாமல் இருப்பதற்குக் காரணம் அவள் கணவன் சோழனு டைய செங்கோலின் சிறப்புதான்! . . . கணவன் பண்போடு நடப்பதால் . . . . காவேரி . . சிரித்து மகிழ்ந்து செழிப்பு தருகிருள் . . . . இதுதானே உன்பாட் டின் கருத்து . . . . அதாவது காதலன் அன்போடு இருந்தால் . . . . காதலி யும் அன்போடு இருப்பாள் . . . . **எனக்கு** உன்மீது அன்பு குறைந்தால் **உனக்கும்** என்மீது அன்பு குறைந்து . . . . பிறகு அந்த அன்பு **வேறொருவ னிட** . . . .

மாதவி: (குறுக்கிட்டு, கோபமாக) அத்தான்! . . . . நன்ருயிருக்கிறது. நீங்கள் . . . . பாட்டுக்குப் பொருள் கூறும் அழகு! . . . .

(யாழைக் கீழே வைத்துவிட்டு எழுந்துபோகிருள்)

கோவலன்: மாதவி! . . . .

(என அழைத்தவாறு பின்னல் போகிருன்)

[மாதவி வேகமாகப் போகிருள். ''மாதவி, நில்'' எனப் பின்னல் விரைகிருன் கோவலன்.

அங்கே வலைகளுக்கிடையே ஒரு செம்படவப் பெண் நின்றுகொண்டிருக்கிருள் . . . அவளைக் கோவலன் பார்க்கிருன். செம்படவப் பெண் **கோலத்தில்** மாதவியே மீன் காயவைப்பதுபோல் தெரிகிறது அவனுக்கு . . . . அப்படி ஒரு கற்பனை அவன் உள்ளத்தில் எழுகிறது]

கோவலன்: ஆகா! . . . . . தேன் நிறைந்த நீலோற்பலப் பூவின் தண்டுகளைக் கையிலேந்திப் புலாலை உண்ணவரும் பறவைகளை ஓட்டுகின்ற இந்தப் பாவையின் கண்களோ மிகக் கொடி யன! . . . . . .

ஆகா! . . . . பொழில்தரும் நறுமலர்! பழுதறு திருமொழி! முழுமதி புரை முகம்! . . . .
[மாதவி நின்று கவனிக்கிருள்]

[கோவலன் செம்படவப் பெண்ணை மாதவி யெனக் கற்பனை செய்தவாறு]

கோவலன்: அடடா . . . . . . நகை நட்டு ஏது மின்றி எழில் சொட்டும் பருவத்தாள்! புகை யொத்த கொடிபோல நெளிந் தாடும் உருவத்தாள்! இடையோ ஒரு பிடிக்குங் காணுத இளம்பிடி! இதழ் களிலே தேன் ஒருபடி! இல்லை இவளுக்குக் குறையென்னும், புகழ் பெற்ற முல்லை. பேச்சிலோ கிள்ளை! இவளை விடுமோ காதல் தொல்லை! . . .

(பாடுகிருன்)

''திரை விரி தரு துறையே
திரு மணல் விரி இடமே
விரை விரி நறு மலரே
மிடைதரு பொழிலிடமே
மரு விரி புரி குழலே
மதி புரை திருமுகமே!
இரு கயல் இணைவிழியே
எனை இடர் செய்தவையே!''

[பாடிக்கொண்டு அருகே போகிருன் . . . . அருகே சென்றதும் அவள் மாதவியல்ல . . . செம் படவப் பெண் என்று தெரிகிறது . . . . அவளும் மிரண்டு வேறு பக்கம் போகிருள் . . . . அது கண்ட மாதவி, அதிகக் கோபமுற்று . . . வசந்த மாலையிடம் சென்று . . . .]

மாதவி: பார்த்தாயா — வசந்தமாலை!

வசந்தமாலை: பார்த்தேன் — பார்த்தேன்! மாதவி . . . . ஊடலுக்கும் ஓர் அளவு வேண்டும் . . . .

மாதவி: அவருக்கு என்னைத் தவிர வேறு யாரிடத்திலோ விருப்பம் ஏற்பட்டிருக் கிறது . . . . அதை அவரால் மறைக்க முடியவில்லை. உண்மை வெளிப்பட்டு விட்டது. இருக்கட்டும் . . . . வேண்டு மென்றே நான் அவர் மனத்தை நோக வைக்கிறேன்! நானும் வேறோர் ஆடவன்பால் காதல் கொண்டது போல் நடித்து . . . .

வசந்தமாலை: வேண்டாம். மாதவி! . . . விளை யாட்டு வினையாகிவிடப் போகிறது . . .

மாதவி: அதெல்லாம் ஆகாது நீ போய்விடு. அவர் வருகிருர்.

[அங்கே ஒரு வீரனுடைய சிலை இருக்கிறது. அந்தச் சிலையை மாதவி உற்றுப் பார்க்கிருள். சிலை, கோவலன் சிலைபோலக் கண்ணுக்குத் தெரிகிறது; சிலையிலுள்ள வீரனுக்குரிய உடைகளுடன்!]

மாதவி: [சிலையிடம்] காதல் தலைவரே! நீர் என்னை உண்மையான காதலோடு தேடிவரவில்லை, என் பற்களை மெய் யாகவே முத்துக்கள் என்று கருதி அவைகளை விலைபேசும் வர்த்தகன் போல என்னிடம் வந்தீர்! . .

இதழ்களிலே பவளமிருக்கிறது; அதை எடுத்துப் போகலாமென்று கள்வனைப் போல் என்னிடம் வந்தீர்!

கன்னத்துச் சிவப்பைக் காட்டு ரோஜா எனக் கருதிக் கேட்பதற்கு ஆளில்லை.. பறித்துப் போகலாம் என எண்ணி என்னிடம் வந்தீர்!....

நீர் எப்படி நினைத்து வந்திருந்த போதிலும், என் உள்ளங் கொள்ளை கொண்டீர். உடல்.... உயிர்.... அழகெல்லாம் உமக்கே சொந்தம்! சிலை போல நிற்கின்ற ஆருயிரே! தென்னை மரச்சோலையிலே என்னைத் தழுவிடவே எப்போது வருகின்றீர்?

புன்னைமரத்தில் அன்னம் உட்கார... அதைச் சூழ்ந்திருக்கும் பூக்களெல்லாம் விண்மீன் என்றும்.....நடுவில் உள்ள அன்னந்தான் அமுத நிலவென்றும் நினைத்துக் கொண்டு, அல்லி மலர் பூத்துவிடும், அழகிய பூம்புகார் நகரத்துக் கலைப்பெண்ணாள்... மாதவியைக் காதலால் துடிக்க விடாமல்....

கண்ணாளா வந்து விடும்....
மாவீரா வந்து விடும்....
மன்னவரே வந்து விடும்....

கோவலன்: [கோபமாக] நிறுத்து... நிறுத்து... மாயக்காரி நிறுத்து!....

மாதவி: அத்தான்....

கோவலன்: சே! அத்தான்!... விலைமகளே! நிலையில்லா மனம் படைத்த குலம் விளங்க வந்துற்ற குடிகேடி!.... கலை காட்டி... கயல் விழிகாட்டி... மயல் முழுதும் காட்டி.... மயக்குகின்ற பெண் பேயே!.... உனை நம்பி, உளமிழந்தேன்.... வளமிழந்தேன்.. உற்றார், பெற்றோர், உழுவலன்பு கொண்ட நண்பர் அனைவருமே வெறுக்கின்ற பண்பு கொண்டேன். உத்தமியாம் கண்ணகியின் உயிர் கருக்கி.... உளம் வருத்தி.... உற்சாகச் சகதியிலே இதுவரையில் வீழ்ந்து கிடந்தேன்.... இன்றுணர்ந்தேன்.. நீ யார்?.... நின்குலத்தின் பழம் பெருமையென்ன என்ற சேதி!....

மாதவி: அத்தான்!...... போதுமத்தான் போதும்!.... இந்தப் பொல்லாங்கு நேர்வதற்கோ பொழுது விடிந்தது?

கோவலன்: பொழுது விடிந்தது..... பொற்கோழி கூவிற்று.... புனித நன் மலராம் கண்ணகியை வாடவிட்டுப் புழுதியிலே கிடக்கின்ற பொங்கல்தனை உண்ண வந்தேன்.... அந்த இருட்டு மதி நீங்கிடவே பொழுது விடிந்ததடி; பொல்லாதவளே! பொழுது விடிந்தது!....

மாதவி: அய்யோ! எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே? நான் என்ன குற்றம் செய்தேன்?....

கோவலன்: ஆகாகா.... கைகாரி!..... யார் மேலோ மனம் வைத்து.... மாயப் பொய் பல கூட்டும் காதல் மொழி சிந்தியதை.... இந்தக் காதுகளால் கேட்டிருந்தேன்!........ கணிகை வீட்டுக் கட்டுத்தறியும் கண் காட்டி ஆள் மயக்கும் என்ற உண்மைதனை அறியாமல் ஏமாந்தேன்....

மாதவி: அத்தான்! சகிக்க முடியாத சொல்லம்புகளால் என்னைக் கொல்லாதீர்கள்!...மாதவி... கணிகைதான்!.... ஆனாலும் மன்னரே; உமையன்றி என் மனம் யாரையும் நினைத்ததுமில்லை... நினைக்கப் போவதுமில்லை.... நம்புங்கள் என்னை!....

கோவலன்: காளையரை ஏமாற்றக் காட்சி வரி... கண் கூடுவரி... முதலிய எட்டு வகை நடிப்புவரியும் கற்றவளடி நீ... தெரியும் எனக்கு! குமிழம்பூ மூக்கும், குவளை மலர்க் கண்ணும் கொண்டு கொவ்வைப் பழம் போன்ற வாய் மொழியால்.... இனி இந்தக் கோவலனை ஏமாற்ற ஒருக்காலும் முடியாது!..... அதோ சிலையாக இருக்கின்றானே உன் இலட்சியக் காதலன்....அவன் வரும் வரையில் காத்திரு! அவன் பொருள் தரும் வரையில் காதலியாயிரு! பின் காமக் கடையைக் கட்டி அவன் எதிரே வேறொரு சீமானிடம் நடையைக்கட்டு! போ..போ.. உன் குலத் தொழிலைக் குறைவின்றி நடத்து! கோணல் மதி படைத்தவளே! குறை குணங் கொண்டவளே! போ, போ.... என் எதிரே நிற்காதே! போ.... போ....

## மதுரைப் புறநகர்க் காட்சி

[மாதவியிடம் வெகுண்டு அவளை வெறுத்த கோவலன், கண்ணகியை நாடித் தன் இல்லம் திரும்புகின்றான். வாணிபம் செய்து பொருளீட்ட மதுரை நோக்கிப் புறப்பட்ட இருவரும், வழியில் கவுந்தியடிகள் என்ற சமணத்துறவியின் உதவியால் மாதரியின் ஆய்ச்சியர் இல்லத்தில் தங்குகின்றனர்.]

**மாதவி வீடு:**

[கண்ணகி அடுக்களையில் சமையல் வேலையில் ஈடுபட்டிருக்கிறாள்.... கோவலன் வாட்டமாக அமர்ந்திருக்கிறான்.... கண்ணகி கோவலனிடம் வந்து]

கண்ணகி: அத்தான்!....

கோவலன்: ம்!....

கண்ணகி : ஏன் வாட்டமாயிருக்கிறீர்கள்?..

கோவலன்: மீண்டும் வாணிகத்தைத் தொடங்குவதற்கு என்னவழியென்று தேடிக் கொண்டிருக்கிறேன்.

கண்ணகி : மதுரையில் நம்முடைய உறவினர்கள் நிறைய இருக்கிருர்களே! கொற்கை முத்துக்களை விற்றுக் கோட்டைமேல் வீடு கட்டிக் கொண்டிருக்கும் அவர்கள் யாரும் நமக்கு உதவி செய்யமாட்டார்களா?....

கோவலன்: என் தந்தையிடமோ — உன் தந்தையிடமோ கூடப்பெற வேண்டாமென்ற உதவியை உறவினர்களிடம் போய்ப் பெறுவதா?

கண்ணகி : வேறு வழி?....

கோவலன் : பாண்டி மண்டலத்தில் வாணிகம் செய்ய வழியில்லாமல் இல்லை. தொண்டி, கொற்கைத் துறைமுகங்களிலேயிருந்து சங்குகளும், முத்துக்களும், எலி மயிரினுல் செய்யப்பட்ட பட்டு நூல் ஆடைகளும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. சங்கை அறுத்து வளையல் செய்யும் தொழில்! தங்கநிற ஆடை நெய்யுந் தொழில்!.. உப்பு விளைவிக்கும் தொழில்!....இப்படிப் பல தொழில் உண்டு. பாண்டியத்தில்!.... எந்தத் தொழிலில் ஈடுபடவும் பொருள் வேண்டுமே!....

கண்ணகி : அத்தான்..... நான் ஒரு வழி சொல்லுகிறேன்.... கோபிக்கமாட்டீர்களே....

கோவலன்: என்ன கண்ணகி?....

கண்ணகி : என் திருமணப் பரிசாக... ஐம்பதாயிரம் கழஞ்சு பொன்னுக்கு வாங்கித் தந்தீர்களே; அழகான காற்சிலம்புகள்!.... அவைகளை விற்று..

கோவலன்: சிலம்புகளையா?.... கண்ணகி! ...சிலம்புகளை விற்பதா?...அய்யோ இந்த வார்த்தையை என் காதுகள் கேட்கும் காலமும் வந்ததே....மத்தளம்...சங்கு... முரசுகள் முழங்க மன்னர் பவனிபோல் வெண் பொற்குடையின் வரிசைகள் விளங்க.... மணவிழா கண்ட சுவைமிகு நாளில் அணிந்த சிலம்பை அழிப்போம் என்று ஆருயிரே, நீ சொல்வதற்கு...நானே காரணம்!.... நானே காரணம்!!..

கண்ணகி : தங்களுக்குப் பயனில்லாமல் அழகுக்கேன் ஆபரணம்?....

கோவலன்: உன் கமல மலர்ப்பாதங்களில் கணீர்.... கணீர்.... என ஓசையெழுப்பி.... இந்தக் கயவன் இதுவரையில் கழற்ருமல் விட்டு வைத்திருக்கும் ஆபரணம் அது ஒன்றுதான் என்று இடித்துச் சொல்லிக் கொண்டிருக்கிறதே; அந்தச் சுந்தரச் சிலம்பையா விற்றுவரச் சொல்கிருய்?... அய்யோ.... எப்படிப்பட்ட கஷ்ட காலம் எனக்கு வந்துவிட்டது!....

கண்ணகி : நீங்கள் யாருக்கும் எந்தத் தீங்கும் செய்யவில்லை.... நீங்கள் கஷ்டப்படவே மாட்டீர்கள்....

கோவலன் : எல்லாவற்றையும் சேர்த்துத் தான் உனக்குப் பெரிய தீங்கு செய்து விட்டேனே கண்ணகி....

கண்ணகி : போனதையெல்லாம நினைத்து மனத்தைப் புலம்பவிடாதீர்கள்!....

கோவலன் : கண்ணகி....

கண்ணகி : வாருங்கள் சாப்பிடலாம்........ வெகு நாட்களாயிற்று.... என் கையால் சமைத்து.... உங்களுக்கு ....உணவு பரிமாறி!.... வாருங்கள்.

[அவன் கைதொட்டு அழைக்கிருள்.... எழுகிருன்....

உணவு படைக்கிருள்.... கோவலன் சாப்பிடுகிருன்]

கண்ணகி : சமையல் எப்படியிருக்கிறது?...

கோவலன் : [பூரிப்புடன்] வழக்கத்தைவிடக் கொஞ்சம் அதிகமாகவே சுவைக்கிறது.. கண்ணகி!.. இதுதான் உன்னுடைய **கடைசிச்** சமையல்.

கண்ணகி : ஏன்?....

கோவலன் : மீண்டும் வாணிகம் தொடங்கி விட்டால்... உன்னைப் பிறகு சமைக்க விடமாட்டேன்... சமையலுக்கு ஒரு தனி ஆள்!.... நாமிருவரும் தனி உலகம்! சரிதானு?

[கண்ணகி வெட்கித் தலை குனிந்தவாறு]

கண்ணகி : சரி சரி.... அதற்குள் கோட்டை கட்டாதீர்கள்!.... சாப்பிடுங்கள்!

[கண்ணகி வெற்றியிலையில் சுண்ணும்பு தடவுதல்.... மடித்தல்.... கணவனுக்குத் தாம்பூலம் தருதல்....]

கண்ணகி : சிலம்பு விற்ற பொருள்—வாணிபத் துக்குத் தேவையானது போக மீதியில் உங்களுக்கு வேண்டிய பட்டாடை களும்.... அணி மணிகளும் வாங்கி வாருங்கள்!.... நீண்ட நாட்களா கின்றன, உங்களுக்கு நான் அலங் காரம் செய்து அழகு பார்த்து!....

கோவலன் : (கேலியாக) ம்!....

கண்ணகி : [நாணத்துடன்] ம்!....

கோவலன் : [தடுத்து] வேண்டாம் கண்ணகி!.. அய்யோ.... நீ சிலம்பில் கை வைப் பது என் தலையைத் துண்டிப்பதுபோல் இருக்கிறது....

கண்ணகி : நான் சொல்வதைக் கேட்கமாட் டீர்களா அத்தான்....நாம் ஆரம் பிக்கும் வாணிகம் வளரத் தொடங்கி விட்டால் இதுபோல் எத்தனையோ சிலம்பு வாங்கிக் கொள்ளலாம்....

[என்று கழற்றப் போகிறாள்]

கோவலன் : இரு, இரு கண்ணகி....சிலம் புகள் உன் காலில் இருக்கும் போதே ....ஒருமுறை நடந்து காட்டு. அந்தக் காட்சியைக் **கடைசித்** தடவையாக நான் பார்த்துக் களிக்கிறேன்....

கண்ணகி : அத்தான்?....

கோவலன் : ஆமாம் கண்ணகி... சிலம்பை விற்றுவிட்டால்.... பிறகு....அந் தக் காட்சியைக் காண முடியுமா?.... எங்கே..நட.. நட கண்ணே!.....

[கண்ணகி கண்களில் நீர்....நடக்கிறாள். கோவலன் கண்கள்....குளமாகின்றன. அப்போது ஐயை உள்ளே ஓடிவந்து]

ஐயை : அண்ணா!... அண்ணா!

கோவலன் : என்னம்மா....

ஐயை : அண்ணியையும் அழைத்துக்கொண்டு போய்விடாதே.... தலைநகருக்கு...

கோவலன் : ஏன்?....

ஐயை : நாங்களெல்லாம் குரவைக் கூத்து நடத்தப்போகிறோம்...அதை அண்ணி பார்க்கவேண்டுமென்று எனக்கும் என் தோழிகளுக்கும் ஆசை....

கோவலன் : கண்ணகி என்னோடு வருவதா யில்லையம்மா!.... நான் மாத்திரமே தலைநகருக்குப் போகிறேன். உங்கள் குரவைக் கூத்தைக் குதூகலமாக நடத் துங்கள்....

ஐயை : சரியண்ணா.... அண்ணி!...... தயாராக இருங்கள்... கொஞ்ச நேரத்தில் வருகிறோம்...அழைக்க!..

[கண்ணகி தலையசைக்க ஐயை போய் விடுகிறாள்]

கோவலன் : கண்ணகி!..... நான் தலைநகருக்குப் புறப்படுகிறேன்....

கண்ணகி : இதோ!....

[என்று சிலம்புகளைக் கழற்றப் போகிறாள்]

கோவலன் : கண்ணகி இரண்டையும் விற்க வேண்டாம்....ஒன்றை மாத்திரம் கொடு!....

கண்ணகி : ஒன்று மட்டுமா?...

கோவலன் : ஆமாம்...... ஒரு சிலம்பு உன் காலிலேயே இருக்கட்டும்...அந்த ஒற் றைச் சிலம்பு ஒலியெழும் போதெல் லாம்.... உத்தமியாம் உனக்குக் கேடு நினைத்த இந்த உன்மத்தனின் உள்ளத்திலே.... ஆயிரமாயிரம் சம் மட்டியடிகள் விழுந்து கொண்டேயிருக் கட்டும்!....

அற்பனே! அறிவற்றபதரே! ஆவி நிகர் மனையாளை ஆலையிட்ட கரும் பாக்கி.... அணு அணுவாய்ச் சித் திரவதை செய்திட்ட கொடும்பாவி, கொலைகாரா!.... என்றெல்லாம் அந்த ஒற்றைச் சிலம்பு என்மீது கவி பாடட்டும்.... அதைப் புவி கேட் கட்டும்...இந்தப் புன்மதியாளனுக்கு அப்போதாவது புத்தி வரட்டும் கண் ணகி.... புத்தி வரட்டும்!....

கண்ணகி : அத்தான்!.... உங்கள் நிலவிழி சிந்துகின்ற நீர்த்துளியால் கோலமு கம் நனைவதற்கோ...பாவி நான் வழி சொன்னேன்... கவலைப்படாதீர்கள் அத்தான்... நம்பிக்கை நிறைந்த எதிர்காலம் நம்மை நோக்கி ஒளி விடுகிறது....

கோவலன் : நான் போய்வரவா கண்ணே!

கண்ணகி : [தன் கண்களையும், அவன் கண் களையும் துடைத்துவிட்டு] எங்கே..... கவலைப்படாமல்....... ......மகிழ்ச்சியோடு ...எங்கே.... எங்கே.... என்னை மயக்க வைக்கும் அந்த மந்தகாசப் புன்னகை... ஒரு முறை.... அத்தான்...

கோவலன் : (புன்முறுவலுடன்) கண்ணகி....

கண்ணகி : அத்தான்....

கண்ணகி : சீக்கிரம் திரும்பி வாருங்கள்....

கோவலன் : மாதவி வீட்டுக்குப் போனது போல் **வராமலே** போய்விடுவேன் என்று பயப்படுகிறாயா?...

கண்ணகி : அதுதான் திரும்பி வந்துவிட்டீர்களே..

கோவலன்: சரி கண்ணகி.... நேரமாகிறது..

கண்ணகி : அத்தான்; அதிகப் பழக்கமில்லாத ஊர்... பத்திரமாகப் போய் வாருங்கள்....

கோவலன்: குழந்தைக்குச் சொல்வதுபோலச் சொல்கிறுயே....

கண்ணகி : அதுவும் சொல்லத்தானே போகிறேன்....

கோவலன்: குழந்தைக்கா?.... (கேலியாக) ஊம்!.... வரட்டுமா. கண்ணகி...

கண்ணகி : அத்தான்....

கோவலன் : கண்ணகி....

[குரவைக்கூத்து ஆரம்பமாகிவிட்ட ஒலி கேட்கிறது...]

கோவலன்: குரவைக் கூத்து ஆரம்பமாகி விட்டது. உனக்கு அழைப்பு வந்து விடும் ....வருகிறேன்.

[போகிருன்]

[ஐயை முதலியோர் கண்ணகியிடம் ஓடி வந்து குரவைக்கூத்துக்கு அவளை இழுத்துச் செல்கிருர்கள்.]

## மதுரைக் காட்சி

[பாண்டியன் நெடுஞ்செழியன் துணைவியாம் கோப்பெருந்தேவியின் சிலம்பைத் தவற விட்ட பொற்கொல்லர் கண்ணகியின் ஒற்றைச் சிலம்பை விற்க வந்த கோவலனைக் குற்றவாளி என்று கூற, மன்னனும் ஆராயாது கொலைத் தண்டனை விதிக்கிருன். கேள்வியுற்ற கண்ணகி பொங்கி யெழுந்து, கணவன் குற்றமற்றவன் என நிரூபிக்கப் பாண்டியன் கொலுமண்டபம் நோக்கி விரைகின்ருள்.]

### மதுரை அரண்மனை வெளிப்புறம்

[கண்ணகி வருகிருள், கையிற் சிலம்புடன்.. காவலர் அவளை அதிகாரத்துடனும் வியப்புடனும் நோக்குகின்றனர்.]

கண்ணகி : காவலரே! காவலரே!... காவியுகு நீரும் கையில் தனிச்சிலம்பும் ஆவிகுடி போன வடிவுங் கொண்டு ஒருத்தி வந்திருக்கிருள்; உம்மைச் சந்திக்க; என்று உமது மன்னனிடம் சென்று உடனே கூறுவீர்!.... உடனே கூறுவீர்!!....

[காவலர் உள்ளே செல்லுதல்]

### பாண்டியனின் கொலுமண்டபம்

[காவலர் ஓடி வருதல்....]

காவலன் : மன்னவா!.... கண்ணீரும் கம்பலையுமாக ஒரு பெண்மணி தங்களை அவசரமாகக் காணவேண்டுமென்று துடிக்கிருர்கள்....

பாண்டியன்: அப்படியா? .....அழைத்துவா உடனே!....

[கண்ணகி வருகிருள் எரிமலைபோல.... அவைக்களம் திகைப்பில் ஆழ்கிறது]

பாண்டியன்: யாரம்மா?....
வேதனை உருவமாகக் காட்சி தரும் நீ யார்?....

கண்ணகி : புருவுக்கு உடல்தந்து புகழ் பெற்ற மன்னவரின் வரலாற்றை...
தேர்க்காலில் மகனையிட்டு நியாயம் காத்த மனுநீதிச் சோழனது பெருங் கதையை.... நீதியின் இலக்கணமாய்ப் பெற்றுப் பெருமைகொண்ட திருமாவளவன் கரிகாற் சோழனது பூம்புகாரே எனது ஊர்....
பெரு வணிகன் மாசாத்துவானின் மருமகள்....
என் பெயர் கண்ணகி!....

பாண்டியன்: உன் முறையீடு என்னவோ?..

கண்ணகி : முத்து விளைகின்ற மூன்று கடல் சூழ்ந்திருக்கும் தென்னகத்தில்.... மும்முரசு கொட்டி.... முச்சங்கம் வளர்த்து... முக்கொடியின் நிழலிலே ....முத்தமிழைக் காப்பாற்றும்..... மூவேந்தர் பரம்பரையின் பெருமைதனை மூளியாக்க முடிபுனைந்த மன்னவனே!.... எந்தன் முறையீட்டைக் கேட்பதற்குமுன் நான் யாரென்று முழுவதும் தெரிந்துகொள்க!....

பாண்டியன்: யார் நீ?....

கண்ணகி : கண்ணகி!.... கையில் தனிச் சிலம்போடு வந்திருக்கும் கண்ணகி!.... மெய்யிற் பொடியும் விரித்த கருங் குழலும் நெறித்த புருவமுங் கொண்டு நீதி வழுவா நெடுஞ்செழிய பாண்டியனைத் துணிந்து இகழ்ந்துரைக்கும் கண்ணகி!.... அவ்வளவுதான் உனக்குத் தெரியும்!..பாண்டிய மன்னு!.. ரோமாபுரியின் கொலுமண்டபத்திலே உனது தூதுவர் இருக்கிருர்கள்.... இதோ! பாண்டியத்துப் பேரவையிலே ரோமானியர் வீரர்களாகவும் தூதுவர்களாகவும் வீற்றிருக்கிருர்கள். கடல் கடந்து கொடி கட்டி ஆளுகின்ருய்..

அந்தக் கொடிக் கம்பம் முறிந்துவிழ;
அயல் நாட்டார் இகழ்ந்துரைக்க—உன்

கொடுங்கோல் அளித்த அவசரத் தீர்ப்புக்கு ஆளாகிக் கொலையுண்ட கோவலன் மனைவி கண்ணகி நான் என்பதையும் அறிந்திடுக. அரசே!... அறிந்திடுக!!....

பாண்டியன்: கோவலன் மனைவி!!! சிலம்பு திருடிய கள்வனின் மனைவி!

கண்ணகி: போதும்....
யாகாவாராயினும் நாகாக்க மன்னா!
நாகாக்க!.... யார் கள்வன்?....
என் கணவனா கள்வன்? இல்லை!....
அவரைக் கள்வனென்று குற்றம் சாட்டிய கயவர்களே கள்வர்கள்!

பாண்டியன்: ஆத்திரத்தில் அறிவுக் கண்ணை மூடி விடாதே கண்ணகி!.... கையும் களவுமாகப் பிடிபட்டான் உன் கணவன்.... கள்வனைத் தமிழகத்து நீதி கொல்லாமல் விடாது என்பது உனக்குத் தெரியுமல்லவா?....

கண்ணகி: நீதியின் இலக்கணமுரைக்கும் நெடுஞ்செழிய பாண்டியனே! உமது நாட்டில் எதற்குப் பெயர் நீதி?.... நல்லான் வகுத்ததோ இங்கு நீதி?... அல்ல...அல்ல... வல்லான் வகுத்ததே இங்கு நீதி!... அதனால்தான் என் வாழ்வுக் கருவூலத்தைச் சாவுப் படுகுழியில் கொட்டிவிட்டீர்! கொற்றவனே!.......குடை நிழலில் குஞ்சரம் ஊர்பவனே! கொலுமண்டபத்தில் விசாரிக்கப்பட வேண்டிய வழக்கு, கோயில் மண்டபத்தோடு முடிவானேன்? குற்றம் சாற்றப் பெற்றவரின் மறுப்புகளுக்கு மதிப்புத் தராமல் கொலைவாளின் வேலை அவ்வளவு அவசரமாக நடைபெறுவானேன்?
இதற்குப் பெயரா நீதி?
இதற்குப் பெயரா நேர்மை?
இதற்குப் பெயரா நியாயம்?
இதற்குப் பெயரா அரசு?
உமக்குப் பெயரா அறங்காக்கும் மன்னன்?....

பாண்டியன்: கண்ணகி!.... உன் கணவன் கையிலேயிருந்தது அரசி கோப்பெருந் தேவியின் சிலம்பு....

கண்ணகி: இல்லை!... கோப்பெருந் தேவியின் சிலம்பில்லை...கோவலன் தேவியாம் என்னுடைய சிலம்பு!....

பாண்டியன்: நம்பமுடியாது என்னால்!....

கண்ணகி: நீ யார் நம்புவதற்கு?... உன்னை யார் நம்பச் சொல்கிறார்கள்? உன் மீது வழக்குரைக்க வந்தவள் நான்!.. குற்றவாளி நீ!.... அதனால் தீர்ப்பளிக்கும் உரிமை உன் கையில் இல்லை! ...இதோ, இருக்கிறார்கள்...பெருங்கேண்மைப் பெரியோர்கள்! அவர்களே இப்போது நீதிபதிகள்!... அவர்கள் உரைக்கட்டும் நல்ல தீர்ப்பு.... ஆன்றோர்களே!.... அறிவுமிகுந்த சான்றோர்களே!... அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படைகொண்டவன் பாண்டியன் என்பதற்காக நீதியின் பாதையை வளைக்காமல்....ஆரியப் படை கடந்தான்...அவனியெல்லாம் புகழ் பெற்றான்.... என்ற கீர்த்தித் திரையால் அவன் செய்த குற்றத்தை மறைத்து விடாமல்.... தாய் மேல் ஆணையாகத் தமிழ்மேல் ஆணையாகத் தாயகத்து மக்கள் மேல் ஆணையாகத் தீர்ப்புக் கூறுவீர்!....
தீர்ப்புக் கூறுவீர்!....
கோப்பெருந்தேவியின் சிலம்பைக் கோவலன் திருடினார் என்பது குற்றச்சாட்டு! அதற்காக மரண தண்டனை! .... அது ஆராயாமல் அளித்த தீர்ப்பு ....அதற்கு மன்னன் பொறுப்பு.... என்பது என்னுடைய வழக்கு!....

அமைச்சர்: வழக்கிற்கு ஆதாரம்?

கண்ணகி: இதோ இந்தச் சிலம்பு! இதற்கு இணையான மற்றொரு சிலம்பைத்தான் என் மணவாளர் விற்க வந்தார். மாபாவிகள் அவரைக் கொன்று குவித்து விட்டார்கள்!....

பாண்டியன்: அப்படியானால் தேவி அணிந்திருக்கும் சிலம்பு....?

கண்ணகி: அவைகளில் ஒன்று என்னுடையது.. அதற்கு அடையாளம் வேண்டுமா?.. ஆயிரம் கேள்வி எனைக்கேட்டு உன்னைக் குற்றமற்றவனாய் ஆக்கிக் கொள்ளத் துடிக்கிறாயே; நீதி மன்றத்தின் தூய்மையை அழித்த பாண்டியனே! இப்படி ஒரு கேள்வி நேருக்கு நேர் என் அத்தானைக் கேட்டிருந்தால் நீதிவழுவா நெடுஞ்செழியன் என்ற பெயர் உனக்கு நிலை பெற்றிருக்கும்!.... என் அத்தானின் உயிரும் தங்கியிருக்கும்!....

அமைச்சர்: பெண்ணே!....தேவி அணிந்திருப்பதில் ஒரு சிலம்பு உன்னுடையது என்பதை மெய்ப்பித்துக் காட்டுவாயா?

கண்ணகி: மெய்ப்பித்து என்ன பயன்? இறந்து போன என் கணவனை எழுப்பித் தருவீர்களா! வெட்டுண்ட தலைதனை ஒட்டித் தருவீரோ?.... முடியாது உங்களால்.... முடியாது உங்களால்... ஆனால் ஒன்று.... உயிர் போனதால் தொங்கிவிட்ட என் அத்தானின் தலை போல உங்கள் தலைகளையும் தொங்க வைக்கிறேன்.... உங்கள் மானம் போனதால், உங்கள் நேர்மை போனதால், உங்கள் நீதி அழிந்ததால்!... இதோ, உங்கள் தலைகளையும் தரை

நோக்கித் தொங்க வைக்கிறேன். மதுரைப் பாண்டியா!.... உனது மனைவியின் பழைய சிலம்பிலே உள்ள பரல்கள் முத்துக்களா? மாணிக்கங் களா?...

பாண்டியன்: முத்துக்கள்!.... கொற்கை முத்துக்கள்!....

கண்ணகி: என் சிலம்பிலே உள்ளவை மாணிக் கப் பரல்கள்!

பாண்டியன்: எங்கே பார்க்கலாம்.... தேவீ! கொடு இப்படி!....

[அரசி சிலம்புகளைத் தருகிருள்]

பாண்டியன்: இதோ பார்!

[கீழே ஆத்திரமாக வீசி உடைத்தான். முதற் சிலம்பில் முத்துப் பரல்கள் தெறிக்கின்றன.]

பாண்டியன்: இதோ கோவலன் திருடிய சிலம்பு!

[அதையும் உடைக்கிருன்....... அதில் மாணிக்கப் பரல்கள் சிதறுகின்றன.]

பாண்டியன்: ஆ!....

அவையோர்: ஆ!....

கண்ணகி: இன்னும் சந்தேகமா? இதோ என் னுடைய மற்ருெரு சிலம்பு!....

[உடைக்கிருள், ஆவேசமாக... மாணிக்கப் பரல்கள் சிதறுகின்றன...]

கண்ணகி: என்ன சொல்லுகிருய், பாண்டியா இப்போது?.... அமைச்சர்களே!... அறங்கூறும் சான்ருேர்களே!...இதற் கென்ன பதில்?.... தலை தொங்கி விட்டதா? நீதி கவிழ்ந்து விட்டதா? வாய் அடைத்து விட்டதா? நெடுஞ் செழியப் பாண்டியனின் அறம்.... மறம்....திறன் அத்தனையும் மண் ணோடு மண்ணுகத் கலந்து விட்டதா? அய்யோ, ஏனிந்த வாட்டம்? தமிழகம் சிரிக்கிறது பாண்டியா? நீ தலைகுனிந்து நிற்பதைப் பார்த்து!............ தமிழ் நாட்டு மறைநூல் திருக்குறள் கேலி புரிகிறது பாண்டியா உன் நீதி வளைந்த செய்தி கேட்டு! ஆனை, சேனை, ஆயிரமாயிரம் எதிர்த்து வந்தாலும் அண்ணுந்த தலை குனியாமல் படை நடத்தும் உன் வீரமெங்கே? கம்பீர மெங்கே? வெற்றித் திருப்பார்வை எங்கே?.... எல்லாம் பாழ்!.... பாழ்... பாழ்!... மானமெல்லாம் போனபின்பு உனக்கு மாடமாளிகை மணி மண்டபம் ஒரு கேடா? மாணிக்க மிழைத்த அரியாசனம் ஒரு கேடா?.. மாசு படரவும் மாநிலம் இகழவும் நீதி வழங்கிய உனக்கு செங்கோல் எதற்காக? வெண்குடை எதற்காக? வேற்படை - வாட்படை - வேழப் படை எதற்காக? வீணனே!...வீரர் குலத் துக்கு இழிவு கற்பிக்க வந்தவனே!.... இமிழ் கடல்வேலித் தமிழகமெங்கும் நீங்காமல் நிறைந்திருந்த நீதிதனை நொடிப் பொழுதில் அழித்துவிட்ட பாதகனே!

அழு!.... அழு!.... நன்ருக அழு! என்னைக் காலமெல்லாம் அழவைத்த காவலனே! நன்ருக அழு!... எந்தன் காதலனைக் - கண்ணுளனைக் கண் நிறைந்த மணவாளனைத் துடிக்கத் துடிக்கக் கொன்று விட்ட பாவி, அழு! ....அழு!....அழு!....

பாண்டியன்: கண்ணகி!... உன் கணவன் கள் வனனல்ல! . ஆராயமல் அவசரத்தில் ''கொண்டு வருக அவனை!'' என்பதற் குப் பதில்... 'கொன்று வருக அவனை! என்று ஆணையிட்ட நானே கள்வன்!.. நானே கள்வன்!.... தமிழே!.... தாயகமே!.... என் தாயே!.... என்னை மன்னித்துவிடு!.... மன்னித்து விடு!....

[அடியற்ற மரமென விழுந்து சாகிருன்!... கோப்பெருந்தேவியும் அவனைத் தழுவி....]

கோப்பெருந்தேவி: அரசே! அரசே!! அரசே!!!

[என அவன்மீது வீழ்ந்து உயிர் விடுகிருள்]

கண்ணகி: அழியட்டும்! ஒழியட்டும்!!
நீதி தவறிய பாண்டியா!
உன் களங்கத்தைக் கழுவக் கூடிய சாதனம் சாவு ஒன்றுதான்! சாவு ஒன்றுதான்!!

அழியட்டும்!.... ஒழியட்டும்!!.... என் கணவன் சாவைத் தடுக்க முடியாத மதுராபுரியே அடியோடு அழியட்டும்!.... மாளிகைகள் மண் மேடாகட்டும், பூமி பிளக்கட்டும்! புழுதி பறக்கட்டும்! நெருப்புப் பரவட் டும்! நியாயத்தின் பிழம்பு தெரி யட்டும்.

[பயங்கரச் சிரிப்பு!...நகரமெங்கும் கேட் கிறது....நகரில் தீ பரவுகிறது... தெருவில் மக்கள் ஓட்டம்]

## வஞ்சிக் காட்சி

[சேரப் பெருவேந்தன் நெடுஞ்சேரலாதனின் மக்கள் இருவர் - செங்குட்டுவன், இளங்கோ என் பார். அரசவைக்கு வந்த நிமித்திகன் ஒருவன், அண்ணனைவிடத் தம்பியே அரசர்க்குரிய களை யுடன் விளங்குவதாக உரைக்க, அவன் வாக் கைப் பொய்யாக்க, இளங்கோ, துறவறம் பூண்டு, நாடு நீங்கிக் கானகத்தில் இளங்கோவடிகளாக வாழ்கின்ருர்.

பேரியாற்றங் கரையை அடுத்துள்ள மலை வளமிக்க பகுதி.... தினைப் புனங்களில் கிளிகளை ஓட்டுகின்ற ஒலியும், ஆலோலப் பாடல்களும்... யானைகளும் புலிகளும் நிறைந்த இடமென்பதை விளக்கும் சூழ்நிலைகள்....மலைப் பகுதியில், மலை மகளிரும், ஆடவரும் அவரவர்கள் தலையிலும் தோளிலும் பல பொருள்களைச் சுமந்து நடக்கின்றனர். கூடைகள், மூட்டைகள், மான்குட்டிகள், புலிக்குட்டிகள், ஆனைக் குட்டிகள், குரங்குகள்... இப்படிப் பல வகைப் பரிசுகளுடன் ... பயணம் நடத்துகின்றனர். வரும் வழியில், மலையடிவாரத்தில் நின்றுகொண்டிருந்த இளங்கோவடிகளை வணங்குகின்றனர்.]

இளங்கோவடிகள் : மலைவாழ் தமிழர்களே!... பேரியாற்றங்கரை நோக்கிப் போவது போல் தெரிகிறதே; எதற்காகவோ?

ஒருவன் : அடிகளாருக்குத் தெரியாதா? தங்கள் அண்ணன் செங்குட்டுவ மன்னரும் புலவர் சாத்தனாரும் இயற்கை வளம் காண்பதற்காகப் பேரியாற்றங் கரைக்கு வந்திருக்கிறார்கள். அவர்களுக்குப் பரிசாக இவைகளை....

இளங்கோவடிகள் : அப்படியா! நானும் வருகிறேன்!....

[அனைவரும் பயணத்தைத் தொடருகிறார்கள்....

பேரியாற்றங்கரை.... இரண்டு யானைகள் போர் நடத்துவதைச் செங்குட்டுவன், வேண்மாள், சாத்தனார் மூவரும் வேடிக்கை பார்க்கிறார்கள்.

அப்போது....

இளங்கோவும் மலைமாந்தரும் வருகிறார்கள்.

செங்குட்டுவன் : தம்பி!

இளங்கோவடிகள் : அண்ணா!

[தழுவிக் கொள்கிறார்கள்]

இளங்கோவடிகள் : அண்ணி!.... நலந்தானே?

[அவள் தலையசைக்கிறாள்]

இளங்கோவடிகள் : சாத்தனாரே!.. தாங்களும்.

சாத்தனார் : மலைவளங் காண வந்தேன். மனவளம் மிகுந்த தங்களைக் காணும் வாய்ப்பும் பெற்றேன்.

இளங்கோவடிகள் : அண்ணா! இந்தப் பகுதி மலைமக்கள் தங்களுக்குப் பரிசுப் பொருள்கள் அளிக்க விரும்புகிறார்கள்.

செங்குட்டுவன் : அப்படியா!....

மலைமக்கள் : வணக்கம்!....

[அனைவரும் வணங்குதல்....

யானைத் தந்தம், தேன், சந்தனக் கட்டை, தேங்காய், கரும்பு, மாங்கனி, பலாக்கனி, வாழைக்குலை, சிங்கக்குட்டி, புலிக்குட்டி, யானைக் குட்டி, குறும்பாடு, மான்குட்டி, கீரிப்பிள்ளை, தோகை மயில், புனுகுப் பூனை, கிளி ஆகிய பரிசுப் பொருள்களை எதிரே குவிக்கின்றனர்.]

செங்குட்டுவன் : மிக்க நன்றி! மகிழ்ச்சி!! தமிழ்நாட்டு வளங்கள் என்றென்றும் வாழ்க! அன்புள்ளவர்களே! இந்தப் பகுதியில் ஏதாவது புதுமை உண்டா?....

ஒருவன் : உண்டு!... உண்டு! கணவனை இழந்த ஒரு பெண்.... கண்ணகியென்ற பெயருடையவள்... அதோ அந்த வேங்கை மரத்து நிழலிலேயே பல நாட்கள் நின்று கொண்டிருந்தாள்.... கணவன் வருவான் வருவான் என்று கண் கலங்கக் கூறிக் கொண்டிருந்தாள்.... திடீரென்று ஒரு நாள் அவளைக் காணவில்லை. எங்கு போனாளோ தெரியாது! கணவன்தான் இறந்தவன் திரும்பி வந்தானோ... அல்லது அவள்தான் அவனோடு போய் விட்டாளோ.... தெரியாது எங்களுக்கு! அவளைப் போல ஒரு பெண்ணை, இதுவரை நாங்கள் கண்டதில்லை.

செங்குட்டுவன் : கண்ணகி....

சாத்தனார் : ஆமாம்! கற்புக்கரசி கண்ணகி.... நல்ல நேரத்தில் மலைமக்கள் நினைவூட்டினார்கள்... நான் அவள் கதையைச் சொல்லுகிறேன்.... இளங்கோவடிகள் அதை ஒரு காவியமாக எழுதட்டும். கண்ணகி காவியம் சேர, சோழ, பாண்டிய நாட்டுப் பெருமைகளைச் சொல்லும் ஒப்பற்ற கருவூலமாக அமையட்டும்.

செங்குட்டுவன் : சொல்லுங்கள், புலவரே! இளங்கோ அதற்கு இலக்கியம் படைப்பான்! என்ன தம்பி! சரிதானே?

இளங்கோவடிகள் : சரியண்ணா! சாத்தனாரே சொல்லுங்கள், கண்ணகி கதையை..

[சாத்தனார் அங்குள்ள புலிக்குட்டியைத் தடவிக் கொடுத்தவாறு கதையைத் துவங்குகிறார்.... இளங்கோ எழுதத் தொடங்குகிறார்.]

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

மாண்புமிகு திரு. மா. முத்துசாமி
உள்ளாட்சித்துறை அமைச்சர், தமிழக அரசு




காடு கமழவந்த கற்பூரச் சொற்கோவாய், நீடு துயில் நீக்கப் பாடிவந்த நிலாவாய், இருபதாம் நூற்றாண்டில் மக்களுக்காகப் பாடும்பணியே பணியாகக் கொண்டு விளங்கியவன் பாரதி. வாழையடி வாழையாக வந்த கவிஞர் திருக்கூட்டத்தின் வழியாக வந்தவன்தான், சுவைபுதிதாய்ப் பொருள் புதிதாய், வளம் புதிதாய்ச் சொல் புதிதாய்ச் சுவைமிக்க நவகவிதை படைத்தளித்து —அடிமைத் தொழும்பு பறக்க ஆர்ப்பாட்டப் போர்ப் பாட்டுப்பாடிய பாரதி!

இருபதாம் நூற்றாண்டின் முதற்பகுதியில் இவரை விஞ்சிய பாவன்மை சான்ற பாவாணர் இருந்தனர். இலக்கண இலக்கியங்களை நரம்பறிந்து கற்ற நன்னூற் புலவர் பன்னூறு பேர் இருந்தனர். ஆயின் அவர் தம் புலமை நலனும் பொற்புறு கவிவளமும் மக்களின் வாழ்வோடு ஒட்டாமல், உறவு கொள்ளாமல், பழைய பாதையிலேயே சென்று கொண்டிருந்தன. கோவைகண்டால் ஒரு கோவையும், அந்தாதி கண்டால் ஓர் அந்தாதியும் பாடி, பெற்றது கொண்டு சுற்ற மருத்தி வாழ்ந்து மடிந்து போயினர். நாட்டின் மேட்டுக்குடி மக்களுக்கு மட்டுமே அவர் பாட்டுப் பணி ஆற்றினர். பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம் விழிபெற்றுப் பதவி கொள்ள வேண்டும் என்ற எண்ணமோ . . . நாடு அடிமைத் தளையறுத்து உரிமைக் கொடி பறக்கவிடவேண்டும் என்ற வேட்கையோ அப்பாவலர்பால் அரும்பவில்லை. நாடு, மொழி, கவிதை இவை மூன்றும் தேக்கமும் திகைப்பும் கொண்டு திக்குத் தெரியாத காட்டில் இருட்புலத்தில் இடருற்று நின்றன.

இந்நிலையிலே தமிழகத்தில் எழுந்த புதுக்கவிக் குரலின் போர்முரசம் உறங்கிக் கிடந்த மக்களை உசுப்பி எழுப்பிற்று! பாரதி, பாட்டின் பழைய முறை, பழைய நடை என்னும் காடு முற்றும் சுற்றியலைந்து கண்டவன். ஆனால் பழைமையை உரமாக்கிக் கொண்டு புதுப்பயிர் விளைவித்தவன்.

கலைக்கும், செல்வத்திற்கும், நெஞ்சைக் கனல விடும் மறத்திற்கும் நாட்டிலே தெய்வங்கள் உண்டு. இத் தெய்வங்கட்கு வழிபாடும் தினந்தோறும் உண்டு. மக்களின் ஊறிய கடவுள் நம்பிக்கையை உற்று நோக்கிய பாரதி — அதனைத் தன் நோக்கத்திற்கேற்பப் பண்படுத்திக் கொள்ள முயல்கின்றான் — முனைகின்றான்! உரிமையின் அருமையை உணராமல் — சொந்த நாட்டிலே பரர்க்கடிமை செய்து துஞ்சியும் அஞ்சியும் கிடக்கின்ற மக்களுக்கு ஒரு புதுத் தெய்வத்தைப் படைத்துக் காட்டுகின்றான். அவர்கள் கடவுள் பற்றை நாட்டுப்பற்றாக மாற்றிடத்தக்க வழியும் அதுவே என உணருகின்றான். ஆம்! அவன் உருவாக்கியளித்த அத்தேவிதான் சுதந்திரதேவி! இச் சுதந்திரதேவியின் அருளும் அன்பும் இல்லாவிட்டால் கலைமகளாயினும் திருமகளாயினும் நாட்டு மக்களைக் கடைத்தேற்ற முடியாதெனத் தெள்

ளிதின் உணர்கின்ருன்! அதனையே உணர்த்துகின் ருன் சுதந்திரதேவியைத் தொழுது பாடும் பழச்சாற்றுப் பாடலில்....

''நின்னருள் பெற்றி லாதார்
நிகரிலாச் செல்வ ரேனும்,
பன்னருங் கல்வி கேள்வி
படைத்துயர்ந் திட்டா ரேனும்
பின்னரும் எண்ணி லாத
பெருமையிற் சிறந்தா ரேனும்
அன்னவர் வாழ்க்கை பாழாம்,
அணிகள்வேய் பிணத்தோ டொப்பார்,

தேவி! நின், ஞெளிபெ ருத
தேயமோர் தேய மாமோ?
ஆவியங் குண்டோ? செம்மை
அறிவுண்டோ! ஆக்க முண்டோ?
காவிய நூல்கள் ஞானக்
கலைகள்வே தங்கள் உண்டோ!
பாவிய ரன்றே நின்தன்
பாலனம் படைத்தி லாதார்!

இப்பாடல்களினுலே பக்திப்பார்வையிலே ஒரு திருப்பத்தை-விரும்பத்தகுந்த-தேவையான திருப் பத்தைப் பாரதி செய்து காட்டுவதை விளங்கிக் கொள்கின்றேம்! நாட்டு வழிபாட்டால்தான் அடிமை உணர்வு அகலும் - உரிமை உணர்வு மலரும்.

'உலககெலாம் உணர்ந்தோதற் கரியவன்' என்று அம்பலத்தாடும் அழகுக்கூத்தனைச் சேக் கிழார் நூல் வழிபட்டுத் தொடங்கும்.

'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெறுத் தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட் டுடைய '—தலைவன்
தாளைச் சரணடைந்து தொடங்கும் கம்பன்
காவியம்.

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு'' — என்று

தெள்ளிய அறிவுத் திருவள்ளுவரின் பொதுமறை துவங்கும். ஆனுல் புதுநெறி காட்டிய பாரதிப் புலவன் நூலோ

'வந்தே மாதரம் என்போம் — எங்கள்
மாநிலத் தாயை வணங்குதும் என்போம்!'

என்று வியத்தகு முறையிலே வீறுகொளத் தொடங்குகின்றது.

பள்ளியெழுச்சி, நவரத்தினமாலை, திருத்த சாங்கம், பள்ளு, காவடிச்சிந்து, நொண்டிச்சிந்து— எனப் பல பாடுதுறைகளையும், பாட்டு முறைகளை யும், தன்னுடைய புதுப்போக்கிற்கும் புதுநோக் கிற்கும் ஏற்பப் பாரதி பயன்படுத்தி இலக்கிய நெறியில் ஒரு திருப்பத்தை இயற்றி வைத்திருக் கின்ருன். அவனுடைய பாப்பாப் பாட்டைப் புதிய பிள்ளைத்தமிழ் என்று கூறலாம். அவனுடைய ஆத்திசூடி நாட்டு நிலைக்கேற்ற கருத்துக்களை எடுத்து நாட்டுவது.

**அறஞ்செய விரும்பு**— இது பாட்டி ஔவையின் பாட்டுக் குரல்.

**அச்சந் தவிர்** — இது வீரன் பாரதியின் நெருப் புக்குரல்.

**முனைமுகத்து நில்லேல்** — ஔவையின் அறி வுரை இது.

**முனையிலே முகத்துநில்**—பாரதியின் பயனுரை இது

....இப்படிப் பற்பல புதுமைகளைப் பாரதிபால் நாம் காண்கின்றேம்.

இனி, கவிதை மொழியிலே பாரதி செய்த திருப்பத்தைப் பார்ப்போம். அகராதியும் ஆசானும் துணை செய்தாலன்றி உட்புக முடியாத இரும்புக் கோட்டைகளாகக் கவிதைகளைப் புலவர் கள் அந்நாளில் உருவாக்கி மகிழ்ந்தனர். எளிதிலே புரிந்து கொள்ள முடியாத வண்ணம் கடுஞ் சொற்களைக் கொண்டு புனைவதே பாட்டாற்றல் என்று பலரும் எண்ணி வந்தனர். எளியமக்கள்— படிப்பறிவில்—தாழ்நிலைமக்கள் கைக்கு எட்டாச் சரக்காகக் கவிதைகள் இருந்து வந்தன. குழந்தை யின் செறிப்பாற்றலுக்கும், உடல் மென்மை, நொய்வுகளுக்கும் ஏற்ப, தாய் ஆக்கும் உணவிலே பக்குவம் தேக்கி ஊட்டுவதுபோலப் பாரதிப் புலவன் எளியவர் நிலைக்கு இரங்கியும் இறங்கியும் வந்தான். இயமகம், திரிபு, அந்தாதி என்று படிப் பவரை மருட்டி விரட்டாமல் எளியசொற்கள்— எவரும் அறியும் தொடரமைதி — இதயத்தை நனைக்கும் இசைநயம் — ஆகியவை பின்னிப் பிணைந்துவரும் கற்கண்டுக் கவிதைகளைக் கொட்டிக் குவித்து வந்தான். பார்த்தாலும், படித்தாலும், படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும் — பொருட் புலப்பாட்டில் தெளிவும் இசைநயப்பாட்டில் சுவை யும் கொண்ட அப்பாடல்கள் பாரதி விரும்பிய விளைவை நாட்டவர் நெஞ்சிலே நன்கு உண்டாக் கிற்று!

சின்னஞ் சிறு சொற்களிலே சிந்து தவழும் நடையிலே நாட்டுப்பற்றைத் தருகின்ருன் பாரதி....

செந்தமிழ் நாடெனும் போதினிலே — இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே — எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே — ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே....

நாட்டை அங்கே வழங்கும் மொழியால்

பெயரிட்டு அழைக்கும்போதுதான் உரிமையுணர்ச் சியும் உள்ளக்கிளர்ச்சியும் எக்களித்துப் பொங்கிப் பெருகும். 'அம்மா' என்று அன்னையைத் தாய்த் தமிழ் மொழியில் அழைக்கும்போது அடையும் அளப்பரும் உவப்பை அம்மாவைக் குறிக்கும் பிற

மொழிச் சொற்களால் அழைத்து நாம் அடைய முடியுமா?

பாரதி நம் நாட்டை எண்ணுகின்றான்.... நாட்டு எண்ணம் மொழியின் அடிப்படையிலே எழுந்து துள்ளுகின்றது. தமிழ்மொழி என்ற எண்ணம் வந்தவுடன் அதன் செம்மைநலம் அவன் சிந்தையை அள்ளுகின்றது.... 'செந்தமிழ்நாடு, செந்தமிழ் நாடு என்று உரக்கக் கூவி உள்ளம் குளிர்கின்றான். அவன் வாரி வழங்கும் அச்சொற்களே அவன் செவிகளிலே செந்தேனாக உருமாற்றமடைந்து ஓடிவந்து உள்ளே புகுந்து இனிக்கின்றன.

''செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே''

கம்பன், 'காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்' என்று கவிதையைக் குறிப்பிடுவான். செவியாலே நுகரப்படும் கனிகள் கவிதைகள் - கம்பன் நோக்கில். செந்தமிழ் நாடென்பது செவியாலே நுகரப்படும் தேன் - பாரதி பார்வையில்!

இவ்வின்பத்தைத்தாமும் பெறுமல், மற்றவர்க்கு வழங்கவும் மனமில்லாமல் இருந்தவர் 'தமிழ் நாடு' என்றழைக்க மருண்டனர்; மறுத்தனர். தமிழகம், தமிழ்நாடு என அழைக்க விரும்பி வேண்டியவரை வெறுத்தனர்; ஒறுத்தனர். 'செந்தமிழ் நாடெனும் போதினிலே கொடுந் தேள் வந்து கொட்டுது காதினிலே' எனக் கன்னித் தமிழ்ப் பெயர் வைக்கக் கசந்து கடிந்தனர். இன்றோ பாட்டுக்கொரு புலவனாகிய பாரதி நெஞ்சம் குளிர்ந்து பல்லாண்டு பாடும்வண்ணம் 'தமிழ் நாடு' என்னும் இனிப்புப் பெயரை நாடு ஏற்றுத் திகழ்கின்றது.

தந்தையர் நாடென்ற பேச்சினிலே - ஒரு
சக்தி பிறக்குது மூச்சினிலே....

என்று மேலும் அவன் பாட்டு வரிகள் வளர்கின்றன. தாய்நாடு, தாயின் மணிக்கொடி என்று தாய்மை வழியிலேயே நாம் சிந்தித்துப் பழக்கப்பட்டவர்கள்; பாட்டுச்சாரதி பாரதியும் அச்சிந்தனை நெஞ்சம் படைத்தவன்தான். மேலைநாடுகள் சிலதாம் 'தந்தைநாடு' என்று தம்நாட்டை அழைத்து மகிழும். தந்தைநாடு, என்பது பாரதி தந்த புதிய எண்ணத் திருப்பம். தாய்மையை எண்ணும்போது அன்பு தோன்றும்; அருள்தோன்றும்; அடக்கம் தோன்றும். கொடுங்கோலாட்சிக்கு நெடுங்காலம் ஆட்பட்டு அல்லற்பட்ட மக்களிடம் உருக்கொண்டு ஏழவேண்டியவை அன்பு, அருள், அடக்கம் என்னும் இவையல்ல. ஆண்மையும், வீரமும், அருஞ் செயலாற்றலுமே ஆகும். இவையே உரிமை உணர்வைத் தூண்டற்பாலன. இவையெல்லாம் தாய்மையின் மென்மை மடியிலே தவழமாட்டா! வினையே உயிராகக் கொண்ட ஆடவர் மாட்டுப் பீடு பெற்றெழுவன. எனவே, அடிமைத்தளையறுக்கும் ஆற்றலைப் பெருக்கும் ஆண்மைக்குப் பள்ளியெழுச்சி பாட எண்ணியவன் 'தந்தையர் நாடு என்ற பேச்சையும் அதனுல் சக்தி பெருகும் மூச்சையும்' அழகொழுக ஆற்றல் ததும்பக் குறிப்பிடுகின்றான். எளிய சந்தங் கமழும் இச் சிந்து வரிகளில் பாரதி பதித்து வைக்கும் உணர்ச்சியையும் கருத்தூட்டத்தையும் என்னென்று புகழ்வது! என்னென்று புகழ்வது! எளிமையும், ஆழமும், இதய வேட்கையும், எண்ணப் பொலிவும் பின்னலிடும் இவர் கன்னற் கவிதைகள் நெஞ்சை நனைக்கும் குற்றால அருவியென்றே குறிப்பிட்டு மகிழலாம்!

இக்காலத்தே பாட்டெழுதும் திறம் முழுமையாய்க் கைவரப்பெறாத சிலர் நீண்டு செல்லும் உரைநடைத் தொடர்களைத் துண்டித்து - அத் துண்டுகளைக் கவிதை என்று காட்டி மருட்டுகின்றனர். கவிதையை அவர்கள் உரைநடையாக்கி விடுகின்றனர். யாப்பமைதி வழுவுகின்றதே என்று எவரேனும் வினவின், உடனே 'வசன கவிதை' என்று அதற்குப் பெயரிட்டுப் பிழைக்கின்றனர். ஆயின் வசன கவிதை என்பது பாட்டுணர்வுகள் செறிந்து ததும்புவதாய் - எழுதுவோனின் ஆழிய நெஞ்சத்தெதிரொலி என்று சொல்லுந் தரத்ததாய் அமைந்து - கவிதை என்னும் கட்டுக்கோப்புக் கடந்து பீறிட்டெழுவதாம். கவிதையின் அழகு நலன்கள் காட்டிப் படிப்பார் நெஞ்சைப் பிடித்தீர்க்கும் ஆற்றலில் வசனக் கவிதை குறைபாடுடையதன்று. கவிதையில் உள்ள ஓசை நலன் - இசை இனிமை மட்டும் சற்றே மட்டுப்பட்டிருப்பதன்றி உணர்ச்சிச் சிறப்பில், வெளியிடும் உத்தித் திறனில்-வசன கவிதை கவிதையை ஒப்பானதென்றே உரைக்கலாம்.

தமிழில் முதன் முதலில் வசன கவிதை என்னும் உரைப்பாட்டு வடித்தளித்து வழிகாட்டியவன் பாரதிதான். எழுஞாயிற்று எழில் கண்ட அவன் கவியுள்ளம் வடிக்கின்ற உரைப்பாட்டைப் பாருங்கள்.

''ஞாயிறே, இருளை என்ன செய்துவிட்டாய்? ஓட்டினயா? கொன்றாயா? விழுங்கிவிட்டாயா? கட்டி முத்தமிட்டு உன் கதிர்களாகிய கைகளால் மறைத்துவிட்டாயா? இருள் நினக்குப் பகையா? இருள் நின் உணவுப் பொருளா? அது நின் காதலியா? இரவெல்லாம் நின்னைக் காணாத மயக்கத்தால் இருண்டிருந்ததா? நின்னைக் கண்டவுடன் நின்னொளி தானுங் கொண்டு நின்னைக் கலந்துவிட்டதா? நீங்கள் இருவரும் ஒரு தாய் வயிற்றுக் குழந்தைகளா! முன்னும் பின்னுமாக வந்து உலகத்தைக் காக்கும்படி உங்கள் தாய் ஏவியிருக்கிறாளா? உங்களுக்கு மரணமில்லையா? நீங்கள் அமுதமா? உங்களைப் புகழ்கின்றேன்.

ஞாயிற்றைப் போற்றிப் புகழ்ந்த பாரதி மற்றவர்களையும் அழைத்துத் தன்னோடு சேர்ந்து, போற்றும் பணியைப் புரிய வேண்டுகின்றான்.

''புலவர்களே, அறிவுப் பொருள்களே, உயிர்களே, பூதங்களே, சத்திகளே, எல்லாரும் வருவீர். ஞாயிற்றைத் துதிப்போம், வாருங்கள்.

அவன் நமக்கெல்லாம் துணை. அவன் மழை தருகின்றான். மழை நன்று. மழைத் தெய்வத்தை வாழ்த்துகின்றோம்.

ஞாயிறு வித்தை காட்டுகின்றான். கடல் நீரைக் காற்றுக்கி மேலே கொண்டு போகின்றான். அதனை மீளவும் நீராக்கும்படி காற்றை ஏவுகின்றான். மழை இனிமையுறப் பெய்கின்றது. மழை பாடுகின்றது. அது பலகோடி தந்திகளை உடையதோர் இசைக்கருவி.

வானத்திலிருந்து அமுத வயிரக் கோல்கள் விழுகின்றன. பூமிப்பெண் விடாய்தீர்கின்றாள்; குளிர்ச்சி பெறுகின்றாள். வெப்பத்தால் தண்மையும், தண்மையால் வெப்பமும் விளைகின்றன, அனைத்தும் ஒன்றாதலால்.

வெப்பம் தவம்; தண்மை யோகம். வெப்பம் ஆண். தண்மை பெண். வெப்பம் வலியது. தண்மை இனிது. ஆணிலும் பெண் சிறந்த தன்றே. நாம் வெம்மைத் தெய்வத்தைப் புகழ்கின்றோம். அது வாழ்க.

இவ்வரிகளில் கவிஞனின் உள்ளம் கலந்து களித்துக் - கற்பனையில் திளைத்துப் பறப்பதை நாம் எளிதிலே அறிந்து கொள்ள முடிகின்றது. வடிவத்தால் இப்பகுதி வசனம்தான். ஆயின் வழங்கும் உணர்ச்சிச் செல்வத்தால்; காட்டும் கற்பனை வளத்தால் கவிதையாகக் கவின் பெற்றிலங்குகின்றது. உரைப்பாட்டுத் துறையின் முன்னோடியாக நின்று பாரதி செய்த இத்திருப்பத்தை அவனைப் பின்பற்றி அடியொற்றி வந்த கவிஞர்களும் பயன்படுத்திக் கொண்டுள்ளனர்.

தேனொழுகும் இவர் தீந் தமிழ்க்கவிதைகளில் சமூகக் கருத்துக்கள், சமயக் கருத்துக்கள் -- அரசியல் கருத்துக்கள்—ஆகிய அனைத்தும் ஒரு திருப்பம் பெற்றுப் பின் வருவோரை வாழ வைப்பனவாகவும் அவர்க்கு வழிகாட்டுவனவாகவும் அமைந்துள்ள அழகை அவர் நூலைப் படிப்பாரும், அதில் படிவாரும் தெள்ளிதின் உணர்வர்.

''திருப்பு முனையெனப்
பொருப்பில் விளக்கென நின்றனன் — கவிச்
செருக்கில் புதுயுகம்
வருவித் தளித்தபின் சென்றனன்!''

என்ற பாட்டடியால் இவரைப் பரவி மகிழ்வது சாலப் பொருத்தமானதே!



ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலேயே
பேரா இயற்கை தரும்.

சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம்



# ஆத்திசூடியின் பெருமை

ஔவையாருடைய நீதி நூல்கள் பலவாயினும் அவற்றுள்ளும் 'ஆத்திசூடி' என்னும் நூலே மக்களால் பெரிதும் பாராட்டப்பட்டு வருகின்றது. 'அறஞ்செய விரும்பு'. 'ஆறுவது சினம்' என வரிவரியாக வாக்கியங்கள் அமைந்துள்ள முறையானது பாமரர் முதல் பண்டிதர்வரை எல்லோரையும் கவர்ந்துள்ளது. பெரும் புலவர் பலர் ஆத்திசூடிக்கு உரை எழுதியுள்ளனர். யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், ஆத்திசூடிக்கு உரை இயற்றி, அதனைத் தாம் வெளியிட்ட 'பால பாடம்' என்னும் பாடநூலில் சேர்த்து வைத்துள்ளார்.

மகா வித்துவான் இராமானுஜக் கவிராயர் என்பவர் பதவுரை எழுதி ஆத்திசூடியை வெளியிட்டுள்ளார். அவரே 'கொன்றை வேந்தனு'க்கும் உரை இயற்றியுள்ளார். இவர் பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவராவார்.

மதுரை சேதுபதி உயர்நிலேப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்த அரியூர் எஸ். சுவாமிநாத ஐயர், ஆத்திசூடிக்கு விருத்தியுரை எழுதி, உ. வே. சாமிநாதய்யர் அவர்களால் பார்வையிடப்பட்டபின், 1898-ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார்.

வேதாந்திகளின் பார்வையிலே.........

ஆத்திசூடி 108 சூத்திரங்களைக் கொண்டிருத்தலால் அதனை 'அஷ்டோத்தர நீதி' என்று கூறுகின்றனர். திருத்துருத்தி இந்திர பீடம் கரபாத்திர சுவாமிகளது ஆதீனத்தைச் சார்ந்த வேதாந்தி ஒருவர், ஆத்திசூடிக்கு வேதாந்தத் தத்துவப்படி, பாகியார்த்தமும், அந்தரார்த்தமும் எழுதி 116 பக்கங்கள் கொண்ட பெருநூலாக வெளியிட்டுள்ளார். 'பாகியார்த்தம்' என்ருல், 'வெளிப்படைப் பொருள்' என்றும்; 'அந்தரார்த்தம்' என்ருல், 'உள்ளுறைப் பொருள்' என்றும் கூறுவர். இந்நூலில், ஆத்திசூடி வாக்கியங்களை ஞானியர் பலர் பாடியுள்ள வேதாந்தப் பாடல்களோடு ஒப்பிட்டுக் காட்டி, ஔவைப் பெருமாட்டியாரைச் சுத்த வேதாந்தியாக அறிமுகப்படுத்துவதுடன், ''ஆத்திசூடியின் உள்ளுறைப் பொருள் ஒவ்வொன்றும் வேதாந்தத்தின் பரம தாத்பரியமாகும்'' என்றும் கூறுகின்ருர் உரையாசிரியர். 20-ஆம் நூற்ருண்டின் தலைசிறந்த வேதாந்தியாகத் திகழ்ந்து, எண்பது ஆண்டுகளுக்கு மேலும் வாழ்ந்து மறைந்த பேராசிரியர் கோ. வடிவேலு செட்டியாரால் இந்நூல் பார்வையிடப் பெற்றுள்ளது.

'அறஞ்செய விரும்பு'
'பொருள்தனைப் போற்றிவாழ்'
'மெல்லினல்லாள் தோள்சேர்'
'வீடு பெறநில்'

என்ற வாக்கியங்கள் ஆத்திசூடியில் உள்ளமையால் அறம்—பொருள்—இன்பம்—வீடு என்ற

புருஷார்த்தங்கள் நான்கையும் அந்நூல் போதிக் கின்றதெனக் கூறலாம்.

குழந்தைக்குத் தாய் அறிவுரை கூறுவது போல வும், சீடனுக்குக் குரு உபதேசிப்பதுபோலவும், 'விரும்பு'— 'விரும்பேல்,' 'ஒழி' —'ஒழியேல்', 'மற—'மறவேல்' என்ற சொற்கள் கையாளப் பட்டுள்ளன.

'உரைநடைக் கோவை' என்னும் தமது நூலில் பண்டிதமணி கதிரேசன் செட்டியார், ஆத்திசூடி பற்றித் தெரிவித்துள்ள கருத்து வரு மாறு :

''இயல்வது கரவேல்'' என்னும் சூத்திரம் ஒரு வன் மனமொழி மெய்களாற் பிறர்க்குச் செய்யக் கூடிய உதவியை ஒளித்தலாகாது என்னும் பொருளை உட்கொண்டு, இப்பொருளின் விளைவு களுக்கெல்லாம் நிலைக்களமாக நிற்றலை நோக்கு வார்க்கு இதன் திட்ப நுட்பங்கள் இனிது விளங் கும்.

''சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வன் ஆடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்''

என்பதனாற் சூத்திரத்தின் இலக்கணத்தை அறிய லாம். இவ்விலக்கணத்திற்குப் பெரிதும் இவ் ஆத்திசூடிச் சூத்திரங்கள் இயைபுடையனவாக விளங்குவன. இந்நூல் மாபாடியம் போன்ற விரி வுரையே யேற்குந் தகுதி வாய்ந்தது.

''உயர்ந்த நீதிகளைச் சிறுவர் எளிதிலுணர்ந்து கொள்வதற்கும், பெரும்புலவர்கள் பலதிறமாக வகுத்து ஆராய்ந்து உரைகாண்டற்கும் இஃது இலக்கியமாகத் திகழுமாயின், இதனை உபகரித்த தமிழ்ச்செல்வியின் அறிவின் திட்பம் எத்துணைச் சிறந்ததாகும் என்பதை அறிவுடையார் உணர் வாராக!''

வேதாந்திகள் தாங்கள் போற்றும் வேதாந்த சாத்திரத்தின் நுண்பொருட்கள் ஆத்திசூடிச் சூத் திரங்களுள் புதைந்து கிடக்கின்றன வென்று கூறு வதுபோல, சைவசித்தாந்த சாத்திரங்களின் நுண்பொருள்கள் ஆத்திசூடியில் மறைந்துகிடக் கின்றன என்பதனை உணர்த்த, ''இந்நூல் 'மா படியம்' போன்ற விரிவுரையே ஏற்கும் தகுதி வாய்ந்தது'' என்கிறார் சைவரான பண்டிதமணி யார்.

ஔவையாரின் ஆத்திசூடிக்கு உரை இயற்று வதிலும் சிறப்புரை கூறுவதிலும் பெரும் புலவர் களிடையே போட்டி ஏற்பட்டாற்போல, கருத்து வேற்றுமை காரணமாகப் 'போராட்டம்' ஏற் பட்டது முண்டு.

ஆத்திசூடியிலுள்ள 13, 31, 45, 51, 58 சூத் திரங்களுக்கு யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் எழுதிய உரையை மறுத்து, 'செந்தமிழ்'ப் பத் திரிகை 6-ஆம் தொகுதியில், ''ஔவையார் நீதி மொழியுரை மயக்கம்'' என்னும் தலைப்பில் தம் முடைய உரையை எழுதினர், மு. சு. பூரணலிங் கம் பிள்ளை பி.ஏ., எல்.டி.

ஆத்திசூடியிலுள்ள 'அறஞ்செய விரும்பு' என்ற முதற் சூத்திரத்திற்கு மட்டும் விருத்தியுரை எழுதி, அந்நீதி நூலின் பாயிரத்துக்கும் விளக்கம் உரைத்து ''ஆத்திசூடி முதற் சூத்திர விருத்தி யுரை'' என்னும் பெயரில் 32 பக்கங்களில் ஒரு நூல் வெளியிட்டுள்ளார் மாகறல் கார்த்திகேய முதலியார்.

திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் என் னும் பெரும்புலவர் (19-ஆம் நூற்றுண்டினர்), ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை முதலிய நூல்களுக்கு உரை இயற்றி வெளியிட்டுள்ளார்.

### வழி நூல்கள் :

ஔவையாரின் ஆத்திசூடியை முதல் நூலாகக் கொண்டு பெரும் புலவர்கள் வழிநூல்களும் இயற்றியுள்ளனர்.

இரட்டணை அசலாம்பிகை அம்மையார் அவர்கள், ''ஆத்திசூடி வெண்பா''ப் பாடியுள் ளார்.

இராம பாரதி என்பாரும் ''ஆத்திசூடி வெண் பா''ப் பாடியுள்ளார். புன்னைவனநாதன் என் னும் வள்ளலை முன்னிலையாக்கி, ஆத்திசூடி வாக் கியம் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வெண்பா வின் இறுதியடியாக வைத்து, முதல் மூன்று அடி களில் புராணக்கதை யொன்றை அமைத்து, 108 வெண்பாக்கள் பாடியுள்ளார். இந்நூலுக்குச் செம் பூர் வித்துவான் வீ. ஆறுமுகம் சேர்வை என்பார் உரை எழுதியுள்ளார். 'சனிநீ ராடு' என்னும் ஆத்திசூடிச் சூத்திரத்தை இறுதியடியாகக் கொண்ட வெண்பா வருமாறு :

''ஞாயிறுயிர்க் கீறுதிங்க ணம்பரருள் செய்கிலர்செவ்
வாய்பிணிதுக்கம் கருநாள் வாழ்வுபோந்-தூயவெள்ளி
யோடி தெல்லாம் புன்னைவன மிக்க புத
னேடு சனிநீ ராடு.''

இந்த 'ஆத்திசூடி' வெண்பா'வில் வரும் புராணக் கதைகளை விளக்கிப் பண்டித வெ. கனக சபாபதி ஐயர், சுன்னுகம் அ. குமாராசாமிப் புலவர், தெல்லிப்புழை கி. பாலசுப்பிரமணிய ஐயர் ஆகியோர் குறிப்புகள் எழுதியுள்ளனர்.

வித்துவான் ஆறுமுகப் பாவலர் அவர்கள், ''ஆத்திசூடிப் புராணம்'' அல்லது ''கோபர்வத மாலை'' என்னும் பெயரில் ஔவைப் பெருமாட்டி யின் ஆத்திசூடிக்கு வழிநூல் இயற்றியுள்ளார். 416 பக்கங்கள் கொண்ட இந்நூலுக்குச் செம்பூர் வித்துவான் வீ. ஆறுமுகம்சேர்வை உரை இயற்றி யுள்ளார். ஆதிசத்தீச நாதர் பேரில் துதியாகப் பாடப்பட்டு, ஆத்திசூடி வாக்கியம் ஒவ்வொன் றையும் ஒவ்வொரு பாடலின் முதலடியில்— முதல்

வாக்கியமாக அமைத்து, மற்ற மூன்றடிகளில் பெரிய புராணக் கதையைச் சேர்த்து 108 விருத்தங்களாக ஆத்திசூடிப் புராணம் அமைக்கப்பட்டுள்ளது.

திரு. இராசரத்தினம் என்னும் மற்றொரு புலவர், ஆத்திசூடி வாக்கியங்களையே அமைத்து, ஓரடிச் சிந்தாக ''ஆத்திசூடிச் சிந்து'' என்னும் வழிநூலை இயற்றியுள்ளார். 'ஆத்திசூடி அகவல்' என்ற மற்றொரு வழிநூலும் வெளிவந்துள்ளதாக அறிகிறோம்.

'பரிதிமாற் கலைஞன்' என்னும் புனைபெயர் கொண்ட வி. கோ. சூரியநாரயண சாஸ்திரியாரின் சீடர் கடலூர் எம். பலராமையர் என்பவர், ஆத்திசூடி வாக்கியங்களின் பொருளை விளக்கப் பல நீதிக்கதைகளை ஒப்பிட்டுக் காட்டி, ''ஆத்திசூடி நீதிக் கதைகள்'' என்னும் நூலை இயற்றியுள்ளார்.

புகழ்பெற்ற தமிழ் நாடகாசிரியரும் சிறந்த தேசபக்தருமான சதாவதானம் தெ. பொ. கிருஷ்ணசாமிப் பாவலர் அவர்கள், ''ஆத்திசூடி நீதிக்கதைகள்' என்னும் வழிநூலை இயற்றி ஔவைக்குக் காணிக்கையாக்கியுள்ளார்.

மண்டகப்பாளையம் காளியண்ணப் புலவர் 'கொன்றை வேந்தன் வெண்பா' என ஒரு வழிநூலை இயற்றியுள்ளார்.

**அறிஞர்கள் பாராட்டு :**

சோழவந்தான் அரசஞ் சண்முகனுர் என்னும் புலவர் பெருமான், ஆத்திசூடிப் பதிப்பொன்றுக்குத் தந்துள்ள சாற்றுக் கவியுள்,

''வளர்செழுந் தமிழணங்கு உளமகிழ்ந்து [என்றும்
களமிசைப் புனையுமங் கலநாண் என்னச்
சுடர்தரும் ஆத்திசூடி....''

என்று குறிப்பிட்டுள்ளார். ஆம்; திருமணத்தை வெறுத்துத் துறவியாக வாழ்ந்த ஔவைப் பெருமாட்டியார் இயற்றிய ஆத்திசூடியானது ''தமிழன்னையின் கழுத்தை அலங்கரிக்கும் மங்கல நாண் (தாலிக் கயிறு) போன்றது'' என்கின்றுர் அரசஞ் சண்முகனுர்.

வி. கோ. சூரியநாரயண சாஸ்திரியார் (பரிதிமாற் கலைஞர்), ''அவ்வைக் காட்சி'' என்னும் பெயரில் ஔவை மூதாட்டிபற்றிய நூலொன்றை எழுதிவைத்தாரென்றும், பின்னர் அது மறைந்து போனதென்றும் அறிகின்ருேம். சாஸ்திரியாரின் சீடர்களிலொருவரான திரு. சுப்பிரமணிய ஆச்சாரியார் என்பவர், ''ஔவையார் ஆராய்ச்சி'' என்னும் தலைசிறந்த ஆராய்ச்சி நூலொன்றை இயற்றி வெளியிட்டுள்ளார்.

அருட்பிரகாச இராமலிங்க வள்ளலார்பால் எல்லையற்ற பற்றும் பக்தியுங்கொண்டு வாழ்ந்த ''திருப்புகழ்ச் சுவாமிகள்'' என்று அழைக்கப்படும் முருகதாச சுவாமிகள், ''எம்மதமும் சம்மதம்'' என்னும் சமரச நெறியில் தமக்கு நம்பிக்கை தோன்றக் காரணம் ஔவையாரின் ஆத்திசூடியே என்கின்றுர். சுவாமிகள் இயற்றிய ''கௌமார முறைமை'' என்னும் நூலில்—ஞான காண்டப் பகுதியில்,

தெய்வமிக ழேலெனமுன் ஔவை சொன்ன
திருமொழியின் பயனுளத்திற் றிகழ்ந்த [பின்னர்ப்
பொய்வழக்க ரானசில சமயத் தோர்மேல்
புறங்கூறி னுலும் அவர் போற்றும் தெய்வம்
உய்வளிக்கத் தக்கதல்ல என்னப் பேசா
உணர்வுற்றேன் கௌமாரம்ஒப்ப வாயே
சைவவயி ணவகாண பத்தி யாதிச்
சமயமிரு மூன்றினையுந் தழுவி னேனே!

என்று பாடியுள்ளார். ஆம்; வேதங்களை உடன்பாடாகக்கொண்ட சைவம், வைணவம், ஐந்திரம், சாக்தம், கௌமாரம், காணபத்தியம் ஆகிய அறுவகை அகச்சமயத்தாருள்ளும் பிணக்குகள் உண்டு. அந்தப் பிணக்குகளை ஒழித்து, சைவமல்லாத பிற சமயங்களின் தெய்வங்களைக் குறைத்துப் பேசாத பண்பினைத் 'தெய்வமிகழேல்' என்ற ஆத்திசூடிச் சூத்திரமே தமக்கு அளித்த தென்கிறுர், முருகதாச சுவாமிகள்.

**கிறித்துவ 'மிஷனரி'கள் :**

தமிழறிஞர்களே யன்றி, தமிழறிந்த பிற நாட்டவரும் ஔவையின் நீதி நூல்களைப் பயின்று அவற்றின் அருமை பெருமைகளைப் போற்றியுள்ளனர்.

பத்தொன்பதாம் நூற்ருண்டில் தமிழ் மக்களிடையே கல்வித் துறையில் தொண்டாற்றிய கிறித்துவ 'மிஷனரி'கள், தாம் நடத்திய பள்ளிகளில் ஆத்திசூடியைப் பாடமாக வைத்தனர். ஆனுல், கிறித்தவ மதநெறிகளை இந்நாட்டில் பரப்பும் நோக்குடையவரான அன்னுர், ஆத்திசூடியில் சில சூத்திரங்களை விலக்கி, மற்றவற்றையே பள்ளிகளில் பாடமாக்கினர்.

கிறித்துவக் கல்வி விருத்தி சங்கத்தார் 1868-ஆம் ஆண்டில் வெளியிட்ட தமிழ் இரண்டாம் பாடப் புத்தகத்தில், ஆத்திசூடி 108 வாக்கியங்களுள் 16, 56, 61, 62, 66, 80, 93, 103 ஆகிய வாக்கியங்கள் மட்டும் ஆட்சேபனைக்கிடமா யிருத்தலால், அவற்றை நீக்கி மற்றவற்றை அச்சியற்றியதாக அந்நூலாசியர் குறிப்பிட்டுள்ளார். நீக்கப்பட்ட வாக்கியங்கள் வருமாறு :

சனிநீ ராடு
திருமாலுக் கடிமைசெய்
தேசத்தோ டொத்துவாழ்
தையல்சொற் கேளேல்
நாடொப் பனசெய்
புகழ்ந்தாரைப் போற்றிவாழ்
மெல்லினல்லாள் தோள்சேர்
ஊருடன் கூடிவாழ்

'கிறிஸ்தியன் வெர்ஞகுலர் எஜுகேஷன் சொசைடியார்' 1869-ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ள ''நற்போதனை'' என்னும் பாட நூலிலும் மேலே தரப்பட்டுள்ள எட்டு வாக்கியங்கள் நீக்கப் பட்டுள்ளன. ஆனால், இதே பாட நூல் 1873-இல் மறுபதிப்பாக வெளிவந்தபோது 'தேசத்தோ டொத்துவாழ்' என்ற வாக்கியம் மட்டும் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

'மூதுரை'-'கொன்றை வேந்தன்' ஆகிய நீதி நூற்களிலும் தங்களுக்குப் பிடிக்காத வாக்கியங்கள் சிலவற்றை நீக்கிவிட்டு, எஞ்சியவற்றைப் பாடமாக்கினர் 'கிறித்துவ மிஷனரி'கள்.

'கிறிஸ்டியன்' வெர்ஞகுலர் எஜுகேஷன் சொசைடியார்' 1886-இல் வெளியிட்ட 'மூதுரை' யில், மொத்தமுள்ள முப்பது பாடல்களுள் ஆறு பாடல்கள் நீக்கப்பட்டன. அந்த ஆறும் ''ஆட்சேபனைக்கு இடமானவை'' என்று காரணம் கூறப் பட்டுள்ளது.

இதே 'சொஸைடியார்' 1884-இல் வெளியிட்டுள்ள கொன்றை வேந்தனில், பத்து வாக்கியங்கள், ஆட்சேபனைக்கிடமானவை யென்று நீக்கப்பட்டன. அவை வருமாறு :

சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகு
நேரா நோன்பு சீரா காது
நோன்பென் பதுவே கொன்றுதின் னமை
பண்ணிய பயிரிற் புண்ணியம் தெரியும்
பீரம் பேணி பாரந் தாங்கும்
புலையுங் கொலையும் களவுந் தவிர்
பேதமை யென்பது மாதர்க் கணிகலம்
முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்
மேழிச் செல்வம் கோழை படாது
வையந் தோறுந் தெய்வந் தொழு

ஆத்திசூடி-கொன்றை வேந்தன்-மூதுரை ஆகிய வற்றின் சில வாக்கியங்களையோ, பாடல்களையோ பள்ளிக்கூடப் பாட நூற்களில் 'கிறித்துவ மிஷனரி'கள் சேர்க்கத் தவறிய செயல் நம்மால் புரிந்து கொள்ளக் கூடியதே. இந்துக்களின் நம்பிக்கைகளுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் ஏற்ப அமைந்த பழைய நீதிகள் கிறித்துவர்களுக்கும் பொருந்துமென்று நாம் எதிர்பார்க்க முடியாதல்லவா? ஆனால், 'தேசத்தோ டொத்து வாழ்'-'நாடொப்பன செய்' -'ஊருடன் கூடி வாழ்' என்ற தேசபக்தி மணக்கும் வாக்கியங்களையும் நீக்கிய செயல், அன்றைய சூழ்நிலையில் 'பிரிட்டிஷ்' ஏகாதிபத்தியக் காவலர்களுக்கும் கிறித்துவ 'மிஷனரி'களுக்கு மிருந்த கொள்கை ஒற்றுமையைக் காட்டுகின்றது போலும்!

இது எப்படியிருப்பினும், தமிழ் நாட்டின் பூர்வ கல்விமுறையை ஏற்று ஔவையாரின் நீதிநூல்களைத் தங்கள் பள்ளிகளிலும் பாடமாக்கி, அம் மூதாட்டியின் புகழை வளர்த்ததற்காகக் கிறித்துவ 'மிஷனரி'களை நாம் பாராட்டலாம்.

**மொழிபெயர்ப்பாளர்கள் :**

ரெவரெண்டு டாக்டர் ஜான் (John), ரெவரெண்டு பிஸ்ஸெட் (Bisset), சட்ஜான் (Sudgen) என்ற மூவரும் ஆத்திசூடி-கொன்றைவேந்தன் ஆகிய இரண்டு நீதி நூல்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளனர்.

ராபின்ஸன் என்பவரால், 'மூதுரை' ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டுள்ளது.

பெல்லோ என்பார் எழுதியுள்ள 'இலங்கைச் சரித்திரம்' என்ற நூலினுள், ஔவையின் ஆத்திசூடியும் கொன்றைவேந்தனும் சிறப்பித்துக் கூறப் படுகின்றன.

தமிழில் பெரும் புலமை பெற்ற ஐரோப்பியரான பெஸ்கி என்பார், ''ஔவையின் ஆத்திசூடி, கொன்றை வேந்தன் ஆகிய நீதி நூல்கள், இலத்தீன் மொழியின் அறிவுரைக் கவிஞரான ஸெனக்காவின் நீதி நூற்களுக்கு ஈடானவை'' என்று கூறியுள்ளார்.

பெர்சிவல் பாதிரியார் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி ஆகிய நீதிநூற்கள் நான்கையும் ஆங்கில மொழி பெயர்ப்புடன் வெளியிட்டுள்ளார்.

மற்றும், பேரறிஞர் ஜி. யூ. போப் அவர்கள், ஔவையார் நீதி நூல்களில்-குறிப்பாக ஆத்திசூடி, கொன்றை வேந்தனில் பெரிதும் கவர்ச்சி யடைந்தார்.

''ஔவையார், ஆத்திசூடி, கொன்றைவேந்தன் என்ற அருமையான இரு நீதி நூல்களை இயற்றினார். அவை பள்ளி மாணவர்களுக்குப் பயன் படக் கூடியனவாகும். இந்நூற்களில் பல்வேறு நீதிகளையும் அறிவு வளர்ச்சிக்குரிய படிப்பினைகளையும் வழங்கி, மக்களுக்குப் பூரணமாகப் பயன் படுமாறு செய்துள்ளார்.''

**புதிய ஆத்திசூடி :**

ஔவையின் ஆத்திசூடிக்குத் தேசீயக்கவி சுப்பிரமணிய பாரதியாரும் வழிநூல் இயற்றினார். அந்த நூலுக்குப் 'புதிய ஆத்திசூடி' எனப் பெயரிட்டு, 'பழைய ஆத்திசூடி' ஔவையார் பாடியதென் பதனைச் சொல்லாமல் சொல்லுகின்றார். வழி நூலுக்குரிய இலக்கணம்,

''முன்னோர் நூலின் முடி பொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூலாகும்''

[நன்னூல்-பாயிரம்]

என்பதாகும். இதன்படி, முதனூலான ஔவை யார் ஆத்திசூடியின் கருப்பொருளான நீதி போதனையையே தமது நூலுக்கும் கருப்பொரு ளாக்கி, தாம் வாழ்ந்த காலத்தின் சூழ்நிலைக் கேற்ற மாறுதல்களையும் புகுத்தி, அந்த மாறுத லால் தமிழ் மரபு கெடாமல் காத்து, புதிய ஆத்தி சூடியைப் புனைந்துள்ளார் பாரதியார்.

''ஆத்தி சூடி யமர்ந்த தேவனை
ஏத்தி யேத்தித் தொழுவோம் யாமே''

என்பது, ஔவை ஆத்திசூடியிலுள்ள கடவுள் வாழ்த்து. இதில் ஔவையார் வழிபடும் கடவுள், ஆத்திமாலை சூடியவராகிய சிவபெருமானின் விருப்பத்திற்குரிய விநாயக் கடவுள் ஆவார்.

புரட்சிக் கவி பாரதியார், பழைய ஆத்திசூடி யைப் பின்பற்றித் தாம் இயற்றிய புதிய ஆத்தி சூடிக்குரிய கடவுள் வாழ்த்தில்,

''ஆத்திசூடி, இளம்பிறை யணிந்து,
மோனத் திருக்கும் முழுவெண் மேனியான்''

என்று முதலில் சிவபெருமானைக் குறிப்பிட்டார். ஆனால் இத்துடன் கடவுள் வாழ்த்தை முடிக்காமல் வைணவர்-இஸ்லாமியர்-கிறித்துவர் ஆகிய பிற சமயத்தினர் வழிபடும் தெய்வங்களையும் வழிபடு கின்றார். அந்தப் பாடலின் முழு வடிவத்தையும் பார்ப்போம் :

''ஆத்திசூடி, இளம்பிறை யணிந்து,
மோனத் திருக்கும் முழுவெண் மேனியான்;
கருநிறங் கொண்டுபாற் கடல்மிசைக் கிடப்போன்;
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்;
ஏசுவின் தந்தை; எனப்பல மதத்தினர்
உருவகத் தாலே உணர்ந்துண ராது
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே; அதனியல் ஒளியுறும் அறிவாம்;
அதனிலை கண்டார் அல்லலை அகற்றினர்;
அதனருள் வாழ்த்தி அமரவாழ்வு எய்துவோம்.''

இந்த மாறுதலால், ஔவையார் வாழ்ந்த காலத்தின் சூழ்நிலைக்கேற்ப அவர் தொழுத சைவருக்குரிய தெய்வத்தையும் வழிபட்டு, அதன் பின்னர் இராமலிங்க அடிகளாரால் வளர்க்கப் பட்ட ''எம்மதமும் சம்மதம்' என்னும் சர்வ சமய சமரச உணர்ச்சியையும் எதிரொலித்து, 'பல்வகையாகப் பரவிடும் பரம்பொருள் ஒன்றே' என்ற உண்மையினையும் வலியுறுத்திக் கடவுள் வாழ்த்துப் பாடினார் பாரதியார்.

பாரதியின் 'புதிய ஆத்திசூடி'யிலுள்ள 110 வாக்கியங்களும் புத்தம் புதியவையே. ஔவை யாரின் ஆத்திசூடியிலிருந்து ஒரு வாக்கியத்தைக் கூட அவர் அப்படியே கையாளவில்லை. ஆயினும், அகர வரிசை முறையில், தனித்தனி வாக்கியமாக நீதி நூல் இயற்றுவதில் அவருக்கு வழிகாட்டியவர் ஔவையாரேயாதலால், அந்தப் பெருமாட்டி யின் ஆத்திசூடியைப் பழையதாக்கும் வகையில் தனது நூலுக்குப் 'புதிய ஆத்திசூடி' எனப் பெயர் தந்தார்.

ஆத்திசூடி, கொன்றைவேந்தனுக்கு அடுத்த படியான நீதிநூலாக, 'உலகநீதி'யைக் கருதலாம். இதனை இயற்றியவர் ஔவையாராக இருக்கலாம் என்று சிலர் கருதுகின்றனர்.

**நீதிநூற்கள் :**

சிதம்பரம் இரத்தினசபாபதி முதலியாரவர் களால் 1873-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட் டுள்ள விநாயகரகவல், வேழமுகம், உலக நீதி ஆகிய தொகுப்பில் ஔவையார் பெயரே காணப் படுகின்றது.

அஷ்டாவதனம் வீராசாமிச் செட்டியார் மருகர் அப்பன் செட்டியார் அவர்களால் பரிசீலிக் கப்பட்டு, தஞ்சை கோவிந்தாசாரியாரால் 1887-ஆம் ஆண்டிலும்; தாம்பூர் நரசய்யரால் 1833-ஆம் ஆண்டிலும்; பூவிருந்தவல்லி சுந் தரமய்யர் அண்டு சன்ஸாரால் 1886-ஆம் ஆண் டிலும் வெளியிடப்பட்டுள்ள விநாயகரகவல், வேழமுகம், உலகநீதி ஆகிய மூன்றும் கொண்ட பதிப்புகளிலும் ஔவையாரின் பெயரே காணப் படுகின்றது.

'உலகநீதி'க்கு உரை எழுதிய பெரும்புலவர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், அந்நூலுக்குத் தாம் வரைந்துள்ள முன்னுரையில், ''இதனை இயற்றியவர், ஔவையார் என்று சிலர் எழுதி யிருப்பது மாறுபாடாகும். ஔவையார் இயற் றியது என்பதற்கு ஆன்றோர் வழக்கு முதலிய சான்று ஒன்றுமில்லை'' என்று குறிப்பிட்டு, ''உலக நாதனுர் இயற்றிய உலகநீதி'' என்ற பெயரா லேயே அந்நூலைப் பிரசுரித்துள்ளார். 'உலக நீதி' யில் இறுதியாக அமைந்துள்ள பாடலில்,

''ஓதுவித்த வாசகத்தால் உலகநாதன்
உண்மையாகப் பாடி வைத்த உலகநீதி''

என்ற வாசகம் காணப்படுகின்றது. இதற்கு ந. மு. வே. நாட்டார்,

''ஓதுவித்த'' என்பதற்கு, தனக்கு ஆசான் கற் பித்த என்றும் கூறுதலுமாகும். இனி, உலக நாதன் ஓதுவித்த வாசகத்தால் என்று கொண்டு கூட்டி உலகநாதன் கேட்டுக் கொண்டபடி என் றுரைத்தலுமாகும். அப்பொழுது இந்நூலைச் செய்தோன் பெயர் விளங்கவில்லை.'' என்று விளக்கந் தந்தார்.

நாட்டாரே ஐயுறுகின்றபடி, உலகநாதனுர் என் பது நூலாசிரியர் பெயர் அல்லவென்று கொண் டால் ''இந்நூல் செய்தவர் பெயர் விளங்கவில்லை'' என்று சூனியத்தில் விட்டுவைப்பானேன்? மேலே எடுத்துக் காட்டியுள்ளபடி இற்றைக்கு 90 ஆண்டு

களுக்கு முன்பு வெளியான பல்வேறு பதிப்பு களில் ஔவையார் பெயரே குறிப்பிட்டுள்ளபடி யால், உலகநீதி அம்மூதாட்டியார் இயற்றிய தென்று எண்ணலாமே! எளிய நடையில் அரிய நீதிகளை மக்களுக்குப் போதிக்கும் தொண்டு ஔவையாருக்கே தனியுரிமையல்லவா!

இலண்டன் பல்கலைக் கழகத்திலுள்ள தமிழ் நூற்கள்பட்டியலிலும், 'உலகநீதி' ஔவையார் இயற்றியதென்றே குறிப்பிடப் பெற்றுள்ளது.

'உலகநாதன்' என்பதற்கு 'உலகம் உய்ய' என் றொரு பாடபேதமும் உண்டென்று அறிகின்றோம். வித்வான் ந. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களால் உரை எழுதப்பட்டு, மதுரை இ. மா, கோபால கிருஷ்ணக் கோன் அவர்களால் 1952-இல் வெளி யிடப்பட்டுள்ள 'உலகநீதி' பதிப்பில், ''ஓது வித்த வாசகத்தால் உலகம் உய்ய'' என்று காணப் படுகிறது. மற்றும் மயிலேறும் பெருமாளை வாழ்த்தாய் நெஞ்சே என்ற வாசகத்தைக் கொண்ட ஒவ்வொரு பாட்டிலும் உள்ள கடைசி இரண்டு வரிகள் விடப்பட்டு, கொன்றை வேந்தனைப் போன்று, தனித்தனி வாக்கிய மாகவே நூல் முழுவதும் பிரசுரிக்கப்பட்டுள்ளது. இது எப்படியாயினும், ஔவையாரின் ஆத்திசூடி அழியாப் பெருமை வாய்ந்ததாகிவிட்டது. அது தமிழ் மொழியில் முதலில் தோன்றிய குழந்தை இலக்கியமுமாகும்.



சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து.

கே. சொக்கலிங்கம், ஐ. ஏ. எஸ்.
தமிழக முதல் அமைச்சரின் அனுக்கச் செயலாளர்




தமிழுக்குத் தனிச்செல்வாக்கு இருந்த காலம் எப்படியோ வலிவிழந்து, இடைக்காலத்தில் வந்து புகுந்த மொழிகள் எல்லாம் வாழ்வும் வளமையும் இவற்றாலே கிடைத்த ஆதிக்கத்தையும் அடைந்து, நீண்ட நெடும் இடைவேளைக்குப் பின்னால் தமிழ் தனக்கு இயல்பாக உள்ள செல்வாக்கைப் புதுப் பித்துக்கொண்டு வருகிறது. அன்றாட வாழ்வில் அடுத்துள்ளோரோடு உரையாடவும், அங்காடி களில் பண்டங்களை விலைபேசும்போது பயன்படுத் தவும், ஒழிந்த நேரங்களில் ஊர்ப்பேச்சுக்களைத் தங்கு தடையின்றி நடத்தவுமே தாய்மொழியாம் தமிழ்மொழி பயன்பட்டு வருகிறது என்ற நிலையை மாற்றியமைத்த பேரறிவாளர்கட்குத் தமிழகம் என்றும் கடமைப்பட்டிருக்கிறது. வாழ் வுக்கும் வளர்ச்சிக்கும் தேவையான வற்றாத ஊற் றாகத் தமிழை மக்கள் மதிக்கத் தொடங்கியிருக் கின்றனர். யாரோ சிலர், எப்போதோ சில நேரங் களில் என்றிருந்த இலக்கிய ஈடுபாடும் அறிவு நூல் வேட்கையும் இருக்கின்ற மனிதர்கள் எல் லோரிடத்திலும், கிடைக்கின்ற நேரம் முழுதிலும் தம்மைப் படியவும் பதியவும் வைத்துக் கொள் கின்றன. ''தமிழில் என்ன இருக்கிறது'' என்று அலுத்துக்கொண்ட நிலை தமிழரைவிட்டு அற்றுப் போய், இப்போது ''ஏன் தமிழில் அவை எல்லாம் இல்லை?'' என்ற ஏக்கமும், அந்த ஏக்கத்தின் விளை வான முயற்சியும் பெருகி வருகின்றன.

தற்போதைய தமிழ் வளர்ச்சியில் சிறப்பான இடம் பெற்றிருக்கும் இருவகைகள்தாம் ஏட்டுத் தமிழும் மேடைத் தமிழும். இவ்விரண்டிற்கும் உள்ள இலக்கண அமைப்புக்கள் ஓரளவு ஒத்திருந் தாலும் பெரும்பாலும் மாறுபட்டவை. ஏட்டுத் தமிழ் நிலைத்து நிற்கக்கூடியது. மேடைத் தமிழ், ஒலிப்பதிவு செய்து வைத்திருந்தால் தவிர, அந்த மேடையோடு முடிவடைவது. ஏட்டுத் தமிழில் படிப்பவர் மனத்தில் பதியவைக்க, அந்தக் குறிப் பிட்ட நூலின் இறுதிவரை வாய்ப்பிருக்கிறது. மேடைத்தமிழில் பேசி வரும்போதே பதியவைத் துக்கொண்டே வரவேண்டும்.

பொதுவாக அறிவை வளர்க்கும் பொருள் களைப் பொருத்தவரை இந்த இரண்டு தமிழ் முறைகளுக்கும் மாறுபாடு எதுவும் இல்லை. அப் படிப்பட்ட ஏடுகளைப் படிப்பவர்கள் நூலின் எந் தப் பகுதியிலாவது கருத்தும் அதன் விளக்கமும் கிடைக்காதா என்று நிதானமாகத் தேடுவார்கள். அதேபோல் அந்தப் பொருள்களைப் பொருத்த வரை மேடைப் பேச்சைக் கேட்பவர்கள் பேசுப வன் பேச்சின் தொடர்ச்சியில் எப்போதாவது புதுக் கருத்தைத் தரமாட்டானா என்று தேடு வார்கள். விஞ்ஞானம், பொருளாதாரம், தொழில் நுணுக்கம் போன்ற பொருள்களைப் பொருத்தவரை ஏட்டுத் தமிழும் மேடைத் தமிழும் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அதில் ஈடுபட்டோர் படித்தோ அல்லது கேட்டோ தீரவேண்டியவை.

இவற்றை நீக்கிய மற்ற இலக்கியம், அரசியல், சமுதாயம் இவைபற்றிய ஏட்டுத் தமிழுக்கும்

மேடைத்தமிழுக்கும் எப்போதும் ஒரு வரையறை உண்டு. எல்லாருக்கும் இவற்றில் ஈடுபாடு இருக் காது. யாரோ சிலர் இம்மூன்றிலும் அவர்களுக்குப் பிடித்தமானதைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு அதில் கவனம் செலுத்துவார்கள். அதிலும் பொருளைத் தேர்ந்தெடுப்பதில் மட்டும் தம் முடைய விருப்பு வெறுப்புக்களைக் காட்டமாட் டார்கள். அந்தக் குறிப்பிட்ட பொருளைத் தருப வர்களில் யார் தங்கள் சுவையுணர்விற்கு ஏற்ற வர்கள் என்பதையும் நிர்ணயித்துக் கொள் வார்கள்.

ஆனால் ஏட்டுத் தமிழுக்கும் மேடைத்தமிழுக் கும் குறிப்பிடத்தக்க ஒரு வேற்றுமை உண்டு. ஓர் ஏட்டை எடுத்துப் படிக்கும்போது இடையில் அலுத்துப்போனல் படிப்புக்கு ஓய்வு கொடுத்து விட்டுப் பிறகு உற்சாகம் தோன்றுகிற நேரத்தில் எடுத்துப் படிக்கலாம். ஆனல் ஒரு பேச்சைக் கேட்கும்போது அலுத்துப்போனல் தொடர்பு அறுந்தது அறுந்ததுதான். பிறகு அந்தப் பேச் சும் கிடைக்காது; பேச்சாளனும் கிடைக்கமாட் டான். ஆகையால் மேடைத் தமிழுக்கு உள்ள முக்கியம் அதில் ஈடுபடுபவர்கள் எப்போதும் தொடர்ந்து கேட்பவர்களைத் தம் வயப்படுத்திக் கொள்ளும் திறம்படைத்தவர்களாக இருக்க வேண்டும்.

அண்மைக் காலத்தில் தமிழ் நாட்டில் மேடைத் தமிழுக்கு ஒரு தனிப்பட்ட செல்வாக்கும் மதிப்பும் வளர்ந்து வருகின்றன. இதற்குக் காரணம் அந்தத் துறையிலே ஈடுபட் டோரின் எண்ணிக்கை கூடுதலாகிக்கொண்டே வருவது மட்டுமன்று; நாட்டில் படித்துத் தெரிந்து கொள்பவர்களைவிடக் கேட்டுத் தெரிந்து கொள் பவர்கள்தாம் ஏராளமானவர்கள் என்பதுவுந் தான். அப்படிப்பட்டவர்களுக்கு எதையும் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆர்வமும் அளவுக்குமீறிப் பெருகி வருகிறது. அதன்விளைவு தான் மூலைக்கு மூலை மன்றங்கள், தெருவுக்குத் தெரு பொதுமேடைகள், பலவகைப்பட்ட சொற் பொழிவுகள் இவை எல்லாம்.

சொற்பொழிவாளர்களில் பலதரப்பட்டவர்கள் நிறைந்திருக்கிருர்கள். கொச்சைத் தமிழிலே தொடங்கி இலக்கியத் தமிழ்வரை உள்ள பலதரப் பட்ட நடைகள் கேட்போருக்குப் பரிமாறப்படு கின்றன. நான்கு பேரிலே தொடங்கி நான்கு இலட்சம் பேர் வரை கேட்பவர்களைக்கொண்ட பேச்சாளர்கள் இருந்து வருகின்றனர்.

இருபது அல்லது முப்பது ஆண்டுகளுக்கு முன்னல் மேடைத்தமிழ் நடை இருபிரிவுகளாக இருந்து வந்தது. ஆங்கிலம், வடமொழி, தமிழ் ஆகியவற்றைக் கலந்துபேசும் பேச்சாளர்கள் ஒரு புறமும், தூய தமிழிலேயே பேசும் பேச்சாளர்கள் மறுபுறமும் ஒருவரோடொருவர் போட்டி போட் டுக்கொண்டு தம் பேச்சுக்களைப் பேசி வந்தனர்; இப்போதும் பேசி வருகின்றனர்.

மணிப்பிரவாள நடையில் பேசி வந்தவர்களில் குறிப்பிடத் தகுந்தவர் காலஞ்சென்ற திரு. சத் தியமூர்த்தி ஆவார். அவர் காலத்தில் மக்களிடம் பெருக்கெடுத்தோடிய நாட்டுப்பற்று அவர் பேச் சுக்குப் பின்னணியாக இருந்து பெருமளவுக்கு உதவி புரிந்தது. அதனல் கேட்போரை விரைவி லும் எளிதிலும் அவர்பால் ஈர்த்துக்கொள்ள அவரால் முடிந்தது. அவரும் பெரும் பேச்சாள ராகப் படித்தவர்களிடையிலேயும் பாமரர் களிடையிலேயும் திகழ முடிந்தது.

தூய தமிழில் பேசி வந்தவர்களில் குறிப்பிடத் தகுந்தவர்கள், காலஞ் சென்ற திரு. தமிழவேள் உமாமகேசுவரம் பிள்ளை அவர்களும், திரு. வி. கலியாண சுந்தர முதலியார் அவர்களும்ஆவர். திரு உமாமகேசுவரம் பிள்ளை பேசிய தமிழ் எளிய முறை யில் தரப்படாததால் அதனை ஏற்றவர்கள் எண் ணிக்கை மிகக் குறைவானது. அன்ருட வாழ்வில் பாட்டாளிகளையும் பாமரர்களையும் தொடர்ந்து சந்தித்த காலஞ் சென்ற திரு. வி. க. தமிழை எளிமையானதாகவும் இனிமை நிறைந்ததாகவும் ஆக்கித் தந்து பலருடைய ஆதரவைத் தனித்தமிழ் நடைக்குப் பெற்றுத் தந்தார்.

அரனையும் அயனையும்பற்றியும், ஆன்மீகத் துறையினைப்பற்றியும் பேசும் பேச்சாளர்கள் அன்ருட வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் இணைத்துப் பேசினல்தான் அவர்கள் பேச்சு எடுபடுகிறது. அதற்குக் காரணம் அப்படிப்பட்ட பொருள்களைக் கேட்பவர்கள், அந்தப் பொருளைப்பற்றிய அறிவை வளர்த்துக் கொள்வது ஒன்றையே குறிக்கோளா ளாகக்கொண்டு கூடுவதில்லை. மறுபிறவிக்கு இப் போதே வாய்ப்பேற்படுத்திக்கொள்ள விரும்புவர் களும், பொழுதுபோகாத நேரங்களில் அவர்கள் கருத்துக்கேற்ற நல்ல செய்திகளைக் கேட்டு வைப் போம் என்ற எண்ணமுள்ளவர்களும், வேறு வேலையோ துணையோ இல்லாத காரணத்தால் மற்றவர்கள் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள வாய்ப்பான இடம் இப்படிப்பட்ட பேச்சுக்கள் நடைபெறும் இடங்கள்தாம் என்று முடிவு செய் பவர்களும், ஒருங்கே கூடுவதால் அவர்கள் கவனத்தைக் கவர அவர்களைப்பற்றியே பேசியாக வேண்டியிருக்கிறது.

நீளமாகப் பொருளை வளர்த்துக்கொண்டே போவதைவிட மேடைப்பேச்சுக்கு உள்ள முடி வான இலக்கணம் என்ன என்பதைக் கவனிப் போம். அதற்கென்று வரையறுக்கப்பட்ட இலக் கண விதிகள் ஏதும் இல்லாத காரணத்தால் நேரிடையாக மேடைத்தமிழில் பெருஞ்சிறப்பும் செல்வாக்கும் பெற்ற ஒரு பேச்சாளரின் பேச்சின் அமைப்பு எப்படியிருக்கிறது என்பதை ஆராய்ந் தால் அதற்கென்று ஒரு தனி இலக்கணம் வகுக்க உதவியாக இருக்கும்.

இன்றைய தமிழ்நாட்டில் மேடைப் பேச்சு என் ருலே நமக்கு உடன் நினைவு வருவது நம் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு பேரறிஞர் திரு. அண்ணுதான். அவர் பேச்சுக்கு வயப்படாதவர்கள் யாருமே இருக்கமாட்டார்கள். கருத்தைப்

பொருத்தவரை அதனை எதிர்த்துப் போராட வேண்டும் என்ற நிலையில் உள்ளவர்கள்கூட அவர் பேச்சின் முறையில் தங்களை இழந்துவிடுகின்றனர். ஆகையால் அவரையே ஆராய்ந்து மேடைப் பேச்சுக்குத் தேவையானவை எவை என்பதை முடிவு கட்டலாம்.

பேரறிஞர் அண்ணு அவர்கள் தம் பேச்சை மேடையிலேயே துவக்குவது இல்லை. மேடைக்கு வருவதற்கு முன்னமேயே துவக்கிவிடுகிருர். நீண்ட நெடுங்காலமாக அவர் இதைத் தன் பழக்கமாக்கிக் கொண்டதால் அவருக்கு இது மிக எளிதாகவும், விரைவில் செய்துமுடிக்கக் கூடிய தாகவும் இருக்கிறது. அவருடைய நிறைந்த அனுபவமும் ஆழ்ந்த அறிவும் அவருக்குத் துணையாக இருந்து சிக்கல் எதையும் உண்டாக்காமல் அதில் வெற்றியடையச் செய்கின்றன.

முதலில் எது தான் தேர்ந்தெடுக்க வேண்டிய பொருள்? என்பதைப்பற்றி முடிவு செய்கிருர். நாட்டில் உள்ளோர் வாழ்வுக்கு வகையும் வளமையும் சேர்க்கும் பொருள் எதுவோ அதுவே அவர் கையாளும் பொருளாக ஆகிவிடுகிறது. அதனுல் தான் அவர் கூறும் கருத்துக்கள் பொழுதுபோக்குவதற்காகப் பயன்படுவதைவிட வாழ்வில் ஏற்று நடத்தத் தேவையானவையாக இருக்கின்றன.

தம் பேச்சுக்கு எது பொருள் என்ற முடிவு ஏற்பட்டதும், அதனை அப்படியே கேட்போரிடம் அவர் ஒப்படைத்துவிடுவதில்லை. அந்தப் பொருள் பற்றிய பேச்சைக் கேட்க இருப்பவர்கள் எப்படிப் பட்டவர்கள் என்பதில் கவனம் செலுத்துகிருர். எதை, எப்படி, எப்போது சொன்னுல் அஃது எளிதில் கேட்போர் அறிவில் பதியும் என்று சிந்திக்கிருர்.

இதை விளக்க வேண்டுமானுல் ஓர் எடுத்துக் காட்டு நல்ல முறையில் பயன்படும். எப்படிப் பட்ட உணவு ஒருவருக்குத் தேவை என்று தேர்ந்தெடுத்தபிறகு, அந்த உணவைச் செரிக்கும் சக்தி எந்த நிலையிலும் அளவிலும் உணவுண்போரிடம் இருக்கிறது என்பதையும் கவனிக்கிருர். தேர்ந்தெடுக்கப்பட்ட உணவு சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டு மேடைக்குக் கொண்டு வரப்படுகிறது.

இனி, அந்த உணவைப் பரிமாறும் முறை எப்படி அமைகிறது என்பதைச் சற்றுக் கவனிப்போம்.

தன்பால் வயப்படச்செய்யும் இசைவாணனுக்கு இயல்பாக இருக்கும் இனிய குரல்போல் பேரறிஞர் அண்ணு அவர்களுக்குத் தனியான கம்பீரமாக உள்ள குரல் அமைந்திருக்கிறது. அந்தக் குரல் கேட்போர் இதயத்தை விரைவில் அவர்பால் இழுத்துவிடுகிறது.

பேசத் தொடங்கிய சில நிமிடங்களில் கேட்போரைத் தம் வயப்படுத்திவிடுகிருர் பேரறிஞர் அண்ணு. முதல் ஐந்து நிமிடங்கள் கேட்டவர்கள் முற்றிலும் கேட்டுவிட்டுப் போகவேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிடுகின்றனர்.

அடுத்து. பேசப்படவேண்டிய பொருள் தொடங்குகிறது. இசைவாணர்கள் தாம் பாடும் பாடலைத் தாளத்திற்கேற்ப வெளிப்படுத்துவதைப் போல, பேரறிஞர் அண்ணு பேசும்போது அமைக்கும் வாக்கியங்கள் நீளமானவையாகச் சில தொடர்வதும் இடையில் ஒரு சிறு வாக்கியம் அமைவதும், அவர் பேச்சு முழுவதும் கேட்பவர்களை இழுத்து நிறுத்துவதும், பிறகு நிறுத்தி இழுப்பதுமாகத் தொடர்ந்து இயங்கச் செய்கின்றன. ஒவ்வொரு சொல்லுக்கும் தேவையான வேகமும் விறுவிறுப்பும், கருத்துக்குப் பொருத்தமான சொற்களை எளிதாகப் பயன்படுத்தும் முறையும் இணைத்து கருத்தோடு மொழியையும், மொழியோடு ஒலியையும், ஒலியோடு உள்ளத்துக்கும் அறிவுக்கும் உணர்வேற்படுத்தும் நிலையையும், ஒருசேர உண்டாக்குகின்றன. இசைவாணர்கள் பிர்க்காக்கள், கற்பனைகள் என்ற சொற்களைப் பயன்படுத்துவதுபோல நகைச்சுவையும் வர்ணனைகளும் பேச்சின் இடையிடையே வந்து விழுகின்றன. இது பேசுகிற முறையைப்பற்றியது.

முதலில் பொருளைத் தருகிருர்; பிறகு அதற்கான வாதத்தைத் தொடங்குகிருர்; தொடர்ந்து அதற்கான காரணங்களைக் கூறுகிருர்; அதைத் தொடர்ந்து அதற்குள்ள சூழ்நிலைகளைச் சுட்டிக் காட்டுகிருர். இவை இரண்டையும் கூறியவுடன் இவற்றைப்பற்றிய ஐயப்பாடுகளையும் மறுப்புரைகளையும் எடுத்துச் சொல்லி அவை எந்த அளவில் பயனற்றவை என்பதை நிரூபிக்கிருர். இவற்றின் இடையே கேட்போர் இதயங்களைச் சில பல தடவைகள் சுண்டி இழுக்கிருர். ஒன்றை முழுமையாக முடித்துவிட்டு அடுத்த வாதத்துக்குப் போகிருர்.

இது பேரறிஞர் அண்ணுவின் பேச்சை என்னுடைய அறிவால் எடைபோட்டு எடுக்கப்பட்ட முடிவு. குரலொலியும், பொருள் சிறப்பும், வாதம் செய்யும் முறையும் இவை மூன்றுக்கும் மெருகேற்றும் வருணனைகளும் நகைச்சுவைகளும் இணைந்து காணப்படும்படிப் பேச்சை அமைக்கும் திறம்படைத்த பேச்சாளராகப் பேரறிஞர் அண்ணு திகழ்வதற்குக் காரணமே இந்தப் பெருஞ்சிறப்புக்கள் அவர் பேச்சில் திகழ்வதால்தான்.

இலக்கியங்கள் இலக்கணத்துக்கு உட்பட்டவையா அல்லது அப்பாற்பட்டவையா என்பதை இதுவரை முடிவு செய்ய முடியாமல் பேரறிஞர்கள் திண்டாடுகின்றனர். ஆனுல் ஒன்றுமட்டும் உறுதியாகச் சொல்லலாம். முதலில் சில பல இலக்கியங்கள் தோன்றிய பிறகுதான் இலக்கணம் வகுக்கப்பட்டிருக்க வேண்டும். தொடர்ந்து அந்த இலக்கண வரன்முறைக்குஉட்பட்டஇலக்கியங்களை உருவாக்க இலக்கிய கர்த்தாக்கள் முனைந்திருக்க வேண்டும். இதுதான் எல்லா மொழிகளிலும் ஏற்பட்டிருக்கிற முறை.

எனவே மேடைத்தமிழுக்கு இலக்கணம் வகுக்கும்போது, அதை மிகச் சிறப்பானதாக அமைத்துக் காட்டியிருக்கும் பேரறிஞர் அண்ணுவின் படைப்புக்களை முதல் இலக்கியங்களாக ஏற்றுக் கொண்டு அதன் அடிப்படையில் மேடைத் தமிழுக்கு இலக்கணம் வகுப்பதுதான் சாலச் சிறந்ததாகும்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழ்ப்பற்று!

# சொல்வன்மை

## ( குறள் - உரை )

நாவினது நலம் என்று சொல்லப்படுகின்ற நலம் ஒருவற்கு உடைமையாவது; அந்நலம் எல்லா நலத்துள்ளும் உள்ளதொரு நலமன்று, மிக்கது. (மணக்குடவர்)

வாழ்வும் கேடும் அதனுல் வருதலால் சொற் சோர்வு வராமல் காத்துச் சொல்லுக.
(பரிதியார்)

நட்பாயேற்றுக் கொண்டாரைப் பின் வேறுபடாமல் பிணிக்கும் குணங்களை அவாவி, மற்றைப் பகையாய் ஏற்றுக்கொள்ளாதாரும் பின் அப்பகைமை ஒழிந்து நட்பினை விரும்பும் வண்ணஞ் சொல்லப்படுவதே சொல்லாம். (பரிமேலழகர்)

சொல்லின் திறத்தை அறிந்து சொல்லை வழங்கவேண்டும்; அத்தகைய சொல் வன்மையை விடச் சிறந்த அறமும் பொருளும் இல்லை. (மு. வரதராசனுர்)

சொல்லைச் சொல்லுக; தான் சொல்ல நினைத்த அச்சொல்லைப் பிறிதொரு சொல்லாய் வெல்லுஞ் சொல் இல்லையாதலை அறிந்து. (மணக்குடவர்)

பிறர்க்குத் தாம் சொல்லுங்கால் அவர் பின்னும் கேட்டலை விரும்புமாறு சொல்லி, அவர் தமக்குச் சொல்லுங்கால் அச்சொல்லின் பயனைக் கொண்டொழிதல் அமைச்சியலுள் குற்றமற்ருரது துணிபு. (பரிமேலழகர்)

ஏற்றத்தாழ்வு என்னும் குற்றம் தங்காமல் சொல்லுதல் வல்லனுமாய், மற்று இங்ஙனம் செல்லிச் சொல்லும் இடத்து மறந்தும் ஒரு சொற் சோர்வுபாடு இலனுமாய், அரசனைக் கழறவேண்டும் இடத்துக் கழற்றுரை கூறக் கண்ணஞ் சானுமாய், இருப்போன் யாவன்; மற்று அவ்வமைச்சனை மற்று ஒருவர்க்கு மாறுபடக் கூறி வெல்லுதல் அரிது. (காலிங்கர்)

சொற்களைச் சேர்த்து இனிதாகச் சொல்லவல்லாரைப் பெற்ருராகில் உலகத்தார் தாமே விரைந்து செய்யும் தொழில் யாது என்று கேட்பர். (பரிப்பெருமாள்)

குற்றமற்றவையாகிய சில சொற்களைச் சொல்லத் தெரியாதவர், உண்மை யாகவே பல சொற்களைச் சொல்லிக்கொண்டிருக்க விரும்புவர்.
(மு. வரதராசனுர்)

செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றம் இல்லாத பூச்சூடப்படாதவாறு போல, நூலைக் கற்றுவைத்தும் சொல்லமாட்டாதார் நன்கு மதிக்கப்படார்.
(பரிமேலழகர்)

# புகாரில் ஒரு நாள்





உலகத் தமிழ் மாநாட்டையொட்டி, இளங் கவிஞர்களுக்கு ஊக்கமளிக்க வேண்டுமென்று, பேரறிஞர் அண்ணா அவர்கள் ''புகாரில் ஒரு நாள்'' என்ற தலைப்பில் கவிதைப் போட்டி ஒன்றனை அறிவித்தார்கள். ஏறத்தாழ ஆயிரத் திருநூறு ''கவிதைகள்'' வந்து குவிந்தன. பேராசிரியர் மா. கி. தசரதன் அவர்களுடைய தலைமையில் இயங்கிய கவிதைக் குழு அவற்றை யெல்லாம் ஆராய்ந்தது. அதன் பயனாகப் பத்துக் கவிதைகள் மிகச் சிறந்தவையெனத் தேர்ந் தெடுக்கப்பெற்றன. அவற்றுள் முதலிடம் பெற்று அண்ணாவின் பரிசைப் பெறுகின்ற கவிதை இம் மலரில் இடம் பெறுகிறது. அதனை எழுதியவர் பட்டுக்கோட்டை வட்டத்தைச் சேர்ந்த குருவிக் கரம்பை என்னும் ஊரில் வதியும் கவிஞர் ஏ. சண்முகம் ஆவார். அவர் புலமையும், கற்பனையும் வளர்க!

— மலர்க் குழுவினர்



மணிமிக உடையன கதிர்நிறைந் திடுவன கலம்பல விளைவன வயல்,
வணிகமே புரிபவர் கலங்களில் உலவிட மறியலை உடையது கடல்,
மணமிக உடையன மலர்மிகுந் திடுவன மனம்கவர்ந் திடுவன பொழில்,
அணிமிக உடையன விழிகவர்ந் திடுவன பலபல நிறைந்தது புகார்!

உடலிடை உளமென உலகிடை இலங்கிய உயர்திறம் உடையது புகார்,
படைபல உடையராய்ப் படிதனை அடையினும் பகைவரும் இந்நகர் புகார்,
இடமிலை எனுமொழி இயம்பியிங் கிருந்தவர் புவிதனில் வேறிடம் புகார்,
கடலிடைப் புகுந்தது கனவென அழிந்தது கவிதனில் நிலைத்தது புகார்!

**அன்ெருருநாள் :**

மேகத்தைச் சென்று கூடும் மீக்குயர் கமுகின் உச்சி
தோகையை விரித்தங் காடும் மயிலெனத் தோற்றம் நல்கும்
வேகமாய்க் கடற்க ரைக்கு விரைந்திட நாவாய் எல்லாம்
மேகத்தின் மேலு யர்ந்த கலங்கரை விளக்கம் மின்னும்!

கதிரவன் பொன்னி றத்தைக் கடலினில் வீசித் தோன்ற
எதிரவண் மருவூர்ப் பாக்கம் பொற்பணி செய்வார் வீதி
பதிலுக்குப் பொன்னி றத்தைப் பளபள வென்றே வீசும்
அதிசயம் எங்கு மில்லா அதிசயம் அங்கே கண்டார்!

கூடங்கள் விண்மீன் வானம்! கொடிகளும் மணியும் தொங்கும்
மாடங்கள் நிலவுப் பந்தல்! மங்கையர் மாருக் காதல்
பாடங்கள் நிறைந்த ஏடு! பரிதியின் வரவைக் கண்டு
கூடித்தான் அவர்கள் பாடும் கொம்புத்தேன் பாடல் உண்டு

காண்பவர் வியக்கும் வண்ணம் கடற்கரை ஓர மாக
மாண்புசால் யவன ரோடு வாணிகர் பிறரும் வந்தால்
நான்வர வேற்பேன் என்று நல்லவர் உள்ளம் போல
வான்வரை ஓங்கி நின்ற மாளிகை யதனில் புக்கார்!

சாலையில் கஞ்சி யாறு தான்நடக் கவண்டு பாடும்
சோலையின் மரங்கள் யாவும் சந்தனக் கடையின் தூண்கள்!
காலையில் தொடங்கும் நாளங் காடியில் மணியும் முத்தும்
மாலைகள் ஆகித் தொங்கும் மணவறை போல மின்னும்!

வணிகமே செய்ய வந்த அயலவர் தெருவில் வந்து
மணிகளின் குவியல் கண்டார்! மலைகளோ எனவி யந்தார்!
அணிகள், பொன் னுடை கண்டார் அசைந்திடும் காற்றை ஒத்த
துணிகளும் மணியின் வீச்சால் சுடர்விட மயங்கி நின்ருர்!

மாம்பழ நிறத்தை ஒத்த வடமலைப் பொன்னைக் காட்டித்
தாம்விலை பகர்வோர் ஓசை! தண்மதி நிறமுத் தாலே
ஆம்பல்வாய் திறந்த வண்ணம் அதைவிலை கேட்போர் ஓசை!
பூம்புகார்க் கடலைப் போலப் பொழுதெலாம் ஒலித்தி ருக்கும்!

வடவரை வென்று வேந்தன் வாங்கிய முத்துப் பந்தர்
உடன்திகழ் நல்ல பட்டி மண்டபம் ஒருங்கே சோழன்
அடிதனில் பகைவர் வைத்த தோரண வாயில் கண்டு
படிதனில் மிக்கு யர்ந்த பட்டினம் புகாரே என்ருர்!

நிலையிலாச் செல்வம் தன்னை நிலையென எண்ணித் தானே
அலைகடல் தாண்டி வந்தீர் அள்ளியே கொள்வீர் என்று
கலைகளால் உயர்வு பெற்ற காவிரிப் பட்டி னத்து
நிலமகள் சுமந்து நின்ருள் நீங்காத செல்வம் தன்னை!

பன்னிற மலரின் கூட்டம் பார்ப்பவர் விழியை ஈர்க்கும்!
செந்நிறப் பவளக் கோவை சிந்தையைச் சேர்த்தி ழுக்கும்!
கண்கொளாக் காட்சி அவ்வூர்க் கடைத்தெருக் காட்சி வேற்ருர்
மண்கொளப் புகுதற் கஞ்சும் மன்னவன் ஊரின் மாட்சி!

புலிக்கொடி ஏந்தி நின்ற புகாரின்நல் வேந்தன் வாளால்
பலிக்கொடி யாகிப் போன பகைவரின் கொடிகள் எல்லாம்
எலிக்கடி பட்ட ழிந்த எளியவர் துணிகள் போல
வலைக்கொடி யாகி நிற்க வணங்கினர் கப்பம் கட்டி!

தேர்த்தடம் பதிந்த வீதி! திருநாட்டின் வேந்தன், வீரர்
ஏர்த்தொழில் வல்லார், ஆடல் இயற்றுவோர், வணிகர் வாழ
நீர்த்துளி நங்கை ஈன்ற நிகரிலா வான வில்போல்
போர்த்தொழி லாளர் செங்கைப் போர்வில்லும் வாளும் மின்னும்

பட்டினப் பாக்கம் வேற்றூர்ப் பட்டினிக் காரர் வந்தால்
பட்டினைப் பொன்னை நல்கிப் பசியையும் போக்கும் பாக்கம்
பட்டினப் பாக்கம் பண்பார் மருத்துவர் கலையால் திக்காம்
எட்டிலும் புகழைப் பெற்றூர் இலங்கிடும் பாக்கம் தன்னில்

கணிகையர் இருப்பி டத்தில் காண்பவர் வியக்கும் வண்ணம்
மணிகளால் அழகு செய்த மாடியின் நிலாமுற் றத்தில்
வணிகனின் மைந்த னுன கோவலன் வரவை வேண்டி
இனியசொற் கடிதம் தீட்டி ஏமாற்றம் பெற்ற தாலே

மலையினில் பிறந்து நல்ல மண்மிசைத் தவழ்ந்து பாடும்
அலைகடல் கலந்த பொன்னி ஆற்றினைப் போல ஆடற்
கலையினில் தேர்ச்சி பெற்றுக் கலைக்கடல் கலந்த தாலே
தலைக்கோலாம் பட்டம் பெற்ற மாதவி தவித்தி ருந்தாள்!

**அதே நேரத்தில் மற்ரெரு புறம் :**

கண்டதோர் கனவைக் கூறிக் கண்ணகி கலங்கும் காலை
பண்டையோர் நோன்பு பொய்த்தாய் பயன்பெறக் காம வேளைச்
சென்றுமே தொழுவோம் என்ற தேவந்தி சொல்ம றுத்து
நன்றல என்றி ருக்கக் கோவலன் வந்தான் நாடி!

வறுமையைக் காணு ஊரில் வறுமையைப் பெற்ற தாலே
சிறுமையாம் வெம்மை பெற்றேன் செல்வமே! நிழலே! என்றுன்
பெருமையில் நிகரில் லாத சிலம்புள பெறுவீர் என்றுள்
மறுமுறை செல்வ னுக மதுரைக்குச் செல்வோம் என்றுன்!

அணில்வாலைப் போன்ற மீசை அமைந்தநற் புலவர் நெஞ்சம்
பணிந்துபோய் உறங்கும் நேரம்! பால்நிலா வானில் வந்து
தணிந்திடா ஆசை யாலே தன்முகம் பொன்னி யாற்றின்
மணிநீரில் பார்த்து விட்டு மயங்கியே மறைந்த நேரம்

பூம்புகார் தன்னை விட்டுப் போகின்றூர் இருவர் அந்தோ!
தேம்பியே கடல ழைக்கச் செல்வச்சீர் குடியீன் றூரைப்
பூம்புகார் மண்ண ழைக்கப் பூங்காற்றும் தான ழைக்க
மாம்பிஞ்சு வடுக்கண் ணுளாம் மாதவி யாழ்அழைக்க,

தீம்புனல் பொன்னி யாற்றின் திரையெலாம் அழைக்கக் கொங்கைக்
காம்பினை மயங்கி விட்ட கடும்பசிக் குழந்தை யைப்போல்
பூம்புகார் தன்னைச் செல்வ புரியினை விட்டுச் சென்று
நாம்இனி வாழ்வோ மென்றூர்! நடக்கின்றூர் முடிவை நோக்கி!

பிறநாட்டு வணிகர் வந்து பெரும்பொருள் ஈட்டிச் செல்லத்
திறல்நாட்டு வணிகன் மைந்தன் திருவினைத் தேடற் கென்று
புறநாட்டிற் போன வந்நாள் பூம்புகார் வரலாற் றின்கண்
கறைபட்ட ஒருநாள் துன்பக் கண்ணீரைத் துடைப்ப தென்றே?

# இலக்கியம்

மழைபொழி முகிலென மனத்தில் கருத்தெலாம்
தழைத்திடத் தேக்கிய தக்க அறிஞரால்
இழைத்திடப் பெற்றிடும் ஏற்ற இலக்கியம்
கழைதரு சாறெனக் காட்டும் இன்பமே !

எண்வகைச் சுவைகளை இனிய முறையிலே
தண்ணிய நடையிலே தந்து நடந்திவண்
உண்பவர்க் கமுதமாய் ஒக்கச் சிறப்பினைப்
பண்ணிடும் இலக்கியப் பண்பு வாழ்கவே !

உளப்பிணி ஓட்டலால் ஒப்ப மருந்தென
அளப்பரும் அன்பினால் அன்னை தானெனக்
கிளப்பரும் நன்மைகள் கிட்டச் செய்திடும்
வளமிகும் இலக்கியம் வளர்ந்து பெருகவே !

எழுதுவோர் நெஞ்சினில் எழும்பும் உணர்வுகள்
பழுதிலா நுகர்வுகள் பண்புப் பதிவுகள்
தழுவிய இலக்கியம் தழுவும் பான்மையர்
எழுச்சியும் நன்மையும் எய்தப் பெறுவரே !

வாழ்வினைக் காட்டலால் வண்ண ஆடியோ ?
தாழ்வினை ஓட்டலால் தக்க தானையோ ?
வீழ்பவர் சிறத்தலால் விந்தைச் சுரங்கமோ ?
சூழ்பவர் திளைத்தலால் சொத்தின் அரங்கமோ ?

மனநிழல் பரப்பலால் ஆல மரமதோ ?
தினத்தின இனித்தலால் தித்திப் புருண்டையோ ?
கனவிலும் தழுவலால் காதல் கன்னியோ ?
வனப்பமை இலக்கியம் வாழ்க ! வாழ்கவே !

— புலவர் ந. சகதீசன்

# புரிந்திடு ஞானப் புன்னகை தாயே



திருமதி சௌந்தரா கைலாசம்

தனித்தனி இருந்து தவித்திடு மனங்கள்
　　தழுவி மகிழ்ந்து தழைத்திடு மாறு
நினைத்திடும் இனிய நினைப்பது மண்ணில்
　　நின்வடி வாகப் பொலிந்தது தாயே!
தனைத்தொடும் எதுவும் இனித்திட உதவும்
　　தவத்தின ளே!பெரும் ஒளித்திர ளே!பழ
வினைத்தொடர் பறுத்து வீடுறப் புரியும்
　　வியன்றமி ழே!பதம் பணிகுவம் யாமே!

முனமிருந் துன்புகழ் முழங்கிய பலதலை
　　முறையினர் கூனிய முதுகினர் ஆயினர்
அனைவருக் குந்தமிழ் அன்னைநீ எனினும்
　　அணுத்துணை முதுமையும் அடைந்திலை அம்மா!
தனிலிருந் தொருசிறு தடையுரு தூறித்
　　ததும்பிடும் அமுதின் தனிச்சிறப் பதுவோ?
இனுமிருந் தாளக் காரண மெதுவோ?
　　இளமையின் பொலிவும் ஏற்றமும் மிடுக்கும்?

புதிரென ஐந்து புலன்களை மயக்கும்
　　புவியுறு மனித வாழ்க்கையின் உட்பொருள்
இதுவென யாரும் எளிதில் உணர்ந்திட
　　ஈரடிக் குறள்வடி வெடுத்தனை நீயே!
நிதமுனை எங்கள் நெஞ்சக் கோயிலுள்
　　நிறுத்தி வணங்கி நெகிழுவம், மேலாம்
பதமெமக் கருள மனங்கொளு வாயே!
　　பழந்தமி ழே!புது வளந்தரு தாயே!

புரிந்திடு ஞானப் புன்னகை யாலே
　　புவியெலாம் வியந்து போற்றிப் புகழ
விரைந்திடு மாறொரு வேதமும் காவிய
　　வெள்ளமும் இங்கு விளைந்திடச் செய்தனை!
அருந்திட லின்றி அயர்வுறு கின்ற
　　ஆயிர மாயிரம் சேய்களை எண்ணிச்
சுரந்திட லேனெனக் கரந்திடு வாயோ
　　சுடர்தரு முகத்துறு சுந்தரப் புன்னகை?



கலைந்திலர் துயில்சிலர் மலர்ந்திலர் விழியெனக்
கதிரெழுந் துலவுங் கடமை தவறுமோ?
மலர்ந்திடு காவியப் பூமண நுகரா
மாந்தரை எண்ணி மனமிக வருந்தி
நலந்தரு குளிர்மணி நகைமறந் திருக்க
நாடுமோ செந்தமிழ் நாயகி நின்மனம்?
புலர்ந்திடு மொவ்வொரு பொழுதினும் இங்குப்
புதியன பூக்க அருள்புரி வாயே!

மெய்யுறு நல்லுயிர் விதவித மாக
விளங்கிடும் தத்துவ விளையாட் டெல்லாம்
கையுறு நெல்லிக் கனியென யார்க்கும்
காட்டிடத் தக்க கவின்வடி வுற்றனை!
பொய்யற ஞானம் புகட்டும்நின் யாக்கையைப்
பொருந்திய பொலிவெனும் போதுயிர்ப் பொலிவால்
செய்திடற் கரிய செயலிருந் திடுமோ?
செழுந்தமி ழே! துடித் தெழுந்திடு வாயே!

எரியுறு கின்றன எண்ணிலா மக்களின்
இதயமும் குடிசையும் பொருளுமென் றூலும்
விரிவுறு கின்றவிஞ் ஞான அறிவினல்
விளைவுறு கின்றன நன்மைகள் கோடி.
சரிவுறு கின்ற மானுடம் ஓங்கித்
தழைத்திட ஆணவம் தலைதெறித் தோடப்
பரிவுறு வாயெம் பைந்தமிழ்த் தாயே
பலகிளை அறிவியற் கலைவளர்ப் பாயே!

பார்க்கப் பிறந்த பலப்பல மொழிகள்
பழுக்கு முன்னரே பிஞ்சில் உதிர்ந்தன.
கேட்கத் துணிந்தவர் யாருள ரிங்குக்
கேள்விக ளென்னும் ஆணவக் கிறுக்கில்
ஆர்க்கப் புகுந்த அயல்மொழி உன்றன்
அடிபணி வாரிடம் அடிபட் டதிர்ந்தது!
தாக்கிடல் எவைஅவை தகர்த்திட வல்லஎம்
தமிழ்த்தாய் உன்திருத் தாள்பணி வோமே!

இரவிடு கருமையில் அரவமி லாமல்
இருவிழி பருகும் எழிலது மறையப்
பரவு பனித்திரை காலையெ ழுங்கதிர்
பார்க்கு மிளஞ்சிறு பார்வையி னலே
அறுபடு மென்பது போல்எம தன்னையுன்
ஆட்சி தவிர்த்திடு சூழ்ச்சிக ளெல்லாம்
முறிபடு மேபகை முடிவுறு மேயொரு
முறுவலில் என்று முழங்கிடு வோமே!

உலருமோ வாடி உதிருமோ வையம்
ஒருநொடி யில்வெந்து கருகு மோஎனப்
பலருமே அஞ்சும் நிலையினை மாற்றிப்
பகைகளைந் தினிமைப் பயிர்நடு வாயே!
புலர்ந்தது பொழுது புவியினில் அமைதி
பூத்தது காவியப் பூந்தமி ழாலென்(று)
உலகமே நின்புகழ் பாடிடக் கேட்டிங்(கு)
உவந்திடும் நாள்வர உதவிடு வாயே!



# வள்ளுவம்

கவிஞர் கருணனந்தம்

கண்டார் உயிருண்ணுந் தோற்றத்தான் கார்வண்ணன்,
பெண்டகை காவேரி பேசும் விழியிணையால்
தாக்குற்று, நெஞ்சந் தடுமாறிக், காதலுறு
நோக்கினல் உண்டான நோய்தீர்ந்து, மென்மலராள்
இல்லாத வாழ்வில் இனிப்பில்லை, என்றுணர்ந்து,
நல்லார் துணைக்கொண்டு நாடினன் இல்லறமே!
**அன்ருடங் காலை அறைக்குள் தனிமையிலே**
**சென்றென்ன செய்வானே; யார்க்குந் தெரியாது!**
மாண்புடைய இல்லாள் மனையறங் கைதேர்ந்து,
காண்போர் வியக்கக் கணமும் அயர்வின்றி,
அன்பும், விருந்தோம்பும் ஆர்வமும், ஈத்துவக்கும்
பண்புந், தற்கொண்டான் பேணுகின்ற பான்மையும்,
இன்சொலும், நன்றி இயல்பும், அழுக்காறு
வன்சொல் அவாவெகுளி வாராப் பொறுமையும்,
பெய்யெனப் பெய்யும் பெருமழைபோல் கொண்கனின்
மெய்யான தோழியாய் மேவி; வளமிக்க
வாழ்க்கைப் படகோட்டி; வற்ருத இன்பத்துள்
ஆழ்கையில்....பெண்ணின் முழுமை அடைந்தனளே!
**அன்ருடங் காலை அறைக்குள் தனிமையிலே**
**சென்றேதோ செய்யுஞ் சிறுதொழிலோன் கார்வண்ணன்**
தந்தையெனும் பேறுறத் தக்கோனய் ஆகியே
சிந்தை குளிர்ந்தான்! செய்வினை மறவாமல்
ஏருழுது, நன்ருய் எருவிட்டுக் காப்பாற்றி,
நீரிறைத்துப், பாருய்ய நெல்லை விளைவித்தே
ஊருணி நீர்நிறைந் தாற்போல், உலகெலாம்,
சீருறக் கைம்மாறு வேண்டாச் செயலாற்றித்,
தோன்றும் பயனகத் தூய புகழ்தேடிச்,
சான்றோர் பாராட்டத் தக்கானய் நின்றெழுகிக்,
கற்பவை கற்றுக், கசடறக் கற்றபடி
நிற்பதே நாடி, நிலவிடும் நீடின்ப
யாழையும் வெல்லும் அருமைத் திருமகன்
கூழிற் சிறுகை குவித்துத் துழாவிடத்
தேனமு தாகவே தின்று மகிழ்ந்திருந்து,
வான்மழை செங்கதிர் வாழ்த்தி வணங்கியே—
கற்றனைத் தூறும் அறிவுக் கடல்நீந்தப்,
பெற்றவன் கடமை பிறங்க அவையத்து
முந்தி யிருப்ப மொழிநூல் உணர்த்தியே,
சிந்தனை கூராகத் தேற்றினன் தன்மகனை!



**அன்றுடங் காலே அறைக்குள் தனிமையிலே**
**சென்று திரும்பும் செயலும் மறக்கவில்லே!**
ஆண்டிருந்த மன்னன் அரசாள ஆளின்றி
மாண்டதால், நாட்டில் குடியாட்சி, வந்தது!
தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா திருக்க; நிலமாளக் கார்வண்ணன்
தேர்ந்தெடுக்கப் பெற்ருன்! திருவும் பருவமும்
சேர்ந்திருக்கப் பெற்ற செயல்வீரன் ஆதலின்
எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்ப திழுக்கு; வனமயில்
பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெய்திட்டால்; சால்புடன்
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவாகும்; மேவி
இடிப்பாரை யில்லா ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்-இப் பொன்மொழிகள்
தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தருமெனுமோர் தீஞ்சொல்;
இதனே இதனல்இவன் முடிக்கும் என்ருய்ந்(து)
அதனே அவன்கண் விடுகின்ற செய்கை;
பெருமைக்கும் ஏனேச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளேக் கல்லாகும் அல்லவோ!
அல்லற்பட் டாற்ரு தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படையென்ற செம்மொழி;
ஆக்கம் அதர்வினுஅய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழையென்னும் உண்மையுரை,
உறுபசியும் ஓவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வதே நாடென்னும் சீர்மொழி,
ஏற்று, நடைமுறையிற் போற்றி இயங்கவே—
மாற்ருருந் தூற்ற வகையின்றி, மேம்பட்ட
நல்லாட்சி கண்டு நாட்டைப் புரந்திட்டான்!
எல்லாரும் பேருவகை எய்திச் சிறப்பித்தார்!
'ஏர்கொண்டு வாழ்வை இயக்கிய கார்வண்ணன்,
சீர்கொண்ட ஆட்சி செலுத்துவ தெங்ஙனம்?'
மாளா வியப்பில் மயங்கித், திகைப்புக்கும்
ஆளான ஊர்மக்கள், அன்னேன் திருமுன்னர்
கூடித்தம் ஐயங் குறித்து வினவிடவே—
ஈடில்லாச் சொல்வல்லான் உண்மை இயம்பினன்—
**"அன்றுடங் காலே அறைக்குள் தனிமையிலே**
**சென்று பயின்ற திருக்குறளின் நற்பயன்:**
இன்றுநேற் றன்றும்; இளமை முதலாக
நற்றென நான்கொண்ட நற்பழக்கம் ஆகுமே!
வள்ளுவப் பெருந்தகை, வண்ணத் தமிழ்மகன்
உள்ளம் உணர்ந்தேன்; உயரும் நெறிகண்டேன்!
அன்னேத் தமிழின் அருமைப் பெருமக்காள்!
என்னேத் தொடர்ந்திட்டால், ஏற்றம் அடைவீரே!
எந்த மொழியும் இதுபோல் அறநூலேத்
தந்ததோ இவ்வுலகில்? சான்ருேரே கூறுவீர்!
வாழ்வின் இலக்கணம் வாகாய் உணர்த்தவல்ல
ஆழ்கருத்துப் பேழை அறிந்து கடைப்பிடிக்கச்
சீராய்க் குறள்வடிவச் செவ்விய ஈரடி—
ஓராத் தமிழ்மகன் உண்டோ எனுமாறு
நன்கு பரப்புவோம் நாளும் வள்ளுவம்
எங்கும் இசைபாட இன்று!

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.

டாக்டர். மு. வரதராசனார் எம்.ஏ., எம்.ஓ.எல்., பி.எச்.டி,
தமிழ்த்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்.



# தமிழிலக்கியத் திறனாய்வு

## முன்னுரை :

இலக்கியம் தோன்றுவதை அடுத்து இலக்கியத் திறனாய்வும் தோன்றிவிடும். கட்டடம் தோன்றியவுடன், கட்டடத்தைப் பற்றிச் சீர்தூக்கிப் பேசும் பேச்சும் தோன்றுவதைப் போன்றது அது. ஆயினும், இலக்கியத் திறனாய்வு ஒரு துறையாக நெறியோடு வளர்ந்து வரையறைப்படுவதற்குக் காலம் ஆகும்.

தமிழ் இலக்கியம் தொன்மையானது; ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வளர்ச்சி பெற்றது. தமிழ் இலக்கியத் திறனாய்வு தொன்மை வாய்ந்ததாக உள்ளது. பழைய தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தின் மூன்றாம் பகுதியான பொருளதிகாரத்தை ஆராய்ந்தால் அந்த உண்மை தெற்றெனப் புலப்படுகிறது.

## தொல்காப்பியம் :

தொல்காப்பியத்தின் முதற் பகுதி எழுத்ததிகாரம்; அது தமிழின் எழுத்துக்களைப் பற்றிய இலக்கணத்தை உணர்த்துவது. இரண்டாம் பகுதி சொல்லதிகாரம்; அது தமிழ்ச் சொற்கள், சொற்றொடர்கள் பற்றிய இலக்கணத்தைக் கூறுவது. மூன்றாம் பகுதியாகிய பொருளதிகாரம், தமிழ் இலக்கியத்தின் பொருள் பற்றியும் அமைப்புப் பற்றியும் உணர்த்துவது. பொருளதிகாரம் தமிழர் வாழ்க்கை பற்றிக் கூறுவது எனக் கருதுவோர் உள்ளனர். இலக்கியம் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது ஆதலின், தமிழ் இலக்கியம் பற்றிக் கூறும் பகுதியை வாழ்க்கையைப் பற்றிக் கூறுவதாகக் கருதுகின்றனர். உண்மையாக நோக்கின், தொல்காப்பியனாரின் நோக்கம், அக்காலத் தமிழ் இலக்கியத்தின் பொருளையும் அமைப்பையும் எடுத்துரைப்பதே என்பது நன்கு விளங்கும்.

பொருளதிகாரத்துள் ஒன்பது இயல்கள் உள்ளன. ஒன்பதும், தமிழ் இலக்கியப் பொருளும் அமைப்பும் பற்றியே கூறுவன என்பது அவற்றின் பெயர்களாலும் உணரத்தக்கது. அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்னும் ஐந்தும் தமிழ் இலக்கியப் பொருள் பற்றியன. மெய்ப்பாட்டியல், செய்யுளியல், உவமவியல், மரபியல் என்னும் நான்கும் தமிழ் இலக்கிய அமைப்புப் பற்றியன. இலக்கியம் கூறும் பொருள் பற்றியும் அமையும் அமைப்புப்பற்றியும் ஆராயும் ஆராய்ச்சியே இலக்கியத் திறனாய்வு எனப்படும். ஆகவே, தமிழ் இலக்கியத் திறனாய்வு என்னும் துறை, தொல்காப்பியனாரின் காலத்திலே வளர்ந்திருந்தது என்பது தெளிவாகும்.

## தொல்காப்பியரின் இலக்கியத் திறனாய்வு :

தமிழிலக்கியத் திறனாய்வை அப் பழங்காலத்திலேயே வகுத்த தொல்காப்பியனார், தமக்கு முன்பே அவர் கூறும் கொள்கைகள் இருந்தன என்பதையும், தாம் கூறிச் செல்வன அம் முன்

னோர்களின் கொள்கைகளை ஒட்டியனவே என் பதையும் என்ப, என்மனார், மொழிப முதலிய சொற்களால் சுட்டிச் செல்கின்றார்.

கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப
(அகத்திணையியல், 1)

முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே.
(ஷை — 4)

முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே.
(ஷை — 5)

காரும் மாலையும் முல்லை; குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர்
(ஷை — 6)

பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப
(ஷை — 7)

பின்பனி தானும் உரித்தென மொழிப
(ஷை — 10)

இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றினும்
உரிய தாகும் என்மனார் புலவர்
(ஷை — 11)

திணைமயக் குறுதலும் கடிநிலை இலவே
நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப
புலன்நன்கு உணர்ந்த புலமை யோரே.
(ஷை — 12)

இவ்வாறு முதல் பன்னிரண்டு நூற்பாக்களுக்குள் எட்டுமுறை முன்னோரின் மரபைத் தொல்காப்பியனார் சுட்டிக் கூறுதல் காணலாம். இதனால், தமிழ் இலக்கியத் திறனாய்வு அவர் காலத்திற்கு முன்பே ஒரு வரையறை பெற்று முன்னோர்களால் போற்றப்பட்டிருந்தது என்பது உறுதியாகிறது. அக்காலத் திறனாய்வாளரை 'இயல்புணர்ந்தோர்', 'புலன் நன்கு உணர்ந்த புலமையோர்' முதலிய தொடர்களால் அவர் போற்றியிருத்தலும் காணலாம்.

ஐரோப்பிய நாடுகளிலும் அரிஸ்டாட்டில் வழியாக இலக்கியத் திறனாய்வுத் துறை தோன்றிப் புலவர் பலர் வாயிலாக வளர்ந்தது. அவர்களின் கொள்கைகளிலும் இலக்கியத்தின் பொருள், அமைப்பு (Content and form) என்ற இரு வகை பற்றிய ஆராய்ச்சி உள்ளது. பொருள், பற்றிய ஆராய்ச்சியைவிட, இலக்கிய அமைப்புப் பற்றிய ஆராய்ச்சி அங்குப் பெருகியது எனலாம். தமிழில் பொருள் பற்றிய ஆராய்ச்சி விரிவு பெற்றது. இலக்கியத்தில் கூறப்படும் பொருளை அகம் புறம் என இருவகைப்படுத்தி, ஏழு ஏழு திணைகளாக்கி அவற்றை விளக்கிச் செல்லும் தமிழ் முறை அந்நாடுகளில் இல்லை.

ஐரோப்பிய நாடுகளில் அரிஸ்டாட்டிலுக்குப் பிறகு வழிவழியாக அறிஞர் பலர் தோன்றித் திறனாய்வுத் துறையை விளக்கமுறச் செய்தனர்; பல வகைக் கருத்து வேறுபாடுகளுக்கும் இடம் அமைந்தது; புதிய புதிய தெளிவுகளுக்கும் இடம் அமைந்தது. ஆயின் தமிழகத்தில் கருத்து வேறுபாடுகளும் ஏற்படவில்லை; புதிய தெளிவும் ஏற்படவில்லை. தொல்காப்பியனார் விட்ட இடத்திலேயே பின்வந்தவர்கள் பல நூற்றாண்டுகள் நின்றனர். ஒருவகைத் தேக்கமான நிலைமையே காணப்பட்டது. அவர் கூறிச் சென்ற திறனாய்வுக் கருத்துக்களுக்குமேல் யாதொரு வளர்ச்சியும் பெறவில்லை. ஆகவே, திறனாய்வுத் துறை என்பது பழைய இலக்கியத்தின் மரபுகள் இன்ன இன்ன என்று வாளா எடுத்துரைக்கும் துறையாக நின்று விட்டது. மரபுகளும் திறனாய்வுத் துறையில் இடம் பெறல் வேண்டும்; மரபுகள் பற்றிய ஆராய்ச்சிக்கும் இங்கு இடம் உண்டு. ஆனால் அவைமட்டுமே எல்லாமாக இருந்துவிடல் ஆகாது. அகம் என்பது இன்னது, இத்தனை வகைப்படுவது, புறம் என்பது இன்னது, இத்தனை வகைப்படுவது, முதல், கரு, உரிப்பொருள்கள் இன்ன இன்ன, இவை இவை இவ்வாறு மயங்கும், கூற்று நிகழ்த்துதற்கு உரியார் இன்னின்னார், வெட்சி முதலிய புறத்திணையில் அமையும் துறைகள் இன்ன இன்ன முதலானவற்றை இலக்கியங்களில் கண்டு, அவை பற்றிய மரபுகள் இன்னவை என்று அறிவிப்பதிலேயே ஆர்வம் கொண்டனர். புறத்திணை ஏழு எனத் தொல்காப்பியனார் கொள்ள, பிற்காலத்தார் பன்னிரண்டு என்று கொண்டனர். கருத்துவேறுபாடு இச் சிறு அளவிலேயே வளர முடிந்தது. அதனால் பெற்ற பயனோ இல்லை எனலாம்.

## திறனாய்வுத்துறைக்கு இன்றியமையாத பகுதிகள் :

திறனாய்வுத் துறைக்கு இன்றியமையாத பகுதிகள் மெய்ப்பாடு பற்றியும் உவமைபற்றியும் செய்யுளிலக்கணம் பற்றியும் தொல்காப்பியனார் கூறியன ஆகும்.

நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகைஎன்
றப்பால் எட்டே மெய்ப்பா டென்ப
(தொல். மெய்ப்பாட்டியல், 3)

எனத் தொல்காப்பியனார் கூறியவை எக்காலத்தார்க்கும் எந்நாட்டார்க்கும் எம்மொழியார்க்கும் பொதுவானவை ஆகும். அரிஸ்டாட்டில் முதலானோரும் வடமொழி பரதன் முதலானோரும் நாடகத்தையும் நாட்டியத்தையும் கொண்டு கலையை ஆராய்ந்தது போலவே, இலக்கியக் கலையை ஆராயும் தொல்காப்பியனாரும் மெய்ப்பாட்டியலில் நாடகம் நாட்டியம் ஆகியவற்றைக் கொண்டே ஆராய்கின்றார். 'பண்ணைத் தோன்றிய'' மெய்ப்பாடு என்கின்றார் அவர். பண்ணை என்பது நாடகம் நாட்டியம் முதலிய ஆடல் கலைகளுக்குப் பொதுவான ஆயமாகும். உணர்ச்சியைப் புலப்படுத்துதலே, இலக்கியக் கலைக்கும் மற்றக் கலைகளுக்கும் சிறப்பியல்பாகும். உணர்த்தும் திறன் இல்லாதது கலை அன்று. உணர்ச்சியின்

உந்துதலாலேயே கலை பிறக்கின்றது. உணர்த்தும் ஆற்றலாலேயே கலை சுவைபெற அமைகின்றது. ஆகவே, உணர்ச்சியின் புலப்பாடு பற்றிக் கூறும் மெய்ப்பாட்டின் இலக்கணம் திறனாய்வுக்கு இன்றியமையாதது. ஆனால், இப்பகுதி தொல்காப்பியனார் விட்ட இடத்திலேயே நின்றுள்ளது. பின்னர் வளரவில்லை.

### உவமை :

கூறுவதை உள்ளம் கொள்ளுமாறு கூறுதல் — அறிந்த மற்றொன்றனோடு ஒருங்குவைத்து ஒப்பிட்டுக் கூறுதல் — அணி எனப்படும். உவமையியல் என்னும் தொல்காப்பியப் பகுதி இதனை விளக்குவதாகும். ரெடாரிக் (Rhetoric) என்ற பெயரால் மேலைநாட்டார் இதனைப் பலபட விளக்குவர். உள்ளுறை முதலியவற்றையும் உவமையில் போற்றப்பட்ட மரபுகளையும் தொல்காப்பியனார் எடுத்துரைத்துள்ளார். பின்வந்தவர்கள், அப்பகுதிகளை மேலும் தெளிவுபெறச் செய்திருக்கலாம். அவ்வாறு செய்யாமல், உவம அணியிலிருந்து பிறந்த மற்ற அணிவகைகளைப் பெருக்கிக் கூறுவதில் ஆர்வம் கொண்டனர். முப்பத்தைந்து என்று வகைப்படுத்தினர் தண்டியலங்கார ஆசிரியர். அவற்றை அறுபத்து நான்கு வகையாகப் பெருக்கினர் மாறனலங்கார ஆசிரியர். நூறுவகையாகக் காட்ட முனைந்தார் குவலயாநந்த நூலார். வடநூல் முறையை ஒட்டி அணிகளின் வகைகளைப் பெருக்கிக் காட்டிய இவ்வளவில் நிற்காமல், சொல்லணிகள் எனச் சில வகுத்து, இலக்கியக் கலைக்கு வேண்டாத பகுதியைப் புகுத்தினர். பொருட் சிறப்பையும் உணர்ச்சி வளத்தையும் கற்பனை மெருகையும் புறக்கணித்து வெறுஞ் சொல் விளையாட்டில் திளைத்து யமகம், சிலேடை, சித்திரச் செய்யுட்களைப் பாராட்டும் இப்போக்கு இன்று செல்வாக்கு இழந்துபோனது மகிழத்தக்கது. ''இவை அனைத்தும் பெரும்பாலும் பொருட் செறிவு இலவாய் வீண் சப்த ஜாலங்களாய் மட்டில் முடிந்தன'' என்று அறிஞர் வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் கடிந்துரைத்தது முற்றும் பொருந்துவதாகும் (தமிழ்மொழி வரலாறு, பக்கம் 62-63). அவற்றால் திறனாய்வுத்துறை சிறிது திசைமாறிச் சென்று திரும்பி வந்தது என்று கூறலாம். இன்று அழகுபடக் கூறுதலே அணி என்னும் கொள்கையும், இலக்கியத்தில் அமையும் பொருள் சுவை பெற அமைவதற்கே அணி உதவுவது என்னும் கொள்கையும் தெளிவாயின. ஆதலின் இடைக்காலத்தில் தோன்றிய வீண் பெருக்கங்கள் வேண்டாதனவாகப் புறக்கணிக்கப்பட்டு, அணி என்பது இலக்கியத்திற்குச் சுவையான வடிவம் தருவது என்னும் உண்மை மட்டும் திறனாய்வுத்துறையில் போற்றப்படுவதாயிற்று.

### செய்யுளியல் :

செய்யுளியல் என்னும் பொருளதிகாரப் பகுதியும் திறனாய்வுத் துறைக்கு இன்றியமையாப் பகுதியாகும். உணர்ச்சியும் கற்பனையும் அமைத்துப் பாடும் புலவர், பாட்டுக்கு அழகான ஒலிநயம் உள்ள யாப்பு அமைத்துப் பாடுதல் இயல்பு. ஒலிநயம் (Rhythm) என்பது இயற்கையின் இயக்கம் எதனோடும் இயல்பாகவே அமைந்திருப்பது. வீசும் காற்றிலும் அசையும் அலைகளிலும் விலங்குகளின் நடையிலும் பறவைகளின் பறத்தலிலும் இயல்பாகக் காணப்படும் ஒழுங்கான இயக்கம், உணர்ச்சியுள்ள சிந்தனையிலும் பேச்சிலும் எழுத்திலும் காணப்படுகின்றது. படைப்புத் திறன் வாய்ந்தவர்கள் படைக்கும் கலையிலும் அது புலப்படுகிறது. பாட்டில் அது புலப்படும்போது ஒலிநயம் (Rhythm) எனக் குறிக்கப்படும். அந்த ஒலிநயம் மக்களின் இயல்பான ஆடல்பாடல்களில் (கிராம மக்களின் ஆடல் பாடல்களில்) அமைந்துள்ளது. அது ஒவ்வொரு சமுதாயத்திலும் வழிவழியாக வருவது. மிகப் பழங்காலத்தில் வழங்கிய நாட்டுப் பாடல்களில் அமைந்திருந்த ஒலிநயங்களைப் போற்றியே புலவர்கள் இயற்றமிழ்ப் பாட்டுக்கள் பல பாடினர். அவற்றின் அமைப்பை ஆராய்ந்து ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, பரிபாடல் எனப் பிறகு வந்த இலக்கணப் புலவர்கள் பாகுபாடு செய்து யாப்பிலக்கணம் எழுதினர். தொல்காப்பியனாரின் செய்யுளியல் அக்காலத்துப் பாகுபாட்டை எடுத்துரைக்கின்றது. நுட்பமான ஒலிநயத்திற்கு முன்னோர்கள் தந்த பருமையான வடிவங்களே ஆசிரியப்பா, வெண்பா முதலியன எனலாம். ஒலிநயம் எல்லையற்ற வேறுபாடுகளும் விரிவுகளும் உடையது; மக்களினத்திற்குப் பொதுவானது. அவற்றில் சிலவற்றையே ஒவ்வொரு மொழியாரும் போற்றித் தத்தம் யாப்புச் செல்வங்களாகக் கொண்டாடுகின்றனர். அவ்வாறு பழந்தமிழர் போற்றிக் கொண்டாடியவற்றையே தமிழ் யாப்பிலக்கணத்தில் காண்கிறோம். வந்த ஒலியே திரும்பத் திரும்ப வரும்போது செவிக்கு இன்பம் பயக்கிறது. அத்தகைய இன்பத்தையும் மேற்குறித்த ஒலிநயத்துடன் சேர்த்துப் போற்றத் தொடங்கினர் முன்னோர். முதல் ஒலியாக வந்த ஒன்றே திரும்பத் திரும்ப வருதல் மோனை என்றும், அடுத்த இரண்டாம் ஒலியும் அதனோடு ஒட்டியனவும் திரும்பத் திரும்ப வருதல் எதுகை என்றும், இறுதி ஒலி மீண்டும் மீண்டும் வருதல் இயைபு என்றும் கூறப்படும். செவியின்பம் தரும் மோனை எதுகை முதலிய இவற்றையும் யாப்பிலக்கணத்துள் இயைத்துக் கூறுவர். தமிழிலக்கியம் இன்றுவரை இவற்றைப் போற்றி வளர்த்து வருகிறது. இடைக்காலத்துப் பாட்டுக்களில் எதுகை மோனைகள் மிகப் பெரிதும் போற்றப்பட்டன. ஆயின், சங்க காலத்துப் பாட்டுக்களில் அவற்றிற்கு உரிய இடம் அளிக்கப்பட்டதே அல்லாமல், மிகுதியான சிறப்பு அளிக்கப்படவில்லை எனலாம். உணர்ச்சிக்கும் கற்பனைக்கும் சிறப்பான முதலிடமும், ஒலிநயத்திற்கும் யாப்பிற்கும் அடுத்த இரண்டாம் இடமும், எதுகை மோனை முதலியவற்றிற்கு அவற்றிற்கு அடுத்த மூன்றாம் இடமும் தந்தே பழங்காலப் புலவர்கள் பாட்டுக்கலையை வளர்த்தனர். அதுவே பொருத்தமானது என்பதை இன்றைய திறனாய்வுத்துறை எடுத்துரைக்கின்றது. இன்று வளர்ந்துவரும் இலக்கியம் அந்தப் பழைய நெறியையே போற்றிவருகிறது என்பதும் இங்குக் கருதத்தக்கதாகும்.

**செய்யுளின் வனப்புவகைகள் :**

தொல்காப்பியனுர் செய்யுளியலில் கூறியுள்ள வண்ணமும் வனப்பும் பற்றிய கருத்துக்கள், திறனுய்வுத் துறைக்கு உரியன. செய்யுளின் இசை வேறுபாடுகள் இருபது வகைப்படும் எனக் கொண்டு, பாஅவண்ணம் தாஅவண்ணம் முதலிய பெயர்களால் அவற்றை விளக்குகின்முர். அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு ஆகிய எட்டும் செய்யுளின் வனப்பு வகைகள் எனக் கூறுகிருர். சில மெல்லிய சொற்களால் சுருங்கிய அடிகளால் அமைவது அம்மையாம். எளிய சொற்களால் அல்லாமல் செய்யுளுக்கு உரிய அரிய சொற்களால் புனேவுபெற இயற்றப் பெறுவது அழகு எனப்படும். உரைநடை கலந்து பழைமையாகவரும் பொருள்பற்றி இயற்றப்படுவது தொன்மையாகும் (புராணங்கள், காவியங்கள் இதனுள் அடங்கும்). ஒலியினிமை மிக்க சொற்களால் சிறந்த பொருள்பற்றி அமைவதும், பலவாறு பரந்த சொற்களால் பல அடிகளால் அமைவதும் தோல் எனப்படும். புத்தம் புதிய பொருள் பற்றியது விருந்து ஆகும் (புதிய புனேகதைகள் முதலியன இதன்பாற் படும்). புள்ளியெழுத்தால் முடிவன இயைபு எனப்படும். ஆராயமலே எளிதில் பொருள் விளங்கக்கூடிய வகையில் பேச்சு மொழியால் அமைவது புலன் எனப்படும். வல்லினமெய் பயிலாமல் ஓசை ஓங்கிய சொற்கள் மிகுந்து பொருள் தெளிவாய்ப் புலப்பட அமைவது இழைபு என்னும் வனப்பு வகையாகும். இவ்வாறு தொல்காப்பியனுர் கூறிய வனப்பு என்னும் திறனுய்வுப் பகுதி பிற்காலத்தே விளக்கம் பெருமல் போயிற்று.

வடமொழியில் தண்டி என்னும் ஆசிரியர் இயற்றிய காவியதர்சத்தை ஒட்டித் தமிழில் தண்டியலங்காரம் இயற்றப்பட்டது. அதில் வடஇந்தியாவில் வளர்ந்த கௌடநாட்டு அறிஞரின் முறையும் விதர்ப்ப நாட்டு அறிஞரின் முறையும் சுட்டப்படுகின்றன. பின்னர், காவியத்தின் இலக்கணம் விளக்கப்படுகின்றது. அது பயனுள்ளதே ஆகும். ஐரோப்பியர் காவியத்தின் இலக்கணமாகக் கூறும் கருத்துக்களோடு பெரும்பாலும் பொருந்தும் வகையிலேயே அப்பகுதி உள்ளது. ஆயின், வடநூலார் பெரிதும் போற்றும் த்வனி என்னும் குறிப்புப் பொருள் பற்றிய இலக்கணம் விரிவாகக் கூறப்பட்டிருப்பின், திறனுய்வுத் துறைக்கு நன்மையாக இருந்திருக்கும். தொல்காப்பியனுர் குறிப்புப்பொருளே இறைச்சி என்னும் பெயரால் குறிப்பிட்டுள்ளார். பின்வந்தோர் அதைப் போற்றி வளர்க்கவில்லே. உரையாசிரியர்கள் மட்டுமே தம் உரைகளில் பாட்டுக்களின் குறிப்புப் பொருளே விளக்கமுற்பட்டுள்ளனர். பிற்கால இலக்கண நூலார் அதை உரிய அளவிற்குப் போற்றவில்லே.

இன்று உலகம் ஒரு குடும்பம்போல் பழகி உறவு கொள்ளும் வாய்ப்புக் கிடைத்துள்ளது; அறிவியல் முன்னேற்றம் உலக நாடுகளில் அறிவுச் செல்வங்களே எல்லாம் எல்லார்க்கும் பொதுவாக்கி வருகின்றது. அதனுல், திறனுய்வுத் துறையில் எல்லா நாடுகளின் கருத்துக்களேயும் தமிழர் பெற முடிகின்றது. கிரேக்க அரிஸ்டாட்டில் முதல் ஆங்கிலேய ரிச்சர்ட்ஸ் வரையில், அமெரிக்க எலியட் முதல் வங்காளத் தாகூர் வரையில் அனேவருடைய திறனுய்வுக் கருத்துக்களேயும் ஒப்புநோக்கிப் பயன் பெற முடிகிறது. அதனுல் தொல்காப்பியனுர் முதல் பாரதியார் வரையில் தமிழறிஞர்கள் இலக்கியத் திறனுய்வு பற்றிக் கூறிய கொள்கைகளே எல்லாம் துலக்கமாகக் காணமுடிகிறது.

**முடிவுரை :**

ஆயினும் ஒரு குறை ஆங்காங்குத் தலேயெடுக்கிறது. காய்தல் உவத்தல் இன்றி நடுநிலேயில் நின்று உண்மை காணுமல், தாம் பற்றியதையே கொண்டு தாம் விரும்பியதையே போற்றி விரும்பாததைத் தூற்றிக் கண்மூடிச் செல்லும் குறை உள்ளது. திறனுய்வு என்பது அறிவியல் துறைகளுள் ஒப்பாக வைத்துப் போற்றத்தக்கது. அறிவியலில் விருப்பு வெறுப்புக்கு இடம் இல்லே. உண்மை நாடும் நாட்டம் ஒன்றே அங்குத் தேவை. திறனுய்வுத் துறையில் அம்முறையைப் போற்றி இலக்கியப் பெற்றியை மட்டும் ஆராயும் திறன் பெருகினுல், தமிழ் பெருமையுறும்.

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்[தொருபால்
கோடாமை சான்ருேர்க்கு அணி

என்னும் திருக்குறள் தமிழ் இலக்கியத் திறனுய்வுத்துறைக்குக் கலங்கரை விளக்கமாக அமைய வேண்டும்.



வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

க. வெள்ளைவாரணன்
தமிழ்ப் பேராசிரியர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

# தொல்காப்பியர் காலம்

உலக வழக்கும் இலக்கியத் தொன்மையும் வாய்ந்த தமிழ் மொழியை இனிய, எளிய இலக் கண வரம்பு கோலிப் போற்றி வளர்த்தவர் ஆசிரியர் தொல்காப்பியனார் ஆவர். அவர் வாழ்ந்த காலம் இதுவென அறிதற்குப் பனம் பாரனார் இயற்றிய தொல்காப்பியச் சிறப்புப் பாயிரமும், இறையனார் களவியலுரையும், அதனை அடியொற்றி இளம்பூரணர் முதலிய பழைய உரையாசிரியர்கள் எழுதிய உரைக் குறிப்புகளும் சான்றுகளாக உள்ளன. தொல்காப்பியத்திற் காணப்படும் தமிழிலக்கண அமைப்பும் அதனை அவ்வாறே அடியொற்றியும், காலப்போக்கில் சிறிது வேறுபட்டும் அமைந்த திருக்குறள், சங்கச் செய்யுட்கள், சிலப்பதிகாரம் முதலிய பழைய தமிழிலக்கியங்களின் சொற்பொருளமைதியும் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஆசிரியர் தொல் காப்பியனார் வாழ்ந்த காலப்பகுதி இதுவெனத் துணிதற்குரிய சிறந்த ஆதாரங்களாக அமைந் துள்ளன.

பண்டைக் காலத்துப் பாண்டியர்கள் கல்வி வளர்ச்சி கருதிப் புலவர் பலரையும் ஒருங்கழைத் துத் தமிழ்ச் சங்கங்களை மும்முறை நிறுவித் தமிழ் வளர்த்த வரலாறு இறையனார் களவியலுரையில் விரித்துரைக்கப் பெற்றுளது. கடல் கொள்ளப் பெற்ற தென் மதுரையில் முதற்சங்கமும், கபாட புரத்தில் இரண்டாவது சங்கமும், கபாடபுரம் கடல் கோளால் அழிவுற்ற நிலையில் இப் பொழுதுள்ள கூடலம் பதியாகிய மதுரையில் மூன்றாவது சங்கமும் நிகழ்ந்தன எனவும், தலைச் சங்கம் 4440 ஆண்டும், இடைச் சங்கம் 3700 ஆண்டும், கடைச் சங்கம் 1800 ஆண்டும் நிலை பெற்றிருந்தன எனவும், இடைச் சங்கத்திலிருந்து தமிழாராய்ந்தாருள் ஆசிரியர் தொல்காப் பியனாரும் ஒருவர் எனவும், அவரால் இயற்றப் பெற்ற தொல்காப்பியம் இடைச் சங்கத்தார்க் கும் கடைச்சங்கத்தார்க்கும் இலக்கண நூலாயிற்று எனவும் களவியல் உரையாசிரியர் தெளிவாகக் குறித்துள்ளார்[1].

பாண்டியர்க்குரிய தலைநகரம் கபாடம் எனவும், அது தாமிரபரணிக்குத் தெற்கேயுள்ளதெனவும், வடமொழி ஆதிகாவியமாகிய வான்மீக ராமாயணம் கூறும் குறிப்பு மேற்குறித்த முச்சங்க வரலாற்றுக்கு அரண் செய்யும் முறையில் அமைந் துள்ளமை காணலாம்.

தொல்காப்பியர் காலத்தில் வடக்கே வேங் கடமும், தெற்கே குமரியாறும் தமிழகத்தின் எல்லை களாக அமைந்திருந்தன என்பது, 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து' எனவரும் தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத் தொடரால் இனிது புலனாம். தொல்காப்பியர் காலத்தில் தெற்கெல்லையாக விளங்கிய குமரியாறு அவர் காலத்திற்குப்பின் நிகழ்ந்த கடல் கோளால் அழிவுற்றது. இக் கடல்கோள் இடைச் சங்கத்தின்

இறுதியில் முடத்திருமாறன் காலத்தில் நிகழ்ந் திருத்தல் வேண்டும். இச்செய்தி, ''அக்காலத்துப் போலும் பாண்டியனுட்டைக் கடல் கொண்டது'' என இடைச்சங்க வரலாற்றின் இறுதியிலும், ''அவர்களைச் சங்கம் இரீஇயினர், கடல் கொள் ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதியீருக நாற்பத் தொன்பதின்மர் என்ப'' எனக் கடைச் சங்க வரலாற்றிலும் களவியலுரையாசிரியர் குறித்துள் ளமையாற் புலனும். தொல்காப்பியர் காலத்திற் குப்பின் நிகழ்ந்த இக் கடல் கோளால் குமரியாறு அழியவே தமிழ் நாட்டின் தெற்கெல்லையாகக் குமரிக் கடல் அமைவதாயிற்று.

''நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னுட்டு''

—(சிலப். வேனிற் - 1, 2)

என இளங்கோவடிகள் தம்காலத் தமிழகத்தின் எல்லையைக் குறித்துள்ளார். ''நெடியோன் குன்றம் —வேங்கடமலை. தொடியோள் பௌவம்—குமரிக் கடல்'' என்பது அரும்பதவுரையாசிரியர் குறிப்பு. ''நெடியோன் குன்றமும் தொடியோள் நதியும் என்னுது, பௌவம் என்றது என்னையெனின், முதலூழியிறுதிக்கண் தென்மதுரைத் தலைச் சங்கத்து.... நிலந்தரு திருவிற் பாண்டியன் தொல்காப்பியம் புலப்படுத்து இரீஇயினன். அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலிமுகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளி என்னும் ஆற்றிற்கும் குமரி என்னும் ஆற்றிற்கும்இடையே எழுநூற்றுக் காவதவாறும், இவற்றின் நீர்மலிவானென மலிந்த ஏழ்தெங்க நாடும், ஏழ்மதுரை நாடும், ஏழ்முன் பாலைநாடும், ஏழ்பின் பாலைநாடும், ஏழ்குன்ற நாடும், ஏழ்குணகாரை நாடும், ஏழ்குறும்பனை நாடும் என்னும் நாற்பத்தொன்பது நாடுகளும், குமரி, கொல்லம் முதலிய பன்மலை நாடும் காடும் நாடும் நதியும் பதியும் தடநீர்க்குமரி வடபெருங் கோட்டின்காறும் கடல் கொண்டு ஒழிதலாற் குமரியாகிய பௌவம்என்றுர் என்றுணர்க. இஃது என்னை பெறுமாறு எனின்,

'வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள'

சிலம்பு - காடுகாண். 18-20

என்பதனுனும், கணக்காயர் மகனர் உரைத்த பொருளுரையானும், உரையாசிரியராகிய இளம்பூரண அடிகள் முகவுரையானும், பிற வாற்றுனும் பெறுதும்' என்பது அடியார்க்கு நல்லார் கூறும் விளக்கமாகும்.

தமிழ் நாட்டின் தென்பகுதியிற் பஃறுளியாறும் குமரியாறும் ஓடின என்பதும், அவ்விரு பேராறு களின் இடையே எழுநூற்றுக்காவத அளவில் 49 நாடுகள் அமைந்திருந்தன என்பதும், தெற்கி லிருந்து மீதூர்ந்து வந்த கடல் பஃறுளியாற்றுடன் பல மலையடுக்கங்களையும் உள்ளடக்கிக் குமரியாற் றின் வடகரையளவும் பரவி அழித்தமையால் தமிழ் நாட்டின் தென்னெல்லை குமரிக்கடலாயிற்று என்பதும் மேற்குறித்த இளங்கோவடிகள் வாய் மொழியாலும், அடியார்க்குநல்லார் உரையாலும் இனிது புலனுதல் காணலாம்.

கி.மு. நான்காம் நூற்றுண்டில் சந்திரகுப்த மன்னனுக்கு அமைச்சராக விளங்கிய சாணக்கியர், தமது பொருள் நூலில் முத்துக்கள் கிடைக்கும் இடங்களைக் கூறுமிடத்துப் 'பொருநையாறு, பாண்டிய கபாடம்' என்னும் இடங்களைக் குறிப் பிட்டுள்ளார். இக்குறிப்பினை உற்று நோக்குங்கால் அவர் காலத்திற் பாண்டிய நாட்டுக் கபாடபுரத் துக் கடற்றுறையில் முத்துக்கள் எடுக்கப் பெற்ற செய்தி நன்கு விளங்கும்.

கயவாகு என்னும் பெயருடைய வேந்தர் இருவர் இலங்கையில் ஆட்சி புரிந்துள்ளார்கள். அவ்விருவருள் முதற் கயவாகுவின் காலம் கி.பி. —171-193 என்பது ஆராய்ச்சியாளர் துணிபு[2]. செங்குட்டுவன் கண்ணகிக்குத் திருவுருவமைத்துக் கடவுள் மங்கலஞ் செய்த நாளில், இக்கயவாகு வஞ்சி நகரத்திற்கு வந்து கண்ணகியன்னையை வழிபட்டுச் சென்ற செய்தியைச் செங்குட்டுவன் தம்பியாகிய இளங்கோவடிகள் குறித்துள்ளார். எனவே, இளங்கோவடிகள் காலம் கி.பி. இரண் டாம் நூற்றுண்டென்பது நன்கு தெளியப்படும். இளங்கோவடிகளும் அவர் காலத்தும் அவர்க்கு முன்னும் வாழ்ந்த கடைச் சங்கப் புலவர்களும் திருக்குறளிலுள்ள சொற்றொடர்களையும், கருத்துக் களையும் தம் செய்யுட்களில் எடுத்தாண்டுள்ளார் கள். ஆகவே, திருவள்ளுவர் காலம் கி.மு. முதல் நூற்றுண்டெனக் கொள்ளுதல் பொருத்தமுடைய தாகும்.

திருவள்ளுவர் தொல்காப்பிய இலக்கணத்தினை வரம்பாகக் கொண்டே திருக்குறளை இயற்றியுள் ளார். உலக மக்களால் கருதத்தக்க பொருள்கள் அறம், பொருள், இன்பம் என்னும் இம்மூன்றுமே என்பதனை, 'அந்நிலை மருங்கின் அற முதலாகிய மும்முதற் பொருள்[3] 'என்ற தொடராற் குறித்த தொல்காப்பியர், அறத்தினுற் பொருளை ஈட்டி அப்பொருளால் இன்பம் நுகரும் வாழ்க்கை முறையினை 'மூன்றன் பகுதி'[4] என முப்பால் களாகப் பகுத்துள்ளார். தொல்காப்பியர் கூறும் இப்பகுப்பு முறையினை அடிப்படையாகக் கொண்டே அறத்துப்பால், பொருட்பால், காமத் துப்பால் எனத் திருக்குறளை முப்பால்களாகத் திருவள்ளுவர் வகுத்தமைத்தார்.

தொல்காப்பியர் வாய்மொழியினை அவ்வாறே எடுத்தாண்ட பகுதிகள் திருக்குறளிற் காணப் படுகின்றன. 'எழுத்தெனப்படுப அகர முதல னகர விறுவாய்' எனத் தொல்காப்பியர் தமது நூலைத் தொடங்கியுள்ளார். திருவள்ளுவரும் 'அகரமுதல எழுத்தெல்லாம்' என அகர முதலாகத் தொடங் கிக் 'கூடி முயங்கப் பெறின்' என னகர இறுதி யாகத் திருக்குறளை அமைத்துள்ளார். ''நிலந்தீ நீர்வளி விசும் போடைந்தும் கலந்த மயக்கம் உலகம்'' என்றுர் தொல்காப்பியர். 'சுவை

யொளியூறோசை நாற்றமென் றைந்தின், வகை தெரிவான் கட்டே யுலகு' (திருக்-27) என்றார் திருவள்ளுவர். ''நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திரம் என்ப'' (தொல்-செய்யுளியல்-171) என வரும் நூற் பாவினை அடியொற்றி அமைந்தது, ''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து, மறைமொழி காட்டி விடும்'' (28) என வரும் திருக்குறளாகும். ''அருள் முந்துறுத்த அன்புபொதி கிளவி''[5] என வரும் தொல்காப்பியத் தொடர்ப் பொருளை, 'அருளென்னும் அன்பீன் குழவி' (757) என வரும் திருக்குறள்' இனிது புலப்படுத்துகின்றது. இவ் வாறு தொல்காப்பியச் சொற்றொடர்களையும், கருத்துக்களையும் திருக்குறள் தன்னகத்தே கொண்டு விளங்குதலால் தொல்காப்பியர் திருவள் ளுவர்க்குக் காலத்தால் முந்தியவர் என்பது நன்கு பெறப்படும்.

ஒரு மொழிக்கு இலக்கண நூல் செய்யும் ஆசிரியர், தம் காலத்திலுள்ள எல்லா இலக்கியங் களையும், இலக்கணங்களையும் நன்கு ஆராய்ந்த பின்னரே அந்நூல்களிற் காணப்படும் மொழியியல் புகளைத் தொகுத்தும், வகுத்தும் உரைப்பது இயல்பு. ஆசிரியர் தொல்காப்பியர், கபிலர், பர ணர், நக்கீரர் முதலிய சங்கப் புலவர்கட்கும் திரு வள்ளுவர்க்கும் காலத்தால் பிற்பட்டவராயின் இப்புலவர் இயற்றிய நூல்களில் அமைந்த மொழி யியல்புக்குப் பொருந்தும் முறையில் தாம் இயற் றும் தொல்காப்பியத்தில் விதிகளை அமைத்திருப் பார். தொல்காப்பிய நூலில் விதந்து கூறப்பட்ட விதிகட்கும் சங்கச் செய்யுட்களிலும் திருக் குறளிலும் அமைந்த மொழி நடைக்கும் குறிப் பிடத்தக்க வேறுபாடுகள் காணப்படுவதொன்றே தொல்காப்பியர் கடைச் சங்கப் புலவர்கட்கும் திருவள்ளுவர்க்கும் பன்னூறாண்டுகள் முற்பட் டவர் என்பதற்குப் போதிய சான்றாகும்.

தொல்காப்பிய விதிகட்கு மாறான சொல்வழக்கு கள் சில சங்கச் செய்யுட்களிலும், திருக்குறளிலும் காணப்படுகின்றன. தொல்காப்பியர் காலத்தில் 'கள்' என்னும் பன்மை விகுதி அஃறிணையில் மட்டுமே வழங்கியதென்பது,

> 'கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
> கொள்வழியுடைய பலவறி சொற்கே'
>
> (தொல்-பெயரியல்-15)

என்ற நூற்பாவால் அறியப்படும். இவ்விதிக்கு மாறாக, 'பூரியர்கள்' (910), 'மற்றையவர்கள்' (263) எனத் திருக்குறளிலும், 'ஐவர்கள்' (26) எனக் கலித்தொகையிலும் உயர்திணையிற் 'கள்' விகுதி வழங்கப் பெற்றுளது.

தொல்காப்பியத்திற் காணப்படாத புது வழக்கு கள் சில சங்கநூல்களிலும், திருக்குறளிலும் காணப்படுகின்றன :

'அல்லால்' (377), 'சூழாமல்' (1024), 'அல்லனேல்' (386), 'வேபாக்கு' (1128) எனத் திருக்குறளிலும், 'பொருளல்லால்' (14), 'கூறுமல்' (1), 'கேளாமை' (108) எனக் கலித் தொகையிலும் ஆல், ஏல், மல், மை, பாக்கு என்னும் இறுதியையுடைய வினையெச்சங்கள் பயின்று வழங்குகின்றன. இவை தொல்காப்பியத் திற் கூறப்படாத புதிய வினையெச்ச வாய்பாடு களாகும்.

சங்கச் செய்யுட்களில் அருகிக் காணப்படும் சமய விகற்பங்களைப்பற்றிய குறிப்புக்கள் தொல் காப்பியத்தில் இடம் பெறவில்லை. மாயோன், சேயோன், வருணன், வேந்தன் என்னும் நானிலத் தெய்வங்களுடன் வெற்றிவிளைக்கும் கொற்றவை யையும் எல்லா நிலத்திற்கும் உரியநிலையிற் 'கடவுள்' என்னும் பெயரையும் தொல்காப்பியர் தம் நூலிற் குறிப்பிடுகின்றார். சங்கச் செய்யுட் களில், காரியுண்டிக் கடவுள், மணிமிடற்றோன், முக்கணன் என இறைவனை உருவநிலையில் வைத்து வழிபடும் வழிபாடு காணப்படுகிறது. திருமால் வழிபாட்டில் செங்கட்காரி (வாசுதேவன்), கருங் கண் வெள்ளை (சங்கருணன்), பொன்கட் பச்சை (பிரத்தியும்நன்), பைங்கண்மால் (அநிருத்தன்) ஆகிய நால்வகை வியூகமும் பரிபாடலிற் கூறப் பட்டுள்ளன.

இதுகாறும் எடுத்துக் காட்டியவற்றால் இயற் றமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம், சங்க இலக்கியத்திற்கும் திருக்குறளுக்கும் பன்னூறாண்டு முற்படத் தோன்றிய தொன்மை யுடையதென்பது நன்கு துணியப்படும்.

பாணினீயம் என்னும் வடமொழி இலக்கணம் கி. மு. ஆறாம் நூற்றாண்டளவிற் பழைமை கூறப் படுகின்றது. பாணினி முனிவர் காலம் கி.மு. 900 என, சி. வி. வைத்தியா என்பவர் ''வேதகால சமஸ்கிருத இலக்கிய வரலாறு'' என்னும் நூலிற் கூறியுள்ளார். வினைகளே எல்லாச் சொற்களுக்கும் முதனிலை (தாது) என விளக்கி, ஒரு முதனிலையிற் பிறந்த பல சொற்களுக்கு இலக்கணம் கூறும் முறையில் அமைந்தது, பாணினியார் இயற்றிய அஷ்டாத்தியாயி என்னும் வியாகரணமாகும். இம்முறை தொல்காப்பியத்திற் காணப்படவில்லை. தொல்காப்பியரது வடமொழி இலக்கணப் பயிற்சி யைப் பாராட்டக் கருதிய ஒரு சாலை மாணாக் கராகிய பனம்பாரனார், 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என அவரது ஐந்திர வியா கரணப் பயிற்சியைச் சிறப்பித்துள்ளார். வட மொழி வியாகரணங்களில் தலைசிறந்து விளங் குவது பாணினி முனிவர் இயற்றிய வியாகரணமே என்பது பலரும் அறிந்தது. தொல்காப்பியர் பாணினிக்குக் காலத்தாற் பிற்பட்டவராயின், வடமொழி வியாகரணங்களில் தலைசிறந்து விளங் கும் பாணினீயத்தைக் கற்றுவல்லவர் தொல்காப் பியர் என்றே பனம்பாரனார் அவரைப் பாராட்டி யிருப்பர். அங்ஙனங் கூறாது 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றி' என ஐந்திர நூற் பயிற்சியொன்றையே சிறப் பித்துக் கூறுதலால், வடமொழியிற் பாணினி முனிவர் வியாகரணத்தினை இயற்றுதற்கு முன் னரே தமிழில் தொல்காப்பியம் இயற்றப்பெற்ற தென்பதும், எனவே பாணினி முனிவர் காலத்

திற்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்தவர் தொல்காப்பியர் என்பதும் நன்கு துணியப்படும்.

இனி, பனம்பாரனர் குறித்த ஐந்திரம் என்பது வைதிக சமயத் தொடர்பில்லாத பிறிதொரு நூல் என்றும், அது சமணர்களால் இயற்றப்பெற்ற தென்றும், அந்நூலினைப் பயின்ற தொல்காப்பியர் பாணினிக்குக் காலத்தால் பிற்பட்டவரென்றும் அறிஞர் வையாபுரிப் பிள்ளையவர்கள் கருதுவர்[6]. இந்திரனுற் செய்யப்பட்ட ஐந்திர நூற் பயிற்சியைப் பராசரன் என்னும் வேதியன் பாராட்டிப் போற்றினன் எனவும், கவுந்தியடிகள் என்னும் சமணத் துறவி ஐந்திர நூற்பயிற்சியைப் புறக்கணித்துத் தம் சமண சமய நூலாகிய பரமாகம நூற் பொருளைப் பாராட்டியுரைத்தனர் எனவும், இளங்கோவடிகள் அவ்விருவர் மன நிலையினையும் இனிது புலப்படுத்துகின்றார்[7]. ஆகவே ஐந்திர வியாகரணம் வைதிகரல்லாத புறச் சமயத்தாராற் போற்றிப் பயிலப் பெற்ற பிற்காலத்து நூல் என்னும் கருத்து பொருந்தாமை காணலாம்.

பாண்டியர்க்குரிய தலைநகரமாகிய கபாடபுரம் தாமிரபரணிக்குத் தெற்கேயுள்ளது என வான்மீக முனிவர் குறித்துள்ளார். மகாபாரதத்தில் பாண்டியர் தலைநகராக மணலூர் குறிக்கப் பெற்றது. பாரத காலத்திற் பாண்டியர் கடற்றுறையூராகிய கபாடபுரத்தின் பாதுகாப்பின்மையைக் கூர்ந்துணர்ந்து மணலூர் என்னும் மற்றொரு பேரூரினைத் தலைநகராக அமைத்துக் கொண்டனர் எனத் தெரிகிறது. கபாடபுரமும், குமரியாறும் கடல் கோளால் அழிந்துபடுவதன்முன் வாழ்ந்தவர் தொல்காப்பியர் என்பது தொன்றுதொட்டு வழங்கும் வரலாறுதலால், அவ்வாசிரியர் பாரத காலத்துக்கு முற்பட்ட காலத்தவர் என்பது நன்கு தெளியப்படும். பாரத காலம் கி.மு. 1500 ஆண்டுகளுக்குமுன் என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. எனவே, பாரத காலத்திற்கு முன் வாழ்ந்த தொல்காப்பியர் கி.மு. 1500 ஆண்டுக்குப் பிற்பட்டிருத்தல் இயலாது என்பது நன்கு துணியப்படும்.

கடைச் சங்கத்தின் இறுதிக் காலம் கி.பி. மூன்றும் நூற்றுண்டின் தொடக்கம் என்பது ஆராய்ச்சியாளர் துணிபாகும்[8]. இறையனர் களவியலுக்கு நக்கீரனர் கூறிய உரை வழி வழியாகப் பாடஞ் சொல்லப் பெற்று வந்து இப்பொழுதுள்ள வடிவில் எழுதப் பெற்ற காலம் கி.பி. எட்டாம் நூற்றுண்டென்பர் ஆராய்ச்சியாளர். இற்றைக்கு 1200 ஆண்டுகட்கு முற்பட்ட அந்நூலிற் கண்ட முச்சங்க வரலாற்றின் படி நோக்குங்கால் இடைச் சங்கம் கி.மு. 5000 ஆண்டுகட்கு முன் தொடங்கப் பெற்றதெனக் கொள்ள வேண்டியுளது. அங்ஙனம் கொள்ளுமிடத்து, தலைச்சங்கத்திறுதியிலும் இடைச்சங்கத் தொடக்கத்திலும் வாழ்ந்தவராகிய தொல்காப்பியர் காலத்தின் மேலெல்லை கி.மு. 5000 எனக் கொள்ள வேண்டி வரும். இக்காலவெல்லை ஆராய்ச்சியாளர் சிலர்க்கு வியப்பாகத் தோன்றக் கூடும். இடைச் சங்கத்தார்க்கும் கடைச் சங்கத்தார்க்கும் இலக்கண நூலாக விளங்கியது தொல்காப்பியம் என்னும் உண்மை மேற்காட்டிய சான்றுகளால் நன்கு வலியுறுத்தப் பெற்றமையின், ஆசிரியர் தொல்காப்பியர் வாழ்ந்த காலம் கி.மு. நான்காம் நூற்றுண்டிற்கு முற்பட்ட தொன்மையுடையதென்பதிற் சிறிதும் ஐயமில்லை.

தமிழிலக்கிய வரலாற்றில் நெடுங்காலமாக வழங்கி வரும் இம்முடிவுக்கு மாறுகத் தொல்காப்பியர் கடைச்சங்க காலத்திற்குப்பின் கி.பி. 4 அல்லது 5-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்தவர் எனப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் தாம் எழுதிய ''தமிழ்ச் சுடர்மணிகள்'' என்னும் நூலிற் பல்வேறு காரணங்களைக் காட்டி முடிவுகட்டியுள்ளார்கள். பிள்ளையவர்கள் தமது கொள்கையினை நிறுவுவதற்குக் காட்டியவை யாவும் ஏற்புடைய காரணங்கள் அல்ல என்பது, அண்ணுமலைப் பல்கலைக்கழக வெளியீடாகிய 'தமிழிலக்கிய வரலாறு—தொல்காப்பியம்' என்ற நூலில் தொல்காப்பியனர் காலம் என்ற தலைப்பில் விரிவாக ஆராய்ந்து விளக்கப் பெற்றுளது.

---

1. தமிழரது பழைய வரலாற்றினைப் பற்றி இறையனர் களவியலுரையிற் கூறப்பெற்ற இம் முடிபுகள் வரலாற்று நூலாசிரியர் ஆராய்ந்து கண்ட சரித்திர முடிபுகளோடு ஒத்திருக்கின்றன வாகலின் இவை வெறுங்கதைகள் அல்ல என்பதனை அருள்மிகு விபுலானந்த அடிகளார் அவர்கள் 'உலக புராணம்' என்னும் கட்டுரையில் தெளிவாக விளக்கியுள்ளார்கள்.
(செந்தமிழ்-தொகுதி. 39. பக்கம் 19-32)
2. தமிழிலக்கிய வரலாறு-இருண்டகாலம். பக். 3.
3. தொல்-செய்யுளியல். 102. 4 தொல்-அகம்-44
5. கற்பியல். 20
6. தமிழ்ச் சுடர் மணிகள். பக்கம் 27-32.
7. சிலப்பதிகாரம்—காடுகாண் காதை.
8. அறிஞர் சதாசிவ பண்டாரத்தார் எழுதிய 'தமிழிலக்கிய வரலாறு-இருண்டகாலம்' பக்கம் 2-4.

ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு.

**சாலை இளந்திரையன்**
*தில்லிப் பல்கலைக் கழகம், தில்லி-7.*



# இருபதாம் நூற்றாண்டில் சிறுகதை

### புதிய சாதனை :

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தோடுதான் தமிழ்ச் சிறுகதையின் வரலாறும் தொடங்குகிறது. இந்தக் குறுகிய காலத்திலேயே, தமிழ்ச் சிறுகதை, இலக்கியத்தின் மற்ற எல்லாத் துறைகளையும் மிஞ்சி வளர்ந்துள்ளது.

தமிழ்ச் சிறுகதையின் வரலாற்றை, கால வளர்ச்சிப்படி, மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்: சுமார் 1900 முதல் 1930 வரை உள்ள காலம் அதன் தொடக்க காலம்; 1930 முதல் 1950 வரை உள்ள காலம், சிறுகதை தனி ஓர் இலக்கிய வகையாக நிலைபெற்றுச் சில சாதனைகளையும் புரிந்த காலம்; 1950 முதல் இன்றுவரை உள்ள காலம், முன்னோர் இட்ட அடிப்படையில் சிறு கதை வளமாக வளர்ந்து வரும் காலம்.

இந்தச் சாதனை வரலாற்றில் பத்திரிகைகளுக் கும் பதிப்பகங்களுக்கும் இடம் உண்டு; தமிழக எழுத்தாளர்களோடு ஈழம், மலாயா நாட்டுத் தமிழ் எழுத்தாளர்களுக்கும் பங்கு உண்டு; இந்திய விடுதலை இயக்கத்துக்கும், அதைத் தொடர்ந்து ஏற்பட்ட சமய, சமுதாயச் சீர்திருத்த இயக்கங் களுக்கும், காலப்போக்கில் நம்மிடையே செல் வாக்குப் பெற்ற பல்வேறு பொருளாதாரக் கொள் கைகளுக்கும் இதிலே கணிசமான பங்கு உண்டு.

### தோற்றமும் வளர்ச்சியும் :

இந்தப் பின்னணிகளோடு தமிழ்ச் சிறுகதையின் தோற்றத்தை ஆராயப் புகும்போது, 19-ஆம் நூற்றாண்டில் தமிழருக்குக் கிடைத்த ஆங்கிலப் பயிற்சி வாய்ப்பே, தமிழ்ச் சிறுகதை ஆக்க வரலாற்றின் முதல் துடிப்பாகத் தோன்றுகிறது. ஆங்கில மொழியில் சிறப்பிடம் பெற்றுவந்த சிறு கதை இலக்கியத்தை நம்மனோர் அறிந்தபோது, ''அந்த இலக்கிய வகையைத் தமிழிலும் உண் டாக்க வேண்டும்'' என்ற ஆர்வம் அவர்களுக்கு இயல்பாகவே ஏற்பட்டது. இவ்வாறு தோன்றிய ஆர்வம் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலே தான் ஒரு தெளிவான வடிவத்தைப் பெற்றது.[1] வரகநேரி வேங்கட சுப்பிரமணியன் என்னும் திரு. வ. வே. சு. அய்யரே (1881-1925) இத்துறை யில் முதன் முயற்சியைச் செய்தவர். அவருடைய 'மங்கையர்க்கரசியின் காதல்' என்னும் புத்தகம் தான் தமிழில் வெளிவந்த முதல் சிறுகதைத் தொகுதி.

இவ்வாறு கூறும்போது 18-ஆம் நூற்றாண் டில் வீரமா முனிவர் எழுதிய 'பரமார்த்தகுரு கதை' என்னும் தொகுதியையும், 19-ஆம் நூற்றாண்டில் வெளிவந்த ஈழநாட்டுச் சந்தியாகோ சந்திரவர்ணம்பிள்ளையின் 'கதாசிந்தாமணி'

(1875)யையும்,[2] வீராசாமிச் செட்டியாரின் 'விநோதரச மஞ்சரி' (1877)யில் உள்ள சில சுவையான கதைகளையும்,[4] பின்னர் வந்த திருமணம் செல்வக் கேசவராயரின் 'அபிநவக் கதைகளை'யும்[5] நாம் மறந்துவிடவில்லை. ஆயினும், 'சிறுகதை என்னும் புதிய இலக்கிய வகையை உருவாக்குகிறோம்' என்னும் உணர்வுடன் இந்த ஆசிரியர்கள் எழுதவில்லை என்பதை நாம் மனத்திற் கொள்ள வேண்டும். வ. வே. சு. அய்யரின் காலத்திலேயே அ. மாதவய்யா, இராமானுஜலு நாயுடு, சுப்பிரமணிய பாரதியார் முதலியோரும் கதைகள் எழுதி வந்தார்கள். அவர்களும் வ. வே. சு. அய்யர் பெற்ற அளவு இத்துறையில் வெற்றி பெறவில்லை.

''வ. வே. சு. அய்யரவர்களின் சிறுகதைகள் மிகவும் உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தவை. அவர் தமது படைப்புக்களில் மனிதனின் மேதையை, தெய்வீகத் துயரத்தை, வீரத்தைக் காண்பிப்பதில் களித்தார். அவர் மனம் இலட்சியத்தை உருவாக்குவதில் ஒன்றியது.... ஆனால் மனிதனின் சிறுமைகளை, தப்பிதங்களை, அதில் அவன் நாடும் வெற்றியை இலக்கியமாக உருவாக்குதற்கு, நல்ல கலைத்திறமையுடன் சித்தரிப்பதற்கு வெகு காலம் சென்றது.'' இந்தக் குறையைப் போக்கிய சிறுகதை இலக்கிய எழுச்சி 1930 வாக்கில் தான் ஏற்பட்டது.

அந்த எழுச்சியும் உடனடியாகப் பெரும்பயன் விளைத்தது என்று சொல்ல முடியாது, கல்கி, எஸ். வி. வி. போன்ற சிலர் 'இயல்பும் இயல்பல்லாததும் கலந்த நெறி'யில் எழுதி, சிறுகதையை நகைச்சுவைக்கும் பொழுதுபோக்குக்குமாகப் பயன்படுத்தினார்கள். அவர்கள் அதனை ஒரு பிரச்சாரக் கருவியாகக் கையாண்டதும் உண்டு.

**சிறப்பான சிறுகதை :**

இதன் பிறகுதான் தமிழ்ச் சிறுகதை புதிய இலக்கியத்துக்குரிய யதார்த்தத் தன்மையும் தனக்கென்று ஒரு தனித்தன்மையும் பெற்றது. இந்த நிலையை உருவாக்கியவர்களில் புதுமைப்பித்தன், பி. எஸ். இராமையா, நாரண துரைக்கண்ணன், கு. ப. இராசகோபாலன், ந. பிச்சமூர்த்தி முதலியோர் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் காலத்திய சமூகத்தின் பிரச்னைகளையும் பாத்திரங்களையும் யதார்த்த நோக்கிலேயே அணுகிச் சித்தரித்தார்கள். ஆயினும், ஒரு 'புத்திலக்கியத் துறையின் சாதனை மனிதர்' என்னும் பெருமை புதுமைப்பித்தனுக்குக் கிடைத்த அளவு மற்றவர்களுக்குக் கிட்டவில்லை. 'வாழ்வுக்குப் பொருள் கொடுப்பதுதான் கலை. சிறுகதை, வாழ்வின் பல சூட்சமங்களையும் எழுத்தில் நிர்மாணித்துக் காண்பித்தது' என்று புதுமைப்பித்தன் கூறும் இலக்கணத்துக்கு இலக்கியமாக அமைந்தன அவருடைய படைப்புக்கள்.

இந்தச் சிலருடைய படைப்பு வீச்சு சுமார் இருபது ஆண்டுக் காலத்துக்கும் மேலாகத் தமிழ்ச் சிறுகதைத் துறைக்கு ஊட்டமளித்து வந்தது. இவர்களுட் சிலர் இன்றும் நம்முடன் வாழ்ந்து வருகிறார்கள். இவர்கள் தவிர மௌனி, சிதம்பர சுப்பிரமணியன், செல்லப்பா, தி. ஜ. ரங்கநாதன், த. நா. குமாரசாமி முதலியோரும் அவ்வப்போது சில சிறந்த கதைகளைப் படைத்தார்கள்.

**புதிய ஆசிரியர்கள் :**

இந்த எழுத்தாளர்களின் படைப்பு வேகமும் பத்திரிகைகளின் ஆதரவுமாகச் சேர்ந்து தமிழில் புதிய சில சிறுகதை ஆசிரியர்களை உருவாக்கின. அவர்களுள் சோமு, விந்தன், தி. ஜானகிராமன், கு. அழகிரிசாமி, அகிலன், மகதூம் முதலியவர்களையும் ஈழநாட்டின் சி. வைத்திலிங்கம், இலங்கையர்கோன் ஆகியோரையும் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும். இவர்கள் (1930 முதல் 1950 வரை) சிறுகதையை எத்தனையோ விதங்களில் வாழ்க்கை விமரிசனமாகப் பயன்படுத்தியுள்ளார்கள்.

'என் கதைகளின் பொதுத்தன்மை நம்பிக்கை வறட்சி' என்ற தமது கதைகளைப்பற்றிக் கூறியுள்ளார் புதுமைப்பித்தன். ஆனால் இதுபோன்ற எதிர்மறைத் தன்மை, சிறந்த இலக்கியப் படைப்புக்கு அடிப்படையாக இருக்க முடியாது. அவர் கூறிய தன்மை அவருடைய பல கதைகளில் அடிச்சரடாக ஓடுகிறது என்பது உண்மையே. ஆனால், அதை மீறிக் கொண்டு எழுத்துக்கு எழுத்து பொங்கித் ததும்பும் யதார்த்தத் தன்மையே—எதையும் நேர்நின்று சரியாகப் பார்த்துக் கணித்துக் கணித்த படியே யாருக்கும் எதற்கும் தயங்காமல் சொல்லி விடும் இலக்கிய நேர்மையே—அவருடைய படைப்புக்களின் தனித்தன்மையாக உள்ளது. சமுதாயத்தைப் பல்வேறு கோணங்களில் நின்று அலசி ஆராயும் 'கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும்' பலகாலமாகக் கட்டிக் காக்கப்பட்ட நம்பிக்கைக்கு எதிராகக் குரல் எழுப்பும்; 'சாபவிமோசனம்', சமூகக் கட்டுப்பாட்டுக்கு எதிராக எழுந்து குமுறும்; 'வழி', பத்தினித் தருமத்தையே மாற்றிச் சமுதாயத்தை இராட்டினம் சுழற்றும்; 'பொன்னகரம்' தத்துவ விசாரணையில் இறங்கி அங்கும் ஒரு புதுமைப் புதிரைக் காட்டும்; 'காலனும் கிழவியும்'; நினைவுப்பாதைக் கதைகள் என்று சொல்லத்தக்க 'கயிற்றரவு', 'செல்லம்மாள்', 'நினைவுப்பாதை' முதலான அவருடைய கதைகள்[7] ஒவ்வொன்றும், சிறுகதைக்கெனச் சொல்லப்பட்ட இலக்கணங்களை உடைத்தெறிந்து தனக்கெனத் தனி உருவம் அமைத்துக்கொண்டு படிக்கப் படிக்கப் புதுமை தருகிறது.

பி. எஸ். இராமையாவின் கதைகள் தற்காலச் சூழல் என்ற திரையில் இலட்சியப் பாத்திரங்களைக் கொண்டு தீட்டப்பட்ட உருக்கமான சித்திரங்கள். 'தழும்பு', 'வீராசாமி கௌசிக்', 'அடிச்சாரைச் சொல்லியழு' முதலியன இவருடைய போக்குக்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்கள். 'குங்குமப்பொட்டு குமாரசாமி' என்ற ஒரே பாத்திரத்தை வைத்து இவர் எழுதியுள்ள சுவையான கதைகளும் சிறப்பானவை.

காதல், குடும்ப வாழ்க்கை, அவற்றில் ஏற்படும் ஒருவகையான நிறைவேருத ஏக்கம் என்னும் பொருள்களேயே பல்வேறு கோணங்களில் சித்தரித்தவர் கு. ப. இராசகோபாலன். 'பண்ணேச் செங்கான்', 'புரியும் கதை', 'திரை' முதலியன கருத்துக்கேற்ற புதுமையும் நளினமும் வாய்ந்த நடையில் எழுதப்பட்ட சிறந்த சிறுகதைகள். சிறுகதையின் உத்தி, உருவம் ஆகியவற்றில் இவரும் பல சோதனைகளைச் செய்தார். மறைகவர்ச்சி ('சஸ்பென்ஸ்') என்னும் ஒரே உத்தியை முக்கியமாகக் கொண்டு சிறப்புற அமைந்துள்ளது 'விடியுமா?' என்னும் இவரது சிறுகதை.

### சமுதாய மாற்றத்தால்.........

சமுதாய மாறுதல் இலக்கியத்தையும் நேரடியாகவே பாதிக்கிறது என்பதற்குத் தமிழ்ச் சிறுகதை வரலாறும் சிறந்த எடுத்துக்காட்டாக உள்ளது. மேலே நாம் குறிப்பிட்ட ஆசிரியர்கள் எழுதி வந்த காலம் இந்திய வரலாற்றில் (ஏன், கிழக்காசிய வரலாற்றிலேயே) முக்கியமானதொரு காலம். நம் அரும்பெரும் பழமைகளைப்பற்றி ஒரு புதிய நோக்கோடு நாம் சிந்திக்கத் தொடங்கிய காலம் அது. இந்த நோக்குக்கு ஆங்கில ஆதிக்கம் எதிர்மறைத் தூண்டுதலாக நின்றது; தேசீய, காந்திய இயக்கம் உடன்பாட்டுத் துணையாக நின்றது.

''ஒருவகையான போலித்தனம் நமது வாழ்வின் எல்லா அமிசங்களேயும் அரித்துவிட்டதால், வாழ்வின் அடிப்படை நோக்கமே நமக்கு விளங்கவில்லை'' என்னும் உண்மை இந்தக் காலக்கட்டத்திலேதான் நமக்குச் சிறிது சிறிதாகப் புலப்படத் தொடங்கியது. மக்கட்சமுதாயம், அதன் உண்மையான நோக்கம், அதை மூடிக் கிடக்கும் போலித்தனம்—என்னும் இவை, கு. ப. ரா., பி. எஸ். இராமையா போன்றோர் கதைகளில் மேலோட்டமாக விவரிக்கப்பட்டன; இராசகோபாலாச்சாரியார், அறிஞர் அண்ணுத்துரை முதலியோர் கதைகள் அவரவருடைய அரசியல் கோட்பாடுகளுக்கேற்ற முறையில் ஆராயப்பட்டன; புதுமைப்பித்தன் மட்டுமே, தனிமனிதன் சமுதாயத்தின் ஓர் உறுப்பினனே என்ற ஓர்மையுடனும் தெளிவுடனும் சிறுகதைகளைப் படைத்தார். ''புதுமைப்பித்தனிடமிருந்த 'மன உணர்ச்சிகளை மடக்கிக்கொண்டு வரும் சக்தி' மற்றவர்களிடம் குறைவாகவே இருந்தது''. நெல்லை மாவட்டத்தின் மனிதர்களேயும் அவர்களின் பேச்சுத்தமிழையும் 'அச்சடையாளமாக'ச் சிறுகதையில் கொண்டுவந்த முதல்வரும் இவரே.

அடுத்த காலக்கட்டம் தொடங்கும்போது, சமுதாயத் தற்பரிசோதனை ஒருவகையில் நெறிப்பட்டு விட்டது. அரசியல் அடிமைத்தனம் நீங்குவதற்கான முன்னறிவிப்புக்கள் தோன்றவே, பொருளாதார நோக்கு நமது பார்வையின் முக்கிய அம்சமாக உருவாயிற்று. இதன் பிரதிநிதியாக விளங்கும் சிறுகதை ஆசிரியர் விந்தன் என்னும் கோவிந்தன், ஓர் அங்கதக் குறிப்போடும் அவலம் குளித்த நகைச்சுவையோடும், பொருளாதார வகையில் தாழ்வுற்றும் ஒதுக்கப்பட்டும் கிடக்கும் மக்களின் கதியற்ற வாழ்வைப் பேசு ஓவியங்களாக்கினர். 'ஆபீசாப்பியாசம்', 'மவராசர்கள்', 'சந்தோஷமுடிவு', 'செந்தமிழ் நாட்டிலே' முதலியன இவருடைய பார்வையைத் தெளிவாக விளக்கும் கதைகள்.

இதே காலத்தில், மேம்போக்கான ஓர் இலக்கியச் சுவை உணர்ச்சியும் மக்களிடையே கட்டவிழ்ந்து பெருகியது. பிரச்னைகளின் ஆணிவேரை அணுகாமல், உள்ளதை உள்ளபடியும் சற்றே உவப்பூட்டும்படியும் சித்தரிக்கும் இலக்கிய வகையை விரும்பி நின்றது இந்த உணர்ச்சி. இந்தப் போக்கை ஒட்டி எழுதத் தொடங்கிய பலரில், தமது நுண்ணிய நோக்காலும் எளிய இனிய நடையாலும் ஒரு தனி இடத்தைப் பெற்ருர் அகிலன். ஆண் — பெண் உறவு உணர்ச்சியை விவரிப்பதில், ஒரு நளினச்சுவையும் அனுபவ இன்பமும் உண்டாகுமாறு எழுதினர் இவர். இவர் காதல் கதைகளே எழுதியவர் என்று சொல்லுவோர் உண்டு. அது முற்றிலும் உண்மையன்று. 'கோயில் விளக்கு', 'மனிதர்கள்', 'பூச்சாண்டி' முதலியவை காதல் எல்லைக்கு வெளியே படர்ந்த இவருடைய கதைகள்.

### பிரச்சாரக் கதைகள் :

இதற்குச் சற்று முன்பின்னுன காலத்தில் சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம், ஆகியவற்றின் ஆக்கம் தமிழ்ச் சிறுகதையிலும் ஒரு மாறுதலை ஏற்படுத்தியது. அறிஞர் சி. என். அண்ணுத்துரை, டி. கே. சீனிவாசன், கலைஞர் மு. கருணநிதி ஆகியோர் தங்கள் நோக்கில் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களேச் சிறுகதையில் புகுத்தினர்கள். இவர்கள் கருத்துப் பிரச்சார அளவில் பெற்ற வெற்றியைக் கலையாக்கம் என்ற அளவிலும் பெற்றமை பாராட்டுக்கு உரியது. அறிஞர் அண்ணுத்துரையின் 'சுடுமூஞ்சி', 'உண்ணுவிரதம் — ஒரு தண்டனை' போன்ற சில கதைகள் என்றும் நினைவில் நிற்கத்தக்க வடிவ வளர்ப்புப் பெற்றவை.

### சிறுகதை ஆசிரியர் சிலர் :

தஞ்சைத் தமிழைச் சிறுகதைக்குக் கொண்டு வருவதில் வெற்றி பெற்றவர் தி. ஜானகிராமன். தஞ்சைப் பேச்சுமொழியோடு யதார்த்தநிலைச் சித்திரிப்போடும், ஒன்றிரண்டு பாத்திரங்களை இலட்சிய எல்லைக்குத் தூக்கிவிடுவது இவருடையபோக்கு. மனிதனைச் சமுதாயத்தின் ஓர் அமிசமாகக் காண்பதை விட, அவனுடைய தனித்துவத்தை விமரிசிக்கும் போக்கே இவரிடம் அதிகம். 'சிலிர்ப்பு', 'சத்தியமா!', 'நடேசண்ணு' முதலியன அவருடைய சிறந்த கதைகள்.

மனவோட்டத்தின் பல்வேறு அமிசங்களை விரிவாகச் சித்திரிக்கும் போக்கைக் கைக்கொள்ளும் சிறுகதையாளர்களில் முக்கியமானவர் லா. ச. இராமாமிருதம். இதில் இவருக்கு ஓரளவு வழிகாட்டியாக சில கதைகளை எழுதியவர் மௌனி. இராமாமிருதத்தின் கதைகள் புவிவாழ்வின் அவல

நிகழ்ச்சிகளுக்கு மிகுவண்ணம் தீட்டி மனித மனத்தில் அவநம்பிக்கையையும் தெய்வ நம்பிக்கையையும் ஊட்ட முனைபவை. ''அவலக்கறை படிந்த இந்த வாழ்விலேயே இன்பத் தளிர்களும் மலர்களும் அங்கங்கே எழுகின்றன'' என்ற கருத்தில் இவர் படைத்த 'பாற்கடல்' இவருடைய சிறந்த கதைகளில் ஒன்று.

**சீர்திருத்தச் சிறுகதைகள் :**

1950வாக்கில் தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் மற்றோர் அலை எழுந்தது. இந்த அலையை எழுப்பிய காலச்சூழ்நிலை கவனிக்கத்தக்கது. நாடு சுதந்திரம் பெற்றுப் புதுப்புதிய திட்டங்கள் உருவாகிக் கொண்டிருந்த காலம் இது. பிற்போக்குச் சக்திகள் தங்கள் முழு ஆற்றலையும் ஒன்று திரட்டி முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டைபோட முன் நின்ற காலமும் இதுவே. அரசியல் கட்சிகளும், சமய சமுதாய இயக்கங்களும் இந்தப் போரில் ''பலப்பரீட்சை'' பார்க்க முனையவே, இவற்றோடு சார்ந்தும் சாராமலும் நின்ற இலக்கியவாணர்களும் களத்தில் தள்ளப்பட்டார்கள்.

தமிழகத்துப் 'பெரிய' பத்திரிகைகளின் 1950-60 காலத்திய இதழ்களைப் புரட்டிப் பார்த்தால், சமுதாயப் புதிய சீர்திருத்தங்களை, குறிப்பாகக் குடும்பக்கட்டுப்பாடு, பெண்கள் அலுவல் பார்ப்பது, படித்த பெண்கள் பொதுத்தொண்டுகளில் ஈடுபடுவது என்பன போன்ற கொள்கைகளைக் கிண்டல் செய்தும் கண்டித்தும் எழுதப்பட்ட கதைகளையே அதிகமாகக் காண முடிகிறது. இதற்கு நேர் எதிராக, முற்போக்குப் பத்திரிகைகள் என்னும் 'சிறிய' பத்திரிகைகள் இந்தத் திட்டங்களை ஆதரிக்கும் படைப்புக்களையே வெளியிட்டு வந்துள்ளன.

இந்த மோதலைத் தத்தம் போக்கில் ஆழ்ந்து கருத்துத் தெரிவிப்பவர்களாகச் சில எழுத்தாளர் தோன்றினர்கள். தமிழகத்துச் சுந்தர இராமசாமி, ஜெயகாந்தன், நா. பார்த்தசாரதி, ஜே. எம். ஹுசைன், டி. செல்வராஜ், வையவன், கர்ணன், ஆர் சூடாமணி, எஸ். லட்சுமி சுப்பிரமணியன் முதலானேரும் ஈழத்து வ. அ. இராசரத்தினம், செ. கணேசலிங்கன், டொமினிக் ஜீவா, கே. டானியல், எஸ். பொன்னுத்துரை முதலானேரும் இந்த எழுச்சியில் உருவானவர்கள்.

**தனி மனிதனுக்கு :**

அண்மைக்காலத்தில் இவர்களில் பெரும்பாலோரிடத்தில் ஒரு பெரிய மாறுதல் காணப்படுகிறது[11]. மனிதனைச் சமுதாயத்தின் ஓர் உறுப்பாகப் பார்த்து, சமூக மாறுதல்களுக்கு அவன் உள்ளத்திலும் வாழ்விலும் எழும் எதிரொலியைப் பதிவுசெய்த இவர்கள், தனிமனித முனைப்பு, மனிதனின் சுதந்திரம் என்ற போக்குகளுக்கு முதன்மையளித்தும் சமூகத்திலிருந்து அவனைத் தனிப்பிரித்தும் வருகிறார்கள். இந்தச் சரிவிலிருந்து தப்பியவராகக் காணப்படுபவர் ஈழத்து எஸ். பொன்னுத்துரை ஒருவரே.

ஜெயகாந்தனின் 'யுகசந்தி', 'புதிய வார்ப்புக்கள்', 'யாருக்காக அழுதான்?' போன்ற கதைகளில் கிடைத்த ஒரு புதிய சித்திரம் அவருடைய பிற்காலக் கதைகளில் கிடைக்கவில்லை. '' (முன்பு) அவர் சித்தரித்த மனிதநிலைகள் பிரச்சினையின் சின்னங்களாக விளங்கின. ஆனல் இப்பொழுதோ சமூகநெறிப் பிறழ்வு காரணமாகத் தனிமனித வாழ்வில் ஏற்படும் அவலமே முக்கியமாகச் சித்திரிக்கப்படுகின்றது[12]''.

இப்போது சில ஆண்டுகளாக வேறு சிலரும் சிறுகதைத் துறைக்கு வந்துள்ளார்கள் : 'காலை முதல்' எழுதிய கிருஷ்ணன் நம்பி, 'கதவு' எழுதிய இராஜநாராயணன், ஆ. மாதவன், ஈழத்துக் கே. வி. நடராசன், செம்பியன் செல்வன் ஆகியோர் இவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள். கே. வி. நடராசனின் 'யாழ்ப்பாணக் கதைகள்' என்னும் தொகுதியில் உள்ள 'விடிவு' என்னும் கதை ஒரு முதியவளின் உணர்வோட்டமாக விரிந்து, தற்காலத்திய சமுதாயச் சிந்தனை, செயல்முறை ஆகியவற்றின் அருமையான விமரிசனமாக மலர்ந்துள்ளது.

**முடிவுரை :**

சமுதாயத்திற்குப் போலவே, இலக்கிய வகைகளுக்கும் உயர்ந்த காலம் தாழ்ந்த காலம் என்பவை உண்டு. தமிழ்ச் சிறுகதையின் கடந்த அறுபது ஆண்டு வரலாற்றைக் கூர்ந்து நோக்குகையில், அதன் இரண்டாவது காலக்கட்டம் (1930 முதல் 1950 வரை) தலையோங்கி நிற்பது போலத் தெரிகிறது. அதே சமயம், கடந்த பதினைந்து ஆண்டுகளில், சிறுகதை புதுப்புதிய திசைகளில் கொடிவீசிப் படர்ந்து தனது வகையைப் பரப்பை விரித்துக் கொண்டுள்ளது. அந்தப் பெரும்பரப்பில், உத்தியாலும் உருவத்தாலும் வெவ்வேறு தன்மை காட்டும் சிறுகதை மலர்கள் பல அங்கங்கே பூத்துக் குலுங்குவதையும் பார்க்கிறோம்.

---

1. மு. வரதராசன்: இலக்கிய மரபு (1960), 618
2. கா. மு. இரத்தினம்: நூற்றாண்டுகளில் தமிழ் (1961), 147
3. கனகசெந்திநாதன்: ஈழத்து இலக்கிய வளர்ச்சி (1964), 29
4. மயிலை சீனி வேங்கடசாமி: 19-ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் (1962), 396
5. புதுமைப்பித்தன்: கட்டுரைகள் (1951), 26
6. புதுமைப்பித்தன்: கட்டுரைகள் (1951), 39
7. க. நா. சுப்பிரமணியன்: விமரிசனக்கலை (1959), 6
8. சாலை இளந்திரையன்: சிறுகதைச் செல்வம் (1966), 24
9. சி. ரகுநாதன்: இலக்கிய விமர்சனம்(1956), 98
10. கனகசெந்திநாதன்: ஈழத்து இலக்கிய வளர்ச்சி (1964), 32
11. சாலை இளந்திரையன்: தமிழில் சிறுகதை (1966), 146
12. கா. சிவத்தம்பி: தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும் (1967), 137

நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று.

காரைக்குடி-கவிஞர் முடியரசன்




## எழுச்சிக் காலம் :

இருபதாம் நூற்றாண்டைத் தமிழ்க் கவிதைக்கு ஒரு நற்காலம் என்றே கூறலாம். கவிதைக்கு நல்ல மதிப்பும், நயத்தக்க வரவேற்பும், இந்நூற்றாண்டில் இருப்பதைக் காண்கிறோம். நாளிதழ், கிழமையிதழ், திங்களிதழ், ஆண்டு மலர் முதலிய அனைத்திலும் கவிதைக்கு முதன்மை தரப்படுவதால் அக்கூற்று மெய்ப்பிக்கப்படுகிறது. மேலும் தமிழகத்தின் ஊர்தோறும் நிகழும் இலக்கிய விழாக்களிலும், வானொலியில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சிகளிலும் கவியரங்கம் தனியிடம் பெறுகிறது.

கவிதையில், ஒரு தனியார்வம் பிறந்திருப்பதால் தக்காரும் எழுதுகின்றனர்; மற்றோரும் முயல்கின்றனர். அதனால் இந்நூற்றாண்டில் கவிதை எழுதுவோர் தொகை பெருகுவதைக் காண்கின்றோம். இவருட் சிலர், கவிஞர்களாகவும், பலர் கவிதை எழுதுவோராகவும் புலனாகின்றனர். எவ்வாறாயினும் இந்த நூற்றாண்டைக் கவிதைக்கு ஓர் எழுச்சிக் காலம் என்று துணிந்து கூறலாம்.

## விடுதலைக் கவிதைகள் :

இந்நூற்றாண்டில் கவிதைகளைப் பொதுப்பட நோக்கின், அனைத்தும் விடுதலை வேட்கை காட்டுவனவாக, உரிமையுணர்வு ஊட்டுவனவாக அமைந்து கிடப்பதைக் காணலாம். அயலவர் ஆட்சியில் அடிமைப்பட்டுக் கிடந்த நாடு விடுதலை பெறப் பிறமொழிச் சூழ்நிலையில் சிக்கித் தவித்த தாய்மொழி தன்னுரிமை பெற, ஆண்களுக்குப் பெண்கள் அடிமைகள் என்ற மனப்பான்மை ஒழிந்து, அவர்களும் சரி நிகர் சமமாய் வாழப் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் சமப்படுத்தப் பட்டு, மேல், கீழ் என்ற பேதமை துடைக்கப் பட்டு, ஒன்றே குலம் என்ற ஒருமைப் பண்பு வளர்ந்து, சமுதாயம் விடுதலை பெற்றொளிர வழி வகை கூறுவனவாக, உணர்ச்சியும், எழுச்சியும் கலந்த ஆர்வத்தால் உந்தப்பட்டு வெளிவந்தனவாக இக்கவிதைகள் காட்சியளிக்கின்றன. பாரதியாரின் கவிதைகள் முதல் இன்று தோன்றியுள்ள கவிதைகள் வரை நாட்டுவிடுதலை, மொழிவிடுதலை, சமுதாய விடுதலை என்ற விடுதலை வேட்கைப் பாடல்களாகவே அவை அமைந்து கிடக்கின்ற உண்மையை வெள்ளிய அறிவினரும் தெள்ளிதின் உணர்வர்.

## மூவகைக் கவிதைகள் :

மேற்கூறிய விடுதலைப் பாடல்களேயன்றி, வேறு பிற பொருள் பற்றிய பாடல்களும் இந்த நூற்றாண்டில் வெளிவந்துள்ளன. ஆயினும், விடுதலைப் பாடல்களே, மக்கள் மன்றத்தில் மிகுதியும் இடம்

பெற்றுவிட்டன. காலமும், சூழ்நிலையுமே அந் நிலையை உருவாக்கின என்னலாம். அனைத்தையும் ஒன்றுகூட்டி, கருத்து முறையாற் கவிதைகளைமூன்று வகைப் படுத்தலாம். அவையாவன: பழைமை யைப் பின்பற்றுவன, புதுமையை எதிர் நோக்கிச் செல்வன, பழைமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைவன என்பனவாம். எடுத்துக் காட்டாக ஒன்றிரண்டு காணலாம்.

நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் எழுதிய 'மாரிவாயில்', டாக்டர் வ. சுப. மாணிக்கம் எழுதிய 'கொடைவிளக்கு' முதலிய நூல்கள் பழைமையைப் பின்பற்றுவன. இவ்வணியில் செகவீர பாண் டியனர், கா. நமச்சிவாய முதலியார், கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை, செய்குத்தம்பிப் பாவலர் போன்றவர் தம்கவிதைகள் சேரும். பாரதியார், பாரதிதாசன் முதலியவர்களுடைய கவிதைகள் புதுமையை நோக்கிச் செல்வன. திரு. வி. கலியாணசுந்தரனர், சுத்தானந்த பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, ராய. சொக்க லிங்கனர், வி. துரைசாமி முதலானோர் கவிதைகள் இருமைக்கும் பாலமாக அமைவன.

இனி, மொழிநடை, யாப்பு இவற்றால் நோக் கினும் அக்கவிதைகள் முத்திறத்தனவாகவே பாகு படும். அருஞ்சொற்கள் ஆர்ந்து, யாப்பமைவு நேர்ந்து, மரபு வழியில் நிற்பன ஒரு திறத்தன. எளிய சொற்களை ஏற்று, யாப்பமைவு சிறிது மாறி, மரபுஞ் சிறிது பிறழ்ந்து வருவன மறு திறத்தன. கொச்சை மொழி குலவி, யாப்பமைவு காணது, மரபை மறந்து செல்வன மூன்றாந்திறத் தன.

**கவிதை நூல் வகைகள் :**

இனி, இந் நூற்றாண்டில் தோன்றியுள்ள கவிதை களை, நூல் வகையால் நோக்கின், தனி நிலைச் செய்யுள், தொடர் நிலைச் செய்யுள், நாடகக் காப்பியம், குழந்தை இலக்கியம், இசைப் பாடல் கள் என ஐந்து பிரிவினவாகப் பிரிக்கலாம். தனி நிலைச் செய்யுள் என்பது தனித்தனிப் பாடல் களின் தொகுப்பாகும். இத்தொகுப்பு நூல்களே இக்காலத்துப் பல்கி வரக் காண்கின்றோம். தொடர் நிலைச் செய்யுளாகிய காப்பிய நூல்கள், தொகுப்பு நூல்கள் தோன்றும் அளவுக்குத் தோன்றவில்லை. அத்துறை தக்கார்க்கே கைவரப் பெறும் என் பதாற் போலும்.

காப்பியங்கள், விரல்விட்டு எண்ணும் அளவுக்கே தோன்றியுள்ளன. பாஞ்சாலிசபதம் (பாரதியார்), பாண்டியன் பரிசு, குறிஞ்சித்திட்டு (பாரதி தாசன்), இராவண காவியம் (புலவர் குழந்தை), சான்றாண்மை (அடிகளாசியர்), அவனும் அவளும் (வெ. இராமலிங்கம் பிள்ளை), மேகநாதம் (எஸ். கே. இராமராசன்), மாங்கனி (கண்ணதாசன்), பூங்கொடி, வீரகாவியம் (முடியரசன்) என்றின் னோரன்ன காப்பியங்களே வெளி வந்துள்ளன. இவற்றுள்ளும் கால வெள்ளத்தால் எவை எவை இழுத்துச் செல்லப்படுமோ? எவை எவை காலத் தைத் தாண்டி நிற்குமோ? அறியோம்.

நாடகக் காப்பியங்களைப் பொறுத்த வரையில் இந்நூற்றாண்டில் நாம் ஒன்றுங் கூறவியலா நிலையிற்றான் உள்ளோம். இத்துறையைப் பற்றிக் கவிவாணர்கள் சிந்திப்பதாகத் தோன்றவில்லை. தனிச் செய்யுளில் ஏற்பட்ட ஆர்வமும், காலம் நீளுமே என்ற அச்சத்தால் தோன்றிய பொறுமை யின்மையும் அதற்குக் காரணங்களாக இருக்கக் கூடும்.

குழந்தைகளுக்காகப் பாடப்படுகின்ற பாடல் கள் நூல் வடிவிற் சில வந்துள்ளன. பேராசிரியர் மயிலை சிவ. முத்து, பாவலர் பாலசுந்தரம், தமிழண்ணல், அழ. வள்ளியப்பா, நாக. முத் தையா, நாரா. நாச்சியப்பன், இரா. இராச கோபாலன், இரா. பொன்ராசன் முதலிய கவி வாணர்கள் குழந்தை இலக்கியங்கள் புனைந்து, பெருந்தொண்டாற்றி வருகின்றனர். இத்துறை யில் பாரதியார் வெற்றி வீரராகக் காட்சி தருகின் றார். கவிமணி, அவரையும் விஞ்சி நிற்கின்றார். இவர்களைப் போன்ற பழுத்த நல்லறிவாளர் இத் துறையில் ஈடுபடுவாராயின், நல்லுலகில் நாம் வாழ முடியும்.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, பாபநாசம் சிவன், சுத்தானந்த பாரதியார், முடியரசன் போன்றோர் இசைப் பாடல்கள் பல புனைந்துள் ளனர். இவை இசைப் பாடலுக்கேற்ற மரபு, வடிவம் உடையனவாக அமைந்துள்ளன. திரைப் படத் துறையில் வரும் இசைப் பாடல்கள் பெரும் பாலான, கவிதைத் தன்மை குறைந்து, வடிவின்றி, மரபின்றி, மின்மினிகள் போலப் பளிச்சிட்டு உலா வருகின்றன.

**பரம்பரை உணர்வு :**

இலக்கியப் பரம்பரையுணர்வு, கவிஞர்களிடத்து மிளிர வேண்டிய இன்றியமையாத ஒரு பண் பாகும். தொன்று தொட்டு வளர்ந்து வரும் கவிஞர் பரம்பரையில் நானும் ஒருவன் என்ற எண்ணம் இருந்தாற்றான் கவிஞன் சிறப்பெய்த முடியும். முந்தையரை மதிக்காத கவிஞனும், தந்தையைப் பேணாத தனயனும் ஒரு நிலையினரே. வாழையடி வாழை என வந்த திருக்கூட்டம் என் னும் நினைவு கவிஞனுக்கு வேண்டும். அப்பரம் பரையுணர்வைப் பாரதியாரிடம் பரக்கக் காண லாம்; பாரதிதாசனிடம் சிறக்கக் காணலாம்; பாரதிதாசன் பரம்பரையினரிடம் நிரம்பக் காண லாம்.

> ''யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
> வள்ளுவர்போல் இளங்கோ வைப்போல்
> பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
> உண்மைவெறும் புகழ்ச்சி யில்லை''

என்ற பாடல் வரிகளால் பாரதியார், முன்னைப் புலவர்களிடத்தில் வைத்திருந்த நன்மதிப்பும், பரம்பரையுணர்வும் தெளிவாக்கப்படுகின்றன.

பாரதிதாசன், பாரதிக்குத் தாசன் எனப்பெயர் வைத்துக் கொண்டமை ஒன்றே, அவரிடத்து

மிளிரும் பரம்பரை யுணர்வை எடுத்துக் காட்டும். மேலும்,

'திங்களைக் கண்ணிலான் சிறப்புறுத் தல்போல்
பாரதிப் புலவனைப் பற்றிச் சிற்சில
கூறுவேன் ..................''

என்று பாரதிதாசன் பாடுகின்றார். பெருமிதத்தின் திருவுருவமாக விளங்கிய பாரதிதாசன் பாடும் இவ் வரிகளால் அவர்தம் அடக்கவுணர்வும் பரம்பரை யுணர்வும் புலனாகின்றன.

'பாட்டுக்கொரு புலவன் பாரதியடா—அவன்
பாட்டைப் பண்ணோ டொருவன் பாடினானடா
கேட்டுக் கிறுகிறுத்துப் போனே னேயடா'

என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பாடும் முறையால் பாரதிபால் அவர் கொண்டுள்ள ஈடு பாட்டை நம்மால் உணர முடிகிறது.

**கவிதையும் இலக்கணமும் :**

பாரதியார், பாரதிதாசன் போன்ற கவிஞர்கள் பாடல்களில் இலக்கணம் மதித்துப் போற்றப் பட்டாலும் வளர்ந்து வரும் கவிஞர்கள், வளர்ந்து விட்டதாக எண்ணிக் கொண்டிருக்கும் கவிஞர் கள் எழுதிய பாடல்களில் இலக்கணம் எள்ளி நகையாடப்படுகிறது. இலக்கணம் வேண்டுவதில்லை என்றே வாதிடவும் படுகிறது. கல்லார் பலராகிக் கவிதையுலகில் உலா வருதலால், நேர்ந்த விளைவே இது. கல்லாக் கவிஞர், இலக்கணம் வேண்டா வெனும் பொல்லாக் கொள்கை யுடையராகவே இருத்தல் இயல்பு. கல்லார் சொல்லை நல்லோர் ஏலார். என்றுமே வாழ விரும்பும் கவிஞர் இலக் கணத்தைப் புறக்கணியார்.

**கவிதையிற் சொல்லழகு :**

இந்நூற்றாண்டில் தோன்றியுள்ள கவிதைகள், பெரும்பாலும் அனைவரும் எளிதிற் பொருளுணரத் தக்க சொற்களால்அமைந்தனவேயாகும்.இதற்குப் பாரதிதான் முன்னோடியாக விளங்குகின்றார். சங்க இலக்கிய நடையிலிருந்து சிறிது சிறிதாக இறங்கி, எளிமையின் இறுதிக் கட்டத்திற்கே வந்து விட்டது இன்றுள்ள கவிதை நடை. மக்கள் அடிமையில் மூழ்கித் தாய்மொழியை மறந்து, செயலற்றுக் கிடந்த காலம் பாரதியார் காலம். ஆதலின், அவர்களுக்கு ஆவேச வெறியூட்ட, உள் ளத்தில் விடுதலைக் கனலை மூட்டக் கவிதைகளைக் கருவியாக்கிக் கொண்டார் அவர். அதனால் கற் றாரும், மற்றாரும் புரிந்து கொள்ளக்கூடிய, அவர் கள் வாய், தானே பாடக்கூடிய, எளிய நடையமைத்து இசையமைத்துப் பாடினார். பாரதி தாசனும், பிறரும் அவரை அடியொற்றிப் பாடு வதையே குறிக்கோளாகக் கொண்டொழுகினர்.

பாரதியார் எளிய நடையையே வேண்டுபவ ராயினும், கவிதைக்குத் தனிநடை கொண்டவ ராகவே விளங்கினார். அவர்தம் உரைநடையிற் காணப்பெறும் எளிமையின் மிகுதியையும், பிற மொழிக் கலப்பையும் செய்யுள் நடையிற் காண வியலாது. பாரதியார் நடைக்கும், பாரதிதாசன் நடைக்கும் வேறுபாடுண்டு. எளிமையே வேண்டு மென்போர் இதனை நன்கு புரிந்து கொள்ள வேண் டும்.

கவிதை நடை எளிமையின் எல்லைக்கே வந்து விட்டது. இதற்கு மேல் இனிச் செல்லவியலாது. இறங்கிய நடை, இனி நாளுக்கு நாள், படிப் படியாக ஏறியாக வேண்டும். பாரதி மூட்டிவிட்ட மொழி ஆர்வத் தீ எங்கும் பற்றிப் பரந்து, ஒளிவிட் டிலங்குங் காலம் இக்காலம். ஆதலின், அடிமைக் காலத்து வேண்டப்பட்ட எளிமை, உரிமைக் காலத்தும் வேண்டுமெனப் பேசுவது வளர்ச்சியைக் குறிக்காது. எளிமை எளிமை எனப் பெரு முழக் கம் ஒருபாற் கேட்பினும், மற்றொரு பால் அருமையும் வளர்ந்து கொண்டுதான் வருகிறது.

பாமர மக்களுக்காக எளிய நடை வேண்டும் என்போர், எப்பொழுதுமே மக்கள், பாமரராக இருக்க வேண்டுமென்று விழைகின்றனரா? ஊர் தோறும் பள்ளிகள் வேண்டுமென்று பாரதி கண்ட கனவு நனவாகி வரும் இக்காலத்தும் கற்றவர் தொகை பெருகி மற்றவர் தொகை அருகும் இக்காலத்தும் எளிமை வேண்டப்படுவதோ? கற் றவர் தொகை வளர்வது உண்மையாயின் கவிதை நடையும் வளர்வதுதானே முறை? வளர்ச்சிபெற வேண்டிய கவிதையைத் தளர்ச்சிக்கு ஆளாக்குவது நன்றோ? எளிமை வேட்பார், இதனை எண் ணித் துணிக.

நினைக்க — நினைக்க — என்றும் — இனிக்கும் கவிதைக்கு நன்மொழி புணர்த்தலே அழகாகும். ஆதலின், தூய, இனிய, பொருள் செறிந்த, முழுமை பெற்ற தமிழ்ச் சொற்களாலான கவிதை கள் பெருக வேண்டும். வருங்காலத்திற் பெருகி வரும் என்னும் நம்பிக்கை, இந் நூற்றாண்டிலேயே ஒளிவீசத் தொடங்கிவிட்டது.

**ஒளி நல்கும் கவிஞர் கூட்டம் :**

இந்நூற்றாண்டில், கவிதைக்கு எழுச்சியூட்டித் தமிழ் மொழிக்கு ஒளி நல்கிய பாரதியார், கவி யுலகின் விடிவெள்ளி. கவி வெறி கொண்டு, தமிழையே தம் உயிர் மூச்சாகக் கொண்டு, விளங் கிய பாரதிதாசன் அவ்வுலகின் இருளோட்ட வந்த இள ஞாயிறு. அவர்தம் பரம்பரையினராய் வந்து தமிழ் மொழிக்கு மெருகூட்டும் எண்ணற்ற கவிஞர் குழு, அவ்விள ஞாயிற்றின் செங்கதிர்கள்.

பாரதி ஒரு பேராருவி; பாரதிதாசன், பேராருவி யால் தோன்றிய உயிராறு; பரம்பரையினர் அவ் வாற்றிலிருந்து பிரிந்து வளமூட்டும் கிளையாறுகள். பாரதி ஒரு வித்து; பாரதிதாசன், அவ்வித்தில் முளைத்த ஆலமரம்; பரம்பரையினர், அவ்வால மரத்தின் விழுதுகள். பாரிகாதை எழுதிய இரா. இராகவையங்கார், அகலிகை வெண்பா, கோம்பி விருத்தம், சுவர்க்க நீக்கம் போன்ற நூல்களை எழுதிய வெ. ப. சுப்ரமணிய முதலியார், மண் ணியல் சிறுதேர் (உரையும் பாட்டும் கலந்தது)

இயற்றிய பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார், தமிழரசி குறவஞ்சி எழுதிய புலவரேறு வரத நஞ்சைய பிள்ளை, இசைப் பாடல்கள் புனைந்து வரும் அருட்கவி சேதுராமன், சங்கப் பாடல்களை நிகர்த்த பாக்களைத் தந்து வரும் துரை. மாணிக்கம், இல. ம. தங்கப்பா இவரனையார் பலரும் இந்நூற்றாண்டினரே; எனினும், 'நமக்குத் தொழில் கவிதை நாட்டுக் குழைத்தல்' என்னுங் குறிக்கோள் கொண்ட பாரதிதான், புதுமைக் கவிதை யுலகிற்கு முதல் வழிகாட்டி. அவர் காட்டிய வழியிற்றான் பாரதிதாசன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை, சுத்தானந்த பாரதியார், ச. து. சு. யோகி போன்ற கவிஞர்கள் தொடர்ந்து சென்றனர். இவர்கள் நடந்த நெறியில் நூற்றுக் கணக்கான கவிஞர் கூட்டம், தடம் பார்த்து, அடியொற்றிச் சென்றனர்-செல்கின்றனர்.

அக்கூட்டத்துள், வாணிதாசன், சுரதா, பெரி. சிவனடியான், தமிழ் ஒளி, சாமி பழனியப்பன், நாரா. நாச்சியப்பன், மு. அண்ணாமலை, வேழ வேந்தன், பொன்னிவளவன், மீ. இராசேந்திரன், பா. முத்து, இன்னும் இவர் போன்ற பலப் பல கவிஞர்கள் அடங்குவர். ஆயினும், ஒவ்வொரு வகையால் தனித்தன்மை பெற்று விளங்குகின்றன அவர்தம் கவிதைகள். இவர்கள், மக்கள் மன்றத்தில் நூல் வடிவில் அறிமுகமான கவிஞர்கள். நூல் வடிவில் அறிமுகம் செய்யப் பெறாத— ஆனல், உயரிய கவி வளங்கொண்ட கவிமணிகள் நூற்றுக்கணக்கானோர் ஆங்காங்கே மறைந்து கிடக்கின்றனர். இவர்கள் கவியரங்கம் பலவேறிக் கணக்கற்றோர் பாராட்டுதல்களைப் பெற்றவராவர். அவருள் குறிப்பிடத்தக்கார் தமிழண்ணல், ஈரோடைத் தமிழன்பன், வாணியம்பாடி அப்துல் ரகுமான் என்பவராவர். இன்னும் எத்துணையோ பேர் உளர்.

இவர்களைத் தவிரக் கவிதையுலகில், தனிநெறி வகுத்துக் கொண்ட பூ. அமிர்தலிங்கன், கே. ஆர். அரசப்பன், சோமு, சாலை இளந்திரையன், தமிழழகன், சிதம்பர ரகுநாதன், அரு. சோமசுந்தரம், ரெ. முத்துக் கணேசன் போன்ற பற்பல கவிஞர்கள் கவிதைகள் புனைந்து தமிழன்னைக்குக் காணிக்கை செலுத்தி வருகின்றனர்.

கவிதை வடிவில், தன் வரலாறு புனைவது பாரதி காட்டிய ஒரு புது நெறியாகும். அந்நெறியில் சுயசரிதை என்ற பெயரில், கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரம் பிள்ளை, கவிதை நூல் ஒன்று யாத்தளித்துள்ளார்; பல மொழிபெயர்ப்புக் கவிதைகளும் ஆக்கியுள்ளார். திரைப்படத் துறையில் பாபநாசம் சிவன், உடுமலை நாராயண கவி, பட்டுக்கோட்டை கலியாணசுந்தரம், கண்ணதாசன் முதலியோர் புனையும் இசைப் பாடல்கள் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றன.

### எதிர்காலம் பொற்காலம் :

இந்நூற்றாண்டு, கவிதைக்கு ஒரு நற்காலமே. அந்நற்காலம் பொற்காலமாக மாறுங் காலம் விரைந்து வந்து கொண்டிருக்கிறது. ''மிக விரைவிலே தமிழின் ஒளி, உலக முழுவதும் பரவாவிட்டால் என் பேரை மாற்றி அழையுங்கள்''— என்று பாரதியார் கூறினர். அக்கூற்று வாய்மையாகிவிட்டது. தேமதுரத் தமிழோசை உலகமெல்லாம் பரவிவரும் காலம் இது. அவ்வோசையைக் கவிதைகளாற்றான் நன்கு ஒலித்துக் காட்டமுடியும். பட்டப்பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாகிய நெட்டைக் கனவு, நனவாவது உறுதி; உறுதி. தமிழ்ப் பாட்டுத்திறத்தால் வையத்தைப் பாலிக்கும் நாள் நம் எதிரே காட்சியளிக்கின்றது.

வாழ்க தமிழ்! வளர்க கவிதை!



குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.

பேராசிரியர் திரு. மா. கி. தசரதன், எம். ஏ.
பச்சையப்பன் கல்லூரி, சென்னை

# தமிழிலக்கியம் - மறுமலர்ச்சிக் காலம்

### எது இலக்கியம் ?

நெடுநாட்களாகக் கேட்கப்பட்டுவரும் வினாக்கள் சில உள. மரம் முன்னதா, அல்லது வித்து முன்னதா? என்பது போன்ற வினாக்களுக்கு உலகம் இன்னும் திட்டவட்டமான விடை காண வில்லை. எனினும் சலியாமல் இன்னும் அந்த வினாவை விடாமல் கேட்டுக்கொண்டு வருகிறது. அது போலவே, 'எது இலக்கியம்-(அல்லது இலக்கியம் என்றால் என்ன?) என்ற ஒரு வினாவும் நெடு நாட்களாக வாழ்ந்து வருகின்றது. எதையும் அச்சுவேறு ஆணிவேறு என்று அலசி ஆய்வதில் ஆர்வம்கொண்ட மேற்கு நாட்டுப் புலவர்களும் இவ்வினாவிற்குத் தெளிவான விடையிறுக்கவில்லை என்றே கூறுகின்றனர். எது இலக்கியம் என்று வரையறை செய்வதைவிட்டு எது இலக்கியம் அன்று என்று முடிவு கட்டுவதே எளிது என அவர் கருதுவதாகத் தெரிகிறது. மக்கள் மனத்தைக் கவர்ந்து இனிமையும் எளிமையும்கொண்டு அரிய உண்மைகளைக்கூறி, காலத்தை வென்று நிற்பது இலக்கியம் என்று கூறினால் ஓரளவு அதன் தன்மையை வரைவு செய்தது ஆகிறது.

### காலமும் அமைப்பும் :

இவ்விலக்கணத்திற்குப் பொருந்திய இலக்கியம் தமிழ்மொழியில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே செழித்து வளர்ந்து தழைத்துப் படர்ந்து விளங்கியது. இரண்டாயிரம் ஆண்டுகள் என்பது மிகப் பின்தள்ளிப் போடப்படும் ஒரு கால எல்லையேயாகும். அன்றைய இலக்கியங்களை நாம் சங்க இலக்கியம் என்னும் பெயரால் அழைக்கின்றோம். எட்டுத்தொகையும், பத்துப் பாட்டும், அவற்றை ஒட்டியும் அடுத்தும் எழுந்த சிலம்பு, குறள் போன்ற நூல்களும் ஓர் இனம் எனக் கொள்ளத்தக்க வகையில் அமைந்துள்ளன. பாட்டின் வகை, பொருளின் தன்மை ஆகியவை அந்நூல்களில் காணப்பெறும் முறை, தனித்தன்மை கொண்டதாக விளங்கக் காண லாம். உண்மைக்கு நிரம்ப இடமும் மதிப்பும் கொடுத்து அளவான கற்பனையைக் கலந்து சுருங்கிய சொற்களால் அந்த இலக்கியச் செல்வங்கள் அமைந்துள்ளன. 'மன்ற சில சொல்லல்' அவற்றின் மாண்பாக விளங்குகின்றது.

ஆனால் இம்முறை மெல்ல மெல்ல அடுத்தடுத்த நூற்றாண்டுகளில் மறைந்துவிட்டதைக் காணுகின்றோம். சங்கமருவிய காலத்தை அடுத்துவந்த நூற்றாண்டுகளில் 'தோன்றிய இலக்கியம்' என்பது விடை காண இயலாத புதிராகவே இன்னமும் இருந்து வருகிறது. பின்னர் வளர்ந்த தமிழ், சமயத்தை மையமாகக் கொண்டுவிட்டது. பன்னிரண்டு, பதின்மூன்று, பதினான்கு முதலிய நூற்றாண்டுகளில் பழைய நூல்களுக்கு உரைகாண்பதில் கற்றோர் கருத்தைச் செலுத்தியிருந்தனர்.

உரையாசிரியர்களுக்குப் பின்னர் எழுந்த இலக்கியங்கள் பெரும்பாலும் தலவரலாறுகளாகவும்,

சொல்லிலே அழகு காணும் புல்லிய தன்மையுடையனவாகவுமே அமைந்துவிட்டன. அவையெல்லாம் ஆங்காங்கு வாழ்ந்த சிற்றரசர்களின் மனம் மகிழத்தக்க வகையில் இன்பச்சுவையை மிகுத்துக் கூறும் ஏடுகளாகி உலவிவந்தன.

**ஐரோப்பியர் தொடர்பு:**

இந்தியத் துணைக்கண்டத்திற்கு ஐரோப்பியரின் வருகையானது அரசியல் அரங்கில் என்ன விளைவுகளை உண்டாக்கியது என்பது வேறு பிரச்சனை. ஆனால் மொழித்துறையில் ஐரோப்பியர் வருகையால் இந்திய மொழிகள், குறிப்பாகத் திராவிட மொழிகள் — சிறப்பாகத் தமிழ் மொழி புதிய சில துறைகளில் அடியெடுத்து வைத்து வளர்ந்தது என்பதை உணரவேண்டும்; பெருந்தன்மையோடு ஒப்புக் கொள்ளவேண்டும்; அதிலே தவறு ஒன்றும் இல்லை. நம் குறை உணர்வதுதான் பண்புகளிலேயே மிகச்சிறந்தது ஆகும்.

ஐரோப்பியப் பாதிரிமார் பலர் தங்கள் சமயத்தைப் பரப்ப இங்கு வந்தனர். இங்குள்ள மக்களோடு பழகி, அவர்களுக்குத் தம் சமயக் கருத்துகளை உணர்த்தி மனமாற்றம் ஏற்படுத்தி மதமாற்றம் நிகழச் செய்ய வேண்டுமானால், அதற்கு அவர்களுடைய மொழி தெரிந்திருக்க வேண்டும் என்ற தவிர்க்க இயலாத நிலையில் அவர்கள் தமிழ் கற்கத் தொடங்கினார்கள். கற்கத் தொடங்கியதும் தமிழ் அவர்களில் பலரைத் தன்பால் ஈர்த்துவிட்டது. தமிழின் இனிமையில் அவர்கள் தம் மனத்தைப் பறிகொடுத்தனர்; தமிழ் கற்று, கற்றதனால் தங்கள் பணியைவிடத் தமிழ் வளர்க்கும் பணியை மேலானதாகவும் முதலானதாகவும் கருதினர். தங்கள் மொழியில் இருந்த அமைப்பு, வார்ப்பு, வண்ணம், வடிவம் ஆகியவற்றைத் தமிழிலும் தந்தனர். டாக்டர் கால்டுவெல், போப், வீரமாமுனிவர் போன்றவர்கள் செய்த தமிழ்த் தொண்டுகளால் தமிழ் மொழி பெற்ற பயன் பெரிது.

சிறுகதை, நாடகம், உரைநடை முதலிய துறைகளில் இலக்கியம் படைக்கலாம் என்று புதிய தோட்டத்தின் கதவுகளைத் திறந்துவிட்டவர்கள் அவர்களே. அவர்கள் திறந்துவிட்ட கதவுகளின் வழியே தமிழ்ப்பயிர் வளர்ப்போர் இன்று பலராக உள்ளனர்.

மேலும், மேற்கு நாட்டின் அறிவியல் கண்டுபிடிப்புக்களில் நமக்கு மொழியைப் பொருத்தமட்டில் மிகுதியாகப் பயன்பட்ட பொருள் ஒன்று உண்டு; அதுவே அச்சு இயந்திரம். அச்சு இயந்திரம் மிகச் சுருங்கிய கால எல்லையில் மிகப் பல எண்ணிக்கையுள்ள படிகள் எங்கும் பரவக் காரணமாக இருக்கின்றது.

இந்தப் பின்னணியைக் கொண்டு பார்த்தால்தான் 'தமிழ், இலக்கிய வரலாறு — மறுமலர்ச்சிக் காலம்' என்பதைப்பற்றி நன்கு அறிந்து கொள்ள இயலும்.

**மறுமலர்ச்சிக் காலம்:**

மறு மலர்ச்சிக்கான வித்து பல்வேறு காலங்களில் தமிழ் இலக்கிய மண்ணில் ஊன்றப்பட்டிருக்கலாம். ஆனால் அவ்வித்து வெடித்து முளையாகிப் பயன்தரும் மரமாகியது 19, 20 ஆகிய இரண்டு நூற்றாண்டுகளில்தான். மற்ற நூற்றாண்டுகளில் தோன்றிய இலக்கியத்திற்கும் மறுமலர்ச்சிக் காலத்தில் தோன்றிய இலக்கியங்களுக்கும் எத்துணையோ வேறுபாடுகள் இருக்கலாம்; ஆனால் அவற்றுள் எல்லாம் தலையாய வேறுபாடு, மற்ற நூற்றாண்டுகளில் தோன்றிய இலக்கியம் மக்களோடு தொடர்பு கொள்ளுவதை முக்கியமாகக் கருதவில்லை; ஆனால் மறுமலர்ச்சிக் கால இலக்கியமோ நேரடியாக மக்களுக்கே பயன்பட்டது; ஒருவகையில் அவை மக்களுக்காகவே இயற்றப்பட்டன. சங்ககால இலக்கியங்களைவிட இந்தவகையில் மறுமலர்ச்சி இலக்கியம் ஒருபடி சிறப்புப் பெறுகின்றது என்று கூறினால் அது மிகையன்று. சங்க இலக்கியங்கள் பெரும்பாலும் தனிமனிதனின் உணர்ச்சிகளைத் தாங்கிவந்த பாடல்களாக அமைந்துள்ளன. பொருண்மொழிக் காஞ்சி, செவியறிவுறூஉ போன்ற சில துறைகளில் அமைந்த பாடல்களே பிறரைத் திருத்த வேண்டும் என்ற எண்ணத்தினால் எழுந்தன. பின்னர்த் தோன்றிய திருக்குறளும் சிலப்பதிகாரமும் தனிச் சிறப்புப் பெறுவதற்குக் காரணம் அவற்றின் இலக்கிய நயம் மட்டும் அன்று; அவற்றினுடைய பொதுமை வேட்கையேயாகும். யாரோ ஒரு அரசனை நல்வழிப்படுத்த அல்லாமல் 'உலகினுக்கே' நல்வழி காட்ட எழுந்ததினால் குறளும், சிலம்பும் நம் 'நெஞ்சையள்ளு'கின்றன. மற்றவை அறிவைத்தொடுகின்றன.

மறுமலர்ச்சி இலக்கியங்கள் மக்களைச் சந்திக்கக் காரணம் என்னவெனின், அவை இலக்கியக் கர்த்தாக்களின் (இயற்றுவோரின்-நூல் செய்வோரின்—நூல் ஆசிரியரின்) கருத்துக்களைப் பரப்ப என்றே எழுதப்பட்டவை. அது பிரச்சாரம் ஆயிற்றே எனலாம். ஆம். பிரச்சாரம்தான். கொள்கை பரப்புவது குற்றமாகாது. யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையம் என்று எண்ணுவது போலவே, என் போலவே எண்ணுக, செய்க, இவ்வையகம் என்று ஒருவன் நினைப்பதில், அந்த நினைப்பைச் செயல்படுத்த முயலுவதில் தவறு இருக்க இயலாது அல்லவா?

'கலை கலைக்காகவே' என்பது வரட்டுக் கூச்சல் என்பதை உலகம் உணர்ந்துவிட்டது. 'கலை, கருத்தளிப்பதற்கே' என்று இன்று எவரும் எங்கும் ஒப்புகின்றனர். அதனால் மறுமலர்ச்சி இலக்கியம் கருத்துவிளக்கம் தரவேண்டிய கடமை இருந்த காரணத்தினால் அது மக்களுக்குப் புரியும் வகையில் அமைய வேண்டியது ஆயிற்று.

அவ்வாறு அமைந்தது ஒருவகையில் இலக்கியத்திற்கு நன்மையாகவே முடிந்தது. ஏனெனில் ஒரு சில புலவர்களின் பேழைகளில் புகுந்து முடங்கிக் கிடந்த தமிழ் மொழியானது பொது மக்களிடையே பரவத் தலைப்பட்டது. வானைமுட்டும்

உயரத்திற்குப் பனையாக வளர்ந்து ஒருவர்க்கும் பயன்படாது ஒழிவதைவிட அருகு போல் வேரோடினுல் கண்ணுக்கேனும் இனிய காட்சி கிடைக்கும் அன்றோ? யாரோ ஒருவர் மிகுந்த புலமை பெற்று வழக்கிழந்த சொற்களை எல்லாம் தேடித் தொகுத்து எழுதும் எழுத்தால், மொழி வளர்வதைவிட, உயிர்த் துடிப்புள்ள எளிய சொற்களை, பொருளும் பொருத்தமும் அமைய எழுதும் எழுத்தால் நிச்சயம் மொழி மிகுதியாக வளரும். மறுமலர்ச்சி இலக்கியம் இந்தத் தொண்டைத்தான் செய்தது.

**மறுமலர்ச்சிக் கவிஞர்கள் :**

இந்த நல்ல தொண்டினைத் தொடங்கி வைத்த பெருமை பெருங்கவிஞர் பாரதியாருக்கு உண்டு. அணைக்கதவு திறந்தாற்போல் சொற்கள் அடுத் தடுத்துப் பொருத்தமுற வந்து அமையும் அவர் பாட்டில். புதிய புதிய கற்பனைகளில் ஈடுபட்ட அந்தக் கவிஞன் தன் நெஞ்சத்துக் கனவுகளை எல்லாம் பாட்டிலே தீட்டிவிட்டான்; விட்டது எத்தனையோ! கிடைத்திருப்பதிலே காணும் வேகம்—புதுமை—வெறி இத்தனையும் எளிய ஆனுல் இனிய மொழியில் வந்து விழுகின்றன.

திரௌபதியாளைக் கூந்தலைப் பிடித்திழுத்துப் போகிறுன் துச்சாதனன். இருமருங்கும் ஊரவர் கூடிநின்று பார்க்கிறுர்கள்; பரிதாபப்படுகிறுர்கள்; அழுகிறுர்கள் — அவர்களைப் பார்த்து பதைக் கிறுர் பாரதியார் :

> வீரமிலா நாய்கள், விலங்காம் இளவரசன்
> தன்னை மிதித்துத் தராதலத்தில் போக்கியே
> பொன்னையவள் அந்தப் புரத்தினிலே
> சேர்க்காமல் ;
> நெட்டை மரங்கள்என நின்று புலம்பினுர்;
> பெட்டைப் புலம்பல் பிறர்க்குத் துணையாமோ?

இருபதாவது நூற்றுண்டிலே நடைபெறும் இப்படி; இதை, பாரதியார் அப்போது ஏன் நடத்தவில்லை என்று கேட்கின்றுர்.

அவருடைய அடிகளைப் பின்பற்றி வருபவர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள். சில இடங்களில் இவர் பாரதியாரை விஞ்சும்வண்ணம் கவிதைகள் புனைந்துள்ளார் என்பதை நடு நிலையாளர் ஒப்பத் தடையில்லை. பாரதியார் தாம் பழமைக்கும் புதுமைக்கும் ஒரு 'நடு' கல்லாக இருப்பதைக் காட்டிக் கொள் ளுகின்றுர். ஆனுல் பாரதிதாசனே தொடக்கத் தில் தெய்வ நம்பிக்கைப் பாடல்களைப் பாடிய போதிலும் பின்னர் முற்றிலும் புரட்சிப் பாதை யில் நடைபோடத் தலைப்பட்டுவிட்டார்.

தென்னைமரத்திலே சிட்டு; அது புன்னை மரத் திலே தாவுகின்றது — ஆண் சிட்டும் பெண் சிட்டும் ஒன்று ஆகின்றன.

அணில் — காதல் கடலில் மூழ்குகின்றது.

முல்லை மலருக்குக் காதல் முகிழ்க்கிறது

ஆனுல்,

ஆனுல்,

பாழாய்ப்போன மனிதனுக்கோ காதல்— முழுக் காதல் இல்லை; கலக்கமே மிஞ்சுகின்றது :

> '' மஞ்சம் திருத்தி—உடை
> மாற்றி யணிந்தே—கொஞ்சம்
> கொஞ்சிக் குலாவிட நாதன் வரும்படி
> கோதை அழைக்கையிலே
> மிஞ்சிய சோகம்—மித
> மிஞ்சிய அச்சம்—என்
> வஞ்சியும் பிள்ளையும் நான் இறந்தால் என்ன
> வாதனை கொள்வாரோ !
> நெஞ்சில் இவ்வாறு—நினைந்து
> அங்கு உரைக்கின்றுன்:— அடி
> பஞ்சைப் பரம்பரை நாமடி பிள்ளைகள்
> பற்பலர் ஏதுக் கென்பார்
> கஞ்சி பறித்தார்—எழுங்
> காதல் பறித்தார்—கெட்ட
> வஞ்சகஞ் சேர்சின்ன மானிடச் சாதிக்கு
> வாய்ந்த நிலை இதுவோ !''

—இது பாரதிதாசனின் பாடல்.

'கஞ்சி பறித்தார் எழுங்காதல் பறித்தார்' இந்த வரி புரட்சிக் கவிஞர் மனிதனிடத்தில் எத் துணை அன்பும் நம்பிக்கையும் கொண்டுள்ளார் என்பதைக் காட்டுகின்றது.

தேசிகவிநாயகம்பிள்ளை, நாமக்கல்லார் இன் னும் இப்படிப் பலர் கவிதைக் காட்டில் இனிய மலர்களைத் தேடித் தொகுத்தளித்தவர்கள்; அளிக் கிறவர்கள்.

**மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் :**

தமிழ்ப் புலவர்கள் என்றுல் இப்படித்தான் இருப்பார்கள் என்று அவர்களைப்பற்றி ஒரு தாழ் வான எண்ணம் மக்கள் மன்றத்தில்; அப்படிப் பட்ட காலத்தில் தமிழ்ப் புலவர்க்கும் நாட்டு நலனில் அக்கறையும் ஆர்வமும் உண்டு என்று காட்டிய வீரர் திருவாரூர் திரு. வி. க. அவர்கள். தமிழாசிரியராக வாழ்க்கையைத் தொடங்கி, அரசியல் தலைவர், தொழிலாளர் தலைவர் என் றெல்லாம் உயர்ந்த அந்தத் தமிழ்த் தென்றல்—

வடமொழி கலவாத தூய தமிழ்ப் பெயர், பழக்க வழக்கங்கள் போன்றவற்றைக் கொள்ள வேண்டும் என்று முழங்கி, முயன்று, பாடுபட்டுத் தக்க நூல்கள் பலவற்றை எழுதி வெளியிட்ட தமிழ்மலை மறைமலையடிகள்—

பல்கலைக்கழக அறையின் நான்கு சுவர்களுக்கு நடுவிலே மட்டும் அல்லாது நாட்டின் பல பகுதி களிலும் இனிய 'தமிழ்விருந்து' படைத்த சொல் லின் செல்வர் சேதுப்பிள்ளை—

இப்புலவர் பெருமக்களின் வழிவந்து, தமிழ் நாட்டின் பல்லாயிரக்கணக்கான இளைஞர்களின் உள்ளங்களையெல்லாம் காவிய நலம் காட்டிக் கள் வெறியூட்டிக் கொள்ளை கொண்டவரும், தமிழர் கள் நல்லவர்களாக இருந்தால் மட்டும் சாலாது வல்லவர்களாகவும் இருத்தல் வேண்டும் என்ற பேருண்மையைப் பல்லாற்றானும் எடுத்து விளக்கி வருபவருமான டாக்டர் மு. வரதராசனார்—

கலைமகள் கி. வா. சகந்நாதன்; இதழ்த்துறை யில் 'கல்கி', 'தேவன்', 'அகிலன்', 'ராஜாஜி' 'நாரண துரைக்கண்ணன்', 'ம.பொ.சி.', 'ஜீவானந் தம்' இன்னும் பலர் மறுமலர்ச்சிக் காலத்தின் எழுத்துலகை ஆள்பவர்கள்; ஆண்டவர்கள்!

ஆனால்,

மறுமலர்ச்சிக் காலம் என்ற தலைப்பு முற்றுப் பெறுதற்கு இன்னும் ஓர் அத்தியாயம் உள்ளது. அப்பகுதிக்குத் தலைப்பு நாடகம் என்பதா, இதழ் (பத்திரிகை) என்பதா, சொற்பொழிவு என் பதா?— இல்லை-சுருக்கமாக 'அண்ணா வளர்த்த அருந்தமிழ்' எனலாம்.

ஆம்; காய்தல் உவத்தல் இன்றி இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய எழுச்சியை, வளர்ச்சியை, வாழ்வை எடை போட்டுப் பார்ப்பவர்கள் அண்ணா வளர்த்த தமிழ் எத்தகையது என்பதை உணர்வர்.

நாடக மேடையில், திரைப்படத்தில், பேச்சு மேடையில் எங்கும் கம்பீரமான தமிழ், முடுக் கான நடை, கருத்துச் செறிவு இவை இடம் பெற்றது அண்ணாவின் தொண்டினால்தான்! இன்று தமிழகத்தில் பெரும்பாலான இளைஞர்களின் பேச் சும் எழுத்தும் அவர் நடையைப் பின்பற்றி உள் ளது என்றால் அது மிகையன்று; முகமன் அன்று; உண்மை; முக்காலும் உண்மை. தடுக்குமொழி யாளரும் அடுக்குமொழி பேசத் துடித்திடச் செய்த பெருமை அவர் பேச்சுக்கு உண்டு. எழுத்து ஏற்றம் தரும் என்பதனை அவர் காட்டி விட்டார். 'கேட்டார் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவது சொல்' என்பது இலக்கணம்; இந்த இலக்கணத்திற்கு இலக்கியம் அண்ணா! இலக்கியத்திற்கு இனிய விளக்கங்கள் அளித்து, சொற்களிலே சொக்கவைத்துக் கேட் போர் காண்போர் மனங்களை ஈர்க்கின்ற கலைஞர் கருணாநிதி; ஆற்றொழுக்குப்போல் சலசலவென இனிய பேச்சைப் பொழிந்திடும் நாவலர் நெடுஞ் செழியனார்; இவர் போற்றுள்ள எண்ணற்ற இளைஞர் வரிசை இவை அத்தனையும் இன்று நல்ல தமிழ் இனி வாழும் என்ற நம்பிக்கையைத் தமிழகத்திற்கு அளித்துள்ளது.

தமிழ் எனும் தளிரைப் பற்றென்னும் வேலி யிட்டுப் பக்குவமாய்க் காத்திடவல்லார் அரசியல் அரங்கில் மட்டும் அன்றி, பள்ளித் தலங்களில், பாதை ஓரங்களில் எங்கும் இருந்திடுகின்றனர் என்ற நல்ல நிலையை உருவாக்கியுள்ளவர் அறிஞர் அண்ணா அவர்கள் ஆவார்.

முன்பொருநாள் முகையாக இருந்த தமிழ் மலர், இன்று இனிய மணத்தை உலகெலாம் பரப்புகின்றது; தமிழர் நெஞ்சமெல்லாம் உவக் கின்றது.

அந்த மறுமலர்ச்சியின் மணம் வாழ்க! வளர்க!



விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.

**புலவர் மா. நன்னன், எம்.ஏ.**
அரசினர் கலைக் கல்லூரி, சென்னை




**நோக்கம் :**

சங்க காலத் தமிழிலக்கியங்கள் என்னும் பெயரோடு இன்று நம்மிடம் இருப்பவை பத்துப் பாட்டும் எட்டுத்தொகையுமேயாம். இவற்றினும் காலத்தால் முற்பட்டதாகிய தொல்காப்பியத்துள் காணப்படும் சில குறிப்புக்களாலும், இவற்றுள் வரும் சில செய்திகளாலும், பண்டை உரையாசிரியர்தம் உரைப்பகுதிகளாலும், பொதுவாக இலக்கிய வரலாற்று முறைமையாலும் இவற்றுக்கு முற்பட்ட இலக்கியங்கள் பல இருந்திருக்க வேண்டுமென்பது தெளிவாகப் புலப்படும். அத்தொல்லிலக்கியங்கள் எவ்வெவ்வகைகளில், எவ்வெவ் வடிவங்களில் இருந்தன என்பதை அறிய இயலவில்லை.

'என்றும் கிழியாதென் பாட்டு' என்று கூறப்படுவதற்கேற்ப அழிந்துபடாது கிடைக்கும் பாட்டும் தொகையும் கொண்டு சங்ககாலத் தமிழிலக்கியங்களின் சிறப்பியல்புகளுள் ஒரு சிலவற்றைக் குறிப்பிட முயல்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**இரண்டும் நான்கும் :**

தொல்காப்பியர் வகுத்துரைத்த பண்டைத் தமிழிலக்கிய நெறியை ஒட்டியே இச்சங்க இலக்கியங்கள் அகம் புறம் என்னும் இரு கூறுகளையும் எடுத்தியம்புகின்றன. அகத்தால் உணரப்படுவனவற்றுள் தலையாய இன்பத்தை அகம் என்றும், பிறவற்றைப் புறம் என்றும் கொண்டு விளக்கிற்று தமிழிலக்கிய நெறி.

''அறம், பொருள், இன்பம் வீடடைதல் நூற்பயன்'' என்னும் கருத்தை விழுமியதாகக் கொண்டோர் அந்நான்கையும் அகம் புறம் என்னும் இவ்விரண்டனுள் திணிக்க வாளா முயன்று இடர்ப்படுகின்றனர். அவர் அவை நான்கும் (நூற்கல்வியின்) வாழ்வின் பயன் என்பதனையும் இவை இரண்டும் வாழ்வின் அமைதி என்பதனையும் புறக்கணித்து விடுகின்றனர்.

**அகத்தின் சிறப்பு :**

புறப் பொருள் பற்றிய இலக்கியங்கள் பண்டைத் தமிழர்தம் புறவாழ்வைத் தெளிவாகத் துலக்குகின்றன.

''நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்''

எனக் கொண்டவர்களின் வாழ்வைப் புலப்படுத்துவன ஆதலின் சங்கப் புறஇலக்கியங்கள் அரசர், குறுநில மன்னர் போன்ற வள்ளியோரையும், ஏனை ஒள்ளியோரையும் அவரோடு தொடர்புடைய பிறரையுமே காட்டி விளக்கிச் செல்கின்றன. ஆனால் புறத்திற் காணப்படும் இதனை நாம் அக இலக்கியங்களுள் காண இயலவில்லை. அங்குக் கூறப்படும் ஒழுக்கம் முழுதும் மன்னர் முதலி

யோருக்குரியன என்று கூறுதற்குச் சிறிதும் வாய்ப்பில்லாதபடிப்பொதுமக்களின் அக ஒழுக்கத்தையே அவை முற்றிலும் எடுத்துக்காட்டி விளக்கிச் செல்கின்றன. புறத்தே காணப்படும் வேறுபாடு அக உணர்வில் இல்லாமை இதற்குக் காரணமாகலாம். ஆயினும் அடியோர், வினைவலர் முதலியோர் பண்பாடு சிறக்கப் பெருமையால் இவ்வொழுக்க நெறிக்கு ஏற்புடையராம் மதுகை இல்லாதவராதலின் அவரது அக ஒழுக்கம் சிறிது வழுவியும் செல்லுதலை நாம் மறுத்தற்கியலாது.

**அகத்தின் மிகுதி :**

சங்க இலக்கியங்களிலேயே அகப்பொருள் பற்றியவை மிகுதியாக விளங்குகின்றன. புறஒழுக்கத்திலும் அக ஒழுக்கமே ஒரு சமூகத்தைச் செம்மைப்படுத்தி உயர்த்த இன்றியமையாதது என்பதால் அதனையே பண்டைப் புலவோர் மிகுதியாகப் பாடினர். மக்களைக் கவர்வதில் அகச் செய்திகட்குத் தனி ஆற்றல் உண்டு என்பதோடு அவை சுட்டி ஒருவர் பெயர் குறிக்கப்படாமல் பொதுவாக ஒழுக்கக் கூறுகளை மட்டும் விளக்கிச் செல்வதால் காய்தல் உவத்தலகற்றி அவை மக்களால் நன்கு போற்றப்பட்டன என்பதும் அதற்குக் காரணமாகலாம்.

**பெண்-ஆண்-வினை :**

அக இலக்கியங்கள் நமக்கு மற்றொரு சிறப்புத் தகவலையும் அளிக்கின்றன. அஃதாவது அக்காலத் தமிழ் மகளிர் வீரஞ்செறிந்த ஆடவரையே விரும்பினர் என்பது. அவர்கள் அவ்வாறு விரும்பிய தாற்றான் அக்கால ஆடவரும் சிறந்த வீரர்களாய்த் திகழ்ந்தனர். அஃது அக்காலத் தேவையுமாம். அத்துடன் வினைவல்லவர்களாகவும் தம் துணைவர் இருக்க வேண்டும் என்று அம்மங்கையர் எதிர்பார்த்திருந்தனர். அதனாற்றான், முல்லைத் திணை எழுவதாயிற்று. ஆடவர்கள் வினையே உயிராகக் கொண்டிருப்பர் என்பதனை,

> வினையே யாடவர்க் குயிரே வாணுதல்
> மனையுறை மகளிர்க் காடவ ருயிரென
> நமக்குரைத் தோருந் தாமே
> அழாஅ ரேழி யழுங்குவர் செலவே

என்னும் குறுந்தொகைப் பாட்டு எடுத்துக் காட்டுகின்றது. இதில் மகளிர்க்காடவர் உயிராயின் ஆடவர்க்கு மகளிர் உயிர் எனப்படாமை நோக்குதற்குரியது. பெண்ணுக்கு ஆணுயிர் ஆணுக்குப் பெண் உயிர் என்றால் அவ்வுணர்வு சுற்றிச் சுழலும் வட்டமாய் முற்றுப் பெற்று, உலக வளர்ச்சியற்றுப் போகும். பெண்ணுக்கு ஆணுயிர், ஆணுக்கு வினையுயிர் என்றிருந்தாற்றான் உலக முன்னேற்றம் தடைபடாது நடந்தியலும். மற்றும் ஆணுக்கு வினையுயிர் என்பதால் அவனுக்குப் பெண்மாட்டன்பில்லை யென்பதோ; பெண்ணுக்கு ஆணுயிரென்பதால் அவளுக்கு வினைமாட்டு ஆர்வமில்லை என்பதோ பெறப்படாது என்பதனையும் நாம் நினைவிற்பதித்தல் வேண்டும்.

**புலமையின் தலைமை :**

புறப்பொருள் பற்றிய இலக்கியங்களில் அரசர் போன்றோர்க்குச் சிறப்பிடம் அளிக்கப்பட்டிருத்தல் உண்மையே. ஆயினும் அவரினும் அறிவு, சிறப்பாற்றல் பெற்றுத் தன்னேரின்றித் திகழ்ந்ததையும் நாம் காண முடிகின்றது. அரசர் முதலியோரது அகம், புறம் ஆகிய இருவாழ்விலும் புலமை தலைமை வகித்திருக்கின்றது. அரசியலின் எல்லாக் கூறுகளிலும் புலவர்கள் புகுந்து செப்பனிட்டிருக்கின்றனர். ஊடல் போன்றவற்றைக் களைந்து அவர்தம் அகவாழ்வையும் செப்பனிட்டிருக்கின்றனர். அன்றைய அரசு புலமைக்கு இத்தகு தலைமை யளித்ததைப் போன்றே புலமையும் பிற எதற்கும் சாயாத, தளராத திண்மையுடையதாக விளங்கிற்று. சங்க நூல்களுள் வீரம், ஈகை முதலிய சிறப்புப் பண்புகளே போற்றப்பட்டன; அவற்றை உடைமையால் உடையோரும் போற்றப்பட்டனர். புலமை தன்னையே போற்றிக் கொள்ளக் கூசிற்று. ஆனால் அரசு புலமையைப் போற்றியிருக்கிறது. இது ஒரு வேளை புலமையுள் ஒரு கூறு மற்றொன்றைப் போற்றியதாகவும் ஆகலாம்.

> செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
> வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்
> இன்றுள னாயின் நன்று

என்பது பின்னதற்குச் சான்றாம்.

**பரிசும் இரவும் :**

வறுமையால் வாடியோர் பாடியவை என்று சங்கப் புறப்பாடல்களை ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. வறுமை புலமையை அணுகவே முடியாது. புலவர் எவரும் தம் வறுமையைக் கூறிப் பரிசில் வேண்டவில்லை. தம் சுற்றத்தாரின் துயர் கண்டு கொண்ட அன்பிரக்கமே அவர்களைப் புரவலரை நாடச் செய்தது. அங்கும் அவர்தம் புலமையைத் தந்து அதற்கு ஏற்ற பரிசிலைப் பெற்றனரேயன்றி அல்லற்பட்டாற்றாது அழுது இரந்து எதனையும் பெற்றாரில்லை. எனவே அவர்தம் வாழ்வு பரிசில் வாழ்வேயன்றி இரந்து வாழும் வாழ்வன்று. மற்றும் சங்கப் புறப்பாடலனைத்துமே வறுமையைக்கூறிப் பரிசில் வேண்டுவனவாயமைந்தில என்பதையும் மறத்தற்கில்லை. அகப்பாடல்களைக் குறித்து இச்சழக்குரைக்கவே இடமில்லை.

**ஆற்றுப்படை :**

புறப்பொருள் பற்றியவற்றுள் ஆற்றுப்படை என்பது தனிச்சிறப்புடைய இலக்கிய வகையாகும். வள்ளியோரை நாடிச் செல்லும் நெறி கூறும் முறை இவ்வகை இலக்கியத்தின் தோற்றக் காலத்தையும், காரணத்தையும் உணர்த்தக் காண்கின்றோம். முல்லையும் குறிஞ்சியும் முறைமை சிறந்திருந்த மிகு பண்டைக் காலத்தையும் தாம் பெற்ற இன்பத்தைத் தம்மொத்த பிறரும் பெற உதவும் காரணத்தையும் அவை ஐயத்திற்கிட

மின்றி அறிவிக்கின்றன, சிறப்பாக மலைபடுகடாத்தில் கூறப்படும் நெறி கருதத்தக்கது, திருமுருகாற்றுப்படை ஒன்றைத் தவிர, பிற அனைத்தும் ஒத்த கருத்துடன் செல்வதைக் காண்கின்றோம். இரவலர் வாழும் இடமாகிய உலக அறவிக்கு மணிமேகலையை ஆற்றுப்படுத்துவது போன்று முருகனை அடியவர் உறையும் இடங்கட்கு ஆற்றுப்படுத்தியதாகக் கொண்டால் அதுவும் வேறுபட்டிலங்க இடமில்லை. வந்த பரிசிலனைப் புரவலன் வரவேற்றவுடன் நல்லுடை நல்கி அவனைத் தன்னைப்போன்ற தோற்றத்தானாக்கிச் சமநிலையளித்துப் பேணி மகிழும் பெற்றிக்கு ஈடே இல்லை.

மலைபடுகடாத்தில் கண்ணுக்குப் புலனாகும் மலையையும் செவிக்குப் புலனாகும் அதன்கண் படும் ஒலியையும் ஒன்றாகத் தொடர்புறுத்திக் காட்சிப் பொருள்களாகிய யானைக்கும் அதன் கடாத்திற்கும் முறையே ஒப்பிட்ட பாங்கு சங்ககால நுண்மாண் நுழைபுல மாண்பிற்கோர் சான்றும்.

சங்க இலக்கியங்கள் நாட்டையும் நகர், ஊர் முதலியவற்றையும் கண்முன் கொணர்ந்து நிறுத்தும் ஆற்றல் பெற்றவை என்பதற்குப் பட்டினப் பாலை முதலியவை சான்றுகளாகும். சங்ககாலத் தமிழகத்தை மாசின்றிக் காண இவ்விலக்கியங்கள் துணை செய்யும்.

**பதிற்றுப்பத்து :**

பதிற்றுப்பத்து மற்றொரு சிறப்பு வாய்ந்த இலக்கிய வகையாகும். சேர மரபில் வந்த பத்து அரசர்களைப் பற்றிப் பப்பத்துப் பாடல் கொண்ட இந் நூல் தமிழர்தம் வரலாற்றுணர்வுக்கு முன்மாதிரியாகத் திகழ்கின்றது. பின்னர் பிறபலவற்றையும் போல் அத்துறையை வளர்க்காதது பின்னோர் செய்த பெரும் பிழையாகும்.

**சமயம் :**

சங்க இலக்கியங்களின் பிறிதொரு சிறப்பியல்பு அவற்றுள் சமயக் கருத்துக்கள் மிகுதியாக இடம் பெறாமையே. நூற்றில் ஒன்று ஆயிரத்தில் ஒன்று என்னும் அளவுக்கே அவற்றுள் அவை இடம் பெற்றுள்ளன. அவையும் பெரும்பாலும் கருத்து விளக்கவரும் உவமை போன்ற நிலையிலேயே இடம் பெற்றுள்ளன. பத்துப்பாட்டில் ஒரு பாட்டும் எட்டுத்தொகையில் ஒரு தொகையும் சமயம் பற்றியன என்பர். அவற்றையும் பிற்காலச் சமய நூல்களோடு ஒப்பிட்டால் அவற்றுள் அக்கூறு குறைந்தே உள்ளமை தெளிவாகும்.

**தூய புலமையின் துலக்கம் :**

சங்க இலக்கியங்களின் சீர்மைக்குச் சிறப்பாக உள்ள ஒன்றை இறுதியாகக் குறித்தல் தகும். இலக்கியம் அல்லது பாட்டு ஒன்று ஏதோ பிறிதொரு காரணத்திற்காக எழுத வேண்டும் என்னும் நெருக்கடியில் திட்டமிட்டு அவை எழுதப் பட்டன வல்ல. இயல்பான தேவை ஏற்பட்ட பொழுது உள்ளத் தெழுந்த தூய உணர்ச்சியால் தூண்டப்பட்டுத் துலங்கிய புலமையின் துலக்கமே சங்க இலக்கியச் செல்வங்கள். குறைந்த அடிகளில் ஓர் உணர்வை அல்லது நிகழ்ச்சியை மட்டும் உணர்த்திக்காட்ட எழுந்த அவற்றில் இன்றியமையாதன தவிர பிற புகுமாறில்லை. பாடுவோர், பாடப்படுவோர், காலம், களம் ஆகிய அனைத்தும் தொடர்புற்று இணைந்தவை ஆதலின் அவைதம்முள் வரைகடந்த புனைவுக்கும் இயல் பிறந்த கற்பனைக்கும் சற்றும் இடமில்லை.

சங்க இலக்கியங்களில் வரும் வருணனை எனப் படும் புனைவுகள் பாட்டைப் படிப்போரை அவற்றைப் பாடியோர், தாம், எச்சூழலால் உந்தப்பட்டு உணர்வு பெற்றனரோ அச்சூழலில் இருத்தவே பயன்படுவனவாயுள்ளன. படிப்போன் பாடியவன் பெற்ற உணர்வைப் பெறத் தூண்டும் முறையான கருவியே வருணனை. அகப் பாடல்களில் வரும் முதற் பொருள்களும் கருப் பொருள்களும் உரிப் பொருள்களின் நிலைக்களங்களேயன்றிப் பிறவல்ல. நாடக வழக்கென்பதும் புலவர் — தம் அகத்தே நாடி உரைத்த இனிய நல்வழக்கேயன்றி இல்லது புனையும் பொல்லா வழக்காகாது.

**சாய்வும் சரிவும் :**

இச் செம்மை நெறியினின்றும் பிற்கால இலக்கியங்கள் திறம்பியமையே தமிழிலக்கியம் தன் தனித் தன்மையை இழந்ததற்கும், வளராது சாய்ந்து சரிந்ததற்கும் காரணங்களாம். சிலம்பு ஓரளவு விலக முயன்றது. மணிமேகலை ஓரளவு விலகிற்று. சிந்தாமணி மேலும் சற்று விலகிற்று. பின்னவை படிப்படியாக முற்றிலும் விலகின. எனவே சங்க காலத் தமிழிலக்கியப் பெற்றி பிற்காலத் தமிழ் இலக்கியங்களில் அருமருந்தாயிற்று.



## வானவில்

மண்ணுலகு கடல், மலை அனைத்தும் உள் ளாக்கியே
வளைந்தது வானவில்! என்னென்ன வண்ணங்கள்!
விண்முழுது கருமணல் அதன்மீது மாணிக்கம்
வீறிடு நிறப்பச்சை, வயிரத் தடுக்குகள்
உள்நிலவும் நீரோடை கண்ணையும் மனத்தையும்
உயிரினொடும் அள்ளியே செல்கின்ற தல்லாமல்
எண்ணற்ற அழகினால் இயற்கைவிளை யாடலின்
எல்லைகா ணேன், அதைச் சொல்லுமா றில்லையே
புதுமைஇது வானிடைக் கண்டஅவ ளோவியம்
போய், முகில் புனலிலே நொடிதோறும் கரைந்ததே
இ(து)அது எனச் சொல்ல ஏலா தொழிந்ததே
**இன்பமும் துன்பமும் யாவுமே இவ்வண்ணம்**
**கதுமெனத் தோன்றிடும் மறைந்திடும் என்பதைக்**
**கண்ணெதிர்க் காட்டவரும் விண்எழுது கவிதையாம்**
அதுநமக் குத்தெரியும் அன்றியும் கவிஞருளம்
அவ்வான விரிவினும் பெரிதென்ப தறிவமே!

—பாவேந்தர் பாரதிதாசனார்

## மின்னல்

வானம் நடத்தும் வாணவே டிக்கை
புதுமழை விழாவின் பூமத் தாப்பு
முத்துநூல் உதறல்; முகில்துகில் கிழிசல்
கார்அ ரக்கனின் கோணற் சிரிப்பு
நீலச் சகதியில் நெளியும் வெண்புழு
மேகச் சாம்பலில் மின்னும் வெண்தணல்
உரைகலில் மின்னும் வெள்ளி இரேகை
விநாடியில் வற்றும் வெளிச்ச ஆறு
விண்தோட் டத்தின் வெள்ளிக் கொடிகள்
மழைச்செய்தி கூறும் சைகை விளக்கு
கருமுகில் இமைகளின் கண்சி மிட்டல்
நீரில் பிறக்கும் நெருப்பு; நம் இயற்கை
கிறுக்கு கின்ற சுருக்கெழுத் திதுவே!

**வாணியம்பாடி கவிஞர் அப்துர் ரகுமான், எம்.ஏ.**

அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.

ஔவை நடராசன், எம்.ஏ., எம்.லிட்.



# அகப் பொருள் துறை

## தமிழ் மரபு :

தமிழ் இலக்கணம் ஏனை மொழியிலக்கணங்களோடு ஒப்ப வைத்து நோக்குமிடத்து எழுத்து, சொல் என்ற இரண்டில் மாத்திரம் ஒத்து நிற்கிறது. பொருளிலக்கணம் என்பது தமிழுக்கே சிறப்பாய் அமைந்துள்ளது. மக்கள் உள்ளத்தில் எழும் எண்ணங்களுக்கு வடிவம் கொடுத்து வெளிப்படுத்துவது சொல். அச்சொற்கள் தம்மில் தொடர்ந்து நிற்கும் இயைபுகளை விளக்குவது சொல்லிலக்கணம்.

சொற்களுக்குப் பொருளாயுள்ள எண்ணங்கள் மக்களுடைய உலகியல் வாழ்வில் எழுவன. அதனுல் சொற்களால் உணர்த்தப்படும் பொருள் பலவும் வாழ்வில் கண்டும் கேட்டும் உற்றும் உணர்ந்தும் எய்துவனவாகும். எண்ணும் எண்ணங்களும், சொல்லும் சொற்களும், கருத்துக்களும் செய்யும் வினைகளும் யாவும் பொருள் எனப்படுகின்றன. இப்பொருள்களை யுணர்த்துவதும் உணர்வதும் சொல்லின் நோக்கமாதலால் சொல்லிலக்கணத்தோடு பொருளிலக்கணம் உரைப்பது தமிழ் மரபாயிற்று. அதுபற்றியே, எழுத்தும், சொல்லும் பெற்றுப் பொருள் பெறேமாயின் பயனில்லை என்று தமிழறிஞர் கூறுகின்றனர்.

## உறுதிப்பொருள் நான்கு :

மக்கள் ஆணும் பெண்ணுமாகக் கூடியே வாழ வேண்டும் என்பது உலகப் படைப்பின் அமைப்பாகும். இருவரையும் அன்பாற் பிணித்துப் பொருளின்பங்களை நுகர்வதும் இனத்தைப் பெருக்குவதும் குடும்ப வாழ்வின் அடிப்படையான செய்வினைகளாகும். இதுவே உலகில் வாழும் மக்களுடைய பொதுவான பண்பு. இதனை நன்கு தெளிந்த பண்டைத் தமிழ்ச்சான்ருேர், குடும்ப வாழ்வின் முடிபொருள் அறம், பொருள், இன்பம் என்றும், வீடு என்றும் நான்காகக் கண்டனர். குடும்பத்தில் இருந்து பெறுவன அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் எனவும், குடும்பத்தின் நீங்கித் துறவு மேற்கொண்டு பெறுவது வீடு எனவும் கூறுவர். இதுபற்றியே, தமிழ்ப்பாட்டுக்களால் கூறப்படுவன அறம் முதலிய மூன்றுமே என வரையறுத்து உரைத்த தொல்காப்பியர் 'அந்நிலை மருங்கின் அறம் முதலாகிய மும்முதற் பொருட்கும் உரிய என்ப' என்று கூறினர். நாலடியாரும் 'வடுவிலா வையத்து மன்னிய மூன்று' என்று கூறுகின்றது. இவற்றுள் அறமாவது பொருளைச் செய்தற்கும், இன்பத்தை நுகர்வதற்கும் அமைந்த நற்செயலாகும். அறத்தால் பொருளும், அதன் வழி இன்பமும் எய்துதலால் அவை ஒன்றுக்கொன்று காரண காரியமாய் இருப்பது கொண்டு அறத்தை முற்பட ஆராய்வது மரபாயிற்று. 'சிறப்புடை மரபின் பொருளும்

இன்பமும் அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல' என்று சான்றோரும் காட்டுகின்றனர்.

## அகமும், புறமும்:

குடும்பங்களால் இயன்ற மக்கட் சமுதாயம், தூயநினைவும், தூயசெய்கையும் கொண்டு பெருக ஈட்டி வற்றாது பெருகும் இன்ப நுகர்ச்சியால் மண்ணக வாழ்வை விண்ணுலகப் பேரின்ப நிலை பெறுவிக்கும் என்பது கருதியே குடும்ப வாழ்வை அகப்பொருள் என்றும், குடும்பத்தவர் புறத்தே சென்று கல்வியும், தொழிலும் கற்றுப் பொருள் செய்து, இம்மையிற் புகழும், இன்பமும் பெறும் முயற்சி வினைகளைப் புறப்பொருள் என்றும் வகுத்தனர். பொருள்வாழ்வில் அரசியற் செல்வமே தலையாயது என்பது அந்நாளைய மக்கள் கருத்தாக நிலவிற்று. அதனால் அரசியற் செல்வத்தை ஆக்குவதும், காப்பதுமாகிய செயல் வகைகளையே பண்டையோர் பொருள் என விதந்து கூறினர். புறப்பொருட்குரியவற்றை உரைக்கும் தொல்காப்பியம் மன்னர் செயல்களையே எடுத்துரைப்பதும், திருக்குறள் மன்னர்க்கும் அவரது ஆட்சிக்கும் உரியவற்றையே வரைந்து கூறுவதும் தமிழில் காணப்படுகின்றன.

இவ்வாறு அகமும், புறமுமாகிய நிகழ்ச்சிகளே மக்கள் வாழ்க்கையில் பெறக்கடவ இன்பத்துக்கும், பொருட்கும் ஏதுவாதலால், இரண்டினையும் பொதுவகையில் பொருள் என்று குறித்தனர். இப்பொருள் தவிர மண்ணுலகில் மக்கட்கு இன்றியமையாது வேண்டுவன பிற இல்லாமையால், அவர்களுடைய எழுத்தும், சொல்லும் இப்பொருளையே நோக்கி நிற்கின்றன. மக்கள் வழங்கும் மொழிக்குரிய எழுத்துக்கும், சொல்லுக்கும் இலக்கணம் வகுத்த தொல்லோர், அவர்கள் நினைவும், செயலும் விளைவிக்கும் பொருட்கும் இன்பத்துக்கும் பொருள் எனப் பெயரிட்டு இலக்கணம் வகுப்பாராயினர். 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்பதே பொருள் இலக்கணத்தின் இன்றியமையாமையை நன்கு வற்புறுத்துகிறது.

பண்டைநாளைப் புலவர் பெருமக்கள் மக்கட் சமுதாயத்தின் அடிப்படையாகிய குடும்ப வாழ்வுக்குரிய அகப்பொருளைப் பல்லாற்றானும் ஆராய்ந்து, ஆணும் பெண்ணுமாகிய இருவரின் உணர்வும் பயின்று சிறத்தல் வேண்டும் என்ற நோக்கத்தில் மிகப்பல பாட்டுக்களைப் பாடியுள்ளனர். கேட்போர் உள்ளத்தின் மறக்கூறுகளையும், விலங்குணர்ச்சிகளையும் போக்கி இனிய எண்ணமும், உயரிய மக்கட்பண்பும் உண்டுபண்ணி வளர்ப்பதில் இசையும், கூத்தும் ஏற்றமுடையனவாதலின், அவற்றிற்கு அமைத்த பாட்டுக்களில் அகப்பொருட்கூறுகளையே அமைத்துப் பாடினர். தமிழ்க்குரிய இயல், இசை, கூத்து என்ற முப்பிரிவினும் அகப்பொருட் கருத்துக்களையே மிக நிறைத்துப் பாடுவது பண்டை நாளில் புலவர் பலர்க்குப் பெரும் பணியாய் இருந்தது. அதனால் சங்க இலக்கியங்கள் எனப்படும் தொகை நூல்கள் பலவும் அகப்பாட்டுக்களாகவே இருக்கின்றன.

## அகப்பொருட் கூறுகள்:

பாடற்கமைந்தது அகப்பொருளாயினமையின் அதன் கூறுகளான கூடுதல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் என்ற ஐந்தும் பாட்டுக்கு உரிப்பொருள் எனக் கொள்ளப்பட்டன. மக்களிடத்து ஆண்மகன் ஒருவனையும், பெண்மகள் ஒருத்தியையும் முறையே தலைவனும், தலைவியுமாக நிறுத்திப் புணர்தல் முதலிய உரிப் பொருள் நிகழ்ச்சிகளை அவர் மேல் ஏற்றிப் பாடலுற்ற சான்றோர், அவற்றைப் பாட்டில் சொல்லோவியம் செய்தற் பொருட்டு இடமும், காலமும், இயற்கைச் சூழ்நிலையும் வகுத்துக் கொண்டனர். எத்தகைய நிகழ்ச்சிக்கும் இடமும், காலமும், இயற்கைச் சூழ்நிலையும் இன்றியமையாத உறுப்புக்கள். ஒருவினை நிகழ்ச்சிக்குப் பொதுவாக எட்டு உறுப்புக்கள் உண்டு என்பது கண்ட தொல்காப்பியர், 'வினையே செய்வது செயப்படுபொருளே, நிலனே காலம் கருவி என்றா, இன்னதற்கு இதுபயனாக என்னும், அன்ன மரபின் இரண்டுடன் தொகைஇ, ஆயெட்டென்பதொழிலின் முதனிலையே' என்று வரையறுத்தனர். இதன்கண் இறுதியிற் கூறிய இரண்டும் ஓரளவு சிறப்பில்லன வாயினும் வினையே செய்வது முதலாகக் கூறிய ஆறும் சிறப்புடைய உறுப்புக்கள் என்றதற்காகவே தொல்காப்பியம், பின்னே கூறிய இன்னதற்கு இதுபயனாக என்ற இரண்டையும் பிரித்துக் கூறினார். அகப்பொருட் பாட்டுக்கு இலக்கணம் கண்டோர், முதலிற் கூறிய வினையும் செய்வதுமாகிய இரண்டையும் உரிப்பொருள் எனவும், நிலம், காலம் என்ற இரண்டையும் முதற் பொருளாகவும், இயற்கைச் சூழ்நிலையைக் கருப்பொருள் எனவும் வகுத்துரைத்தனர். கருப்பொருள்வகையில் அவ்வந்நிலங்களில் காணப்படும் உயிர்ப்பொருள், உயிரியல் பொருள் அவற்றின் தொழில் வகை ஆகிய வாழ்க்கைக்கூறு அனைத்தும் காணப்படும்.

முதலும் கருவும் இடமும் இடத்து நிகழ் இயற்கைச் சூழ்நிலையுமாய்த் துணைபுரிய, புணர்தல் முதலிய உரிப்பொருள்களே சான்றோருடைய அகப்பாட்டுக்களுக்குப் பொருளாயின. காதல் வாழ்வின் கூறுகளான, புணர்தல், பிரிதல் முதலிய நிகழ்ச்சியடியிற் பிறக்கும் உணர்ச்சியும், உரையும் பாட்டுக்களில் சிறப்பிடம் பெற்றமையின் அவற்றிற்கு வினை முதலாக வேண்டப்படும் மக்கள் ஆடவர், பெண்டிர் என்ற இருபாலருமாயினர். மண்ணில் வாழும் மக்கள் அனைவரும் குணமும் குற்றமும் விரவியராதலால், அவர்கட்குத் தலைமை தாங்கி அகநிகழ்ச்சிகளைச் செயலிற் காட்டுவோர், குற்றம் என்பதேயன்றி நிறைந்த தலைமை மாண்புடைய மக்களாதல் வேண்டும். அவர்கட்கு ஏனை மக்களிடம் காணப்படும் பிறப்பு, பிணி, மூப்பு, சாக்காடு என்ற குறைபாடுகளும், அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் முதலிய குற்றங்களும் இருத்தல் கூடாது. அதனால், தலைமக்களேயன்றி அவரோடு ஒப்ப வைத்து உரைக்கப்படும் நண்பர்களான பாங்கன், தோழி என்ற இருவரும் தூய நட்பு என்னும் உயரிய பண்பின் வடிவமாக நிறுத்தப்படுகின்றனர்.

## முடிவுரை:

இவ்வாறு படைத்துக் கொள்ளப்பட்ட தலை மக்களிடையே புணர்தல் முதலாகக் கூறப்படும் உரிப்பொருள்கள் தக்க சூழலில் நிகழ்வதாகக் கூறுவது அகப்பாட்டு. எடுத்துக்காட்டாக, குறிஞ்சியில், அடர்ந்து படர்ந்த செடி கொடி களின் செறிவும்-அவற்றாடு அருவியில் படிந்து குளிரினில் கனிந்து வரும் மெல்லிய பூங்காற்றும்-பசுமை வடித்துப் பரப்பும் தண்ணிய நிழலும், கலையும் பிணையுமாய், பிடியுங்களிறுமாய் எங்கெங்கும் இணைந்து திரிந்து மகிழுகின்ற காதல் இணைகளும் காதலரின் நெஞ்சில் 'நெருங்கி வரும்' ஆர்வத்தை மீதூரச் செய்வதனுல்-புணர்ச்சி யொழுக்கம், தோன்றுகின்றது! காதலர்ப் பிரிவால் நைய்யும் நெஞ்சினர்க்கு நெய்தல் நிலமும் இவ்வாறே ஏற்ற சூழ்நிலையைத் தருவதாக அமைகின்றது. இரவும் பகலும் ஒல் லென்று ஒலிசெய்து அயராது ஓலமிடும் கடலும் அமைதியற்றுப் பொங்கி எழுந்தலையும் அலைகளும்-வெறுமையோடிக் கிடக்கும் நுண் மணற் பரப்பும்-தனிமை உயிர்த்துக் கிடக்கும் சூழலும்.... அவலம் கொண்ட நெஞ்சிற்குத் தக்க பின்னணியைத் தருவனவாய் அமைகின்றன. இவை எவ்வெத் திணைக் கண் பாடப்படுகின்றனவோ, அவ்வத் திணைகட்குரிய நிலத்தில் வாழும் மக்களினத்துத் தலைமக்களாகவே மேலே கூறிய தலைமக்கள் குறிக் கப்படுவர். இவ்வகையில் இயலும் தமிழ்ப்பாட்டுக் களின் தமிழ் நெறியாகிய 'அகப்பொருட் கொள்கை' உலகிற்குத் தமிழ் வழங்கிய இலக்கியக் கொடைப் பொருளாக நின்று நிலவுகிறது.



# சிவக்கும் — வெளுக்கும்

குடைவிரித்தும் படைவிரித்தும் ஆண்ட மன்னர்
குலமாண்ட தமிழைக்காத் துவரும் பாட்டு

நடைவிரித்த பாவலர்க்கும் நாவ லர்க்கும்
நகைவிரிக்க முடியாத ஏழைக் கும்யாழ்

தடவிஇசை எழுப்புகின்ற இசைவா ணர்க்கும்
தடம்புரண்டு வருவோர்க்கும் அள்ளி அள்ளிக்

கொடைவள்ளல் கொடுப்பதனுல் கைசி வக்கும்!
கொடுத்தபுகழ் பெருவதனுல் மனம்வெ ளுக்கும்!

முழங்குகடல் அலையாலும் நெருப்பி ஞலும்
மூட்டிவிட்ட இனப்பகையி ஞலும் நாட்டார்

வழங்கியநூல் எத்தனையோ இழந்ததைப் போல்
வரலாற்றை மறந்துவிட்டோம்! மூடி வைத்த

பழஞ்சுவடி பரண்களை அழித்த போது
பரணியொன்று பாடியெழும் துடிப்பால் சீறி

எழுமுணர்ச்சிப் பெருக்கதனுல் முகம்சி வக்கும்
எழுந்தபகை முடிப்பதிலே புகழ்வெ ளுக்கும்!

—தி. கு. நடராசன், எம்.ஏ

மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

**சு. செல்லப்பன்,** எம்.ஏ.,பி.டி.
துணைத்தனி அலுவலர், உலகத் தமிழ் மாநாடு.



**அறிமுகம் :**

பயிராலே நிலம் அறிமுகமாவது போலவும், பழத்தாலே மரம் அறிமுகமாவது போலவும், நிழலாலே உருவம் அறிமுகமாவது போலவும், மொழியினாலே ஒரு நாடு உலகிற்கு அறிமுகமாவது உண்மை. அங்ஙனம் நாட்டினை அறிமுகப் படுத்தும் மொழியோ தன்மாட்டு மலர்ந்து மணம் வீசும் இலக்கியங்களாலேயே தன்னை அறிமுகஞ் செய்து கொள்ளும். அவ்விலக்கியங்களோ ஒரு நாட்டின் நயத்தகு நாகரிகத்தினையும், வியத்தகு செயல், சிந்தனை நிலைகளையும் முரசடித்து முழங்குவனவாம். சீர்த்த இலக்கியங்கள் ஒரு நாட்டின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் செய்யும் தொண்டு தெற்றென அவ்வப்போதே விளங்கித் தோன்றாமல் இருக்கலாம். ஆனால் சமூகத்தில் அவற்றின் செல்வாக்குப் படிந்திருப்பது, சமூகத்தை நகர்த்திச் செல்லும் காலத்தின்மீது படியும் முத்திரைகளை நுனித்து நோக்குவார்க்குப் புலனாகாமல் போவதில்லை.

**கருவும் உருவும் :**

மக்களின் பல்வேறு உணர்வு நிலைகளும், செயல்களும் பெறுகின்ற எழுத்துப் பதிப்பே இலக்கியம். இலக்கியம் உருப்பெற உதவும் உணர்வுகளும் கருப்பொருள்களும் காலந்தோறும் மாறிவருதல் இயல்பே. பெருஞ்சித்திரனாரின் நெஞ்சைக் கரைக்கும் வறுமைநிலை, பாரிமகளிரின் கண்ணீர்த் துளிகள், பாண்டியன் நெடுஞ்செழியனின் தலையாலங்கானத்துப்போர் இவையெல்லாம் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு நிலையில் பாடு பொருள்களாயின. எல்லாக் கால இலக்கியங்களிலும் இவை பாவலர் நெஞ்சைத் தொட்டு வளைத்து, இடம் பெற முடியாது.

அன்றுவரையப் பெற்ற அப்பாடல்களை அன்றைய வாழ்வு நுகர்வை மனத்தில் வருவித்துக் கொண்டு படித்தால் நாம் உணர்வில் கடந்த கால வாழ்வு நிகழ்ச்சிகளோடு ஒன்றி நம்மை மறக்கின்றோம். இதுதான் பாட்டின் விழுமிய ஆற்றல். மீளமீளப் புனைதற்குரிய புலனாக இல்லாமற் போயினும், நினைந்து நினைந்து நெஞ்சுகனிய அக்கருப் பொருள்கள் உதவவல்லனவாகின்றன. இங்கே கருப்பொருள்களைக் காலங்கடந்து வாழ வைக்கும் பாட்டின் திறன் புலனாகின்றது. இஃது ஒருவகை. ஒரே கருப்பொருள் காலந்தோறும் கவிதைகளிலே இடம் பிடித்துக்கொண்டு, தம் செல்வாக்குச் சிறப்பை நிலைநாட்டி வருவதுமுண்டு. இக்கருப் பொருள்கள் காலத்தால் பழைமையாகாதவை; வாழ்வு நுகர்வுகளில் சலிப்பும் களைப்பும் ஏற்படுத்தாதவை; மாறாக ஒரே ஆடுமகள் பல்வேறுவகைக் கோலம் பாங்குறப்புனைந்து அரங்கேறி ஆடிக் கண்ணில் கருத்தில் கலந்து மனவெழுச்சியைக் கிளர்ந்தெழச் செய்வதுபோல, பல்வேறு வடிவமும் வனப்பும் கொண்டு புதுமையுறாது வந்து இன்பம் வழங்குகின்றன. இங்கே கவிதை

களை வளர்த்து, வாழவைக்கும் கருப்பொருளின் திறன் விளங்குகின்றது. இஃது ஒருவகை.

வான நிலவுங் கதிரும், வயங்குகின்ற எண்ணற்ற விண்மீன்களும், உலவுந்தென்றலும், ஒலிக்கும் கடலும் — மலர்களாலே நகை செய்யும் செடி கொடிகளும், பாடிவிழும் அருவியும், ஆடி வரும் மயிலும் ஒரு காலத்தோடு பாடி நிறுத்தப் பட்ட பொருள்கள் அல்ல. ஒரு போர் நிகழ்ச்சியைப் போல் — பாணன் ஒருவனின் பரிசில் பெறும் நிகழ்ச்சியைப் போல் — இறந்த ஒருவருக்குப் பாடியிரங்கும் கையறு நிலை ஒன்றைப்போல் பாவலர் நாவில் தொடர முடியாத வாழ்வை உடையன அல்ல. தொடர்ந்து வருவதாயினும் முற்கூறியாங்குப் 'பழைமை, பழைமை' என்று வெறுத்தொதுக்கற்பாலனவும் அல்ல! ஒரே தாய் தந்தையரைப் பார்த்துப் பார்த்துச் சலிப்புற்றேன் என்று எப்பேதையும் இயம்புவானோ!.. இவ்வாறு காலந்தோறும் கவிதைகளில் இடம் பெறும் கருப்பொருள்களில் ஒன்று மழலை மகவு. இங்கே வீட்டுப்பிறையாகிய மகவு பாட்டுத்துறையில் காலந்தோறும் இடம்பெற்று இன்பம் பொழிவதைக் காண்போம்.

**மழலை மகவு:**

இல்லறவியலின் நல்லியல்பெல்லாம் உரைத்துணர்த்தும் வள்ளுவப் பெருந்தகை நன்கலமாகிய நன்மக்கட்பேற்றின் இனிமையையும் ஓவியமாக்கிக் காட்டியுள்ளார். பொருள்முதிரா மழலைய முதின்சுவையை,

''குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர் — என்னும்

இக்குறள் கிண்ணத்திலே பெய்து தருகின்றார். தமிழரின் இரண்டு விழுமிய இசைநலன் கொழிக்கும் கருவிகளையும் சுட்டிக்காட்டி அவை வழங்கும் இசையைஇனிதென்பார் தம் மக்களின் மலர்வாய்ப் பிறக்கும் மழலை கேளாதவரே என்று தெளிவு படுத்துகின்றார். 'குழல், யாழ், மழலை,' எனச் சிறப்பு 'ழ'கரம் இடம் பெற்றுவரும் சிறு சிறு சொற்களால் மழலைமகவின் சிறுதோற்றமும் மழலைப் பேச்சின் இனிமையும் ஒருங்கே நம் கண் களுக்கும் செவிகளுக்கும் புலனாகின்றன.

**அளாவிய கூழ்:**

தத்தித் தளர்நடை பயிலும் நகைமுத்தாகிய குழந்தை, கிண்ணத்திலே இட்டுவழங்கிய உணவை, வளர்ந்தவரொப்ப எடுத்துண்ணாது, தன் சிறு கைகளினாலே குழப்பியும் கலக்கியும் அதன் செவ்வி சிதையச் செய்துவிடும். அங்ஙனம் உணவு பக்குவங் குலையப் பாழ்படுத்தப்படினும், பாழ்படுத்திய அப் பிஞ்சு விரலூடு உணவிலே கலந்துவிடுகின்ற முற்றாத இளம்பிறை மகவின் பளிங்கு மனப்பரிவும், இளமை மயக்கும் பெற்றோர்க்கு வெறுப்பை எழச் செய்யாது, விருப்பையே மிகுவிப்பதாகின்றது. கூழ், அமுதினைக் காட்டிலும் சிறந்ததும் இனியது மன்று; கிடைத்தற்கு அரியதுமன்று. அக்கூழ் தானும் நிலைகுலைந்து கலங்கிவிடுமாயின் கண் காணவும், கையெடுக்கவும், வாய்திறக்கவும், வெட்கி வெறுக்குமளவிற்குத் தாழ்ந்து போய் விடும். ஈன்று எடுத்த இளமகவின் தளிர்விரல் களால் கலக்கிக் குழப்பினால் அக்கூழே உயர்ந்து சிறந்து இந்திரர் அமிழ்தினும் இனியதாகிவிடுகின்றது. கூழினை அமுதினும் சீர்த்ததாக மாற்றவல்ல ஆற்றல் பிள்ளைக்கனியமுதாகிய பேசுஞ் சித்திரத்தின் பிஞ்சுவிரல்களிலே அமைந்துகிடப்பது ஒரு பெருவிந்தையே! இதனை

''அமிழ்தினும் ஆற்ற இனிதே தம்மக்கள்
சிறுகை அளாவிய கூழ்'' என்னும்

தித்திக்கும் திருக்குறட்பா தெரிவிக்கின்றது.

**மயக்குறு மக்கள்:**

இதே கருத்தும் காட்சியும் சங்க காலத்தில் பாவலனும் காவலனுமாக விளங்கி நின்ற அறிவுடை நம்பியின் அழகிய பாடலொன்றில் அமைந்திருப்பதனைப் புறநானூறு நமக்குக் காட்டுகின்றது.

அப்பாராளும் மன்னனே பிள்ளையின்மையால் மிடிப்பட்டு மனம் இடிந்து மீண்டும் பிள்ளை பெற்றுக் களிப்புற்று இப்பாடலைப் பாடினனோ எனத் தோன்றும் இப்பாடல் மயக்கும் மழலையின் சிறு குறும்புச் செயலைக் காட்டும் திறம் இணையற்றது.

ஒரு நாள், பத்துத் திங்கள் கிடந்து சிப்பி உடல் உடைத்த முத்துக்குழந்தை முறுவல் தவழ முற்றத்திலே 'தளர்பு தளர்பு' நடந்து வருகின்றது. சின்னஞ் சிறிய கைகளை அசைத்து அசைத்து நடந்து வருகின்றது. குறுகக் குறுக இடம் இடையே தோன்றத் தாமரைத் தண்டுக் காலை எடுத்தெடுத்து வைத்து நடந்து வருகின்றது. கோடி மலர்களும், குளிர்நிழற் சோலைகளும் ஊட்டமுடியாத இன்பத்தை அந் நடையோவியக் குழந்தை விழிகளுக்கு ஊட்டியபடி நடந்து வருகின்றது;

நெய்யிலிட்டுப் பிசைந்த சோறு, அக்குழந்தைக்குத் தங்கக் கிண்ணத்திலே இட்டுத் தரப்படுகின்றது. அக்கிண்ணத்துள்ளே அது தன்கையை விடுகின்றது; சோற்றைத் தொடுகின்றது; கிண்ணத்தையே எடுத்துத் தன் ஆரஞ்சுச்சுளையுதட்டால் கவ்வுகின்றது; கரும்புக் கைகளாலே கலக்குகின்றது; நெய்ச் சோற்றுப் பருக்கையைத் தன் மெய்யெல்லாம் ஒட்டிக் கொள்ளுமாறு உதறுகின்றது; வாய்புகுவதனினும் மெய்மிசைப்படியும் சோற்றுப் பருக்கைகளே மிகுதியாகின்றன. பார்க்கும் கண்கள் அவ்வின்பச் சிறு செயல்களாலே தன் வயமிழந்து மயங்கிப் போகின்றன! இவ்வின்ப மயக்கத்தை, உற்ற அரசாட்சியோ, பெற்ற பெருஞ் செல்வமோ, படைத்த படைப்புக்களோ, பலரோடுண்ணும் விருந்துச் சிறப்போ தர முடியுமா என்று எண்ணிப் பார்க்கின்றது அக் காவலன் உள்ளம். இவையெல்லாம் படைத்திருந்த போதிலும் மயக்குறு மக்களில்லாவிட்டால் 'பயக் குறைதான்' என்று முடிவு காண்கின்றது, அவ் வாறு எண்ணிய உள்ளம்.

''படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை வீசி
இட்டும் தொட்டும் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைதாம் வாழும் நாளே'';—

இப்புறப்பாடல், 'அளாவிய கூழ்' என்னும் வள்ளுவரின் சிறு சொற்றெடருள்ளே அமைந்த அழகிய காட்சிகளை விளங்குமாறு விரித்துக் காட்டுகின்றது. பெற்றவனை மயக்குதற்குக் காரணமாகிய நடத்தல், கைவீசல், அளைதல், தொடுதல், கவ்வுதல், துழத்தல், விதிர்த்தல் ஆகியன சிறு சிறு சொல்களால் அமைந்து காட்சிகளைத் சிந்தாமல் சிதறாமல் மனத்திற் கொண்டு சேர்க்கின்றன.

கவிதை, கண்ணால் காண்பது போன்று (Spectacular) காட்சியைத் தெரிவிக்க வேண்டும் என்னும் அறிஞர் வாய் மொழி அப்படியே மெய்யாதலை இங்குக் காண்கின்றோம்.

**தளர்நடை ஓவியம்:**

இனி, கண்ணனைச் சேயாகப் பெற்று மகிழத் துடிக்கும் தாய்நிலையில் தன்னை வைத்துப் பாடியிரங்கும் ஆழ்வார் ஒருவரும் — இந்தச் 'சிறு கையளாவிய கூழின்' சிறப்பைப் பாடி மகிழ்வதைக் பார்ப்போம். முற்றத்திலே ஆடியது முடிமன்னன் அறிவுடைநம்பியின் குழந்தை. 'தீராத விளையாட்டுப் பிள்ளையாகிய' கண்ணனே ஆழ்வாரின் பாடலில் தெருவிலே ஆடிக்களிக்கின்றான். தவழ்ந்து எழுந்து தளர்ந்த நடையுடன் செம்மண்ணிலே ஆடியதால் புழுதிபடிந்த விரல்களோடு வருகின்றான் கண்ணன். மண்ணெல்லாம் இட்டுக் கலக்கிய சோறு வாய்க்கு மகிழ்வூட்டும்; மண்ணெல்லாம் தொட்டுக்கலக்கிய கைகளோ மார்புக்கு மகிழ்வூட்டும். மண்ணிலே செம்பொடி ஆடிய கண்ணன் அப்படியே தவழ்ந்து எழுந்து வந்து தன்னை மார்புறத் தழுவி மகிழ்விக்க வேண்டும் என்று விரும்புகின்றார்! அழகிய சிறு விரல்களாலே வாரி வாயிலிட்டுக் கொண்ட சோற்றின் எச்சிற் பகுதியை — எஞ்சிய பகுதியைத் தான் உண்டு மகிழ வேண்டும் என்று வேணவாக் கொள்கின்றார்.

இவ்வின்பப் பேறுகளைப் பெறாத தாயாக நின்று தவிக்கின்றார் குலசேகர ஆழ்வார்.

தண்ணந் தாமரைக் கண்ணனே கண்ணா
  தவழ்ந்தெழுந்து தளர்ந்ததோர் நடையால்
மண்ணில் செம்பொடி ஆடி வந்துஎன்றன்,
  மார்பில் மனறிடப் பெற்றிலேன் அந்தோ!
வண்ணச் செஞ்சிறு கைவிரல் அனைத்தும்
  வாரிவாய்க் கொண்ட அடிசிலின் மிச்சில்
உண்ணப் பெற்றிலேன் ஓ!கொடு வினையேன்
  என்னையேன் செய்யப் பெற்றதெம் மோயே!

இப்பாடலிலேயும் 'அளாவிய கூழின்' மிச்சிலுக்காக ஏக்கமுறும் உள்ளத்தினை நாம் காண முடிகின்றது. அளாவி அளிக்கும் விரலின் சிறுமை, செம்மை, அழகு ஆகியனவற்றையும் ஆழ்வார் நமக்குக் காட்டி, இளங்குழந்தை யொன்றினை மனக்கண் முன்னே ஆடவிடுகின்றார்.

**கேளாத இசை:**

'வெண்பாவிற் புகழேந்தி' என்னும் தனிச்சிறப்புடைய புகழேந்திப் புலவரின் பாட்டுநெஞ்சையும் இக்கருப்பொருள் பற்றிப் படர்ந்து பாகுச் சுவைப் பாடலொன்றை நமக்குப் பெற்றுத் தருகின்றது. மக்கட் பேற்றின் சிறப்பைக்கூறும் நளன் வாயிலாக வருகின்றது அப்பாடல். படைப்புப் பல படைத்திருப்பினும் மழலை மகவு பெறாதவர் வாழ்வு குறைபாடுடையதென்னும் பாண்டியன் அறிவுடைநம்பியின் கருத்துத்தான் இங்கேயும் தொடர்ந்து வருகின்றது.

> பொன்னுடைய ரேனும் புகழுடைய
> ரேனும் மற்(று)
> என்னுடைய ரேனும் உடையரோ-
> இன்னடிசில்
> புக்களையும் தாமரைக்கை பூநாறும்
> செய்யவாய்
> மக்களை இங்கில்லா தவர்.

இவ்வெண்பாவுள்ளும் 'சிறுகை அளாவும் கூழே' குழந்தைமையின் சிறப்பான மயக்குஞ் செயலாக இடம் பெறுகின்றது. அளையும் கையைத் ''தாமரைக் கையென்றும்'', அளைந்தெடுத்த உணவை வாங்கும் வாயைப் 'பூநாறு'ஞ் 'செய்ய வாய்' — என்றும் குறிப்பிட்டு மகிழ்கின்றார் புகழேந்திப்புலவர். ஆவல்முழுமையும் அச் சிறுகையளாவிய கூழ் அமுதுன்பதிலேயே அமைந்திருப்பதைச் சொல்லாமற் சொல்லும் திறமே நம்மைப் பெரிதும் வியப்பில் ஆழ்த்திவிடுகின்றது. 'கேட்ட இசையைவிடக் கேளாத இசை இனிமையானது' என்பது போலச் சொல்லிக் காட்டும் பொருளைவிடச் சொல்லாமல் குறிப்பாகக் காட்டும் பொருளே அறிஞர்க்குப் பெருவிருந்தாகும். இன்னடிசில் புக்களையும் தாமரைக் கையின் காட்சி கட்புலம் மயக்கும் காட்சிதான். ஆயினும் அக்காட்சி தரும் இன்பம் அதனினும் மிகுதியான இன்பம் ஒன்றைத்தன் மாட்டுப் பொதிந்து வைத்துக்கொண்டு அதனைப் பெறத் தூண்டுவதை இப் பாடல் வரியில் நாம் உணர்ந்து மகிழ முடிகின்றது. கவிதைக் கலையின் சிறந்த உத்தியாகிய இதனைப் புகழேந்தி பொருத்தமுறத் தம்பாட்டில் பதித்துள்ளதனை - **'இன்னடிசில் புக்களையும் தாமரைக் கை' என்ற அளவோடு** நிறுத்திவிடுவதால் நாம் தெரிந்து வியக்கின்றோம்.

**நீலத் தயிரும் நிலாத்தயிரும்:**

காலந்தோறும் கவிஞர்களின் கவிதையாகிய பொற்சரட்டிலே புகுந்து வரும் இக்கருப் பொருளாகிய 'அளாவிய கூழ்' இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர் பாரதிதாசனார் நெஞ்சையும் ஆட்கொள்ளுகின்றது. அவருடைய 'குடும்பவிளக்

கில்' வள்ளுவரின் சிறு சொல்லோவியம் விரிந்து நின்று விளக்கம் புரிகின்றது.

வேடப்பன், நகைமுத்து இருவர்க்கும் வாய்த்த இல்லறப் பரிசில் 'அமிழ்து'. ஒருநாள் அறையிலே தூங்கியிருந்த அமிழ்து படுக்கைவிட்டெழுகின்றாள்; சிறகு விரித்துதறிச் செங்காலன்னம் நடக்கத் தொடங்கியதென நடக்கின்றாள். தாழ்வாரத் திடையிலே தந்தையின் எழுத்துப்பணி நடக்கும் இடமிருந்தது. அங்கேயிருந்த மைக்கூட்டைக் கையிலெடுத்துக் கொண்டு கொல்லைப்பக்கமாகக் குறு குறு நடந்து சென்றாள், அமிழ்து. முல்லைக் கொடியின் அடியிலே அம்மைக்கூட்டைக் கவிழ்த் தாள்; மையைச் சாய்த்தாள்! அத்தளிர் நெஞ் சிலே கற்பனை தழைத்தது; கற்பனைக்குச் சிறிய கைகள் உருக்கொடுத்தன; கலைவெற்றி பெற்ற அந்த அமிழ்து தன் தந்தையின் பால் திரும்பு கின்றாள் மலருதட்டிலே மணி நகை தவழ!

தந்தையோ அப்போது உணவு உண்டு கொண் டிருந்தான். அமிழ்திற்குத் தன் கையால் உணவூட் டத் தேடிக் கொண்டிருந்தான். விரைந்து ஓடி வந்த அம்மழலையரும்பு சேறுபடிந்த தன் கையாலே தந்தை உண்ணும் தயிரின் சோற்றை அள்ளினாள்! 'அப்பா! ஆ! ஆ!' என்றாள்! அப்பனோ வாய்திறந்து தணியாப் பசியோடு அச்சோற்றை உண்டு கொண் டிருந்தான். ஊட்ட நினைத்த தந்தைக்கு குழந்தை தான் ஊட்டத் தொடங்கிவிட்டாள். இத் தொண்டு தொடர்ந்தது. சின்னவள் அன்னை யானாள்! தாய் முகம் அவிழ்ந்த தாமரையாயிற்று! தந்தைக்கு நீலத் தயிரே நிலாத் தயிராயிற்று! சுவையிலோ அது எப்பொருளையும் விஞ்சிநின்றது.

இக்காட்சியினை . . . .

''அறையில் தூங்கி யிருந்த அமிழ்து
சிறகுவிரித் துதறிச் செங்கா லன்னம்
நடை தொடங் கியதென நடந்து, தாழ்வாரத்
திடையி லிருந்த மைக்கூட்டை எடுத்துக்
கொல்லையின் முல்லைக் கொடியின் அடியில்
சாய்த்து நீலம் சார்ந்த சேற்றால்
சிற்றில் ஒன்று செய்து முடித்தபின்
தந்தை உண்ணும் தயிரின் சோற்றை
அங்கையால் அள்ளி, ஆ! ஆ! என்றாள்!
அப்பனும் வாய்திறந் ததைவாங்கி உண்டான்
தொடர்ந்து நடந்த திந்தத் தொண்டு.
சின்னவள் அன்னை யான திறத்தை
நகைமுத்து கண்டு மிகமகிழ்ந் திருந்தாள்.
சேறும் சோறும் தந்தைக்குத் தேனே!
நீலத் தயிரும் நிலாநிறத் தயிரே!
''அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ், எனச் செப்பிய
வள்ளுவர் வாய்ச் சொல் பொய்யென
விள்ளுவர் உளரோ விரிநீர் உலகிலே!

— இவ்வகவல் நன்கெடுத்துக் காட்டுகின்றது! வள்ளுவரின் கருப்பொருளைக் கொண்டிருப் பதுடன், கவிதை வரிகளையும் முத்தாய்ப்பாகக் கொண்டு இவ்வகவற்பா முடிகின்றது. 'அளாவிய கூழ்' ஒரு சிறு கதை வடிவத்தையே பாரதி தாசனரிடம் பெற்றுச் சிறந்து விடுகின்றது.

**பூக்காடு:**

தமிழ்ச் சோலையிலே இன்னும் எத்துணையோ கவிதை மலர்கள் இக் கருக் கொண்டு மலர்ந்து மணம் பரப்பலாம். காலத்தால் இக்கருப் பொருள்கள் மூப்பும் சாவும் அடைவதில்லை. சுவைமிகு கவிமலர்களால் நிறைவுற்றிலங்கும் தண்டமிழ்ச் சோலை புகுவார்க்கு வற்றாத இன்பத் தேனை என்றும் வழங்கும் வண்மை சான்றது. இம் மலர்க்காட்டை நோக்கி இரு சிறகெழுப்புவது இலக்கியத்தும்பிகட்கு இயல்பாகும்.

கன்னற்
'பொருள்தரும் தமிழே நீயோர்
பூக்காடு! நானோர் தும்பி!'

—(பாவேந்தர் பாரதிதாசனார்)



தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்

முத்தமிழ்க்காவலர், கி. ஆ. பெ. விசுவநாதம்
திருச்சி

# தமிழ்ச் சொற் சிறப்பு

## மொழிச் சிறப்பு :

உலகில் முதன்முதல் மக்கள் பிறந்த நாடு தமிழ்நாடு. அவர்கள் முதன்முதலில் வாய் திறந்து பேசிய மொழி தமிழ் மொழி. அது நமது மொழி.

இவ்வுலகில் தோன்றி மறைந்த மொழிகள் பல. இன்றிருப்பன ஏறக்குறைய இரண்டாயிர மாகும். இவற்றுள் வேறு எந்த மொழிக்கும் இல்லாத சிறப்புக்கள் பலவற்றைத் தமிழ் மொழி ஒன்றுமட்டுமே பெற்றிருக்கிறது. அவை தொன் மைச்சிறப்பு, தனிமைச்சிறப்பு, இனிமைச்சிறப்பு, இளமைச்சிறப்பு, எளிமைச் சிறப்பு, ஒலிச்சிறப்பு, உருபுச்சிறப்பு, சுழிச்சிறப்பு, பண்புச்சிறப்பு, எழுத்துச்சிறப்பு, சொற்சிறப்பு, பொருட்சிறப்பு, கவிதைச்சிறப்பு, உவமைச்சிறப்பு, இலக்கியச் சிறப்பு, இலக்கணச்சிறப்பு எனப் பதினாறு.

## சொற் சிறப்பு :

இவற்றுள் சொற்சிறப்பு என்பது தமிழில் ஒரு தனித்தன்மை வாய்ந்தது. இச்சிறப்பைப் பிற மொழிகளிற் காண இயலாது. அம்மொழிகளில் சொற்கள் பல எழுத்துக்களைக்கொண்டு நீண்டு காணப்படும். தமிழில் உள்ள சொற்களிற் சில 7 எழுத்துக்களைக் கொண்டவை. பல ஐந்து எழுத் துக்களைக் கொண்டவை. 4, 3, 2, எழுத்துக் களைக்கொண்ட சொற்களே மிகை. ஓர் எழுத் துச் சொற்களும் இராமலில்லை. இதனை ஓரெழுத்து ஒரு சொல் எனவும் கூறுவதுண்டு. அடியில் வரு வனவற்றைக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ஆ — | பசு | ஈ — | ஓர் உயிர் |
| கோ — | மன்னன் | கை — | ஓர் உறுப்பு |
| தா — | கொடு | தீ — | நெருப்பு |
| தை — | மாதம் | நா — | நாக்கு |
| பை — | சாக்கு | பூ — | மலர் |
| போ — | போக்குதல் | வா — | வரவேற்றல் |
| மை — | கண்ணின் மை | வை — | வைக்கச்செய்தல் |

இவையே ஓரெழுத்து ஒருசொல் என்பன.

தமிழ் எழுத்துக்களின் எண்ணிக்கை 247.

தனித் தமிழ்ச் சொற்களின் எண்ணிக்கை ஏறத் தாழ 90,000. இவை எழுத்தின் பெருக்கத்தை யும், சொல்லின் பெருக்கத்தையும், தமிழின் வளத்தையும் ஒருங்கே காட்டுவனவாம்.

பிறமொழிச் சொற்கள் உருவத்தை மட்டுமே காட்டக்கூடியன; தமிழ்மொழிச் சொற்கள் உருவத்தையும், பருவத்தையும் சேர்த்துக் காட் டக்கூடியன.

### உருவம்-பருவம் :

'பெண்' என்பதற்கு ஆங்கிலேயர் 'உமன்' என்பர். வடமொழியினர் 'ஸ்திரீ' என்பர். இவை இரண்டும் உருவத்தை மட்டுமே காட்டு கின்றன; பருவத்தைக் காட்டுவனவாக இல்லை. காட்ட வேண்டுமானல் 'யங்', 'ஓல்டு' என் பதையும், 'பால்ய', 'வயோதிக' என்பதையும் சேர்த்துக் கூறியாக வேண்டும். இவை அம்மொழி களிலுள்ள சொல்வளத்தைக் காட்டுவனவாயில. தமிழில் உள்ள சொற்கள் உருவத்தையும், அதன் பருவத்தையும் காட்டுவதைக் கண்டு மகிழுங்கள்.

| சொல் | உருவம் | பருவம் |
|---|---|---|
| பேதை | பெண் | 5 வயதுக்கும்கீழ் |
| பெதும்பை | பெண் | 10 வயதுக்கும்கீழ் |
| மங்கை | பெண் | 16 வயதுக்கும்கீழ் |
| மடந்தை | பெண் | 25 வயதுக்கும்கீழ் |
| அரிவை | பெண் | 30 வயதுக்கும்கீழ் |
| தெரிவை | பெண் | 35 வயதுக்கும்கீழ் |
| பேரிளம்பெண் | பெண் | 45 வயதுக்கும்கீழ் |
| மூதாட்டி | பெண் | 60 வயதுக்கும்கீழ் |
| கிழவி | பெண் | அதற்கு மேல் |

பெண் என்ன? ஆண் என்பதைத்தான் பாருங்களேன்.

| | | |
|---|---|---|
| பிள்ளை | ஆண் | குழந்தைப் பருவம் |
| சிறுவன் | ஆண் | விளையாட்டுப் பருவம் |
| பையன் | ஆண் | பள்ளிப் பருவம் |
| காளை | ஆண் | காதற் பருவம் |
| தலைவன் | ஆண் | குடும்பப்பருவம் |
| முதியோன் | ஆண் | தளர்ச்சிப் பருவம் |
| கிழவன் | ஆண் | இறுதிப் பருவம் |

இவை அனைத்திற்கும் 'மேல்' (Male) எனும் ஆங்கிலச் சொல்லோ, 'புருஷன்' எனும் வடமொழிச் சொல்லோ பொருந்துமா? என எண் ணிப் பாருங்கள். இவை அம்மொழிகளின் சொற் பஞ்சத்தையே காட்டுகின்றன.

ஆண், பெண் மட்டுமல்ல. 'பூ' என்பதை எடுத்துக் கொள்ளுங்கள். 'ஃப்ளவர்' (Flower) என்பர் ஆங்கிலேயர்; 'புஷ்பம்' என்பர் வட மொழியினர். அவ்வளவுதான். உருவத்தையும், பருவத்தையும் காட்ட அவரிடம் சொற்களில. தமிழிற் பாருங்கள்.

| | | |
|---|---|---|
| அரும்பு | பூ | அரும்பும் பருவம் |
| மொட்டு | பூ | மொக்குவிடும் பருவம் |
| முகை | பூ | முகிழ்க்கும் பருவம் |
| மலர் | பூ | மலரும் பருவம் |
| அலர் | பூ | மலர்ந்த பருவம் |
| வீ | பூ | வாடும் பருவம் |
| செம்மல் | பூ | வதங்கும் பருவம் |

### உருவம்-பருவம்-வண்ணம் :

எப்படித் தமிழில் உள்ள சொல் வளம்? பூவை விட்டு இலையைத்தான் எடுங்கள். வடமொழியினர் இதைப் 'பத்திரம்' என்பர். ஆங்கிலேயர் 'லீஃப்' (Leaf) என்பர். அச்சொற்கள் 'இலை' என்ற உரு வத்தையே காட்டுகின்றன. அதன் பருவத்தைக் காட்டவில்லை. தமிழ்ச்சொற்களோ உருவத்தை யும் குறித்து, பருவத்தையும் காட்டி, இன்னும் ஒருபடி தாண்டி அதன் வண்ணத்தையும்கூட நினைவூட்டி மகிழ்விக்கின்றன.

| சொற்கள் | உருவம் | பருவமும் வண்ணமும் |
|---|---|---|
| கொழுந்து | இலை | குழந்தைப் பருவம் சாம்பல் வண்ணம் |
| தளிர் | இலை | இளமைப் பருவம் புளியங்கொட்டை வண்ணம் |
| இலை | இலை | நடுப் பருவம் பச்சை வண்ணம் |
| பழுப்பு | இலை | முதுமைப் பருவம் மஞ்சள் வண்ணம் |
| சருகு | இலை | கிழட்டுப் பருவம் சிவப்பு வண்ணம் |

தமிழில் உள்ள இச்சொற்கள் உருவம், பருவம், வண்ணம் ஆகிய மூன்றையும் ஒருங்கே காட் டுதலைக் கண்டுகளியுங்கள்.

(Gem) என்று எழுதி அதையே ஜெம் என்றும், கெம் என்றும் படிப்பர். (Talk) டால்க் என்று எழுதி டாக் என்றும், (Walk) வால்க் என்று எழுதி வாக் என்றும் படிப்பர். (Station) (ஸ்டேடியன்) என்று எழுதி அதை ஸ்டேசன் எனச் சொல்லச் சொல்லுவர். (San) என்றும், (Son) என்றும், (Sun) என்றும், எழுதி அவை அனைத்தையுமே 'சன்' எனப் படிக்கச் சொல் லுவர். இத்தகைய சொற்குழப்பங்கள் தமிழில் இல.

அரிசியைக் குறிக்கும் ஆங்கிலச் சொல் 'ரைஸ்' (Rice). சோற்றைக் குறிக்கும் சொல்லும் 'ரைஸ்'தான். இஃது ஆங்கில மொழியில் சொற் பஞ்சத்தைக் காட்டுகிறது. இதனுல் அரிசி கேட் பவர்களுக்குச் சோறும், சோறு கேட்பவர்களுக்கு அரிசியும் கிடைத்துவிடலாம். உணவு விடுதிகள் பலவற்றில் 'சோறு' எனக்கூறி வேகாத அரிசி யையே படைக்கின்றனர். வயிறெரிந்த மக்கள் இஃது என்னவென்று கேட்டால், 'ரைஸ்' என் கின்றனர். இதை யாரால் மறுக்க முடியும்? இத் துன்பங்கள் தமிழ்ச்சொற்களால் வருவனவல்ல.

தமிழ்மொழியில் பலபொருள் குறிக்கும் ஒரு சொல் என்றும், ஒருபொருள் குறிக்கும் பல சொல் என்றும் உண்டு. 'மா' என்பது ஒரு சொல். அது பல பொருள்களைக் குறிக்கும். அவை அழகு, அளவு, அறிவு, ஆவி, இடித்த மா, இடைக் கட்டு, கறுப்பு, ஒரு மரம், குதிரை, சீலை, செல் வம், தாய், நஞ்சுக்கொடி, நிறம், பறி, பெருமை,

மேன்மை, வண்டு, வயல், வலி, விலங்கு முதலியன.

அடுத்து ஒரு பொருள் குறிக்கும் பலசொல் லாவன : வேழம், களிறு, கறி, கைமா, நடைமலை, கைமலை, கறையடி, ஒருத்தல், அறுகு, ஆம்பல், நந்தி, தும்பி, துங்கல் என்ற இவை அனைத்தும் 'யானை' என்ற ஒன்றையே குறிப்பன. இவை தமிழின் சொல்வளத்தைக் காட்டுவனவாம்.

''ராம ஜெயம்'' என்பது வடமொழியிலுள்ள இருசொற்களைக்கொண்ட ஒரு சொற்றொடர். இதன் பொருள் என்ன? இது வேற்றுமை உருபு அற்றது ஆதலின் பொருளை விளக்காது நிற்கிறது. தமிழில் வேற்றுமை உருபு கலப்பதால் அது பொருளை நன்கு விளக்குகிறது.

இராமனை வெற்றி
இராமனால் வெற்றி
இராமனுக்கு வெற்றி
இராமனின் வெற்றி
இராமனது வெற்றி
இராமனிடத்தில் வெற்றி
இராமனே வெற்றி
என்று தமிழிற் கூறலாம்.

'ராம ஜெயம்' என்பது இதில் எதைக் குறிக் கிறது?

தமிழில் உள்ள சொல்வளத்தையும், பிற மொழிகளிலுள்ள சொற்பஞ்சத்தையும் காட்ட இஃது ஒன்றே போதுமானது.

'தமிழ் வளம்பெற்ற ஒரு மொழி. அதன் சொற்சிறப்பு ஒரு தனிச்சிறப்பு. அஃது என் தாய் மொழி என்பதற்காக நான் பெருமையடை கிறேன்,' என்று கூற ஒவ்வொரு தமிழனுக்கும் உரிமையுண்டு. அவ்வாறு நெஞ்சு நிமிர்ந்து நின்று கூறும் தகுதியும், உரிமையுமுடையவன் தமிழன் ஒருவனே.

''எங்கள் தமிழ்
வானம் அளந்த தனைத்தும் அளந்த தமிழ்.
எங்கள் தமிழ்
வானம் அறிந்த தனைத்தும் அறிந்த தமிழ்.
எங்கள் தமிழ்மொழி, எங்கள் தமிழ் மொழி
என்றென்றும் வாழியவே. அது
எங்கும் பரவிச் சுடரொளி வீசி
எழிலுடன் வாழியவே''

என்று வாய்திறந்து கூறுங்கள்.
வாழட்டும் தமிழ்மொழி.
வளரட்டும் தமிழ்ச்சிறப்பு.



# மொழி வாழ்த்து

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலும் தரித்தநறுந். திலகமுமே
தெக்கணமு மதிற்சிறந்த திரவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோ லனைத்துலகு மின்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் தமிழணங்கே!

—பேராசிரியர் **சுந்தரம் பிள்ளை**

தேனினும் இனியநற் செந்தமிழ் மொழியே
தென்னுடு விளங்குறத் திகழுந்தென் மொழியே
ஊனினும் ஒளிர்வுறும் ஒண்டமிழ் மொழியே
உணர்வினுக் குணர்வதாய் ஒளிர்தமிழ் மொழியே
வானினும் ஓங்கிய வண்டமிழ் மொழியே
மாந்தருக் கிருகண்ணு வயங்கு நன் மொழியே
தரணியில் சிறப்புறுந் தனித்தமிழ் மொழியே
தழைத்தினி தோங்குவாய் தண்டமிழ் மொழியே

**—கா. நமச்சிவாய முதலியார்**

வானூர்ந்த பொதியின்மிசை வளர்கின்ற மதியே!
மன்னியமூ வேந்தர்கடம் மடிவளர்ந்த மகளே!
தேனூர்ந்த தீஞ்சுனைசால் திருமாலின் குன்றம்
தென்குமரி யாயிடைநற் செங்கோல்கொள் செல்வி!
கானூர்ந்த தேனே! கற்கண்டே! நற்கனியே!
கண்ணே! கண் மணியே! அக் கட்புலம்சேர் தேவி!
ஆனுத நூற்கடலை அளித்தருளும் அமிழ்தே!
அம்மே! நின்சீர் முழுதும் அறைதல் யார்க் கெளிதே ?

—கரந்தைக் கவியரசு **வேங்கடாசலம் பிள்ளை**

எக்கலையும் இன்னே பெறலாமெல் லாமொழியும்
புக்கலையும் நெஞ்சே புகலிடமாய் — மிக்கதமிழ்த்
தாயேயென் றோர்ந்து தளிரடிக்கீழ்க் கைகுவித்து
நீயே வணங்கப் புகின்.

**—நீ. கந்தசாமி பிள்ளை**

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

டாக்டர் சி. இலக்குவனர், எம்.ஏ., பி.எச்.டி.
தமிழ்த்துறைத் தலைவர், மாநிலக் கல்லூரி, சென்னை.

# தமிழ் வரி வடிவங்கள்

### தமிழ் முதல் எழுத்துக்கள்:

இலக்கிய வளத்துடன், இலக்கண வரையறை கொண்டு விளங்குகின்ற தமிழ் மொழிக்கு நெடுங் கணக்கு — அஃதாவது எழுத்துக்கள்—சுருக்கமாக இல்லையென்று சிலர் கருதுகின்றனர்கள். அதனால் அதைப்படிப்பதற்குக் கடினமானதென்றும் கூறு கின்றனர், தமிழ் இலக்கண நுட்பம் அறியாதவர் கள். தமிழுக்கு எழுத்துக்கள் 247 என்று கூறுவதனால், இவ்வாறும் சிலர் கருதுகின்றனர். ஆங்கில முறைப்படி நோக்குவோமேயானால் தமிழுக்கும் 26 எழுத்துக்கள் என்றே கூறலாம். 12 உயிர், 18 மெய், ஆய்தம் ஒன்று ஆக 31 வரி வடிவங்கள் உள்ளன. ஆங்கிலத்தில் உயிர் எழுத் துக்கள் 5 தான். குறிலுக்கும், நெடில்களுக்கும் வெவ்வேறான எழுத்துக்கள் கிடையா. அவ்வாறு தமிழுக்கும் நாம் கொள்வோமேயானால் அ, இ, உ, எ, ஒ, என்ற ஐந்தையுமே குறிலுக்கும், நெடி லுக்கும் கொண்டு, இவைகளுக்குரிய நெடில் எழுத் துக்களை நீக்கினால் 26 எனத் தெற்றனத் தெரி கின்றதன்றோ! இன்னும் இதில் ஐ, ஔ, இரண் டையும் நீக்கி, அய் (ஐ), அவ் (ஔ), எனப் பயன் படுத்துவோமேயானால் அந்த இரண்டு நெடில் களையும் நீக்கிவிடலாம். ஆக இப்பொழுது 18 மெய், 5 உயிர், ஆய்தம் ஒன்று, ஆக 24 எழுத் துக்கள்தாம்.

### உயிர்மெய் எழுத்துக்கள்:

உயிர்மெய் 216 எழுத்துக்களும் புதிய வடி வங்கள் அல்ல. ஆங்கிலத்தில் உயிரும், மெய்யும் தனித்தனியாகவே எழுதப்படுகின்றன. பண் டைத் தமிழர்கள் ஓலைச்சுவடிகளில் எழுத்தாணி களினால் எழுதியதினாலே, இடச் சுருக்கத்தையும், உழைப்புச் சுருக்கத்தையும் கருதி, மெய்யெழுத் துக்களிலிருந்தே உயிர்மெய் எழுத்துக்களையும் படைத்துக் கொண்டனர். ஆகவே உயிர்மெய் எழுத்துக்களைத் தனி வடிவங்களாகக் கருதல் கூடாது. உயிர் எழுத்துக்களில் குறிலும், நெடி லும், தனித்தனியாக இருப்பதினால் மொழியைக் கற்பதற்கு எளிதாகவும், உச்சரிப்புக் குறைபாடின் றிப் பேசுவதற்குத் துணையாகவும் உள. தொல் காப்பியம் என்று ஆங்கிலத்தில் எழுதினால், தொல் காப்பியத்தைப் பற்றி அறியாதவர், தோல்காப் பியம் என்றும் படிக்கலாமன்றோ! ஆங்கிலத்தில் குறில், நெடில் இல்லாததனால், ஆங்கில மொழி யைக் கற்பதில், எவ்வளவு இடர்ப்பாடு உள்ளது என்பதை நாம் அறிவோம். ஆகவே 12 உயிர், இருத்தல் செப்பமுற்றதன்மைக்கு உரியதாகும். 18 மெய்த்தோற்றம் தமிழகத்தில் வழங்கும் சொற்களை அடிப்படையாகக் கொண்டதாகும். இவ்வித எழுத்துச் சுருக்கமுடைய மொழி, கற்

பதற்கு எளியதொரு மொழி, உலகில் வேறில்லை என்றே சொல்லலாம்.

**தமிழ் வடிவங்களின் பழமை:**

இம்முறை தொல்காப்பியர் காலமான கி.மு. 7-ஆம் நூற்றுண்டு முதற்கொண்டே வழக்கில் இருந்து வருகிறது. இன்றைய வரி வடிவங்கள் நூற்றுண்டு தோறும் மாறுபட்டு வருவதாகச் சிலர் கூறுகின்றனர். கல்வெட்டுக்களில் காணப் படும் வரி வடிவங்கள்தாம், கல்லிற் பொறிக்கின்ற கல் தச்சர்களின் மாட்டாமையால் வடிவில் மாறு பட்டு வந்தனவேயல்லாமல், புத்தகங்களிலுள்ள வரி வடிவங்கள் தொல்காப்பியர் காலம் முதல், மாற்றமுறுமல் வந்துள்ளனவேயாகும். புத்தகக் கல்வி, தொடர்ந்து பயிலப்பட்டு வந்துள்ளதனுல் வரி வடிவங்கள் மாறுவதற்கு இடமேயில்லை. தந்தை வழி மகனும், ஆசிரியர் வழி மாணவனும், தொடர்ந்து கற்கின்றபோது வரிவடிவங்கள் மாறு வதற்கு இடமேது? ஆகவே இன்று நாம் புத்தகங் களில் காணும் தமிழ் வரிவடிவங்கள் 2000 ஆண்டுகட்கு முன்பிருந்தே பயிலப்பட்ட வரி வடிவங்கள் என்றே அறிதல் வேண்டும்.

இனிப் புலவர்கள் தமிழில் எழுத்துக்கள் எத்துணை என்றுல், தொல்காப்பியர் வழி நின்று 216 உயிர்மெய் எழுத்துக்களைச் சேர்க்காமல் 31 என்றே கூறுதல்வேண்டும். ஆங்கிலத்தைவிட 5 எழுத்துக்கள் கூடுதலாகப் பெற்றிருந்தாலும், தமிழ், ஒலியியல் முறையில் அமைந்த மொழி என்பதை உலகத்தவருக்கு எடுத்துரைக்க வேண் டும்.



வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து.

ச. அகத்தியலிங்கம்




தமிழ்மொழி நீண்ட வரலாற்றினைக் கொண்டது. இதுபோன்ற சிறந்த பாரம்பரியத்தைக் கொண்ட மொழிகள் ஒருசிலவே. அவற்றுள்ளும் சில வழக்கொழிந்த நிலையை அடைந்துள்ளன. ஆனால் தமிழ்மொழியோ சாகாவரம் பெற்று இன்றும் ஒரு சிறந்த பேச்சுமொழியாக வழங்கக் காணலாம். இதன் நீண்ட வரலாற்றிலும் எத்தனையோ உயர்வு தாழ்வுகள், மேடுபள்ளங்கள், ஆக்க அழிவுகள், ஆக்கிரமிப்புகள்!

இந்நீண்டகாலப் பகுதியின் ஒரு சிறிய திருப்பமே 'ஐரோப்பியர் காலம்'.

## மேனாட்டார்களின் தொடர்பு:

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே மேனாட்டினர்க்கும் தமிழ் நாட்டினர்க்கும் வாணிகத் தொடர்பு இருந்து வந்துள்ளதை இலக்கியங்கள் காட்டும். ஆயினும், இத்தொடர்பு 15-ஆம் நூற்றுண்டில் இந்தியா வந்த வாஸ்கோடகாமாவினால் தான் வலுப்பெற்றது எனக்கூறலாம். இதன் பின்னர்த்தான் மேனாட்டினர் தமிழ் மண்ணில் தங்கிப் பல்வேறு ஆக்கப்பணிகளில் ஈடுபட்டனர். அரசியலில் எத்தனையோ குளறுபடிகளைச் செய்த போதிலும், இலக்கியம், இலக்கணம் போன்ற பல துறைகளில் இவர்கள் செய்த பணிகள் மகத்தானவை. இக்காலத்தில் தமிழ்மொழியும் இலக்கியங்களும் பெற்ற ஏற்றமும், எழுச்சியும், மாற்றமும் பல அறிஞர்களால் எழுதப்பட்டுள்ளன. இந்நிலையில், தமிழ்மொழி உலக அரங்கில் எந்நிலையில் உள்ளது? அந்நிலைக்குக் காரணங்கள் என்ன— அதைத் திருத்துவதில் தமிழறிஞர்கள் எத்தகைய பணிகளைப் புரிதல் வேண்டும் என்பதைப் பின்னணியாகக் கொண்டதே இக்கட்டுரை.

ஐரோப்பியர் தங்கள் சமயப் பணிக்கெனத் தமிழைப் பயின்று வந்த போதிலும், தமிழின் இலக்கியச் சுவையும், இலக்கண வரம்பும் இவர்களை ஈர்த்து நின்றமை கண்கூடு. இதன் பயனாய்த் தமிழ் மொழி அடைந்த வளர்ச்சியும், தமிழ் இலக்கியம் பெற்ற ஏற்றமும் பலவாம். இது போன்றே மேலை நாட்டினரின் தொடர்பால் நம்மவருக்கு ஏற்பட்ட இலக்கிய, இலக்கண அறிவு வளர்ச்சியால் வளர்ந்த தமிழ் மொழி ஆராய்ச்சியும், இலக்கிய வளர்ச்சியும் குறிப்பிடத்தக்கவை.

## இலக்கியத்திறனாய்வும்-ஆராய்ச்சியும்:

இலக்கியம் சிறந்து வளர வேண்டின் இலக்கிய ஆராய்ச்சியும், இலக்கியத் திறனாய்வும் வளர வேண்டும். மேல்நாட்டு இலக்கியங்கள் பல சாகாவரம் பெற்று நிற்பதற்குக் காரணம் அந்நாட்டு இலக்கியத் திறனாய்வும், இலக்கிய ஆராய்ச்சியுமே. சிறந்த ஓர் இலக்கியத்தைப்பற்றி வெளிவரும் ஆராய்ச்சியும், திறனாய்வும் அந்த இலக்கியத்தின் தரத்தினை உலகுக்குக் காட்டுவதுடன், பின்னர்த் தோன்றப் போகும் பல இலக்கியங்களின் தரத்திற்கும் வித்துக்களாக அமைகின்றன. இதைக்கருத்தில் நிறுத்தியே பல இலக்கியத் திறனாய்வுகள் வெளிவருகின்றன. இன்று தமிழ்நாட்டில் ஓரளவு இலக்கியத்திறனாய்வு வளர்வதன் காரணம் மேனாட்டு இலக்கியத்தொடர்பே.

### தமிழிலக்கியத்திற்கு மேனுட்டார் செய்த தொண்டு :

தமிழ் இலக்கியங்கள் உலக இலக்கியங்களுடன் ஒப்பிடத்தக்க தகுதியும், பெருமையும் பெற்றவை. இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன் தோன்றிய சங்க இலக்கியங்கள்; கம்பனின் இராமாயணம், உலகக்கவி திருவள்ளுவரின் திருக்குறள், நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம், சிந்தாமணி போன்ற இலக்கியங்கள் உலக இலக்கியங்களாகக் கருதத் தக்கவை. இவற்றின் பெருமைக்ளை உணர்ந்து உலகுக்கு உணர்த்திய பெருமை ஐரோப்பிய அறிஞர்களைச் சாரும். இவர்களின் நன்முயற்சியால்தான் இன்றைய மேலை உலகம் ஓரளவு தமிழ் இலக்கியங்களைப்பற்றிய அறிவினைப் பெற்றுள்ளது. இவர்கள் பணியினுல்தான்.

1. முதன்முதல் அச்சுப் புத்தகங்கள் தோன்றின. இதன் பயனுக நம் இலக்கியங்களை நாம் அறியும் வாய்ப்பும், வசதியும் கிடைத்தன.
2. உரைநடை வளர்ச்சியில் பெரிய மாற்றமும், திருப்பமும் ஏற்பட்டன.
3. உரைநடைக்கு வேண்டிய கால் மாத்திரை, அரை மாத்திரை முதலியன இடும் வழக்கம் ஏற்பட்டது.
4. பல் வேறுவகை இலக்கியங்கள் உருவாயின. சிறுகதை, புதினம், நாடகம் போன்றவை குறிப்பிடத்தக்கவை.
5. எத்தனையோ மொழிபெயர்ப்பு இலக்கியங்கள் வெளிவந்தன. இதனுல் உலக இலக்கியங்களை நம்மவர் அறிந்து கொள்ளவும், அம்முறையில் புதிய இலக்கியங்கள் உருவாகவும் வாய்ப்பு ஏற்பட்டது.
6. குறள், நாலடியார் போன்ற இலக்கியங்களை மேனுட்டார் அறிந்து அதன் வாயிலாகத் தமிழர் நாகரிகம், பண்பு போன்றவற்றை உணரும் நிலை ஏற்பட்டது.
7. இலக்கியத் துறையில் மட்டுமன்றி அறிவியல், உள்ளவியல், பொறியியல், மருத்துவ இயல் போன்ற பல துறைகளில் நம்மவர் முன்னேற வாய்ப்பு உண்டாயிற்று.
8. இலக்கியத்திறனுய்வு, இலக்கிய ஆராய்ச்சி போன்ற துறைகள் வளர்ந்தன.
9. எல்லாவற்றிற்கும் மேலாக நம்மை நாமே அறிந்து கொள்ளும் சூழ்நிலை உருவாயிற்று.

தமிழ் மொழி திராவிட மொழிகளில் ஒன்று என்பதும், வடமொழியினின்று பிறந்ததன்று என்பதும் இன்று உலகம் அறிந்த உண்மை. எத்தனையோ நூற்ருண்டுகளாகத் தெரியாதிருந்த இவ்வுண்மை அறிஞர் கால்டுவெல் அவர்களின் ஆராய்ச்சியினுல்தான் வெளிவந்தது. இன்றைய திராவிட மொழியியல் ஆராய்ச்சியின் தந்தையாக விளங்கும் கால்டுவெல் அவர்களே தமிழ்மொழி இயல் வளர்ச்சிக்கும் வித்திட்டவர் எனின் மிகையாகாது. அவருக்கு முன்னும் பின்னும் வாழ்ந்த ஐரோப்பிய அறிஞர்களின் தமிழ்மொழிப்பணி நாம் என்றும் உள்ளத்தில் நிறுத்திப் போற்றுதற்குரியது. இத்தகைய அறிஞர்களின் முயற்சியால் இன்று தமிழ்மொழி ஆராய்ச்சி நிலைபெற்று வளரக் காணலாம்.

எனினும், வடமொழிக்கு மேலைநாட்டில் இருக்கின்ற மதிப்பும், பெருமையும் தமிழ்மொழிக்கு இருப்பதாகக் கருத முடியாது. காளிதாசனின் சாகுந்தலம் தெரிகின்ற அளவு இளங்கோவின் சிலம்பு தெரியவில்லை. வேதங்களையும், மனுவையும் போற்றுகின்ற அளவில் திருக்குறள் போற்றப்படுவதில்லை. அமெரிக்க நாட்டில் பல பல்கலைக் கழகங்களில் பணியாற்றும் ஒப்பிலக்கியப் (Comparative Literature) பேராசிரியர்கள் பலர் தமிழ் இலக்கியங்களைப்பற்றிய எந்தவிதமான அறிவுமின்றி இருக்கக் காணலாம். மேலைநாட்டுப் பல்கலைக் கழகங்கள் பல வடமொழிப் பிரிவினைக் கொண்டிருக்கத் தமிழ்மொழி விரல்விட்டு எண்ணக்கூடிய ஒரு சில இடங்களிலேயே பயிலப்படுவதைக் காணலாம்.

இத்தகைய நிலைக்குப் பல காரணங்களைக் கூற முடியும். சங்க இலக்கியங்களைப் பற்றிய அறிவு சாமிநாத ஐயர் காலத்துக்குப் பின்னுல் ஏற்பட்ட ஒன்ருகும். கற்றுத்தேர்ந்து ஆங்கிலத்தில் சரளமாகப் பேசும் வன்மைபெற்ற தமிழறிஞர்கள் பலரும் காளிதாசனையும், வால்மீகியையும்பற்றிப் பேசிவந்தனரேயன்றிக் கம்பனையும், வள்ளுவரையும் பற்றிப் பேசவில்லை. இந்திய நாகரிகம் என்ற நிலையில் அதனுள் சிறந்து நிற்கும் திராவிட நாகரிகம் தெரியாது போயிற்று. எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு மாக்ஸ்முல்லரையோ, விட்னேயையோ நம்மால் பெற முடியவில்லை.

### மேனுட்டில் தமிழ் மொழி :

எனினும், இன்றைய நிலையில் தமிழ்மொழி ஆராய்ச்சியும், இலக்கிய ஆராய்ச்சியும் வளர வாய்ப்பும், வசதியும் ஏற்பட்டு வரக் காணலாம். மேனுட்டுப் பல்கலைக்கழகங்கள் சிலவற்றில் தமிழ் மொழி பயிற்றுவிக்கப்படுவதுடன், சில பேராசிரியர்கள் தமிழ்மொழி ஆராய்ச்சியிலும் ஈடுபட்டுள்ளனர். மேனுடுகளில் பயிற்சி பெற்ற அறிஞர்கள் பலர் தமிழ்மொழியின் பல்வேறு கூறுகளை ஆராய்ந்து வருவதும், துடிப்புள்ள இளைஞர்கள் பலர் மொழியாராய்ச்சியில் பங்குபெற்று ஆர்வம் காட்டி வருவதும், மொழி இயல் நுட்பங்களை அறிந்து ஆராய்ந்து, பல்வேறு தமிழ்ப் பேராசிரியர்கள் எழுதிவருவதும் தமிழ் மொழியாராய்ச்சிக்கு நல்லதோர் எதிர்காலம் இருக்கிறது என்பதைக் காட்டும்.

உருவாகி வரும் இந்த நிலையை மென் மேலும் வளர்ந்தோங்கச் செய்வதில் தமிழறிஞர்கள் கண்ணும் கருத்துமாய் இருத்தல் வேண்டும். நல்ல பயிற்சியும், ஆராய்ச்சித்திறனும், அதனுல் வெளிப்படும் உண்மைகளை எழுதும் ஆற்றலும் இளைஞர்களிடையே சிறந்தோங்கி வளர வழிசெய்வது தமது கடமை எனத் தமிழறிஞர் கருதிச் செயல்படவேண்டும். மறைந்துகிடக்கும் திறனைத் தேடிச் சென்று ஆராய்ச்சி உலருக்கு அறிமுகப்படுத்தல் வேண்டும்.

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து

ந. சஞ்சீவி, எம்.ஏ., எம்.லிட்.
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்.




## சங்கத் தமிழ் :

சங்கத் தமிழ் தங்கத் தமிழ்; பத்தரை மாற்றுப் பசுந்தமிழ். இப்பழந்தமிழ் இயல்பை உணர்ந்து இன்புற ஆழ்ந்த சங்க நூல் ஆராய்ச்சி இன்றியமையாதது. இவ்வாராய்ச்சியால் பெறலாகும் பொதுத் தெளிவுகள் பல. அவற்றுள் தலையாய ஒன்று, 'சங்கத் தமிழ் தனித்தமிழ்; பிறமொழிச் செல்வாக்கை மிகக் குறைவாகப் பெற்றது' என்பது. இவ்வுண்மை, சங்கத் தமிழில் இடைக்காலப் பிற்காலத் தமிழினும் மிகக்குறைந்த விழுக்காடே வடசொற்களும், பிராகிருத, பாலிச் சொற்களும் கலந்துள்ளமையால் புலனாகும். அவையும் தொல்காப்பிய நெறிப்படி, 'வடவெழுத்து ஒழித்துத் தமிழெழுத்தோடு' தான் பயின்றுள்ளன. கடந்த முந்நூறு ஆண்டுகளிலேயே வடமொழி ஒலிகளை அப்படியே பயன்படுத்தும் வழக்கம் சமயம், சாதி காரணமாகப் பெரிதும் நுழைந்தது. சங்க நூற் பார்ப்பனப் புலவரும் மிகக் குறைந்த வட சொற்களையே பயன்படுத்தியமையும் பரிபாடல் போன்ற நூல்களில் ஒரு சில வட சொற்கள் தமிழ்மொழி பெயர்ப்பும் பெற்றே வழங்குவதும் ஈண்டு நினைவுறத்தக்கது. அடுத்த நிலையில் கருதத்தக்கது பழந்தமிழ்ச் (சங்கத் தமிழ்ச்) சொற்கள் பலவும் ஓரசை ஈரசைச் சொற்களே என்பதாகும். எடுத்துக்காட்டிற்கு இக்கட்டுரையிலேயே வரும் சங்கத் தமிழ்ச் சொற்களின் அகர வரிசைப் பட்டியலைப் பார்க்கலாம்.

இனிச் சங்கத் தமிழ்ச் சொற்களை ஆராயுங்கால் தோன்றும் சிறந்த கருத்துக்கள் சிலவற்றைப்பற்றி எண்ணுவோம் :

## பழகு தமிழ்ச் சொற்கள் :

(1) நூற்றுக் கணக்கான பழந்தமிழ்ச் சொற்கள் இன்றும் ஒரு சிறு மாறுபாடுமின்றிப் பழகு தமிழ்ச் சொற்களாகவே பயின்று வருகின்றன. எடுத்துக்காட்டு :

| | | |
|---|---|---|
| 1. அன்பு | 11. ஓதம் | 21. மகள் |
| 2. ஆசை | 12. ஔவையார் | 22. யானை |
| 3. இன்பம் | 13. எஃகு | 23. வடக்கு |
| 4. ஈட்டி | 14. கதவு | 24. வாய் |
| 5. உயிர் | 15. சடை | 25. விதை |
| 6. ஊர் | 16. ஞாயிறு | 26. வீசு |
| 7. எருது | 17. தந்தை | 27. வெயில் |
| 8. ஏர் | 18. தோழன் | 28. வேல் |
| 9. ஐயர் | 19. நனவு | 29. வேற்றுள் |
| 10. ஒன்று | 20. பழி | 30. வையம் |

இச்சொற்களுக்கு எழுத்தறியா ஏழைத் தமிழன் ஒருவன் எடுத்த எடுப்பில் என்ன பொருள் கூறுவானோ அப்பொருளில் இச்சொற்கள் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பும் வழங்கின என்பதே இங்குக் கருதத்தக்கது. மேலே காட்டியவை எடுத்துக்காட்டுக்களே. இவை போல நூற்றுக்கணக்கான சொற்களைச் சங்க நூற் சொற்

களுள் காணலாம். இதனுலேயே இன்பத் தமிழை ''மாருத இளமையோடு விளங்கும் கன்னித் தண்டமிழ்'' — என்று இற்றை நாளைய மொழி நூற் பேராசிரியரும் போற்றக் காண்கிறோம்.

*(2)* சங்கத் தமிழ்ச் சொற்கள் பல இன்று பிறமொழிக் கலப்பு நிறைந்த சென்னை போன்ற மாநகரில் வாழ்வோர் மலர்வாயில் மருவவில்லை என்ருலும், பிறநகர்களிலும், நாட்டுப்புறங்களிலும் வழங்கும்.

எ-டு: அல்லல் - துன்பம், கடிதாக - விரைவாக, இரத்தல் - பிச்சை கேட்டல், வையம் - உலகம்.

*(3)* சென்னை போன்ற மாநகர்களிலும் மாளிகைகளில் வழங்காத சங்கத் தமிழ்ச் சொற்கள் அந்நகரங்களிலேயே மண் குடிசைகளில் வழங்கும்.

எ-டு : சோறு

*(4)* சங்கச் சொற்கள் சில பெருவாரியான மக்கள் வாயில் வழங்காது சிறுபான்மையினரான அதுவும் வடமொழிச் செல்வாக்கிற்குப் பெரிதும் இரையானவர்கள் மொழியில் வேர் பிடித்திருக்கும்.

எ-டு : அகம் - வீடு.

ஆத்துக்கு (அகத்துக்கு) என்று மொழியப் படுவதை நாம் இன்று காணுகிறோம்.

*(5)* சங்கச் சொற்கள் சில இன்றைய தமிழகத்தில் வட்டார வழக்காகவே வாழும்.

எ-டு : உறக்கம், துஞ்சல், மூடை என்னும் சொற்கள் இன்று பாண்டி நாட்டிலேயே வழங்குவன. பிற இடங்களில் தூக்கம், மூட்டை எனப் படும்.

*(6)* சமவெளிகளில் வாழும் மக்கள் பேச்சு வழக்கில் மடிந்து போன சங்கச் சொற்கள் சில மலைமேல் வாழும் மக்கள் வாயில் மலரும்.

எ-டு : மீன்—நட்சத்திரம்.

*(7)* வழக்கொழிந்த பல சங்கச் சொற்கள் ஊர்ப்பெயர்களில் இன்றும் ஒலிக்கும் .

எ-டு : படப்பை } செங்கற்பட்டு
செம்புலம் } மாவட்டத்து ஊர்கள்.
புள்ளம்பாடி — திருச்சிராப்பள்ளி
மாவட்டத்து ஊர்.

*(8)* சங்க கால ஊர்ப் பெயர்கள் பல இன்றும் வாழும்.

எ-டு : உறையூர், கருவூர், ஒக்கூர், மதுரை.

*(9)* இன்றைய தமிழ் மக்கள் பேச்சுவழக்கில் பல சங்கச் சொற்கள் — சங்கச் சொற்களைச் சார்ந்த சொற்கள் - புத்துயிர் பெறக் காணலாம்:

எ-டு : எழிலரசி, இயக்குநர், கபிலன், நன்னன், நெடுஞ்செழியன், வேட்பாளர்.

*(10)* சங்கச் சொற்களுட் பல, திராவிட ஒப்புச் சொற்கள் பெற்றுள்ள திண்மை உடையவை. எ-டு :

| தமிழ் | கன்னடம் | தெலுங்கு | மலையாளம் |
|---|---|---|---|
| உரல் | ஒரல் | ரோலு | உரலு |
| ஓம்பு | ஓவு | ஓமு | ஓம்பு |
| கிளி | கிளி | கிலுக | கிளி |
| நாண் | நாண் | நான | நாணம் |
| நுரை | நொரே | நுருங்கு | நுர |
| பன்றி | பந்தி | பந்தி | பன்னி |
| புலி | புலி | புலி | புலி |
| பூ | பூ | பூவு | பூவு |
| மஞ்சு | மஞ்சு | மஞ்சு | மஞ்நு |
| மலை | மலெ | மல | மல |
| விரல் | பெரல் | விரலு | விரல் |

*(11)* ஒரு சில சங்கச் சொற்கள் அடியோடு வழக்கிழந்தன.

எ-டு: அலை, இயவுள், உகிர், ஞமலி, மஞ்ஞை.

*(12)* ஒரு சில சங்கச் சொற்கள் பலவகைப் பொருள் மாற்றம் பெற்று வழங்கும். ஈண்டுச் சற்றும் தொடர்பற்ற பொருள் மாற்றம் பெற்றுள்ள ஒரு சில சொற்களையும், அவற்றின் முன்னைய, இன்றைய பொருளையும் பார்ப்போம் :

எ-டு :

| சொல் | சங்ககாலப் பொருள் | தற்காலப் பொருள் |
|---|---|---|
| அத்தை | ஓர் அசை | தந்தையின் உடன் பிறந்தாள் |
| பாட்டி | பாணன் மனைவி | தாய் அல்லது தந்தைக்குத் தாய் |
| செத்து | போல, கருதி | இறந்து |
| மாண்ட | உயர்ந்த | இறந்த |
| செய்தி | செய்கை | கேள்வியுறுவது |

எனவே 'அத்தை — பாட்டி — செத்து — மாண்ட — செய்தி' என்ருல் அன்று வேறு பொருள். இன்ருே?!

*(13)* தமிழகத்தில் பேச்சு வழக்கற்ற பல சங்கச் சொற்கள் பிற திராவிட மொழிகளில் வாழ் வாங்கு வாழும்.

எ-டு : மலையாளத்தில்: நல்கு—கொடு, பணி-வேலை, பறை—சொல், விளி—கூப்பிடு.

துளு—கன்னடத்தில் : திங்கள்—மாதம், நிணம்—கொழுப்பு,
{ நெத்தரு— நெய்த்தோர் — இரத்தம்.
{ நித்தெரு (துளு)

தெலுங்கில் : ஆ(வு)—பசு, இல்(லு)—வீடு, செப்பு—சொல்லு.

(14) சங்கச் சொற்களுட் சில தமிழினம் பிறவினங்களோடு கொண்ட தொடர்பு காட்டும்.

எ-டு :

யவனர்—கிரேக்கர், ஆரியர்—ஆரியர்,

மோரியர்—மௌரியர், பாடலி—பாடலிபுத்திரம்.

(15) சங்கச் சொற்களையும் பிறமொழிகளில் சங்க காலத்திற்கு ஒத்த காலத்தில் உள்ள சொற்களையும் ஒப்பிட்டு ஆராயும்போது பிறமொழிகளில் இடம் பெற்ற சங்கச் சொற்களின் பெற்றி புலனாகும்.

எ-டு :

| சங்கச் சொல் | சமஸ்கிருதச் சொல் (ரிக்வேத) |
|---|---|
| இரா | இராத்திரி |
| உரு | ரூபா |
| உலக்கை | உலூகலா |
| கருமான் | கருமாரா |
| குண்டு | குண்டா—(குழி, துளை) |
| கணம் | கண |
| நீலம் | நீலா |
| பழம் | பலா |
| மயில் | மயூரா |
| மாலை | மாலா |
| முரசு | முரஜ |
| வலம்—(வலிமை) | பல |

| சங்கச் சொல் | கிரேக்கர் சொல் |
|---|---|
| அரிசி | ஓரிஜா |
| இஞ்சிவேர் | ஜிஞ்சிபேர் |

| சங்கச் சொல் | ஹீப்ரூச் சொல் |
|---|---|
| அகில் | அகிலம் |
| தோகை | துகி |

(16) சங்கச் சொற்கள் பல கலைவளமும், கருத்து வளமும் செறிந்தவை.

எ-டு : (1) 'கண்' வழி எழுந்தன :

இடுக்கண் இன்கண்
புன்கண் மென்கண்
வன்கண்

(2) ஒரு பொருட் பன்மொழி

அடங்காதோர் அடையார்
ஒட்டார் ஒன்னார்
கொள்ளார் சேரார்
நண்ணார் பொருந்தார்
மேவார்

ஏட்டு வழக்கு — நாட்டு வழக்கு என்ற அடிப்படையில் ஆராயும்போது விளங்கும் உண்மைகளுள் சிலவே மேற்குறித்தன. இவற்றிலும் சிறப்பாகச் சங்கத் தமிழால் தமிழினம் உலக அரங்கில் பெருமை பெறத்தக்கது ஒன்று உண்டு. அது சங்கத் தமிழ்ச் சொற்கள் பலவற்றின் பொருட் சிறப்பே ஆகும். அப்பொருட் சிறப்பால் பழந்தமிழர் தம் கருத்துவளர்ச்சிச் சிறப்பும், நாகரிக வளர்ச்சிச் சிறப்பும் நன்கு விளங்கும். அவ்விளக்கம் நம் தாயினத்தின் — தமிழினத்தின் ஆண்டுத் தொன்மையையும், அறிவுத் தொன்மையையும் உறுதி செய்யும்.

எ-டு :

| சொல் | பொருள் |
|---|---|
| இறை | அரசன், ஆண்டவன் |
| ஊழ் | முறை, விதி |
| கடவுள் | கடந்தும் கலந்தும் இருப்பது |
| பால் | பகுப்பு, விதி |
| முறை | ஊழ், விதி |
| வினை | செயல், விதி |
| வெறுக்கை | செல்வம் |

பழந்தமிழர் உலகியல் கருத்துக்களும், உயிரியல் கருத்துக்களும் எவ்வளவு இயல்பான எளிய அடிப்படையிலிருந்து எவ்வளவு உயரிய நோக்கோடு உயர்ந்துள்ளன என்பது மேற்கண்ட சொற்களால் தெளிவாகும்.

இனிப் பத்துப்பாட்டும் எட்டுத் தொகையுமாகிய சங்கத் தமிழை ஊடுருவிப் பார்த்து அவற்றின் மொழியியல் சிறப்புப் பண்புகள் சிலவற்றை நினைவுகூர்வோம். அதற்குமுன் கருதத்தக்க ஒன்று தொல்காப்பியம் சங்கநூல் அன்று என்பது. இது பற்றிப் பேராசிரியர் டாக்டர் சி. இலக்குவனார் தரும் விளக்கம் வருமாறு :

''சகரக் கிளவியும் அவற் றோ ரற்றே
அ ஐ ஔ எனும் மூன்றலங் கடையே
(தொல்—எழு—29)

என்ற நூற்பாவை நோக்குமிடத்துச் சங்கம் தமிழகத்தில் தோன்றுவதற்கு முன் தொல்காப்பியம் இயற்றப்பட்டிருக்கலாம் என்று கருத இடமுண்டு. தொல்காப்பியம் 'நிலந்தரு திருவின் பாண்டியன்' அவையத்தில்தான் அரங்கேற்றப் பட்டிருப்பதாகப் பனம்பாரனார் கூறியுள்ளார். புலவர் குழுமிய சங்கத்தில் ஆராயப்பட்டதாகக்

கூறினரிலர். அரசனவை வேறு. தமிழ்ச்சங்கம் உருவாகும் வரையில் அரசன் அவையிடத்தே நூல்கள் அரங்கேற்றப்பட்டிருத்தல் வேண்டும். இஃது உண்மையாயின் தொல்காப்பியம் இடைச் சங்கத்துக்குரியது என்னும் இறையனர் களவியல் உரைக்கூற்றுத் தள்ளற்பாலதாகும். தொல்காப் பியர் காலம் சங்க காலத்திற்கு முற்பட்டது என்பதே சாலப் பொருந்தும். சங்ககாலத்திற்கு முற்பட்ட தமிழ் மொழியின் நிலையைத் தொல் காப்பியத்தின் துணைகொண்டு கூறலாம்.''

இக்கருத்தை ஈண்டு எடுத்துக்காட்டவேண்டிய இன்றியமையாமை என்னவெனில், தொல்காப் பியத் தமிழினின்றும் வளர்ச்சி பெற்ற தமிழே தொல்காப்பியக் கட்டுப்பாடுகள் சிலவற்றை மீறி வளர்ந்த தமிழே — சங்கத்தமிழ் என்று சாற் றவேயாம். தொல்காப்பியத் தமிழுக்கும் சங்கத் தமிழுக்கும் இடையே உள்ள ஒரு சிறப்புவாய்ந்த வேறுபாட்டை — வளர்ச்சியைச் சுட்டுவதாகக் கருதப்பெறுவது, ச , சை, செள என்ற மூன் றெழுத்துகளும் மொழிக்கு முதலாகா என்பதே ஆகும்.

இனிப் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் சங்கத் தமிழின் தனிச் சிறப்புகளைப் பழச் சாறெனத் தரும் பகுதியைப் பருகுவோம்; ''தொல்காப்பியர் காலத்திற்குப் பிறகு சங்க காலம் முடிவதற்குள் சில மாறுதல்கள் எழுந்தன. சகரமும் ஞகரமும் அகரத்தோடு மொழி முதலாயின. நகரம் ஞகரமாக மாறிவரக் காண் கிறோம். சகரம் நகரமான இடையண்ண எழுத் துக்கள் பல்லை நோக்கி வந்து ஒலிக்கத் தொடங்கின போலும்! னகரமும் சில போது இவ்வாறு ஞகர மாயிற்று. (அஞ்ஞை — மஞ்ஞை) ; ஆய்தம் தனி ஒலியாக ஒலிக்கப்பெற்றது போலும்! அவ் வொலியை அளபெடையாக நீட்டியும் ஒலித்தனர் போலும்! வகரம் இதழொலியாக இல்லாமல் பல்லிதழ் ஒலியாகத் தொல்காப்பியர் காலத்தி லிருந்து மெல்ல மாறத் தொடங்கியதெனலாம். போன்ம் என வருவதையொட்டிச் சென்ம் முதலியனவும் கேண்ம் முதலியனவும் வழங்கத் தொடங்கின. செய்யும் என்ற வாய்பாட்டில், இடையிலே நின்ற உயிரெழுத்துக்கள் இவ்வாறு கெடுவதும் உண்டெனலாம். விகுதியில் வரும் எகரம் எடுத்துச் சொல்லப் பெருமையால் அகர மாகத் திரியத் தொடங்கியது (வந்தனென்—வந் தனன்). விகுதியின் முதலில் வரும் ஆ என்பது ஓ எனத் திரியத் (சென்றார் — சென்றோர்; சென்றாம் — சென்றோம்; வந்தார் — வந்தோர்; வந்தாய்—வந்தோய்) தொடங்கியது. இவ்வழக் குப் பரவியதோடு விகுதி முதல் அகரமும் இவ் வாறு ஓ எனலாயிற்று (கிழவன்—கிழவோன்).'

'....உவம உருபுகள் தொல்காப்பியர் கூறிய நியதிப்படியன்றி விரவி வந்தன....சங்ககாலத் தில் வியங்கோள், தன்மையிலும் முன்னிலையிலும் வாழ்த்து, வேண்டுகோள், சாபம் முதலிய பல பொருளில் வந்தது. ஒற்றளபெடைகள் பாட்டின் குறையை நிரப்ப எழுந்தன. கேண்மீ, சென்மீ போன்ற வழக்காறுகள் பல்கின. ......என் என்ற தன்மை விகுதி அன் என்று பைய மாறிய வழக்கு இலக்கியத்தில் புகுந்தது. புறநானூற்றில் ஓரோரிடங்களில் இவ்வாறு காண்பது பின்னர்ப் பெருவழக்காயிற்று. அன் என்பதன் ஈற்று மெல் லெழுத்து மெல்லோசை இழந்து ல் என நின்ற தால் எழுந்த அல் ஈறு அன் என்பதற்கு முன்பாக இலக்கிய வழக்கில் பரவியது. இங்கே அல் என்பது பழைய தொழிற்பெயர் விகுதியுமாகலாம்.'

சங்ககாலத் தமிழ் என்று எண்ணும்போது ஆழ நினைவில் கொள்ளத்தக்கது ஒன்று உண்டு. அது சங்கத்தமிழ் தொன்மையும் வன்மையும் ஒருங்கே உடையது என்பதே. சங்கத்தமிழின் தொன்மை தமிழர் புகழ் காக்கும்; சங்கத் தமிழின் வன்மை— தன்னுள் பிறவொலி புகாது தடுக்கும் வன்மை —தமிழர் உயிர் காக்கும்.

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு.

நா. பார்த்தசாரதி
தீபம் ஆசிரியர், சென்னை.



# தமிழ் மொழியில் அணியியல்

**மொழியிலக்கணம் ஐந்து :**

‘அலங்காரம்’ என்ற சொல் அழகு என்ற பொருளைத் தரும். அலங்காரத்தின் பயிற்சி முறையை வரையறுத்து விளக்குகின்ற நூல்கள் அலங்கார நூல்கள் எனப்படும். ஒரு பண்பட்ட மொழிக்கு ஐந்து அங்கங்கள் உண்டு. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்பனவே அவை. இவற்றுள் முதல் நான்கு அங்கங்களுக்கும் அழகாக அமைகின்ற அமைப்பைத் தருவது அணி என்று குறிக்கப்படும் அலங்காரமேயாகும்.

**கவிதைக்குக் கவின் :**

எனவே, அலங்கார நூல்கள், ‘மொழியில் தோன்றுகின்ற இலக்கியங்களுக்கு அழகை எந்த எந்த முறையில் அமைக்கலாம்? கவிதைகளை எவ்வாறு கவின்பெறச் சமைக்கலாம்?’ என்று அழகின் அமைப்பைப்பற்றிப் பேசுவன, என்று அறிய முடிகிறது. அணி அமைப்பானது இலக்கணத்தின் ஒரு கூறாக வைத்து மக்கள் வழக்கிற்கு அப்பாற்பட்ட இலக்கிய வழக்கில் மிகுதியாகக் கைக்கொள்ளப்படும் என்றாலும், அணியமைதி இலக்கியப் போக்கில் இயைந்து சென்று அழகு தருதலால் பிறவற்றிற்கு இல்லாத சிறப்பை அவற்றில் காண முடிகின்றது.

**அழகுக்கு அழகு :**

குழம்பு முதலியனவற்றிற்குத் தாளிதம் செய்வதுபோல் இலக்கியங்களுக்குச் செய்யப்படுகின்ற தாளிதமே அணியிலக்கணம். தாளிதத்திற்கு என்றே குழம்பு செய்யப்படவில்லையாயினும் குழம்பின் மணத்தை நுகர்ந்து விரும்பும் தன்மையதாக அஃது ஆக்குகிறது. அதுபோலக் கவிதைகளில் அழகு அமைந்திருப்பதாயினும் அவற்றிற்கும் மேற்பட்ட ஒரு தனி அழகைக் கவிதைகளுக்கு அணியிலக்கணம் தரத்தான் செய்கிறது என்று கூறலாம். கவிதையின் அழகுக்கு ஊட்டம் கொடுக்கும் இவ்வலங்கார நூல்கள் வடமொழியில் மிகப் பலவாக விரிந்துள்ளன. பரந்து விரிந்த பேரிலக்கிய இலக்கணங்களையுடைய வடமொழியில் அணியிலக்கண அமைப்பே தனி அழகைக் கொடுப்பதாக அமைந்திருக்கிறது. வடமொழியாளர் இதனை அலங்கார சாத்திரமென்று குறிப்பிடுவர்.

**வடமொழி அணி நூல்கள் :**

வாமனகாரிகை, பாமக சூத்திரம், காவியாதரிசம், சரசுவதி கண்டாபரணம், சிருங்கார திலகம், காவியப் பிரகாசம், அலங்கார சர்வசுவம், இரசதரங்கிணி, இரசமஞ்சரி, தொனிலோசனம், சாகித்ய சிந்தாமணி, சாகித்ய சூடாமணி, சாகித்ய தருப்பணம், சாகித்ய இரத்னுகரம், சமற்காரசந்திரிகை, பிருதாபருத்திர யஷோபூஷணம், சந்திராலோகம், குவலயாநந்தம், சித்திரமீமாஞ்சை, அலங்கார கவுத்துபம், இரச கங்காதரம், ஏகாவலி, காவியதருப்பணம் முதலியனவும், அவற்றின் உரைகளும், இவ்வலங்கார

இலக்கணத்தைப் பரந்து விரிந்த கருத்துக்காகவே விளக்கும் வடமொழி அலங்கார சாத்திரங்களாம்.

**அணியின் படிப்படியான விரிவு:**

தமிழ் இலக்கணங்கள் தொல்காப்பியர் காலத்தே அணிக்கென்று தனிநூல்கள் இயற்றின தாகத் தெரியவில்லை. ஆசிரியர் தொல்காப்பியர் அணியிலக்கணத்தைச் சுருக்கமான முறையில் தமது உவமவியலில் கூறியுள்ளார். தொல்காப்பியர் கருத்துப்படி அணிகள் எல்லாம் உவமை ஒன்றிலிருந்தே தோன்றுகின்றன. உவமவியல் என்ற பெயரே இதனை விளக்கும். உவமை, உருவகம் இவையிரண்டும் தலைமையான அணிகள் என்பர் தொல்காப்பியர்.

> ''உவமம் என்னும் தவலருங் கூத்தி
> பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
> காப்பிய அரங்கிற் கவினுறத் தோன்றும்''

என்ற இக்கருத்தே தொல்காப்பியருக்கும் உடன் பாடாகும். எனவே, தமிழில் தோன்றிய முதல் அணியிலக்கணச் சுருக்கமாக நமக்குக் கிடைப்பது தொல்காப்பியத்தின் உவம இயலாகும். பிற் காலத்தில் தோன்றிய தண்டியலங்காரம், மாறனலங்காரம் முதலிய நூல்கள் அணியிலக் கணத்தையே விரிவான முறையில் விளக்கத் தொடங்கின. தண்டியலங்காரம் தண்டியின் வடமொழிக் காவியதரிசத்தைத் தழுவி நடப்பது. தண்டியலங்கார ஆசிரியர் தண்டி என்று குறிக்கப் படுகின்றனர். இத்தண்டி வடமொழி காவியா தரிசத்தின் ஆசிரியரோ, வேறொருவரோ தெரியவில்லை. மாறனலங்கார ஆசிரியர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பவர் ஆவர். நிற்க, இவையன்றி 'இலக்கண விளக்கம்', 'வீர சோழியம்', முதலிய நூல்களும் அணியிலக் கணத்தை ஒரு பகுதியாக அமைத்துக் கூறுகின்றன. ஆனல், தனிப்பட்ட நூல்களாக முற்றும் அலங்காரத்தையே விரித்துப்பேசுவன மாறனலங் காரமும், தண்டியலங்காரமுமே.

இவ்விரண்டு அலங்கார நூல்களில் தண்டியலங் காரம் காலத்தால் முற்பட்டது. தமிழில் முதன் முதலில் தோன்றிய தனிப்பெரும் அணியிலக் கணம் தண்டியலங்காரமே ஆகும். இவ்வணி நூல் சிலப்பதிகாரம் முதலிய நூல்களின் உரைகளிலே மேற்கோளாக எடுத்தாளப்படும் பெருமை யுடையது. அடியார்க்கு நல்லார் இந்நூலை அணியியல், அணியதிகாரம், அணியிலக்கணம் என்று குறிப்பிடுகிருர். தண்டியாசிரியர் முப்பந் தைந்து அலங்காரங்களைக் கூறுகிருர். மாறனலங் கார ஆசிரியர் அறுபத்து நான்கு அலங்காரங் களைக் கூறுகிருர். இனி, 'சந்திராலோகம்' என்ற வடமொழியலங்கார நூலாசிரியர் நூறு அணி களைக் கூறுகிருர். அழகு, அணி, அலங்காரம், இவையெல்லாம் எல்லையற்ற வளர்ச்சி உடையன; குறைவற்ற வளம் உடையன. தண்டியாசிரியர் கண்களுக்கு அது முப்பத்தைந்து வகையாகப் பிரிந்துதென்பட்டது. மாறனலங்கார ஆசிரியருக்கு அஃது அறுபத்து நான்கு வகையாக விரிந்து பரந்து தெரிந்தது. சந்திராலோகத்தின் ஆசிரியருடைய இரசனைப் பயிற்சி மிக்க கண்களுக்கு அது நூறு வகை யாக நின்று காட்சி கொடுத்தது. அலங்காரமென் பது ஆதி அந்தமில்லாத கடவுளைப்போன்ற ஒன்று போலும். 'குவலயாநந்த' ஆசிரியர் அழகை இரசிப் பதில் தம்மை முற்றிலும் ஈடுபடுத்திக் கொண் டாரோ, என்னவோ? நாம் அறியோம். நூற் றுக்கு மேற்பட்ட பலவகையான அணிகளை அவர் கண்டார். எனவே, அலங்காரம் வெறும் வறட்டு இலக்கணம் மட்டும் அன்று; அழகின் படிப் படியான விரிவேயாகும் என்று அறிகிருேம்.

**உரைநடையில் அணி :**

அலங்கார நூல்களிலே உரைநடையில் அலங் காரத்தை விளக்கும் சமீப காலத்தில் தோன்றிய ஒரு நூலும் உண்டு. திருத்தணிகை விசாகப் பெருமாளையர் செய்த 'பஞ்ச லட்சண வினு விடை'யின் ஒரு பகுதியான அணியிலக்கணம் எளிய உரைநடையில் அலங்கார அமைப்பை விளக்குவது ஆகும். அதுவே மேலே குறித்த வசன அணியிலக்கணம். இவ்வணியிலக்கண வசனம் சந்திராலோகம் என்னும் வடமொழியலங்கார நூல்போல நூறு பேரணிகளைக் கூறுகிறது. சுருங் கக் கூறி விளங்க வைக்கும் முறையில் இஃது அமைந் துள்ளது. அலங்கார நூல்களைக் கற்க விரும்புவோர் முதலில் விசாகப் பெருமாளையர் அணியிலக்கணத் தையும், அடுத்தபடியாகத் தண்டியலங்காரத்தை யும், இறுதியில் மாறனலங்காரத்தையும், பின் உவமவியலையும் கற்பது முறையாக அமையும். அவ்வாறு கற்ருல் படிப்படியான அலங்கார அமைப்பை முறையாக உணர்ந்து கொள்ள இட மேற்படுகிறது.

**தண்டியலங்காரம்—அமைப்பும் அணிகளும் :**

உவமை, தன்மை, உருவகம், தீவகம், பின் வருநிலை, முன்ன விலக்கு, வேற்றுப் பொருள் வைப்பு, வேற்றுமை, விபாவனை, ஒட்டு, அதிசயம், தற்குறிப்பேற்றம், ஏது, நுட்பம், இலேசம், நிரனிறை, ஆர்வமொழி, சுவை, தன் மேம்பாட்டுரை பரியாயம், சமாயிதம், உதாத் தம், அவனுதி, சிலேடை, விசேடம், ஒப்புமைக் கூட்டம், விரோதம், மாறுபாடு, புகழ்நிலை, புகழாப் புகழ்ச்சி, நிதரிசனம், புணர்நிலை, பரிவருத்தனை, வாழ்த்து, சங்கீரணம், பாவிகம் ஆகிய இம்முப் பத்தைந்து பொருளணிகளையும், இவற்றின் உட் பிரிவுகளையும் நல்ல முறையில் மேற்கோள்களோடு விளக்கிக் காட்டுகிருர் தண்டியாசிரியர்.

தண்டியாசிரியர் செய்த அலங்கார நூலாகிய தண்டியலங்காரம் பொதுவணியியல், பொருளணி யியல், சொல்லணியியல் என்று மூவகையாகப் பிரியும். அவற்றுள், பொதுவியலில் செய்யுள்களின் அமைப்பையும், இயல்பையும் கூறிப் பெருங்காப் பியம், சிறுகாப்பியம் இவற்றின் இலக்கணங்களை யும் விளக்குகிருர். குணவலங்காரங்களைப்பற்றிய இருதிறப்பட்ட கொள்கைகளையும் அங்கேயே விளக்குகிருர். பொருளணியியலில் முப்பத்தைந்து பொருளணிகளையும் விளக்கமாக விவரித்துப்

பேசுகிருர். சொல்லணியியலில் மடக்கு, சித்திரக் கவிகள் முதலியவற்றையும் நூலிற் கூறிய அணி களின் வழக்குகளையும் கூறுகிருர்.

**மாறனலங்காரம் :**

மாறனலங்கார ஆசிரியர், தண்டியாசிரியர் கூறிய முப்பத்தைந்து அலங்காரங்களோடு உள் ளுறை உல்லேகம், திட்டாந்தம், தற்குணம், பிரத் தியனீகம், சந்தயம், அற்புதம் பூட்டுவில், இறைச்சி, பொருள்கோள், பொருள்மொழி, அதிகம், வகை, அடுக்கிணை, எதுகை, உபாயம், தற்பவம் அசங்கதி, தடுமாறுத்தி, நெடுமொழி, காரணமாலை, காரியமாலை, ஏகாவலி, பிரதீபம், பிறவணி, பரிசங்கை, காவியலிங்கம், பரிகரம், சங்கரம் முதலியவற்றையும் கூட்டி அறுபத்து நான்கு வகைப் பொருளலங்காரங்களைக் கூறினுர். நன்ருக ஆராயப் போனுல் எல்லா அலங்காரங் களும் தண்டியாசிரியர் கூறிய சில அலங்காரங் களுக்குள்ளேயே அடங்கிவிடும். ஆனுல், அழகுக்கு அழகு செய்வதில் யாருமே களைப்பதில்லையே. அணியிலக்கணம் செய்ய வந்த புலவர்களும் அப் படித்தான் போட்டி போட்டுக்கொண்டு அழகுக்கு அழகு செய்ய முன்வந்தார்கள். அதில் அவர் களுக்கு ஒரு தனி ஆசை. 'உணர்வினில் வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்' என்றது மிக மிகப் பொருத்தமாக அமைகிறது. அணியில்லாத செய்யுள் சுவையில் ஊனப்படத்தான் செய்கிறது. அணியேயில்லாது பாடிவிடவேண்டும் என்று வரிந்து கட்டிக்கொண்டு கிளம்பினுலும் நம்மை யறியாமலேயே அதில் ஏதாவது ஓர் அணி அமைந்துவிடுகிறது. எனவே, அணியும் செய் யுளும் இரண்டறக் கலந்தவை.

**பேச்சில் அணி:**

பேச்சு வழக்கில்தான் நாம் எத்தனை அணிகளைக் கையாளுகிருேம். 'இஞ்சி தின்ற குரங்கு போல்' என்று நம்மையறியாமலேயே அலங்காரத்தை உவமை ரூபமாகப் பயன்படுத்துகிருேம். 'தங்க மான உடம்பு' என்று உருவகம் செய்கிருேம். இன்னும் நம்மையறியாமலேயே நாம் பற்பல அலங்காரங்கள் தோன்றப் பேசுகிருேம். பனை மரமென்று உயர்ந்த மனிதனை உயர்வு நவிற்சி செய்கிருேம். இவையெல்லாம் அலங்காரங்கள் என் பதை யறியாமலேயே நாம் பேசுகிருேம். நம்மை யறியாமலேயே நமது பேச்சு வழக்கில் அலங் காரங்கள் இடம்பெற்று விடத்தான் செய்கின்றன. பேச்சிலேயே இப்படியானுல் செய்யுட்களில் வருகின்ற அலங்காரங்களுக்கு எண்ணிக்கை கூற முடியுமா? தமிழ்ச்செய்யுள் இலக்கிய உலகில் அணியிலக்கணக்காரர்களினுடைய கண்ணுக்குத் தெரியாத அலங்காரங்களும் மிகுதியாக உள்ளன. அழகுக்குத்தான் முடிவு என்பதே இல்லையே.

**இலக்கியத்திற்குப் பெருமை சேர்ப்பது :**

எனவே, அலங்காரங்களை உணர்த்தும் நூல்கள் ஒரு மொழியின் இலக்கிய உலகிற்கே பெருமை தருவனவாம். அவை அழகே உருவான செய் யுட்களுக்கு மேன்மேலும் அழகு செய்துகொண்டே போவதற்குக் கருவிகளாக அமைவன.



## மொழி வாழ்த்து

நண்ணு மிளமைப் பருவத்தி லேமுதல்
நாவை யசைத்த மொழி—எங்கள்

கண்ணைத் திறந்துல கத்தை விளக்கிக்
கருத்தோ டிசைத்தமொழி—எந்தன்

எண்ணத்தைக் கூறற்கு நானென்று முன்வந்
திருந்த திருந்துமொழி—வேற்று

வண்ணப் பிறமொழி கற்க வுதவிய
வண்மைபொ ருந்தும்மொழி—அதனல்

எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

தொன்றுதொட் டேபே ரறிவாள ரீட்டிய
செம்பொருள் தேக்குமொழி—தன்னை

நன்றறி வார்க்கப் புதையல் திறந்திட
நாளெண்ணிக் காக்குமொழி—நாங்கள்

இன்று படைக்கும் பெருமைக்கெல் லாமுத
லீந்து புரக்குமொழி—செய்யும்

நன்றிகொன் றேருக்கும் நன்னயஞ் செய்தவர்
நாணவு ரைக்குமொழி—அதனல்

எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

பற்றுவைத் துப்பிற நாட்டு மொழியைப்
பயின்று மகிழ்ந்தோமே—நொந்து

பெற்றதா யின்முகம் பாராத குற்றத்தாற்
பீழித்து நைந்தோமே—நாங்கள்

கற்ற பிறகலை யைத்தாய் மொழிக்கண்ணே
காட்டித் திருத்துவமே—திசை

முற்றவு மெம்மொழி யின்வளஞ் சாற்றி
முரசு முழக்குவமே—அதனல்

எங்கள் தமிழன்னை வாழிய வாழிய
என்றடி வாழ்த்துவமே.

—புலவரேறு அ. வரதநஞ்சைய பிள்ளை



வள்ளுவர் வீரம்

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும் —( குறள் : 774 )

தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்

அ. மு. பரமசிவானந்தம், எம்.ஏ., எம்.லிட்.
தமிழ்த் துறைத் தலைவர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.




தமிழில் 'உரை' என்ற சொல்லுக்கு 'ஒலி' என்ற அளவில் பொருள் இருந்த காலம் உண்டு. பரிபாடல் 'குன்றம் குமுறிய உரை', என்றே குறிக்கின்றது. எனவே இச்சொல் பொதுவாக உண்டாகும் ஒலிகளுக்கு என அமைந்து, பிறகு மக்கள் வாயால் உரைக்கப்பெறும் உரைக்கும் பெயராக அமைந்தது என்பது தேற்றம். மக்கள் தம் உள்ளக் கருத்தை உலகுக்கு உணர்த்தப் பயன் படுத்துவது உரையாம். இனி உரை என்பதற்குப் புகழ் என்ற பொருளும் உண்டு என்பதை 'உரைசால் பத்தினி' என்ற சிலப்பதிகாரத் தொடர் நமக்கு விளக்குகின்றது. பொன்னின் தரம் அறியத் தட்டான் கல்லில் உரை இட்டுப் பார்ப்பதும் 'உரை'யாக உள்ளது. இவற்றால் 'உரை' என்பது மக்கள் உள்ளக் கருத்தை உணர்த் தப் பயன்படும் ஒன்று என்பதோடு ஒன்றின் உண்மையான இயல்பை விளக்கப் பயன்படும் ஒன்று என்பதும் தெளிவாகின்றது.

### செய்யுளும் உரைநடையும் :

உரைக்கப்படுவன அனைத்தும் உரையாயின், அவ்வாறு உரைக்கப்படும் பாட்டும் உரையாமோ என்ற ஐயம் எழுதல் இயல்பு. இந்த ஐயத்தைப் போக்கவே மேலைநாட்டார் நன்கு ஆராய்ந்து பாட்டையும் உரையையும் பாகுபாடு செய்துள் ளனர். 'உரைநடை என்பது இலக்கிய மரபு கெடாத நல்ல நடையில், ஆழ்ந்த கருத்தோடு, பாட்டின் சந்தச் சேர்க்கை இன்றியே நல்ல ஓசை நயம் உடையதாகி, ஒளிவுமறைவு இன்றி உள் ளதை உள்ளபடி உரையிட்டுக் காட்டும்வகையில் நேரிய முறையில், கருத்துக்கும் காரணத்துக்கும் பொருத்தமாக — ஒன்றனைப்பற்றியோ ஒருவனைப் பற்றியோ - விளக்கி உரைப்பதாகும்'. உரை நடையென்பது நேராகச் சொற்களைக் கொண்டு விளக்குவது எனவும் எழுத்து நடையிலோ பேச்சு நடையிலோ காட்ட விழைந்த பொருளை, சந்த அமைப்பு இல்லாமல் தெளிவாக விளக்குவது எனவும் பிறர் காட்டியுள்ளனர். பாட்டோ இவற்றோடு கற்பனை நயம், சந்தம் முதலிய பொருந்தி வளர்வதாகும்.

### தொல்காப்பியமும் உரைநடையும் :

உரைநடை நம் தமிழ் மொழியில் மிகப்பழங் காலம் தொட்டே இருந்து வந்துள்ளது. தமிழ் இலக்கிய வரலாற்றில் நமக்கு ஒரு மைல் கல்லாக இருப்பது தொல்காப்பியமே. அத்தொல்காப்பியத் துக்கு முன்பே பல இலக்கியங்கள் இருந்துள்ளன என்பதை அதன் சூத்திரங்களால் நன்கு அறி கிறோம். தொல்காப்பியத்துக்கு முன் தமிழ்நாட் டில் உரையும் பாட்டும் இருந்தன என்றும் அவற் றுள் உரையே காலத்தால் முந்தியது எனவும் காண்கின்றோம். தொல்காப்பியச் செய்யுளியல் 238-ஆம் சூத்திரத்தில்

''தொன்மை தானே
உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே''

என உரைநடை காட்டப் பெறுகின்றது. இச்சூத்திரத்துக்கு உரை எழுத வந்த இளம் பூரணர் ''நிறுத்த முறையானே தொன்மைச் செய்யுள் உணர்த்துதல் நுதலிற்று'' எனக் காட்டி, ''தொன்மையாவது உரையொடு பொருந்திப் போந்த பழைமைத்தாகிய பொருள்மேல் வருவது'' என விளக்குகிறார். பேராசிரியரும் ''தொன்மை என்பது உரைவிராய்ப் பழைமையவாகிய கதைப் பொருளாகச் சொல்லப்படுவது'' என்கிறார். எனவே பாவாகச் செய்யப்பெறும் 'பாச்செய்யுளினும், 'உரைச்செய்யுள்' காலத்தால் முந்தியது என்பது தெளிவு. செய்யப்படுவன வெல்லாம் செய்யுள் ஆதலின் இரண்டையும் செய்யுள் எனவே காட்டினர்.

தொல்காப்பியர் காலம் இன்றைக்குச் சற்றேறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதென்பது தெளிவு. எனவே கடந்த மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த தமிழில் உரைநடை இருந்திருக்கின்றது எனக் காண முடிகின்றது. இலத்தீன், கிரேக்கம் போன்ற மொழிகளில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உரைநடையில் நூல்கள் இருந்தன என அறிகிறோம். ஆனால் தமிழ் உரைநடை பற்றிய விரிவான இலக்கணமும் அவற்றின் நிலைபேறும் நம்மால் காண முடியவில்லையே என எண்ணத் தோன்றும். உரைநடை மிக எளிமையாக அனைவராலும் பேசவும், எழுதவும் பெற்றமையின் அதற்குத் தனி இலக்கணம் எழுத வேண்டிய தேவை இல்லையன்றோ? எழுதினும் அஃது எல்லையற்று விரியும் என்பதும் தெளிவு. ஆனால் சிறப்பான கவிதைகளுக்கு இலக்கண வரம்பு இன்றியமையாத ஒன்றானமையின் அதற்கென இலக்கண நூல்கள் உண்டாயின. அப்படியே வழக்காற்றில் உள்ள உரைநடையை யாரும் பழங்காலத்தில் படி எடுத்து வைக்க நினைக்கவில்லை. ஏட்டில் எழுதும் தொல்லை காரணமாகவும் சாதாரணமான வேறு காரணமாகவும் உரைநடை படி எடுக்கப்படவில்லை எனலாம். அதனாலேயே அக்காலத்தில் உரைநடை இல்லை என மறுத்தல் ஏற்றுக் கொள்ளக்கூடியதாகுமோ? இந்த ஐயத்துக்கு இடமில்லாவகையில் தான் தொல்காப்பியர் அதன் தொன்மையை விளக்கச் சூத்திரஞ் செய்துவிட்டுச் சென்றனர்.

இனி, அத்தொல்காப்பியர் காலந்தொட்டு வளர்ந்த உரைநடை வகையினைக் காண்போம். தொல்காப்பியர் காலத்திலும் கடைச்சங்க காலத்திலும் வழக்கத்தில் இருந்த உரைநடை நமக்குக் கிடைக்கவில்லை. சங்கப் பாடல்களுள் சில, தனிச் சொற்களால் இடை நிறுத்தப்பெற்று உரையெனச் சொல்லினும், அவற்றை யாரும் உரையாகக் கொள்ளவில்லை. எனவே நமக்குத் தெளிந்த உரைநடை காப்பிய காலத்திலேயே கிடைக்கின்றது.

**சிலப்பதிகாரத்தில் உரைநடை :**

கடைச்சங்க காலத்திற்குப் பிறகு உண்டான காப்பியம் சிலப்பதிகாரம். அஃது 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' எனவே அழைக்கப் பெறுகின்றது. சிலம்பில், சங்க காலத்தில் விளங்கி வந்த ஆசிரியத்தோடு பல வரிப்பாடல்களும், இசைப்பாடல்களும் இடம்பெற, உரைநடையும் இடம் பெறுவதறிகிறோம். எனவே நமக்குக் கிடைக்கும் தமிழ் உரைநடையில் பழைமையானது சிலம்பின் நடையேயாகும்.

> ''அதுகேட்டு, கடல்சூழ் இலங்கைக் கயவாகு என்பான், நங்கைக்கு நாட்பலி பீடிகை கோட்டமுந்துறுத்து, ஆங்கு 'அரந்தை கெடுத்து வரந்தரு மிவள்' என, ஆடித்திங்கள் அகவையினுங்கோர் பாடிவிழாக் கோள் பன்முறை எடுப்ப, மழைவீற்றிருந்து வளம்பல பெருக்கி, பிழையா விளையுள் நாடாயிற்று''

இது சிலம்பின் உரைக்கு ஓர் எடுத்துக் காட்டு. இவ்வாறே சில இடங்களில் சிலம்பின் உரைநடை செல்லுகின்றது. இவ்வாறு, அந்த இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்தில், தமிழ் உரைநடை, தனியாக இன்றேனும் பாவொடு கலந்து இலக்கிய மரபிலேயும், மக்கள் வாழ்வின் பேச்சு மரபிலேயும் வளர்ந்து வாழ்ந்து வந்தது என்பது தெளிவு.

**களவியலில் உரைநடை :**

சிலப்பதிகார காலத்தை அடுத்த சில நூற்றாண்டுகளில் தமிழகத்தில் எத்தனையோ மாறுதல்கள் உண்டாயின. எத்தனையோ வேற்று நாட்டவர் இந்நாட்டில் ஆணைசெலுத்தித் தத்தம் சமய, பண்பாட்டு நாகரிகங்களை வளரச் செய்தனர். அதனால் தமிழர்தம் மொழி, சமயம், வாழ்க்கை, பண்பாடு, நாகரிகம் அனைத்துமே மாறுதல் பெற்றன. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாம் காணும் தமிழ் நாட்டிற்கும் சங்க காலத் தமிழ்நாட்டிற்கும் எத்தனையோ வேறுபாடுகளைக் காண்கிறோம். எனினும் உரைநடையைப் பொறுத்தவரையில் ஒன்றையும் நம்மால் புதிதாகக் காண முடியவில்லை. பின்னர் எட்டாம் நூற்றாண்டினதாகக் காணப்பெறும் இறையனார் களவியலுரையே நமக்கு உரையாகக் காட்சி தருகின்றது. அதன் உரையாசிரியர் கடைச் சங்க காலத்து நக்கீரனார் என்பர். ஆயினும் அவர் காலம் இரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதன்றோ! எவ்வாறு அவர் எட்டாம் நூற்றாண்டில் உரை செய்திருப்பார்? இக்கேள்விக்கு அவ்வுரையே சான்று தருகின்றது. அவ்வுரை செவி வழியாகவே கேட்டுக் கேட்டுப் பல தலைமுறைகள் கழிந்தே உருவாயிற்று என விளக்கம் காண்கின்றோம். எனவே, அவ்வுரை, கடைச்சங்க காலத்தில் இருந்து எட்டாம் நூற்றாண்டு வரையில் தமிழ்நாட்டில் உரைநடை பேச்சிலும் எழுத்திலும் இருந்து வந்தது என்ற தெளிவையும் அதே வேளையில் அந்த இடைவெளியில் அவ்வுரைநடை எவ்வாறு மாற்றம் பெற்றுள்ளது என்பதையும் நன்கு விளக்கிக் காட்டுகிறது. ஏழாம் நூற்றாண்டில் எழுந்த சமய இலக்கியங்களைப் போன்றே, இந்த உரையிலும் வடமொழி வாடையை ஓரளவு காண முடிகின்றது. எனினும் தமிழ் உரைநடையின் ஏற்றமும் சிறப்பும் அதில் விளங்கக் காண்கிறோம்.

''யாங்ஙனம் நிற்குமோ வெனின் சந்தனமும் சண்பகமும் தேமாவும் தீம்பலாவும் ஆசினியும் அசோகும் கோங்கும் வேங்கையும் குரவமும் விரிந்து, நாகமும் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலோடு மணங் கமழ்ந்து, பாதிரியும் பாவை ஞாழலும் பைங் கொன்றையும் பிணியவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னாகமும் முருக்கொடு முகைசிறந்து, வண் டறைந்து தேனார்ந்து வரிக்குயில்கள் இசை பாட, தண்தென்றல் இடைவிராய்த் தனிய வரை முனிவுசெய்யும் பொழிலது நடுவண், ஒரு மாணிக்கச் செய்குன்றின் மேல், விசும்பு துடைத்துப் பசும்பொன் பூத்து, வண்டு துவைப் பத் தண்தேன் துளிர்ப்பதோர் வெறியுறு நறு மலர் வேங்கை கண்டாள்'' (பக். 25) என்று அவ்வுரை அழகுறச் செல்லுகிறது.

எட்டாம் நூற்றுண்டிற்குப் பிறகு தமிழில் உரைநடை நூற்றுண்டுதோறும் பல்வேறு வகை யில் மாற்றம் பெற்றும் வேறுபாடுற்றும் வளர்ந்து கொண்டே வந்துள்ளது என்பதைத் தமிழ் இலக் கிய வரலாற்று எல்லையில் நின்று காண்பார் யாவரும் உணர்வர்.

இறையனுர் களவியல் உரையை ஒட்டி, அக் காலத்துக்குப் பின்வந்த நூற்றுண்டுகளில் பல உரைகள் உண்டாயின. தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களுக்கும் பத்துப்பாட்டு, சிந்தா மணி போன்ற இலக்கிய நூல்களுக்கும் கற்றுத் துறை போய நல்லறிஞர்கள் விளக்கங் காட் டும் வகையில் உரைகள் எழுதினுர்கள். நச் சினுர்க்கினியர், சேனுவரையர், இளம்பூரணர், பேராசிரியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் போன்றோர் இவர்களுள் முக்கியமானவர்கள்: இவர்கள் காலத்தால் வேறுபட்டவர்களே. ஏறக் குறைய ஒன்பதாம் நூற்றுண்டு தொடங்கிப் பன் னிரண்டு பதின்மூன்றும் நூற்றுண்டு வரையில் இத்தகைய உரையாசிரியர்கள், பல சங்ககால இலக் கியங்களுக்கும் பிற்காலக் காப்பியங்களுக்கும் தொல்காப்பியத்துக்கும் உரை எழுதினுர்கள். அந்த இலக்கண இலக்கிய நூல்களின் ஆழ்பொருள் களை இவை விளக்கியதோடு, தமிழ் உரைநடை யின் தரத்தையும் உயர்வையும் உலகுக்குக் காட் டின. இவ்வுரைகளைப் பயில்வார் உண்மையில் அக்காலத்தில் வாழ்ந்த புலவர் தம் உரைநடை எழுதும் ஆற்றலை நன்கு உணர முடியும். ஒரு சிலர் தம் உரைநடையில் வேற்று மொழிச் சொற் களைப் பழங்காலத்தினும் அதிகமாகப் பயன்படுத் தினுர்கள் எனினும் அக்காலத்திய உரைநடை போற்றற்குரியதேயாகும். இந்தப் பழைய உரை யாசிரியர்களை ஒட்டி, பிற்காலத்தில் — பதினும் நூற்றுண்டிற்குப் பிறகு வந்த சிவஞான முனிவர், சங்கர நமசிவாயர், சைவ சொக்கப்ப நாவலர் போன்ற நல்லறிஞர்கள் பல நூல்களுக்கு உரை எழுதிச் சென்றனர். தொல்காப்பிய முதற் சூத் திரத்திற்கும் பாயிரத்துக்கும் சிவஞான போதத் துக்கும் சிவஞான முனிவர் எழுதிய விருத்தி உரை களும் பாடியமும் சிறந்த உரைநடைகளாகப் போற்றப் பெறுகின்றன. சென்ற நூற்றுண்டிலும் இந்த நூற்றுண்டிலும் இவர்களை ஒட்டிப் பல இலக்கியங்களுக்குத் தெளிந்த உரை எழுதுபவர் பலர் உள்ளமை அறிகிறோம். எனவே தமிழ் உரை நடை இவ்வாறுய நூல்களின் விளக்கங்காட்டும் முகத்தான் நன்கு வளர்ந்தமை கண்கூடு.

**கல்வெட்டுக்களும் உரைநடையும் :**

இடைக் காலத்தில் தமிழ் உரைநடை மற்றெரு வகையிலும் வளர்ந்தது. ஆம்! கற்கள் உரை நடையை வளர்த்தன. பாறைகளும் கோயில் மதிற் சுவர்களும் தமிழ் உரைநடையை வளர்த்த பெருமைக்கு உரியன. இடைக்காலத்தில் வாழ்ந்த தமிழக மன்னர்களும் மற்றவர்களும் தாம் ஆற் றிய அறப்பணிகள் பற்றிய நிலைத்த குறிப்பினை அவ்விடங்களில் செதுக்கி வைத்தனர். அவற்றுள் முற்பகுதி பெரும்பாலும் அவ்வக் காலத்தில் ஆண்ட அரசர்தம் புகழ்பாடும் மெய்க்கீர்த்தி களாக அகவற்பாவில் அமைய, பிற்பகுதியாகிய செய்தி உரைநடையாகவே இருக்கக் காண்கின் ரேம். இவற்றை வடித்தவர்களுள் பலர் கல்லா மாந்தர்களாகவும் இருந்தமையின் அவ்வுரைநடை கலப்பு மொழியில் அமைந்துள்ளது. எனினும் தமிழ் உரைநடையை வளர்த்த பெருமை இக் கற்களுக்கும் உண்டு.

இடைக்காலத்தில் இலக்கிய மரபு சிறிது மங்கத் தொடங்கியது. வடமொழியை அதிகமாகக் கலத் தலே பெருமைக்குரிய செயலாக மதிக்கப்பெற் றது. இந்த நிலை உரைநடையிலும் காண்கிறோம். 'மணிப்பிரவாள' நடை எனப்பெயர் தந்து, மணி யும் பவளமும் இணைந்தாற் போன்று வடமொழி யையும் தமிழையும் இணைத்து எழுதிய காலம் ஒன்று தமிழ் இலக்கிய வரலாற்றில் உள்ளது. வைணவ இலக்கிய 'ஈடு' எனும் உரையும் ஸ்ரீபுராணம் முதலிய உரைநடை நூல்களும் பிறவும் அந்த வகையைச் சார்ந்தன. அவையும் தமிழ் உரைநடை வளர்ச்சியில் பங்கு கொள்ளு கின்றன என்றாலும், அவை தமிழ் உரைநடை மரபுக்கு மாறுபட்ட வகையில் அமைந்த காரணத் தால் சிறக்க வாழாது எங்கோ ஒரு சிலரிடை நின்று நிலைகுலைந்தன. இன்று அவை நல்ல தமிழிலே மொழி பெயர்க்கப்பட்டமையாலே ஓரளவு உணரப் பெறுகின்றன.

**உரை நடை வளர்ச்சி:**

இவ்வாறு தொல்காப்பியர் காலந்தொட்டு வளர்ந்த தமிழ் உரைநடை கடந்த ஓரிரு நூற் றுண்டுகளில் மிக நன்கு வளர்ச்சியுற்றமையைக் காண முடியும். மேலைநாடுகளிலிருந்து ஆட்சியின் பொருட்டும் வாணிபத்திற்காகவும் சமயம் வளர்க் கவும் தமிழ்நாட்டை நாடிவந்த பலருள் சிலர் தமிழ்மொழியை நன்கு பயின்று, அம்மொழியில் இலக்கியம் எழுதும் அளவிற்குச் சிறந்திருந்தனர். ஒருசிலர் தாமே பாட்டு, உரைநடை, இலக்கியங் கள் எழுத, ஒரு சிலர் ஊர்தொறும் சென்று ஆங்காங்கே வழங்கிவந்த கதைகளையும் பிறவற் றையும் தொகுத்து உரைநடையில் வெளியிட் டனர். தத்துவ போதகர் என்ற இராபர்ட்-டி- நோபிலி (Robert-De-Nobili) என்பாரும் வீரமா முனிவரும் தத்தம் சமய உண்மைகளை உரை நடையில் வடித்துள்ளனர். மெக்கன்சி(Mackenzie), வில்சன் (H. M. Wilson), ஜான் முர்டாக் (John

Murdock) போன்ற அறிஞர்கள் ஆங்காங்கே ஊர்தொறும் சென்று மக்களோடு பழகி, அவர்தம் வரலாற்றையும் வழக்காற்றுக் கதைகளையும் பிற பழக்க வழக்கங்களையும் தமிழ் உரைநடையில் எழுதி வைத்தனர். இவை யாவும் தெளிந்த நடையில் உள்ளன எனக்கொள்ள முடியாவிடினும் இவையும் தமிழ் உரைநடை உளர்ச்சிக்கு உதவின என்பதை மறுக்க முடியுமோ?

சென்ற நூற்றாண்டிலும் அதற்குப் பின்பும் தமிழில் உரைநடை மிக அதிகமாக வளர்ச்சியுற்றமையைக் காண்கிறோம். அவ்வளர்ச்சிக்கு மேலை நாட்டினர் மட்டுமின்றி அவர் வழியே வந்த அச்சுப்பொறியும் இதழ் முதலியனவும் அரசியல் அறிக்கைகளும் சமுதாய வாழ்வு பற்றிய வரலாற்று நூல்களும் வழிவகுத்தன. இந்தியாவிலேயே முதல் முதல் அச்சான நூல் தமிழ் நூலே. 1578-இல் அம்பலர்க்காட்டில் 'தம்பிரான் வணக்கம்' என்ற கத்தோலிக்கச் சமய நூல் தமிழில் முதல் முதல் அச்சிடப் பெற்றது. அச்சகங்கள் நாட்டில் வளரவளரப் பல்வேறு நூல்கள் உரைநடையில் எழுதி வெளியிடப்பெறலாயின. உலகில் அறிவியல் வளர்ச்சி பெருகப் பெருகவும் செய்தி அறியும் அவா மிகவும் பல்வேறு நாள் இதழ், கிழமை இதழ், திங்கள் இதழ் போன்றவை எல்லா நாடுகளிலும் வளர்ந்தமை போன்று தமிழ்நாட்டிலும் வளரலாயின. 1830-ஆம் ஆண்டுக்குப் பிறகே தமிழ்நாட்டில் இதழ் தொடங்க எண்ணினர். பிறகு பலவகையில் பல இதழ்கள் வெளிவரலாயின. அரசாங்கத்தாரும் தம் அறிக்கை, உத்தரவு, பிற செய்திகள் இவற்றைப் பொது மக்களுக்கு அறிவிக்க வேண்டித் தமிழில் தாள்களும், இதழ்களும் அவ்வப்போது வெளியிடத் தொடங்கினர். இவ்வாறுய இதழ்களுக்கு அரசாங்கம் 'அஞ்சல் சலுகை' முதலியன அளித்து, அவை நன்கு வளர வாய்ப்பும் அளித்தது. சென்ற நூற்றாண்டு வரை இதழ்கள் அதிகமாக வளர்ச்சி அடையவில்லை என்றாலும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலும் நாடு உரிமை பெற்ற பின்பும் தமிழில் எண்ணற்ற இதழ்கள் தோன்றி வளர்ந்து வாழ்கின்றன. இவற்றுள் மிகப் பெரும்பாலன உரைநடையில் அமைந்தனவே. எனவே இன்றைய உரைநடை வளர்ச்சியில் இவற்றிற்குப் பெரும் பங்குண்டு.

சென்ற நூற்றாண்டிலும் இந்த நூற்றாண்டிலும் கல்வித்துறையில் கணக்கற்ற உரைநடை நூல்கள் தோன்றியுள்ளன. பள்ளியில் பயிலும் மாணவர்கள் தமிழை மட்டுமன்றித் தமிழில் பல்வேறு பாடங்களையும் படிக்கின்ற காரணத்தால், உரைநடையில் மாணவர் வகுப்பிற்கும் தரத்துக்கும் ஏற்பப் பல்வேறு பொருள்களைப்பற்றி-நிலவியல், சமூகவியல், வரலாறு, அறிவியல்பற்றி - உரைநடையில் பல நூல்களை எழுதினர். எனவே தமிழகக் கல்வித்துறையும் உரைநடை வளர்க்க உதவியது எனலாம்.

சமயத்துறையும் உரைநடையும்:

சமயத்துறையிலும் உரைநடை வளர்ச்சியுற்றது. கிறித்தவம், இசுலாம், சைவம், வைணவம் ஆகிய சமயங்கள் தத்தம் உண்மைகளை மக்களுக்கு எளிய முறையில் உணர்த்துவதற்காகப் போட்டியிட்டுக்கொண்டு சிறியவும் பெரியவுமாகப் பல நூல்களை வெளியிட்டன. கிறித்தவர் விவிலிய நூலைப் பல்வேறு வகைகளில் உரைநடையில் மொழி பெயர்த்து மக்களுக்கு வழங்கினர். பெரிய புராணம், கந்த புராணம், திருவிளையாடற் புராணம் போன்ற பாட்டு நூல்களை எல்லோரும் படித்து உணர்ந்து கொள்ளும் பொருட்டு உரைநடையில் பலர் எழுதி வெளியிட்டனர். இவைகளேயன்றி விக்கிரமாதித்தன் கதை, பன்னிரண்டு மந்திரி கதை போன்ற பல கதைகளும் சாதாரண மக்கள் படித்தும் கேட்டும் மகிழத்தக்க வகையில் உரைநடையில் எழுதப் பெற்றன. சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த ஆறுமுக நாவலர், இராமலிங்க அடிகளார் போன்றவர்களும் பிறரும் சமய உண்மைகளை எளிய வினா விடை வாயிலாகவும் கட்டுரை வாயிலாகவும் தமிழ் உரைநடையில் விளக்கிக் காட்டினர். சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்த மறைமலை அடிகள், சாமிநாத ஐயர் போன்றோர் தமிழ் உரைநடையில் எழுதிய நூல்களை நாடு நன்கு அறியும். அவர்தம் மரபில் நின்று திரு. வி. க. போன்ற பேரறிஞர்கள் அறிவுக் களஞ்சியங்களாகப் பல நல்ல தமிழ் உரைநடை நூல்களை, ஆராய்ச்சி — பயணம் — சமயம் — தத்துவம் — தர்க்கம் போன்ற பல துறைகளில் வெளியிட்டுள்ளமையை நன்கு அறிவோம். இவ்வாறு கடந்த இரு நூற்றாண்டுகளில் தமிழ் உரைநடை நன்கு வளர்ச்சி பெற்றுள்ளது.

தற்கால உரைநடை:

உரைநடைத் துறையில் மிக முக்கியமானவை நாவல், சிறுகதை, நாடகப் பகுதிகளாகும். இன்று பலர் வரலாற்று அடிப்படையிலும் இலக்கிய உணர்வு அடிப்படையிலும் சமுதாயச் சூழ்நிலையிலும் பல்வேறு வகையில் நாவல்கள், சிறுகதைகள் நாடகங்கள் எழுதி வருகின்றனர்.

இத்தனை வளர்ச்சிக்கிடையிலும் நம் நாட்டில் பிற மொழியாளர்களும் வெளிநாட்டு மொழியாளர்களும் அவரவர் மொழியில் உரைநடையில் நூல்கள் எழுதி வளர்ச்சியுற்ற-வளர்ச்சியுறும் எல்லையை நாம் அடையவில்லை என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். இந்திய நாட்டில் சில மொழிகளில் இன்றைய உலக அரங்கில் பேசப் பெறும் அறிவியல், சமுதாய, சமய, வாழ்வியல் நூல்கள்-பல்வேறு வகைகளில் எழுதப்பெற்று வருகின்றன. தமிழில் அத்தகைய வளர்ச்சி இல்லை என்பதை அவற்றோடு தமிழை ஒப்புநோக்கி ஆய்வார் கண்டு வருந்திக் கூறுகின்றனர். எனவே சென்ற காலத்தின் பெருமையில் நம்மை நாம் மறந்துவிடாது, வருங்காலத்தில் உலக சமுதாயத்துடன்-இந்தியாவின் பிற மொழியாளருடன் நாமும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டுமாயின், பிற துறைகளுடன் தமிழ்மொழியில்-சிறப்பாக உரைநடையில் எண்ணற்ற நூல்களை வெளியிட வேண்டும்.

வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்
தான்அறி குற்றப் படின்.

கோ. முத்துப்பிள்ளை
உதவிச் செயலாளர், தமிழக அரசு




**தமிழன்னை :**

அரசு கட்டிலிலே தமிழன்னை பன்னெடுங் காலம் அமர்ந்திருந்தாள். கரிகாற் பெருவளத் தானின் அரசவையிலே கன்னித் தமிழன்னை களி நடம் புரிந்துவந்தாள். முற்காலப் பிற்காலச் சோழரின் அவைகளிலெல்லாம் அவள் கொலுவீற் றிருந்தாள். பாண்டியன் மடியிலே தவழ்ந்தாள். சேரன் செங்குட்டுவன் செந்தமிழைப் போற்றி வளர்த்தான். ஆங்கிலேயர் ஆட்சி அமையும் வரை, தமிழகத்தில் தமிழன்னைதான் தனியாட்சி புரிந்து வந்தாள். ஆங்கிலேயர் வந்தபிறகு, தமிழன்னை புலவர் நாவிலே மட்டும் பொருந்தி வாழ்ந்தாள்.

**தமிழ் ஆட்சிமொழிச் சட்டம் :**

இருபது ஆண்டுகளுக்கு முன்னர் இந்திய நாடு விடுதலையுற்றதல்லவா? நாடு விடுதலை யடைந்தும் நாம் ஆங்கிலத்தை விட்டுவிட முடிய வில்லை. உலகத்தைக் காட்டும் கண்ணாடியாம் ஆங் கிலத்தை நாம் விட்டுவிடவும் முடியாது. எனினும் தமிழன்னை தன் முதலிடத்தைப் பெற வேண் டாவா? மக்கள் பேசும் மொழியை மக்களரசு பயன்படுத்த வேண்டாவா? யாருக்காக ஆட்சி நடைபெறுகின்றதோ அவர்களின் மொழியிலேயே அரசாணைகள் வெளிவர வேண்டாவா? இக்கருத் துக்களையெல்லாம் எண்ணி, தமிழக அரசு செயற் படத் தொடங்கியது. தமிழகத்தில் தமிழ்மொழி தான் ஆட்சிமொழியாகும் என அறிவிக்க முன் வந்தது. இதற்கொரு சட்டமே தேவைப்பட்டது! வியப்பினும் வியப்பாகத் தோன்றும் இது, உண் மையிலும் உண்மையல்லவா? தமிழை ஆட்சி மொழியாக அறிவித்த சட்டம் 1954-இல் நிறை வேற்றப்பெற்றது.

**தமிழால் முடியுமா ?**

அரியணையில் தமிழன்னை வீற்றிருப் பாளென அறிவிக்கப் பெற்றபின், அச்சமும் ஐயமும் எழுந்தன.

''உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு''

என்றுரலல்லவா உலகப் பெரியார் வள்ளுவர். சில காலம் தமிழன் செத்துப்போனுன்! திடீரெனப் புதிய பிறவியெடுத்தான்! பழைய தமிழை மறந்து போனுன்! உறங்கியவன் தன்னைச் செத்தவனுகவே எண்ணிக் கொண்டான்! தமிழில் எழுத முடியுமா என்னும் பொருந்தாக் கேள்வியை எழுப்பிவிட் டான். ஆங்கிலத்தைப் போல் தமிழில் நுண்ணிய கருத்துக்களை எண்ணிச்சொல்ல இயலுமா என்று கேட்டான். தொல்காப்பியத்தை, திருக்குறளை, புறநானூற்றை, பட்டினப்பாலையை இன்னும் எண்ணற்ற ஈடு இணையற்ற நூல்களைப் பெற்றுள்ள தமிழன் கேட்ட கேள்விகள் தாம் இவை! தமிழிலே முடியும் என்னும் விடை தடையின்றிக் கிடைத்தது. கல்வெட்டையும் செப்பேட்டையும்

படிக்கத் தெரிந்து கொண்டால் போதுமே! தமிழன், தன்னுடைய ஆட்சியின் சிறப்பை யெல்லாம் கல்லிலும் செம்பிலும் பொறித்து வைத்துள்ளான். கல்லிலும் செம்பிலும் தானே பொதுமக்களுக்குக் கடவுள் காட்சி தருகின்ருர்! ஆகவே, அவற்றிலேயே தம் வரலாற்றையும் செதுக்கி வைத்தான் தமிழன். ஆட்சியின் சிறப்பைக் கூறுமிடமெல்லாம் ஆட்சிச் சொற்கள் அணியணியாய்த் திரண்டு நிற்பதில் வியப்பென்ன? அரசனின் ஆணைக்குக் கட்டுப்பட்ட எண்ணற்ற தலைவர்கள், அலுவலர்கள், அலுவலகங்கள், குழுக்கள், பட்டப்பெயர்கள், திருவிழாக்கள் அனைத்திற்கும் சொற்கள் கல்வெட்டுக்களிலே காணக்கிடைக்கும்.

**பொருத்தமான சொற்கள் :**

திருவானைக்கா கல்வெட்டிலே 'முதுகண்' என்னும் அரிய சொல் அமைந்து கிடக்கின்றது. முதுகண் என்ருல் முதுமையான கண் எனச் சொல்லத் தேவையில்லை. இளைய கண்ணுக்கு எதிர்ச்சொல் முதுமையான கண். இளைய கண்ணுல் இந்த உலகத்து வஞ்சனைகளையெல்லாம் அறிந்து கொள்ளமுடியாது! ஆனல், முதிய கண்ணே ஆழ்ந்து பார்க்கும் திறனுடையது! இளைய கண்ணுக்கு முதிய கண்ணின் துணை தேவையாகும். தக்க வயதுவரா இளைஞர்களுக்கு உதவியாக இருப்போரைக் 'காப்புப்பொறுப்பாளர்' என இன்று கூறுகின்ருேம். 'Guardian' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு 'முதுகண்' என்னும் தமிழ்ச் சொல் பொருத்தமானதென்று சொன்னல் மட்டும் போதாது; சுவையுடையது என்றும் சொல்லவேண்டும்.

**ஆட்சிச் சொற்கள் :**

இலக்கியத்திலே ஆட்சிச் சொற்கள் இல்லையா? திருக்குறளை மட்டும் எடுத்துக்கொண்டு பார்ப்போமே :

''தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு''

என்கிருர் வான்புகழ் வள்ளுவர். பிறர்க்குதவுவோர் வேளாளர். அவர் செய்யும் அறவழித் தொழில் 'வேளாண்மை'. 'Agriculture', என்னும் சொல்லுக்கு இதைவிட உயர்ந்த சொல் அமைய முடியுமோ? எழுதுகோல் என்ருல் இன்றும் சிலர் ஏளனம் செய்கின்றனர்.

'எழுதுங்கால் கோல்காணுக் கண்ணேபோல் கொண்கண்
பழிகாணேன் கண்ட இடத்து'

என்ருரே பொய்யிற் புலவர். அங்கே எழுதுகோல் எத்துணை எழிலோடு திகழ்கின்றது. அரசு அலுவலகங்களிலே கட்டுக்கள் ஆமை வேகத்தில் நகர்ந்து செல்கின்றன என நாம் சொல்கின்ருேம்; நத்தை ஊர்வதுபோல என்றுகூடச் சொல்வோம். காலந் தாழ்த்திக்கொண்டே செல்வார்கள் என்றும் காலதாமதம் கூடாது என்றும் சொல்வோம்.

''நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்''

என்ருர் நம் செந்நாப்போதார். 'Delay' என்னும் ஆங்கிலச் சொல்லோடு 'நெடுநீர்' எவ்வளவு இனிமையாகப் பொருந்துகின்றது! 'நெடுநீர்மையை விலக்க வேண்டும்' என்று எழுதிப் பார்த்தால் தேன்போல இனிக்கும். திருக்குறளில் பொருட்பால் முழுவதிலும் ஆட்சிச் சொற்களை அடுக்கடுக்காய்க் காணலாம். தொட்ட இடமெல்லாம் ஆட்சிமொழி தோன்றக் காணலாம்.

**அரிய சொற்கள் :**

வானவூர்தி, அங்காடி, வலவன் (Pilot), புறனடை (exception), உழைச்செல்வார் (Nurse) என்னும் அரிய சொற்களையெல்லாம் நமக்கு அள்ளி வழங்குகின்றன நம் பழைய இலக்கியங்கள். 'மூர்மார்க்கெட்', 'மூர் அங்காடி' என்னும் அழகிய பெயரைப் பெற்றுக்கொண்டதல்லவா? சிலப்பதிகாரம் செப்புகின்ற நாளங்காடி, அல்லங்காடி அனைத்தும் நம் சென்னைத் திருநகரிலே மின்னி ஒளிரவேண்டாவா? 'சூப்பர் மார்க்கெட்டை'ப் 'பேரங்காடி' என்று அழைத்தாலென்ன?

கணக்கிலடங்கா ஆட்சிமொழிச் சொற்கள் நமக்குக் கிடைத்துள்ளன. முயன்ருல் மேலும் பல சொற்கள் நமக்குக் கிடைக்கும். எத்தனையோ கல்வெட்டுக்கள் கால வெள்ளத்தில் சிதைந்து போய்விட்டன. எத்தனையோ இலக்கிய நூல்கள் ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன. இவற்ருல் எத்தனையோ அரிய ஆட்சிச் சொற்களை நாம் இழந்திருக்கக்கூடும். மேலும், ஆட்சி முறைகள் நாளுக்கு நாள் விரிவடைந்தும் புதுமை பெற்றும் விளங்குகின்றன. எனவே புதிய ஆட்சிச் சொற்கள் நமக்குத் தேவையல்லவா? இவற்றை ஆக்கிக்கொள்ளும் திறன் தமிழினுக்குண்டா? தமிழ் மொழியிலே வேறெம்மொழியிலும் காணப்பெருத அளவிற்குத் தன்வினைச் சொற்களும், பிறவினைச் சொற்களும் பெருகி நிற்கின்றன. வேர்ச் சொற்கள் மிகவும் ஏராளம். தூய தமிழ் எழுத்துக்களும் தூய தமிழ்ச் சொற்களும் தமிழ் மண்ணிலே தோன்றியுள்ளன. ஒவ்வோர் எழுத்தின் வேரையும் ஒவ்வொரு சொல்லின் வேரையும் தமிழ் மண்ணிலே காணலாம். எண்ணற்ற வேர்ச் சொற்களைப் பெற்றிருக்கும் ஒரு மொழியில் புதிய சொற்களை ஆக்குவதில் என்ன தொல்லையிருக்க முடியும்? அரும்பு, முகை, போது, மலர், அலர், வீ எனப் பூவின் பருவ நிலைகளை வகுத்தவன் தமிழன். பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் எனப் பெண்களின் பருவ நிலைகளை வகுத்தவன் தமிழன். இயம்புதல், மொழிதல், சாற்றுதல், கழறுதல், விளம்புதல், செப்புதல், அறைதல் எனச் சொல்வதற்குரிய சொற்களை அடுக்கிச் சொன்னவன் தமிழன்.

ஞாயிறு, கதிரவன், சுடரவன், பரிதி, எல்லோன், வெயிலோன், வெய்யோன் எனப் பகலவனுக்குப் பல பெயர்களைக் கண்டவன் தமிழன். ஓங்கல், பிறங்கல், பொருப்பு, வெற்பு என மலையின் வகையறிந்து பெயரிட்டவன் தமிழன். பண்ணை, பனை, செய், கழனி, பழனம், புலம், வரப்புள் என்னும் பல சொற்களால் விளைநிலத்தை விளக்கியவன் தமிழன். அவனுக்கா புதிய சொற்களை ஆக்க முடியாது?

### தமிழின் இனிமை :

எழுத எழுதத்தான் தமிழின் இனிப்புத் தெரியும்.

Please speak—பேசுக
Please bring—கொணர்க
Please type—தட்டச்சு செய்க
Please issue—அனுப்புக, வெளியிடுக
Please ensure—உறுதி செய்து கொள்க
Please ascertain—கேட்டறிக

சுருக்கமும் இனிமையும் நிரம்பியது தமிழ்மொழி. Please, என்னுமொரு சொல் 'க' என்னுமோர் எழுத்திலேயே அடங்கிவிடும் அருமையினைக் காண்க! This order issues with the concurrence of the Finance Department, என்று சொல்லிப் பார்த்தால் ஆங்கிலம் இனிக்கின்றது! அதேபோலத் தமிழும் இனிக்கும்! சற்று மிகுதியாகக்கூட இனிக்கும்! 'இந்த ஆணை நிதித் துறையின் இசைவு பெற்று வெளியிடப் பெறுகின்றது'. நிறுத்தி நிறுத்திச் சொல்லிப் பார்த்தால் துள்ளித் துள்ளிச் செல்லும் இன்னோசை தெற்றெனப் புலப்படும். தமிழும் ஆங்கிலமும் இனிமையில் போட்டியிடும் வகையைக் கண்டு நாம் மட்டற்ற மகிழ்ச்சியடையலாம். Please take further action, என்னும் தொடர், ஆங்கிலத்தில் அழகுற அமைந்துள்ளது. இந்த அழகு குன்றாமல் தமிழில் சொல்ல முடியுமா? வள்ளுவர் நூலுக்கு உரைவகுத்த பரிமேலழகர் இதற்கு வழி காட்டுகின்றார்.

'செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்'

என்னும் குறள்மணிக்கு உரைகூறும் பரிமேலழகர் 'நிலத்திற்குரியவன் அதன்கண் நாடோறுஞ் சென்று பார்த்து **அடுத்தன செய்யாது** மடிந்திருக்குமாயின்' எனக் கூறிச் செல்கின்றார். 'அடுத்தன செய்யாது' என்னும் சொற்கள் நம் உள்ளத்தைக் கவர்கின்றன. அவற்றைச் சிறிது மாற்றியும் உடன்பாட்டு வகையிலும் எழுதுவோமாயின் 'அடுத்தன செய்க' என்னும் சிறு தொடர் பிறக்கும். Please take further action, என்று சொல்லி நிறுத்தி, 'அடுத்தன செய்க' என்று சொல்லிப் பார்ப்போம். 'அடுத்தாற்போல் செய்யவேண்டுவன அனைத்தையும் செய்க' என்பதை இதைவிடச் சுருக்கமாகவும், இனிமையாகவும் சொல்ல இயலுமோ?

### சொல்லாக்கம் :

பாண்டியநாடு முத்துடைத்து என்று பாடினார் பைந்தமிழ்ப்பாட்டி ஔவையார். முத்துக் குளித்தல் தமிழகத்தின் ஒரு முக்கியமான தொழில். குளிக்கக் குளிக்க முத்துக்கள் கிடைக்கும். ஒரேமுழுக்கில் முத்துக் கிடைக்குமா? புதிய சொற்களை ஆக்கும்போது முத்துக் குளிப்பவரின் நினைவுதான் நமக்கு வரும். Dearness Allowance, என்பதை எடுத்துக்கொண்டால், சொல்லமைப்புக்கள் படிப்படியாய்ச் செம்மையுற்று வந்துள்ளதைக் காணலாம். பஞ்சப்படி என்று எழுதினோம்! அது, Famine allowance, என்ற எண்ணத்தை உண்டு பண்ணியது! உடனே 'கிராக்கிப் படி' என்று சொல்லிப் பார்த்து, அதுவும் நன்றாக இல்லாத நிலையுணர்ந்து கடைசியில் 'அகவிலைப் படி'' என அருமையாக அமைத்துக் கொண்டோம். இதேபோல் சர்க்கார், துரைத்தனமாக மாறியது; துரைத்தனம் அரசாங்கமாக மாறியது; அரசாங்கம் அரசாக மாறியது. அரசுகள் மாறிய வரலாற்றைச் சொற்களே நமக்குத் தொடுத்துச் சொல்கின்றன! அரசு என்னும் அருமையான சொல் வள்ளுவரின் பொருட்பாலை நினைவூட்டி நிற்கின்றது. சிபாரிசு, பரிந்துரையாய் மாறிப் பயின்று வருகின்றது. தகுதியில்லாதார்க்கும் பரிந்துரை பயன்பட்டுவிடுமே என அஞ்சி இப்போது தகுதி பற்றியவுரை எனக்கொண்டு, 'தகவுரை' எனக் கூறினாலென்ன என்ற கருத்து எழுந்துள்ளது. பாராளுமன்றம் இப்போது நாடாளு மன்றமாகப் புதுப்பொலிவு பெற்றுள்ளது. இவற்றால் நாம் அறிவதென்ன? புடைக்கப் புடைக்கத் தூசு போகும். துலக்கத் துலக்க மெருகு ஏறும்.

புதிய அரசு வந்த பிறகு அரிய இனிய தனித்தமிழ்ச் சொற்கள் கொஞ்சி விளையாடுகின்றன. சேரனும் சோழனும் பாண்டியனும் மீண்டும் தமிழகத்தில் அரசோச்ச வந்துவிட்டார்கள். நல்ல தமிழில் அரசு ஆணைகள் பிறப்பிக்கப்படுகின்றன. அலுவலகக் கட்டுக்கள் முத்து முத்தான தமிழ்ச் சொற்களைத் தாங்கி பெருமை பெறுகின்றன. புலவர்கள் கனவு கண்ட பொற்காலம் இன்று தோன்றிவிட்டது. 'காவல் துறையினர் கவனத்திற்கு' என அழகு தமிழில் தமிழக முதல்வர் அறிஞர் அண்ணா அவர்கள் அலுவலக ஏட்டிலே எழுதியுள்ளார். இதனை எண்ணுந்தோறும் உள்ளம் துள்ளி எழும்.

### சுடரொளி வீசிச் சிறப்பதாகுக :

தமிழனென்று பிறந்தாளென, நாமறிந்த முதற் புலவராம் தொல்காப்பியருக்கே தெரியாது. அமிழ்தினுமினிய செந்தமிழ் மொழியில் எத்துணைச் சொற்களிருக்கின்றன எனப் பன்மொழிப் புலவர்களுக்கே தெரியாது. கிட்டாத நூல்கள் போகக் கிட்டிய நூல்களே கடலினுக் கொப்பாகும். மங்கை ஒருத்தி தரும் சுகமும் மாத்தமிழுக்கீடில்லை என்றார் புதுமைப் புலவர். இலக்கியத்தில் வெற்றி பெற்றாள் தமிழன்னை; ஆட்சி மொழியில் வெற்றி பெறுகின்றாள் தமிழன்னை. அவள் என்றும் வெற்றி பெறுவாள். தமிழ்கூறும் நல்லுலகிற்கெல்லாம் வழி காட்டுவாள்.

''வாழ்க வாழ்க தமிழன்னாய்!
வணங்கி மகிழ்வோம் உன்முன்னே!
சூழ்க நலமே தமிழ்த் தாயே!
சுடரொளி வீசித் திகழ்வாயே!''

# மொழி வாழ்த்து

இயற்கையிலே கருத்தாங்கி இனிமையிலே வடிவெடுத்துச்
செயற்கைகடந் தியலிசையில் செய்நடமே! வாழியரோ!
பயிற்சிநிலப் பயிர்களெலாம் பசுமையுற ஒளிவழியே
உயிர்ப்பருளும் திறம்வாய்ந்த உயர் தமிழ்த்தாய்! வாழியரோ !

—திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

தமிழினைப் போற்றுதும் தாய்தமிழ் போற்றுதும்
தாயைச்சேய் பேணல் தலையற நம் மெல்லவர்க்குந்
தாய்தமிழே யாமாத லால்

தென்மொழி போற்றுதும் தீந்தமிழ் போற்றுதும்
தாயிற் சிறந்தம்மம் தானும்வாழ் நாளெல்லாம்
ஆய்சுவை யோடளித்த லால்

தொன்மொழி போற்றுதும் சொற்றமிழ் போற்றுதும்
போனகமாய்த் தாரகமாய்ப் போக்கியமாய் நாமார
வானமுதின் மேலினித்த லால்.

—நாவலர் சோமசுந்தர பாரதியார்

கைக்கிளை ஈருக் கட்டிய நரம்பிற்
    கலந்துநின் றின்னிசை எழுப்பி
மெய்க்கிளை நட்புப் பகையிணை தெரித்த
    மெல்லியல் இணையடி பணிவாம்

புக்கிளை யாத புலமையின் ஊற்றுய்ப்
    பொருந்தினர்க் காரமிழ் தாகி
எக்கிளை ஞரினும் மிக்கஅன் பளிக்கும்
    இருந்தமிழ் அணங்கினை உவந்தே.

—சுவாமி விபுலானந்தர்

போற்றுதும் போற்றுதும் தொண்டுகள் நாடொறும்
ஆற்றிய தண்டமிழ் ஆர்வலர் தம்மையே
ஏற்றிநம் நெஞ்சில் இனிது.

உடல் மண்ணுக்கு, உயிர் தமிழுக்கு என்று
எண்ணி, கடந்த இருநூறு ஆண்டுகளில் ஒளி
செய்யும் உயர்தொண்டாற்றியவர் எண்ணற்றவர்.
அவருட் சிலரின் வாழ்க்கைக் குறிப்பும் வண்டமிழ்த்
தொண்டும் இங்கே கொடுக்கப்படுகின்றன.
சுவைக்கு அவர்தம் கரும்பு எழுத்துக்களில் ஒரு
சிறு 'நறுக்கும்' இங்கே உண்டு.

படமும் விளக்கமும்:

திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

*நூலகர், மறைமலையடிகள் நூல் நிலையம்*

*சென்னை*

தமிழ் உரைநடை செவ்விய முறையில் வளர்வதற்கு உறுதுணையாய் நின்றவர் ஆறுமுக நாவலர். யாழ்ப்பாணத்தைச் சார்ந்த நல்லூரில் தோன்றியவர். தமிழ் நூல்களை முதன் முறையாகச் செவ்வையான வகையில் பதிப்பித்தவர். திருக்குறள் பரிமேலழகருரை, நன்னூற் காண்டிகை போன்ற இலக்கிய, இலக்கண நூல்களையும் திருவிளையாடல், பெரிய புராணம் போன்ற புராண நூல்களையும் பிழையின்றிப் பதித்தவர். தமிழுக்கும் சைவத்திற்கும் இவர் ஆற்றிய தொண்டு மறக்கற்பாலதன்று.

* . * *

''தொண்டை மண்டலத்திலே, குன்றத்தூரிலே, வேளாள வருணத்திலே, சேக்கிழார் மரபிலே, பரமசிவனது திருவருளினாலே, தமிழ் நாட்டில் உள்ளவர்கள் உய்யும்படி, அருண்மொழித் தேவர் பாலறாவாயர் என்னுஞ் சற்புத்திரர் இருவர் சகோதரராய்த் திருவவதாரஞ் செய்தார்கள். அவர்களுள்ளே மூத்தவராகிய அருண்மொழித் தேவர் தாம் உதிக்கப் பெற்ற சேக்கிழார் மரபை விளக்கினமையால் அவருக்குச் சேக்கிழாரென்னும் பெயர் உண்டாயிற்று. அவருடைய கல்வியறிவொழுக்கங்களை அநபாய சோழ மகாராஜாவானவர் அறிந்து, அவரைத் தமக்கு முதன் மந்திரியாராக்கி, அவருக்கு உத்தம சோழப் பல்லவரென்னும் பெயரைக் கொடுத்தார்.''

—(பெரியபுராண வசனம்)



ஆறுமுக நாவலர் (*1822-1879*)



**இராமலிங்க அடிகள்** (*1823-1874*)

சமயநெறியில் சமரசத்தைப் பரப்ப முன் வந்த பெரியார் இராமலிங்க அடிகள். இறைவன்மீது இவர் பாடிய பாடல்கள் அருட்பா என்ற பெயரில் தொகுக்கப் பெற்றுள்ளன. ஆற்றொழுக்கான உரைநடை நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். இவர் தம் கடிதங்கள் திருமுகப்பகுதியில் தொகுக்கப் பெற்றுள்ளன. வடலூரில் சமரச சன்மார்க்க சங்கத்திற்கெனத் தனிமனை வகுத்து இறைத் தொண்டாற்றி வந்தார். பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த அருட்கவியென இவரைக் குறிப்பிடலாம்.

* * *

''வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம்
  வாடினேன் பசியினா லிளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறா தயர்ந்த
  வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோரென்
  நேருறக் கண்டுளந் துடித்தேன்
ஈடின்மா னிகளா யேழைக ளாய்நெஞ்
  சிளைத்தவர் தமைக்கண்டே யிளைத்தேன்.''

(அருட்பா-பிள்ளைப் பெரு விண்ணப்பம்)

சேரநன்னுடு தந்த செம்மலாம் சுந்தரம் பிள்ளை தமிழ் நாடக இலக்கியத்திற்கு ஆற்றிய தொண்டு நிலையானதாகும். திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் பேராசிரியராகப் பணி புரிந்த இவர் 19-ஆம் நூற்றுண்டின் தலை சிறந்த நாடக நூலான 'மனேன்மணீ'யத்தைத் தமிழுக்கு அளித்துள்ளார். வேறு பல ஆராய்ச்சி நூல்களையும், நூலக இயல்பற்றிய முதல் தமிழ் நூலான 'நூற்றெகை விளக்கம்' என்ற அரிய நூலையும் படைத்தவர். இவர் பாடிய தமிழ்த் தெய்வ வணக்கப் பாடல் தமிழ் மக்களிடை மிகப் பரவிய பாடலாகும்.

* * *

"நிற்புகழ்ந் தேத்துநின் நெடுந்தகை மைந்தர்
பற்பலர் நின்பெரும் பழம் பணி புதுக்கியும்
பொற்புடை நாற்கவிப் புதுப்பணி குயிற்றியும்
நிற்பவர் நிற்க நீ பெறும் புதல்வரில்
அடியேன் கடையேன் அறியாச் சிறியேன்
கொடுமலை யாளக் குடியிருப் புடையேன்
ஆயினும் நீயே தாயெனுந் தன்மையின்
மேயபே ராசையென் மீக்கொள ஓர்வழி
உழைத்தலே தகுதியென் றிழைத்தவிந் நாடகம்
வெள்ளிய தெனினும் விளங்குநின் கணைக்காற்கு
ஒள்ளிய சிறுவிர லணியாக்
கொள்மதி யன்பே குறியெனக் குறித்தே."

—(மனேன்மணீயம்-பாயிரம்)



பேராசிரியர் சுந்தரம் பிள்ளை
*(1855-1897)*



ரா. இராகவையங்கார்
*(1870-1948)*

இராமநாதபுரம் அரசவைப் புலவராக விளங்கியவர் ரா. இராகவையங்கார், இராமநாதபுரம் மாவட்டத்தில் தோன்றியவர். தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும்மொழிகளிலும் புலமை பெற்று விளங்கியவர்; சிறந்த ஆராய்ச்சியாளர்; கேட்பார்ப் பிணிக்கும்வகையில் சொற்பொழிவாற்றுவதில் வல்லவர். புவியெழுபது, பாரிகாதை போன்ற செய்யுள் நூல்களையும் தமிழ் வரலாறு, வஞ்சி மாநகர் போன்ற ஆராய்ச்சி நூல்களையும் படைத்துள்ளார். மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும் அண்ணுமலைப்பல்கலைக் கழகத்திலும் சிறிது காலம் பணியாற்றினர்.

* * *

"இனிமை என்னும் பொருள்படும் தமிழ் என்னுஞ் சொல்லே நம் நாட்டு மொழிகளுள், தொன்மையும் முதன்மையும் பெற்ற இத்தென்னுட்டுத் தாய்மொழிக்குப் பெயராய்ப் பண்டைக்காலந் தொடங்கி வழங்கிவந்ததென்பதற்கு அகச்சான்றுகளும் புறச்சான்றுகளும் பலவுள்ளன. தமிழ்மொழியில், தமிழ் என்னுஞ் சொற்கு இனிமையென்னும் பொருள் உண்டென்று மேற்கோள் காட்டுமிடனெல்லாம் தமிழ் என்பது இனிமையையுடையவற்றிற்கு அடையாயடுத்து வருதல் காணலாம்"

—(தமிழ் வரலாறு)

வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் தம் பெயரைப் 'பரிதிமாற் கலைஞன்' என மாற்றிக் கொண்ட தனித் தமிழ்ப்பற்றாளர். இவர் உயரிய செந்தமிழ் நடையிற் பேசுவதிலும் எழுதுவதிலும் வல்லவர். நாடகப் புலமை சான்றவர். 'தமிழ் மொழி வரலாறு' போன்ற ஆராய்ச்சி நூல்களையும், கலாவதி, ரூபாவதி போன்ற நாடக நூல்களையும், நாடக இலக்கணமான நாடகவியலையும் இயற்றியவர்.

* * *

''வடமொழி, இலத்தீன், கிரீக்கு முதலியன போலத் தமிழ் மொழியும் 'உயர்தனிச் செம்மொழி'யாமாறு சிறிது காட்டுவாம். தான் வழங்கு நாட்டின் கண்ணுள்ள பலமொழிகட்குந் தலைமையும் அவற்றினும் மிக்கமேதகவுடைமையுமுள்ள மொழியே 'உயர்மொழி'. இவ்விலக்கணத்தான் ஆராயுமிடத்துத் தமிழ், தெலுங்கு முதலியவற்றிற் கெல்லாந் தலைமையும் அவற்றினும் மிக்கமேதகவும் உடைமையால் தானும் உயர்மொழியே என்க. தான் வழங்கும் நாட்டிற் பயிலும் மற்றைய மொழிகளின் உதவியின்றித் தனித்து இயங்கவல்ல ஆற்றல் சான்றதே 'தனிமொழி' என்னப்படும். தான் பிறமொழிகட்குச் செய்யும் உதவி மிகுந்தும் அவை தனக்குச் செய்யும் உதவி குறைந்தும் இருத்தலே வழக்காறு. தமிழ்மொழியினுதவி களையப்படின், தெலுங்கு முதலியன இயங்குதலொல்லா; மற்றுத் தமிழ்மொழி அவற்றினுதவி யில்லாமலே சிறிது மிடர்ப்படுதலின்றித் தனித்து இனிமையின் இயங்கவல்லது.''

—(தமிழ்மொழியின் வரலாறு)



பா. வே. மாணிக்க நாயக்கர்
*(1871-1931)*



வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்
*(1870-1903)*

சென்னை அரசின் அளவைப் பெரும்பிரிவில் பணியாற்றி ஒய்வுபெற்ற நாயக்கர் தமிழ்த் தாய்க்குத் தொண்டு புரிந்த தலைமகனாவார். இவரது நுண்மாணுழைபுலம் யாவராலும் வியக்கத்தக்கது. சேலத்தில் பிறந்தவர். ஒலி நூலாராய்ச்சியில் ஈடிணையற்று விளங்கியவர். தமிழ் எழுத்துக்களைக்கொண்டு உலகின்கண்ணுள்ள எல்லா மொழிச் சொற்களையும் எழுத முடியுமென்று காட்டியவர். அறிவியற் கலைச் சொற்களுக்குத் தனித் தமிழ்ச் சொற்கள் அமைத்தவர். தமிழலகைத் தொடர், தமிழ் மறை விளக்கம் போன்ற நூல்களைப் படைத்தவர்.

* * *

''ஆங்கிலத்தில் 'மூன்று வெண் காக்கைகள்' காதைபோலச் சில ஆயிரம் ஆண்டுகளாகச் சொல்லக் கேட்டுச் சொல்லக் கேட்டு நமக்கெட்டிய விவரங்கள், அகத்தியர் கடலைக்குடித்தல், அகப்பொருளைக் கடவுளே எழுதிப் படியிடுக்கில் நுழைத்துவைத்தல், குதிரைமாளக்கொண்டு போதல், சங்கப் பலகைதானே விரிதல், தானே சுருங்கி இருந்த இடம் தெரியாமற் போதல் முதலாய இயற்கையில் நிகழாதவைகளும் உட்படுத்தி வருதலால், அவைகளை ஆர்க்கியாலாஜிகல் முறையில் அவ்வாறே ஏற்றுக்கொள்ளவியலாதிருக்கின்றது. இக்கேள்வியில் வந்த பழங்காதைகளில் எப்பகுதிகளைத் தள்ளுவது, எப்பகுதிகளையேற்றுக்கொள்வதென்பது அவரவர் உள்ளப் போக்கைச் சார்ந்ததாகவிருக்கின்றதேயொழிய, தீர்மானமாக இதுதான் கொள்ளக்கடவதென்று சொல்ல ஒப்புதல் கிடைப்பரிது.''

—(தமிழலகைத் தொடர்)

விடுதலைக்கு வித்திட்ட வீரர்களுள் ஒருவர் கப்பலோட்டிய தமிழன் என விளங்கும் வ. உ. சிதம்பரம் பிள்ளை. நெல்லை மாவட்டத்தில் தோன்றியவர் இவர்; நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்டு நலிவுற்றவர். செக்கிழுத்த செம்மல். நாட்டு முன்னேற்றத்திற்காக மட்டுமன்றி இலக்கிய இலக்கண வளர்ச்சிக்காகவும் அரும் பாடுபட்டவர். சிறந்த பதிப்பாசிரியர். திருக்குறள் மணக்குடவருரை, தொல் - இளம்பூரணர் உரை முதலியவற்றைப் பதிப்பித்ததோடு மேலைநாட்டுத் தத்துவப் பேரறிஞராய் விளங்கிய ஜேம்ஸ் ஆலென் எழுதிய நூல்களுக்குத் தமிழாக்கம் செய்தவர்.

* * *

''சீரெல்லாம் நிறைந்து விளங்கும் செந்தமிழ் நூல்களிற் சிறந்தது, 'திருக்குறள்' என்று வழங்கும் வள்ளுவர் நூல். 'தருமர், மணக்குடவர், . தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பருதி, திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர் வள்ளுவர் நூற்கெல்லை உரையெழுதினோர்.' அப்பதின்மர் உரைகளில் தற்காலம் தமிழ் நாட்டில் பயின்று வழங்குவது பரிமேலழகருரை ஒன்றே. அவ்வுரையைச் சில வருடங்களுக்கு முன்னர் யான் படிக்கத் தொடங்கினேன். அப்பொழுது மற்றைய ஒன்பதின்மர் உரைகளையும் பார்க்க வேண்டுமென்னும் அவா எனக்கு உண்டாயிற்று. அதுமுதல் தமிழ் நூல்கள் இருக்கும் இடங்களில் அவற்றைத் தேடவும் தேடுவிக்கவும் முயன்றேன். அம் முயற்சியின் பயனாக எனக்குக் கிடைத்தவற்றில் மணக்குடவருரைப். பிரதி ஒன்று.

—(மணக்குடவருரை)



வ. உ. சிதம்பரம்பிள்ளை
*(1872-1936)*



ஞானியாரடிகள்
*(1873-1942)*

ஞானியார் சுவாமிகளின் முழுப் பெயர் சிவ சண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் என்பது. திருக்கோவலூர் ஆதீனத்தின் தலைவராயிருந்தார். இவர் வடமொழியிலும் தென்மொழியிலும் புலமை பெற்றவர். முருகன் சேவடி வருடியுருகும் ஈரநெஞ்சும், அவன் புகழ் பேசி இனிக்கும் நன்னாவும், தண்மை பொழியும் செவ்விய நோக்கும், வெண்ணீறு துதையும் நெற்றியும், மாணிக்கக் குழை பிறங்குஞ் செவியும், பொன்னொளிரும் மணிமார்பும், கருமைக் கதிர்விரிக்குந் திருமேனியும் கொண்ட அடிகளின் திருவோலக்கப் பொலிவு காண்பாருள்ளங் கவர்வது.

* * *

"முருகன்: இச்சொல்லுக்குப் பொருள் 'தெய்வம்' என்பது. வடமொழியில் கூறினுற்றான் நம்மக்கள் அறிகின்றனர். நம் தாய்மொழியாகிய தமிழ் மொழியை நாம் அறிகின்றோமில்லை. ''லாயத்தில் குதிரை'' என்கின்றோம். 'லாயம்' தமிழ்ச் சொல் அன்று. வெவ்வேறு அரசியலிருந்த காலங்களில் வெவ்வேறு மொழிகள் தமிழ் நாட்டினுள் நுழைந்தன. ஆங்கிலப் பள்ளியையும் அறியாது வீட்டினுள் அடங்கிக் கிடக்கும் பெண்களும், 'டயத்துக்கு வரலையே' என்கின்றார்கள். இங்ஙனம் வேற்றுச் சொல் வேகமாக நம் தமிழ்மொழியில் புகுகின்றன. யாவரும் இதைக் கவனித்தல் வேண்டும். வடசொல்லுடன் தமிழ்ச் சொல்லை இயைத்துத் தமிழ்ச் சொல்லை விளக்கிச் செல்லும் நெறியை நாவரசர்பால் 'அடவிகாடே' எனுமிடத்துக் காண்க.''

தமிழ் மொழியின் ஆக்கத்திற்கு அரும்பாடு பட்டவர்களுள் யாழ்ப்பாணம் ஞானப்பிரகாச சுவாமிகளும் ஒருவர். ஊர்க்காவல் துறையில் பணியாற்றிய இவர், தம் பணியைத் துறந்தாரேயன்றித் தாய்மொழியாம் தமிழ்மொழியின்மீதுகொண்ட பற்றைத் துறக்கவில்லை. இலத்தீன், கிரேக்கம் முதலாய பதினெண் மொழிகளில் எழுதவும் பேசவும் வல்லவரா யிருந்தார். 'தமிழ் அமைப்புற்ற வரலாறு' போன்ற பல தமிழ் நூல்களின் ஆசிரியர் இவர். 'சொற்பிறப்பு ஒப்பியல் அகரவரிசை' என்ற பெயரில் இவர் வெளியிட்ட தமிழ் ஒப்பியல் அகராதி சிறந்த நூலாகும்.

* * *

''அமிழ்தினும் இனியது என அறிஞர் போற்றும் எம் அரிய தமிழ்மொழியின்கட் பொருந்திய அழகுகளுள் ஒன்று யாதெனில், அதன் பன்னூற்றுத் தொகைப்பட்ட சொற்களிற் பெரும் பங்கானவை தம்முள் இனங்கொண்ட கூட்டங் கூட்டமாய் இயலுதலாம். இச் சிறப்பினைப் பண்டை இலக்கண நூலாசிரியர் சிறுபான்மையும், எங்காலத்து அகலறிவாளர் சில்லோர் பெரும்பான்மையும் எடுத்துக்காட்டலுற்றார். தமிழ்ச் சொற்பரப்பு முழுதினையும் ஒப்புநோக்கி அடைவுபடநிறீஇ, பிற பெரும் மொழிகளோடும் ஊடாடிய நுண்ணறிவு கொண்டு ஆராயுமிடத்து, முற்கூறிய பலப்பல சொற் கூட்டங்களானவற்றுள் குடும்பச் சாயல் போன்றதோர் ஒற்றுமை நயம் வெளிப்பட்டு, அக்கூட்டங்கள், தம்மிலும் தொகை சுருங்கிய வேறு கூட்டங்களின் உறுப்புக்களாய் நிற்றல் தெளிவுறும்.''



ஞானப்பிரகாச சுவாமிகள்
*(1875-1947)*



மறைமலையடிகள்
*(1875-1950)*

''சோழ நாட்டிலே நாகபட்டினத்துக்கு அருகிலே காடம்பாடி என்னும் ஊரிலே தோன்றிக் கல்வியறிவொழுக்கங்களில் தலைசிறந்து, சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தமிழாசிரியராய்த் திகழ்ந்து, துறவு நிலையுற்று, பல்லாவரத்தில் பொதுநிலைக் கழகத் தலைவராய் விற்றிருந்த சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள் தமிழ்நாடு செய்த பெருந்தவவுருவினர். இவர் 'மாணிக்கவாசகர் வரலாறும் காலமும்' 'திருக்குறளாராய்ச்சி' முதலிய நாற்பதுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார்.

* * *

''முகிழ்த்து மணங்கமழ்ந்து அழகாய் மலரும் பருவத்தே ஓர் அரிய செங்கழுநீர்ப்பூ அதனருமையறியான் ஒருவனாற்கிள்ளியெறியப்பட்டு அழிந்தாற் போலவும், மறைநிலாக் காலத்தே திணிந்து பரந்த இருளின்கட் செல்லும் நெறி இதுவெனக் காட்டுதற்கு ஏற்றி வைத்த பேரொளி விளக்கு சடுதியில் வீசிய சூறைக் காற்றினால் அவிந்து மறைந்தாற் போலவும், நீண்டநாள் வறுமையால் வருந்திய ஒருவன் புதையலாய்க் கண்டெடுத்த பொன் நிறைந்த குடம் ஒன்று வன்னெஞ்சக் கள்வனொருவனாற் கவர்ந்து கொள்ளப்பட்டாற் போலவும் இத்தமிழ்நாட்டுக்கு ஒரு கல்வி மலராய் ஓர் அறிவு விளக்காய் ஓர் அருங் குணப் புதையலாய்த் தோன்றிய இவ்விளைஞர் தமது 43-ஆம் ஆண்டில் கதுமெனக் கூற்றுவனாற் கவரப்பட்டது ஒரு பெருங் கொடுமையன்றோ?''

நாஞ்சில் நன்னுட்டினரான செய்கு தம்பிப் பாவலர் சதாவதானி, தமிழ்ப் பெரும்புலவர், கலைக்கடல். வடலூர் வள்ளலாரின் அருட் பாவை மருட்பாவென்று மறுத்தோரை எதிர்த்து 'அருட்பா அருட்பாவே' என்று நிலை நாட்டியவர். சீருப் புராணத்திற்குச் சிறந்த தோர் உரையெழுதியவர். கோட்டாற்றுப்பிள் ளைத்தமிழ், அழகப்பக் கோவை முதலிய சிற் றிலக்கிய நூல்களையும், சில நாடக நூல்களையும் எழுதியவர். கூர்த்தமதி படைத்து விளங்கிய தால் ஒரே சமயத்தில் நூறு வகையான செயல் கள் செய்யும் 'சதாவதானம்' என்னு கலையில் சிறந்து விளங்கியவர்.

* * *

கொக்கிவிட்ட சங்கிலிபோற் கூண்டெழுந்து<br>[நும்மடியார்<br>சொக்கிவிட்ட நல்லருட்கே தோய்ந்து<br>[நின்றுரை யோநா<br>னுக்கிவிட்ட நெஞ்சினனு யுள்ளுடைந்து<br>[மெய்ம்மடங்கிக்<br>கக்கிவிட்ட தம்பலொத்தேன் கல்வத்து நாயகமே.

துட்டென்ருல் வாயைத்திறந்து துடிதுடித்<br>[தெழுந்து<br>கொட்டென்று கேட்டுநிற்குங் கோளர்<br>[கட்கோ—இட்டென்றும்<br>வற்ருத் தனம்படைத்த வள்ளல்சீ தக்காதி<br>பொற்ரு மரைக்கோ புகழ்.''



செய்கு தம்பிப் பாவலர்
*(1876-1950)*



கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை
*(1876-1954)*

இந்நூற்ருண்டின் தலைசிறந்த கவிஞர்களுள் ஒருவர் 'கவிமணி'யாவர். நாகர்கோவிலுக் கருகில் உள்ள தேரூரில் தோன்றியவர். முறை யாகத் தமிழ் பயின்று தமிழாசிரியராகப் பணி யாற்றியவர். தேனெழுகக் கவிபாடுவதில் வல் லவர். இவர்தம் தித்திக்கும் தேன்சுவைக் கவிதைகள் 'மலரும் மாலையும்' என்ற தலைப் பில் வெளிவந்துள்ளன. உமர்கய்யாமின் பாடல்களைத், தமிழில் சுவைபடப் பாடியுள் ளார். கவிதை நூல்களோடு பல ஆராய்ச்சி நூல்களையும் இவர் படைத்துள்ளார். 'காந் தளூர்ச் சாலை' என்ற நூல் பின்னவற்றுள் குறிப்பிடத்தக்கது.

* * *

*பாட்டுக் கொருபுலவன் பாரதிஅடா! — அவன்<br>பாட்டைப் பண்ணேடொருவன் பாடினுன்,<br>[அடா!<br>கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனேயடா!—<br>[அந்தக்<br>கிறுக்கில் உளறுமொழி பொறுப்பாய்,<br>[அடா!*

*சொல்லுக்குச் சொல்லழகும் ஏறுமே, அடா!<br>[—கவி<br>துள்ளும் மறியைப்போலத் துள்ளுமே, அடா!<br>கல்லும் கனிந்துகனி யாகுமே, அடா!—பசுங்<br>கன்றும்பால் உண்டிடாது கேட்குமே,<br>[அடா!<br>—(மலரும் மாலையும்)*

கோயமுத்தூரில் வழக்கறிஞராகவிருந்த முதலியார் இலக்கண இலக்கியப் பயிற்சியும் சைவ சித்தாந்த நூலறிவும் மிக்குடையவர். இவர் சிவனடிப் பேரன்புமிக்கவர். சைவ சமயச் சொற்பொழிவாற்றுவதில் வல்லவர். இவர்தம் சிவத்தொண்டைப் பாராட்டிச் 'சிவக்கவிமணி' என்ற பட்டம் இவருக்கு வழங்கப்பட்டது. பெரிய புராணத்திற்கு மிக விரிவான வகையில் ஒரு பேருரை இயற்றியுள்ளார். தம் வாழ்நாளின் இறுதியில் துறவு மேற்கொண்டு சைவ சமயத் தொண்டில் முழுதும் ஈடுபட்டார். பெரிய புராண உரையை இவர்தம் ஆயுட்பணி எனலாம்.

* * *

''சோழ நாட்டிலே பழையாறை என்பது சிறந்த பழம்பதி. அதில் வணிகர் குலத்தினில் வந்தவர் அமர்நீதியார் என்ற பெரியார். அவர் எந்நிலத்தினும் வருகின்ற பொன், மணி, துகில் முதலியவற்றிலே வாணிகம் செய்து அதனுல் வளமிக்கு வாழ்ந்தனர். அவர் சிவன் கழலல்லாது வேமுென்றும் சிந்தைசெய்யார்; சிவனடியார்களை அமுது செய்வித்து அவர்களுக்கு, அவரவர் கருத்தினைத் தாமே அறிந்து, வேண்டுமாறு கந்தை, கீள் உடை, கோவணம் என்பவற்றை உதவி வந்தனர். செல்வம் பெற்ற பயனை அடைவாராய்த் திருநல்லூருக்குச் சென்று அங்குத் திருவிழா அணி சேவித்தனர்''

—(அமர்நீதிநாயனுர் புராணம்)



நாவலர் சோமசுந்தர பாரதியார்
(1879-1959)



சிவக்கவிமணி சி. கே. சுப்பிமணிய முதலியார்
(1878-1961)

எட்டயபுரத்தில் தோன்றிய நாவலர் வழக்கறிஞர் தொழிலில்தான் முதலில் புகுந்தார்; இருப்பினும் அவர் அத்தொழிலில் நின்ருரில்லை. வழக்குமன்றங்கள் தவிரக் கம்பர், திருவள்ளுவர், தொல்காப்பியர் முதலிய மன்றங்களிலும் பழகிவந்தார். இப்பழக்கம் அவரை அண்ணுமலைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் பதவிக்குத் தூக்கியது. சிறந்த சொற்பொழிவாற்றும் திறன்மிக்க இவர்தம் மேடை வழக்கரங்கமாகவே காணப்படும். இவர், மாரிவாயில், திருவள்ளுவர் போன்ற பல ஆராய்ச்சி நூல்களையும் தொல்காப்பியப் பொருளதிகார விளக்கத்தையும் எழுதியுள்ளார்.

* * *

''வள்ளுவரின் குலமும் குடிப்பிறப்பும் நெட்டிடையிருளில் மறைபட்டுத் தெளிதற்கரிதாகும். பண்டைய பெரியோர் பிறப்பனைத்தும் இவ்வாறே தேடரிய முயற்கொம்பாகத் தெரிகின்ருேம். நக்கீரர் முதலிய சங்கப் புலவரும், அவர் தமக்குப் பல நூற்ருண்டுகளுக்குப் பிற்பட்ட கம்பரனைய கவிவாணரும் தத்தம் நூலளவில் தமிழகத்தே வாழ்வு பெற்றிருத்தலன்றி மற்றப்படி அவர்களின் குலம் குடிகளை விளக்கும் குறிப்புக்களொன்றும் கிடைக்கக் காணேன். காளிதாசன் முதலிய வடமொழி மகாகவிகளும் இப்படியே அவர்தம் நூலளவிலன்றிப் பிருண்டு நமக்கு ஏதிலராகின்றனர். இறவா அறிவற நூல்களை மட்டும் பேணிப் போற்றுவாரன்றி, அந்நூல் செய்தார் வாழ்க்கைக் குறிப்புக்களை நம்மவர் பாராட்டும் வழக்கம் இல்லை''

—(திருவள்ளுவர்)

பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் மகிபாலன்பட்டியில் பிறந்தவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராய்ப் பணியாற்றியவர். தமிழும் வடமொழியும் கற்றவர்களில் முதன்முதல் ''பெரும் பேராசிரியர்'' (மகாமகோபாத்தியாயர்) என்னும் பட்டம் பெற்றவர் இவரே. இவருடைய இலக்கிய நயமும், சமய உணர்ச்சியும் செறிந்த கட்டுரைகள் 'உரைநடைக் கோவை' என்னும் நூல்வடிவில் வெளிவந்துள்ளன.

* * *

''...புன்னுனிப்பனியில் மன்னுமா மலையுருத் துன்னி நின்றொளிர் தரல்போலச் சிற்றளவினவாகிய சொற்றொடர்களிற் சிறந்தமைந்தனவாகிய பெரும் பொருள்கள் தோன்றித் திகழும் அற முதனுதலிய திறனமை நூல்களும், அன்பினைந் திணை அகவொழுக்க நேர்மையும், தொடர்நிலைச் செய்யுட்சுவை நலக்கனிவும், குறிக்கோள் பற்றிய அறிவியல் நூல்களின் திட்பநுட்ப அமைவும், காதல்மிக்கு ஓதுவார் கேட்பாரது கல்லினும் வலிய உள்ள நிலையையுங் கரைத்து அவர் தமை அன்புருவாக்கி இறை திருவருட்கு இனிதின் ஆளாக்கும் இசை நலந்தழீஇய அருட் பாசுரப்பகுதிகளும், இன்னும் பற்பல துறைகளைப்பற்றி நின்று திகழும் நூற்றொகைகளும் தன்பான் மிளிர, இனிமையாங் குணத்தை இயைந்து, தட்பமும் தகவும் ஒட்பமும் ஒருங்கமையப் பெற்று, எல்லாம் வல்ல இறைநிலை போல் என்றும் நின்று நிலவுவது நம்தென் றமிழ் மொழியேயாம்.''

—(உரைநடைக் கோவை)



பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்
*(1881-1953)*

'ரசிகமணி' என்ற பட்டம் பெற்ற டி. கே. சிதம்பரநாத முதலியார் தமிழ் இலக்கியத்தைச் சுவைத்துச் சுவைத்துப் படித்ததோடன்றித் தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையமென்ற வகையில் பாநலத்தை விளக்கும் நாநலம் பெற்று விளங்கினர். பாட்டாவது சொல்லன்று; எழுத்தன்று; யாப்பன்று; அஃது அநுபவ நுகர்ச்சி. இது டி. கே. சி. யின் கருத்து. கம்பனின் கவிநயத்தில் மூழ்கித்திளைத்த இவர் கம்பராமாயணத்தைப் புதிய முறையில் பதிப்பித்துள்ளார்.

ஒரு கதை, புராதனமான கதைதான். கம்பர் ஒரு ஊருக்குப் போயிருந்தார். ஒரு பிரபுவுடன் தங்கியிருந்தார். சாயங்காலம் ஆனதும், ''யாரோ ஒரு புலவர் கோயிலில் கம்பராமாயணப் பிரசங்கம் செய்கிறார். நாமும் போய்க் கேட்டு வரலாமே'' என்றார் பிரபு. கம்பரும் சம்மதித்தார். இருவரும் பிரசங்கிக்கு முன் உட்கார்ந்து இருந்தார்கள். ....பிரசங்கம் முடிந்தது. பிரசங்கியிடம் கம்பர் இன்னார் என்று பிரபு அறிமுகப்படுத்தினர். பிரசங்கிக்கு அளவில்லாத சந்தோஷம் உண்டாகி, ''அடடா! பாடல்கள் எல்லாம் எவ்வளவு அருமை! தங்களைக் கவிச்சக்கரவர்த்தி என்று சொல்லாமல் வேறு என்ன சொல்லுகிறது?'' என்று கம்பரைப் பார்த்து வியந்தவண்ணமாய்ச் சொன்னர். ஆனல் கம்பரோ, ''தாங்கள் வாசித்த ராமாயணத்தில் என்னுடைய பாடல்களும் ஒன்றிரண்டு சேர்ந்திருக்கிறது போலத் தெரிகிறது'' என்று அமைதியாய்ச் சொல்லி நிறுத்தினர்.

—(கம்பர் யார்?)



ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார்
*(1882-1954)*

வரகவி சுப்பிரமணிய பாரதியார் தோன்றிய ஊர் எட்டயபுரம். இளமையிலேயே கவி பாடும் ஆற்றல் கைவரப் பெற்றவர். பாட்டுத்திறத்தால் இவ்வையத்தைப் பாலித்திடச் செய்தவர். நாட்டு விடுதலைக்குக் கிளர்ந்தெழுந்த கவிச்சிங்கம். இந்நூற்றாண்டின் தலைசிறந்த கவிஞர். நீடு துயில் நீக்கப் பாடிவந்த முழுநிலவு. இவர்தம் படைப்புக்கள் பல. குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு போன்றவை தமிழர்தம் உள்ளங்களை ஆட்டிப்படைப்பவை. கவிதை, கதை, கட்டுரை, ஆராய்ச்சி முதலிய பலதுறைகளிலும் தொண்டு புரிந்தவர்.

* * *

''யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்!
பாமரராய், விலங்குகளாய், உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு
நாமமது தமிழரெனக் கொண்டுஇங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்லீர்!
தேமதுரத் தமிழோசை உலகமெல்லாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்.''



மகாகவி பாரதியார்
(1882-1921)

சென்னை இராயப்பேட்டை திரு. வி. கலியாண சுந்தர முதலியார் செந்தமிழ்த் தென்றல். இவர் சென்னை இராயப் பேட்டை வெசிலிக் கல்லூரியில் தலைமைத் தமிழாசிரியராய் இருந்தவர். தமிழ்ப் புலவர் குழாத்துள் அரசியலியக்கங்களில், மிகவும் பயின்றவர் இவரே. இவர் 'தேசபக்தன்' தாளுக்கு ஆசிரியராகவும், 'நவசக்தி' என்னும் தாளுக்குத் தலைவராகவும் இருந்தார். இவரியற்றிய செவ்விய உரைநூல்கள் 'பெண்ணின் பெருமை' 'திருக்குறள் விரிவுரை,' 'முருகன் அல்லது அழகு' முதலியன. இவரெழுதிய நூல்கள் தமிழறிஞர்கள் பாராட்டத்தக்கன.

* * *

''பொறுமையைப் பூணுங்கள்; பொறுமையின் ஆற்றலை உணருங்கள்; உணர்ந்து உலகை நோக்குங்கள்; நமது நாட்டை நோக்குங்கள். நமது நாடு நாடாயிருக்கிறதா? நம் அன்னைக்கு முடியுண்டா? உடையுண்டா? போதிய உணவுண்டா? தாய்முகம் நோக்குங்கள்; அவள் முகத்தில் அழகு காணோம். அவள் இதயந்துடிக்கிறது. சாதிவேற்றுமை, தீண்டாமை, பெண்ணடிமை உட்பகை முதலிய நோய்கள் அவளை அரிக்கின்றன; எரிக்கின்றன; இந்நோய்களால் அவள் குருதியோட்டங்குன்றிச் சவலையுற்றுக் கிடக்கிறாள். இள ஞாயிற்றொளி நோக்கி நிற்கிறாள். இள ஞாயிறுகளே! உங்கள் தொண்டெனும் ஒளியே அவள் நோய்க்குரிய மருந்து. அவ்வொளி வீசி எழுங்கள்; எழுங்கள்.''

—(இளமை விருந்து)



திரு. வி. கலியாணசுந்தரனார்
(1883-1953)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் புலவராய் விளங்கிய நாவலர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் புரைதீர்ந்த தமிழ்ப் பெரும் புலமை பெற்றவர். இவர் மாணவர்க்குக் கல்வி போதிப்பதில் ஒப்பற்ற ஊக்கமும் திறமையும் பெற்று விளங்கியவர். சொற்பொழிவாற்றுவதிலும் வல்லவர். இக்கால ஆராய்ச்சியிலும் தேர்ந்து விளங்கினர். நல்லிசைப் புலவர் பலருடைய வாழ்க்கை வரலாறுகளை நுண்ணிதின் ஆய்ந்து தனித்தனி நூல்கள் எழுதியுள்ளார். இவரியற்றிய சிலப்பதிகார உரையும், அகநானூறு உரையும் வெளிவந்துள்ளன. செந்தமிழ் விளக்கும் பெருந்தொண்டினையே தமது வாழ்வாகவும் வைப்பாகவும் கருதி வாழ்ந்தவர்.

* * *

''மக்கள் அறிவு வளர்ச்சிக்கு இன்றியமையாத சாதனமாயிருப்பது (பாஷை அல்லது) மொழி என்பதே. மொழியே மக்களை மாக்களினின்று வேறுபடுத்துவதாகும். இப்பொழுது உலக மக்களால் எண்ணிறந்த மொழிகள் பேசப்படுகின்றன. எம்மொழி எவ்வினத்தவரால் வழிவழியாகப் பேசப்படுகின்றதோ அம்மொழி அவ்வினத்தவர்க்குத் தாய்மொழி என்று சொல்லப்படும். 'காக்கைக்குந் தன் குஞ்சு பொன் குஞ்சு' என்பதுபோல் ஒவ்வொருவர்க்கும் அவரவர் தாய்மொழி மதிப்பிற்குரியதே. தாய்மொழியிடத்துப் பற்றில்லாதவரும் மக்கள் எனத்தகுவரோ?''

—(நமது தாய்மொழி)



ந. மு. வேங்கடசாமி நாட்டார்

*(1884-1944)*



உ. வே. சாமிநாதையர்

*(1855-1942)*

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளையிடம் கல்வி பயின்று, கும்பகோணம், சென்னை ஆகிய இடங்களிலுள்ள அரசாங்கக் கல்லூரிகளில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி, 'மகாமகோபாத்தியாய,' 'டாக்டர்' என்னும் பட்டங்களைப் பெற்று வாழ்ந்தவர், உ. வே. சாமிநாதையர். நீருக்கும் நெருப்புக்கும் இரையாகவிருந்த தமிழைத் தடுத்துக் காப்பாற்றிய தமிழ்த்தாயின் தவப்புதல்வர். ஏட்டுச்சுவடிகளிலிருந்த இலக்கியத்தை அச்சுவாகனத்திலேற்றியவர். எட்டுத்தொகைகளில் ஐந்து நூல்களையும் பத்துப்பாட்டையும் காப்பிய நூல்களையும் மற்றும் எண்ணற்ற இலக்கிய நூல்களையும் செம்மையான முறையில் பதிப்பித்தவர். பல உரைநடை நூல்களைப் படைத்தவர்.

* * *

''காலத்துக்கும் நாகரிகத்துக்கும் பழக்க வழக்கங்களுக்கும் ஏற்றபடி ஜனங்களுடைய கருத்துக்களும் விருப்பங்களும் மாறி வருகின்றன. செய்யுள் நூல்களே எங்கும் பரவி வசனநடை நூல்கள் அருகி வழங்கிய காலம் ஒன்று. இப்பொழுது செய்யுள் நூல்கள் குறைந்தும் வசன நூல்கள் அதிகமாகவும் வழங்கி வருகின்றன. காரணம் செய்யுளைக் காட்டிலும் வசனமூலமாக ஜனங்கள் விஷயங்களை மிகவும் சுலபமாகத் தெரிந்து கொள்ள இயல்வதுதான். ஆண்டு தோறும் நூற்றுக்கணக்கான வசனநூல்கள் பல துறைகளிலும் இயற்றப்பெற்று வெளியாகி வருகின்றன. என் இளமை முதல் என் ஞாபகம் முழுவதும் செய்யுள் நூல்களிலேயே ஊன்றியிருந்தமையால் வசன நூல்களில் என் கருத்து அதிகமாகச் செல்லவில்லை.''

பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை ஆங்கிலத்திலும் தமிழிலும் எம். ஏ. பட்டம்பெற்றுச் சட்டத்தில் எம். எல். பட்டமும் பெற்று, சட்டக் கல்லூரியிலும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும் பேராசிரியராகப் பணியாற்றியவர். சிறந்த அறிவாளர். ஆங்கிலத்திலும் தமிழிலும் சட்டத்திலும் சிறந்த புலமைபெற்று விளங்கியதோடன்றிப் பல நூல்களும் எழுதியுள்ளார். இவர் விரிவான முறையில் தமிழ் இலக்கிய வரலாற்றையெழுதியுள்ளார். அரிய தமிழ் ஆராய்ச்சி செய்து பல நூல்கள் எழுதியுள்ளார். எளிமையான தோற்றமும் அடக்கவுணர்வும் கொண்டவர்.

* * *

''தமிழ்மொழி நன்கு பேணப்படுதற்கு அதனைத் தாய்மொழியாக உடைய தமிழர் முன்னேற்றமடைய வேண்டும். முன்னேற்றம் அடைவதற்குத் தமிழரது பொருளாதார நிலை சிறக்க வேண்டும். அது சிறத்தற்குத் தமிழருட் செல்வர்களாயிருப்பவர்களும், சொல்லாற்றல் உடையவர்களும் சமுதாயத்தில் உள்ள ஏழை மக்கள் வேலையில்லாத் திண்டாட்டத்தினல் வருந்தாதபடி அவரவர்க்கு உரிய தொழிலும் உணவும் அளித்தற்கேற்ற வாயில்களை வகுக்க வேண்டும். தொழில் வளர்ச்சியே வறுமையை எளிதில் ஒழிக்கும். தக்க தொழிலாளிகளுக்கு ஆதரவும் ஊக்கமும் அளிக்கத்தக்க ஏற்பாடுகள் சமுதாயத்தில் அமைந்திருக்க வேண்டும்!''

—(தமிழர் சமயம்)



கா. சுப்பிரமணிய பிள்ளை

*(1889-1945)*

தமிழ் ஆராய்ச்சித் துறையில் தனியிடம் பெற்று விளங்கும் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை தமிழிலும் சைவத்திலும் ஆழ்ந்த பயிற்சியுடையவர். சிறிது காலம் வழக்கறிஞராகப் பணியாற்றிய பின் தமிழ்த்தொண்டு ஆற்றப் புகுந்தார். தமிழிலும் ஆங்கிலத்திலுமாக ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை இவரியற்றியுள்ளார். சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தமிழ்ப் பேரகராதியின் பதிப்பாசிரியராகப் பொறுப்பேற்று அதைச் சிறந்த முறையில் பதிப்பித்தவர்.

* * *

''துயிலுணர்ந்தவுடன் நீராடுதல், இக்காலத்து, கிராமாந்தரங்கள் போலவே, பண்டைக்காலத்தும் வழக்கமாக இருந்தது. மணலினல் செய்த பாவைக்குப் பூக்களை அணிந்து, நீராடுகின்ற பெண்களோடு தானும் கைகோத்து, அவர்கள் சேர்ந்துநின்ற இடத்தே தானும் சேர்ந்துநின்று, அசைந்துநின்ற இடத்தே தானும் அசைந்து நின்று, கபடமற்ற மனத்தராகிய அப்பெண்களின் கூட்டத்தோடு நீர்த்துறையிலே (நீரோடு நெருங்கித்) தாழ்ந்துள்ள மருதமரக்கிளைகளில் ஏறி, கரையில் உள்ளவர் திகைக்க, தண்ணீர் சிதர்ந்து பரவ, ஆழ்ந்த குளத்திலே ஒருவன் துடும் எனப்பாய்ந்து குளித்த செய்தி ஒன்று புறநானூற்றிலே (243) அழகாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தெழுந்த பாவை நோன்பு அதிகாலையில் நிகழ்ந்த இந்நீராட்டினை அடிப்படையாகக் கொண்டதே.

—(தமிழர் பண்பாடு)



எஸ். வையாபுரிப் பிள்ளை *(1891-1956)*

புதுவைக் கவியான பாரதிதாசன் புதுமைக் கவியும் ஆவார். தமிழ், பிரெஞ்சு, ஆகிய மொழிகளில் புலமை பெற்று விளங்கியவர். புதுவை அரசியலார் கல்லூரியில் தமிழாசிரிய ராகப் பணியாற்றியவர். புரட்சிக் கனல் தெறிக்கும் இவர் பாடல்கள் தமிழர் வாழ்வில் மண்டிக் கிடக்கும் மூடநம்பிக்கைகளைக் கண்டிப்பன. குடும்ப விளக்கு, குறிஞ்சித்திட்டு, பாண்டியன் பரிசு முதலான பல கவிதை நூல்களை இவர் படைத்துள்ளார்.

* * *

''வலியோர்சிலர் எளியோர்தமை
வதையேபுரி குவதா?
மகராசர்கள் உலகாளுதல்
நிலையாமெனும் நினைவா?
உலகாளஉ னதுதாய்மிக
உயிர்வாதை யடைகிறாள்!
உதவாதினி ஒருதாமதம்
உடனேவிழி தமிழா!''



புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்
*(1891-1964)*

சுவாமி விபுலானந்தர் யாழ்ப்பாணத்துத் தோன்றல்; இலங்கைச் செல்வம். அவர் தமிழிலுங் கலைஞர்; ஆங்கிலத்திலுங் கலைஞர். அவர் தம் கலைமணம் அவரது பேச்சிலும் எழுத்திலும் கமழ்கிறது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இவர் தமிழ்ப் பேராசிரியராயிருந்தவர். இவர் பெரு முயற்சியுடையவர். இம் முயற்சி பண்டைத் தமிழர் கண்ட யாழை மீண்டும் உயிர்ப்பிக்க ஊக்கியது. பண்டைத் தமிழிசையின் பெருமையையும் தனித்த இயல்பையும் எடுத்துக்காட்டும் வகையில் 'யாழ் நூல்' என்னும் அரிய இசையாராய்ச்சி நூலை ஆக்கியுள்ளார். சொற்பொழிவுகள் ஆற்றுவதிலும் இவர் வல்லவர்.

* * *

"ஈழநாட்டிற் பிறந்தேனாயினும் ஈழத்து வழக்குத் தமிழில் எனக்கு அதிகப் பழக்கமில்லை. கற்றது புத்தகத் தமிழ். கலந்து பழகி ஒரு சிறிது பயின்று கொண்டது சோழ நாட்டுத் தமிழ். இலங்கையிலே நான் நண்பரோடு உரையாடும்போது, என் உரையைக் கேட்டார், ''சாமி பேசுவது வடக்கத்திய தமிழ்'' என்று சொல்ல நான் பலமுறை கேட்டதுண்டு. இலங்கையிலுள்ளோர் தென்னாட்டுத் தமிழரை வடக்கத்தியார் என்பது வழக்கம். தென்னாடு ஈழத்திற்கு வடநாடுதானே? இஃது இப்படியிருக்க ஒருநாள் சென்னை ஜார்ஜ்டவுனிலே ஒரு கடைக்காரன் என்னை நோக்கி,'' சாமிக்கு ஊர் பாலைக்காடா? என்று வினாவியதுண்டு.''

—(கலைமகள் கதம்பம்)



விபுலானந்தர்
*(1892-1947)*

திருநெல்வேலியில் தோன்றிய ரா. பி. சேதுப்பிள்ளை, பி.ஏ., பி.எல். பட்டங்கள் பெற்றவர். செந்தமிழ் நலங்கனிந்த சொற்பொழிவாற்றுவதிலும் உரைநடையெழுதுவதிலும் ஒப்பற்ற ஆர்வமும் திறமையும் உடையவர். சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர். 'திருவள்ளுவர் நூல்நயம்', 'தமிழகம் ஊரும் பேரும்', 'தமிழின்பம்' போன்ற இவர்தம் நூல்கள் இனிமைமிக்க செந்தமிழ் உரைநடைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்களாகும். இவர்தம் தமிழ்த் தொண்டைப் பாராட்டி இவருக்குச் சென்னைப் பல்கலைக் கழகம் 'டாக்டர்' பட்டம் சூட்டியது.

* * *

''தென்னாட்டிலே தென்றல் என்றொரு பொருள் உண்டு; தனியே அதற்கொரு சுகம் உண்டு. வசந்த காலத்தில் தெற்கேயிருந்து அசைந்து வரும் தென்றலின் சுகத்தை நன்றாக அறிந்தவர் தமிழர்; வடக்கேயிருந்துவரும் குளிர்காற்றை வாடை என்றார்கள்; தெற்கேயிருந்து வரும் இளங்காற்றைத் தென்றல் என்றார்கள். வாடையென்ற சொல்லிலே வன்மையுண்டு; தென்றல் என்ற சொல்லிலே மென்மையுண்டு. தமிழகத்தார் வாடையை வெறுப்பர்; தென்றலில் மகிழ்ந்து திளைப்பர்.''

—(தமிழின்பம்)



டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை
(1896-1961)

தஞ்சை மாவட்டத்தில் தோன்றிய 'கல்கி' தமிழ் இலக்கியத்தில் தமக்கெனத் தனி இடம் அமைத்துக் கொண்டவர். தமிழ்மொழியில் புதினத்துறைக்கு வித்திட்டவர் இவரேயெனலாம். நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்டவர். திரு. வி. க.விடம் பயிற்சி பெற்றவர்; 'கல்கி' இதழின் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். சமூக, வரலாற்றுப் புதினங்களையும் கணக்கற்ற சிறுகதைகளையும் கற்போர் உள்ளத்தைக் கவர்கின்ற கட்டுரைகளையும் இவர் எழுதியுள்ளார். சிவகாமியின் சபதம், பொன்னியின் செல்வன் போன்ற புதினங்கள் இவர்தம் புகழை இறவாத் தன்மைத்தாக ஆக்குகின்றன.

* * *

''இராமலட்சுமணர்களையும் வானரங்களையும் இலங்கைக்கு வரும்படியாக விட்டுவிட்டு அப்புறம் இராவணன் திண்டாடிய கதையை நாம் அறிந்திருக்கிறோம். இராவணனுக்குத் தலை பத்து இருந்ததேயொழிய ஒரு தலைக்கு இருக்க வேண்டிய புத்திகூடக் கிடையாது என்பதற்கு இதைக் காட்டிலும் அத்தாட்சி வேண்டியதில்லை. பிற்காலத்திலே இலங்கையை ஜயித்த வெள்ளைக்காரர்களுக்கு இருந்த புத்தியில் அரைவாசியாவது அவனுக்கு இருந்திருந்தால் என்ன செய்திருப்பான்? மண்டபத்தில் ஒரு 'காம்ப்' ஏற்படுத்தி இலங்கைக்குள் வருகிறவர்கள் எல்லாம் அம்மை குத்திக் கொண்டுதான் வர வேண்டும் என்று ஏற்பாடு செய்திருப்பான். அம்மை குத்திக் கொள்வதற்குப் பயந்து கொண்டே இராம லட்சுமணர்களும் வானரங்களும் திரும்பிப்போய் இருக்கமாட்டார்களா?''



ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி)
(1899-1954)

மறைமலையடிகளின் அருமை மகளாகிய நீலாம்பிகையம்மையார் ஒப்பற்ற தனித் தமிழ்ப் பற்றுடையவர் என்பது தனித்தமிழி லேயே முற்றிலுமெழுதப்பட்ட இவரது 'தனித் தமிழ்க் கட்டுரை' என்னும் நூலால் தெள் ளிதிற் புலனாகும். அவ்வினிய உரைநடை நூல், கட்டுரை எழுதக் கருதுவார்க்குச் சிறந்ததொரு முன்மாதிரியாக விளங்குகின்றது. இவர் எழுதிய 'முப்பெண்மணிகள் வரலாறு'ம் 'பட் டினத்தார் பாராட்டிய மூவரு'ம் அத்தகை யனவே. இவர்தம் 'வடசொற்றமிழகரவரிசை' தனித்தமிழ் பயில விரும்புவார்க்கு உதவும் சிறந்த நூல். சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழக அமைச்சராய் விளங்கிய திருவரங்கனாரின் இல்லத் துணைவியாய் வாழ்ந்தார்.

* * *

''அடுப்பூதும் பெண்பாலார்க்கு நூற்கல்வி வேண்டாமென்று தாய்மார்கள் சிலர் கூறுகின் றனர்கள். இது முற்றும் பேதைமையாகும். உலகத்தில் எல்லாத் தொழிலிலும் மேலதாய் விளக்குந் தொழில் அடுப்பூதி அமுது சமைத்து அதனால் உடம்பையும் பாதுகாத்து நாவுக்கு இனிமையைத் தருவதாகும். பலகாரமும் உணவும் சுவையோடு செய்யக் கற்றுக் கொள் ளுதலும் ஒரு கல்விதான். ஆயினும், நூற் கல்வியோடு சேராதாயின் சமைத்தற் கல்வி சிறிதும் சிறப்படையாது. நூற்கல்வியுடன் சமைத்தற்கல்வி சேருமாயின், பூவோடு கூடிய நார் அப்பூவின் நறுமணத்தை அடைதல் போல, அதுவும் ஒளியுற்றுப் பொலியும்.''



நீலாம்பிகை அம்மையார்
*(1903-1945)*



தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்
*(1904-1965)*

கலைமணியான தொண்டைமானின் கண்கள் தமிழும் கலையுமாகும். இளவயதிலேயே இலக் கியத்தின்பால் ஈடுபாடுகொண்டு ரசிகமணியின் 'வட்டத் தொட்டி'யில் அதை வளர்த்துக் கொண்டவர். மாவட்ட ஆட்சி அலுவலகத் தில் எழுத்தராகப் புகுந்து இறுதியில் மாவட்ட ஆட்சித் தலைவராக ஓய்வு பெற்றவர். இவர் கால்படாத கோயில் தமிழ் நாட்டில் இருக் கின்றதா என்பது ஐயமே. 'வேங்கடம் முதல் குமரிவரை' என்ற இவர்தம் நூல் பக்திச் சுவையும் கலைச்சுவையும் விரவி எழுதப் பெற்றது. இதுபோன்ற பல நூல்களை இவர் இயற்றியுள்ளார்.

* * *

''குன்று தோறுடும் குமரன் இருக்கும் இடங்கள் எல்லாம் உங்களை இழுத்தடிக்கப் போவதில்லை. குன்றைவிட்டு இறங்கி, வற்றாது வளம் பெருக்கும் காவிரிபாயும் சோழ வள நாட்டில் வந்து குந்தியிருக்கும் கோலக் குமரனிடமே தங்களை எல்லாம் அழைத்துச் செல்ல விரும்புகிறேன். முதலில் காவிரியின் கிளைநதியான அரிசிலாற்றங்கரையிலே இருக் கும் தாராசுரத்திற்கே போவோம்..............''

இராஜேசுவரி அம்மையார் அறிவியல் மழை பொழிந்த மேகம். தமிழ் இலக்கிய நூல்களில் மறைந்துள்ள அறிவியல் உண்மைகளைத் தெளிவாக எடுத்துக் காட்டியவர். தமிழ் இலக்கியம், அறிவியல் ஆகிய இருதுறைகளிலும் இவர் சிறந்து விளங்கினர். திருமந்திரம், தொல்காப்பியம், கைவல்யம் போன்ற நூல்களிலுள்ள அறிவியலுண்மைகளைத் தெளிவுபடச் சொற்பொழிவாற்றுவதில் வல்லார். அறிவியல், அம்மையாரிடம் தமிழில் எளிமையாய்ப் பணியாளானதை யாவருமறிவர். இவ்வம்மையார் மேரி இராணியார் கல்லூரியில் அறிவியல் பேராசிரியராகப் பணியாற்றி இளமையில் மறைவுற்ருர். 'சூரியன்', 'பரமாணுப் புராணம்' போன்ற பல அறிவியல் நூல்களை இவர் எழுதியுள்ளார்.

* * *

''இந்நிலவுலகில் ஞாயிறு ஒன்றே முதன்மை பெற்றும், மேன்மையுற்றும், சிறந்து விளங்குகிறது. அனைத்திற்கும் அடிப்படையான இதனை அனைவரும் கொண்டாடி வருகின்றனர். எத்தேசத்தினராயினும் சரி, எம்மதத்தினராயினும் சரி, எத்தொழிலாராயினும் சரி, எத்தன்மையராயினும் சரி, ஞாயிற்றைக் கண்டு களிக்காதவர் இல்லை. நீரற்ற கடுங்கானலில் நெருப்பெனக் கொளுந்துவிடும் முதுவேனிற் கொடுமையில் தீய்ந்து வருந்துவோரும் வருந்தும் அச்சமயத்தில் பகலவனைப் பழிப்பாராயினும் சில நாட்கள் வரையில் சூரியவெளிச்சமே இல்லாது இருண்டு போகும்படி விடாமழை பெய்யுமாயின் எப்போது கதிரவனைக் காண்போம் என்றே ஏங்கிக் கிடப்பர்.



ஈ. த. இராஜேஸ்வரி அம்மையார்
*(1906-1955)*

சொ. விருத்தாசலம் என்ற இயற்பெயரையுடைய புதுமைப்பித்தன் வளர்ந்து வரும் சிறுகதை இலக்கியத்தின் முன்னேடி எனலாம். பட்டப்படிப்பிற்குப்பின் எழுத்துப்பணியையே முழுநேரப் பணியாக மேற்கொண்டு எண்ணற்ற சிறுகதைகளை எழுதிக் குவித்தவர். வாழ்க்கையில் நடைபெறும் அன்றாட நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு பின்னப்பெற்ற இவர் கதைகள் பல்லோராலும் போற்றப் பெறுகின்றன.

* * *

'' அன்று விநாயக சதுர்த்தி. நான் பல சரக்குக் கடையிலிருந்து சாமான்கள் கட்டிவந்த சணல் நூல்களையெல்லாம் ஒன்ருகச் சேர்த்து முடித்து, வீட்டின்கூடத்தில் நாற்கோணமாகக் கட்டினேன். அப்புறம் மாவிலைகளை அதில் தோரணமாகக் கோத்துக் கொண்டிருந்தேன். ஆமாம் பட்டணத்திலே மாவிலைகூடக் காசு கொடுத்துத்தான் வாங்க வேண்டும். 'என்ன மாவிலைக்குமா விலை?' என்று பிரமித்துப் போகாதீர்கள். மாவிலைக்கு விலையில்லையென்று வேண்டுமானல் வைத்துக் கொள்ளுங்கள். ஆனல், மரத்தில் ஏறிப்பறித்து, வீடு தேடிக் கொணர்ந்து கொடுப்பதற்குக் கூலிகொடுக்க வேண்டுமா, இல்லையா? நாங்கள் படித்த பொருளாதார சாஸ்திரப்படி, இந்த 'உழைப்பின் மதிப்பை' அந்த இலையின் மேல் ஏற்றி வைத்துப் பார்க்க வேண்டும். இதுதான் 'விலை' என்பது.''

—(விநாயக சதுர்த்தி)



புதுமைப்பித்தன் *(1906-1948)*

பேராசிரியர் டாக்டர் ம. இராசமாணிக்கனுர் ஓர் ஆராய்ச்சிப் பேரறிஞர். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் தமிழ் பயின்று பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணிபுரிந்து பின் படிப்படியாக உயர்ந்து இறுதியாகச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைத் தமிழ்ப் பேராசிரியராக அமர்ந்தவர். நூற்றுக்கணக்கான ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் தமிழ் இலக்கியம், வரலாறு, கல்வெட்டு போன்ற துறைகளில் ஐம்பதுக்கு மேற்பட்ட அரிய நூல்களையும் எழுதிக் குவித்தவர்.

* * *

''கோவில் என்னும் சொல் சங்க காலத்தில் தெய்வங்கள் உறையும் கட்டடத்தையும் அரசன் வாழ்ந்த அரண்மனையையும் குறித்தது. இதனல் அரசன் வாழ்ந்த அரண்மனையும் கோவிலும் பல பகுதிகளில் ஒத்திருந்தன என்று கொள்ளுதல் பொருந்தும். இரண்டும் சுற்று மதில்களையுடையவை; உயர்ந்த வாயில்களையுடையவை; வாயில்கள்மீது உயர்ந்த கோபுரங்களைப் பெற்றவை; வாயில்களுக்குத் துருப் பிடியாமல் செந்நிறம் பூசப்பட்ட இரும்புக் கதவங்கள் பொருத்தப்பட்டிருந்தன; சாந்து பூசப்பெற்ற மாடங்கள் உயரமாகக் கட்டப் பட்டிருந்தன.''

—(சைவசமயம்)



டாக்டர் மா. இராசமாணிக்கனுர் (*1907-1967*)

கும்பகோணத்தில் தோன்றி முறையாகத் தமிழ்பயின்று பேராசிரியரானவர் டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார். அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிய இவர் தம் கருத்தை அஞ்சாது எடுத்துக் கூறிய சொல்வல்லார். மொழியியல், இலக்கியம் ஆகிய இருதுறைகளிலும் சிறந்து விளங்கிய இவர் தலைமைப் பதிப்பாசிரியராகப் பொறுப்பேற்று ஆங்கில - தமிழ் அகராதியொன்றை மிக விரிவான முறையில் தொகுத்தார். இறுதியாக மதுரை தியாகராசர் கல்லூரியின் முதல்வராகப் பணிபுரிந்தார்.

* * *

''தொழுது உண்ணுஞ் சுவை நிரம்பிய பொருளைவிட, உழுது உண்ணும் சுவை இல்லாத பொருளும் இனியது என்பது தமிழர் கொள்கை. சிறிதளவு கூழே பெறினும், அவரவரது முயற்சியாலும் அவரவரது உழைப்பாலும் பெற்ருல், தன் முயற்சியின்றிக் கிடைக்கும் அமிழ்தத்தினும் அது சிறந்தது என்பது தொன்று தொட்டுவரும் தமிழர் கருத்து.

''தெண்ணீர் அடுபுற்கை யாயினுந்தாள் தந்தது
உண்டலி னூங்கினியது இல்.''

என்ருர் திருவள்ளுவர். உழுது உண்டு வாழ்கின்றவரே ''வாழ்பவர்'' எனச் சிறப்பித்துச் சொல்லத்தக்கவ ரென்பது அவர் கருத்து.''

—(தமிழ் காட்டும் உலகு)



டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார்
(*1907-1967*)

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு.

இரா. நாகசாமி, எம்.ஏ.
இயக்குநர், தொல்பொருள் ஆராய்ச்சித் துறை
சென்னை.

# தமிழ் எழுத்துக்கள்

### தமிழ் எழுத்துக்களின் பழைமை :

இதுவரை நமக்குக் கிடைத்துள்ள தமிழ் எழுத்துக்களில் மிகவும் பழைமையானவை, கி.மு. 3-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாகும். இவை மலைகளில் இயற்கையாக அமைந்த குகைத்தளங்களில், சமணப் பெரியார்களுக்காக ஏற்படுத்தப்பட்ட பாழிகளில் காணப்படுகின்றன. இப்பாழிகள் யாருக்காக அமைக்கப்பட்டன என்றும், யாரால் அமைக்கப்பட்டன என்றும் இவை குறிக்கின்றன. தமிழும், பிராகிருதமும் கலந்து இவற்றில் காணப்படுகின்றன. மௌரியப் பேரரசன் அசோகனுடைய சமகாலத்தனவாக இவற்றைக் கொள்ளலாம். அசோகருடைய எழுத்துக்கும் இவ்வெழுத்துக்கும் சில ஒற்றுமைகள் இருக்கின்றன. எனினும் சில வேற்றுமைகளும் இருப்பதைக் காண்கிறோம். உதாரணமாக, தமிழ் மொழியின் சிறப்பு எழுத்துக்களான, ழ, ள, ற, ன என்பவை இவற்றில் காணப்படுகின்றன. இவை அசோகரது கல்வெட்டுக்களில் இல்லை. எனவே அசோகரது காலத்திலேயே தமிழகத்தில் தனித்ததோர் எழுத்து சிறந்து விளங்கிற்று என்பது திண்ணம். இவ்வாறு எழுத்துக்கள் வளர்ச்சியடைய சில நூற்றாண்டுகளாவது தேவை என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். அசோகருக்கு எவ்வளவு நூற்றாண்டுகளுக்கு முன்னர் தமிழகத்தில் எழுத்துக்கள் தோன்றின? வளர்ந்தன? இக்கேள்விகளுக்கு விடை கூறப்புகுந்தோமானால், சில அரிய உண்மைகள் புலனாகும்.

### ஹாரப்பா-தமிழகப் பண்பாட்டுத் தொடர்பு :

தமிழகத்தில் பழைய கற்கால மனிதர்களும், அவர்களுக்குப் பின்னர் புதிய கற்கால மனிதர்களும் வாழ்ந்திருக்கின்றனர். அவர்களுக்கும் பின்னர், வாழ்ந்த மக்கள் உலோகங்களின் உபயோகத்தை நன்கு அறிந்தவர்கள். இறந்தவர்களைப் புதைத்துப் பெரிய கற்சின்னங்களைத் தோற்றுவித்தவர்கள். இவர்கள் யார் என்பதுபற்றி ஆராய்ச்சியாளரிடையே கருத்து வேற்றுமை உண்டு. சிலர் இவர்களே திராவிடர்கள் என்றும் மத்தியதரைக்கடல் பகுதியிலிருந்து இங்கு வந்தவர்கள் என்றும் கூறுகின்றனர். மற்றுஞ் சிலர், இவர்கள் உள்நாட்டுக் குடிமக்களே என்று குறிக்கின்றனர். இவர்களுடைய புதைகுழிகளைத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் அகழ்ந்து பார்த்துள்ளனர். இவற்றில் பல பானைகள் கிடைத்துள்ளன. இப்பானைகளில் பல குறிகள் காணப்படுகின்றன. இக்குறிகளில் சில சாதாரண குறிகளாக இருந்த போதிலும், சில சிறப்பு வாய்ந்த குறிகளும் உள்ளன. இக்குறிகளில் சுமார் 90 சதவிகிதம் மொஹஞ்சோதாரோ, ஹாரப்பா என்ற இடங்களில் கிடைத்த முத்திரைகளிலும், பானைகளிலும் காணப்படுகின்றன என்று திரு பி. பி. லால் என்ற பேராசிரியர் கண்டுபிடித்துள்ளார். எனவே ஹாரப்பா பண்பாட்டிற்கும், தமிழகத்தில் நிலவிய பண்பாட்டிற்கும் ஒரு தொடர்பு இருந்தது என்பது தெளிவாகிறது. காமில் ச்வேலேபில் என்ற பேராசிரியர் இதுபற்றி ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அக்கட்டுரையில்

தமிழகத்திற்கும் ஹாரப்பாவிற்கும் நிலவிய தொடர்பு இரண்டு காரணங்களால் தோன்றி யிருக்கலாம் என்று கூறுகிறார். 1. ஹாரப்பா பண்பில் இக்குறிகள் மிகவும் எழிலோடு சிறப் பாகப் பொறிக்கப்பட்டுள்ளன. எனவே ஹாரப்பா பண்பைச் சேர்ந்த மக்கள் தென்னகத் திற்கு வந்திருக்கக்கூடும். அவ்வாறு வந்தபோது காலப்போக்கில் எழில் வாய்ந்த குறிகள் எளிமை யான குறிகளாக மாறியிருக்கக்கூடும். 2. அல்லது மிகவும் எளிமையாகத் தமிழகத்தில் வழங்கிய குறிகளை, ஹாரப்பா பண்பாட்டு மக்கள் பெற்று, அதனை எழிலுற அமைத்திருக்கக்கூடும். ஹாரப்பா, மொகஞ்சோதாரோ முதலிய நகரங்கள் அன்றைய உலகில் மிகச் சிறந்த நிலை வகித்தன. எனவே அங்கு வர்த்தகம், கலை முதலியன சிறந்திருந்தன. ஆதலின் இக்குறிகளும் அங்கு நல்லதொரு வளர்ச் சியை அடைந்திருக்கக்கூடும் என்று ச்வேலேபில் கூறுகிறார்.

### தமிழக பிராம்மி எழுத்துக்கள் :

ஹாரப்பா பானைகளிலும் முத்திரைகளிலும் காணப்படும் இக்குறிகள் வெறும் குறிகள் அல்ல; அவை சித்திர எழுத்துகளே என்று உலக ஆராய்ச்சியாளர் அனைவரும் கருதுகின்றனர். இதிலிருந்து ஹாரப்பா மக்கள் இட்டுள்ள குறிகள் எழுத்துக்கள் என்றும், அவற்றைத் தமிழகத்தி லிருந்து அவர்கள் கற்றுக்கொண்டனர் என்றும் கொள்ள ஏதுவிருக்கிறது. மௌரியப் பேரரசர் அசோகர், எழுதிய எழுத்துக்களை, பிராம்மி (பம்மி) என்று குறிப்பர். பிராம்மி எழுத்துக்கள், ஹாரப்பா சித்திர எழுத்துக்களில் இருந்து பிறந்தவை என்று பல பேராசிரியர்கள் இப்போதும் ஒப்புக் கொள்கின்றனர். எனவே தமிழக எழுத்துக் களுக்கும், பிராம்மி எழுத்துக்களுக்கும் ஒற்றுமை காணப்படுவது இயல்பே.

### தாமிழி :

பண்டைய தமிழக எழுத்துக்களைச் சிலர் பிராம்மி என்றும் தமிழ் பிராம்மி திராவிடி என்றும் குறிக் கின்றனர். இது பொருத்தமன்று. உண்மையில் இதைத் தமிழ் என்றுதான் கூற வேண்டும். ஆனால் தமிழ் என்று கூறினால் இன்று நாம் வழங்கும் எழுத்துக்களே நம் கண்முன் தோன்றும்; பண்டைய எழுத்துக்கள் தோன்ற. அத்துடன், பண்டைய தமிழ் எழுத்துக்களில் இருந்து கிரந்தம், வட் டெழுத்து, கண்ணெழுத்து, மலையாளம் முதலிய பல எழுத்துக்கள் தோன்றியுள்ளதும் மறந்துபோம். எனவே பண்டைய தமிழ் எழுத்துக்களை ஒரு பெயரால் அழைத்தல் வேண்டும். அஃது அவ் வெழுத்துக்கள் வழங்கி வந்த காலத்து நிலவிய பெயராக இருக்குமானால் சாலச் சிறந்ததாக இருக்கும். நல்வசமாக இதுபற்றி அறிய செய் தியைச் 'சமவாயாங்கசுத்த' என்ற நூல் நமக்குக் கூறுகிறது. இந்நூல் கிறித்துவுக்கு ஒரு நூற்றாண் டிற்கு முந்தியது. இந்நூலில் 18 வகை எழுத் துக்கள் குறிக்கப்பட்டுள்ளன. அவற்றில் தாமினி (தாமிழி) என்று ஒரு பெயர் காணப்படுகிறது. இது தமிழகத்தில் வழங்கிய எழுத்துக்களைக் குறிக் கும் என்பது வெளிப்படை. இதே நூலிலிருந்து தான் அசோகரது எழுத்துக்களின் 'பிராம்மி' என்ற பெயரும் காணப்படுகிறது. எனவே தாமிழி என்ற பெயர் பண்டைய பெயராகவும், பின்னால் தோன்றிய பல எழுத்துக்களின் தாய் என்பதைக் குறிப்பதாகவும் உள்ளது. இதைத் தாமிழி என்று அழைப்பதே பொருந்தும் என்பது இவ்வாசிரியரின் கருத்து. தாமிழி எழுத்துக்களிலிருந்து தமிழ், வட் டெழுத்து, கிரந்த எழுத்துகள் முதலிய தமிழகத் துக்கே தனிச்சிறப்பு வாய்ந்த எழுத்துக்கள் வளர்ந்த விதம் மிகவும் போற்றத்தக்கதாகும். கல்வெட்டுக் களிலிருந்தும், செப்பேடுகளிலிருந்தும் எழுத் துக்கள் எவ்வாறு இருந்தன என்று உறுதியாகக் காட்ட முடியும். காலப்போக்கிலே, சில அரும்பு படிப்படியாக வளர்ந்து நல்ல மலராகத் திகழ் வதைப்போல் தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சி காணப்படுகிறது. இதைக் கட்டுரையில் எழுது வதைக் காட்டிலும், ஒரு வரைப்படம் மூலம் காண்பித்தால், மிகவும் எளிதாக இருக்கும் என்று ஒரு படமாக அதை விளக்கியுள்ளேன்.

தாமிழி எழுத்துகள் மதுரையைச் சுற்றியுள்ள ஆனைமலை, அழகர்மலை போன்ற பல மலைகளிலும், திருநெல்வேலி மாவட்டத்தில் மறுகால்தலை என்ற இடத்தும், கோவை மாவட்டத்து அறச் சலூரிலும் அதன் அருகில் புகளூரிலும், காஞ் சிக்கு அருகில் மாமண்டூரிலும் உள்ளன. இவை தவிர, பாண்டிச்சேரிக்கு அருகே அரிக்கமேடு என்ற இடத்தை அகழ்வாராய்ச்சி செய்தபோது அதில் கிடைத்த பானை ஓடுகளிலும் உள்ளன. அண்மையில் உறையூரில் நடந்த அகழ் வாராய்ச்சியிலும் இவ்வெழுத்துக்களோடு கூடிய பானை ஓடுகள் கிடைத்துள்ளன. இவை அனைத் தும் எளிய அமைப்புக்களோடு உள்ளன. இவை கி.மு. 3-ஆம் நூற்றாண்டு முதல், கி.பி. 3-ஆம் நூற் றாண்டு வரை உள்ள காலத்தைச் சார்ந்தவை. இதே எழுத்துக்களோடு கூடிய காசுகளும் அண்மை யில் கிடைத்துள்ளன.

### தமிழும் வட்டெழுத்தும் :

இதன் பிறகு கி.பி. 4, 5-ஆம் நூற்றாண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுக்கள் மிகச் சிலவே கிடைத் துள்ளன. இவை தாமிழி எழுத்துக்களிலிருந்து வளர்ச்சியடைந்து தமிழும் வட்டெழுத்தும் கலந்து காணப்படுகின்றன. அதாவது தமிழும் வட்டெழுத்தும் தனித்தனியாக இல்லாமல் ஒரே கல்வெட்டில் கலந்து எழுதப்பட்டுள்ளதைக் காண் கிறோம். இதுவே இவ்விரு எழுத்துக்களின் தொடக்க காலத்தைக் குறிக்கும். கி.பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்து இவையிரண்டும் தனித்தனி யாகவே உபயோகிக்கப்பட்டன. நேரான எழுத்துக் களை விரைவாக எழுதும்போது அதுவும் எழுத் தாணிகொண்டு ஓலையில் வேகமாக எழுதும் போது வளைவுகளோடு அவை அமைகின்றன. இஃது எழுத்துக்களுக்கு ஒரு வட்ட அமைப்பைக் கொடுப்பதால் வட்டெழுத்து எனப்பெயர் பெற் றது போலும். வட்டெழுத்து பாண்டி நாட்டில் மட்டும் வழக்கில் இருந்தது என்று இதுகாறும் ஆராய்ச்சியாளர் நம்பி வந்தனர். ஆனால், தமிழக

முழுவதுமே இது பரவி நிலவியது என்பதற்குத் தொண்டை நாட்டிலும், வடகொங்கு நாட்டிலும் கண்டெடுக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்கள் சான்று கூறுகின்றன.

தாமிழி எழுத்துக்களில், தலையில் நாகரிபோல் குறுக்குக் கோடு கிடையாது. பிற்காலத்தில் அழகுக்காக ஒரு சிறு கோடு இடப்பட்டது. இது நாளடைவில் வளர்ந்தது! முக்கியமாக இடப்புறம் நீண்டது. பின்னர், இடப்புறம் நீண்ட இதிலிருந்து ஒரு சிறிய கோடு கீழே இழுக்கப்பட்டது. இதுவும் காலப்போக்கில் நீண்டதால் இன்றைய நிலையை அடைந்துள்ளதைக் காணலாம். க, ச, த முதலிய எழுத்துக்களில் இவற்றைச் சிறப்பாகக் காணலாம்.

### பிற எழுத்துக்கள் :

ஆப்பு போன்ற அமைப்புடன் ஒரு வகையான எழுத்துக்கள் எழுதப்பட்டன. அவற்றிலிருந்து காலப்போக்கில் தோன்றியதே கண்ணெழுத்து.

தமிழ் எழுத்துக்களையே அடிப்படையாகக் கொண்டு வடமொழி எழுத்துக்களை எழுதத் தமிழ் நாட்டில் தோன்றியவையே கிரந்த எழுத்துக்கள்.

வட்டெழுத்துக்களும், கிரந்த எழுத்துக்களும் வளர்ந்து ஈழ எழுத்துக்களின் தொடர்பினுல் மாறுதலடைந்து வளர்ந்த எழுத்துக்களே மலையாள எழுத்துக்கள் எனின் தவருகாது.

### எழுத்தியல் ஆய்வு :

தமிழ் எழுத்துக்களைப்பற்றிக் குறிக்கும் பண்டைய இலக்கண நூல் தொல்காப்பியமும் அகத்தியமுமாம். இவ்விரு நூல்களையும் கற்று வந்தோர் தற்கால எழுத்துக்களையே இவ்விலக்கணங்கள் குறிக்கின்றன என்று கருதி வந்தனர். அதனுல் இவ்விலக்கணங்களில் உள்ள சில சூத்திரங்களுக்கு விளக்கங்கள் தெளிவாகக் கிடைக்கவில்லை. உதாரணமாக 'எ, ஒ—கரத்தியற்கையு மற்றே' என்று தொல்காப்பியம் குறிக்கும். இதன்படி குற்றியல் எகரத்தில் நடுவில் புள்ளியிருத்தல் வேண்டும். தற்காலத்தில் எழுதப்படும் எகரத்தில் புள்ளி கிடையாது. ஆனுல் பண்டைய எகரத்தின் நடுவில் புள்ளி உள்ளதைக் காண்கிறேம். இதை முதன்முதலில் இக்கட்டுரை ஆசிரியர் புதிதாகக் கண்டெடுக்கப்பட்ட நாணயத்தில் கண்டுபிடித்தார். அதேபோன்று 'குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன' என்று தொல்காப்பியம் கூறும். பண்டைய தாமிழி எழுத்துக்களில், குற்றியல் இகரம் மூன்று புள்ளிகளால் எழுதப்பட்டுள்ளதைப் பல கல்வெட்டுக்களில் காணலாம். எனவே தொல்காப்பியத்தில் குறிக்கப்பட்டுள்ள எழுத்தியலை நன்கு அறியவும் இன்றைய தமிழ் எழுத்துகளின் மலர்ச்சியை அறியவும், பண்டைய தாமிழி எழுத்துக்களை அறிதல் மிகமிக இன்றியமையாததாகும்.





## மெய்யெழுத்துக்களின் வளர்ச்சி



கேடில் விழுச்செல்வம் கல்வி ;  ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.


கி. வேங்கடசுப்பிரமணியம், எம்.ஏ., பி.டி.
தனி அலுவலர், உலகத்தமிழ் மாநாடு,
துணை இயக்குநர் (கல்வி) கிராம வளர்ச்சித்துறை, தமிழக அரசு.


# செந்தமிழ் பயின்ற செருமானியர்



கன்னித் தமிழுக்குச் சேவை செய்யும் பேறு நம் நாட்டவர்க்கன்றி, மேலை நாட்டறிஞர் சிலருக்கும் கிட்டியது. கடல் கடந்து வந்து, தமிழில் ஈடுபட்டு, ''நவில்தொறும் நூனயம் போலும்'' எனும் தமிழ்மறைக் கெடுத்துக் காட்டாய், பயில்தொறும் தமிழின் இனிமையில் அழுந்தி, ''தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' எனும் உயரிய நோக்குடன் பாடல்களியற்றியும் மொழி பெயர்ப்புக்களாக்கியும் உலகெங்கும் தமிழ்க் கொடி நாட்டிய பெருமை இவ்வறிஞர் குழாத்தையே சேரும்.

இம்மட்டோ! நம் நாட்டவர்க்கே நம் மொழியின் உயர்வை நன்கு எடுத்துக்காட்டி, நம் தாய் மொழியைப் பேணுதலின் அவசியத்தைச் சுட்டிப் போந்த அன்னார் பெருமை அளவிடற் பாலதன்று. டாக்டர் போப்பையர், ''Let the Tamils cease to be ashamed of their Tamil.'' என்று கூறினர். டாக்டர் மர்டா, ''Let them be assured that so long as they despise their mother tongue, they have merely a thin white wash of civilisation.'' என்று எழுதினர்.

தமிழின் தனிச் சிறப்புப்பற்றி விளக்குங்கால், டாக்டர் வின்சுலோ எழுதுகிறர் : ''It is not perhaps extravagant to say that in its poetic form the Tamil is more polished and exact than the Greek, and in both dialects with its borrowed treasures, more copious than Latin. In its fullness and power, it more resembles English and German than any other living language.'' பெர்ஸிவல் ஐயர் எனும் அறிஞர் பின்வருமாறு கூறுகிறர். ''Perhaps no language combines greater force with equal brevity and it may be asserted that no human speech is more close and philosophic in its expression as an exponent of the mind. The sequence of things, of thought and action and its results—is always maintained inviolate.''

இம்மாதிரி, பல மொழிகளையும் நன்கு கற்றுணர்ந்த பன்மொழிப் புலவோர், ''யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல் இனிதாவதெங்குங் காணோம்'' என்று கூறுங்கால நமதுள்ளம் பெருமிதத்தால் பூரிப்படைகின்றது. உலக மொழிகளுள் தலைசிறந்த இலத்தீன், கிரேக்கம் இவைகளைப்போல் தமிழின் நயம் உயர்ந்தது என நாம் அறியலானோம்.

இம்மாதிரி, தமிழ்ச் சேவை செய்த பெரியார்கள் பற்றி நாம் அறிதல் அவசியமாகும். நம்முட் சிலர் நம் தாய்மொழியைக் கற்பதற்குக் கூடச் சோம்பி அலைகின்றனர். அப்படியிருக்கப் பல்லாயிர மைல்கள் கடல் கடந்து, முற்றிலும் புதிய நாடாகிய தமிழ் நாட்டின்கண் உறைந்து, தமிழ் மொழி கற்று, அதிலும் நூல்களியற்றும் ஆற்றல் பெற்ற இவ்வறிஞர்கள் பற்றி அறிதல் சாலச் சிறந்ததாகும்.

நாம் கடல் கடந்து சென்ற தமிழ் நாட்டுப் பொருள்கள்பற்றி அறிவோம். கி.மு. 22-ல் மதுரையில் அரசாண்டிருந்த பாண்டிய மன்னன், அகஸ்தஸ் சீசர் எனும் யவன மன்னனிடம் தூதனுப்பிய வரலாறு பற்றி ஸ்தாராபோ எனும் மேலை நாட்டாசிரியர் மூலம் அறிகிறோம். நம் மக்கள் கடல் கடந்து சாவகம், புட்பகம் முதலிய நாடுகள் சென்று தமிழ்மணம் பரப்பினர் என்றறிவோம். ஆனால் கடல் கடந்து வந்த ஐரோப்பியர் நம் மொழிக்குச் செய்த தொண்டுபற்றி அதிகமாக நாம் அறியவில்லை. எனது பேராசிரியர் சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தமக்கே உரித்தான நடையில் கால்டுவெல் ஐயர் செய்த சேவையை நன்கு விளக்கிக் காட்டினர். அறிஞர் சீனி மயிலை வேங்கடசாமி போன்றோர் இத்துறையில் அரிய தொண்டுகள் பல செய்திருக்கிறார்கள். தமிழ் பரப்பிய இவ்வயல் நாட்டார் பெருமைபற்றி யாவரும் அறியச் செய்ய வேண்டுவது நம் கடமையாகும். அன்னரில் நாம் அதிகம் அறியாத ஒருவர்பற்றிக் கூறுதல் இங்கே பொருத்தமுடைத் தாகும்.

பர்த்தலோமியோ ஸீகன்பால்க் ஐயர் என்பார், உலகத்தின் கண்ணுள்ள சிறந்த தேசங்களுள் ஒன்ருகிய செருமனி நாட்டவர்—உலகத்திற்கு இந்நாடு பல துறைகளில் சேவை செய்துள்ளது—புஸ்நித் என்னும் சிற்றூரில் இவர் பிறந்தவர். இந்தப் பெரியார், இளமையிலேயே இறைவன் பால் மனத்தைத் திருப்பி, அவர்க்குச் செய்யும் பணியே உண்மைப்பணி என உணர்ந்து இறை வழிபாட்டில் ஈடுபட்டார். ''விளையும் பயிர் முளையிலே'' என்றபடி, சிறு வயதிலேயே பிறர்க்கு ஊழியம் செய்யும் உயரிய நோக்கமுடையவராயிருந்தார். வீதியின்கண் போகும்போது, மக்களல்ல, மாக்களும் வருந்தக்காண மனம்பொறார். 1703-ம் ஆண்டில், ஹாலி பல்கலைக் கழகத்தில் சேர்ந்து உயர்தரக் கல்வி கற்றார்.

அக் காலத்தில் தஞ்சைக்கருகிலுள்ள தரங்கம்பாடி டேனிஷ்காரர் வசமிருந்தது. அங்கு வாழ்ந்த வெள்ளையர்க்கும், தமிழர்க்கும் மதோபதேசம் செய்ய ஆளின்றி அவர்கள் நலிந்தனர். இதைக் கண்ணுற்ற நாலாம் பிரடெரிக் எனும் டென்மார்க் தேசத்தரசன் தனது நாட்டில் பலரைத் தேடி உசாவியும் இந்தியா போக யாரும் முன் வரவில்லை. அச்சமயம் நம் ஸீகன்பால்க் ஐயர் அவர்கள்தான் போவதாக ஒப்புக்கொண்டு முன் வந்தார். அவரும் அவர் நண்பர் பிளீச்செள என்பாரும் 1706-ம் ஆண்டு சூலைத் திங்கள் திக்கெலாம் புகழும் தண்டமிழ் நாட்டின் கரையில் காலெடுத்து வைத்தனர்.

இவர் வரவுகண்டு தரங்கம்பாடியை ஆண்டு வந்த கவர்னர் துரை மிக்க கோபமடைந்தான். தனது அதிகார வரம்பைக் கண்காணிக்க டேனிஷ் அரசாங்கம் செய்யும் சதிபோலுமிது எனப் பொருமிய இந்தக் 'குட்டி மன்னன்' ஐயரவர் கட்குப் பலதுறையிலும் இன்னல் விளைவித்தான். ஆயினும், கருமமே கண்ணாகிய ஸீகன்பால்க், ஆண்டவனைப் பூரணமாக நம்பி, ''அவன் முன் இக்கவர்னர் யாவன்?'' எனும் நோக்குடன் பணியில் இறங்கினர்.

இவரது உறுதி கண்ட கவர்னர் துரைகூட மனம் மாறிச் சமயத் தொண்டு செய்ய அனுமதித்தார். இத்தடையை தவிர்த்த ஐயர் முன் மற்றெரு பெருந்தடை தோன்றியது. அவர் தமிழ் மொழியையும் போர்ச்சுகீசிய மொழியையும் அறியார். அந்த நாட்களிலே, நம் நாட்டின் கண் வாழ்ந்த வெள்ளையர் பலரும் போர்ச்சுகீசிய மொழியே பேசினர். அன்றியும் கலப்புச் சாதியார் பலரும் அம்மொழியையே அறிவர். இம்மொழியை அறியாமல் யாதும் செய்வதற்கியலாதென்று கண்டார் ஐயர். தமிழ்மொழி அறியாவிடில் தமிழ் நாட்டில் ஒன்றும் நடவாதென்பதையும் அவர் கண்டார். இம்மாதிரி மலபார் மொழியை அறிய ஐயர் முயன்றார்— அப்போது வாழ்ந்த வெள்ளையர்கள் நம் நாட்டை மலபார் என்றும், நம் நாட்டவரை மலபாரிகள் என்றும் வழங்கி வந்தார்கள்.

தமிழ் மொழியைத் தாமே கற்கத் தொடங்கிய ஐயருக்குப் பெரிய இன்னல்கள் எதிர்ப்பட்டன. தமிழ் எழுத்துக்களுக்கும் ஐரோப்பிய மொழியெழுத்துக்களுக்கும் சிறிதும் ஒற்றுமையில்லாமையால் ஐயர் மிகவும் சங்கடப்பட்டார். செருமனியில் அச்சுப் புத்தகங்களோடேயே பழகி வந்த அறிஞர்க்கு ஓலைச் சுவடிகளைப் படிப்பது கடினமாகத் தோன்றியது. அச்சுப் புத்தகங்களே தமிழ் நாட்டில் அப்போது தோன்றவில்லை. கொஞ்சம் மனவுறுதி தளர்ந்தவராக இருப்பின், தமிழை அன்றே புறக்கணித்திருப்பார் ஐயர். ஆயினும், எடுத்த காரியத்தைச் சாலச்சிறக்க முடிக்கும் ஆற்றல் ஐயருக்கு உண்டு. ''உயிர் போயினும், தமிழ் கற்றே தீருவேன்'' என்ற மனத் துணிவுடன், தமிழ் கற்க வழி தேடினர்.

''முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார்'' என்றபடி, ஒருநாள் ஒரு நல்ல சேதி கேட்டார் ஐயர். தரங்கம்பாடிக்கடுத்த குக்கிராமத்தில் உள்ள திண்ணைப் பள்ளிக்கூடத்தைக் கண்டார். இதுவே நமக்கு ஏற்ற இடம் எனத் தீர்மானித்தார். உடனே அதை நடத்தும் ஆசானை அண்டினர். எல்லப்ப உபாத்தியாயர் எனும் அவர், ஐயரைக் கண்டவுடன் மருண்டு, பள்ளிக்குத் துரை வரும் காரணம் என்ன எனச் செய்வதறியாமல் திகைத்தார். தனக்கு ஒரு புது மாணக்கன் வரப்போகிறன் என்பதைச் சிறிதும் அறிந்திலர் இந்த ஏழை உபாத்தியாயர். ஐயர் இவரை அணுகித் தனது விருப்பத்தைத் தெரிவித்து எல்லப்பரைச் சம்மதிக்க வைத்தார்.

இப் புது மாணக்கரால் பள்ளியே உயரலாயிற்று. நாளடைவில் பழைய திண்ணையை விட்டு அந்தப்பள்ளி ஐயர் வீட்டில் ஒரு பெரிய அறையில் நடக்கலாயிற்று.

இங்குத் தமிழ் பயிலும்போது ஐயரின் பெருமையை யாவரும் அறியலாயினர். பல்கலைக்

கழகத்தே படித்துப் பட்டம்பெற்ற பெருமிதத்தை மறந்துவிட்டு, தரங்கம்பாடி ''அறிக்குழி'' மாணவரோடு தரையில் மண்டியிட்டு ''அ, ஆ, இ, ஈ'' பயின்ற இவ்வைரோப்பியர் பெருமையை நம்மால் வருணிக்க இயலுமோ? மணலைப் பரப்பித் தனது விரல்களால் தமிழ் நெடுங்கணக்கை நன்கறிந்தார். பின்பு பனையோலைகளைப் படிக்க அறிந்த ஐயர், எட்டு மாதத்திற்குள் சொற்பொழிவு செய்யும் ஆற்றல் பெற்றார். சீக்கிரமே, ஒரு தமிழ் நூல் நிலையம் இவரது மாளிகையில் ஏற்பட்டது. சுவடிகளாகிய அந்நூல் நிலையம் பலருக்கும் பல விதங்களிலும் பயன்படலாயிற்று.

1714-ஆம் ஆண்டில், இவர் உடல் நலம் கெட்டது. நண்பர் பலரும் இவரைத் தாய்நாடு திரும்ப வற்புறுத்தி அழைத்தார்கள். அன்னார் வேண்டுகோளுக்கிணங்கி, இவர் ஐரோப்பா திரும்பினார். அவ்வமயமும் தமிழன்னையை மறந்தாரில்லை. ஐரோப்பா போய்த் திரும்பி வருமுன் தமிழ் மொழியை மறந்துவிட்டால் என் செய்வது என்று அச்சம்கொண்ட ஐயர், தம்முடன் ஒரு தமிழனையும் கூட்டிப்போந்தார். மலையப்பன் என்னும் இத்தமிழனைத் தன்னுடன் இவர் கூட்டிச் சென்றது இவரது தமிழ் மொழிப்பற்றை வெள்ளிடைமலையென விளக்கிக் காட்டுகிறது.

ஐரோப்பாவிலிருந்து கொண்டே, தமிழ்—இலத்தீன் இலக்கணத்தையும், தமிழ்—இலத்தீன் அகராதியின் சில பாகங்களையும் அச்சிற் பதிப்பிக்க ஏற்பாடு செய்தார். இங்கிலாந்திலே உள்ள கிருத்தவத் திருச்சபையார் இவர் செய்துள்ள ஊழியம் பற்றி இலத்தீன் மொழியில் வரவேற்புக் கொடுக்க ஐயர் அதற்கு இலத்தீனிலும் தமிழிலும் பதிலளித்தார்.

ஸீகன்பால்க் ஐயர் இங்கிலாந்திலிருந்து நம் நாடு திரும்பிய மூன்றாண்டுகளுள் 1719-ம் ஆண்டு இறைவனடி சேர்ந்தார்.

இவர் நம் நாட்டிற்கும் நம் மொழிக்கும் செய்த பேருதவி யாதெனில் ஏட்டுச்சுவடிகள் மலிந்திருந்த அக்காலத்தே அச்சுப் புத்தகத்தை முதல் முதல் புகுத்தியதே. ஏட்டுச் சுவடிகளைப் படிப்பதே ஒரு கலையாகும். பண்டிதரன்றிப் பாமரர் எளிதில் ஏட்டைப் படித்துவிட முடியாது. நன்கு தமிழறிந்தவர்கூட உடனே ஏட்டைப் படிப்பதென்பது அவ்வளவு எளிதான காரிமமல்ல. படிப்பதே இப்படி இருக்கும்போது எழுதுவதுபற்றி நாம் குறிப்பிட வேண்டியதில்லை. ஏடெழுதுவார் சிலரே உண்டு. அவரும் ஏடெழுத மிக்க பொருள் கேட்பர். ஒரு புத்தகம் எழுதி முடிய ஆண்டுகள் பலகூட ஆவதுண்டு. ஏட்டுச்சுவடிகளைப் பத்திரப்படுத்திக் காப்பதும் ஒரு கலை. இவ்விதமாகப் பலரும் எளிதில் கற்றறிய வகையின்றி நலிந்த காலம் அது. தானே தமிழ் கற்க முயன்றபோது, புத்தகம் இல்லாக் குறையை நன்கு உணர்ந்த ஐயர், சிறுவர் பாடசாலைகளுக்குப் பாடப் புத்தகங்களின் தேவைய உணர்ந்து மனம் கவன்றார்.

நினைத்தது செய்யும் ஆற்றல் கொண்ட ஐயர் உடனே செருமனி நாட்டிற்குத் தமிழ் எழுத்துக்களைக் கடிதமூலம் அனுப்பி, அச்சுப்பொறி ஒன்றும் தமிழ் அச்செழுத்தும் செய்யச் சொல்லிவிட்டார். இப்படியாக, நம்மொழியறியாச் செருமனியார் செய்த எழுத்துக்கள் கொண்டு 1713-ம் ஆண்டு தமிழ்ப் புத்தகங்களை ஐயர் அச்சிடலானார். பிறகு தாமே அச்செழுத்துக்கள் செய்தார். தரங்கம்பாடியிலேயே காகிதப்பட்டறை யொன்று நிறுவினார்.

இவ்விதமாகத் தமிழ் மக்களுக்கு குறைந்த விலையில் அச்சுப் புத்தகங்கள் வழங்கியவர்கள் ஸீகன்ஸ்பால்க் ஐயரேயாவார். இவர் காலத்துக்கு முன்னமேயே தமிழ் நாட்டில் சேசு சபையினர் தமது பாதிரிமார்களுக்காகத் தமிழ்ப் புத்தகங்கள் அச்சிட்டனர். ஆயினும், பாமரர்களும் வாங்கிப் படித்து இன்புறும்படிக் குறைந்த விலையில் வழங்கியவர் இவர்தான். தமிழ்நாடு என்றும் மறக்காவண்ணம் இவர் செய்த பெரிய தொண்டு இது ஒன்றே. வீரமாமுனிவர், போப்பையர் போன்று தமிழ்மொழியில் சிறந்த புலமை இவர் பெறுவிடினும், நம் மொழியை நேசித்ததில் அவர்களைக் காட்டிலும் இவர் எள்ளளவும் குறைந்தவரல்லர்.

இவ்விதமாக, தமது நாட்டைவிட்டு, கடவுளின் தொண்டில், தமிழ் மொழியையும் தழைக்கச் செய்த ஸீகன்பால்க் ஐயரை நாம் மறக்க முடியுமா?

அகில உலகத் தமிழ் வல்லுநரும் தமிழ்த்தாய்க்குப் பெருவிழா எடுக்கச் சென்னையில் கூடும்போது நாம் செருமனி நாட்டுத் தமிழறிஞராய ''ஸீகன்பால்க்'' பற்றி நினைவு கூர்தல் சாலப் பொருத்தமே.



சுதனுகியசறுவெசுரனுயிருககிற

# எசுககிறிஸதது நாதரானவர

இநதபபூலோகததிலெமனுஷனுயபபிறநதவிசெஷஙக
ளையுமபோதிவிசசஞானஉபதெசஙகளையுமசெயதஅ
றபுதஙகளையுமமனுஷருககுவெணடிபபாடுபடடு
எலலாரையுமமீணடுரெஷிசசததஅததவானஙகளையும
உயிரொடெழுநதிருநதுபரலோகததிலெமகிமையாக
எறினதனதையுமஅவருடையசீஷாககளாகிறஅபபொஸ
தலமாரகளலோகமெஙகுமபோயபபிடிககொதத
சசுவிவிசெஷஙகளைசசகலசசெனஙகளுககுமபிரசங
கமபணணினதனதையுமவெளிபபடுததுகிறபுதுஎ
றபாடடினுடையமுதலாமஅகுபபாகிற
அஞசுவெதபொஸததகம




---

கிறிஸதுபிறநதஆயிரததெழுநூறததுபபதினைநதாமவரு
ஷமாகிறபொதுயிததாஙகனபாடியிலெயிருககிற
பாதிரிமாரகளுடையஅசசிலெபதிககபபடடது

[1715-இல் தரங்கம்பாடியில் முதன் முதலில் அச்சிட்ட விவிலிய நூல் ‘புதிய ஏற்பாட்டின்’ முதல் பக்கம். *பட உதவி: ஓவியர் ‘உகி’*]

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

தமிழ்ப் பெரும்புலவர்
**திரு. மு. ரா. பெருமாள் முதலியார், எம்.ஏ.,எல்.டி.**
தமிழ் வளர்ச்சி இயக்குநர், தமிழக அரசு

# நன்னுடை நல்கல்

கல்வியைப்பற்றித் தமிழ்ச் சான்றோர் கருத்துகளை அறிவதற்குத் தமிழ் நூல்கள் பயன்படுகின்றன. தமிழ் இலக்கியத்தின் தொன்மையை இன்றைய தமிழ் மக்களுக்கு யாரும் எடுத்துரைக்க வேண்டியதில்லை. சங்க நூல்களெல்லாம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவை என்னும் செய்தியினை அறியாதார் யாரும் இலர். உலகப் பொது மறையாகிய திருக்குறள் கி.மு. முதல் நூற்றாண்டிலேயே எழுதப்பட்டிருக்க வேண்டுமென்பதை அறிஞர் பலரும் ஒத்துக் கொள்கின்றனர். மேலை நாட்டுக் கல்வி வல்லுநர்கள் கல்வி பற்றி இன்று கூறும் கருத்துகளும், திருவள்ளுவருடைய கருத்துகளும் ஒத்திருப்பதையறிந்து நாம் வியக்கிறோம்.

## கல்வியின் நோக்கம் :

கல்வியின் மிக முக்கிய நோக்கம் மனிதனுடைய சிந்தனையாற்றலை வளர்த்தலே என்பதைக் கல்வி வல்லுநர் அனைவரும் வற்புறுத்துகின்றனர். சிந்தனையாற்றலை வளர்க்காமல் வெறும் செய்தியறிவை மட்டும் தருகின்ற கல்வியை அறிஞர் பாராட்டுவதில்லை. அத்தகைய கல்வியால் விளையும் பயன் மிக மிகச் சிறிதாகும். செய்தியறிவு ஒருவனுடைய கல்வி முன்னேற்றத்திற்கு அடிப்படையானது என்பதை யாரும் மறுக்கவில்லை. ஆனால், ஒருவன் தான் பெற்ற செய்திகளைப்பற்றிச் சொந்தமாகச் சிந்தனை செய்து, அதன்மூலம் புதிய கருத்துகளையும், புதிய கற்பனைகளையும் உருவாக்கத்தக்க ஆற்றல் பெறாவிட்டால் செய்தியறிவு அதனைக் கற்றவனுக்கு வெறும் சுமையாகவேயிருக்கும். இது உயர்ந்தது, இது தாழ்ந்தது, இது உண்மையானது, இது பொய்யானது, இது அழகானது இது அழகற்றது, இது நன்மை பயப்பது இது தீமை பயப்பது என்று பகுத்தறியும் ஆற்றலே சிந்தனையாற்றல் ஆகும். செய்தியறிவையும், சிந்தனையாற்றலையும் அடிப்படையாகக்கொண்டு கற்பனையாற்றல் வளர்கின்றது. கற்பனையில்லாவிட்டால் அறிவின் பெருக்கமும் இல்லை, புதியன கண்டுபிடித்தலும் இல்லை. மனிதன் தோன்றிய நாள் தொட்டு இன்றுவரையிலும் உலகம் அடைந்திருக்கின்ற எல்லா வகையான முன்னேற்றத்திற்கும் சிந்தனையாற்றலும் கற்பனையாற்றலுமே அடிப்படை என்பதை நாம் அறிவோம். உலகம் தோன்றிய நாள்முதல் எத்தனையோ கோடிமக்கள் உலகில் பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, மறைந்து இருக்கின்றனர். ஆனால், அத்தனை பேருமே உலக முன்னேற்றத்திற்குக் காரணமானவர்கள் என்று கூற முடியாது. அவர்களுள் அவ்வப்போது தோன்றிய அறிஞர் சிலரே இன்று நாம் அடைந்திருக்கும் எல்லா முன்னேற்றத்திற்கும் காரணமாய் இருந்தார்கள். அவ்வறிஞர்கள் நுண்ணறிவு மட்டுமன்றி, சிந்தனையாற்றலும் கற்பனையாற்றலும் பெற்றவர்கள். மிகவுயர்ந்த நுண்ணறிவைப் பலர் பெற்றிருக்கக் கூடும். ஆனால் அவர்கள் கல்வியறிவு பெறுகின்ற போதுதான் அந்நுண்ணறிவின் பயனையெல்லாம்

அடையமுடியும். எனவே, இயல்பாகவே நுண்ணறிவுள்ள மக்கள் கல்வியறிவு பெறுவதன்மூலம் தங்களுடைய சிந்தனையாற்றலைப் பெருக்கிக் கொள்கிருர்கள். இதனையே, 'தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத் தூறும் அறிவு' என்று திருவள்ளுவர் திருவாய் மலர்ந்தருளினுர்.

### தாய்மொழியே பயிற்று மொழி :

எனினும், இந்தியாவில் ஆங்கில ஆட்சி ஏற்பட்டபின்னர் வகுக்கப்பட்ட கல்வி முறையினுல் சிந்தனையாற்றலை வளர்த்தலே கல்வியின் முக்கிய நோக்கம் என்னும் பேருண்மையை நாம் மறந்துவிடக்கூடிய நிலைமை ஏற்பட்டது. ஆங்கில ஆட்சியில் வகுக்கப்பட்ட கல்வி முறையின்படி ஆங்கிலமே பயிற்று மொழியாக இருந்ததுதான் அந்நிலைக்குக் காரணம். 1835-ஆம் ஆண்டில் மெக்காலே என்னும் ஆங்கிலேயர் இந்தியக் கல்விபற்றி எழுதிய குறிப்பின் அடிப்படையில் தொடங்கிய கல்விமுறை ஒரு நூற்றுண்டு வரையிலும் மாருமலே இருந்துவிட்டது. 1935-ஆம் ஆண்டையொட்டிய காலத்தில்தான் மாணவர்களுடைய தாய்மொழியே பயிற்றுமொழியாகவும் இருக்க வேண்டுமென்னும் எண்ணம் இந்திய அறிஞர்களுடைய உள்ளத்தில் தீவிரமாக எழுந்தது. அதன் பயனுக இப்பொழுது மிகப் பெரும்பாலான உயர்நிலைப் பள்ளிகளில் தாய்மொழியே பயிற்றுமொழியாக இருக்கிறதெனினும், உயர்கல்வித் துறையிலும், அறிவியல் - தொழில் நுட்பக் கல்வித் துறைகளிலும் இன்னும் ஆங்கிலமே பயிற்றுமொழியாக இருக்கிறது. எனவே, ஆண்டுதோறும் பல்லாயிரக் கணக்கான மாணவர்கள் உயர்கல்வி பெற்றுப் பல்கலைக் கழகங்களிலிருந்து வெளியேறுகிருர்களெனினும் அவர்களுள் மிகச்சிலரே புதியன கண்டுபிடித்தற்கின்றியமையாத சிந்தனையாற்றலும், கற்பனையாற்றலும் பெற்றவர்களாக இருக்கிருர்கள். தமிழகத்தில் தமிழே பயிற்றுமொழியாக இருக்குமாஞல், இத்தகைய அறிஞர்களின் தொகை இன்னும் பல மடங்கு பெருகியிருக்கும். எனவே, திருவள்ளுவரும், தற்காலக்கல்வி வல்லுநர்களும் கல்வியின்மூலம் எதிர்பார்க்கின்ற சிந்தனையாற்றலும் கற்பனையாற்றலும் மக்களிடையே வளர வேண்டுமாஞல் தாய்மொழியே பயிற்றுமொழியாக இருக்க வேண்டுமென்பது உறுதியாகிறது. தமிழக அரசு இதனை நன்கு உணர்ந்திருக்கிறது. எனவே, தமிழையே கல்வியின் எல்லாத் துறைகளிலும் எல்லா நிலைகளிலும் பயிற்றுமொழியாக்குவதைத் தனது குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது தமிழக அரசு.

### நுண்ணறிவு :

மேலே கூறியவற்ருல் சிந்தனையாற்றலையும் கற்பனையாற்றலையும் வளர்க்கின்ற கல்விதான் சிறந்த கல்வி என்பது பெற்ருேம். இத்தகைய கல்வியைக் கற்கும் வாய்ப்பினைப் பெறுகின்ற எல்லாருமே மிகச்சிறந்த அறிவாளிகளாக மாறிவிடமுடியாது. ஒருவனுடைய நுண்ணறிவின் தரத்திற்கேற்பவே அவனுடைய அறிவு வளர்ச்சி அமைகிறது. எனவே, நுண்ணறிவின் தரமும் சூழ்நிலையின் இயல்பும் சேர்ந்தே ஒருவனுடைய வளர்ச்சியை நிர்ணயிக்கின்றன. சூழ்நிலை மிகவும் நன்ருக அமைகிறபோது ஒருவன் தன் நுண்ணறிவுக்கேற்ற முழு வளர்ச்சியையும் அடைகிருன். அவ்வாறு பெறுகின்ற முழுவளர்ச்சியின் பயனைப் பெரும்பாலும் தாமே அடையவேண்டுமென்று பொதுவாக மக்கள் விரும்புவது இயல்பு. அந்நிலையில் சிறந்த கல்வி பெற்று முழு வளர்ச்சியடைந்த ஒருவனுடைய ஆற்றல்கள் அனைத்தும் அவனுக்கே பயன்படும். ஆனுல் அவ்வாற்றல்கள் சமுதாயத்திற்கும் பயன்படும்போதுதான் கல்வியறிவின் முழுப்பயனும் கிடைக்கின்றது.

### நன்னடை :

தான் பெற்ற கல்வியின் பயனுக ஒருவன் தன்னலத்தைக் கருதி, சமுதாயத்திற்குத் தீமை விளைவிக்கின்ற முறையில் நடந்துகொள்வானுஞல் அவனைக் கல்வியறிவு பெற்ற சான்ருேனென யாரும் ஒத்துக் கொள்ளமாட்டார்கள். திருவள்ளுவரும் ஒத்துக்கொள்ளவில்லை. 'அரம்போலும் கூர்மையரேனும் மரம் போல்வர் மக்கட் பண்பில்லாதவர்' என்று திருவள்ளுவர் கூறுகின்ருர். எனவே, கல்வியின் பயனுக மக்கட்பண்பு வளர வேண்டும். எல்லா மக்களும் இன்பமான வாழ்க்கையினையே விரும்புகின்றனர். எனவே, ஒருவன் தன்னுடைய சொந்த இன்பத்தைக்கருதி அதனை அடைவதற்குரிய முயற்சியினை மேற்கொள்கின்றபோது பிறருக்கு அதனுல் தீங்கு வராமல் இருக்குமாறு பார்த்துக் கொள்ளவேண்டும். மேலும், அவனுடைய சிந்தனையும், சொல்லும், செயலும், தனக்கும் பிறருக்கும் ஒருங்கே நன்மை பயப்பதாக அமையவேண்டும். இதனையே ஆன்ருேர் 'நன்னடை' என்று கூறுவர். நன்னடையுடைய தனி மனிதன் தன்னுடைய சிந்தனையாற்றலையும் கற்பனையாற்றலையும் சமுதாய நலன் வளரும் முறையில் பயன்படுத்த விரும்புவான். அவன் புதியன கண்டுபிடிப்பதன்மூலம் எல்லா மக்களும் பயனடைவார்கள். அதனுற்ருன், 'தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிது' என்று திருவள்ளுவர் கூறுகிருர்.

### அரசின் கடமை :

புதியவழிகளை வகுத்துப் பொருளாதாரத்துறை, கலைத்துறை போன்ற வாழ்க்கைத்துறைகள் பலவற்றிலும் முன்னேற்றத்திற்கு உறுதுணையாக இருக்க உதவும் திறன்களைப்பெற்ற தனிமனிதன் தன்னுடைய ஆற்றல் முழுவதையும் ஆக்க வேலைக்குப் பயன்படுத்த வேண்டுமாஞல் அவன் வாழ்கின்ற நாட்டின் அரசியலும் சமுதாயச் சூழ்நிலையும் நன்கு அமைந்திருக்கவேண்டும். அவை நன்கு அமையாமல் இருந்தால் மிகப்பெரும்பாலோருடைய கல்வியறிவு உலக முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய உண்மையான பயனையளிக்காது. பிறருடைய நன்மைக்காகப் பாடுபட வேண்டுமென்று நினைக்கின்ற மனிதன் அந்நிலையை விரும்ப மாட்டான். அவன் அரசியல் - சமுதாயச் சூழ்

நிலையை மாற்றியமைப்பதிலேயே தன் முழு ஆற்றலையும் செலவிடுவான். அத்தகைய உள்ள உரமும் ஆர்வமும் இல்லாதவர்கள் சூழ்நிலையை மாற்ற முயலாமல் அதனோடு ஒட்டி வாழ்ந்தே காலம் கழித்துவிடுவர். அதனால் அவர்களுடைய கல்வியின் பயனையும் சமுதாயம் முழுமையாக அடைய முடியாது. எனவே கல்வியறிவு பெற்ற ஒருவனுடைய நன்னடையினால் உலகம் பயனடையவேண்டுமானால், அதற்குரிய சூழ்நிலையை வகுத்துத் தருவது அரசின் கடமையாகும். அதனால்தான், ''நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே'' என்று புறநானூற்றுப் பாடல் ஒன்று அறிவுறுத்துகின்றது. மனிதனுடைய அறிவுத்திறனும், உணர்வியல்பும் சரியான வளர்ச்சியடைவது மட்டுமன்றி அவ்வளர்ச்சியின் முழுப்பயனையும் சமுதாயம் அடைய வேண்டுமானால் அதற்குரிய சமுதாயச் சூழ்நிலையை அரசு ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும். இன்றேல் அவ்வரசினையும் சமுதாய அமைப்பையும் ஒருங்கே மாற்றிப் புதியதோர் அரசியலமைப்பையும் சமுதாய அமைப்பையும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமென்று தற்கால அறிஞர்கள் கூறுவதையும், அதன்பயனாக இன்று உலகமக்கள் பலரும் அரசியல் நீதியும் சமுதாய நீதியும் வேண்டுமென்று புரட்சிகரமான பல மாறுதல்களைச் செய்து வருவதையும் நாம் அறிந்திருக்கிறோம். இதனையெல்லாம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே உணர்ந்து கூறிய தமிழ்ப்புலவரை நாம் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

மேலே கூறிய சில செய்திகளிலிருந்து பண்டைக்காலத் தமிழறிஞர்கள் கல்வியைப்பற்றிக் கூறிய கருத்துகளையே இந்தக்கால அறிஞர்களும் கூறுகின்றனர் என்பது விளங்கும். கல்வித்துறையில் பல்லாண்டு பணியாற்றியுள்ள நான் இதனை எண்ணிப்பாக்குந்தோறும் இன்பமடைகின்றேன்.

''ஈன்றுபுறந் தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.''

—புறம் 312

# உயிரின் ஊதியம்

ஈசல் இறகுகள்போல் இற்றுவிழாப் பண்புடைய
மாசில்லா மேலோர்கள் வாழ்க்கை அறச்செயலால்
ஆக்கும் திருப்புகழ் என்றும் அழியாது !
பூக்கும் திருவாய் மொழியால் புலவரெலாம்
பாடி அவரிசையைப் பாட்டால் அளந்திடுவார் !
நாடிவந்து நாவலர்தம் நாவரங்கில் ஏற்றிடுவார் !
மாயா உடம்பதனுல் மாண்பார் செயல்புரிந்தால்
மாயா உடம்படைவீர் ! என்றும் மரணக்
கறையான் அரிக்காது ! காலமோ நும்பேர்
பறையாகிச் சாற்றிப் பரப்பிவரும் ! இப்புகழே
நல்லுயிர்க்கோர் ஊதியம் என்றுரைப்பார் நாயனுர் !
வல்லவராய்க் காலம் செலவிடுவீர் ! நன்மை
வரவுவைப்பீர் ! பற்றறத்தின் மேல் வைப்பீர் ! மாற்றுத்
தரங்குறையாப் பொன்செய்கை நாளும் தயாரிப்பீர் !
அன்புநாண் ஒப்புரவு கண்ணேட்டம் ஆசில்லா
நன்மைதரு வாய்மை நயந்தைந் தொகைக்கணக்குப்
பாரில் பழுத்த புகழான ஊதியத்தைச்
சேர்க்குவகை பார்த்திடுவீர் ! தீமையைத் தள்ளுபடி
செய்வீர் ! இழிசொல் கழிப்பீர் ! சிறந்தன்பில்
கொய்தினிப்பைக் கூட்டுவீர் ! நன்மை பெருக்குவீர் !
வாருங்கள் என்று வகுத்தெவர்க்கும் தந்துபுகழ்
வாருங்கள் நெஞ்சம் மகிழ்ந்து !

ஈரோடு-தமிழன்பன்

பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

பேராசிரியர் **அன்பு கணபதி**
பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30




'**த**மிழன் என்றொரு இனமுண்டு தனியே அவர்க்கொரு குணமுண்டு' என மறைவாக நமக்குள்ளே பண்பாட்டுப் பழம்பெருமைகளைப் பேசுவதில் ஒரு மகிமை இல்லை என்றாலும், பழைமையைச் சிந்திப்பதன் வாயிலாகப் பழம் பண்பாட்டைத் தழுவிய புதிய சமுதாயத்தைப் படைக்க வழி வகை காணமுடியும். ஆதலின் 'எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி' இருந்த இந்நன்னாட்டின் அருமை பெருமைகளைச் சாற்றி நிற்கும் பண்பாட்டைக் காணுதல் இக்காலத்திற் கேற்றதேயாகும்.

பண்பாடு :

பண்பு, பாடு எனப்பிரிக்கும் வகையில் அமையும் இச்சொற்கூட்டில் சான்றாண்மை அல்லது உயர்ந்த - செம்மையான - உள்ளம் என்பது முதற்சொல்லின் பொருளாக அமைய, படுதல் என்பது ஒழுகுதல் அல்லது வழிச்செல்லுதல் எனப்பொருள்படுமாதலின், 'படு' என்பதன் முதல் நீட்சியாகிய 'பாடு' என்பதற்கு ஒழுக்கம் என்பது பொருளாகச் சேர, சான்றாண்மையாகிய ஒழுக்கம் அல்லது உயர்ந்தவழிச் செல்லுதல் என்னும் பொருள் விரிவைத் தன்னகத்தே கொண்டு நிற்கும்.

அன்றியும் பண்பு என்னும் சொல்லைச் சிதைத்துப் 'பண்' என்பதை அடிச்சொல்லாக்கிப் பொருள் காண்பாரும் உளர். பண் எனின் இசை ஆகும்; இசை-இசைவு-இசைதல் என விரியின் இசைந்த வாழ்வு அல்லது பொருந்திய வாழ்வு எனப் பொருள் தந்து நிற்கும்.

'பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்'
-(நெய்தற் கலி)

'பண்புடையார் பட்டுண்டு உலகம்'
-(குறள் 996)

'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்
[தொறும்
பண்புடையாளர் தொடர்பு' -(குறள் 783)

மேற்கண்ட வரிகளின் வாயிலாகப் பண்பின் தெளிந்த பொருளைத் தெளியலாம்.

திருவள்ளுவர் நாகரிகம் என்ற சொல்லையும் பயன் படுத்துகின்றார்.

'பெயக்கண்டும் நஞ்சுண்ட மைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்' -(குறள் 580)

நற்றிணையிலும் மேற்கண்ட குறள் கருத்தோடு இணைந்த கருத்து ஒன்று காணக்கிடக்கின்றது.

'முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்'

எனவரும் அவ்வரிகளின் பொருளாக உள்ளே பொதிந்திருக்கும் கருத்துக்களை ஆழ்ந்து நோக்கின் பண்பாட்டைக் குறிக்கும் வேற்றுச் சொல்

வடிவமே இந்நாகரிகம் என்பது விளங்கும்.

ஆனுல் இன்றைய சூழலில் பண்பாடு என்பது உள்ளத்தின் வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டது என்றும் நாகரிகம் என்பது நடையுடை முதலிய புறத்தோற்றத்தை அடிப்படையாகக் கொண்டது என்றும் கருதி வருகிறேம்.

இவ்விரண்டு சொற்களும் தெளிந்த உள்ளத்தின் விழுமிய ஒழுக்கத்தை உணர்த்தும் வேற்றுச் சொல்வடிவங்கள் என முடிபு கூறிப் பண்டைத் தமிழர்தம் பண்பாட்டைக் காண்போம்.

**அகமும் புறமும் :**

பண்டைத் தமிழர் தம் வாழ்க்கைப் பண்பாடு அகம் புறம் என்னும் இருபிரிவினுள் அடங்கும். அகம் என்பது ஒருவனும் ஒருத்தியும் சேர்ந்த வாழ்வையும் புறம் என்பது வாழ்வின் பிற கூறுபாட்டையும் உணர்த்தும். 'பாட்டும் தொகையுமே' பண்டைத் தமிழர்தம் பண்பாட்டுக்குச் சான்று பகர்வனவாக விளங்கும். அவர், தம் வாழ்விலே புறத்திணையைக் காட்டிலும் அகத்திலே அதிகம் ஈடுபாடு கொண்டிருந்தனர் என்பதற்கு அந்நூல்களில் அகம்பற்றிய மிக்கிருப்பது துணை நிற்கும். 'வீட்டுக்குப் பின்னரே நாடு' அல்லது 'வீடு செம்மையுறின் நாடு செம்மையுறும்' எனும் எண்ணம் கொண்டிருந்தனர் என விளக்கம் கூறுவர் சிலர்.

களவு, கற்பு, மக்கட்பேறு, விருந்தோம்பல் முதலியன அகத்தின் கூறுகளாக விளங்க, அரசியல், வாணிகம், தொழில், கலை, சமயம், தத்துவம் முதலியன புறத்தின் கூறுகளாக விளங்கும்.

**அகம் :**

பண்டைத் தமிழ் மக்கள் தம் அகவாழ்வு களவு வாழ்க்கையில் தொடங்கி, கற்பு வாழ்க்கையில் தொடரும் தன்மையது. 'வடகடலிட்ட ஒருநுகம் ஒருதுளை தென்கடலிட்ட ஒருகழி சென்று கோத்தாற் போலவும் வெங்கதிர்க் கனலியும் தண்கதிர் மதியமும் தம்கதி வழுவித் தலைப்பெய்தாற்போல்' தலைப்பெய்த தலைவனும் தலைவியும் களவுக்குப் பின் பிறர் பழித்தலில்லாத அறன் எனப்படும் இல்வாழ்க்கையை மேற்கொள்வர்.

தெய்வம் தொழாது கொழுநனைத் தொழுது எழும் தற்காத்து, தற்கொண்டானைப் பேணி, தகைசான்ற சொற்காத்துச் சோர்வில்லாப் பெண்ணுகத் தலைவியும், பிறன்மனை நோக்காப் பேராண்மையோடு நல்லறம் பேணும் நற்றுணை நாயகனுகத் தலைவனும் வாழ்ந்த கற்பு வாழ்வின் இணைந்த அன்பின் சான்ருக யாழினிமையையும் குழல் இனிமையையும் வெல்லும் மழலைபேசும் அறிவறிந்த மக்கட் பேற்றேடு வாழ்ந்த வாழ்வின் சிறப்பினைக் கூருத அக நூல்கள் உண்டோ?

களவு கண்டு, கற்பு கண்டு, கற்பு வாழ்வின் பயன்கண்டு 'வினையே ஆடவர்க்கு உயிரே, வாணுதல் மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென' வாழ்ந்த இல்வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டிருந்தது பிறிது ஒன்று இருந்தது என்ருல் அது விருந்தோம்புதல் ஆகும். 'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய் தற்பொருட்டு' எனக் கூறும் வள்ளுவர் பெருமானுர்

'இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந் [தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு'

—(குறள் 81)

எனத் தெளிவுபடுத்துவதோடல்லாமல்,

'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் [தானென்ருங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை, —(குறள் 43)

என விருந்து ஓம்பல் இல்வாழ்வானின் கடமைகளில் ஒன்றெனவே வலியுறுத்திக் கூறுகின்ருர். வள்ளுவரின் கருத்துக்களின் சாயலாக விளங்கும் சேரன் தம்பி இசைத்த சிலம்பின் வரிகளும் இங்குக் காணுதற்கேற்றது.

'அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும்'

என்பன அவ்வரிகள்.

குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை என நிலத்தை இயற்கையின் சூழலுக்கு ஏற்பப் பாகுபாடு செய்து அந்த அந்த நிலத்தின் தட்ப வெப்ப நிலைகளுக்குச் சுற்றுச் சூழல்களுக்கு இயைந்தவண்ணம் தம்முடைய வாழ்வை அமைத்து வாழ்ந்தனர் ஆதலின் அவர்தம் அகவாழ்வு, அன்பும் அறனும் இணைந்து அவற்றின் பண்பும் பயனும் பெற்று இல்லறமாக விளங்கியது. தனித்தனிக் கற்களின் கூட்டே இனிய மாளிகை வடிவு பெறுமாறுபோல, பண்டைத் தமிழரின் தனித்த வீட்டு வாழ்க்கை இனிதே நாட்டு வாழ்க்கைக்கு அடிகோலியது.

**புறம் :**

'நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'

ஆதலின் புறத்துறையில் முதலிடத்தைப் பெறுவது அரசியலாகும். மக்களினுல் மக்களுக்காக மக்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் குடியாட்சியினும் சிறந்த முடியாட்சி அமைந்திருந்ததற்கு

'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்'

—(குறள் 388)

என வரும் அடிகளே சான்ருக அமையும்.

'கோன் நிலை திரியின் கோள்நிலை திரியும்! கோள்நிலை திரியின் மாரி பொய்க்கும்; மாரி பொய்ப்பின் வளன் குன்றும், வளன் குன்றின் வறுமையுறும்; வறுமையுறின் மக்கள் இடம் பெயர்வர். இடம் பெயரத்தக்க ஆட்சி செங்கோன்மையன்று' என்னும் இவ்வுண்மை உணர்ந்து ஆண்டதால் 'பதியெழு அறியாப் பழங்குடி மூதூ

ராகத் தமிழகம்' பண்டு விளங்கியது என்பதற்குச் சான்று பாட்டும் தொகையுமேயாகும்.

'முறை வேண்டுநர்க்கும் குறைவேண்டுநர்க்கும்
வேண்டுப வேண்டினர்க் கருளி'

(பெரும் பாண்)

ஆகும் இயல்பினுல் மன்னனைக் காத்தற்கடவுளாகிய திருமாலின் மாற்றுருவாகக் கொண்டனர்.

'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேன்' என்னும் இடைக்கால இலக்கிய வரி அக் கருத்துக்குத் துணை நிற்கும்.

'குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
ஆளன்று என்று வாளில் தப்பார்'

(புற 74)

எனச் சாதாரணக் குடிமகனின் வீர உணர்வைக் காட்டும் புறநானூற்றின் வாயிலாகவே வேந்தரின் வஞ்சின உரையையும் கண்டு அவர்தம் தோள்வலிமையைக் கணக்கெடுக்க முடிகின்றது.

'சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரசமொடு
ஒருங்கு அகப்படே ளுயின் பொருந்திய
என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணுது
கொடியன் எம்மிறை எனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலே ளுகுக'

—(புறம் 72)

'திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தேன் ஆகுக'

—(புறம் 71)

'நாடெனும் பேர் காடாக
ஆசேர்ந்தவழி மாசேர்ப்ப
ஊர் இருந்த வழி பாழாக'

இங்ஙனம் எத்தனை எத்தனை வரிகள்! அறிவோடு ஆற்றல் நிறைந்த அரசர்கள், இங்ஙனம் வீரத்தின் விளைவைக் காட்டும் இலக்கியங்களே நிலையின் திரியாது அடங்கிய அறிவின் விளைவையும் காட்டும்.

'காடுகொன்று நாடாக்கிக்
குளம்தொட்டு வளம்பெருக்கிப்
பிறங்குநிலை மாடத்து உறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ'

—(பட்டினப்பாலை)

'வசைநீங்கு சிறப்பின்
அல்லது கடிந்து அறம்புரி செங்கோல்
பல்வேல் திரையன்' (பெரும்பாண்)

எனவரும் அடிகள் சாலவும் சான்ருக நிற்கும்.

புதியவரை ஓம்புதல் ('விருந்தே புதுமை') இல்வாழ்வின் கடனுக அமைய, இல்லையென வந்தோர்க்கும் வறியவர்க்கும் வழங்கும் வள்ளண்மை மன்னனின் மாட்சியாக விளங்கியது. 'பொழி மழை துறந்த புகைவேய் குன்றத்துப் பழுமரம் தேரும் பறவை போல' வருவோர்க்கெல்லாம் 'பாண்பசி பகைஞன் இன்மைதீர வேண்டின் எம்மொடு நீயும் வம்மோ முதுவாய் இரவலர்' எனப் பெற்ற பெருவளன் பெருர்க்கு உணர்த்தும்வகையில் வழங்கிய காட்சியை இலக்கியங்கள் காட்டும். 'விளங்கு பொற்கலத்தில் விரும்புவன பேணி ஆனு விரும்பின் தான்நின்று ஊட்டும் ஊக்கமும் உள்ளமும் உடைய வேந்தருள் ஒருவன் 'பூத்தலை அருஅப் புனைகொடி முல்லை நாத்தழும்பு இருப்பப் பாடாதாயினும் கறங்கு மணி நெடுந்தோர் கொள்க எனக் கொடுத்த' சேதியையும் அறிகின்ருேம். இங்ஙனம் கொடைமடம்படுவது தமிழருக்கே உரிய பழம்பண்பாட்டின் தனிச் சிறப்பில் ஒன்று.

அரசியல் ஆட்சியில் அரசனுக்குத் துணையாகச் 'சிறந்த கொள்கை அறங்கூறு அவையமும் செம்மைசான்ற காவிதி மாக்களும்' 'நாற்பெருங் குழுவும்' குறை கண்டவழி எடுத்துக்காட்டி இடித்துக் கூறிச் செம்மையாக ஆட்சி அமைய வழி வகுத்தனர்.

**வாணிகம் :**

சமுதாயத்தில் இன்றியமையா இடம்பெறுவனவற்றுள் ஒன்று வாணிகம்.

'நடுவுநின்ற நன்னெஞ்சினேர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடி
கொள்வதூஉம் மிகைகொளாது
கொடுப்பதூஉம் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்'

(பட்டினப்பாலை)

எனப் பட்டினப்பாலை, சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால் கோடா வாணிக முறையினைக் காட்டுகின்றது. இருக்கும் பொருளைத் தந்து இல்லாத பொருளைப் பெறுகின்ற பண்டமாற்று முறையும் இருந்தது. வீட்டுக்கு வீடு மட்டுமல்லாமல் நாட்டுக்கு நாடு இவ்விதப் பண்டமாற்று வாணிக முறையைக் கொண்டிருந்தது என்பதை 'நீரினின்று நிலத்தேற்றவும், நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்' எனவரும் பட்டினப்பாலை அடியால் அறியலாம். 'நீரின் வந்த நிமிர் பரிப்புரவியும் காலின் வந்த கருங்கறி மூடையும் வடமலைப் பிறந்த மணியும் பொன்னும் குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும், தென்கடல் முத்தும் குணகடல் துகிலும் கங்கை வாரியமும் காவிரிப் பயனும் கீழகத்துணவும் காழகத் தாக்கமும் அரியவும் பெரியவும் நெளிய, வந்தீண்டிய வாணிகத்துறையை, நாளங்காடி அல்லங்காடி என இரண்டுபற்றிய தெளிவான விளக்கத்தைச் சிலம்பு காட்டுகின்றது. கிரேக்கம், சீனம் முதலிய தொன்மையான நாகரிகத்தையுடைய நாடுகளுடன் வாணிகத் தொடர்புகொண்டு சிறப்புற்றிருந்ததற்குப் பல்வகைச் சான்றுகளுடன் பெருமைகொள்ளும் உரிமையுடையவன் தமிழன்.

**சமயம் :**

அடுத்துச் சமுதாயத்தின் சிறந்த கூருகக் கருதப்படும் இயற்கை வழிபாட்டுச் சமயத்தைப்

போற்றிய பெருமை தமிழனுக்கு உண்டு. 'மாயோன் மேய காடுறை உலகமும், சேயோன் மேய மைவரை உலகமும், வேந்தன் மேய தீம் புனல் உலகமும், வருணன் மேய பெருமணல் உலகமும்' தமிழனுக்குச் சொந்தம். பண்டைத் தமிழர்தம் சமயக் கோட்பாட்டில் காழ்ப்பு இல்லை; கசப்பு இல்லை. சமணர், பௌத்தர் முதலாய வேற்றுச்சமயத்தார் இடையீட்டால் அமைதி யான இயற்கை வழிபாடு சிதைந்து சைவம், வைணவம் என்னும் 'சமயநிலை' உருவாகியது. காழ்ப்பில்லாச் சமயக் கொள்கையில் பண்டைத் தமிழனின் பண்பாடு வரலாற்றில் ஓர் இன்றிய மையாத இடத்தைப் பெறுவது.

**சாதி :**

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனக் கூறிய கணியன் பூங்குன்றனாரின் பழம்பாட்டும், பண் டைத் தமிழனின் வாழ்வியலைக் காட்டும். நிலத் தின் அடிப்படையில் அமைந்த ஒன்றே மக்கட் பிரிவு. குறவர், ஆயர், உழவர், பரதவர், கள்வர் முதலிய பெயரில் அந்நிலங்களின் அடிப்படையில் தமிழன் தன்னைப் பகுத்துக்கொண்டான். 'பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்' என வள்ளுவன் வகுத்த இலக்கணமும் பண்டைத் தமிழனின் வாழ்வியலினின்று பிறந்ததே ஆகும். ஆதலின் சாதியில்லாத, சமயம் இல்லாத ஓர் உயர்ந்த பண் பாட்டோடு வாழ்ந்தவன் பண்டைத் தமிழன் என்பது போதரும்.

**மக்கள் :**

'ஒல்குபசி உழந்த ஒடுகுநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வல்லுகிர் குறைத்த
குப்பை வேளை உப்பிலி வெந்ததை
மடவோர்க் காட்சி நாணிக் கடையடைத்து
இரும்பே ரொக்கலோடு ஒருங்குடன் மிசையும்'

என வருவன போன்ற அடிகள் வறுமையுற்ற தமிழனைக் காட்டினாலும், அவை தமிழ்ச் சமு தாயத்தினை அப்படியே எடுத்துக்காட்டா என் பதை

'அரவுரியன்ன அறுவை' —(பொருநர்)

'ஆவியன்ன அவிர்நூல் கலிங்கம்'

—(பெரும்பாண்)

'சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
ஆறுபோலப் பரந்தொழுகி'

—(பட்டினப்பாலை)

என வரும் அடிகள் நன்கு விளக்கும்.

இங்ஙனம் வளமைக்கிடையே வறுமையும் குடிகொண்ட நாட்டில் ஆடல், பாடல், கூத்து முதலிய கவின்கலைகளுக்கும், ஓவியம், சிற்பம் போன்ற நுண்கலைகளுக்கும் குறைவில்லை. சங்க இலக்கியத்தில் நிறைந்துள்ள கூத்தர், விறலியர், பாடினி முதலியோர்பற்றிய பாடல்கள் இதற்குத் தக்க சான்று பகரும்.

இவற்றோடு மட்டுமல்லாமல் கட்டடக் கலை யிலும் தமிழர் சிறந்து விளங்கினர் என்பதற்கு ஒரு சான்றாக, சேரன் தம்பி தந்த சிலப்பதிகாரத் தின் அரங்கேற்று காதையில் வரும் விளக்கத்தைக் காட்டலாம்.

'விழவின் கோடியர் நீர்மை போல முறை முறை
ஆடுநர் கழியும் இவ் வுலகத்து'

என உலகை, நாடக அரங்காகக் கூறும் அரிய தத்துவக் கலையிலும் பண்டே சிறந்து விளங்கினர் தமிழர்.

'புலவர் பாடும் புகழுடையோர் விசும்பில்
வலவன் ஏவா வான ஊர்தி' யைப்

படைக்கும் அளவிற்கு அறிவியல் கலையில் ஆழ்ந்த புலமை பெற்றிருந்தனர்.

'செஞ்ஞாயிற்றுச் செலவும் அஞ்ஞாயிற்றுப்
பரிப்பும் பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்
வளிதிரிதரு திசையும்
வறிதுநிலைஇய காயமும் என்றிவை
சென்றளந் தறிந்தோர் போல'

விண்வெளியைப் பற்றிய விரிந்த அறிவு கொண் டிருந்தனர் என்பது அவர்தம் விண்ணியல் கலை (வானசாத்திரம்) அறிவைக் காட்டும்.

இவ்வண்ணம் அனைத்துத் திறமையும் பெற்றுத் தமிழன் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்னால் மிக உயர்ந்த பண்பாட்டோடு வாழ்ந்தான் என்னும் உண்மையை, ஏறக்குறைய அதே காலத்தில் உலகின் வேறு பகுதியில் வாழ்ந்த மனிதரின் நாகரிகம் முதலியனவற்றில் பெற் றிருந்த வளர்ச்சியோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது பண்டைத் தமிழனின் பண்பாட்டு அருமை யும் பெருமையும் தெற்றென விளங்கும்.

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

க. த. திருநாவுக்கரசு
(எம். ஏ வரலாறு), எம். லிட்., டிப். மொழியல்.
முதல்வர், மணலி தமிழ்க் கல்லூரி, சென்னை




இந்திய நாகரிகம் ''ஆரிய—திராவிட சமூக, சமய, பண்பாட்டு இணைப்பின் பயனாகத் தோன்றியது. இருசாராரின் மொழிகளும், பழக்கவழக்கங்களும் முறைகளும் நற்பண்புகளும், மற்றும் திராவிடருக்கு முந்திய ஆரியக் கலப்பற்ற பழங்குடி மக்களின் பண்பாடும் கலந்ததன் விளைவாகத் தோன்றியதே இந்திய நாகரிகமாகும்.

இந்திய நாகரிகத்தில் காணப்படும் திராவிடப் பண்பாட்டின் கலப்பினை மதிப்பிடுகின்ற அறிஞர்கள், ''இந்திய நாகரிகத்தில் காணப்படும் ஆரியர் அல்லாதாரின் பண்பாட்டுக் கூறுகளில் திராவிடப் பண்பாட்டின் கூறுகளே முதன்மையானவையும் முக்கியமானவையுமாகும். இந்தியப் பண்பாட்டின் அடிப்படை, ஐம்பது விழுக்காட்டிற்கு (50) மேல் திராவிடப் பண்பாட்டின் கூறுகளைக் கொண்டிருப்பது மறுக்க முடியாத உண்மை'' என்று மொழிந்துள்ளமை இங்குக் கருதத்தக்கது.

இந்திய நாகரிகம் நெடுங்காலத்திற்கு முன்பே, கடல் கடந்த அயல் நாடுகளுக்குச் சென்று பரவியுள்ளது. மொகஞ்சதாரோ, ஹாரப்பா நாகரிகக் காலம் முதல் இன்றுவரை இந்தியாவிற்கு வெளியே கடல்கடந்த நாடுகளிலெல்லாம் இந்திய நாகரிகத்தோடு சென்று பரவியுள்ள இந்திய மொழி, தமிழ்மொழியே என்பது உலகறிந்த உண்மை.

'அகப்பொருள்' பாடல்களையும், போரையும் வீரவுணர்ச்சியையும் போற்றிப் பாடும் 'புறப்பொருள்' பாடல்களையும் பாடிய பண்டைத் தமிழ்ப் புலவர்கள், குறிப்பிட்ட எச்சமயத்திற்கும் முக்கியத்துவம் தராமல், அன்றைய தமிழ் மக்களின் வாழ்க்கையையும், நாட்டுப்புறக் காட்சிகளையும், நகரவாழ்வின் வளத்தினையும், இயற்கையெழிலையும் ஏற்றிப் போற்றியுள்ளமை இந்திய இலக்கியத்தில் மட்டுமல்லாமல், உலக இலக்கியத்திலும் சிறப்பிடம் பெறத்தக்க வீறுடையதாகும்.

சிறப்புவாய்ந்த பாலி மொழிக்கு முதன்முதலில் இலக்கணத்தை வகுத்துக் கொடுத்த பெருமை தமிழகத்திற்கேயுரியதாகும். கச்சாயனர் ('கச்சி' என்ற காஞ்சியைச் சேர்ந்தவர்) முதன்முதல், பாலி மொழிக்கு இலக்கணம் எழுதியுதவியதாக ஆராய்ச்சியாளர் அறிவிக்கின்றனர்.

புத்த சமயத்தோடு தொடர்புகொண்ட உலக மொழிகள் நூற்றைம்பதிற்கு மேற்பட்டன. ஆயினும், புத்தசமயத்தின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் விளக்கும் 'காப்பியம்', அம்மொழிகளில் இன்று இல்லை. தமிழிலுள்ள புத்த சமயக் காப்பியமாகிய 'மணிமேகலை' ஒன்றுதான் புத்த சமயத்தின் தனிப்பெரும் காப்பியமாக விளங்குகிறது.

பழந்தமிழ் இலக்கியங்களிலேயே மிகவும் சிறப்புடையதாகப் போற்றப்படுவது திருக்குறள்.

சமயாச்சாரியர்களான சங்கரர், இராமானுசர், இராமானந்தர் ஆகியவர் கருத்துக்களுக்கும், அருளாளர்களான இராமகிருஷ்ணர், விவேகா நந்தஅடிகள், காந்தியடிகள் ஆகியோர் பண்பு களுக்கும் மூல முதலைச் சமஸ்கிருதத்திலோ, வேறெந்த மொழியிலுமுள்ள நூல்களிலோ காண முடியாது. அவை திருவள்ளுவருடைய திருக் குறளின் மரபில் வந்தவை என்பது டாக்டர் சுவைட்சரின் முடிவாகும்.

கற்பார் உள்ளத்தை உருக்கும் உயர்ந்த கவிதை நயத்தோடு, மனித இனத்தின் அன்பினை வெளிப்படுத்துவது சிலப்பதிகாரம். காப்பியப் பண்புகள் முழுநிறைவு பெற்றதாய், இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழையும் முறையாகக் குழைத்துத் தருவதாய் அமைந்துள்ளது இம்முத் தமிழ்க் காப்பியம். புகழ்மிக்க உலகப் பெருங் காப்பியங்களோடு ஒன்றாக வைத்துப் போற்றத் தக்க சிறப்புடையது சிலப்பதிகாரம் என்பர் கமில் சுவலெபில்.

**பத்தி இலக்கியம்**

இந்தியப் பண்பாட்டின் சிகரமாக விளங்குவது பத்திநெறி. அன்பே வடிவாக இறைவன் விளங்கு கிறான். அவனை அடைவதற்குக் கானகம் சென்று, காய் கனி தின்று கடுந்தவம் செய்து அல்லற்பட வேண்டாம்.

உள்ளத்தே உறையும் இறைவனை, வழி படுவதற்குரிய பக்திநெறியை அருள்நெறிச் சான் றோர்கள் இரண்டாக வகுத்தனர். ஒன்று திருக் கோயில் வழிபாடு; மற்றொன்று ஆன்ம வழிபாடு. நடமாடும் கோயில்களாக உள்ள மக்களுக்குச் செய்யும் தொண்டே மகேசுவரனுக்கு உகந்த தொண்டு என்பது அன்புநெறியின் கோட்பாடு. இவ்வன்பு நெறியின் கொள்கைகளையும் கோட் பாடுகளையும் விளக்கும் தேவார திருவாசகங்களும், நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் தமிழிலே உள் ளமை உலகறிந்த உண்மை. பத்திநெறியின் பழங் காலச் சுவடுகளைத் தமிழல்லாத பிற இந்திய மொழிகளில் காண்பது அரிது.

இந்தியாவிலுள்ள சமயங்கள் ஒவ்வொன்றின் சார்பாக இயற்றப்பட்ட இலக்கியங்களை உடைய மொழியும் தமிழேயாகும். தமிழ் மொழி ஒன்றில் தான் கிறித்துவ, இசுலாமிய இலக்கியங்களும் வழிபாட்டுப் பாடல்களும் காணப்படுகின்றன. வேறெந்த இந்திய மொழியிலும் எல்லாச் சமய நூல்களும் இவ்வாறு முதல் நூற்களாக அமைந் திருக்கவில்லை.

**ஊராட்சிமுறை**

சிற்றூர், பேரூர், மாநிலம் ஆகியவற்றில் சிறந்த தன்னாட்சிமுறை சங்ககாலம் முதற் கொண்டே தமிழகத்தில் சிறப்புற்று விளங்கிய தைச் சரித்திரம் பேசுகிறது. சோழர் ஆட்சிமுறை யின் சிறப்பியல்பாக விளங்குவது ஊராட்சி முறை யேயாகும். ஊர்களிலும் நகரங்களிலும் மக்களாட் சிப் பண்பின் அடிப்படையில் அமைந்த ஊராட்சி மன்றங்களும், பெரிய நகரங்களில் அவற்றின் பிரதிநிதிகளைக் கொண்ட 'நகரம்' எனப்பட்ட நகராட்சி மன்றமும் நாட்டாட்சியை நன்முறை யில் நடாத்தின.

ஊராட்சி மன்றங்கள் மக்களிடையே குழு மனப்பான்மையை வளர்த்து, கூட்டு முயற்சியில் மக்களை ஈடுபடுத்திய முறை நம்முடைய கருத் தைக் கவருவதாகும்.

ஊராட்சி மன்றங்களுக்கு உரிமைகள் பல வற்றை மத்திய அரசு அளித்திருந்தது. அவ்வரசு எல்லா உரிமைகளையும் தனக்கேயுரியதாக - அதி காரங்கள் அனைத்தையும் தன்னிடத்துக் குவித் துக்கொண்ட குவிமுக அரசாக (Bureaucratic) இல்லாமல், பெரும்பாலான உரிமைகளை ஊராட்சி மன்றங்களுக்கு அளித்திருந்தமை வியக்கத்தக்க செய்தியாகும். மத்திய அரசு உள்ளூர்ச் சமுதாய அமைப்பினை அடக்கி யொடுக்கியாளாமல் உரிமைகள் பல வழங்கி வந்தமையால், ஊராட்சி மன்றங்கள் தன்னாட்சியுரிமை பெற்ற உள்ளூர்ச் சமுதாய அரசுகளாக விளங்கின. நாட்டாட்சியின் அடிப்படையாக அமைந்த இச்சிறு 'குடியரசுகள்' மக்களிடையே கூடிவாழும் மனப்பான்மையை வளர்த்தன. நாட்டாட்சியில் குடிமக்களுக்குரிய பொறுப்புணர்ச்சியையும், கடமையுணர்ச்சியையும் அவை வளர்த்தன; உரிமை வாழ்வில் மக்களுக்கு ஆர்வத்தை ஊட்டின; திறமையும் தூய்மையும் பொருந்திய சிறந்த ஆட்சிமுறை நாட்டிலே வேரூன்றி விளங்குமாறு செய்தன.

**திருக்கோயில்கள் :**

தமிழகத்தின் திருக்கோயில்கள், தமிழ்ச் சமு தாயத்தின் நல்வாழ்வில் நாட்டம் கொண்ட சிறப்புமிக்க நிலையங்களாக விளங்கின. ஊர்கள் ஒவ்வொன்றும் கோயிலை மையமாகக் கொண்டே வளர்ச்சியுற்றன. அதைச் சார்ந்தே அவ்வூரின் சமுதாய வாழ்க்கை இயங்கி வந்தது.

இடைக்காலத் தமிழகத்தின் கோயில்கள், 'அவ் வுலகை'ப்பற்றி அறிவிப்பனவாக இருந்தன. எனினும், அவை இவ்வுலகைப் புறக்கணித்துவிட வில்லை. மக்களுக்கு உதவி புரியும் அறநிலையங் களாகவும், அறிவை வளர்க்கும் கல்வி நிலையங் களாகவும், மனவமைதியை அளிக்கும் ஆன்மீக உணர்வின் வளர்ப்புப் பண்ணைகளாகவும், மக்கள் உள்ளத்திற்கு மகிழ்ச்சியூட்டும் அழகுமிகு கலைக் கூடங்களாகவும், அரிய நூற்களைத் தன்னகத்தே கொண்ட நூல்நிலையங்களாகவும், பிறவிப் பெருங் கடலை நீந்துவோருக்கு வழிகாட்டும் வான்பொரு ளாகவும், மண்ணக வாழ்விலே விண்ணக வாழ்க் கையின் பேறுகளைப் பெறுவதற்கு வாய்ப்பளிக்கும் கலைக்கோயில்களாகவும் திருக்கோயில்கள் திகழ்ந் தன.

நிலக்கிழார், வேலையாட்களை நியமித்து வேலை தருவோர், சமுதாய நலத்துக்குப் பாடுபடும் ஒப் புரவாளர் ஆகியோருடைய செயல்களையும், கடன் கொடுத்து உதவும் நிதிநிலையம், கல்வி நிலையம்,

பொருட்காட்சிசாலை, மருத்துவமனை ஆகியவற்றின் பணிகளையும், தன்னைச் சுற்றிவாழும் மக்கள் சமுதாயத்திற்குக் கோயில்கள் செய்து வந்தன. மக்கள் அற உணர்வோடு நல்வாழ்வு வாழ்வதற்குரிய உதவிகள் பலவற்றையும் அருளுணர்வோடு புரிந்துவந்த தமிழகத்தின் திருக்கோயில்கள், இந்திய நாகரிகத்தின் வரலாற்றில் ஒப்புயர்வற்ற சமுதாய நிலையங்களாக விளங்குகின்றன.

### இசைக்கலை :

உலகம் கண்டு வியப்படையுமாறு அழகுக் கலைகள் பலவற்றை இந்தியா உலகிற்கு அளித்திருக்கிறது. அவற்றுள் இசைக்கலை, நாட்டியக் கலை, சிற்பக்கலை, படிமக்கலை முதன்மையானவை. இவற்றை உருவாக்குவதற்குத் தமிழகம் பேரளவிற்குக் காரணமாக இருந்துவருவதைக் கலையியல் அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர்.

இசைத்துறையில் கருநாடக இசை, இந்துஸ்தானி இசை என்ற இரண்டே இன்றைய இந்தியாவில் சிறப்புற்று விளக்குகின்றன. சங்க காலத்திற்கு முன்பிருந்தே இசைத்தமிழ் நன்கு வளர்ச்சி அடைந்துள்ளதைப் பழந்தமிழ் நூற்கள் நன்கு தெரிவிக்கின்றன. தேவார காலத்தில் பத்தி வெள்ளம் கரைபுரண்டோடியபொழுது, மக்கள் உள்ளத்தை உருக்கும் கருவியாக 'இசை' பயன்படுத்தப்பட்டது. பண், திறம் எனும் இருவகைப் பிரிவுகளையுடையது பண்டைத் தமிழிசை. மாத்திரைகள் எனப்படும் 22 வகைச் சுருதிகளும், குரல் துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் எழுவகைச் சுரங்களும் தொன்றுதொட்டு இசைத்தமிழில் அறிவியல் முறைப்படி பாகுபடுத்தப்பட்ட இசைக்கூறுகளாக இருந்துவருகின்றன. சிலப்பதிகாரத்தில் பண்களின் பெயர்களை அறிகிறோம்; தேவார காலத்தில் உருப்படிகளாகப் பெற்றுப் போற்றி வருகிறோம். இவ்வாறு பழைய உருப்படிகளாகப் பெற்றுப் போற்றி வருபவை சென்ற நூற்றாண்டில் அல்லது அதற்கு முந்திய நூற்றாண்டில் தோன்றியவை அல்ல. அவை, ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டவை. ''மனிதனுடைய சரித்திரத்தில் 1200 வருடங்களுக்குமுன் எந்தவிதமான சாஸ்திரிய சங்கீதமும் (Classical music) இதர தேசங்களில் இருந்தது என்று கூறுவதற்குப் போதுமான சான்றுகள் இல்லை'' என்று இசைக்கலைப் பேராசிரியர் திரு. சாம்பமூர்த்தி கூறுகிறார். இதனால் பழந்தமிழ் இசையின் தொன்மையும் சிறப்பும் புலனாகின்றன.

காலப்போக்கில் பழந்தமிழிசையில் திரிபுகளும் மாற்றங்களும் உண்டாயின. 'கருநாடக இசை' எனும் புதிய பெயரால் அஃது அழைக்கப்பட்டது. ''கருநாடக சங்கீதம்'' என்று வழங்கும் தென்னாட்டு இசைக்கலை தமிழ் மக்களின் பரம்பரைச் சொத்து. சிலப்பதிகாரக் காலத்துக்கு முன்னிருந்த தமிழ்நாட்டில் இந்த இசைக்கலை உருவம் பெற்று வளர்ந்துவந்தது'' என்று அறிஞர் ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) தெளிவுறுத்தியுள்ளார். எனவே, கருநாடக சங்கீதம் என்பது தமிழிசைக்குப் பிறமொழியாளர் வைத்த பெயர் என்பது தெரியவருகிறது.

### நாட்டியக் கலை :

பாரத நாட்டின் மற்றொரு சிறப்புமிக்க கலை பரதநாட்டியம். கலைகள் பலவற்றிற்கு அடிப்படையாகவும் தொன்மையானதாகவும் உள்ளது நாட்டியக்கலை. உள்ளத்தில் உண்டாகும் உணர்ச்சிகளையும் கருத்துக்களையும் உடற்கூறுகள் வாயிலாகப் புறத்தார்க்குப் புலப்படுத்துவதே இக்கலையின் நோக்கம். முகக் குறிப்பு, கண்குறிப்பு, கைக் குறிப்பு என்னும் பகுதிகளைக் கொண்ட நாட்டியக் கலையோடு இசையைக் கலந்து பேரின்பத்தை அளிக்கிறது பரதநாட்டியம். எண்வகை மெய்ப்பாடுகளே இக்கலையின் உயிர்நாடி. இக்கலை கோயில்களில் நடத்துவதற்காகவே தோற்றுவிக்கப்பட்டது. கோயிலில் பயன்படுத்தப்படும் சிற்பக்கலை, படிமக்கலை, இசைக்கலை ஆகியவற்றோடு நெருங்கிய தொடர்பும் இயைபும் கொண்டது நாட்டியக்கலை. நாட்டியக்கலையைப் போற்றி வளர்த்தது மட்டும் அல்லாமல், இன்றைக்கு அக்கலைக்கு ஒரு புதுவாழ்வினை அளித்து உலகப் பெருங்கலையாக அதனை மாற்றி வருகின்றவர்களும் தமிழர்களேயாவர்.

இவ்வழகுக்கலை தோன்றி வளர்ந்தது தமிழ் நாட்டில். ஆனால், இக் கலையின் நுட்பத்தை அறிவியல் முறைப்படி ஆராய்ந்து, 'நாட்டிய சாத்திரத்தை' பரதர் என்ற பெரியார் வடமொழியில் எழுதியுள்ளார். 'நாட்டியம்' எனும் சொல், 'நிருத்' எனும் பிராகிருதமொழியின் வேர்ச் சொல்லிலிருந்து நிருத்த, நிருத்திய, நாட்டிய என்று திரிந்திருப்பதாக மொழியியல் அறிஞர்கள் கூறுகின்றனர். மேலும், பரத முனிவர் தென்னாட்டைச் சேர்ந்தவர் என்றும், அவர் ஆரியரல்லாத இந்தியப் பழங்குடி மக்கள் இனத்தைச் சேர்ந்தவர் என்றும், அவர் தம் காலத்திய நிலைமைக்கேற்ப வடமொழியில் நாட்டிய சாத்திரத்தை இயற்றியருளினர் என்றும் வடமொழி நாடக ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

தென்னாட்டில் நாட்டியக்கலை தெய்வீகக் கலையாகப் போற்றி வளர்க்கப்பட்டு வருவதைக் கல்வெட்டுக்களும், இலக்கியங்களும் எடுத்தியம்புகின்றன.

திராவிடக் கலைமுறையில் தனிச்சிறப்புமிக்க கலைப்பாணிகளும், உருவச்சிலைகளின் அமைப்பில் இந்தியாவின் வேறெந்தப் பகுதியிலும் காண முடியாத இயக்கமும், நெகிழ்வும் கொண்ட சிறப்பியல்புகளும் இடம்பெற்றுள்ளதை நாம் மறுக்க முடியாது.

மாமல்லபுரத்துச் சிற்பங்கள் கல்லிலே இழைக்கப்பெற்ற காப்பியங்களாகும். பல்லவர் சிற்பக் கலையில் அடைந்த மாபெரும் வெற்றிக்கு - சாதனைக்கு இவை அழியாத பெரும் சான்றுகளாகும். பாறைகளில் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்கள், தென்னிந்திய சிற்ப வடிவங்களின் களஞ்சியமாகக் காட்சி தருகின்றன. அவை கட்டுப்பாட்டுணர்ச்சிக்குக் கட்டுப்பட்ட நேர்மையான கலைப்பாணியையுடையன. பெரிதும் பயன்படுத்

தப்படாத இயற்கைக் கொள்கையும் (Naturalism) அதில் இடம் பெற்றிருக்கிறது. ஆனால், அது தென்னிந்தியச் சிற்பக்கலையின் தனிச்சிறப்பு மிக்க பண்பாக விளங்குகிறது.

திருக்கோயில்களின் கருவறையைச் சுற்றிலும் சுவர்களிலுள்ள மாடங்களில் பல தெய்வத் திருமேனிகள் சோழர் காலத்தில் அமைக்கப்பட்டுள்ளன. கங்கைகொண்ட சோழிச்சுரத்தின் தெற்குப் பிரகாரத்தில் கலைமகளின் கவின்மிகு சிற்பம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. நல்ல பெருமிதமான தோற்றம்; அமைதி நிலவும் சாந்த வடிவம்; நீண்டுயர்ந்த மணிமகுடம் தலையை அழகுபடுத்துகிறது. வெள்ளைத் தாமரையில் அவள் வீற்றிருக்கும் திருக்கோலம் அன்பர் கண்ணுக்கும் கருத்துக்கும் பெருவிருந்தளிக்கிறது. இது புடைப்புச் சிற்ப முறையில் அமைந்திருப்பதால் பேரழகுடன் பொலிவுறுகிறது.

திருவரங்கத்தில் வேணுகோபாலன் கோயிலின் தெற்குப் பிரகாரத்தில் உள்ள ஒரு மாடக் குழியிலே, கல்லில் கற்பனைப் பெண் ஒருத்தி நிற்கின்ற நிலையில் செதுக்கப்பட்டுள்ளாள். அவள் நிற்கின்ற நேர்த்தி, கையில் கண்ணடி ஏந்தியிருக்கின்ற எழில், அணிந்திருக்கும் அணிகளின் அழகு, இதழ்களிலே தவழும் புன்னகை முதலியன காண்பவருடைய உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவதாகும். இதைப் போன்ற எண்ணற்ற சிற்பங்கள் இக்காலத்திய கலைப்பாணியை உலகிற்கு எடுத்துரைக்கின்றன.

**கட்டடக் கலை :**

இந்தியக் கட்டடக்கலை முறையில், தென்னாட்டுக் கட்டடக்கலை தனிச்சிறப்பு வாய்ந்ததாக விளங்குகிறது. தென்னிந்தியக் கட்டடக் கலைமுறையைத் 'திராவிடக் கட்டடக் கலைமுறை' என்பர் தூப்ராய். தமிழகம் திருக்கோயில்கள் நிறைந்த திருநாடு என்று அறிஞர்களால் போற்றப்படுகிறது. அத்திருக்கோயில்களினுடைய விமானங்களின் அமைப்பும், அழகும் தமிழகத்திற்கேயுரிய புதிய கலைப்பாணியை அடிப்படையாகக் கொண்டுள்ளன. பிரமிட் போன்ற தோற்றத்தோடு வானுற உயர்ந்து விளங்கும் இக்கோபுரங்களைத் 'திராவிடக் கலைப்பாணிக் கோபுரங்கள்' என்று பழைய சிற்ப நூற்களே கூறுகின்றன. கோயில் கட்டடக்கலை பல்லவர் காலத்தில் குகைக்கோயில்களாக அரும்பி, சோழர் காலத்தில் விண்ணைத் தீண்டித் தழுவும் மாபெரும் கோயில்களாக மலர்ச்சியுற்றது. பல்லவர் காலத்திய கோயில்கள் எளிமையின் எழிலும், அடக்கமான அமைப்பு முறையின் அழகும் உடையன. மண்டகப்பட்டு, திருச்சிராப்பள்ளி, மாமல்லபுரம் முதலிய இடங்களிலுள்ள குகைக்கோயில்களும், மாமல்லபுரத்தில் ஒற்றைக் கல்லினால் அமைக்கப்பட்டுள்ள பஞ்சபாண்டவர் தேர்களும் இத்தகையனவாகும். பல்லவர் காலத்திய கட்டுமானக் கோயில்களுள் மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயிலும், காஞ்சியிலுள்ள கைலாசநாதர் கோயிலும், வைகுந்தப் பெருமாள் கோயிலும் கோயில் கட்டடக்கலையின் வளர்ச்சிக்குரிய சான்றுகளாகும்.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் விமானம் எகிப்திய பிரமிட்டுகளைப் போன்று மாபெரும் வடிவமாகப் பெருமிதத் தோற்றத்தோடு காணப்படுகிறது. அவ்விமானம் திண்மையும் உறுதியும் உடையதாய் என்றும் நிலைபெற்று விளங்கும் என்ற நம்பிக்கையூட்டும் வகையில் அமைக்கப்பட்டிருக்கிறது.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலைப் போன்ற, ஆனல் சிறிது அடக்கமான அளவில் இராசேந்திர சோழனல், கங்கைகொண்ட சோழபுரத்தில் கட்டப்பட்டுள்ள 'கங்கைகொண்ட சோழிச்சுரம்' தஞ்சைக் கோயிலின் கலைப்பாணியைப் பெரிதும் பின்பற்றி அமைக்கப்பட்டதாகும். ஓரளவிற்கு அதன் அமைப்புமுறைகளிலும், கட்டிடக்கலைநயத்திலும் நுட்பமான வேறுபாடுகள் காணப்படுகின்றன.

தாராசுரத்திலுள்ள ஐராவதேசுரர் கோயிலும், திருபுவனத்திலுள்ள கம்பேசுவரர் கோயிலும் சோழர் கலைப்பாணியின் பிற்கால இயல்புகளை நன்கு புலப்படுத்துகின்றன. நுணுக்கமான வேலைப்பாடுகள் மிகுதியாக வளர்ந்துள்ளன. கோயில்களின் தலைவாயிலில் விண்ணைமுட்டும் கோபுரங்கள் சிற்பக்கலைக் களஞ்சியமாக விளங்குமாறு கட்டப்பட்டுள்ளன. இத்தகைய கோபுரங்கள் சிதம்பரம், மதுரை, திருவண்ணாமலை முதலிய ஊர்களிலுள்ள கோயில்களில் காணலாம். இவற்றுக்கு ஈடாகக் கலைநயம் வாய்ந்த கோபுரங்கள் இந்தியாவிலேயே இல்லை என்பது திண்ணம்.

**படிமக்கலை :**

தமிழகத்தின் கலைப்பொருள்களில் வெண்கலச் சிலைகள் தலைசிறந்தவை என்றும், தந்நிகரற்றவை என்றும் உலகப் பேறறிஞர்கள் எல்லாரும் ஒருமுகமாகக் கூறிவருகின்றனர். இந்தியாவிலேயே தமிழகத்துச் சிற்பிகள், இத்துறையில் ஈடும் இணையுமற்ற மாபெரும் சாதனைகளாகப் பல அரிய தெய்வத்திருமேனிகளைப் படைத்துள்ளனர். கற்சிற்பங்களைப் போலவே இவையும் மிகத் தொன்மையான கலைமரபினைப் பின்பற்றி அமைக்கப்பட்டுள்ளன. இவ்வெண்கலச் சிலைகள் சோழர் காலத்திலேயே மிகப் பேரளவில் செய்யப்பட்டுள்ளன. அவற்றில் அழுத்தம், பெருமிதம், அடக்கமான நுண்ணியமிக்க வேலைப்பாடு, உயிர்த்துடிப்பு முதலிய பண்புகள் பொருந்தியுள்ளன. அவற்றின் நிலையிலும் இயற்கை எழில் முழுமைத் தன்மையுடையதாய்ப் பொலிவுறுகிறது; அணிகள் அழகாகவும் அளவாகவும் செதுக்கப்பட்டுள்ளன.

பத்திநெறியையும் அதனாலேற்படுவனவாகிய மனவுணர்ச்சிகளையும் இத்திருவுருவங்கள் மிக நயம்பட விளக்குகின்றன. உண்மையான பத்தியில் ஈடுபட்டுள்ள ஓர் அடியாரது உள்ளமும் உடலும் எந்நிலையில் இருக்குமென்பதைத் தமிழகத்து அருளாளர்களான ஞானசம்பந்தர், நாவுக்கரசர், சுந்தரர் முதலியோருடைய உருவச் சிலைகள் தெளிவாக உணர்த்துகின்றன.

இத்தகைய வெண்கலச் சிலைகளிலே ஒப்புயர் வற்றது நடராசப் பெருமானின் திருவுருவம். கலையழகிலும், மெய்ப்பொருள் கருத்திலும் சிறப் புற்று விளங்குவது இத்திருவுருவம். தெய்வீக உண்மையையும், அழகையும், இன்பத்தையும் வடித்தெடுத்த தமிழகக் கலைஞர்கள், நடராச வடிவத்தை ஒரு கலைப்பிழம்பாக உலகிற்கு அளித் துள்ளனர்.

அம்பலவாணரின் அருள்வடிவம், பேரின்மாகிய சிவபோகத்தைக் குறிக்கிறது. மேலும் சிவபெரு மானே படைத்தல், காத்தல், அருளல், மறைத் தல், அழித்தல் எனும் ஐந்து தொழில்களையும் முறையே நான்முகன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் என்னும் ஐவகை மூர்த்தி களின் வழியாகச் செய்துவருகின்றார் என்பதையும் இத்திருவுருவம் உணர்த்துகிறது.

வானநூற்கலை :

தமிழ் ஆண்டுத் தொகுப்புமுறை, வானநூல் ஆராய்ச்சிக்கு நல்ல தூண்டுதல் தரத்தக்கதாயுள் ளது. இன்று இத்துறையில் இரண்டு முறைகள் வழங்குகின்றன. ஒன்று சமயத்தைச் சார்ந்தது; மற்றொன்று வாழ்க்கைத்துறையைச் சார்ந்தது. சமயத்துறை சார்ந்த ஆண்டுத்தொகுப்பு முறை, தெலுங்குப் பஞ்சாங்கம் உட்பட எல்லா ஆசியப் பஞ்சாங்கங்களையும் போலவே மதிமுறை சார்ந் தது. இதுபற்றித் தனிப்படக் குறிப்பிட எதுவு மில்லை. ஆனால், சமயஞ் சாராத ஆண்டுத் தொகுப்பு ஞாயிற்றுச் சார்பாவதுமட்டுமன்று; முழுநிறை முறையிலேயே ஞாயிற்று வழியாய் அமைவது. அது மேனாட்டு முறைபோல, மதிய முறைப்படி முதலில் கணிக்கப்பட்ட மாதத்தை ஞாயிற்று முறைப்படி கணித்த ஆண்டுடன் பிற் காலத்தில் கொண்டு ஒட்டவைத்த முறையன்று. சற்றும் மட்டுமழுப்பலில்லாமல் அது வியக்கத் தக்கவகையில் முளைத்த ஞாயிற்றுமுறையாயுள் ளது. ஏனெனில் அது ஒரு மாதத்தை இத்தனை முழுநாட்கள் என்றுகூட வகுத்தமைப்பதில்லை.

வான் மண்டலம், பன்னிரண்டு மனையகங் களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஞாயிறு ஒரு புது மனையகத்தில் புகும்நேரம் காலையாயினும்சரி, நண் பகலாயினும் சரி, இரவாயினும்சரி, அந்தக் கணத் திலேயே மாதம் பிறக்கிறது. நாட்களும் ஞாயிற் றெழுச்சியுடன் தொடங்குகிறது. ஆனால், ஞாயிற் றெழுச்சி என்பதும் இந்தியாவில் ஏதேனும் ஒரு பகுதியில் ஞாயிறு தோன்றும் வேளையன்று. உலக நடுநேர் கோட்டில் (Equator), நடுநிரைக் கோடு (Meridian) அக்கோட்டுடன் சந்திக் கும் ஒரு குறிப்பிட்ட இலக்கில் ஞாயிறெழும் வேளையாகவே அது அமைந்துள்ளது. தமிழர் தமக் கென்று வகுத்த இந்த நடுநிரைக்கோடு தமிழர் பண்டை வானாராய்ச்சி நிலையம் அமைந்திருந்த இடத்துக்கு நேராயிருந்ததாக அறிகிறோம்.

மருத்துவக்கலை :

மருத்துவக்கலையிலும் இந்தியா தொன்று தொட்டே சிறப்புற்று விளங்கி வருகிறது. ஆயுர் வேதம், சித்த மருத்துவம் எனும் இருவகை மரபு களையுடையது இந்திய மருத்துவம். இவற்றில் சித்த மருத்துவம் தமிழகத்திற்கேயுரிய தனிப் பெரும் செல்வமாகும். சித்தத்தைச் சிவன்பால் வைத்த சித்தர்கள் பலர் வாழையடி வாழையாகத் தமிழகத்தில் தோன்றியுள்ளனர். அவர்கள் சின் னாள் பல்பிணியுடைய மக்கள், மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்குரிய வழிவகுத்துக் கொடுத் துள்ளனர். இறையின்பத்தில் திளைப்பதற்கு மனித உடல் நோயற்றதாக இருக்கவேண்டும் என்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தனர் என்பதனை,

'உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண்டான்
என்று
உடம்பினை யானிருந் தோம்புகின்றேனே.'
—திருமந்திரம், 725

என்னும் திருமந்திரத்தால் அறிகிறோம்.

**தெய்வங்கள் :**

''இந்திய சமயத்தை, நாம் திராவிட சமயம் என்று சொல்லுவதே மிகவும் பொருத்தமாகும். ஆரியப் படையெடுப்பாளர்களின் கருத்துக் களினால், அச்சமயம் ஓரளவிற்கு மாற்றமும் திருத் தமும் பெற்றிருக்கலாம். இந்து சமயத்தின் மாண்புமிக்க தெய்வங்களான முருகன், சிவன், கண்ணன், கொற்றவை திராவிட மக்களின் தெய் வங்கள் என்பதில் கருத்து வேற்றுமைக்கே இடமில்லை. மேலும், இந்துசமயத்தின் சிறப்பு மிக்க கோட்பாடுகள் சிலவும், ஊழைப்பற்றிய கருத்துக்களும், பத்திநெறியும் வேதங்களில் இடம் பெறவில்லை. எனவே, நன்கு முதிர்ச்சியடைந் துள்ள இந்திய சமயத்தின் முதன்மையான பண்பு கள் அனைத்தும், தனிப்பட்ட ஓரிடத்திற்கு - நாட்டிற்குரியதே ஒழிய, தனிப்பட்ட ஓரினத்திற்கு உரியதல்ல என்பது தெளிவாகிறது. அவை, பாரசிக நாட்டின் சமயத்திலோ, கிரேக்க நாட்டுச் சமயத்திலோ, பிற ஆரிய மக்கள் வாழும் நாடு களிலுள்ள சமயங்களிலோ காணப்படவில்லை.

தமிழகம் இந்துசமயத்திற்கு வழங்கியுள்ள மாண்புமிக்க பரிசு முழு முதற் பொருளாகிய சிவ பெருமானைப்பற்றிய கருத்துக்களாகும். இருக்கு வேதத்தில் அழித்தற் கடவுளாக விளங்கும் உருத் திரன் வேறு. அன்பின் ஊற்றாய், அழகின் உறை விடமாய், அறிவுக் களஞ்சியமாய், அருளே வடி வாய் விளங்கும் சைவசமயத்தின் சிவன் வேறு. ஆரியரும் திராவிடர்களும் காலப்போக்கில் கொண்ட நெருங்கிய தொடர்பின் விளைவாகவும், நாகரிகப் பண்பாட்டில் உண்டான கலப்பின் காரணமாகவும் தோன்றியதே 'பரமசிவம்' எனும் பெருந்தெய்வமாகும். ஆரிய திராவிடப் பண்பாட்டின் கூறுகள் பலதுறைகளில் கலந்து, ஒரு புதிய கலவை நாகரிகத்தை உருவாக்கியதைப் போன்றே, சமயத்துறையிலும் புதியதொரு 'கலவைச்சமயம்' உருவாக்கப்பட்டது. அச் சமயத்தை, இன்று 'இந்துசமயம்' என்ற பெயரால் உலகம் போற்றுகிறது. இத்தகைய நாகரிகக்

கலப்பு உண்டான காலத்தில், ஆரியருடைய 'உருத்திரனின்' பண்புகளையும், தமிழருடைய 'சிவபெருமானின்' பண்புகளையும் ஒன்ருகச் சேர்த்து புதிய வடிவில் தலைசிறந்த பண்புகளைக் கொண்ட ஓர் ஒப்பற்ற 'பரம்பொருளை'ப் பண்டை இந்தியாவின் சான்ருேர்கள் படைத் தளித்தனர்.

இவ்வாறே, தமிழர்களின் அழகுக் கடவுளாகிய முருகனுடைய பண்புகளோடு, ஆரியர்களுடைய போர்க்கடவுளாகிய கார்த்திகேயனின் பண்புகளை இணைத்து, 'சுப்பிரமணியன்' எனும் இந்துசமயத் தெய்வத்தை மூதறிஞர்கள் படைத்துள்ளனர். முருகனின் மனைவியாகிய வள்ளியும், கார்த்தி கேயனின் துணைவியாகிய தெய்வயானையும், சுப் பிரமணியக் கடவுளின் காதற்கிழத்தியும் பட்டத் தரசியுமாகக் கொள்ளப்பட்டனர்.

'திருமால்' கரியநிறமுடையவராகவே போற் றப்படுகிருர். கிருஷ்ணன் எனும் சொல்லிற்குப் பொருள் கருமை என்பதாகும். இருக்கு வேதத் தில் கிருஷ்ணன்' என்ற சொல் கருமை, மேகம் எனும் பொருளிலேயே வழங்கப்பட்டுள்ளது. பிற் காலத்தில் கருநிறமுடைய கடவுளைக் குறிப்பிடு வதற்கு, அச்சொல் பயன்படுத்தப்பட்டிருத்தல் வேண்டும். வேதங்களில் முழுமுதற் பொருளாகப் போற்றப்பட்ட நாராயணனும், பண்டைத் தமிழ் மக்களால் 'மாயோன்' என்று போற்றி வழி படப்பட்ட கண்ணனும் ஒரே தெய்வமாகக் கருதப்பட்ட காலத்தில் தோன்றியதே 'திருமால்' எனப்படும் காத்தல் கடவுளாகும்.

கண்ணனின் காதலியாக நப்பின்னை எனும் நங்கை, பழந்தமிழ் இலக்கியங்களில் சிறப்பாகப் பேசப்படுகிருள். கண்ணனும் நப்பின்னையும் இணை பிரியாத இலட்சியக் காதலர்களாகத் தமிழ் மக் களால் போற்றப்பட்டுள்ளனர். பிற்காலத்தில் ஆழ்வார்கள் நப்பின்னையைத் திருமாலின் சத்தி யாகவே கொண்டு, தொழுது போற்றியுள்ளனர். கண்ணன் நப்பின்னையோடு கூடி, ஆடிப்பாடி மகிழ்ந்த இன்பக் களியாட்டங்களைக் 'குரவைக் கூத்து' என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது.

''மாயவன்றன் முன்னினெடும் வரிவளைக்கைப்
[ பின்னையொடும்
கோவலர்தஞ் சிறுமியர்கள் குழற்கோதை
[ புறஞ்சோர''

தமிழன் கண்ட இலட்சியக் காதலர்களாகிய கண்ணன்-நப்பின்னை காதல் விளையாட்டுக்களை, கி.பி. பத்தாம் நூற்ருண்டிற்குப் பிறகு வட இந்தியாவில் இயற்றப்பட்ட பாகவத புராணமும், அரிவம்சமும் கண்ணன்—இராதைக் காதல் களியாட்டமாகத் திரித்துக் கூறுகின்றன. ஆயர் பாடியில் எருமன்றத்தில் மாயவன் நப்பின்னை யோடு ஆடிப்பாடி மகிழ்ந்த இன்ப விளையாட்டை, வடநாட்டுச் சூழலுக்கேற்ப பிருந்தாவனத்தில் 'கண்ணகி—இராதையும்' கோபியரோடு சேர்ந்து விளையாடிய 'இராசக்கிரீடையாக' அவர்கள் சித் திரித்துள்ளனர். இதனுல், தமிழகத்திலிருந்து வடக்குநோக்கி வீசிய 'பத்திநெறி' எனும் தென் றல், பண்டைத் தமிழருடைய காதற்கடவுள் பற்றிய பழங்கதையாகிய நறுமணத்தை வடநாட் டிற்குக் கொண்டு சென்று பரப்பியமை புலனு கிறது.

இவ்விருபெரும் கடவுளர்களும் ஒரே முழுமுதற் பொருளின் இருவேறு வடிவங்கள் என்பது தொன்றுதொட்டுத் தமிழரிடை நிலவிவரும் நம் பிக்கையாகும். திருமாலும் சிவனும் ஒரே தெய் வத்தின் இருவேறு இடவேறுபாடுகளாகும். திரு மால் வடபுலத்துக்கும் முல்லைநிலத்திற்கும், சிவன் தென் புலத்துக்கும் மருத நிலத்திற்கும் உரியவ ராகக் கூடும். ஆனுல், மேற்குறிப்பிட்டபடி இரண்டும் வேதத் தெய்வமல்ல.

வட இந்தியாவில், சத்தி வழிபாடு பௌத்த சமயத்தில் 'தரை' எனும் பெண்தெய்வ வழி பாடு தோன்றியபிறகு, அதற்கு எதிராகப் பெண் தெய்வ வழிபாடு இந்துசமயத்தில் செல்வாக்குப் பெற்றது. இருக்குவேதத்தில் அன்னை வழிபாட் டைப் பற்றிய குறிப்புக்கள் ஒன்றும் கிடையாது. உருத்திரனைப் பற்றிக் குறிப்பிடுகிறபொழுது 'அம் பகம்' எனும் சொல்லை இருக்குவேதம் பயன் படுத்துகிறது. ஆனுல், பிற்காலத்திய அன்னை வழிபாட்டோடு அஃது எத்தகைய தொடர்பும் கொண்டிருந்ததாகத் தெரியவில்லை. யஜுர் வேதத்தில்தான் 'அம்பிகை' பற்றிய குறிப்பு காணப்படுகிறது. தைத்திரீய ஆரணியகத்தில் முதன் முதலாக உருத்திரன், உமை எனப்படும் அம்பிகையின் கணவராகக் குறிப்பிடப்படுகிருர்.

ஆனுல், அன்னை வழிபாடு இந்தியாவில் சிந்து வெளி நாகரிக காலத்திலேயே சிறப்புற்று விளங் கியதை மொகஞ்சதாரோ, ஹாரப்பா முதலிய இடங்களில் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ள முத்திரை கள் தெரிவிக்கின்றன. 'உமா' எனும் பெயரைப் பற்றி ஆராய்ந்த வடமொழி அறிஞர்கள், 'வித் தியா' என்னும் பொருளிலேயே அச்சொல் யஜுர் வேதத்திலும், உபநிடதங்களிலும் கையாளப்பட் டதாகக் கூறுகின்றனர். எனவே, 'அம்மா' எனும் திராவிட மொழிச் சொல்லின் சமஸ்கிருத ஆக்க மாகவே 'உமா' எனும் வடமொழிப் பெயர் அமைந்திருக்கக்கூடும்.

திராவிட மக்களிடத்தில் முதலில் தோன்றியது அன்னை வழிபாடு. வீரத்திற்கும் வெற்றிக்கும், இனவிருத்திக்கும் செழிப்பிற்கும் காரணம் சத் தியே என்ற நம்பிக்கை பண்டைத்தமிழ் மக் களிடத்து இருந்துவந்ததைப் பழந்தமிழ் இலக் கியங்களால் அறிகிரேம். தமிழ் மக்கள் அன்னை யினைக் காடுகிழாள், காடுகெழு செல்வி, கொற் றவை, காளி முதலிய பல பெயர்களால் குறிப் பிடுவர். சங்க காலத்தில் தாய்க்கடவுள் வெற்றிக் குரிய வீர தெய்வமாகவே கருதப்பட்டாள். எனவே 'கொற்றவை' எனும் பெயரால் அவளைக் குறிப்பிட்டனர். போருக்குச் செல்லும்போது படைவீரர் வெற்றித் திருவாகிய அன்னையை வழி பட்டுச் செல்லுவர்.

காடுகிழாள், மக்கள் மிகத் தாழ்ந்த நிலையில் வேடர்களாக அலைந்து கொண்டிருந்த காலத்தில் உண்டாயிற்று. காடுகிழாள் பாலைத்தெய்வம். இவ்வழிபாடு உயிர்ப்பலி (விலங்கு, மனிதர்)யோடு நடைபெற்றது. ஆனால், சிலப்பதிகார காலத்தில் இவ்வழிபாடு கொடுமை நிறைந்ததாகத் தோன்ற வில்லை. தமிழ் மக்களின் அறிவு பண்பட்ட காலத் தில்; அன்னைத் தெய்வம் அன்புமயமான தெய்வ மாகவும், அருள் வடிவமான தெய்வமாகவும் கருதப்பட்டாள். காடுகிழாள், உமை என்னும் அருட்சத்தியாகக் கொள்ளப்பட்டாள். முருகக் கடவுளைக் ''கொற்றவை சிறுவன்'' என்று திருமுரு காற்றுப்படை குறிப்பிடுகிறது.

### பக்திநெறி :

இந்துசமய வழிபாட்டு நெறியில் இருவகை முறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. தீயினை வளர்த்து, அதன்மூலம் தெய்வ வழிபாட்டை நடத்தும் வேள்வி நெறி, வேதகாலம் முதல் சிறப்புமிக்க ஒன்றாகப் போற்றப்பட்டு வருகிறது. இதனை நாம் 'வேள்விநெறி' எனலாம். மற் றொன்று பூவினைக்கொண்டு இறைவனுடைய பொன்னடிகளைப் போற்றி வழிபடுவதாகும். இதனை, 'பூசெய் நெறி' என்பர். பூவினைக்கொண்டு இறைவழிபாடு செய்யும் புனிதநெறி வேதகால சமயத்தில் இடம் பெறவே இல்லை. வேள்வி நெறியை 'நிகமம்' (Nigama) என்னும் வட மொழிப் பெயராலும், பூசெய் நெறியை 'ஆகமம்' (Agama) என்னும் வடமொழிப் பெயராலும் சான்றோர்கள் அழைத்து வருகின்றனர். ஆரியரும் ஆரியரல்லாதாரும் ஒன்றுபட்ட காலத் தில் அவர்களுடைய வழிபாட்டு நெறிகளும் கலப் புற்றன. ஆகமநெறியிலும் வேள்வி இடம்பெற லாயிற்று. ஆயினும், தென்னாட்டுக் கோயில்களில் பேரளவிற்கு இன்றும் 'பூசெய்' நெறியாகிய ஆகம வழிபாட்டு முறையே பின்பற்றப்பட்டு வருகிறது.

தமிழில் இறைவழிபாட்டைக் குறிக்கும் 'பூசை' என்னும் சொல், வடமொழியில் கடன்வாங்கப் பட்டபொழுது 'பூஜா' எனத் திரிந்தது. பூசை எனும் சொல், பூ, செய் எனும் இரண்டு சொற் களின் சேர்க்கையாகும். பூவினைக் கொண்டு செய் யப்படும் வழிபாடு (புஷ்ப கருமம்) என்பது இச் சொல்லிற்குப் பொருள் என்ற மொழியிலறிஞர் கள் கூறுவர்.

பூசெய் வழிபாடு ஆகமநெறியில் முதன்மை யான இடத்தைப் பெற்றிருக்கிறது. இந்நெறியில் தியானமும், உருவவழிபாடும் சிறப்பிடம் பெற் றுள்ளன. உருவ வழிபாடு என்பது வேதகால சமயத்தில் இடம் பெறவில்லை. பிற்காலத்தில் ஆரியரல்லாத மக்களுடைய செல்வாக்கின் காரண மாகவே அது பிராமண சமயத்தில் இடம்பெற்ற தாகத் தெரிகிறது.

தமிழகத்தில் தோன்றிய ஆழ்வார்களும், நாயன்மார்களும் பத்தி நெறியைப் போற்றி வளர்த்த சான்றோர்களாவர். 'வேதம் ஓதுவதனால் பயனில்லை; சாத்திரங்களின் உட்பொருளைப் பிறரிடம் கேட்டறிவதனால் உண்டாகும் பயன் ஒன்றும் இல்லை. பல அரிய அறநூல்களை நாளும் ஓயாது பயில்வதனாலும் பயன் விளையாது. வேதத் தின் ஆறு அங்கங்களைக் கற்று அதன் பொருளினை உணர்வதனால் அடையக்கூடியது ஒன்றுமில்லை. ஈசனை உள்ளத்தால் நினைந்து, மனத்தினால் சிந் தித்து, வாயினால் வாழ்த்த வல்லார்க்கே வீடுபேறு கிடைக்கும்' என்று திருநாவுக்கரசர் பத்திநெறி யின் அடிப்படைப் பண்பினை எடுத்தியம்பியுள் ளார். இவ்வழிபாட்டு நெறி தமிழர்கள் உலகிற்கு அளித்த சிறந்ததொரு கடவுள் நெறியாகும்.

தமிழகத்தில் தோன்றிய பத்தி இயக்கம் வட வேங்கடத்தினைக் கடந்து, வட இந்தியாவின், பல்வேறு பகுதிகளில் சென்று பரவியது. இதனை

> ''பத்திநெறி தமிழகத்தில் தோன்றியது;
> மராட்டியத்தில் வளர்ந்தது;
> குஜராத்தில் மலர்ந்தது;
> இரசபுதனத்தில் இருளகற்றியது;
> வங்காளத்தில் வான்புகழ் பெற்றது.''

என்று வடமொழியிலுள்ள பௌஷியபுராணம் போற்றியுள்ளமை இங்குக் கருதத்தக்கதாகும்.

எனவே, பிராமண சமயத்தை இந்து சமய மாக மாற்றிய பத்தி நெறி, இந்திய நாகரிகத்தின் மலர்ச்சிக்குத் தென்னிந்தியா அளித்த முதன்மை யான பரிசு எனலாம்.

### மெய்யறிவு :

இந்தியத் தத்துவ ஞானத்தை வளர்த்து வளம் பெறச் செய்த பெரியார்களுள் தென்னாட்டிலே தோன்றியவர்கள் முக்கியமான இடத்தைப் பெற் றுள்ளனர். அவர்களுடைய தொண்டு மிகப் பரந்துபட்டதாகவும், அதே சமயத்தில் மிக ஆழ மாக வேரூன்றியதாகவும் உள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. பிரமசூத்திரத்திற்கு மாபெரும் உரைவிளக்கம் எழுதி, 'அத்வைதம்' எனும் வேதாந்தத்தை, சிறப்புமிக்க தத்துவ நெறியாக விளங்குமாறு செய்த சங்கரர் பண்டைத் தமிழகத் தில் தோன்றியவர் என்பது நாடறிந்த உண்மை. இன்றைக்கு இந்தியச் சிந்தனையில் வேதாந்தம் அறிவின் ஒளிவிளக்காய் விளங்குவதற்குக் காரண மாக இருப்பவர் சங்கரரேயாவர்.

காஞ்சிக்கு அருகிலுள்ள ஸ்ரீபெரும்புதூரில் தோன்றிய இராமானுசர், வைணவ சமயத்திற்கு 'விசிஷ்டாத்துவைதம்' எனும் தத்துவ அடிப் படையை அமைத்துத் தந்தார். தமிழகத்தில் ஆழ்வார்களின் அருண்மொழிகளாகிய திவ்வியப் பாசுரங்களின் வாயிலாக உருவான, வைணவ சித்தாந்தத்தை முறைப்படுத்திக் கொடுத்ததன் மூலம் இராமானுசர் இந்தியத் தத்துவ வளர்ச்சிக்கு அரும்பெரும் தொண்டாற்றியுள்ளார்.

தமிழகத்திற்குத் தத்துவ உலகில் பொன்றாப் புகழைத் தேடிக் கொடுத்துள்ள 'சைவசித்தாந் தம்' எனப்படும் தத்துவ நெறியை முதன் முதலாக அறிவியல் முறைப்படி 12 சூத்திரங் களாக வகுத்துக் கொடுத்தவர் மெய்கண்டார்

என்ற தமிழ்ச்சான்றோராவர். இவ்வரிய தத்துவம் இந்திய மக்களின் சிந்தனை முறையின் தெளிவிற்கு ஓர் உறைகல்லாகும்.

இத்தமிழகத்தில்தான் மூன்று உலகப் பெரும் சமயங்களாகிய யூத சமயமும், கிறித்துவமும், இசுலாமும் இந்தியாவில் முதன் முதலாக வேரூன்றுவதற்கு ஆதரவான இடத்தைப் பெற்று, மதிப்புற்று இந்தியப் பெருநாட்டில் பரவின.

**வாணிக நிலையங்கள் :**

தென்னாட்டு வாணிக அமைப்புக்களும் நிலையங்களும் இந்திய நாகரிக வளர்ச்சிக்கு ஆற்றியுள்ள பணிகள் இங்குக் குறிப்பிடத்தக்கன. வட இந்தியாவின் பொருளாதாரமும் வாணிகமும், உள்நாட்டு வாணிக வழிகளைச் சார்ந்திருந்தன; வாணிகச்சாத்துக்கள் உள்நாட்டு வாணிகத்தையே போற்றி வளர்த்தன. ஆனால், தென்னாட்டில் 'வாணிகம்' என்பது பெரும்பாலும் ''திரைகடலோடித் திரவியம் தேடும்' கடல் வாணிகமாகவே சிறப்புற்று விளங்கியது. ஆகவே, கடல் வாணிகத்தை நடத்துவதற்குத் தென்னாட்டில் பல அமைப்புக்கள் தோன்றின. அவை நானாதேச திசையாயிரத்தைஞ்ஞூற்றுவர், மணிக்கிராமத்தார், நகரத்தார், வளஞ்சியர், அஞ்சுவண்ணத்தார் எனப்படும் வாணிகக் குழுக்களாகும். அவ்வை கடல் கடந்த நாடுகளில் சென்று வாணிகம் செய்வதற்கு இந்திய மக்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தன.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் மலேசியாவில் தகோபா என்னும் இடத்தில், மணிக்கிராமம் என்ற தமிழ்நாட்டு வணிகர் சங்கம் ஒன்று இருந்து வந்தமை ஒரு கல்வெட்டால் தெரிகிறது. சீகாழிக்கு அருகில் உள்ள நாங்கூரைச் சேர்ந்த வாணிகன் ஒருவன், அவனி நாரணன் என்ற சிறப்புப் பெயரையுடைய மூன்றும் நந்திவர்மன் ஆட்சிக்காலத்தில் (கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில்) மலேயாவின் பெராக்கு மாவட்டத்திலுள்ள இவ்வூரில் குளம் ஒன்றை வெட்டி, அதன் கரையில் கல்வெட்டொன்றைத் தமிழில் பொறித்துள்ளான்.

**கடற்பேரரசு :**

இந்திய வரலாற்றில், வேறெந்தப் பேரரசும் கனவில்கூடக் கருதாத கடல்கடந்த பேரரசினைப் பிற்காலச் சோழப் பேரரசர்கள் நிறுவினர். இலங்கையும் இலட்சத்தீவுகளும், அந்தமான் நிக்கோபார் தீவுகளும் தென்கிழக்காசிய நாடுகளுள் பெரும்பகுதியும் சோழப் பேரரசரின் ஆட்சிக்குட்பட்டிருந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கது. இத்தகைய மிகப் பெரிய கடற் பேரரசை நிறுவுவதற்கேற்ற ஆற்றல்மிக்க கடற்படையைச் சோழப் பேரரசர்கள் பெற்றிருந்ததைப் போன்று, வேறெந்த இந்தியப் பேரரசும் பெற்றிருந்ததாகத் தெரியவில்லை. இந்திய நாகரிகம் கடல்கடந்த நாடுகளில் பரவுவதற்கு இப்பேரரசு பேருதவி புரிந்தது. மேலும், இந்தியாவின் அரசியல் ஆதிக்கத்தை அந்நாடுகளில் நிலைநாட்டவும் வழி கோலியது.

இன்றைய இந்திய நாகரிகத்தின் சிறப்புமிக்க பல்வேறு பண்புகளை உருவாக்கி உதவியது தமிழ்ப் பண்பாடு. ஆனால், அதனுடைய அரும்பெரும் தொண்டினைப் பன்னெடுங்காலமாக அறிஞர்கள் புறக்கணித்தே வந்துள்ளனர். ஓர் அழகிய மாளிகையின் அடிப்படை, வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு எவ்வாறு தோன்றாதோ அதைப்போன்று இந்திய நாகரிகத்தின் அடிப்படையாக அமைந்துள்ள தமிழ்ப் பண்பாடுகள் வெளிப்படாது மறைந்து கிடக்கிறது. இந்நாட்டில் ஆரியர் படையெடுத்து வந்தநாள் முதல், ஆங்கிலேயர் ஆண்டு அகன்றுபோன இந்நாள்வரை, அந்த அடிப்படையின்மீது எழுப்பப்பட்டுள்ள மேற்கோப்புக் கட்டடங்களின் ஒவ்வொரு பகுதியையும் விடாமல் யாவரும் கண்டு, களிப்படைந்து வருகின்றனர். ஆனால், அத்தகைய நாகரிகத்தின் திருக்கோயிலைத் தாங்கி நிற்கும் அடிப்படை யாதென்பதை ஆராய்ந்தறிவார் மிகச் சிலராகவே உள்ளனர். அம்மாபெரும் மாளிகையைத் தாங்கி நிற்கும் தமிழ்ப் பண்பாடெனும் அடிப்படை, காலமெனும் மணலால் மூடப்பட்டு ஆழப் புதைந்து கிடக்கிறது.



தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு.

தமிழ்த் துறையினர்
சென்னை அரசினர் கலைக் கல்லூரி




மனித நாகரிக வளர்ச்சியினைக் குறிக்கையில், பழைய கற்காலம், புதிய கற்காலம், உலோக காலம் எனப் பகுத்துக் கூறுவர் அறிஞர். அவ்வக் கால நிலைகளுக்கேற்ப மனிதன் வளர்ந்து வந்தான். குகைகளில் வாழ்ந்த மனிதன் படிப்படியாக வளர்ந்து நல்ல வீடுகளை அமைத்து வாழக் கற்றுக் கொண்டான். இத்தகைய வளர்ச்சியில் அமைந்த மாற்றத்தினை எய்தப் பல நூற்றாண்டுகள் ஆயின. மிகப் பழங்காலத்திலேயே தமிழக மக்கள் உலோக கால வாழ்வினை எய்தி மேம்பட வாழ்ந்தனர் என்பதனைச் சங்க இலக்கியங்கள் கூறும். ஆயின், இவ்வளவு மாறுதல்களோடு பழைய மரபுகளையும், தமிழ் மக்கள் போற்றி வந்துள்ளனர் என்பது அவர்கள் வாழ்வு முறைகளினின்றும் வெளிப்படுகின்றது.

### பழைமையின் சுவடு :

அவர்கள் குன்று சார்ந்த பகுதிகளில் வாழ்ந்த போது பயன்படுத்திய சில பொருட்கள் மருத நில நாகரிக வாழ்விலும் இயைந்துவிட்டன. குன்றில் ஒளியேற்ற மலையிடத்தில் ஆழ்ந்து அகழ்ந்த குழியில் கொழுப்புப் பொருட்களையிட்டுப் பெருந்திரிகளைக் கொண்டு விளக்கமைத்தனர். அவ்வாறு அமைத்த கல்லகலை முல்லை நில வாழ்க்கைக்குச் சென்றபோதும் அகழ்ந்தெடுத்துச் செல்லத் தலைப்பட்டனர். பிறகு மண்ணால் செய்து சுட்ட அகல் வந்த பிறகும் மக்கள் அப்பழைமையைக் கைவிடாராய்ப் பழைய கல் அகல் மீது மண் அகலை வைத்து ஏற்றினர். அதன் அடையாளமாகவே திருமணக் காலங்களில் உரல் மீது அகலை வைத்து ஏற்றும் வழக்கம் எழுந்தது போலும்! மற்றும் பாறைப் பகுதியில் தினை போன்ற தானியங்களைக் குற்றுதற்குப் பயன்படுத்திய கற்குழி, பிறகு எல்லா நிலங்களிலும் கல் உரலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது போன்றே மனிதன் தான் வாழும் இடங்களையும், பழைமையின் சார்போடு வளர்த்துக் கொண்டான்.

### மன்றம் :

குறிஞ்சி நில வாழ்வின் அடுத்த நிலையாக முல்லை நில வாழ்வு அமைந்திருந்தது. முல்லை நிலத்து வாழ்ந்தவர்கள் மரங்களின் நிழலில் கூட்டமாகத் தங்கிய காலமும் உண்டு. அந்த மர நிழலே அவர்கள் இல்லமாகப் பயன்பட்டிருக்க வேண்டும். வாகை மன்றம்[1], வெள்ளில் மன்றம்[2] போன்ற மன்றங்கள் இக்கருத்தினை வலியுறுத்துகின்றன. வெள்ளிடை மன்றம்[3] விருந்து அயரும் இடமாக இருந்தது என மணிமேகலை குறிக்கின்றது. கள்வர்களுக்கு அச்சந்தரும் மன்றமாக இவ்வெள்ளிடை மன்றம் இருந்ததெனச் சிலம்பு[4] கூறுகின்றது. மற்றும் இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம், பாவை மன்றம் எனப் பல மன்றங்கள் கூறப்பெறுகின்றன.[5] இதில் பாவைமன்றம் தோற்பாவைகளைக் கொண்டு நிகழ்த்தும் கூத்து மன்றமாகவும் இருந்திருக்கலாம் என எண்ணத்

தோன்றுகிறது. சிலம்பில், இப்பாவை மன்றம்,[6] குற்றமிழைப்போரைக் கண்டால் அழுகின்ற பாவை நிறுத்தப்பட்டுள்ள மன்றம் எனக் குறிக்கப்படுகின்றது. பிற்காலத்தில் மன்றங்களின் அடிச்சுவட்டில், பொது அவைகள் தோன்றின. கோயில்களும் எழுந்தன.

**மண்டபம் :**

இவ்வாறே, தமிழரின் குறிஞ்சி நில வாழ்வில் பயன்பட்ட குகை போன்ற அமைப்பினை ஏனைய நில வாழ்க்கையிலும் செயற்கையாகக் கருங்கற்களைக் கொண்டு அவர்கள் அமைத்துக் கொண்டனர். அவையே பிற்காலத்தில் கோயில் மண்டபங்களுக்கு அடிப்படையாக அமைந்தன எனலாம். பட்டிமன்றம் நடைபெற்ற இடம் பட்டி மண்டபம்[7] எனப்பட்டது. பளிக்கறை மண்டபம்[8] மணிமேகலையில் குறிக்கப்படுகின்றது. பொழுதுபோக்கிற்காகப் பயன்பட்ட விளையாட்டரங்குகளும், நாடகம், நடனம் போன்ற நிகழ்ச்சிகள் நடத்தும் கலையரங்குகளும் இருந்தன. நாடக அரங்கினைக் குறித்துச் சிலம்பு கூறும் செய்திகள் ஈண்டு கருதத்தக்கன.[9]

**மாடம் :**

முல்லை நில வாழ்க்கையில் மக்கள் விலங்கினின்றும் தங்களைக் காத்துக்கொள்ள மரத்தின்மீது பரண்[10] அமைத்து வாழ்ந்தனர். இதுவே விளை புலங்களைக் காத்தற்கமைந்த பரண்களாகத் திகழ்ந்து பின்னர்ப் பலநில மாடங்களாக வளர்ந்திருக்க வேண்டும்.[11]

**சிறு குடில்கள் :**

இல்லங்கள், மனை, அகம், நகர், இருக்கை, குடில், குடி, இருப்பு எனப் பல பெயர்களால் வழங்கப்பட்டன. முல்லை நிலத்தில் வரகுதாட்கள் வேய்ந்த குடிசைகள் இருந்தன.[12]

பாலைநிலத்து ஈந்தின் ஓலையால் வேயப்பட்ட குடிசைகள் இருந்தன.[13] நெய்தல் நிலத்தில் தாழை சூழ்ந்த குடிசைகள் இருந்தன. அவை மீன், வலை முதலியவற்றை உயர்த்துவதற்கேற்ற முறையில் நடுவில் இடைவெளிவிட்டு வட்டமாக அமைக்கப்பட்டிருந்தன.[14] மருத நிலத்தில் வைக்கோலால் வேயப்பட்ட ஓலைக் குடிசைகள் இருந்தன.[15] வேழக்கோலினை நிரல்பட நிறுத்தி வெள்ளிய மரக்கொம்புகளை இடையிடையே கலந்து தாழை நாரால் கட்டித் தருப்பைப் புல்லால் வேயப்பட்ட குறிய இறப்பையுடைய குடிசை எனப் பெரும்பாணாற்றுப்படை ஒரு குடிசையின் அமைப்பை நன்கு விளக்குகிறது.

''தாழை முடித்துத் தருப்பை வேய்ந்த
குறியிறைக் குரம்பை. . . .''

—பெரும்பாண் 263-65.

**பேரில்லங்கள் :**

பல பகுதிகளோடு பேரில்லங்கள் பலவும் இருந்தன. வீட்டின் பல பக்கங்களிலும் வளைவாக அமைக்கப்பட்ட திண்ணைகள் படிகளுடன் கூடி உயர்ந்து விளங்கின.

''குறுந்தொடை நெடும்படிக்கால்
கொடுந்திண்ணைப் பஃறகைப்பிற்
புழைவாயிற் போகிடைகழி
மழைதோயு முயர்மாடத்து''

—ப. பாலை 141-145

திண்ணைகளுக்குப் படிகள் இருந்தன என்பதிலிருந்து அத்திண்ணைகளும், வீடுகளும், வெள்ளத்தால் கேடுறுவண்ணம் மிக உயர்ந்தனவாய் அமைக்கப்பட்டிருந்தனவென்றும், திண்ணைகள் வளைந்து சென்றன என்பதிலிருந்து வீடுகள் நாற்புறமும் இடைவெளி விட்டுக் கட்டப்பட்டிருந்தன என்றும் தெரிய வருகின்றது. இல்லங்களின் வாயில்கள்[16] உயர்ந்தனவாக அமைந்திருந்தன. கதவுகள் பல பலகைகளை இணைத்து வன்மையாகவும்[17], வேலைப்பாடுடனும்[18] அமைக்கப்பட்டிருந்தன. வீட்டின் தூண்கள் பருத்த நிலைகளின் மேல் அமைக்கப்பட்டு நெடியனவாக இருந்தன.[19] சில தூண்கள் அழகுக்காக வளைந்தனவாயும் இருந்திருக்கின்றன.[20] இல்லங்களில் காற்றோட்டத்திற்காக மான் கண்ணினைப் போன்ற குறுங்கண் சாளரங்கள் அமைக்கப்பட்டிருந்தன[21]. அவை மணிகளால் அணி செய்யப்பட்டிருந்தன[22]. பல்வேறு பருவ நிலைகளில் இருத்தற்கேற்ற வகையில் பல மாடங்கள் அமைந்த பேரில்லங்கள் இருந்தன என்னும் உண்மை சிலப்பதிகாரத்தில் இடம் பெறுகின்றது. கூடம், இடைகழி, அட்டில்,[23] பள்ளி, அணிகலவறை போன்ற பல பகுதிகளோடு பேரில்லங்கள் அமைந்திருந்தன.

''வகைபெற எழுந்து வானம் மூழ்கிச்
சில் காற் றிசைக்கும் பல் புழை நல்லில்''

மதுரை—357-58.

''வியன்கல இருக்கையும்''

—சிலம்பு— இந்திர — 7.

இல்லங்களின் முன்பாகப் பந்தல்கள் இருந்தன. பொருட்களைத் தொகுத்து வைக்கும் கொட்டில்கள் இருந்தன. இல்லங்கள் சுட்ட கற்களினால்[24] அமைக்கப்பட்டுச் சுதை தீற்றப்பெற்று[25] வண்ண ஓவியங்களால் அணி செய்யப் பெற்றிருந்தன.

**பாசறை**

பழந்தமிழர் இவ்வாறு நிலையான குடியிருப்புக்களை யமைத்து வாழ்ந்ததோடு, போருக்காக வேற்று இடங்களுக்குச் சென்ற போதும், ஆங்காங்கே அவ்வப்போது தங்குவதற்குப் பசிய இலைகளாலமைந்த பாசறைகளும், பாடி வீடுகளும் அமைக்கக் கற்றிருந்தார்கள்.[26] அவை சிறுநகர் போன்ற அமைப்புடையனவாயிருந்தன என முல்லைப்பாட்டும் சிலம்பும் குறிக்கின்றன.

## ஊர்

மக்கள் சேர்ந்து வாழ்ந்த இடம் சேரி என வழங்கப்பட்டது. சிலம்பில் புறஞ்சேரி குறிக்கப் படுகின்றது. சிற்றூர், பேரூர், மூதூர் என அளவும், பழைமையும் கருதி ஊர்கள் அழைக்கப் பட்டன. இயற்கை வளம் சூழ்ந்த அவ்வூர்கள் காவல் மிக்கிருந்தன. நீண்ட மதில்கள், அகன்ற இடமமைந்த ஊர்களுக்குக் காவலாக அமைந்தன.

## நகர்

பேரில்லங்களாக அமைந்தவை நகர் என அழைக்கப்பட்டன.[27] இதுவே பெரிய ஊர்களைக் குறிக்கப் பிறகு பயன்பட்டது. நகரத்தின் நடுவில் அரசனின் கோயிலும், அதனைச் சுற்றி அமைச்சர், படைத்தலைவர், வணிகர் போன்ற பெருமக்கள் வாழ்கின்ற வீதிகளும் அவற்றின் புறத்தே ஏனை யோர் வீதிகளும் அமைந்திருந்தன. இவையனைத் தையும் உள்ளடக்கி மதிலும், அகழியும் அமைந் திருந்தன. இவற்றின் புறத்தே புறஞ்சேரிகளும் அமைந்திருந்தன. புகார் நகர அமைப்பினைக் குறித்துச் சிலப்பதிகாரம் விரிவாகக் கூறுகின்றது. கடற்கரை அருகே அமைந்த பகுதி மருவூர்ப் பாக்கம் என்றும்,[28] நகரின் உட்பகுதியினைப் பட் டினப் பாக்கம் [29] என்றும் சிலம்பு கூறுகிறது. அவ்விரு பகுதிகளுக்கும் இடையில், நாளங்காடி, அல்லங்காடி என்னும் கடைவீதிகள் இருந்தன.

## தெரு

ஊர்களிலும், நகர்களிலும் வீதிகள் [30] இருந் தன. முடுக்கர், குறுந்தெரு, நெடுந்தெரு, நாற் சந்தியாகிய சதுக்கம் ஆகியவை தெருக்களின் வகைகளைக் குறிப்பன. நகர்களில் ஆறு போன்ற அகன்ற வீதிகளும், அரசர்களும் விரும்பும் செல்வச் சிறப்பமைந்த கடை வீதிகளும்[31]. பிற பல் வகைப் பாகுபாடுகளுடன் அமைக்கப்பட்ட வீதி களும் இருந்தன.[32]

'யாறுகிடந் தன்ன வகனெடுந் தெருவில்'

—மதுரை 358.

## அரண்

கூடி வாழ்ந்தபோது மக்கள் தாம் வாழ்ந்த ஊருக்குப் பாதுகாப்பிற்காக வேலியும், மதிலும் வைத்து வாழ்ந்தார்கள். இதுவே பிற்காலத்தில் நகர், கோயில் ஆகியவற்றிற்கான அரணாக வளர்ந்து, நகரின் அரணான மதில்கள் உயர்ந்தும், அகன்றும், திண்ணியனவாகவும் நெருங்கற்கரிய பொறிகள் அமைக்கப் பெற்றுமிருந்தன.[33] ஈண்டுத் தூங்கெயில் குறித்துக் கூறப்படும் செய்தி நினைவு கூரத் தக்கது.

கட்டடக் கலை பற்றிய பழந்தமிழர் தம் அறிவு குறித்துக் கூறும் நூல்கள் இன்றருகிக் காணப் பெறினும் பழந்தமிழ் இலக்கியங்களால் அத்தகு நூல்கள் அக்காலத்து இருந்திருக்க வேண்டும் என நன்கு அறியலாம்.

'எண்ணிய நூலோர் இயல்பினின் விழா அது
மண்ணகம் ஒரு வழி வகுத்தனர் கொண்டு'

—சிலம்பு—அரங். 95—113.

'அரும்பெறன் மரபின் மண்டப மன்றியும்'

சிலம்பு — இந்திர —110.

## முடிவுரை

இவ்வாறு பழந்தமிழரின் குடியிருப்புக்கள் இன் றைய குடியிருப்புக்களுக்கு அடிப்படையாகத் திகழ்ந்ததோடன்றிப் பல்வகை வாய்ப்புக்களும், நலன்களும், சிறப்புக்களும் உடையனவாகத் திகழ்ந்தன எனப் பெருமையுடன் மகிழ்ந்து கூற லாம்.

---

1. புள்ளிறை கூரும் வெள்ளின் மன்றமும் மணி சக் 85
2. மாமலர் பெருஞ்சினை வாகை மன்றமும் மணி சக் 83
3. விருந்தாட் டயரும் வெள்ளிடை மன்றமும் —மணி—சக்—91
4. கட்போ ருளரெனிற் கடுப்பத் தலையேற்றிக் கொட்பி னல்லது கொடுத்த லீயாது உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும்—சிலம்பு—இந்திர—115-17
5. மன்றங்கள் :—வரி 115—138. சிலம்பு—இந்திர
6. நாவொடு நவிலாது நவைநீ ருகுத்துப் பாவைநின் றழூஉம் பாவை மன்றமும்-சிலம்பு-இந்திர 137-38
7. பட்டி மண்டபம் பாங்கறிந்து ஏறுமின் —மணி—விழா—61
8. பளிக்கறை மண்டப முண்டத னுள்ளது —மணி—மலர்வனம்—64
9. எண்ணிய நூலோர் இயல்பினின் வழா அது —சிலம்பு—அரங்—95
10. விண்டோய் பணவை மிசை ஞெகிழி பொத்த —குறிஞ்சி—226
11. முகிழ்றோய் மாடம்............................ சிலம்பு—ஊர்காண்—357
12. ஏனலுழவர் வரகு மீதிட்ட கான்மிகு குளவிய வம்பு சேரிருக்கை —பதிற்று—3—10—22
13. ஈந்தலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை —பெரும்பாண்—88
14. நெடுந் தூண்டிலிற் காழ் சேர்த்திய குறுங் கூறைக் குடிநாப்பண் நிலவடைந்த இருள்போல வலையுணங்கு மணல் முன்றில் —ப. பாலை, 80—83
15. ''புதுவை வேய்ந்த கவிகுடில்'' —பெரும்பாண், 225
16. ''நீணெடு வாயில்'' —சிலம்பு, நாடுகாண், 8
17. 'புதவக் கதவம்' —சிலம்பு—கட்டுரை 43
18. 'புலிப்பொறிப் போர்க்கதவின்' —பட்டினப் பாலை

19. 'பருநிலை நெடுந்தூண்' —பட்டி 250
,, 'மணித் தூண்' சிலம்பு—கொலை—198
20. 'கொடுங்கால் மாடத்து நெடுங்கடை துவன்றி' பட்டி—261
21. 'வளி நுழையும் வாய் பொருந்தி' —பட்டி—151
22. 'கோலச் சாளரக் குறுங்க ணுழைந்து' —சிலம்பு—மனையறம் 22—23
23. 'அறநிலைஇய அகனட்டில்' —பட்டினப் பாலை
24. 'சுடுமண் ஓங்கிய நெடு நகர் வரைப்பில்' பெரும்பாண் 405
,, 'சுடும ணோங்கிய நெடுநிலை மனைதொறும்' —மணி—மலர்—127
25. 'புதுப்பிறை அன்ன சுதைசெய் மாடத்து' —புறம் 378
26. 'நெடுங்காழ்க் கண்ட நிரல் பட நிரைத்த' —சிலம்பு-நீர்ப்படை 151
,, இடுமுட் புரிசை யேமுற வளைஇப்' —முல்லை 26
27. 'கடியுடை வியல் நகர்' —நற்—98.
,, 'சாபஞ் சாத்திய கணைதுஞ்சு வியனகர்' —பெரும்பாண் 119—121
,, 'நெடுநகர் வினைபுனை நல்லில்' —புறம் 23
,, பாழியன்ன கடியுடை வியனகர்' —அகம் 15
,, 'நிதிதுஞ்சு வியனகர்' —சிலம்பு 27—200

28. 'வேயா மாடமும் வியன்கல இருக்கையும்
...........மறுவின்றி விளங்கும் மருவூர்ப் பாக்கம்' —சிலம்பு—இந்திர 7—39
29. 'கோவியன் வீதியும் கொடித்தேர் வீதியும்
பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமும்' —சிலம்பு-இந்திர—40—58
30. 'தேர்வழங்கு தெரு' —நற் 227—8
,, 'கூல மறுகும்' —சிலம்பு-அழற்படு—109
31. 'அரசுவிழை திருவின் அங்காடி வீதியும்' —சிலம்பு-ஊர்காண்—178—79
32. 'முடுக்கர், வீதி, ஆங்கண்' —சிலம்பு-இந்திர 187
33. மிளையும் கிடங்கும் வளைவிற் பொறியும்' —சிலம்பு-அடைக்க 20
,, 'எந்திரத் தகைப்பினம் புடை வாயிலிற்' —பதிற்று 6-3
,, 'வாயிலொடு புழையமைத்து
ஞாயிலொடு புதைநிறீஇ' —பட்டி 285
,, 'அம்புமிழ் அயிலருப்பம்' —மதுரை 67
,, 'கராஅங் கலித்த குண்டுகண் ணகழி' —புறம்—37
,, 'ஏணியுஞ் சீப்பு மாற்றி' —புறம் 305



அடற்றகையும் ஆற்றலும் இல்லெனினும் தானே
படைத்தகையால் பாடு பெறும்.

மா. கோபாலன்
தமிழ் வளர்ச்சித்துறை, தமிழக அரசு



# தமிழரும் மீசையும்

போரில் வல்ல வீரன் அவன். வீரக் கழலே அணிந்தவன். எஃகு நரம்பும் ஏக்கழுத்தும் ஏறு போல் பீடு நடையும் கொண்ட இளங்காளே. கரிய மீசை பொருந்திய பொலிவுடைய முகத்தினன். ஒளி படைத்த கண்ணினன். ஆண்மை நிறைந்த அத்தோற்றப் பொலிவினைக் கண்டு, சித்திரப் பாவையொத்த பெண் ஒருத்தி அவன் மீது காதல் கொண்டு, கடந்து செல்லுதற்கரிய பாலே நிலத்தின் வழியே அவன்பின்னே சென்று விட்டாளாம். இதை உணர்ந்த அந்தப் பெண்ணின் செவிலித்தாய் அவர்கள் சென்றதாகக் கூறப்படும் பாலே நிலத்தின் வழியாகத் தேடிச் சென்ருள். வழியிலே எதிர்ப்பட்டோரிடம் தன் மகளின் அடையாளம் சொல்லி வினவினுள். அவர்களும் ஆம்! அத்தகையோரைக் கண்டோம் என்ருர்கள். செவிலி, ஐயோ! என் மகளின் மென்மையான அடிகள் இத்தகைய கடினமான பாதையிலே பொருந்திச் சென்றனவோ! என்று வருந்துகின்ருள். பாருங்கள் அந்தப் பாடலே :-

''செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்ருள்
மையணற் காளேயொடு பைய வியலிப்
பாவை யன்னவள் ஆய்தொடி மடந்தை
சென்றனள் என்றீர் ஐய
ஒன்றின வோஅவள் அஞ்சிலம் படியே''

— (ஐங்குறுநூறு : 389)

தமிழரின் நாகரிகத்தையும் வாழ்க்கை முறையினேயும் காட்டுகின்ற சங்க நூல்களுள் ஒன்ருகிய புறநானூற்றிலே,

''அடிபுனே தொடுகழல் மையணல் காளேக்கென்
தொடிகழித் திடுதல்யான் யாய்அஞ் சுவலே
அடுதோள் முயங்க அவைநா ணுவலே
என்போல் பெருவிதுப் புறுக என்றும்
ஒருபாற் படாஅ தாகி
இருபாற் பட்டஇம் மைய லூரே''

— (புறம் : 83)

என்று பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணேயார் பாடுகிருர். அணல் என்பதற்குத் தாடி என்று பொருள் கூறுவார்கள். இஃது அவ்வளவு பொருத்தமானதன்று. மீசை என்பதே பொருந்தும். தாடி எனப்படுவது வாய்க்குக் கீழே தாடையில் வளர்ந்திருக்கும் மயிர்த் தொகுதியாம்;

மீசை எனப்படுவது மேல் உதட்டில் வளரும் மயிர்த் தொகுதியைக் குறிக்கும். இச்சொல் மேல் என்னும் பொருளுடை மிசை என்ற சொல்லினின் றும் பிறந்தது எனலாம். என்ருலும் மிக ஆழ்ந்து நுண்ணிதின் நோக்கின் தாடி என்பது மீசை என் பதையே குறிக்கின்றது என்பதைத் தெளிவாக அறியலாம். மேலும்,

''இரலை மருப்பிற் றிரிந்து வீழ்தாடி''

— (கலித்தொகை : 15)

''கலையிரு மருப்பிற் கோடிக் காதள வோடும் தாடி''

— (திருவிளையாடல் 26 : 22)

என்னும்போது, மான்கொம்பு போன்று முறுக்கி, காதுவரை நீண்டு வருவது என்று விளங்குவதால், தாடி என்று குறிக்கப்படுவது மீசையையே என் பது தெளிவாகும்.

புறப்பொருள் வெண்பா மாலை, வெட்சிப் படலம்—12-ஆம் பாடலுள் வரும் ''மையணற் காளை'' என்பதற்குச் சாமுண்டி தேவ நாயகர் என்னும் மிகப் பழைய உரைகாரர், ''மயிராற் கறுத்த கபோலத்தினையுடைய காளை'' என்று உரை எழுதுகிருர். எனவே அணல் எனினும், தாடி எனினும் மீசையையே குறிக்கின்றது என் பதைத் தெளிவாக அறியலாம்.

விலங்கு பறவை முதலானவற்றுள் ஆண் இனத் தைச் சார்ந்தவையே மிகுந்த அழகுள்ளனவா யிருத்தலை நாம் காண்கின்ருேம். யானையுள் ஆண் யானை களிறு எனப்படும். அதற்கு அழகு பொருந் திய தந்தம் உண்டு. கோழியுள் ஆண், சேவலெனப் படும். அதற்கு அழகு தர வண்ணக் கொண்டை யுண்டு. சிங்கத்துள், ஆண் சிங்கத்திற்குக் கவினுறு பிடரியுண்டு. மயிலுள், ஆண் மயிலுக்கு அழகிய தோகையுண்டு. ஆறறிவுடைய மனிதருள்ளும் ஆண்களுக்கு அழகு தர இயற்கையன்னை மீசை எனும் அரிய பொருளை வழங்கியுள்ளாள். இஃது, ஆண்களுக்குத் தங்களை யழகு செய்து கொள்ள நேரமில்லையே எனக் கழிவிரக்கங் கொண்டு இயற்கையன்னையால் அளிக்கப்பட்டது போலும்.

மனிதர்கள் தோன்றி யழியக்கூடிய இயல்பினர். ''சில்வாழ்நாட் சிற்றறி வுடையோர்'' என்று திருவிளையாடலில் பரஞ்சோதி முனிவர் குறிப் பிட்டுள்ளார். மூப்பு, பிணி வந்து தத்தும்போது நான் உன்னை நினைக்கமாட்டேன் என்கின்றது பிரபந்தம். மூப்பு மனிதனை நிலை தடுமாறி நினைவிழக்கச் செய்வதோடு இளமையில் வாய்த்த கவினுறு வனப்பையும் பறிக்கும் தன்மைத்து. வேற்கண்ணுளைக் கோற்கண்ணுளாக்கும் கொடுந் தகைமை கொண்டது. இம்மூப்பு மனிதரை அலைக் கழிக்கும் வகையை வருணிக்கப் புகுந்தாருள், மிகத் தெளிவாகவும் விளக்கமாகவும் கூறியவர் அருணகிரிநாதர் எனலாம்.

''தலைமயிர் கொக்கு ஒக்க நரைத்துக்
கலகல எனப்பல் கட்டது விட்டுத்
தளர்நடை யிட்டுத் தத்தி நடந்து
தடுமாறுவர்''

எனவும்,

''தொந்தி சரிய மயிரே வெளிர நரை
தந்தம் அசைய முதுகே வளையஇதழ்
தொங்க ஒருகை தடிமேல் வரமகளிர்
நகையாடுவர்''

எனவும் கூறியுள்ளார்.

இன்னேரன்ன கொடுமைகளுக்கு ஆட்படுவோர் மனிதர்தாம். இறைவன் மூப்பிலி; ஆதி அந்த மிலாதவன். ஊழி பலவாக இவ்வுலகை இயக்கு கின்ருன். காலத்தின் வடு விழுந்தறியான். மனிதன் வயதில் வளர வளர அவன் அழகு அருகு கின்றது. ஆனுல் இறைவன் அழகோ வளர்கின் றது. இவ்வழகு வளர்ச்சியுறினும் அவனிடம் தானே மொய்க்க வேண்டும். இதைத் தடுத்தாட் கொண்ட புராணத்தில் சேக்கிழார் பெருமான் ''மொய்த்து வளர் பேரழகு'' என்கின்ருர். மொய்த்து எனில் ஆங்கிலத்தில் concentrated எனலாம். இறைவனுடைய அழகு ஒன்றுத்திரண்ட அழகு (concentrated beauty) ஆகின்றதாம். உருவமற்றவனுகிய இறைவனுக்கு, வேண்டுதல் வேண்டாமை இலாதவனுகிய இறைவனுக்கு உருவம் ஒன்று சமைத்துக் காண விழைந்த நம் முன்னேர் அவன் பெருமைகளை யெல்லாம் உரு வகப்படுத்த முயன்றனர். பித்தன் என்றனர். பிஞ்ஞகன் என்றனர். பிறைசூடி என்றனர். பித் தனுய், பிஞ்ஞகனுய், பிறை சூடியாய் நிற்கும் இறைவன் திரு உருவில் மொய்த்து வளர் பேரழகு தோன்றச் செய்ய வேண்டுமே. எங்ஙனம் இயலும்! உருவம் ஒன்று தீட்டி முகத்தில் மீசையொன்றை வைத்தனர். மொய்த்து வளர் பேரழகு அம் மீசையினின்றும் மிளிர இறைவன் காட்சி தந்தான். கண்டு களித்தனர். இவ்வண்ணம் ஈசனுக்கே மீசை வைத்துக் காட்சியின்பம் பெற்றனர் தமிழர்.

இறந்துபட்ட வீரர்களுக்கு நடுகல் எடுத்தல் பண்டைத் தமிழர்தம் மரபு. அந்நடுகல்லில் வீரனின் உருவம் வடிக்கப்படும்; அவ்வாறு வடிக் கப்பட்ட உருவத்துக்கு மீசை வைக்கத் தவறிய தில்லை தமிழர்.

சிறு தெய்வ வணக்கம் தமிழகத்தில் பரவத் தலைப்பட்டது. அத்தெய்வங்களுள் மதுரை வீரன் போன்ருர் உருவங்களை அடர்த்தியான மீசை வைத்து வழிபட்டனர் நம்மனேர்.

தீய செயல்களைக் காணும் போதும் கொடுஞ் செயல்களைக் காணும்போதும் நல்லார்க்குக் கோபம் வருதல் இயல்பு. குணமென்னும் குன் றேறி நின்ருர் வெகுளி கணமேனும் காத்தல் அரிதன்ருே! அப்பொழுது அன்னுர் கண் சிவப் புறும்; கனல் பறக்கும்; புகை உமிழும்; உயிர்ப்பு மிகுதலினுல் மூக்கின் வழியாக மூச்சு வெஞ்சூட் டோடு வெளிப்படும்; மீசை துடிக்கும். இது

மெய்ப்பாடு. ''மீசை முறுக்கிச் சினந்து'' எனக் கூறுகின்றது தனிப்பாடல் ஒன்று.

சூர்ப்பநகையின் மூக்கையும் மார்பையும் இலக்குவன் அரிந்துவிட்டான் அன்றோ! அவள் தன் அண்ணனுழை செங்குருதி நிலஞ்சோர ஓடி வருகின்றாள். ஐயிரண்டு திசை முகத்தும் தம் புகழை வைத்து இலங்கையினை யாண்ட மறத் தமிழனை இராவணன் அக்காட்சியைக் காண்கின்றான். கொடுமைக்காட்பட்டவள் உடன் பிறந்தாளல்லவா? அவனுக்குத் தாங்கொணாக் கோபம் எழுகின்றது. இதைச் சொற்களால் விவரிக்க வேண்டுமே. கம்பனின் கைவண்ணத்தைக் காணுங்கள். இராவணனுக்குப் பத்துத் தலைகள் இருந்தன என்கின்றனரே. அப்பத்துத் தலைகளிலும் உள்ள பத்து மீசைகளும் ஒரு முனையினின்று நோக்கின் புகைவண்டித் தொடர்போற் காட்சியளிக்குமல்லவா? அப்பத்துத் தொடர் மீசைகளும் அக்கணம் ஒருங்கே கடுங்கோபத்தால் துடித்தனவாம். இக்காட்சியினைக் கம்பர்;

''மடித்தபில வாய்கள்தொறும் வந்துபுகை முந்தத்
துடித்ததொடர் மீசைகள் சுறுக்கொள உயிர்ப்பக்
கடித்தகதிர் வாளெயிறு மின்களுல மேகத்
திடித்தவுரு மொத்துரறி யாவர்செய லென்றான்''

— (மாரீசன் வதைப்படலம் — 49)

என அழகுற வர்ணிக்கின்றார். இராவணனுடைய பத்து மீசைகளும் தம் தங்கைக்கு இழைக்கப்பட்ட கொடுமையைக் கண்டு துடித்த காட்சியை மேலே கண்டோம். நம்முள் மீசை இலாதார்க்கு அநீதியையும் கொடுமையையும் காணுந்தொறும், கேட்குந்தொறும் யாது துடிக்குமோ அறியோம்.

மீசையின் துடிப்பையும் அதன் வளத்தையும் சுட்ட வந்த மனோன்மணீயம் ஆசிரியர் சுந்தரனார்,
''வளங்கெழு மீசை கிளர்ந்தெழு ந்தாட''
எனக் குறிப்பிடுகின்றார்.

உழைப்பாளியான அழகுக் குடும்பனின் தோற்றத்தை,
''கறுக்குக் கிடாய் மருப்பின் முறுக்கு மீசையும், சித்ரக்
கத்திரிகை இட்ட வன்னக் கன்னப் பரிசும்,
குறுக்கில் வளைதடி சேர்த்து இறுக்கும் கச்சையும், செம்பொன்
கோலப்புள்ளி உருமாலும் நீலக்கொண்டையும்''

— (பாட்டு—10)

என அழகுபட வர்ணிக்கின்றார் முக்கூடற்பள்ளு ஆசிரியர்.

சிங்கியைத் தேடிச் சிங்கன் துள்ளு மீசையை முறுக்கிக்கொண்டு வருகின்றான். திரிகூடராசப்பக் கவிராயர் அச்சிங்கன் வருதலை,

''துள்ளுமீசை முறுக்கிக் கொண்டு
திக்கு அடங்காக் குளுவ சிங்கன்
திரிகூடச் சிங்கன் வந்தான்''

— (குற்றாலக் குறவஞ்சி — 115)

எனக் கூறுகின்றார்.

இந்திய நாடு பல்லாண்டுகள் வெள்ளையருக்கு அடிமைப்பட்டுக் கிடந்தது. இவ்வடிமை விலங்கொடித்து, சுதந்தரப் பறவைகளாய் இந்தியர் வாழவேண்டும் எனப் பலர் நினைத்தனர். அவர்களுள் உறங்கிய மக்களைத் தம் செந்தமிழ்ப் பாக்களால் தட்டியெழுப்பி வீர உணர்வு தந்தவர் பாரதியார் ஆவார். அவ்வீரக் கவிஞனின் முகத்திற்கு வீரப்பொலிவு தந்தது அவர்தம் மீசையன்றோ.

வீழ்ந்துபட்ட தமிழினத்தைக் கண்டு மனம் வெதும்பி, ''இங்கிவ்விதமாக இருக்குதண்ணே! இதில் யாருக்கும் வெட்கமில்லை'' என்று கதறினாரே புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசன். அவர் சிங்க ஏறெனக் காட்சி தந்தது அன்னாரின் மீசையினாலன்றோ! பாஞ்சாலங் குறிச்சி மாவீரன் மறத் தமிழன் கட்டபொம்மன் மீசை வெள்ளையரைக் கலக்கமுறச் செய்ததை வரலாறு அறியும்.

வீரத்திற்கும் மீசைக்கும் உள்ள தொடர்பு இம்மட்டோ. மதுரைத் திருநகரை யாண்ட திருமலை நாய்க்கரை ஈறாகக் கொண்ட தமிழ் மன்னர்களின் முகங்களை அழகுறச் செய்தது இம்மீசையே.

''மீசைத் தமிழ் மன்னர்—தம்பகையை
வென்ற வரலாற்றை
ஓசையுடன் படித்தேன்—அன்னைமகிழ்
வுற்றதை என்ன சொல்வேன்''

— (இசைத்தமிழ்)

எனக் கூறினார் பாவேந்தர் பாரதிதாசன். மீசை என்றதும் உடனே வீரம் பிறத்தலை இவ்வடிகளில் காண்கின்றோமல்லவா.

காட்டு வழி செல்லும்போது வேடன் ஒருவனைக் காண்கிறார் பாவேந்தர் பாரதிதாசன் அவ்வேடன் முகத்தைக் கொடுவாள் போன்று கூரிய மீசை அணிசெய்யக் காண்கின்றார். உவகை மீக்கூர,

''முகத்திலே கொடுவாள் மீசை
வேடன் என் எதிரில் வந்தான்
... ... ... ... ... ... ... ... ...
சகோரத்தைச் செம்போத் தென்றான்
தமிழா, நீ வாழ்க என்றேன்''

— (காடு)

என அவனை வாழ்த்துகின்றார்.

இத்தகு பெற்றிவாய்ந்த மீசையுள்ளும் பலவகையுண்டு. அவை, இராச மீசை, பாக்கு மீசை,

சந்துஷ்டி மீசை, படர் மீசை, இராவணன் மீசை, எலுமிச்சம்பழ மீசை, சுடர் மீசை, முறுக்கு மீசை, அடர் மீசை, முழு மீசை, மொட்டை மீசை, அசை மீசை, சுகிர்த மீசை, நயனநோக்கு மீசை, எலி மீசை என்பன.

இரண்டாம் உலகப் போரில் வெறியாட்டம் ஆடி வீழ்ந்துபட்ட இட்லர் வைத்திருந்த மீசை 'இட்லர் மீசை' என்ற சிறப்புப் பெயர் பெற்று இன்று பலர் முகத்தை அணி செய்கின்றது.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த இம்மீசையை இந்நாள் தமிழருள் பல்லோர் மழித்துக் கொள்வதைக் கண்டு மனம் கவல்கின்றனர், அறிஞர். மொழிநூல் பேரறிஞர் தேவநேயப் பாவாணர் தமிழர்கள் மேனாட்டாரைப் பார்த்துத் தங்கள் மீசையை மழித்துக் கொள்கின்றனரே எனப் பெரிதும் கவல்கின்றார்.

நாவலர் பசுமலை சோமசுந்தர பாரதியாரோ மீசையை மழித்துக் கொள்வோர் தமிழராகார் எனக் கூறியுள்ளார்.

இயற்கையிலே மீசையில்லாத மகளிரோ தங்கள் முகத்தில் புருவங்களில் உள்ள மயிர்த் தொகுதிக்குக் கருமையிட்டு அழகுபடுத்திக் கொள்கின்றனர்.

''அஞ்சனம்தோய் கண்ணில் அருவிநீர் ஆங்கவர்க்கு
மஞ்சனநீராக வழிந்தோட — நெஞ்சுருகி
வல்லிவிடா மெல்லிடையாள் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்றாள் புலர்ந்து''

என நளவெண்பா கூறுகின்றது. எழுதுங்காற் கோல்காணுக் கண்ணினுர் எனத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். அழகுக்கு அழகு செய்யும் ஆற்றல் மிக்க இம்மகளிர்க்கு மீசையிருப்பின் ஆண்களைப்போல் மழித்துக் கொள்வரோ? மாட்டார். அவர் தம் கைவண்ணமெலாம் பெற்று அம்மீசை கவினுறக் காட்சி தருமன்றோ! எனவே ஆண்களுக்கே உரியதாய் அழகுக்கும் வீரத்திற்கும் நிலைக்கலனாய் நின்று திகழ்வது இம்மீசையேயன்றோ! தமிழர் தம் நாகரிகத்தில் இம்மீசை தனியிடம் வகித்துள்ளதை அறிஞருலகம் கண்டு மகிழ்வதாக!




பிறைக் கோட்டுப் பெருங்களிறு பிளிறி நெருங்கியது. நிறைமதி முகத்தாள் நெஞ்சும் உடலும் நடுக்குற்றாள். வேலொடு வந்த காளை, களிற்றை அடக்கிக் காத்தனன் அவளை. அவள் காந்த விழியும் அவன் கவின் விழியும் கலந்தன: காதல் பிறந்தது.



ஆடவன் ஒருவன் மேல் வைத்த அன்பினால் தலைவியின் இயல்பு மாறி வருவதை அவள் உயிர்த்தோழி அறிகின்றாள். களவு, கற்பாக மலரவேண்டுமென்று அவளினால் தன் தாயிடம் தலைவியின் நிலையைக் குறிப்பாக உணர்த்துகிறாள். அச்செவிலித்தாய், தான் பரிவும் பற்றும் காட்டி வளர்த்த பாவையின் களவுக் காதலைப் பெற்றெடுத்த நற்றாயிடம் கூறி விரைவில் மணம் முடிக்க வேண்டுகிறாள்



அசைவிலா ஊக்கமுடைய அவன் வீட்டிற்கு 'ஆக்கம் அதர்வினாய்ச்' செல்கின்றது. கொண்டுவந்து கொட்டிக் குவித்த பொருள், வாழ்வுச் செழிப்பிற்கு வழி கோலுகிறது. கலைவி தான் துழந்தட்ட தீம்புளிப்பாகரைத் தன் கையால் படைக்கின்றள். 'இனிது' என மகிழ்ந்து நாயகன் அந்நல்லுணவைச் சுவைக்கின்றன். இன்ப வாழ்க்கை இனிதே தொடர்கிறது.

பிறர்நாணத் தக்கது தான்நாணா னாயின்
அறம்நாணத் தக்கது உடைத்து.

பேராசிரியர் க. அன்பழகன், எம்.ஏ., எம்.பி.

# குறள் - அறம்

உலக மக்கள் வாழ்க்கை நலம் பெறவும் முன்னேறவும் உறுதுணையாக அமைந்த எண்ணங்கள் பலப்பல. அந்த எண்ணங்கள் பலகாலும் சிந்திக்கப்பட்டு — வகைப்படுத்தப்பட்டு, வளர்க்கப்பட்டு, முடிவுகள் காணப்பட்டுத் தத்துவங்களாக விரிந்தன.

மக்கள் எய்தியிருந்த நாகரிக நிலைக்கேற்பவும், அவர்தம் உள்ளத்தில் அரும்பிய பண்பாட்டுக்கேற்பவும் கொள்கைகள் பூத்தன; இலக்கியங்கள் மலர்ந்து, மணம் கூட்டின.

தொன்மைமிக்க தமிழ்மக்கள் தம்முடன் தோன்றி, இயற்கையாக வளர்ந்து ஈடுஇணையற்ற கருத்துக் கருவூலமாகத் திகழ்ந்த இலக்கியங்களில் நாகரிகத்தின் எல்லை கண்டனர். அந்தத் தமிழர் நாகரிகமே பண்பாட்டின் அடித்தளம்!

தமிழர் பண்பாடு தமிழரை மட்டுமின்றி உலக வரையும் வாழ வைப்பதாகத் தழைத்தது. அதன் பயனாகப் பிறந்த பொன்மொழிகள் பல.

''ஒன்றே குலம் ஒருவனே தேவன்''

''யாதும் ஊரே யாவருங் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா''

''எல்லோரும் இன்புற்றிருப்பதுவே யல்லால்
வேறொன்றறியேன் பராபரமே''

என்பன ஒரு சில எடுத்துக் காட்டுக்கள்!

'நான் வாழ' என்று அரும்பிய எண்ணம் போதாகி, 'நாம் வாழ' என்று மலர்ந்து, 'எல்லோரும் வாழ்ந்திட' என்று கனிந்தது.

எல்லோரும் வாழ்ந்திட எண்ணுகின்ற குறிக்கோள் பிறந்திடில், எல்லோரையும் வாழச் செய்திட வேண்டும் என்னும் பேருணர்ச்சியும் அவ்வுணர்ச்சி செயல்படுவதற்குரிய கடமைகள் யாவை எனும் சிந்தனையும் பிறக்கிறது.

எல்லோரையும் வாழச் செய்யும் பேருணர்ச்சி—பேராற்றல் பெற்ற அறிவுமலையாகப் பிறந்தது திருவள்ளுவராக!

அம் மலையினின்று இறங்கிய கருத்துப் பேராறு கலைவடிவு கொண்டு, இலக்கியச் சோலை என்னும் திருக்குறளாக ஓங்கி நிற்கிறது இன்று!

திருக்குறட் சோலையில் மணக்குந் தமிழ்த் தென்றலை நுகர்கிறோம் — காதல் கனிகிறது. கருத்து மலர்களைக் குவிக்கிறோம் — பொருள் நிறைகிறது. சோலை நிழலில் இளைப்பாறுகிறோம் —அறம் உளத்தை ஆட்கொள்கிறது.

தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் 'அகம்', 'புறம்' என்னும் பாகுபாட்டுக்கு உட்பட்டே வழங்கப்

பட்டன. புலவர் தம் சிந்தனையில் பிறந்த எண்ணங்கள் அனைத்தும் — இந்த இரு பகுதியாகவே அமைவன. அவைகட்கு விளக்கம் இங்குத் தேவையில்லை. ஆனல் வாழ்க்கை அடிப்படையை ஆய்ந்து கண்ட திருவள்ளுவர், அகம், புறம் என்னும் பாகுபாடு இலக்கியத்திற்கு ஏற்புடைத்தாயினும் —வாழ்க்கையின் அடிப்படை உண்மையை உணர்த்தும் ஒரு வாழ்க்கை நெறி நூலுக்குப் போதுமானதல்ல என்று தெளிந்தே — முப்பாலாக — அறம், பொருள், காமம் என்னும் பாகுபாடு கொண்டு நூலியயற்றினர் என்பது தெளிவு.

வாழ்க்கை — இன்பத்தைக் குறிக்கோளாகக் கொண்டது. அந்த இன்பம், ஏற்றதொரு வாழ்க்கைத் துணையை விழையும் உணர்ச்சி நிறைவாலும் பிறப்பது. அந்த இன்பம், வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்பேறுலும் நிறைவது. அந்த இன்பம், தன் வாழ்க்கை பலருக்கும் நன்மையாகும் பயனுடையதாக — எல்லோரது பாராட்டையும் பெறும் தகுதியுடையதாக உள்ளது என்னும் மனநிறைவாலும் அமைவது. இந்த மூன்று வகையானும் ஒருவன் இன்பநிலை எய்துவானேயாயின் — அவன் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்தவனகிறன்; புகழுடம்பு நிறுவியவனுக உயர்கிறன்; வானுறையும் தெய்வத்துள் வைத்துப் பிறரால் மதிக்கப்படுகிறன்; மற்றவர்களும் அவனை வழிபடுகிறர்கள், அவன் வழி நிற்கிறர்கள் என்னும் பெருமையும் புகழும் அவனைச் சேர்கின்றன. உலகோர் அதனுல் பயன் பெறுகின்றனர் என்பது மட்டுமேயன்றிப் பின்பற்றும் ஆர்வம் கொள்ளுவதால் — அந்த நன்னெறியும் தழைக்கின்றது, உலகம் உய்கின்றது!

அவ்வாறு உலகம் உய்யும் நெறியாகப் பிறந்ததே குறள் அறம்.

அறம் — அறுதி இடுவது, நன்மை தீமையை அறுத்துக் காட்டுவது; நெறியை விளங்கச் செய்வது!

திருக்குறள் நூல் இயற்கையாகப் பிறக்கும் காம இன்பம் நல்லின்பமாகுமாற்றையும், முயற்சியால் தேடும் பொருள் நற்பொருளாக வளருமாற்றையும், எண்ணங்களால் பிறக்கும் செயல்கள் நற்செயல்களாக ஓங்குமாற்றையும் விளக்கி விரித்துரைக்கின்றது.

காம இன்பத்தின் நிறைவாக அமையும் இல்லற வாழ்க்கையைக் குறித்து அதன் பயன்நோக்கிக் கூறப்பட்ட குறளிது :

''அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று''

''அஃதும்'' என்பது இல்லறத்தையோ அன்றித் துறவறத்தையோ குறிப்பதாயினும், பிறர்பழிப்புக்கு ஏதுவான குற்றமற்றதாக இருந்தால்தான் அறம் தழைக்கும் என்பதாலேயே அவ்வாறு கூறப்பட்டது.

ஈட்டும் பொருளுக்கும் அது பயன்படும் நெறியாலேயே பெருமை சேர்கிறது. பொருளுக்குக் காப்பு பிறர் துன்பத்துடைப்புக்கு அது பயன்படுவதே! இதனை விளக்கவே,

''அற்றர் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றன் பொருள்வைப் புழி''

எனும் குறள் பிறந்தது.

அறஉணர்ச்சி ஈகையால் புலப்படுவது, அதனுலேயே ஈத்துவக்கும் இன்பம் என்றர் வள்ளுவர். அத்தகு அறத்தால் வரும் இன்பத்திற்கு வேறு எந்த இன்பமும் ஈடல்ல என்பதை விளக்கவே இக்குறள் எழுந்தது.

''அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழு மில''

அறத்தை விளக்க முற்பட்ட பிறமொழிப் புலவர்கள் வாழ்க்கையின் உண்மைகள் பலவற்றை எடுத்தியம்பினரேனும் வாழ்க்கை அடிப்படையாகும் அனைத்தையும் ஓர்ந்து முறைப்படுத்தியும் வகைப்படுத்தியும் வரைந்தவரல்லர்.

அவ்வந் நாட்டு மக்கள் வாழ்க்கையில் விளைந்த சிக்கலை நீக்கவே சில வழிமுறை கண்டனர். ஆனல் வள்ளுவர் அனைத்து மக்களின் வாழ்க்கைக்கும் மூலமாக உள்ள — அடிப்படையை ஓர்ந்து — வாழ்க்கை அறம் கண்டார். அது என்றும் வாழும் அறமாக விளங்குவதும் அதனுலேயே!

மக்கள் நன்னெறியில் நடப்பது — தமக்காக மட்டுமன்றிப் பிறருக்காக; சமுதாயத்துக்காக! எனவே குற்றத்தை விலக்குவதும் தவிர்ப்பதுமே ஒவ்வொருவருக்கும் முதற்கடமையாவது.

''தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு'' — எனவும்

''குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை'' எனவும்

குற்றங் கடிதல் அதிகாரத்தில் கூறப்பட்டவை மன்னர்க்கு மட்டுமேயன்றி மற்றவர்க்கும் பொருந்தும்.

தீ நட்பு, கூடா நட்பு, பெண்வழிச் சேறல், வரைவின் மகளிர், கள்ளுண்டல், சூது என்னும் அதிகாரங்கள் குற்றம் களைவதையே குறிக் கொண்டவை.

இவ்வாறு குற்றங் கடிந்து குணமுடையவராகு விளங்குவோர் சான்றேராகத் திகழ்வர்.

''அன்பு நாண், ஒப்புரவு, கண்ணேட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்''

என்னும் குறள் — சான்றண்மைக்குத் துணையாகும் பண்புகளை எடுத்துக் காட்டுகிறது. அத்

தகைய பண்பாளர் 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும்' ஆற்றல் பெறுகின்றார். அவ்வாறு கடனறிந்து சான்றாண்மை மேற்கொண்டவர்க்கு நல்லவை எல்லாம் கடமையாகின்றது.

அவர்தம் நடுவுநிலைமை உணர்வும் மேலோங்கும்; ''நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை அன்றே ஒழிய விடல்' அவர்தம் மனப்பாங்காகும்.

இவ்வாறு மக்கள், நடுவின்மை நாணுபவராக— பயன் கருதிப் பழிச் செயல் புரியாதவராக—தம்மைக் காத்துக் கொண்டால் நன்னெறியும் காக்கப்படுகின்றது.

சான்றாண்மை மேற்கொண்டு, அன்பு பெருக அருள் கனிய அனைத்துயிரையும் ஒன்றென் றெண்ணி, அரும்பசி எவர்க்கும் ஆற்றும் பேருள்ளம் படைத்த நல்லோர் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர் ஆவர். இதனை

''அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு''.

என்னும் குறள் உணர்த்தும்.

''பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை'' — என்று

பல்லுயிர் ஓம்பும் பேரறத்தினைப் புலப்படுத்துவது குறள்.

இவ்வாறு பிறரை வாழ்விக்கும் அறத்தைப் போற்றிச் செயற்பட, ஒருவனிடத்து அமைய வேண்டியது யாதெனில் ''நல்ல மனமே'' யாகும். அந்த நல்ல மனம் 'வாய்மை'யால் காணப்படுவது.

''புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்''

என்பது குறள்.

இத்தகு — குறள் அறம் — எங்கு பிறப்பது எவ்வாறு வளர்வது என்பார்க்குத் தெரிவிப்பது போன்று — குறள் கூறுகிறது.

''மனத்துக்கண் மாசிலன்ஆதல் அனைத்து அறன்
ஆகுல நீர பிற'' — என்று

உள்ளந்தூயராக இருப்பார்க்குப் பிறக்கும் உணர்ச்சிகள், நல்லவை அடியாக எழும் ஆதலின் அதன் பயனும் நன்மையுடையதாகும். எனவே, மாசற்ற மனமே அறம் விளையும் நிலன்: பிறவகை மனத்தினின்று எழும் செயல் எவையேயாயினும் அவை வெற்று ஆரவாரத் தன்மையுடையனவே.

எனவே குறள் அறம் — குற்றமற்ற மனத்தை நிலைக்களனாகக் கொண்டு எல்லோரையும் வாழச் செய்யும் பேரார்வத்தைக் குறிக்கோளாகக் கொண்டு கடனென்ப நல்லவை எல்லாம்—என்பதைக் கட்டளையாகத் தலைமேற்றாங்கி – தொண்டாற்றுவதற்கு ஊக்கம் ஊட்டுவதாகும்.

தொண்டு — தூயதொண்டு —பிறர் நலம் நாடும் தொண்டு — இதுவே குறள் அறமாகும். தொண்டிலே பிறக்கும் இன்பம் — பிறர் நலம் போற்றுவதிலே சுரக்கும் இன்பம் — இதுவே குறள் அறப்பயனாகும்.

இவ்வாறு தொண்டார்வம் மிக்கார் பிறர் துன்பம் களைதலிலே எய்தும் இன்பமே பேரின்பமாகும். குறள் அறம் எல்லோரும் வாழப்பிறந்தது ஆகும்; எல்லோரையும் வாழ்ந்திடச் செய்யும் நெறியாகும்; எல்லோரையும் வாழ வைத்திட நம்மைத் தொண்டாற்றத் தூண்டும் நல் வழியாகும். பொதுநெறி கண்டு போற்றும் உலக வித்தகர் வியந்து போற்றும் அறநூல் திருக்குறள் ஆகும். அதனாலேயே உலகம் ஏற்கும் பெருமை குறளுக்கு உளதாயிற்று.

அதனாலேயே ''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ் கொண்ட தமிழ்நாடு'' என்று பாரதி பெருமைப்படுமாறு — வள்ளுவன் உலகத்திற்கே உரியவனாகின்றான்.

எனவே குறள் அறம் உலகோர் யாவர்க்கும் பொருந்தும், உயர்ந்த தொண்டு நெறி என்பதை உணர்ந்து நாம் போற்றுவோமாக!

வாழ்க வள்ளுவம்! வளர்க குறள் அறம்!!



## திருத்தகு நல்லீர்...!

பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வம் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானஞ் செய்ம்மின் தவம்பல தாங்குமின்
செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்
அறவோர் அவைக்களம் அகலா தணுகுமின்
பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை யஞ்சுமின் பிழையுயிர் ஓம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளும் களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்
இளமையுஞ் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென்.

—சிலம்பு

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

ஆ. கா. அ. அப்துல் சமத் எம்.ஏ.,எம்.பி.

# பண்பாட்டின் முன்னோடி

உலக ஒருமைப்பாடு ஓயாமல் வற்புறுத்தப் படும் காலம் இது. தன்னையோ, தன் நாட்டையோ, தன் வீட்டையோ மட்டும் கருதுபவன், 'சின்னதொரு கடுகு உள்ளத்தான்' எனச் சிறுமைப் படுத்தப்படும் நாள் இது. உலகெலாம் ஒன்றாகக் கருதும் மனப்பான்மை, காலத்தையும் தூரத்தையும் செய்வதற்குத் துணைநின்ற விஞ்ஞானத்தின் விளைவாகக் கருவாகி, உருவாகிப் பெருகி வந்த கருத்து எனப் பேசப்படுவதையும் காண்கிறோம். ஆனால் இதே கொள்கையை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தே கொண்டு, வள வாழ்வு நடத்திய ஒரு சமுதாயத்தை, பண்பாட்டின் முன்னோடி என்று குறிப்பதில் தவறிருக்க முடியுமா?

ஐக்கிய நாடுகள் அரங்கத்தில் இன்று இடம் பெற்றுள்ள விடுதலை பெற்றுள்ள நாடுகளின் எண்ணிக்கை நூற்று இருபதுக்கு மேலாகும். ஆனால் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே வரலாற்றில் குறிப்பிடத்தக்க நாடுகளாக வாழ்ந்த நாடுகளின் எண்ணிக்கையை விரல்விட்டே எண்ணிவிடலாம். வீரத்தின் விளைநிலமாகக் கருதப்பட்ட ரோம் நாடும், கீர்த்திமிக்க கிரேக்கமும், வாணிகத்தில் சிறந்த அரேபியாவும், ஆரிய வர்த்தமும், கீர்த்தி மிக்க சீனமும், தங்கத் தமிழகமும் — ஆகிய இந்நாடுகள்தாம் முறையாக அமைந்த அரசுகளைப் பெற்ற, நாகரிகமிக்க மக்கள் வாழ்ந்த நாடுகளாகக் கருதப்படுகின்றன

இவற்றில் வாழ்ந்த மக்கள், தத்தமது நாட்டு மக்களைப்பற்றியும், பிறரைப்பற்றியும் எப்படிக் கருதி வாழ்ந்தார்கள் என்பது சுவையான ஆராய்ச்சியாகும்.

நுண்கலைக்குப் பெயர் பெற்ற சீன நாட்டு மக்கள், தம்மையெல்லாம் சீனர்கள் என்று அழைத்துச் சிறப்பித்துக் கொண்ட அதே நேரத்தில், மற்றவர்களையெல்லாம், (foreign devils) அந்நியப் பிசாசுகள் என்று அழைத்ததாக வரலாற்றில் குறிக்கப்பட்டிருக்கிறது.

ஆரிய வர்த்தத்திலே வாழ்ந்தவர்களோ, தங்களை மட்டும் சீரிய காரியங்களை இயற்றும் ஆரியர்கள் என்று பெருமை பேசிய அதே போதில், பிறரையெல்லாம் 'மிலேச்சர்கள்' என்று இழித்துரைத்து வந்ததை நாம் நன்கறிவோம்.

அன்று அறியப்பட்டிருந்த அரபு நாட்டு மக்களோ, மொழி வெறியர்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்கினார்கள். 'அரபிகள்' என்றால் அந்த மொழியிலே 'பேசத் தெரிந்தவர்கள்' என்று ஒரு பொருளுண்டு. 'பேசும் திறன் பெற்றவர்கள்' தாங்கள்தாம் என்று அரபிகள் தங்களைப் பெருமையாகக் குறிப்பிட்ட அதே வாயால் பிறரைப் பேசத் தெரியாத 'ஊமையர்' எனப் பொருள் படும் 'அஜமி'கள் என்றே, ஏசி வந்தனர்!

தத்துவ வித்தகர்களாகிய கிரேக்கர்களோ, தம் நாட்டு மக்களைக் குடிமகன் (Citizen) என்று உரிமையோடு குறித்து, பிறரையெல்லாம் (Aliens) 'வேற்றூர்' என்றே வெறுத்தொதுக்கி வந்தார்கள்.

ரோம் நாட்டவரோ, தம்மவரையெல்லாம், 'ரோமானியர்' என வீரம் ததும்ப எடுத்துரைத்து, பிறரையெல்லாம் (Slaves) 'அடிமைகள்' என்றே இடித்துரைத்தார்கள்.

இதே கால கட்டத்தில், தங்கத் தமிழகத்திலே வாழ்ந்த தமிழன், உலகின் கூரையிலே இருந்து உரக்கக் கூவினன்.

''யாதும் ஊரே....

யர்வரும் கேளிர்!!'' என்று

''ஊரெல்லாம், உலகிலுள்ள நாடுகள் எல்லாம் —ஊர்தான். உலக மக்கள் எல்லாம் என் விருந் தினர்தாம்'' என்று இன்று இருபதாம் நூற்றாண் டிலேகூட சிலர்கூற அஞ்சும் கருத்தை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே, பேசியவன் தமிழன் என அறியும்போதுதான், தமிழர் பண்பாட்டின் ஏற் றம் தெற்றெனத் தெரியும்.

இவ்வளவு பென்னம் பெரிய கருத்தைத் 'தமிழன் பேசியது உண்மை, பேணியது உண்டா?' என்று எவரும் வினா எழுப்பக் கூடும்.

வரலாறும் வான்புகழ் இலக்கியங்களும் நமக்கு வகையான விடை தருகின்றன.

வேற்றூரையெல்லாம், மற்றோர், பிசாசுகள் என்று பேசி, மிலேச்சர்கள் என்று ஏசி, ஊமையர் என்று இழித்து, அந்நியர் என்று பழித்து, அடிமைகள் என்று இகழ்ந்துரைத்த நாளிலே, 'விருந்தினர்' என்று ஏற்று வாழ்ந்த தமிழகத்தின் தலையாய புலவன்தான், வாழ்க்கையின் குறிக் கோளைக் கோடிட்டுக் காட்டப் புகுந்தபோது வரையறுத்தான்,

''இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம்
விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு'' — என.

நாடுகள் யாவும் ஒரே நிலப்பரப்பில் அடங்கிக் கிடப்பவை அல்ல. அலைகடலுக்கு அப்பாலும் நாடுகள் உண்டு. ''எல்லா நாடுகளும் எம்முடைய நாடுகளே!'' என்று ஏற்றுக் கொண்ட பிறகு, ஒரே நாட்டிலே ஒடுங்கிக் கிடக்கலாமா? எனவே தான், தமிழ் மூதாட்டி உணர்வூட்டினாள், ''திரைகடல் ஓடியும் திரவியம் தேடு'' என. தரையிலே ஒழுங்காக நடக்கக்கூட மனிதன் தடு மாறிக் கொண்டிருந்த காலத்திலே, அலை கடல் களைத் தாண்டி, கடாரத்திலும், சாவகத்திலும், கம்போடியாவிலும், மலேசியாவிலும் தமிழர் களைக் கொண்டு சேர்க்கும் காலமாக ஔவை மூதாட்டியின் சின்னஞ்சிறு சொற்கள் பயன்பட் டிருக்கிறதென்றால் தமிழின் வலிமைதான் என்னே!

பர்மிய நகரான 'பெகு'விலே காணப்படும் கல்வெட்டுக்களும், தாய்லந்து மொழியிலே கலந் திருக்கும் தமிழ் ஓசையும், கம்போடியா, 'அங் கோர் வாட்டில்' உள்ள கலைச் சின்னங்களும், ஜாவா, சுமத்திரா, மலாயா முதலிய நாடுகளில் இன்று வாழும் மக்களிடையேயும் படிந்திருக்கும் வாழ்க்கை முறைகளும், 'யாதும் ஊரே'' என்று கொண்டு வாழ்ந்த தமிழரின் தடையங்களாக விளங்குகின்றன.

இன்று உலகத் தமிழ் மாநாட்டில் பங்குபெறு வதற்காக உலகின் பல கோணங்களிலிருந்து தமிழகத்தின் தலைநகரிலே கூடும் ஐம்பதுக்கும் மேற்பட்ட நாட்டு மக்கள், தத்தம் நாடுகளுக்குத் திரும்பும்போது ஒரு கருத்தாக உள்ளத்திலே ஆழப் பதிந்து கொண்டு செல்ல இருக்கிறார்கள்.

''யாதும் ஊரே, யாவரும் கேளிர்!''

'ஒரே உலகம் — ஒற்றுமைமிக்க உலகம்— அமைதிமிக்க உலகம்' காண வழி கோலும் இந்தக் கருத்தை மீண்டும் வழங்குவதிலே புதிய தமிழகம் பெருமிதம் கொள்வதில் நியாயமுண்டு.



யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

சிவஅரசி எம். ஏ.,
அரசினர் கலைக் கல்லூரி சென்னை-2.

# நுண்கலைகள்



கருத்தின் உறைவிடமாகவும் அழகின் இருப்பிடமாகவும் அமைந்து, உள்ளதை உள்ளம் உணர்ந்தவாறு வெளிப்படுத்தி, உள்ளத்திற்கு உவகையூட்டுவதால்தான், கலை தன்னலமும் பழி பாவங்களும் நிறைந்த உலகைவிட்டு நம்மை அப்பால் அழைத்துச் செல்கிறது என்கிறார், தாகூர். நம்மவர், அகத்துள்ளதைப் புறத்தே காட்டுவது தான் கலை என்பர். அழகிய பொருளைப் படைத்தல், செயற்கைப் பொருள்களைச் செய்யல், மனத்திடைத் தோன்றும் அழகுணர்ச்சியைக் குறித்தல் என்பது மேனாட்டவர் கலைத்தத்துவம். கலையே வாழ்வின் வழிகாட்டும் ஒளிப்பந்தம் என்கிறார் ஆஸ்கார் ஒயில்டு. ஆயகலைகள் அறுபத்துநான்கு. அவற்றுள், இசை, நடனம், நாடகம், சிற்பம், ஓவியம், இலக்கியம் என்பன நுண்கலைகளாகும்.

## இசை :

முத்தமிழில், முன்நிற்கும் இயலுக்கும் பின்நிற்கும் நாடகத்திற்கும் இடையில் நின்று இரண்டொடும் இணைந்து இயங்குவது இசை. குறிப்பாற்றலும் ஓசை நயமும் முதன்மையாக அமைய, காரண காரியத் தொடர்பு இரண்டாவதாக இருக்க, பொருளினை உணர்த்தும் ஆற்றலுடையது, இவ்விசை. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனத் தமிழ்ப்பண்கள் ஏழு வகைப்படும். முல்லைப்பண், மருதப்பண், குறிஞ்சிப்பண் என ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்தனியே பண்கள் அமையப் பெற்றன. அது போலவே, குறிஞ்சியாழ், முல்லையாழ் என யாழ் வகைகளும் தனித்தனியே அமைந்திருந்தன. காலம் அறிந்து பண்களைப் பயன்படுத்த வேண்டும் என்பது பழந் தமிழர் கோட்பாடு. மாலைக்கு உரியது செவ்வழிப்பண்; நாட்காலைக்கு உரியது மருதப்பண். குழல், யாழ், முழவு, முரசு, சிறுபறை, உடுக்கை முதலியன அவர்களால் பயன்படுத்தப்பட்ட சில இசைக்கருவிகளாகும். அற்றை நாளில் இசையைப் பாணர், பாடினியர், விறலியர், கூத்தர் என்பவர் பேணிப் பாதுகாத்தனர். பெருநாரை, பெருங்குருகு, தாளசமுத்திரம், தாளவகை யோத்து, வாய்ப்பியம், இந்திர காளியம் என்பவை பண்டைய இசைத்தமிழ் நூல்களாகும். 'பதினாறு படலம்' என்ற இசைத்தமிழ் நூலைச் சிலப்பதிகார அரும்பத உரைகாரர் தம் உரையில் குறிப்பிடுகின்றார், மேற்கோளுடன்.

மனிதரையன்றி விலங்குகளையும் தன் வயப்படுத்த வல்லது இசை. இதற்கு இலக்கியச் சான்றுகள் பலவாக உள. அவற்றுள் ஒன்று,

''காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
யாழ்வரைத் தங்கி யாங்கு''

எனவரும் கலித்தொகை அடிகளாகும். வெம்மை நிறைந்த பாலை நிலத்து வாழ்ந்து, அவ்வழி வருவோரைத் துன்புறுத்தும் கொடிய பண்புடைய ஆறலைக்க கள்வர்கூட இசையின்பத்தில்

தம்மை மறந்த நிலையினை அடைகின்றனர் என்பதனை,

''ஆறலை கள்வர் படைவிட அருளின்
மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை''

எனவரும் பொருநராற்றுப்படை அடிகளால் (21-22) நன்குணரலாம். எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றான பரிபாடல் இசைத்தமிழ் நூலாகும். இங்ஙனம் மிகச்சிறந்த நிலையிலிருந்த இசைக்கலையின் வளர்ச்சியில் மாறுபாடுகள் சில தோன்றலாயின.

இருண்ட காலத்தில் இசைக்கலை அருகி மறையத் தொடங்கியது. வேற்றுச் சமய நுழைவால் இசை முதலிய கலைநலங்களை மக்கள் மறந்தனர். இக்காலத்திய காரைக்காலம்மையாரின் மூத்த திருப்பதிகம், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் என்பன தெய்வத் தமிழிசைப் பாடல்கள் நிறைந்தவை. இடைக்காலத்தில் பல்லவ மன்னரால் இசை நன்கு வளரலாயிற்று; சமய குரவரும் அதில் பங்கு பெற்றனர். 'எட்டிற்கும் ஏழுற்கும் இவை உரிய' என்பது குடுமியான்மலைக் கல்வெட்டுக் குறிப்பு. 'பரிவாதினி' என்பது முதலாம் மகேந்திரவர்மன் காலத்து வீணையாகும். 'தமிழோடிசைப் பாடல் மறந்தறியேன்' என்று நாவரசர் பாடுகின்றார். 'நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பி' மகிழ்கின்றார் திருஞானசம்பந்தர்.

சிம்மணராஜ் சபையில் வித்துவானாக இருந்த சாரங்கதேவர் தமிழகம் வந்து, இங்குள்ள தேவாரப் பண்களையும் அவற்றின் இலக்கணங்களையும் தாம் இயற்றிய 'சங்கீத இரத்தினாகரம்' என்னும் வடமொழி இசை நூலில் அமைத்துப் போற்றினர். சேக்கிழார், தம் பெரிய புராணத்தில் இசையின் சிறப்பினை விளக்கிக் காட்டுகின்றார். திருத்தக்க தேவர் 'காந்தருவதத்தையார் இலம்பகம்' 'சுரமஞ்சரியார் இலம்பகம்' முதலியவற்றுள் இசைபற்றிக் குறிக்கின்றார். கல்வெட்டுக்களின் வாயிலாகவும் இசை பற்றி அறிய முடிகின்றது.

இசைபற்றியதொரு நூலை 'யாழ்நூல்' என்ற பெயரில் இயற்றியவர் விபுலானந்த அடிகளாவர். இன்பத்தை எஞ்ஞான்றும் நல்கும் மாண்புடைய இசை அன்று போலவே இன்றும் பலராலும் போற்றிப் புரக்கப்படுகின்றது. அவருள்ளும் சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் குறிப்பிடத் தக்கவராவர்.

**நடனம் :**

ஆடற்கலையைக் குறிக்கும்பழைமையான சொல் கூத்து. போர்க்களத்தில் மாவீரம் காட்டி மற்றவர் மதிப்புப் பெற்றுக் காலில் கழல் அணிந்து கூத்தாடு தலைக் கழல்நிலைக் கூத்து என்கிறது தொல்காப்பியம். அன்று, கூத்துக்கலையை மன்னவரும் விரும்பினர்; வளர்த்துப் போற்றினர். ஆடல், பாடல், அழகு மூன்றும் ஆடல்மகளிர்க்கு இன்றியமையாதன. இம்மூன்றிலும் சிறந்து விளங்கினாள் மாதவி என்பதைச் சிலம்பின் வாயிலாக அறிகிறோம். ஆடற்கலை வல்லுநர்க்குத் 'தலைக்கோலி' பட்டம் அளிக்கப்பட்டது. மாதவியின் ஆடற் சிறப்பினை வித்தியாதரன் ஒருவன் மூலம் விளக்குகின்றார் அடிகள். அரங்கேற்றுக் காதையில், ஆடலாசிரியன், தண்ணுமையாசிரியன், வேய்ங்குழலூதுவோன், யாழாசிரியன் முதலியோர் இயல்பு, நாடக அரங்கின் அமைப்பு முதலியன விரிவாகக் கூறப்பட்டுள்ளன. வசைக்கூத்து—புகழ்க்கூத்து; வேத்தியல்-பொதுவியல்; வரிக்கூத்து — வரிச்சாந்திக்கூத்து; சாந்திக்கூத்து — விநோதக்கூத்து; தேசியக்கூத்து—இயல்புக்கூத்து என்பன இருவகைக் கூத்துக்களின் பாற்படும். இவற்றுள், சாந்திக்கூத்து சொக்கம், மெய்க்கூத்து, அவிநயம், நாடகம் என நால் வகைப்படும். விநோதக்கூத்து ஆறுவகைப்படும். அல்லியம், கொடுகொட்டி, குடைக்கூத்து, குடக்கூத்து, பாண்டரங்கம், பேடியாடல், மல்லாடல், துடியாடல், கடையம், மரக்காலாடல், பாவையாடல் முதலியன பதினோராடல் வகையாகும். இவற்றுள், முதல் ஆறும் நின்ற நிலையில் நிகழ்த்தப்படுபவை. பின் ஐந்தும் நிலத்திற் படிந்து வீழ்ந்து ஆடும் இயல்பின. இப்பதினோராடல்களும் உலகை இடர்ப்படுத்திய அசுரர்களைக் கொல்லுதற் பொருட்டு அமரரால் நிகழ்த்தப் பெற்றவை.

''சீராலே பாடல் ஆடல் சிதைவில்லதோர்
ஏரார் பூங்கச்சி'',

என்ற திருஞானசம்பந்தரின் தேவாரத் தொடர் பல்லவர் கால ஆடற்கலை வளர்ச்சிக்கோர் எடுத்துக்காட்டாகும். இக்கலை சிறப்ப உருவில் வளர்ந்தது சோழர் காலத்தில். சிதம்பரம் தெற்குக் கோபுரத்தில் ஆடல்முறை அத்துணையும் காட்டப்பட்டுள்ளன. நாயக்கர், மகாராட்டிரர் காலத்தும் ஆடற்கலை சிறப்புற்றது; இன்னும் வளர்பிறை போன்ற நிலையில் வளர்ந்தோங்குகிறது.

**நாடகம் :**

''நாடகம் உலக வாழ்க்கையின் படம்; மக்கட் சமுதாயத்தின் பழக்க வழக்கங்களை உள்ளவாறே எடுத்துக்கூறும் கலை; உலகியலின் உண்மை நிலையைப் பிரதிபலிக்கும் கண்ணாடி'' என்கிறார் ஸிஸரோ (Cicero). ''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்'' என்பது தொல்காப்பியம். ''பாடல் ஓர்ந்தும் நாடகம் நயந்தும்'' என்பது பட்டினப்பாலைக் குறிப்பு. இவை, 'நாடகம்' என்ற சொல் பண்டுதொட்டே பயின்றுவந்த சொல் என்பதை விளக்குவன. சிலப்பதிகாரம் 'நாடகக்காப்பியம்' என்றும் பெயர்பெறும். திருவிழாக்காலங்களில் இரவில் நாடகங்கள் நடைபெற்றன என்று மதுரைக் காஞ்சி குறிக்கின்றது. நாடக மகளிர்க்குரிய ஆடுகளம் பற்றிப் பெரும்பாணாற்றுப்படையும் அகநானூறும் குறிக்கின்றன. வரிக்கூத்து என்பதும் நாடகத்தில் இடம் பெறுகின்றது. இது, கண்கூடுவரி, கான்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள் வரி என எண்வகைப்படும். அவரவர் பிறந்த நிலத்தன்மையும் பிறப்பிற்கேற்ற தொழிற்றன்மையும் தோன்ற நடிப்பதுதான் வரிக்கூத்து. 'ஆட்டம்' என்பது நாடகத்தையே பேச்சுவழக்கிலும் இலக்கிய வழக்கிலும் குறித்தது என்பதை

மணிமேகலையால் அறியலாம். அரண்மனையில் நாடக அரங்கம், கூத்தப்பள்ளிகள் இருந்தன; கோவிலில் கூத்தம்பலம் இருந்தது. நாடக அரங்கில் ஒருமுக எழினி, பொருமுக எழினி, கரந்து வரல் எழினி என மூவகைத் திரைகள் அற்றை நாளிலேயே பயன்படுத்தப்பட்டன.

மத்தவிலாசப்பிரகசனம் என்ெருரு வேடிக்கை நாடகத்தை மகேந்திரவர்மன் வடமொழியில் இயற்றினுன். பெருங்கதை, பல்லவர் காலத்தில் நாடகம் மக்களிடையே பெற்ற செல்வாக்கை விளக்குகிறது. 'நாடகத்தால் உன்னடியார்போல் நடித்து' என்பது மாணிக்கவாசகர் கூற்று. சிந்தாமணியில் முத்தியிலம்பகத்தில் நாடகம் பற்றிய குறிப்புண்டு. இடைக்காலத்தில் வளர்ச்சி குன்றிய நாடகம், பிற்காலச் சோழர் காலத்தில் மீண்டும் தழைத்து வளரலாயிற்று. இராசராசேச்சுவர நாடகம், குறிஞ்சி, பள்ளு முதலியன தோன்றின. 19-ஆம் நூற்ருண்டில் தோன்றியவற்றுள் மிகச் சிறந்ததாக, இன்றளவும் நிலைபேறுடைத்தாய்த் திகழ்வது பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்களின் மனேன்மணீயமாகும். இந்த நூற்ருண்டில் சிறந்த நாடகாசிரியர்களாகக் கருதப்பட்டவர்கள் மறைந்த மாமணிகளான சங்கரதாசு சுவாமிகளும் பம்மல் சம்பந்தமுதலியாரவர்களும் ஆவர். இன்றும் நாடகமே நமது மூச்சு என்று நாடகக் கலைக்குப் பணியாற்றுவோர் பலராவர்.

**ஓவியம் :**

வீடு கட்ட அறியாத மனிதன் குகையில் வாழ்ந்தபோதே ஓவியம் தோற்றமெடுத்தது எனலாம். நடுகல்லில் உருவத்தைச் செதுக்குதற்கு முன்பு அதனை ஓவியமாக வரைந்து கொள்வது வழக்கம். நாடக மகளிர் ஓவியப்புலமையும் பெற்றுச் சிறந்தொளிர்ந்தனர் பண்டைக் காலத்தில், மாதவியின் நடன அரங்கின் மேற்கூரையில் கண் கவர் ஓவியங்கள் பல தீட்டப்பட்டிருந்தமையைச் சிலம்பின் வாயிலாக அறிகிறேம். அது 'ஓவிய விதானம்' என்றே பெயர் பெற்றது. நெடுநல்வாடை, மணிமேகலை போன்ற நூல்களில் ஓவியம் பற்றிய குறிப்புகள் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. ஆன்மீக வாழ்வு வாழ்ந்து தெய்வ அருள் பெற்று, புறத்தே கண்டதை அகத்தே நிறுத்தி, பின்பு ஓவியமாகத் தீட்டுபவனே ஓவியன் ஆவான். எனவேதான், ஓவியக் கலைஞரைக் 'கண்ணுள் வினைஞர்' என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது போலும்! திருப்பரங்குன்றத்து முருகன் கோவிலில் இந்திரன், கௌதமமுனிவரின் கோபத்திற்காளாகிக் கல்லுருவாயினமை வரி ஓவியமாகப் புனையப்பட்டுள்ளது.

மகேந்திரவர்மன் பல்கலைச் செல்வன்; பல் துறையிலும் துறைபோகிய அவ்வேந்தன் 'சித்திரக்காரப்புலி' என்று அழைக்கப்பட்டான். சித்தன்ன வாசல் ஓவியங்கள் பல்லவர் காலத்து ஓவியக்கலைக்குச் சிறந்த சான்றுகளாகும். நடன—நாடக—கலியாண மண்டபங்கள் சோழர் கோவிலில் ஓவியமாகத் தீட்டப் பெற்றுள்ளன. இன்று திருக்குற்ருலத்திலுள்ள சித்திரசபையில் உள்ள ஓவியங்கள் நாயக்கர் காலத்தவை. இன்றும், பல இடங்களில் ஓவியப் பள்ளிகள் பெருகி இக்கலையினை மேலும் மாண்புறச் செய்கின்றன. பல்லவர் கலைக்கூடமாய மல்லையிலும் சித்திரப் பள்ளியொன்று சிறந்த முறையில் செயல்படுகிறது.

**சிற்பம் :**

செங்கல், உலோகம், மரம், மண், சுதை, தந்தம், வண்ணம், மெழுகு போன்றவை சிற்பத் தொழிலுக்கு இன்றியமையாதன. சங்ககாலத்துக் கல்நடும் பழக்கத்திற்கு முன்பே இருந்திருக்க வேண்டும் இந்தச் சிற்பக்கலை. திடீரெனத் தோன்றியதன்று இக்கலை. கண்ணகிக்குப் படிமம் எடுக்க இமயம் சென்று கல்லெடுத்துவந்தான் சேரன் செங்குட்டுவன். அன்று தேர்களில் வியத்தகு சிற்ப வேலைப்பாடுகள் மிகுந்திருந்தமையை நூல்களின் வாயிலாக அறிகிறேம்; இன்று அவற்றின் எழிலினைக் கண்கூடாகக் கண்டுகளிக்கின்றேம். புத்தபெருமான் பீடிகைகள் பல இன்று கண்டெடுக்கப்படுகின்றன. வெண்சுதையாலான உருவங்களும் பலவாக இருந்ததை அறிகிறேம்.

மாமல்லபுரத்துச் சிற்பங்கள், பல்லவர் காலச் சிற்பக்கலையின் சீர்மையைத் தெள்ளிதின் புலப்படுத்தவல்லன. இவர்தம் சிற்ப வடிவ அமைப்பு அமராவதி சிற்பவடிவைத் தழுவி அமைந்துள்ளன. கோவில் விமானத்திலும் சிற்பங்கள் இடம் பெற்றன. பெரிய பாறையில் செதுக்கப்பட்ட அர்ச்சுனன் தவம்தான் பல்லவச் சிற்ப மரபின் சிகரமாகக் — கொடுமுடியாகத் திகழ்கிறதென்பர். ஒரே வட்டக் கல்லில் நவக்கிரகங்களைக் குறிக்கும் கண்கவர் சிற்பம் சோழர்காலச் சிற்பக்கலைக்கோர் உயரிய எடுத்துக்காட்டாகும். விசயநகர வேந்தர் காலத்திலும், நாயக்கர் காலத்திலும் இக்கலை மேலும் சிறப்புற்று, அவர்தம் நினைவாக நாட்டிலே நல்ல பல அழியாச் சின்னங்களை நிறுவியது. திரு. அம்பேத்கார், திரு. ஏ. எல். முதலியார், டாக்டர் அரங்காச்சாரி, டாக்டர் குருசாமி முதலியார் போன்ற பெருமக்களின் சிலைகள் இன்றைய சிற்பக்கலைத் திறனுக்கு ஏற்ற சான்றுகளாகும்.

**இலக்கியம் :**

கலைகள் அனைத்திலும் இலக்கியக்கலையே சிறந்தது எனலாம். ஓவியம், சிற்பம் ஆகியவற்றைவிட நெடுங்காலம் நிலைத்துப் புகழ்பரப்ப வல்லது இலக்கியம். உலக வரலாற்றையே மாற்றியமைக்கும் ஆற்றல் பெற்றது இக்கலை. சமுதாயத்தின் விருப்பு வெறுப்பு நம்பிக்கை முதலியவற்றை வளர்த்துப் பண்படுத்துவது, அச்சமுதாயத்திடை தொன்றும் ஒழுங்கும் வரையறையும் கொண்டு அமையும் இலக்கியமேயாகும். எனவே, ஒரு சமுதாயத்தை உருவாக்கும் கருவியாக இலக்கியம் அமைகிறது எனலாம்.

"Poets are the rulers of men's spirits more than the philosphers whether mental or physical".

—J. E. Sharp, Aspects of poetry, p. 105.

தம்மை வெளிப்படுத்தும் விருப்பம், பிறரிடத் துள்ள பற்று, கற்பனைத்திறன் முதலியன இலக் கியம் தோன்றுதற்குரிய சில காரணங்களாகும். இது செய்யுள் வடிவாகவும் உரைநடை வடிவாக வும் அமையும். பண்டைய இலக்கியங்கள் அனைத் தும் செய்யுள் வடிவின; விழுமிய கருத்துக்கள் நிரம்பியவை; இன்றளவும் நிலைத்து நிற்குமளவுக் குக் கால வெள்ளத்தைக் கடந்தநிலையில் புகழுடன் விளங்குவன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியன அன்றைய வாழ்க்கை முறையினைப் படம்பிடித்துக் காட் டுவன.

இடைக்கால இலக்கியங்கள் சமயவாழ்க்கை யைப் பற்றிச் சிறப்பாகப் பேசுகின்றன. இவற் றுள், மூவர் தேவாரம், மாணிக்கவாசகரின் திரு வாசகம், ஆழ்வார் பன்னிருவரின் திருப்பாசுரங் கள், பெரியபுராணம், கம்பராமாயணம், சீவக சிந்தாமணி என்பன குறிப்பிடத்தக்கவை. இருப தாம்நூற்றாண்டில் உரைநடை இலக்கியங்கள் பல வாகப் பெருகி உள்ளன. நாவல், சிறுகதை, நாடகம் என்பவை அதன் கூறுகளாகும்.

## முடிவுரை :

மேசைமேலுள்ள மின்விசிறி மிக வேகமாகச் சுழலும்போது சுழல்வதாகவே தெரிவதில்லை; அது போலத்தான் கலையும். கலையில் ஆர்வத்தோடு ஈடுபடும்போது தன்நிலையே புரிவதில்லை. இங்ஙனம் உடம்பையும் உயிரையும் ஈர்த்து உள்ளத்தில் நிறையும் கலையை, குணத்தின் கவர்ச்சிகரமான வெளியீடு என்கிறார் ஆஸ்கார் ஒயில்டு. தமிழர் இக்கலைத்துறையில் தன்னிகரற்றவர் என்பதை மிகப்பெருமையோடு எடுத்துக் காட்டி வீறுடன் இலங்கும் எண்ணற்ற கலைப்படைப்புக்கள், தமிழரின் பண்பு நலனையும் கலை மாண்பினையும் விளக்குவதோடு அமையாது, அவர்தம் ஒப்புயர் வற்ற நாகரிகத்தையும் இணையற்ற பண்பாட்டை யும் இணைத்தே வெளிப்படுத்துகின்றன எனின், அது மிகையன்று.



இன்னுசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்.

இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர்
இசைத்துறைத் தலைவர்,
அண்ணுமலைப் பல்கலைக் கழகம், அண்ணுமலைநகர்.




### ஐவகைப் பண்கள் :

தெய்வீக இசை வளர்த்த காலமாகிய இடைக் கால இசையைப்பற்றிப் பேசப் புகுமுன் அதற்கு மூலகாரணமாக விருந்த முதற்கால இசையைப் பற்றியும் நினைதல் இன்றியமையாததென்று கருது கின்றேன்.

குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் ஆகியவை பண்டைத் தமிழ் நாட்டின் பாகுபாடு களாம். குறவர், ஆயர், எயினர், உழவர், பரதவர் எனப்படுவோர் அந்நிலத்து வாழ்ந்த மக்கள். அவரவரும் தாம் வாழ்ந்த நிலத்திற்கேற்ற வாறு தொழிலையும் பழக்க வழக்கங்களையும் மேற் கொண்டு வாழ்ந்தனர். உணவு வகைகளும் நிலத் திற்கேற்றவாறு வேறுபட்டிருந்தன. நிலத்திற் கேற்றவாறு மனவுணர்ச்சியை இனிய முறையில் வெளிப்படுத்தும் இசையும் தோன்றலாயிற்று. இதற்குத் துணைக் கருவிகளும் பல தோன்றத் தொடங்கின. குறிஞ்சி நிலத்து வாழ்ந்தோர் குறிஞ்சிப் பண்ணைப் பாடி மகிழ்ந்தனர். முல்லை நிலத்து வாழ்ந்த ஆயர் தாம் பாடிய இசைக்கு முல்லைப்பண் அல்லது சாதாரிப்பண் எனப் பெயரிட்டனர். மருத நிலத்தோர் பாடி மகிழ்ந்த பண் மருதப்பண்ணே. செவ்வழிப்பண் அல்லது நெய்தற் பண்ணைப் பாடியின்புற்றூர்கள் நெய்தல் நிலத்தார். பாலை நிலத்தோர்க்குரியதாக அமைந் தது பாலைப்பண். இவ்வாறு ஐவகை நிலத்தாரும் தம் மனவுணர்வைத் தாம் வாழ்ந்த நிலத்திற் கேற்றவாறு வெளிப்படுத்த ஐவகைப் பண்களைக் கண்டார்கள்.

### பண்ணும் யாழும் :

மனிதன் மலையையும், கடலையும் மற்றவற் றையும் சார்ந்து வாழ்ந்த காலம் மிகப் பழைய காலமென்பதை நாம் நினைவிற் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு தமிழ் மக்கள் வாழ்ந்த காலத்தில் கண்ட பண்கள்தாம் குறிஞ்சிப்பண், பாலைப்பண், மருதப்பண், முல்லைப்பண், நெய்தற் பண் எனப்படுவன. இவ்வைந்துமே ஆதிப்பண் களாகும். இவற்றினின்றும் கிளைத்தனவே இன்று நாம் காணும் தமிழ்ப் பண்களனைத்தும். இந்தப் பண்ணினின்றுந் தோன்றியவை இவை இவை யென்று இன்று நம்மால் அறியக் கூடவில்லை. அந்தப் பாகுபாடு நமக்கு வருமாயின் பண் ணறிந்து பாடுதல் எளிதாக முடியும். பத்துப் பாட்டு முதலிய சங்க நூல்களிலே பேசப்படும் பண்களைப் பெயரளவில்தான் அறிகின்றோம். அவற்றைப் பாடும் முறையையும் அவற்றிற்குரிய

பாட்டுக்களையும் நம்மால் அறியமுடியவில்லை. வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி முதலியன குறிஞ்சிப் பண்ணின் வகையோ வென்று கருத வேண்டியிருக்கிறது. இவ்வகையில் இசைவாணர்களின் ஆராய்ச்சியும் உழைப்பும் மிகுதியும் தேவைப்படுகின்றது.

பண்களைத் தோற்றுவித்தது போலவே ஐவகை நிலத்து வாழ்ந்தோரும். இசைக் கருவிகளையும் தோற்றுவித்தார்கள். குறிஞ்சி நிலத்து வாழ்ந்தோர் யாம யாழினையும் தொண்டகப் பறையினையும் கண்டார்கள். முல்லை நிலத்தோர் முல்லை யாழினையும் ஏறு கோட் பறையினையும் மேற்கொண்டார்கள். மருதயாழும் மணமுழவும் மருத நிலத்திற்குரியவாயின. விளரியாழினையும் மீன் கோட் பறையினையும் நெய்தல் நிலத்தோர் கொண்டார்கள். பாலை நிலத்தோர் பாலையாழினையும் நிரை கோட்பறையினையும் பெற்றார்கள். இவையே ஆதிகால யாழ் வகைகளும் பறை வகைகளுமாம். இவற்றினின்றுங் கிளைத்தெழுந்து வளர்ந்தனவே இன்று நாம் காணும் இசைக் கருவிகளனைத்தும்.

இவை கண்டது மட்டுமன்றிப் பண்கள் பாடப்படுவதற்குரிய காலத்தையும் அவர்கள் கண்டறிந்தார்கள். குறிஞ்சிப்பண் பாடுவதற்குரிய நேரம் யாமம் என்பதும், பாலைப்பண் பாடுதற்குரிய நேரம் நண்பகல் என்பதும், சாதாரிப் பண் பாடுதற்குரிய காலம் மாலையென்பதும், விளரிப் பண்ணிற்குப் பொருந்திய நேரம் எற்பாடு என்பதும், மருதப் பண்ணிற் குரிய நேரம் விடியல் என்பதும் அவர்கள் கண்டனவே.

இவ்வாறு பண்களைக் கண்டு அவற்றிற் குரிய இசைக் கருவிகளுடன் உரிய காலங்களில் அவற்றைப் பாடி இசையின்பம் பெற்று மகிழ்ந்தார்கள் நம் முன்னோர். இவற்றிற் பிறழ்தலின்றிப் பாடுதலையும் அவர்கள் பெருங்கடனாகக் கொண்டார்கள். பத்துப் பாட்டுள் ஒன்றாகிய மலைபடுகடாத்தில் பெருங் கௌசிகனார், கூத்தன் ஒருவனை ஆற்றுப்படுத்தும்பொழுது ''நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடி'' யெனவும், ''எருது எறிகாம ரோதையொடு நல்யாழ், மருதம் பண்ணியசை யனிர் கழிமின்'' எனவும் குறிஞ்சி நிலத்தில் குறிஞ்சிப் பண்ணையும் மருதநிலத்தில் மருதப் பண்ணையும் பாடிக் கொண்டு போகுமாறு அறிவுறுத்துவது இங்கு நினைவுகூர்தற்குரியதொன்றாம்.

## பாணரும் புரவலரும் :

இங்ஙனம் பாடுதல் தொழிலையே தம் தொழிலாகக் கொண்டு வாழ்ந்தவர்கள் பாணர், பாடினியர் எனப்பட்டனர். அவர்கள் அரசர்களையும் வள்ளல்களையுமடைந்து தம் திறங் காட்டிப் பரிசில் பெற்று வாழ்ந்தார்கள். அரசர்களும் வள்ளல்களும் பாணர்களைப் பெரிதும் ஆதரித்தார்கள். அரசர்களுக்கும் பாணர்களுக்கும் நல்லுறவு ஏற்பட்டிருந்தது. இயற் புலவர்கள் தாம் அரசர்களைப்பற்றியோ வள்ளல்களைப்பற்றியோ பாடுவதாக இருந்தால் பாணன் கூற்றாகவோ, பாடினி கூற்றாகவோ, பாணனை ஆற்றுப்படுத்துவதாகவோ, விறலியை ஆற்றுப்படுத்துவதாகவோ பாடும் முறையை மேற்கொண்டிருந்தார்கள். தம்மைப் பாணனாகவும் பாடினியாகவும் படைத்துக் கொண்டு பாடிய புலவர்களும் உண்டு. இம்முறையைப் புலவர்கள் படைத்துக்கொண்டு பாடியதற்குரிய காரணங்கள், பண்டைய புரவலர்க்கும் பாணர்க்கும் ஏற்பட்டிருந்த நல்லுறவும் பெரு மதிப்புமேயாகும். ஆகவேதான் இயற்புலவர்கள் இவ்வாறு தம்மைப் பாணனாகவும் பாடினியாகவும் படைத்துக்கொண்டு செய்யுள் இயற்றினார்கள்.

## இயலும் இசையும் :

இயற்றமிழின் பொற்காலம் சங்க காலம்; இசைத் தமிழுக்கும் பொற்காலம் அதுவே யாதலை நாம் அறிதல் வேண்டும். முதல், இடை, கடைச் சங்கங்கள் முத்தமிழையும் வளர்த்தன. அகத்தியர், இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழ்க்கும் இலக்கணம் வகுத்தாரெனக் கேட்கின்றோம். இசை நூல்கள் எண்ணற்றன தோன்றின. இயற்றமிழை வளர்ப்பதற்குச் சங்கம் இருந்தது போன்றே இசைத் தமிழை வளர்க்கத் தனிச் சங்கம் இருந்தது என்று கூறுவோருமுண்டு. திருக்கோவையாருள் வரும் பாட்டினை அவர்கள் மேற்கோளாகக் காட்டுவர். நினது உடல் இங்ஙனம் இளைத்துப் போகக் காரணம் என்னவெனத் தோழன் தலைவனைக் கேட்பதாக வரும் துறைப் பாட்டு அது.

''சிறைவான் புனல்தில்லைச் சிற்றம் பலத்துமென் [சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலினாய்ந்த வொண் [தீந்தமிழின்
துறைவாய் நுழைந்தனையோவன்றி ஏழிசைச் [சூழல் புக்கோ
இறைவா தடவரைத் தோட்கு என்கொலாம் புகுந்தெய்தியதே.''

'தமிழின் அகத்துறை புறத்துறைகளை ஆய்ந்து கற்கப் புகுந்தாயோ; ஏழிசைச் சூழலை யெய்தினாயோ; நினது உடல் இங்ஙனம் இளைத்திருக்கக் காரணமென்னவென்று பாங்கன் தலைவனைக் கேட்டதாக மணிவாசகனார் பாடியிருக்கின்றார். இதனுள் ஏழிசையெனக் குறிக்கப்படுவது இசையேயாகும். சூழல் எனப்படுவது சங்கமேயாகும். இயலை வளர்த்தது போன்றே இசைக்கும் தனிச் சங்கம் வைத்து வளர்த்தார்கள் பாண்டியர்கள் எனக் கூறுவார்கள்.

இக்கருத்தினை வலியுறுத்துவது போன்று காணப்படுகின்றது நளவெண்பாவிற் காணப்படும் நல்லதொரு செய்யுள். சுயம்வரம் நடைபெறுகின்றது. தமயந்திக்கு அருகிலிருந்த தோழி அரசர்கள் ஒவ்வொருவரையும் அறிமுகப்படுத்திக் கொண்டு வருகின்றாள். பாண்டியனை அவள் அறிமுகப்படுத்தும்பொழுது

''ஆழி வடிம்பலம்ப நின்றானும் அன்றொருகால்
ஏழிசை நூற் சங்கத் திருந்தானும்—நீள்விசும்பில்
நற்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
செற்றானும் கண்டாய்இச் சேய்''

என அறிமுகப்படுத்துகின்றாள். ஏழிசை நூற் சங்

கத்திருந்தான் பாண்டியன் என அறிமுகப்படுத் தப்படுவதை நாம் ஆராய்தல் வேண்டும். இசைத் தமிழ் வளர்ச்சிக்குச் சங்கம் இருந்ததென்பதும் அதனையும் பாண்டியர்களே ஆதரித்தார்களென் பதும் இதிலிருந்து நாம் அறியக்கூடிய செய்தி களாம்.

எனவே முதல், இடை, கடைச் சங்கங்களில் முத்தமிழிலும் வல்ல புலவர்கள் ஒருங்கிருந்து முத்தமிழையும் வளர்த்தார்களென்பதும் இயற் றமிழில் நூல்கள் எண்ணற்ற எழுந்ததுபோன்றே இசைத் தமிழிலும் நூல்கள் எழுந்தனவென்பதும் சங்ககாலம் இசைக்குப் பொற்காலமாக இலங்கிற் றென்பதும் அறியப்படும்.

கடைச்சங்க காலத்தை யடுத்து எழுந்தது எனக் கருதப்படும் சிலப்பதிகாரமும் முத்தமிழ்க் காப் பியமாகவே காணப்படுகின்றது. இசையாசிரியன் அமைதி, தண்ணுமையாசிரியன் அமைதி, குழலா சிரியன் அமைதி, யாழாசிரியன் அமைதி, அரங் கின் அமைதி முதலியன கூறும் அரங்கேற்றுக் காதை இசைக்கு இலக்கணங்கூறுங் காதையாக அமைந்திருக்கின்றது. கானல்வரியும் ஆய்ச்சியர் குரவையும், வாழ்த்துக் காதையும் அவ்விலக் கணங்கட்கேற்ற இலக்கியங்களாகக் காட்சியளிக் கின்றன. சிறப்பாக வரிப்பாடல்கள் நிரம்ப மேற் கொள்ளப்பட்டிருக்கின்றன அடிகளால். வரிப் பாட்டுக்கள் திணை நிலைவரி, கிணை நிலைவரி, முக முடைவரி, முகமில்வரி, படைப்பு வரியெனப் பல வகைப்படுமென்பர். அவையனைத்தும் இந்நூலுள் சிறப்பாகக் காணப்படுகின்றன.

கானல் வரி முதலியன திணை நிலைவரியின் பாற் படும். ஆற்றுவரி, ஊர்வரி முதலியன கானல் வரி யின் பிரிவுகளே. இவையனைத்தையும் அடிகளார் சிறப்புறக் கையாண்டிருக்கின்றார் தம் நூலுள். ஒன்றினை முன்னிலைப்படுத்தித் தம் கருத்தினைக் கூறுவதை முகமுடை வரியென்பர். காவிரியை முன்னிலைப்படுத்தித் தன் கருத்தைக் கோவலன் கூறியதாக இளங்கோ அடிகளார் கூறும் திறன் அறிந்து மகிழ்தற்குரிய தொன்றும்.

''திங்கள் மாலை வெண்குடையான் சென்னி
செங்கோ லதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் —
வாழி காவேரி
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவா
தொழிதல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென்று அறிந்தேன்
வாழி காவேரி

என்பது முகமுடை வரிக்கு எடுத்துக்காட்டாகும்.

சிலம்பினை யடுத்தும் அதே காலத்தும் தோன்றிய நூல்களுள்ளும் இசையின் பெருமையை ஆசிரியர் கள் விளக்கியிருக்கிறார்கள்.

திருத்தக்க தேவர் இயற்றிய சிந்தாமணியுள்ளும் இசைத்திறம் சிறப்பாகப் பாராட்டப்பட்டிருக் கின்றது. காந்தருவதத்தையார் பாடிய முறை பின்வருவோர் அனைவருக்கும் வழிகாட்டியாக இருக்குமாறு அதனுள் ஆசிரியரால் காட்டப்பட் டிருக்கின்றது.

**நாயன்மார்கள் வளர்த்த இசை :**

கி.பி. ஏழாவது நூற்றாண்டிலிருந்து பதின் மூன்றாம் நூற்றாண்டுவரை தெய்வீக இசை தமிழகத்தில் தோன்றிச் செழிப்புறிருந்தது. இக் காலத்தின் முற்பகுதியைத் தெய்வீக இசைத் தோற்றத்தின் காலமாகவும் பிற்பகுதியை அதன் வளர்ச்சிக்குரிய காலமாகவும் கொள்ளவேண்டும். ஏழாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டு வரை நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி நாளும் இன்னிசையால் நற்றமிழ் பரப்பினார்கள். பத்தாம் நூற்றாண்டிலிருந்து பதின்மூன்று அல்லது பதினான்காம் நூற்றாண்டுவரை சோழவரசர்கள் சிவநெறிச் செல்வராயிருந்து தேவாரங்களை நாடு முழுவதும் பரப்பினார்கள்.

இடைக்காலத்தில் தோன்றிய அடியவர்களனை வரும் இன்னிசையால் இனிய தமிழைப் பரப் பினார்கள். இன்னிசையோடு பாடல்களைப் பாட வேண்டிய சூழ்நிலை அன்றிருந்ததென அறியக் கிடக்கின்றது. இசையில் மக்கள் பெருவிருப்ப முடையவர்களாக அன்றிருந்தமையால் அதனையே கருவியாகக் கொண்டார்கள் அடியார்கள் என்று கொள்ளல் தகும். சமணம் போன்ற பிற சமயங் களின்றும் மக்களை விடுவிக்க அடியார்கள் முயன்றார் களாதலின் அனைவருள்ளத்தையும் கொள்ளை கொள்ளும் இசையே அம்முயற்சி முற்றுப் பெறு தற்கேற்ற கருவியென்றும் அடியார்கள் கருதியிருக் கலாம். எனவே இயற்றமிழும் இசைத்தமிழும் அடியார்களால் பரப்பப்பட்ட காலம் இதுவே யாகும்.

மக்களின் உள்ளத்தூறும் உணர்ச்சிகளை மட்டும் வெளியிட்டு வந்த இசை - அகப்பாட்டாக மட்டும் இருந்த இசை - தெய்வத்தைப் பற் றிய கருத்துக்களையும் வெளியிடுவதற்குரியதாக ஆயிற்று. அடியவர்கள் தெய்வீக இசையாக அதனை மாற்றியமைத்தார்கள். இசை வளர்ச்சி யில் இக்காலம் சிறந்ததொரு காலமாக விருந்தது. பாடப்படுகின்ற பொருளில் மாற்றங்கண்டார்கள் அடியவர்கள். காதலுணர்வைப்பற்றி மட்டும் விளக்கிய இசை, கடவுள் உணர்வையும் விளக்கு மிசையாக மாறிற்று. சிலவிடங்களில் முன்னோர் கொண்ட முறையையும் விடாது தம்மைத் தலைவி யாகவும் இறைவனைத் தலைவனாகவும்கொண்டு அடியவர்கள் இன்னிசை பாடி மகிழ்ந்துமிருக்கின் றார்கள். வண்டு, கிளி முதலியவற்றைத் தாம் இறைவன்பால் தூது விடுவதாக அடியவர்கள் பாடியிருக்கும் பாடல்கள் அதற்கு எடுத்துக்காட் டுக்களாக அமையும்.

தேவாரப் பாடல்கள் இடைக் காலத்தில் தோன்றிய இன்னிசை மலர்கள். ''நாளும் இன் னிசையால் நற்றமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்'' எனச் சிறப்பிக்கப்பட்ட ஆசிரியர் தேவார மூவர் களில் தலைசிறந்தவராவர். சூலை நோயால் துடித்த பொழுது நாவுக்கரசர் தாம் செய்துவந்த தொண் டினைச் சொல்லுகின்றார்,

''தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்''

என்று. இவர் தேவார ஆசிரியர்களிலே இரண்

டாவது வைத்து எண்ணத்தக்கவர். தம்பிரான் தோழராய சுந்தரமூர்த்தியும் தேவார ஆசிரியரே யாவர். இம்மூவரும் இடைக்காலத்தில் — இசை வளர்ச்சி குன்றியிருந்த காலத்தில் இன்னிசை பாடி இசைத் தமிழை வளர்த்தார்கள். இவர் களுடைய பாடல்களிலே வரும் பண்கள் பலவாம். நட்டபாடை, தக்கராகம், பழந்தக்க ராகம், தக் கேசி, குறிஞ்சி, வியாழக் குறிஞ்சி, மேக ராகக். குறிஞ்சி, யாழ்முரி, இந்தளம், சீகாமரம், காந் தாரம், செவ்வழி, காந்தார பஞ்சமம், கொல்லி, சாதாரி முதலியன இவர்களுடைய பாடல்களில் பயின்று வந்திருக்கின்றன. எனவே இவையே யன்றித் திரு நேரிசை, திருவிருத்தம், திருக்குறுந் தொகை, திருத்தாண்டகம் முதலியனவும் இருக் கின்றன. இவையனைத்தும் இன்று வழங்குகின்ற இசையுள் எப்பண்களை யொத்திருக்கின்றன வென் பதனையறிந்தால் அவற்றை அம்முறையோடு பாட முடியும். பண்டைத் தமிழ்ப்பண்கள் இன்று வழக் கிலில்லாமையால் அவற்றை இன்று வழங்கும் பண்களோடே ஒப்பிட்டு அறிய வேண்டியிருக் கின்றது. வள்ளல் இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களாலும் இவரின் திருமகனு ராகிய உயர்திரு இராஜா சர் முத்தையா செட்டி யார் அவர்களாலும் தோற்றுவிக்கப் பெற்ற சென்னைத் தமிழிசைச் சங்கத்திலும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் இப்பெருந்தொண்டினைச் செய்து வருவதாவது பாராட்டிற்குரியது. அத் தொண்டு மேலும் மேலும் வளர்ந்து தேவாரப் பண்களின் இயல்பை உள்ளபடியறிந்து அனைவரும் ஓதி மகிழும் நாள் விரைவில் வந்தெய்துமாக.

இம்மூவரேயன்றி மணிவாசகனாரும் இசைக்குப் பெருந்தொண்டு புரிந்தாரென்பதை நாம் இங்கு உணரவேண்டும். திருவெம்பாவைப்பாட்டு, அம் மானைப்பாட்டு, கோத்தும்பிப் பாட்டு, தெள் ளேணப்பாட்டு, பூவல்லிப் பாட்டு, ஊசற் பாட்டு, குயிற் பாட்டு முதலியனவும் இசைக்கு உரிய பாட்டுக்களேயாம். இவற்றையும் இவற்றைப் பாடுமியல்பையும் அறிந்து பாடி மகிழ்தல் நம் கடனும்.

### ஆழ்வார்கள் வளர்த்த இசை :

சைவ அடியவர்களேயன்றி வைணவ அடியவர் களும் இம்முறையை மேற்கொண்டு இறைவனைத் துதித்தனர். நம்மாழ்வார் பக்தியிலேயன்றிப் பண்களையமைத்துப் பாடுதலிலும் சிறந்தவராய் விளங்கினர். பழந்தமிழ்ப் பண்களும் பழைய இலக்கணத்திற் கேற்ற தாளமும் அவருடைய பாசுரங்களில் அமைந்திருப்பதை யறியலாம். வைணவப் பெரியார் அதனைத் தேவகானம் எனப் பாராட்டுவர். தேவாரத்திற் காணப்படும் தக்க ராகம், காந்தாரம், நட்டபாடை, இந்தளம் முதலிய பண்கள் திருவாய் மொழியிலும் காணப் படுகின்றன. தேவாரத்திற் காணப்படாத பண்கள் சிலவும் இதனுள் காணப்படுகின்றன. அவை செருத்தி, முதிர்ந்த விந்தளம், வியந்தம், நாட் டம் முதலியனவாம்.

பாணர் குலத்திற் பிறந்து பரந்தாமனுடைய அழகைப் பாதாதி கேசமாக வருணித்து இசை யின் பெருமையை யெல்லோருமறியச் செய்த திருப் பாணாழ்வாரின் வரலாற்றை யறியாதார் யார்?

இங்ஙனம் நாயன்மார்களும் ஆழ்வார்களும் இடைக் காலத்தில் தோன்றிச் சைவ வைணவர் களை வளர்த்ததோடன்றி இசையையும் வளர்த் தார்கள் என்பது இதுகாறுங் கூறியவாற்றால் அறியப்படும்.

### சோழர்கள் தொண்டு :

தேவாரப் பாடல்களைப் பரப்புவதற்குச் சோழர்கள் செய்த தொண்டு சொல்லுந்தரத் தன்று. தேவாரப் பண்களிலே சிலவற்றைப்பற்றி யாவது நாம் இன்று அறிந்து கொள்கின்றோமென் றால் ஓதுவார்கள் சிலராவது இங்குமங்குமாகக் காணப்படுகின்றார்களென்றால் அவையனைத்திற் கும் காரணமாக விருந்தவர்கள் சோழர்களே யென்பதை நாமுணரவேண்டும். தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டிய அரசன் இராசராசனேயாவன். அவன் சைவத்திடத்தும் தமிழிடத்தும் நிறைந்த அன்புடையவன். அவன் தஞ்சைக் கோவிலுக்கே யன்றி மற்றைய கோவில்களுக்கும் அளித்த நில தானங்கள் அளவில. தஞ்சைப் பெரிய கோவிலிலே நாள்தோறும் திருப்பதியம் விண்ணப்பஞ் செய்ய நாற்பத்தெண்மரை நியமித்திருந்தான். அதன் பொருட்டு அவர்களுக்கு நிலதானமும் வழங்கி யிருந்தான். இச்செய்தி இராசராசனுடைய கல் வெட்டுக்களிலிருந்து நாமறியக் கிடக்கின்றது.

இராசராசன் மட்டுமன்று, அவன் மகன் இராசேந்திர சோழனும் இம்முறையையே மேற் கொண்டு தேவாரப் பண்களை வளர்த்தான். அவனால் கட்டப்பட்ட கோவில் தஞ்சைப் பெரிய கோவிலை யொத்த கங்கை கொண்ட சோழீச்சுர மாகும். அதன்கண் நாள்தோறும் தேவாரம் ஓதப்பட்டு வந்தது. தேவாரம் ஓதுவார் இருந்து பாடவென்றே மண்டபம் ஒன்று கோவிலினுள் அமைத்திருந்தான். இது தேவார மண்டபம் என வழங்கப்பட்டது. இராசேந்திர சோழனுடைய கல்வெட்டு ஒன்றால் இச்செய்தி அறியப்படுகின் றது. இவர்களின் பின்வந்த சோழர்களும் இம் முறையிலேயே கோவில்களிலே தேவாரம் ஓதப் படவேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள்.

குலோத்துங்க சோழன் பெரியபுராணம் பாடக் காரணமாக விருந்த பேரரசன். அவனுடைய தேவியர்களில் ஒருவர் ஏழிசை வல்லபியென்னும் பட்டப் பெயரையுடையவர். குலோத்துங்க சோழன் இசையிடத்துப் பெற்றிருந்த பேரன்பால் ஏழிசை வல்லபியென்னும் இசைவிருதுபெற்ற மங் கையை மணந்து வாழ்ந்தான் என்று கூறுவர்.

இங்ஙனம் சோழர்கள் இன்னிசை பரவச் செய்த தொண்டுகள் எண்ணில. சோழர்களைச் சமயங்களையும், இசையையும் வளர்த்த பேரரசர் கள் எனலாம்.

எனவே இடைக்காலத்தில் தோன்றியது தெய் வீக இசையே யென்பதும் அதனை நாட்டில் நிலை பெறச் செய்தவர்கள் சோழர்களே என்பதும் இது காறும் கூறியவாற்றால் பெறப்படும்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

**வி. கணபதி ஸ்தபதி, பி. ஏ.**
கண்காணிப்பாளர்
அரசினர் சிற்பக்கலைப் பயிற்சிநிலையம், மாமல்லபுரம்

# படிமக் கலை



முன்னுரை :

தமிழ்ப் பெருமக்கள் பேணிவளர்த்த கலைகளில் நாட்டியம், ஓவியம், சிற்பம், இசை, கவிதை ஆகிய ஐந்தும் அழகுக்கலைகளாகும். முன்னைய மூன்றும் கண்வழிச் சென்று உள்ளத்தை இன்புறச் செய்வன; பின்னைய இரண்டும் செவிவழிச் சென்று உள்ளத்திற்கு உவகையூட்டுவன.

கண்ணையும் கருத்தையும் கவரக்கூடிய ஒரு காட்சியை ஒருவன் காண்கிறான். அக்காட்சி புலன் வழிச் சென்று உள்ளம் என்ற திரையில் நிழலிடு கிறது; இன்ப உணர்ச்சி தோன்றுகிறது. இஃது உள்ளத்தை நிரப்பிப் பொங்கிவழிகிறது. இவ் வுணர்வை, தான் பெற்ற இன்பத்தை, பிறர் உள்ளத்தில் படைக்கும் ஆற்றலே கலை எனப் படும். உள்ளத்தில் பொங்கிவழியும் உணர்ச்சிப் பெருக்கைச் சுவை குன்றாது முறைப்படுத்தி எடுத் துரைப்பதால் கவிதை பிறக்கிறது; வரைவதால் ஓவியம் தோன்றுகிறது; வடிப்பதால் சிற்பம் உரு வாகிறது.

படிமம் :

ஒன்றுக்கு ஈடாக அவ்வொன்றைப் போலவே அமையும் மற்றொன்றுக்குப் 'படி' என்று பெயர். அதாவது மூலத்தின் பிரதி, 'படி'யெனப்படுகிறது. இதனையே 'படிமம்' என்றும் 'படிவம்' என்றும் அறிஞர் கூறுவாராயினர். ஆனால் கலைத்துறையில் இச்சொல் மிக ஆழ்ந்த கருத்தில் கையாளப் படுகிறது.

இயற்கை வடிவங்களையும் பிற காட்சிகளையும் உள்ளதை உள்ளவாறு உரைத்தலோ, உருவாக் குதலோ கலைப்படைப்பு என்று நாம் கருதுவ தில்லை. உள்ளதை உணர்ந்தவண்ணம் எடுத் துரைப்பதும் உருவகிப்பதும் கலைத்திறம் என்று கொள்கிறோம். எனவே உணர்வின் பிரதிபலிப்பே கலையென்பதாகிறது. விரித்துக் கூறின், மனத் திரையில் நிழலிட்ட உணர்வு மயமான காட்சி யின் பிரதிபிம்பத்தையே படிவம் என்றும் படிமம் என்றும் நம் தமிழ் மக்கள் கொண்டனர். இதே பொருள்பற்றி, வடமொழி நூல்களும் 'பிரதிமா' என்றே இக்காட்சியை அழைக்கின்றன.

பொதுவாகப் படிமம் என்ற சொல்லைத் தெய் வத் திருமேனிகளைக் குறிப்பதற்கே தொன்று தொட்டு வழங்கி வருகிறோம். எடுத்துக்காட்டாக, தொல் இலக்கியமான சிலப்பதிகாரத்தில் கண் ணகியின் தெய்வ வடிவைப் படிமம் என்றே இளங் கோவடிகள் குறிப்பிடுவதைக் காண்கின்றோம்.

''மேலோர் விழையும் நூனெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்து
இமையவர் உறையும் இமையச் செவ்வரைச்
சிமையச் சென்னித் தெய்வம் பரசிக்
கைவினை முற்றிய தெய்வப் படிமத்து''

என்று சிலப்பதிகாரத்திலும் மேலும் கடைச்சங்கப் புலவர்களில் ஒருவராகிய சீத்தலைச் சாத்தனுர் என்பார் தனது மணிமேகலை என்ற காப்பியத்தில்,

''அணியிழை யந்தர மாறு வெழுந்து
தனியாக் காதற் ருய்கண்ண கியையும்
கொடைகெழுதாதை கோவலன்ற ன்னையும்
கடவு ளெழுதிய படிமங் காணிய'' என்ற பாட்டிலும்,

''சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும்
மையறு படிவத்து வானவர் முதலா'' என்ற அடியிலும்,

தெய்வ வடிவத்தைக் குறிக்கப் 'படிமம்','படிவம்' என்ற சொற்களைக் கையாளுவதைக் காண்கின் ரேம்.

கண்ணுக்கும் கருத்திற்கும் அகப்படாமல் அவற்றைக் கடந்து நிற்கும் பேரின்பப் பொருளின் பேரழகை அகக்கண்களால் கண்டு, அவ்வுணர் வின் பிரதியாகக் கடவுட் படிமங்கள் அமைக்கப் படுகின்றன. கண்ணகியின் புற அழகை விடுத்து அக அழகையே மனத்திரையில் கண்டு, அவளது இனிய வடிவத்தைப் படிமம் என்றழைத்து, தெய் வத் தன்மையை இளங்கோவடிகள் அதில் ஏற்றிக் காட்டுகிருர். இன்று நாம் காணும் புத்த படிமத் தின் வடிவழகு புத்தரின் இயற்கையான புற அழகு அல்ல. அஃது யாதெனில், புத்தர்தம் அகவழகின் புறத்தோற்றமே. எனவே உருவமான பொருளின் புற அழகைவிடுத்து அதன் அக அழகையும், அருவமான பொருளின் தன்மையைப் புறத்தோற் றத்தாலும் சித்தரித்துக் காட்டுவது படிமக்கலை யின் சீரிய பணியாகும். இது, தமிழகக் கலைகளின் பொதுவான — சிறப்பான மரபாகும் என்ருல் மிகையாகாது.

## சிற்பக்கலை மரபு :

தமிழகச் சிற்பக்கலை மரபின் சிறப்பியல்புகள் பலப்பல. அவற்றுள் குறிப்பிடத்தக்க ஒரு சில வற்றை இங்கு நினைவு கூர்வோம்.

உணர்வின் பிரதி பிம்பமே உண்மைக் கலை யாகும் என்ற கருத்து, சிற்பிகளின் உள்ளத்தில் நிலையாகப் பதிந்துவிட்டதனுல் இயற்கைக் காட்சி களையும் இயற்கை வடிவங்களையும் 'பிரதி' செய் வதை விடுத்து முற்றிலும் உணர்வுமயமான மனக்காட்சிகளையும், கருத்துக்களையும், உண்மை களையும், ஆராய்ச்சி முடிவுகளையும் சித்தரித்துக் காட்டுவதிலேயே தொன்று தொட்டுத் தமிழகச் சிற்பிகள் நாட்டம் கொள்வாராயினர். ஆனுல், அதே நேரத்தில், இயற்கையை அறவே புறக் கணித்து முற்றிலும் புதுமையான வடிவங்களையும் காட்சிகளையும் அவர்கள் படைக்கவில்லை. அதற்கு மாருக, இயற்கையோடு நெருங்கி உறவாடி, அதோடு இசைந்து, அதன் இயக்கங்களையும், சிறப்பியல்புகளையும் நன்கு ஆராய்ந்து, உணர்ந்து, அவற்றைத் துணைக் கருவிகளாகக் கொண்டு, அகத்தே தோன்றிய உணர்ச்சிகளை அழகு மிளிரப் படைத்துக் காட்டியுள்ளார்கள், நமது தமிழகச் சிற்பிகள் என்ருல் மிகையான கூற்ருகாது.

வேறெந்த நாட்டுச் சிற்பக்கலை மரபிலும் காண முடியாத ஒரு சிறப்பியல்பு நமது மரபிற்கு உண்டு. சிற்ப வடிவங்கள் எதுவாயினும் சரி இயற்கை அமைதியில் காணப்படுவதில்லை. சிற்ப வடிவங்கள் நின்ருலும், அமர்ந்தாலும், கிடந்தாலும், எக் கருத்தை உணர்த்துவதானுலும் அவை ஆடற் கலைப் பாணியிலேயே அமைக்கப்படுகின்றன. ஆடற்கலை ஒரு பண்பட்ட கலை. உள்ளத்தில் தோன்றும் இயல்பான உணர்ச்சிகளை மிகத் தெளி வாகவும், சுவையோடும், நெஞ்சிலே நிலைத்து நிற்கும் வகையிலும் ஆடிக்காட்டும் கலை. இதனை முக பாவனைகளாலும், உடல் ஒடிவு, வளைவு, குழைவு, சுழிப்பு முதலிய அமைதிகளாலும் பிற வகை—அவிநயங்களினுலும் சித்தரிக்கிறது. ஆடற் கலை வாயிலாகக் கருத்துக்கள் சுவையோடும் முறையோடும் உணர்த்தப்படுவதை உற்று நோக் கித் தனது வடிவத்திலும் இது இடம் பெற வேண்டுமென்று முதன் முதலில் எச்சிற்பி உணர்ந்து சிற்பக்கலையில் இதனை ஏற்றினுனே அவன் உலகக் கலாமேதைகளில் ஒருவனுகக் கருதப்படவேண்டுமென்ருல், கலை உள்ளம் பெற் ருேர் இதனை மறுக்கமாட்டார்கள். நமது சிற்ப வடிவங்கள் ஆடற்கலைப் பண்பினைப் பெற்றிருப்ப தால் இவை தோற்றுவிக்கும் கலையின்பத்திற்கு எல்லையே இல்லை.

## சிற்பங்கள் :

நாட்டிய இலக்கணத்திற் கேற்றவாறு சிற் பங்கள் இயற்றப்பட்டிருப்பதாகத் தோற்றத் தளவில் தெரிவதாயிருப்பினும், நாட்டிய இலக் கணத்தின் ஜீவனை உணர்ந்து கொண்ட சிற்பி, தனது தேவைக்கேற்றவாறும், இடத்திற்கேற்ற வாறும், செய்யப்படு பொருளுக்கேற்றவாறும், உணர்த்தப்படும் கருத்துக்கேற்றவாறும் சிறு சிறு மாற்றங்களைக் கற்பித்துத் தனது படைப்புக்களை உணர்ச்சி மயமாக்குகிருன். சிற்பியின் மனம் எவ் வெவ்வாறு வளைகிறதோ, சுழிகிறதோ, நெளி கிறதோ, குழைகிறதோ அவ்வாறெல்லாம் அவனது வடிவங்கள் உருவெடுக்கின்றன. ஆடற் கலை வல்லுநர்கள் காட்ட முடியாத முகபாவங் களையும் உள்ளுணர்வுகளையும் அவிநயச் சிறப்புக் களையும் மிகத் தேர்ந்த முறையில் சிற்பி அமைத்து விட முடிகிறது. அவன் கருத்தழகையே வலியுறுத் துவதால் மனித உடலுக்குரிய உடற்கூறுகளினுல் விளையும் இடையூறுகளை வெல்ல வேண்டிய நிலை அவனுக்கு ஏற்படுகிறது.

எடுத்துக்காட்டாக, இறைவன் இப்பூவுலகைப் படைத்து, அதில் கோடி இன்பங்களை வைத்து நம்மிடம் வழங்கியிருக்கிருன். இஃது எக்காரணம் பற்றியென்று ஆராய்ந்த அறிஞர், இதனை நம்மீது இறைவன் கொண்ட கருணையினுலும் அன்பினுலும் என்று கூறுவர். எனவே சிற்பியானவன் இறை வனைக் கருணை வடிவமாகவும் அன்பின் உருவ

மாகவும் உணர்கிறான். கருணைக்கும் அன்பிற்கும் வடிவம் தரவேண்டிய பணி அவனைச் சாருகிறது. கருணை, அன்பு ஆகிய குணங்களே உருத்தரிக்கு மானால் இவ்வுரு எங்ஙனம் இருத்தல் வேண்டும் என்பதை உள்ளூர ஆராய்ந்து, சிந்தித்து வடிவம் அமைக்கும்பொழுது மனித உடற்கூறுகள் பல இடையூறுகளைத் தோற்றுவிப்பதைக் காணுகிறான். கருணையும் அன்பும் மலர் போன்ற மென்மை யான குணங்கள்; நெஞ்சை உருக்கும் தன்மையன; ஆன்மாவின் இன்ப வடிவத்தை உணர்த்துவன. இவற்றை வடிவத்திலே தெளிவாகக் காட்டுதற்கு மனித உடலின் நரம்புகளும் எலும்புகளும் தசை களின் மேடு பள்ளங்களும் தடைகளாக நிற்கின் றன. இவை உடலின் விலங்குத் தன்மையைக் காட்டும் விறைப்பையுடையன. ஆகவே இவற் றைக் கட்டுப்படுத்தி, மறைத்து, அளவோடு உருண்டு, திரண்ட, சதைப்பற்றோடே கூடிய, உடலமைப்பில் வைத்துக் காட்டினால்தான் தன் கருத்து விளக்கம் பெறும் என்ற முடிவுக்குச் சிற்பி வருகிறான். முகத்திலே மட்டும் கருணை அன்பு ஆகிய உள் உணர்வுகளை—பண்புகளை —பிரதி பலித்துக் காட்டுவது அவனுக்கு மன நிறைவு தரவில்லை. முகத்திலே தவழும் கருணை, அன்பு ஆகிய பண்புகள் தடையின்றி உடலெல்லாம் வழிந்தோடுமாறு காட்ட விழைகிறான். எனவே இயற்கை உடலமைப்பை — உடற் கூறுகளைத் தன் வயமாக்கி — இன்னும் சொல்லப் போனால்— அடிமைப்படுத்திக் கருணை, அன்பு, சாந்தம், சிருங் காரம், மென்மை, முழுமை ஆகிய பண்புகள் பொருந்தியதாக வடிவத்தை இயற்றிவிடுகிறான். இதற்குச் சான்றாகப் புத்தர் படிமங்களும், திரு மாலின் வடிவங்களும், சிவமூர்த்தங்களும், தேவி யாரின் இனிய வடிவங்களும் அமையப் பெற்றிருப் பதைக் கூறலாம். படிம உடற்கூறுகளும் படிம அமைதிகளும் இது போன்ற காரணங்களைப்பற்றி இயற்கை உடற்கூறுகளினின்றும் இயற்கை நாட் டிய அமைதியினின்றும் வேறுபடுகின்றன என் பதை உணர்தல் வேண்டும்.

சிற்பக் கலையில் மனித வடிவங்களை விடுத்துப் பல்வேறு விலங்குகளின் வடிவங்களையும் காணு கிறோம். வீரவுணர்ச்சிக்கு உவமையாக நாம் எடுத் துக் காட்டுவது சிங்கம் அல்லது புலியேயாகும். அசோகனின் சிம்மத்தூண்களும், சோழனின் புலிக் கொடியும், பல்லவரின் சிம்மக்கால்களும் இதை நினைப்பூட்டுகின்றன. விலங்கினங்களில் சிற் பக் கலைஞர்களின் கவனத்தையும் ஆர்வத்தையும் ஈர்த்தது சிம்மவடிவமே.

சிற்ப உலகிலே நடமாடும் சிம்மவடிவம் இயற் கைச் சிம்ம வடிவத்தை ஏதோ ஓரளவு ஒத்திருப் பினும் பெருமளவு மாறுபட்டிருப்பதையே காண் கிறோம். இவ்வடிவத்தைப் பார்த்துச் சிம்மம் என்று உறுதியாகக் கூறுவோர் மிகக் குறைவு. இதனைக் கற்பனை வடிவம் என்று புறக்கணிப்போர் பலர் உண்டு. உண்மை யாதெனில், சிற்பியான வன் இவ்வடிவத்தில் உடற் சாயலைக்காட்டி அதற் கேயுரிய சிறப்பியல்புகளை வலியுறுத்திக் காட்டி யுள்ளான். சிம்மம், உடலுறுதிமிக்கது ; வல் லமை வாய்ந்தது; வேகமாய்ப் பாய்வது; பார்ப் போர் உள்ளத்தில் பய உணர்ச்சியைக் கிளறுவது; வீரம் மிக்கது. எனவே, வீரத்திற்குச் சின்னமான சிம்மத்தின் முழுவடிவத்தை அகத்திலே கொண்டு அதன் சிறப்பியல்புகளைத் துலக்கமாகவும், நாட்டிய அமைதியிலும் காட்டுகிறான். இயற்றிய வடிவம் சிம்மத்தையும் நினைப்பூட்ட வேண்டும்; சிம்மத் தின் தன்மைகளையும் பிரதிபலிக்க வேண்டும். எனவே முறிந்த புருவமும், உருண்டு மிரட்டும் கண்களும், இளித்தவாயும், கோரைப் பற்களும், மடித்த உதடும், சுருக்கிய நுதலும் முகத்திலே முறைபட அமைத்து உடல் உறுதிப்பாட்டினைத் திரண்டு பருத்த சதைப்பற்றினாலும் புடைத்த நரம்புகளினாலும் வீரச்சுவைமிளிர இயற்றுகிறான். வீரத்தையும் பய உணர்ச்சியையும் வலியுறுத்த வேண்டியிருப்பதால் ''சிம்மத்தின் கால்களில் புலி நகங்களை வைத்துக் காட்டுக'' என ஒரு சிற்ப நூல் சுட்டிக் காட்டுகிறது. இத்தகைய வீர வடிவத்தில் எத்தனை அழகுதான் காட்டப்பட் டுள்ளது? சோகத்திலும், கோபத்திலும், பயத் திலும் இன்னும் பல்வேறு உணர்ச்சிகளிலும் புற அழகையும் சுவைபட அமைத்துக் காட்டிய நமது சிற்ப மரபை என்னென்று புகழ்வது?

## சிற்ப வேலைப்பாடுகள் :

சிற்ப அலங்கார வேலைப்பாடுகளில் பலவித மான இலைகள், காய்கள், பூக்கள், கொடிகள் ஆகியவற்றைக் காண்கிறோம், இயற்கையில் காணப்படும் செடிகொடிகளைக்கூட உள்ளதை உள்ளபடியே நம்மரபில் காட்டுவதில்லை. அதற்கு மாறாகச் செடி கொடிகளின் நெளிவு, சுழிவு, மடிப்பு, விரிப்பு, கோவை, அடுக்கு, மினுமினுப்பு, மென்மை, இயல்பான தன்மை, அதன் இயக் கங்கள் இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து உணர்ந்து அவற்றை மனங்கவர் பாவனைகளில் சித்தரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இத் துறையில் சிற்பியின் கற்பனை எவ்வளவு வளமாக இருந்தது என்பதை இவ்வடிவங்களை நேரில் பார்த்தே சுவைக்க முடியும். இவ்வடிவங்களைக் ''கருக்குகள்'' என்றும், ''பாளை'' என்றும், தமிழகச் சிற்பிகள் குறிப்பிடுவார்கள். தமிழகச் சிற்ப மரபின் போற்றுதற்குரிய சிறப்பியல்புகளில் இதுவும் ஒன்றாகும். இது மட்டுமன்று, இயற்கை யில் காணும், பறவை இனங்களின் சிற்ப வடிவங் கள், சிற்பியின் கரங்களிலே தனித்தன்மை வாய்ந் தனவாக வடிவெடுக்கின்றன.

நமது சிற்பிகள் தங்கள் சிற்பவடிவங்களில் உடல் அழகைக் காட்டிய பாங்கே தனி. ஆடை களை உடலோடு ஒட்டியவாறு அமைத்து, ஆடை யின் எல்லையை மட்டும் உருட்டிக் காட்டி, உடல் திரட்சியை, அதன் கவர்ச்சியை நன்கு வெளிப் படுத்துகிறார்கள். கலைத்துறையில் இது ஒரு மகத் தான சாதனை. அதுமட்டுமல்ல, உடலுறுப்புக்களுக் கேற்றவாறு பொருத்தமான இடங்களில் கண் கவர் அணிகளைப் பூட்டி அழகு சேர்த்த முறையும் பாராட்டுதற்குரியதாகும். இவற்றுக்கெல்லாம் மேலாக, சிற்ப வடிவங்களின் தலைக் கோலங்களிற் றான் எத்தனை எத்தனை மனங்கவர் வகைகள்?

## நம் நாட்டு - மேலைநாட்டுச் சிற்பங்கள் :

நமது நாட்டுச் சிற்ப வடிவங்களுக்கும் மேலை நாட்டுச் சிற்ப வடிவங்களுக்கும் நிரம்ப வேறுபாடு உண்டு. நமது சிற்ப வடிவத்தை ஒரு சிலர் தவருகக் கருதுகிருர்கள். மனித உடலின் வெவ் வேறு உறுப்புக்களின் அழகை வெவ்வேறு மனித வடிவங்களில் பார்த்து அவ்வாறு தனித்தனியே கண்டு சுவைத்த உறுப்புக்களையெல்லாம் ஒன்று சேர்த்துக் கற்பனையாக ஒரு முழு வடிவத்தை உருவாக்குவதாக நினைக்கிருர்கள். இஃது ஒரு தவருன கருத்தாகும். மேலை நாட்டுச் சிற்ப வடி வங்கள் மனித உடற் கூறுகளை நூற்றுக்கு நூறு செம்மையாகக் காட்டி மனித அழகின் புறத் தோற்றத்தையே வலியுறுத்துகின்றன. பெண் தெய்வம் ஒன்றின் வடிவத்தை மிக அழகிய ஒரு பெண்ணின் வடிவமாகவே காட்டியுள்ளார்கள். இவ்வழகில் கூடுதல் குறைவு காணப்படின் அவர் களின் கண்களை அவை உறுத்துகின்றன. எனவே புற அழகையே காட்ட முயலும்பொழுது அதற்கு ஓர் எல்லையும் தோன்றி விடுகின்றது.

## கலைத்திறன் :

நமது சிற்ப மரபு காவிய மரபை ஒட்டியது. ஒவ்வோர் ஆண், பெண் வடிவத்தையும் ஒவ் வொரு காவியம் என்றே கலா இரசிகர்கள் கூறு வார்கள். எடுத்துக்காட்டாக, ஒரு கவிஞன் பெண் ஒருத்தியின் இனிய வடிவத்தைக் காணும் பொழுது அத்தோற்றம் அவனது உள்ளத்தில் இன்ப உணர்வைத் தோற்றுவிக்கிறது. அதனைப் பிறர் உள்ளத்தில் ஏற்றிக் காட்டுவதற்குப் பொருத்தமான சொற்களைக் கொண்டும், உவமை அணிகளைக் கொண்டும், இசைத்துக் காட்டுகிருன். இதேமுறையில் சிற்பியும் தன் உணர்வில் நிற்கும் வடிவத்தைக் கல்லிலே ஏற்றி அதே உவமை அணி களை அவன் வடிக்கும் வடிவத்திலும் பொருத்தி, தான் அருவமாக உள்ளத்தில் கண்ட வடிவத் திற்கு உருவம் அளிக்கிருன். கவிஞனின் உள்ளத் தில் தோன்றியது ''அருவம்''. இதற்கு அவன் கொடுப்பது ''சொல் வடிவம்''. சிற்பியின் உள்ளத்தில் தோன்றியது ''அருவம்''. இதற்கு அவன் கொடுப்பது ''கல் வடிவம்''. இவ்விரு வரும் தங்கள் உள்ளத்திலே கண்டு இன்புற்ற பெண் வடிவத்தின் முகத்தை முழு மதியிலும், நெற்றியைப் பிறையிலும், புருவத்தை, கண்களை மலர்களிலும், கூந்தலை மயில் தோகையிலும், இடையைத் துடியிலும், தொடையை யானையின் துதிக்கையிலும், இங்ஙனம் ஒவ்வோர் உறுப்பை யும் ஒவ்வோர் இயற்கை வடிவத்திலும் காணு கிருர்கள். இவற்றைச் சிற்ப வடிவத்தில் சிறப் பாக அமைத்துக் காட்டுவதே நம் நாட்டுச் சிற் பக்கலை மரபின் ஒப்பற்ற செயலாகும். இங்ஙனம் ஒவ்வொருவனும் வெவ்வேறு விதமான இயற் கைப் பொருள்களிலும் காணவும் கூடும். இதனுல் வடிவங்களும் வெவ்ரேக மாறும் தன்மை பெறு கின்றன. எனவே நமது கலைமரபிற்கு எல்லையென் பது இல்லை. கற்பனை விரியும் தன்மையுடையது. அதேபோல் இம் மரபும் விரியும் தன்மையுடையது. மேலும் தத்துவக் கருத்துக்களுக்கும் சமய உணர் வுகளுக்கும் வடிவம் காண்பதில் சிற்பக்கலை சிறந்த பணி செய்கிறது. இக்கருத்துக்கள் எல்லையின்றி விரிந்து உயர்ந்து செல்லத்தக்கவை. இத்துறை யைச் சிற்பக்கலை பற்றிக் கொண்டதால் இத் துறை விரிவும் உயர்வும் பெறுவதாயிற்று. பல நூற்ருண்டுகளையும் கடந்து நமது சிற்பக்கலை வளர்ந்து ஓங்கியதின் இரகசியம் இஃதே.

## முடிவுரை :

இத்தகைய அரும்பெரும் சிறப்பியல்புகள் வாய்ந்த நமது சிற்பக்கலை, மக்கள் கலையாகும். எவ்வாறெனில், சமுதாயத்தின் வாழ்க்கை நெறி களையும், உயர்ந்த நோக்கங்களையும், பண்பாட் டின் சிறப்பையும், இக்கலை பிரதிபலிக்கிறது. தெய் வீக வடிவங்களிலும் அவற்றின் திருவிளையாடற் காட்சிகளிலும் இப்பூவுலகின் இலட்சிய நாயக, நாயகிகளையே சிற்பிகள் சித்தரிக்கிருர்கள். தனிப் பட்ட தங்கள் உணர்ச்சிகளை மட்டுமல்லாது, சமு தாயத்தின் உணர்ச்சிகளையும் உள்ளக்கிடக்கைகளை யும் சிற்பிகள் சமைப்பதால் பண்டைப் பெருமக்கள் சிற்பக் கலையைத் தங்கள் கலையாகவே கருதி ஆர் வத்தோடு பேணி வளர்த்தனர்.



# தமிழகப் படிமக்கலை



தஞ்சை மாவட்டம் கீழையூரில் கிடைத்த வீணாதரர் செப்புத் திருமேனி. சோழர் காலம். கி.பி 10-ஆம் நூற்றாண்டு.



தஞ்சை மாவட்டம் நல்லூரில் உள்ள ஆடவல்லான் செப்புத் திருமேனி. சோழர் காலம். கி.பி. 9-ஆம் நூற்றாண்டு.



நாகப்பட்டினத்தில் கிடைத்த புத்தர் செப்புத் திருமேனி. பல்லவர் காலம். கி.பி. 9-ஆம் நூற்றாண்டு.



கூரம் என்ற இடத்தில் கிடைத்த நடராசர் செப்புத் திருமேனி. பல்லவர் காலம். கி.பி. 8-ஆம் நூற்றாண்டு.



திருவெண்காட்டில் கிடைத்த கல்யாண சுந்தரர் செப்புத்திருமேனி இராசராசன் காலம். கி.பி. 11-ஆம் நூற்றாண்டு.



தஞ்சை மாவட்டம் பருத்தியூரிலுள்ள திருமாலின் செப்புத் திருமேனி. சோழர் காலம். கி.பி 10-ஆம் நூற்றாண்டு

படமும் விளக்கமும்: தமிழக அரசின் தொல்பொருள் துறை



கச்சி வரதராசர் கோவிலில் உள்ள " குதிரை வீரன் " சிற்பம்.
விஜய நகர மன்னர் காலம்.
கி.பி. 15-ஆம் நூற்றண்டு



திருப்பரங்குன்றம் குடவரைக் கோயிலில் உள்ள 'ஆடலுகந்த அழகர்'. பாண்டியர் காலம். கி.பி. 8-ஆம் நூற்றண்டு



மாமல்லபுரத்தில் உள்ள ஐம்பெரும் தளிகள் (பஞ்சபாண்டவர் இரதங்கள் எனப்படுபவை). பல்லவர் காலம்.
கி.பி. 7-ஆம் நூற்றண்டு.



நாயக்கல குடவரைக் கோயிலில் உள்ள 'அரவணை அமர்ந்த பெருமாள்' அதியமான் காலம். கி.பி 8-ஆம் நூற்றண்டு



கங்கை கொண்ட சோழபுரம் 'முடி சூட்டல்'
சோழர் காலம். கி.பி. 11-ஆம் நூற்றண்டு.



செஞ்சியில் திருநாதர் குன்றின்
மேல் உள்ள 24 சமண
தீர்த்தங்கரர்களின்
சிலைகள்



கணேச இரதம் என்னும் ஒற்றைக்
கல் தளி - மாமல்லபுரம்.
கி.பி 7-ஆம் நூற்றண்டு.



திரௌபதி இரதம் எனப்படும்
கொற்றவை கோயில் - மாமல்லபுரம்.
கி.பி. 7-ஆம் நூற்றண்டு.




வெண் குன்றத்தில் உள்ள இயக்கி.
சமணர் சிற்பம். சோழர் காலம்.
கி. பி. 12-ஆம் நூற்றண்டு.



மாமல்லபுரத்தில்
உள்ள பள்ளி கொண்ட
பெருமாள்.
பல்லவர் காலம்.
கி.பி 7- ஆம்
நூற்றாண்டு.



திருக் குறுங் குடியிலுள்ள
'குழலூதும் பிள்ளை'
நாயக்கர் காலம்
18- ஆம் நூற்றாண்டு



மாமல்லபுரத்து, 'பாய்கலைப் பாவை'.
பல்லவர் காலம்.
கி. பி. 7-ஆம் நூற்றாண்டு.



மாமல்லபுரத்து வராகமண்டபம்.
குகைக் கோயில்.
பல்லவர் காலம்.
கி. பி. 7-ஆம் நூற்றாண்டு.

# தந்தச் சிற்பங்கள்



திருவரங்கம்
'கொக்கு வாய் பிளந்த கண்ணன்'.
தந்தச் சிற்பம். நாயக்கர் காலம்.
கி.பி.17-ஆம் நூற்றுண்டு.



'கலைமகள்'
தந்தச் சிற்பம்
நாயக்கர் காலம்
17- ஆம்நூற்றுண்டு.

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

பண்ணாராய்ச்சி வித்தகர்
குடந்தை ப. சுந்தரேசன்




## இசையின் தோற்றுவாய் :

பழந்தமிழ் மொழியின் ஒப்பற்ற இலக்கணத்தைத் தெளிவுறக்கூறும் தொல்காப்பியம், முன் கூறும் எழுத்ததிகாரத்திலேயே நூன்மரபு பகரும் இறுதி நூற்பா,

''அளபிறந்து வுயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்''
(தொல். நூற்பா. 33)

என்ற வகையில் பரந்து பட்ட இசைத்தமிழ்க் கலையின் விளக்க நுட்பத்தினைச் சுட்டிக் கூறி விட்டது. இம்முறை ஓராற்றால் தொகுத்து உணர்த்துதலாயிற்று.

இசையொடு சிவணிய நரம்பின் மறைய, எனுமிடத்து, இளம்பூரணர், குரல் முதலிய ஏழிசையோடு பொருந்திய நரம்பினையுடைய யாழினது இசை நூற்கண்ணும், என உரை கூறினார். இசை நூலாசிரியரும், முதல் நூலாசிரியர் தாமே என்ற குறிப்பும் இருப்பதால் இசையின் தோற்றுவாய் தமிழகத்தில் எத்துணையோ ஆயிரமாண்டுகளுக்கு முந்திய காலத்தது என்பது வெளிப்படை. பண்டைய பாண் பெருமக்களே இசைத்தொழில் வல்லுநர்களாகத் திகழ்ந்தனர்.

பண்டைய தமிழ் நாட்டு இசைத்தமிழ், தமிழிசை அல்லது பொதுவான இசைக்கலை காலச் சூழ்நிலையில் பலவாகப் போற்றியும் போற்றாதும் பெருகி, அருகி மாற்றத்துடன் எத்தகைய நிலையிலோ தமிழ் மக்களிடையே யிருந்து வருவதும் இக்காலத்தில் எல்லாவற்றிலும் வெளிப்படை. உயர்தனிச் செவ்விசை, நாடக இசை, நாட்டுப் பாடல்களின் இசை, கருவிகளின் இசை என யாவும் இக்காலத்தும் தமிழ் நாட்டில் இருப்பவையே.

உயர் தனிச் செந்தமிழ் மொழியின் எழுத்துக்களில் உயிரும், மெய்யும் நீண்டு ஒலித்தல் யாழ் நூல் இடத்தன என்றார் நச்சினார்க்கினியர். நரம்பு என்பது ஆகுபெயராய் யாழினை உணர்த்தும் என்றும் கூறினர். இசைக்கு இன்றியமையாதது கருவிகளே; ஒலிகளை எழுப்பி நிலைக்கச் செய்வதில் கருவிகள் புகழ் வாய்ந்தனவாம் என்பர்.

## குழற் கருவிகள் :

உலகில், திண்ம, நீர்ம, நொய்மங்களாகிய சடப்பொருள்களின் வழியாகத்தான் ஓசைபரவும் என்பதும், ஒசையானது பவனத்தினூடே சிற்றலைகளின் வடிவமாகப் பரவும் என்பதும், அன்றும் இன்றும் என்றும் இயற்கையென்பதை அறிஞர்கள் அறிந்து கூறிவிட்டனர். இயல்பாகவே காடுகளில் விளைந்து முற்றியுள்ள மூங்கில்களில் தும்பிகள் துளையிட்டு அதனூடே காற்று செல்லுகின்ற

காலத்து ஏற்படும் ஒலியை மக்களறிவினுற் கண்டுணர்ந்த இயற்கை முறைமையை நன்குணர்ந்த கபிலர் (சங்ககாலப் புலவர்) குறிஞ்சி முறை பாடுங்கால்,

''ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
கோடை யவ்வளி குழலிசை யாக''
(அகம். 82)

என்று குறித்துப் பாடினுர். குறிஞ்சிநில மூங்கில்களில் இயல்பாகவே துளைகளை இட்டவை வண்டினங்களில் ஒரு வகையான தும்பிகளே என்பதை, முல்லையுங் குறிஞ்சியும் முறைமை திரிந்தாங்கு பாலையென்பதோர் படிவம் கொண்டதறிந்து பாலை பாடிய எயினந்தை மகனுர் இளங்கீரனுர்,

''ஆடமைத் தும்பி குயின்ற அகலா அந்துளை
கோடை முகத்தலின்'' (அகம். 225)

எனத் தெளிவுறப் பாடினுர்.

அவ்வாறே தும்பிகளால் இயல்பானே துளைக்கப்பட்ட (மூங்கில்களின்) கழைகளின் வழி எழும் ஓரோவழி ஒலி வகைகளை, அன்றுடம் கானில் ஆநிரைகளை மேய்க்கச் சென்று திரும்பும் (பகற் பொழுதில் ஆங்கே தங்கியின்புறும்) முல்லைநிலத்து ஆயர் பெருமக்கள், நன்கு செவிப்புலனுல் கேட்டுக் கேட்டு, ஓர்ந்தோர்ந்து, உணர்ந்து அதன் நினைவின் விளைவாக, தாங்களும் சின்னஞ்சிறு கழைத்துண்டுகளை நறுக்கியெடுத்து, முதலில் வாய் வைத்து ஊதும் ஊது துளை மட்டுமுள்ள சிறிய பெரிய கருவிகளாக்கினர். அவையே பின்னர் தூம்பு வகைகள் எனக் கூறப்பெற்றன. அவை கழைவளர் தூம்பு எனச் சிறப்பிக்கப் பெற்றன. தூம்பு என்ற கருவியின் அல்லது அச்சொல்லின் பொருளை, உள்ளுப்பொய்யானது துளை, குறுவங்கியம், நெடுவங்கியம், பெருவங்கியம் எனவும் தூம்பு என்ற கருவி ஒன்று இளியென்ற பண்ணேசையை உடையது என்றும், இன்னும் பலவிடத்தும் ஒல்லும் வகையில் சங்ககாலப் புலவர்களால் நன்கு தெளிவுறுத்தப்பெற்றன.

பின்னர் அவ்வாயர் மக்கள் தூம்பினை ஊதி ஊதிப் பழகிய காலத்து, கருவியைப் பிடித்துள்ள கைவிரல்களை வைத்து அடைத்துவிடத் தக்கவாறு விரலுளர் துளையுள்ள கருவிகள் பலவற்றையும் ஆக்கி ஊதி மகிழ்ந்தனர். அவற்றுல் ஊதப்படும் நிலை ஒலிகளின் வலிவு மெலிவையும் ஊதுகின்ற முறைமையில் காற்று கொடுக்கும் வகையானும், விரலுளர் துளைகளை அடைத்து விடுகின்ற பெற்றிமையானும் தெளிவுறக் கேட்கத் தக்கவையாயின. அக் கருவிகளே குழல், குழல்வகை, குழற்கருவிகள் என்றெல்லாம் கூறப்பெற்றன. அவை பல. தமிழகத்தில் முல்லை நிலத்து ஆயர் மக்களே முதன்முதல் குழற் கருவியைக் கண்டனர் என்னும் வரலாற்றினை, பெரும்பாணுற்றுப்படையில் கடியலூர் உருத்திரங்கண்ணனுர்,

''செந்தீத் தொட்ட கருந்துளைக் குழல்..''

என எடுத்துக் காட்டினுர்.

இத்தகைய குழற்கருவிகளும் ஐம்புழைக் குழல், ஏழ்புழைக் குழல் என இருவகைகள் என்பதை ''மலைமுழை ஏழ்புழை ஐம்புழை யாழிசை கேழ்த்தன்ன'' என்று நல்லந்துவனுர் பாடினுர். (பரிபாடல்-8) இப்பகுதிக்கு உரை, ஏழு நுளையான வங்கியத்தும், ஐந்து துளையான வங்கியத்தும் யாழினும் பிறந்த இசை சுருதியொத்து எனக் கூறப்பட்டது. இவ்வங்கியத்துள் ஐம்புழைக் குழலே முந்தியது. ஏழ்புழைக் குழல் பிந்தியது. இவையும் பலவே. மிக்க பிற்காலத்திய வகையில் தமிழகத்தில் விளங்கிய ஏழ்புழைக் குழலின் இலக்கணம் பொதுவான முறையில் அடியார்க்கு நல்லாரால் நன்கு விளக்கப்பட்டுளது.

**யாழ்க் கருவிகள் :**

பத்துப்பாட்டில் (பெரும்பாணுற்றுப்படை) கடியலூர் உருத்திரங்கண்ணனுரே, செந்தீத் தொட்ட கருத்துளைக் குழல் கண்ட ஆயர்மகனே முதன்முதல் வில்யாழ் எனுங் கருவியையும் தன் பேரறிவினுல் ஆக்கிக்கொண்டான் எனவும் கூறினுர்.

''குழலின், இன்தீம்பாலை முனையிற் குமிழின்
புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யாழ் இசைக்கும் விரலெறி குறிஞ்சி''

என்பதே அப்பகுதி. சங்ககால இசைக்கு ஆதி யாழ்க்கருவி, வில்யாழே என்பது விபுலாநந்த அடிகளார் கண்ட உண்மை.

வில்யாழ் என்ற கருவிகள், குறிஞ்சி நிலத்தவர் கையிலிருந்த வில்லின் நாணெலி கேட்ட உணர்வினுல் எழுந்தவை எனக் கூறுதல் உண்டு. வில்யாழின் நரம்புகளைக் குழற் கருவியை அறிந்தோன் ஊதி ஊதிக் குழலொலிக்கேற்ப, யாழ் நரம்பொலி ஒத்திசைக்கத் தக்கவாறு நெடுமையாகவும், குறுமையாகவும், மிகவும் நுண்ணிய வகையில் வலித்துமுடுக்கிக் கட்டித் தெறித்தறிந்தான்; அல்லது தெறித்து அறிவான் என்ற வழக்கு முறையை உவமையாக எடுத்தாண்டார், நரம்பின் தீங்குரல் நிறுக்குங்குழல் போல் எனச் சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ.

ஆகவே, யாழ்க் கருவிகளில் நரம்பமைதிகள், குழற்கருவிகளை ஊதி எழுப்பிய ஒலிவகைக்கேற்ப வரையறை செய்யப் பெற்றதால் யாழ்க் கருவிகளுக்கு முந்திய கருவிகள் குழற்கருவிகளேயாகும். யாழ்க் கருவிகளும் சிறுபான்மை, பெரும்பான்மை எனப் பல வகைப்படும். ''நரம்பின் இனிய இசையைத் தானத்திலே நிறுத்தும் வங்கியம் போல'' என்பார் உரைகாரர். குரல், யாழ் அதாவது குழல் வகை, யாழ்வகை என்ற இருவகைக் கருவிகளே சங்ககால இசைக் கருவிகள். முறைபிறழாது இயல் வகையில் வைப்பு முறையாகக் கூறுமிடத்தும் குழலினிது யாழினிது எனவும், குழல்வழி நின்றது யாழே எனவும், குழலொலி யாழொலி எனவும் கூறப்பெற்ற வழக்கு முறைகளையும் நன்குணரலாம். குறிஞ்சியாழ், முல்லையாழ், பாலையாழ், மருதயாழ், நெய்தல்யாழ் அல்லது விளரியாழ் என்ற கருவிகளும் மற்றும் பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன் (செம்முறைக் கேள்வி) சீர் பொலியுஞ் செங்கோடு செப்பினுர் — தார் பொலிந்து மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே பின்னு முளவே பிற என்றும் ஓர்

இடத்தில் கூறப்பட்டதால், யாழ்க்கருவிகள் பல என்பது தெற்றெனப் புலப்படும். யாழ் உறுப்பு முதலானவற்றின் விளக்கங்களை யாழ் நூலிற் காணலாம். ஆராய்ச்சி உணர்வு படைக்கும் அறிவை இயல்பானும் பன்மொழிப் புலமை யானும் கொண்ட அருட்டிரு விபுலாநந்த அடி களார், யாழ்நூலில், ''இடையனமைத்துக் கொண்ட வில்யாழ் ஏழு நரம்போடு கூடிக் குறிஞ் சிப்பண் வாசித்தற்குத் தகவுடையதாக இருந்தது. அதற்குமுன் ஐந்து நரம்போடு கூடிய கருவியும் இருந்திருக்க வேண்டும். அவ்வாறு கொள்வதற்கு ஆதாரம் நமக்குப் பரிபாடலிலே கிடைக்கிறது. எட்டாம் பரிபாடலிலே ஏழ்புழை, ஐம்புழை என வருவன, ஏழு துளையுடைய குழற் கருவியையும், ஐந்து துளையுடைய குழற் கருவியையும் குறிப்பன. ஐந்துதுளைக் கருவியே முன்னர் உண்டாயிருக்க வேண்டும். அதனோடுகூட ஐந்து நரம்புடையதாய் வில்யாழ் போன்ற அமைப்பினை உடைய கருவியும் தோன்றியிருக்கலாம்'' எனக் குறித்தார். மேலும் அவர் ''ஆடவர் குரலினையொத்த தாரம்மகளிரது குரலினையொத்த குரல் எனுமிவற்றோடு உழை, இளி, துத்தம் என்னும் மூன்றும் கூடிய ஐந்து நரம்புகளுமே முதலில் உண்டானவை'' எனத் தெளிவாகவும், இசைக் கணித முறையாலும் கூறிப் போந்தார். அவரே யாழ்நூல் பக்கம் 41-இல், ''கடைச்சங்க காலத்திலும் அதற்கு முன்னுந் தோன்றிய சான்றோர் செய்யுட்களினுள்ளே வில் யாழும், சீறியாழும், பேரி யாழுமே குறிக்கப்பட்டு இருக்கின்றன. சகோட யாழும், (செம்முறைக் கேள்வி) மகர யாழும், செங்கோட்டி யாழும் சிலப் பதிகாரத்திலும், மணிமேகலையிலும், பெருங்கதை யிலும், சீவகசிந்தாமணியிலும் காணப்படுவ'' எனக் கூறினர். நுணுகியாராய்ந்து அளவை முறைப்படி அறியப்பெறும் கருவியறிவு இசைக்கலைக்கு மிகவும் வேண்டற்பாலதாகும். ஐம்புழைக் குழல், ஏழ் புழைக் குழல் வழி இசை கண்டுணர்ந்து தோற்று வித்த யாழ்க் கருவிகள், ஐந்து நரம்புடைய வில் யாழ்க் கருவிமுதல் ஆயிரம் நரம்புகளைக்கொண்ட யாழ்வரை இருந்ததாகச் சங்ககால இலக்கியங்கள் குறிக்கின்றன. நிற்க; இனி இசைகளைப்பற்றி அறியலாம்.

## முதலேந்திசை :

ஐம்புழைக் குழல் வழியும் ஐந்து நரம்புடைய வில் யாழ் வழியும் எழுந்த ஒலிகள், எழும் ஒலிகள் இயல்பாகவே அக்கால வழக்கு முறையானும் இக்கால இசைக் கணித முறையானும் எவ் வாறு இருந்தன? இருப்பதியல்பு, என்பதை யாழ் நூலில் விபுலாநந்தர் மிகத் தொன்மையான முறையில் எடுத்துக்காட்டி நிறுவினர்.

தார நரம்பே முதலிற் றோன்றியதென்பது பழந்தமிழிசை நூற்றுணிபு. தலையின தாரஞ் செய் யுந்தாரம், இவற்றுள் முற்றோன்றியது தாரம் என்ற சொற்கள் சங்ககால இசையில் முதலிசை ''தாரம்'' என்பதேயென நன்கு வலியுறுத்தும்.

தாரம், குரல், துத்தம், உழை, இளி என்ற ஐந்திசைகளுமே முதலேந்திசைகளாகும்.

ஐந்து நரம்புகளும் மேற்றானத்துத் தாரமும் பின்வருமாறு அமைந்து நின்றன.

| தாரம் | குரல் | துத்தம் | உழை | இளி | தாரம் |
|---|---|---|---|---|---|
| 81 | 72 | 64 | 54 | 48 | $40\frac{1}{2}$ |

எண்கள் நரம்பின் நீளத்தினைக் குறிப்பன. இவற் றின் அதாவது நரம்பு நீள விகிதவெண்கள், நீள விகிதங்களின் தலைப்பின்கீழ்ப் பின்னங்களாய் அசைவெண் விகிதங்கள், அதன் பிரிப்புக் கணித முறை என்ற முடிபுகளைத் திரட்டி வைக்கக் கிடைப்பது,

$$\frac{9}{8} \quad \frac{9}{8} \quad \frac{32}{27} \quad \frac{9}{8} \quad \frac{32}{27}$$

என்றவகையில் அந்தந்த இசையின் அலகு முறை களையும் நன்கு விளக்கினர் நம் விபுலாநந்தர். பழக்க முறையும் அதுவே.

## முதலேழிசை :

மேலும் அவரே, இதேயளவில் துத்தத்திற்கும், உழைக்கும் இடையே தோன்றிய கைக்கிளையும், இளிக்கும், தாரத்திற்கும் இடையே தோன்றிய விளரியும் சேர, அதன் பெயர் முறை அலகு நிலையாவும்,

| தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி |
|---|---|---|---|---|---|---|
| 0 | 4 | 8 | 12 | 13 | 17 | 21 |

எனவமைந்த பழையநிலையையும் புதிய கணித முறையில் காட்டிவிட்டார். இவ்வமைப்பு முறையே சங்ககால முதலேந்திசை, முதலேழிசை இவற்றின் ஒலிப்பகுதியாகும்.

இசையொலி முறையை இக்காலத்தாரும் அறிந்து கொள்வதற்கு அலகறிவு இன்றியமை யாததே. அளவிடுங்கருவி அலகதுவாகும். அலகு, சுருதி, மாத்திரை என்பன ஒரு பொருட்கிளவி.

## ஆசான் திறம் :

முதலேந்திசை தாரம், குரல், துத்தம், உழை, இளி என நின்றதால் அதன் தொகுதியைத் தாரம் என்றே கூறப்பெற்று அதனைப் பண்ணிப்படுத்திய தொழில் முறைக்குத் தாரப்பண் என்றே பெயரும் அமைக்கப்பெற்றது. இதுவே இசைத் தமிழ்க் கலைக்கு நரம்பின் மறைக்கு முதற்பண்ணுன பெற் றிமையில் ஆசான் எனவும் கூறப்பெற்று ஐந்திசை களையே உடைமையினலே திறம் என்ற சொல் சேர்த்து ஆசான்திறம் எனவும் அழைக்கப்பெற்று, தாரத்திசைக்கு உயிர்க் குறியீட்டெழுத்து ''ஆ'' ஆதலால் ஆதாரம் ஆதாரப்பண் எனவும் கால நிலையில் குறிக்கப்பெற்று, தாரத்திற்கேயுரிய மெய்க் குறியீட்டு எழுத்து ''கா'' ஆதலால் கா + தாரம், கா எனும் குறியீட்டெழுத்தினை உடைய தாரம், காவாகிய தாரம், காவாந்தாரம், காந்தாரம் எனக் கூறப்பெற்றது. ஆசான் திறம் என்ற பெயரே சங்ககாலப் பெயர்.

சிலப்பதிகாரம், புறஞ்சேரியிறுத்த காதையில் இளங்கோவடிகள்,

''ஆசான் திறத்தின் அமைவரக் கேட்டு
பாடற் பாணி யளைஇ ..''

எனக் குறிப்பிடுவதை நன்கறியலாம். செங்கோட்டி யாழிற்கு நரம்புகள் ஏழேயாம். ஏழு நரம்புடைய கருவியில் முதலைந்திசையின் முதற்பண்ணைக் கோவலன் இசைத்தான் என்பது கருத்து. இப் பண்பற்றி அரும்பத உரையாசிரியர், ஆசான் திறம், காந்தாரம். ஆசானென்று ஒரு பண்ணிற் குப் பேராகவும் இசைத் தமிழிற் கூறுப எனக் கூறியதோடமைந்தார்.

அடியார்க்கு நல்லாரோவெனில், ஆசான்சாதி நால்வகையாவன. ஆசானுக்கு,

''அகச்சாதி காந்தாரம்
புறச்சாதி சிகண்டி
அருகுசாதி தசாக்கிரி
பெருகுசாதி சுத்தகாந்தாரம்''

எனக்கொள்க என்றெடுத்துக்காட்டி ''பண் நூற்று மூன்று; அவை நால்வகைப்படும். பண், பண்ணியற் றிறம், திறம், திறத்திறம் என; அவற்றுள் இது திறங்கூறிற்று'' எனத் தெளிவுபடுத்தி விட்டார். இச்சீரிய உரைப் பகுதியால் முதல் ஐந்திசையின் முதலமைப்பாம் தாரப்பண், ஆசான் திறம், காந் தாரம் என்ற பெயர்களில் வழங்கி வந்தது என் பது எத்துணைத் தெளிவாகிறது எனப் புரிந்து கொள்ளலாம். அன்றியும் அவர், 'செந்திறம் புரிந்த' எனுமிடத்துத் 'தன் பண்ணியல் அத்திற மாய்த் தனக்கினமான செந்திறத்தோடு புரிந்த வென்க' எனவும் கூறி, என்றது, பண், பண்ணியற் றிறம் (பண்ணியம்), திறம், திறத்திறம் என் னுமிவை, சம்பூரணம், சாடவம், ஔடவம், சதுர்த்தமென வடமொழிப் பெயரானும் இவை வழங்கும். அவற்றுட் செந்திறம் என்றவாறு'' கூறிவிட்டார்.

இவ்வுரையால் பண் என்ருல் ஏழிசைகளை உடையது எனவும் பண்ணியற்றிறம் என்ருல் ஆறு இசைகளை உடையது எனவும், திறமென்ருல் ஐந்து இசைகளை உடையது எனவும், திறத்திறம் என்ருல் நான்கு இசைகளை உடையது எனவும் நன்கு புலப்படுவது அறியலாம். இவ்வுரைப் பகுதி யாலும் ஆசான் திறமான காந்தாரம் ஐந்து இசைகளையே உடையது என்றும், செந்திறம் என்ற பண்ணும் ஐந்திசைகளையே உடையதென் றும் மிகவும் ஐயமின்றித் தெளிவாகிறது.

### பிறபண்கள் :

இவ்வாருகிய ஐந்திசைகளைப்பத்து நரம்புடைய வில்யாழில் இசைத்துக் காணக் காண, பண்டைய தமிழ் மகனுக்கு ஏற்பட்ட நுண்ணறிவு ஒன்று; அதுவே பத்து நரம்புகளில் முதலில் இருந்து ஒவ் வொன்ருய் விட்டுவிட்டறிந்து ஒரேபண் ஐந்து பண்ணுகும் தன்மையை ஐந்திசையில் வெவ்வேறக அறிந்த அறிவேயாகும். அந்தப் பேரறிவு இன் றைக்கும் இசை நூல் வல்லார்மாட்டு மிகவும் எளிமையாக இருந்துவருவதேயாம். அந்நிலையில், முதலைந்திசையை, குரல் முதலாக அதாவது இரண்டாம் நரம்பு முதலாக இசைக்க வேறெரு பண் தோன்றும். அது

| குரல் | துத்தம் | உழை | இளி | தாரம் |
|---|---|---|---|---|
| 0 | 4 | 9 | 13 | 18 |

என நின்று முன்பிருந்தவாறே அலகுகளைக் கொள் வதால், முதல், இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்ற இடங்கள் மாறிவிட்டதால், தாரப் பண்ணே வேறெரு பண்ணுயிற்று. இப் பண்ணிற்கே குரற் பண், செந்திறம், என்றும் பெயர்; அதுவே சங்ககாலப் பெயர். பிற்காலத் தில் இப்பண்ணைச் செந்துருத்தி என்றனர். இதனலகிசைகள், இக்கால முறையில் ஷட்ஜம், சதுச்ருதிஷபம், சுத்தமத்யமம், பஞ்சமம், கைசிகி நிஷாதம் என நின்று மத்யமாவதி இராகமாதலை நன்கு புரிந்துகொள்ளலாம்.

இயல்பாகவமைந்த ஐந்திசைகளில் முதலிசை விட்டு இரண்டாமிசை முதலாக எடுக்க, ஒரு புதிய பண் தோன்றுவதை அறிந்த அறிஞன், பின்னரும் ஒவ்வொன்றையும் நீக்கி இசைக்க, மற்ற மூன்று இசைக்களுக்குரிய மூன்று வேறு பண்களை அறிந்துவிடலாம் என நினைப்பது இயற் கையறிவின் விளக்கமாகும். அந்நிலையில் தாரப் பண்ணையே துத்தம் முதலாக எடுக்க அதாவது குரற் பண்ணை இரண்டாமிசையிருந்து இசைக்க,

| துத்தம் | உழை | இளி | தாரம் | குரல் |
|---|---|---|---|---|
| 0 | 5 | 9 | 14 | 18 |

பண்டைய தாரப்பண்ணின் அலகுநிலை மாருதே நின்றும், மூன்ரும் பண்ணுக வேற்றுரு எய்தியது. ஒலிநூற்பகுதியில் இவை யாவும் பெருவிந்தையாக உணரப்பெறுவனவேயாம். இப்பண்ணைத் துத் தப்பண் என்றனர்; அதுவே சங்ககாலப் பெயர். பிற்காலத்தார் இந்தளம் எனவும் வடுகு எனவும் கூறினர். இதனலகிசைகள், தற்கால முறையில் ஷட்ஜம், சாதாரண காந்தாரம், சுத்தமத்யமம், சுத்ததைவதம், கைசிகிநிஷாதம் என நின்று இந் தோள ராகம் ஆன தன்மையை அறிந்து மகிழ லாம். இந்நுண்மையைச் செவ்வனேயறிந்த தெய் வச் சேக்கிழார்,

''முறையால்வரு மதுரத்துடன் மொழி
[இந்தளம் முதலில்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழமையினுல்''

என, இப்பண்ணின் தோற்ற முறைமையை விளக் கிக் கூறியருளினுர்.

### முதலேழிசை :

தாரம், குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி என்ற அமைப்பே முதலேழிசையின் முதல் அமைப்பாகும். இவ்வமைப்பினை ஏழிசை நரம்புகளின் நரம்பு நீளங்கள், நரம்பு நீள விகிதங்கள், அசைவெண் விகிதங்கள், அசை வெண்கள், அலை நீளங்கள் என்றும் இவற்றை அட்டவணைப்படுத்தி இடைவிகிதம் கணித்த விபுலாநந்தர்,

| தாரம் | குரல் | துத்தம், | கைக்கிளை | உழை | இளி | விளரி |
|---|---|---|---|---|---|---|
| 0 | 4 | 8 | 12 | 13 | 17 | 21 |

எனத் தெரிநிலையில் வகைப்படுத்தினர். இவ் வமைதியும் முதலேந்திசையோடு நான்கு நான்கு அலகாகவே பண்டை நிலையில் அறியப்பெற்றதே.

துத்தமிருந்து நான்காமலகில் கைக்கிளையும். இளியிருந்து நான்காமலகில் விளரி இசையும் தோன்றவே முதலேந்திசை முதலேழிசையாயின. இவற்றின் முதற்றொகுதி (மேலே குறித்தது) மேற் செம்பாலை எனக் கூறப்பெற்றது. பண்டைய ஒரேழ்பாலை (சங்ககால இசைத்தமிழ்ப் பாலையேழு) என்ற தொகுதியில் முதற்பாலை இதுவே.

இவற்றின் அலகிசைகளை இக்கால முறையிற் கூறினால், ஷட்ஜம், சதுச்ருதிருஷபம், அந்தரகாந் தாரம், பிரதிமத்யமம், பஞ்சமம், சதுச்ருதி தைவதம், காகலி நிஷாதம் என அமைந்ததால், பிற்காலத்தார் மேசகல்யாணி ராகம் எனக் கூறினர்; அதாவது கல்யாணி ராகமாவதை அறிந்துகொள்ளலாம்.

முதலேந்திசையை ஒவ்வொன்றாக நீக்கி எடுத்து இசைப்பதே போன்று இவ்வேழிசையிலும் ஒவ் வொன்றை நீக்கிக் காண வெவ்வேறு பாலைகள் தோன்றுவதில்லை. ஏழிசை நிரலை மூன்று நிலையாக இருபத்தியொரு நரம்புகளில் அமையத்தக்கவாறு பேரியாழ் என்ற கருவியில் கட்டியதைத் தமிழிலக் கியங்கள் சிறப்புறக் கூறுகின்றன.

**ஐந்திணை நிலங்களில் யாழும் அவற்றின் திறனும் :**

ஏழும் ஐந்தும் பன்னிரண்டாகிய இசை நிலை களை இராசி வட்டத்தில் வைத்து, அரியிடைத் தாரம் அணைவுறக் கொளலே, என்ற பழைய அமைப்பின் வழி சிம்மராசியில் முதல் நரம்பாய தாரம் என்ற இசையை வைத்து, வலவோட்டாக வும், இடவோட்டாகவும் கணித்துச் சங்ககாலத் தார் (இசைப்பாணர்கள்), ஏழு பாலையைப் பன் னிருபாலையாக்கினர். இப்பாலைகளின் முதலமைப் பாய சிங்கப்பாலை,

*0 1 4 5 8 9 12 13 14 17 18 21 22*
என அலகு நிலைகளைக் கொண்டு நிற்கும். பேரி சைகள், கிளைமுறையில் தோன்றுபவை; சிற்றி சைகள் நட்புமுறையில் தோன்றுபவை. 'சிலப் பதிகாரம் வேனிற் காதையுரையிலே' அந்தரம் ஐந்தும் நீக்கி உறழ்ந்து கண்டுகொள்க. என்று ஏழ்பெரும்பாலை பிறக்கும் முறை கூறப்பட்டதாத லின், அந்தரம் ஐந்துஞ்சேர்த்து உறழுமிடத்துப் பன்னிருபாலையும் பிறக்கும் என்பது தெளிவாகின் றது; என விபுலாநந்தரின் இசைக்கணிதமுறை, பன்னிருபாலைப் பொது உருவத் தலைப்பில் பேசு கிறது. மேலும் இவற்றின் விதிமுறைகளையெல் லாம் இக்கட்டுரையிலே விளக்க இயலாது எனவும் அறிக.

பன்னிரு பாலையின் உருத் தொண்ணூற்றொன் றும் பன்னிரண்டுமாய்ப் பண்கள் நூற்றுமூன் றாதற்குக் காரணமாமெனக் கொள்க; என்றே உரையாசிரியர் இருவரும் (அரும்பதவுரைகாரர், அடியார்க்குநல்லார்) சிலப்பதிகாரம் அரங்கேற்று காதை யாழாசிரியன் அமைதியுள் கூறுகின்றனர். இவ்வேழு பெரும்பாலையினையும் முதலெடுத்து நூற்றுமூன்று பண்ணும் பிறக்கும் என அடி யார்க்குநல்லார் தனித்து வேனிற்காதை உரையி னுள்ளே கூறினர். நூற்றுமூன்று பண்களின் பெயர் முறை தெரிய வருமாறு அவற்றையெல் லாம் செவ்விய முறையில் யாழ்நூலில் எழுதிப் பாதுகாத்த பெருமை விபுலாநந்தப் பெருந் தகைக்கே உரியது. தாரத்துழை தோன்றப் பாலை யாழ், பாலையாழ் என்ற கருவியில் அரும்பாலைக் குரிய நரம்பமைதிகளை முதல்நிலையாகக் கட்டப் பெற்றன.

தண்குரல் ஒரும் உழை தோன்றக் குறிஞ்சி யாழ். குறிஞ்சியாழ் என்ற கருவியில் செம்பாலைக் குரிய நரம்பமைதிகளை முதல்நிலையாகக் கட்டப் பெற்றன. நேரே இளி குரலிற்றோன்ற மருதயாழ்; மருதயாழ் என்ற கருவியில் கோடிப்பாலைக்குரிய நரம்பமைதிகளை முதல்நிலையாகக் கட்டப்பெற் றன. துத்தம் இளியிற் பிறக்க நெய்தலியாழ்; பிற்காலத்தார் நெய்தலியாழினைச் செல்வழியாழ் என்றனர். நெய்தலியாழ் என்ற கருவியில் படு மலைப்பாலைக்குரிய நரம்பமைதிகளை முதல் நிலை யாகக் கட்டப்பெற்றன. முல்லை யாழ் என்றும் இக்கருவி பெயர் பெறும். இப்பகுதியினை 'நால் வகை யாழாம் நாற்பெரும்பண்ணே' எனவும் கூறினர். பாலையாழ்த்திறன் ஐந்து; அவை அக நிலையாக நின்று தனக்குரிய புறநிலை ஐந்து, அருகியல் ஐந்து, பெருகியல் ஐந்து இருபதாகி நிற்பன.

குறிஞ்சித் திறன் எட்டு; அவை அகநிலையாக நின்று தனக்குரிய புறநிலை எட்டு, அருகியல் எட்டு, பெருகியல் எட்டு என எல்லாம் முப்பத் திரண்டாகி நிற்பன. மருதயாழ்த்திறன் நான்கு; அவை அகநிலையாக நின்று தனக்குரிய புறநிலை நான்கு, அருகியல் நான்கு, பெருகியல் நான்கு என எல்லாம் பதினாறாகி நிற்பன. செவ்வழி யாழ்த்திறன் நான்கு; அவை அகநிலயாகி நின்று தனக்குரிய புறநிலை நான்கு. அருகியல் நான்கு, பெருகியல் நான்கு என பதினாறாகி நிற்பன. இவையன்றி முற்கூறிய பெரும் பண்கள், பாலை யாழ் அகநிலையாக நின்று தனக்குரிய புறநிலை, அருகியல், பெருகியல், என நான்காகி நிற்கும். குறிஞ்சியாழும் அகநிலையாகித் தனக்குரிய புறநிலை, அருகியல், பெருகியல் என நான்காகும். மருதயாழும் அகநிலையா நின்று தனக்குரிய புறநிலை, அருகியல், பெருகியல் என நான்காகி எல்லாம் பதினாறாகி நிற்பன. (செவ் வழியாழ், வேளாவளி சீராகம், சந்தி இவை சேர்த்து.)

இவை அல்லாத மூன்று தனியே உணரப்பெற்று எல்லாமாய்க் கூடிக்கூடி நூற்றுமூன்று பண்கள் ஆயினவாம். இவற்றின் சரியான பெயர் முறை களை விபுலாநந்தரின் யாழ்நூலில் பரக்கக் காண லாம்.

நூற்றுமூன்று பண்களும் தெளிவான இசைகளை உடையவை. பண் பண்ணியற்றிறம் திறமெனவே நிற்பன; திறத்திறங்கள் மேனிலை இசையோடு

கூடியே அறியப்படும். முற்கூறிய ஏழு பாலை களில் செவ்வழிப்பாலை திறம் தோன்றுவதற்கு அன்றுதலின், ஏனைய ஆறு பாலைகள் விளரிப் பாலை, படுமலைப்பாலை, கோடிப்பாலை, செம்பாலை, அரும்பாலை, மேற்செம்பாலை ஆகிய பாலைகளில் கணித முறையில் திறப்பண்களின் இசை யைமைதியினைக் கணித்துப் பெரும்பண் 7, பண்ணியாற்றிறம் 31, திறம் 65, ஆகிய 103 உருக்கள் என, நூற்றுமூன்று பண்களின் எடுத்தல் படுத்தல் இரண்டிற்குமுரிய இசைகள் யாவை என் பதையும், விபுலாநந்தர் யாழ்நூலில் அட்டவணைப் படுத்தியமைத்தார்.

எந்தப் பண் பெயருக்கு எந்தெந்த எடுத்தல் படுத்தல் என்பதை அலகுநிலைகளைக் கொண்டே தான் அறியவேண்டும். அவற்றில் விபுலாநந்த அடிகளார் வகுத்துக் காட்டிய இசைக்கணித முறைப்படி முற்றேன்றிய திறப்பண்களான ஆசான் திறம், செந்திறம், இந்தளம், சாதாளி, தனுசி என்ற ஐந்து திறங்களையும், பாலைகள் மேற் செம்பாலை, செம்பாலை, படுமலைப்பாலை, செவ் வழிப்பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப் பாலை ஆகிய ஏழு பாலைகளையும் இக்கால முறை யில் எந்தெந்த இராகங்கள் ஆகின்றன என்பதை விரிவாகக் காணவேண்டில் யான் வெளியிட்டுள்ள முதலேந்திசை நிரல், முதலேழிசை நிரல் என்ற இசையேடுகளிலும், வெளியிடப்போகும் பண் ணுராய்ச்சி நூல்களிலும் காணலாம்.

முடிவுரை :

தமிழ் நாட்டின் தனித்த இசைக்கலையை, அதன் நுட்பத் தன்மையோடு நுண்ணிய ஒலிப் பகுதிகளை வளர்க்கவேண்டி மிகவும் அரும்பாடு பட்டு உழைத்து, பெரு நூல்களில் இருந்து இசை விளக்கக் கருத்தினைத் திரட்டி இசைப் புலவர் களோடு வாதிட்டும் பெருநூலாய கருணுமிர்த சாகரம் என்ற தொகுப்பை வெளியிட்டவர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதராவார். அவரே தமிழிசைக் கலை விளக்கந்தந்த பெரியவர். எமது அருட்டிரு விபுலாநந்த அடிகளாரின் யாழ்நூல், எல்லா ஐயத்தையும் எம்போல்வாருக்குப் போக்கி இசையலகு உறுதிப்பாட்டைத் தெளிவுபடுத்தியது. தமிழ்நாட்டிசைக்கலை இலக்கணங்கண்ட அவ்விரு பெருந்தகைக்கும் எனது மனமொழி மெய் களாலான நன்றியை ஈண்டும் எழுதிவிடுவது அடியேனது கடமையாகும்.

ஆகவே சங்ககால இசை இயல்பாகவே தமிழ் மக்களால் கண்டுணரப்பெற்று ஓரிசை, மூன்றிசை, ஐந்திசை, ஏழிசை என வளர்ந்து பன்னிருபாலை களாகி, பொது முறையில் நூற்றுமூன்று பண் களாக, பதினேராயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்றென ஆதிஇசை, மிகவும் விரிவுபடுத்தியறியப் பெற்றதாக அறியக்கிடக்கின் றது.

''கடல்வாய்ப் பட்டனவும் காலத்தின் மாறு தலினலே மறைந்து போயினவுமாகிய நூல்கள் மிகப்பல. அந்நூற் பெயர்களைக் கூறிப் பழைமை பாராட்டுவதோடு அமைந்து இருப்போமா? இல்லை. முன்னிருந்த கலைச் செல்வத்தை மீட்டும் பெறுதற்கு முயல்வோம். அத்தகைய முயற்சி நமது நாட்டிற்கு ஆக்கம் அளிக்கும்'' என்றும் கூறினர் விபுலாநந்தர்.



நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று.

நாட்டியக்கலா கேசரி, இசைப் பேராசிரியர்
**வழுவூர் பி. இராமையா பிள்ளை**




நுண்கலைத்துறையில் பிறநாடுகளைவிட நம் இந்தியநாடு முன்னணியில் நிற்கின்றதை யாவரும் அறிவர். பன்னெடுங்காலமாய்த் தென்னிந்தியா, இந்தியப் பண்பாட்டின் பெட்டகமாய் இருந்து வந்துள்ளது. இன்றும் நுண்கலைகளுக்கு — குறிப்பாகப் பரதநாட்டியக்கலைக்குத் தென்னிந்தியா ஒரு புரவலனாகத் திகழ்கின்றது. தமிழகம் முழுவதுமுள்ள கோயில்களுள் பரதநாட்டிய அபிநயக் காட்சிகள் செதுக்கப்பெறாத கோயிலை நாம் காண இயலாது.

இந்திய நாட்டில் இக்கலை பன்னெடுங் காலமாய்ச் செழித்து வளர்த்திருப்பினும் நாடு விடுதலையடைவதற்குப் பத்து ஆண்டுகளுக்கு முன் வீழ்ச்சியுறலாயிற்று. இவ்வீழ்ச்சிக்குப் பல காரணங்களிருப்பினும் அன்னியர் ஆட்சியும் அவ்வாட்சியில் மேனாட்டுக்கலையின் மீது மக்கள் கொண்டிருந்த ஆர்வமும், தாய்நாட்டு அருங்கலைகளை அவர்கள் சரியாக உணர்ந்து கொள்ளாமையுமே முக்கிய காரணங்களாகும். இக்காலத்தில் இக்கலைக்குப் பொதுமக்களின் ஆதரவு கிட்டவில்லை. எனினும், நாட்டியக் கலைஞர்கள் பயன் எதிர்நோக்காது தளரா நம்பிக்கையுடனும் கலையார்வத்துடனும் இக்கலைக்கு உயிரூட்டி வந்தனர். இப்பணி பெரும்பாலும் திருக்கோயில் நிகழ்ச்சிகளின்மூலம் நடைபெறலாயிற்று. இச்செயற்கரும் பணிக்காக இந்நாடே இக்கலைஞர்களுக்குக் கடமைப்பட்டுள்ளதெனலாம்.

அழிவின் எல்லையை நோக்கிச் சென்ற இக்கலை இன்று தாயகத்தில் மட்டுமன்றிப் பிறநாட்டு மக்கள் உள்ளத்தையும் பெரிதும் கவர்ந்து நிற்கின்றதைக் காண்கின்றோம். இம்மறுமலர்ச்சிக்கு இந்நாட்டிற்கு அரிதில் கிடைத்த விடுதலை மட்டுமன்றி இக்கலையின் அழகும் தெய்வீகத்தன்மையுமே காரணம் எனலாம்.

நம் நாட்டுச் சாத்திரங்கள் ஈசன் தாண்டவ நிருத்தியம் ஆடி இவ்வுலகத்தைக் காக்கின்றான் என்று கூறுகின்றன. இக்கலையை ஈசன் உமையாம்பிகைக்கும் கற்பித்துச் சக்திவடிவினளான அன்னை அழகுற ஆடிநிற்பதைக் கண்டு களிப்புற்று இக்கலையைக் கற்பார் அனைவருக்கும் நல்வாழ்வு அளித்து வருகின்றார் என்றும், இக்கலையைப்பற்றிக் கௌரி பாரதம் ஆதிபாரதம் எனும் பெயருடைய நான்கு இலட்சம் கிரந்தங்களைக் கொண்ட நூலொன்றைப் பராசக்தி எழுதியருளினாளென்றும் சாத்திரங்கள் கூறுகின்றன. இந்நூலைச் சார்ந்து சங்கரதேவர் நாலாயிரம் கிரந்தங்களைக்கொண்ட மகாபாரத சூடாமணி எனும் நூலையாத்தார். நந்திகேசுவரர், வசிஷ்டர், அகத்தியர், பாரதர், அர்ச்சுனர் ஆகியோராலும் எண்ணிறந்த நூல்கள் எழுதப் பெற்றுள்ளன.

பரத நாட்டியம் நன்றாக முதிர்ந்த ஒரு கலையாகும். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இக்கலை வளர்ச்சியுற்று வருகின்றது. இக்கலையில் புதுமையொன்றும் இல்லையெனினும்

பழைமைக்கு இக்கலை புதுநோக்கு அளிப்பதை அறிஞர் அறிவர்.

பரதநாட்டியம் மனங்கவர் அருங்கலையாம். தென்இந்தியாவில் உள்ள திருக்கோயில்கள் பல வற்றுள்ளும் அமைக்கப்பெற்றுள்ள அருங்காட்சி களைக் காண்போர்க்கு இது புலனுகும். இக்காட்சி களைப் படைக்கும் ஆற்றல், தேர்ந்த ஆசிரியரிடம் நீண்டநாள் பயிற்சியும், அனுபவமும், கற்பனையும் கொண்ட ஒரு சிலருக்கே கைவரப்பெறும்.

தஞ்சை, சிதம்பரம் ஆகிய இடங்களில் உள்ள திருக்கோயில்களில் பரதநாட்டிய அபிநயக் காட்சி களை நாம் காண்கின்றோம். இக்கலை நமக்குப் பத் தியை அளிக்கின்றது. இக்கலை பாவம் முத்திரை எனும் கூறுகளையுடையது. இவை, காட்சி, கருத்து, உணர்ச்சி ஆகியவற்றை உணர்த்துகின்றன. பழங் காலச் சிற்பங்களும், ஓவியங்களும் நடனமாடும் போது நிகழும் பாத அசைவு, முகபாவம் ஆகிய வற்றை அருமையாகப் பிரதிபலித்து நிற்கின்றன. நாட்டியம் இச்சிற்பங்களையும், ஓவியங்களையுமே நமக்கு நினைவுபடுத்த வேண்டும். வழிபாட்டு இடங்களில் விழாக்காலங்களில், தனிப்பட் டோரும், கூட்டம் கூட்டமாகவும், முறையே நடன மாகவும், நடனநாடகமாகவும் ஆடலாம். இக்கலையின் முக்கிய நோக்கம் நம்நாட்டு வரலாறு, புராணம் ஆகியவற்றினின்றும் அரிய காட்சிகளை நடத்தி மக்களுக்குத் தெய்வ பத்தியை வளர்ப்பதே.

அன்பையும், பத்தியையும் அளிக்கவல்லதும், உணர்ச்சியையும், அழகையும் வெளிப்படுத்த வல்லதுமான பொருத்தமான பாடல்களைப் பரத நாட்டியத்திற்குத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

இக்கலையினைக் கற்பிக்கச் சிறந்த கருவிகள் தேவை. மாணவர்களுக்கு இவை எளிதில் கிடைக்கா என்பதோடு இக்கலை பயிலுவார் எளிதில் ஆசிரிய ராக இயலாது. இக்கலையின் உயர்வையுணர்ந்து எல்லோரும், சமூக நிலைகருதாது கற்க முன்வர வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள் கின்றேன்.



நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

ஔவை தி. க. ஷண்முகம்




### நாடகத் தமிழ் வரலாறு :

தமிழ் மொழியில் இலக்கியத்தை இயல், இசை, நாடகம் என மூன்று பெரும் பிரிவுகளாக வகுத்துத் தமிழர்கள் பண்டைக்காலம் தொட்டே மொழியை வளர்த்து வந்திருப்பதாகத் தெரிகிறது. அதன் காரணமாகத் தமிழ்மொழியை ''முத்தமிழ்'' என்று பேசுகிறோம். ஆனால், வள்ளுவரை, இளங்கோவை, கம்பரை உலகில் வேறு எங்கும் பிறவாத பெரும் புலவர்கள் எனப் பெருமை பேசிக் கொள்வது போல, ஒரு நாடகப் புலவரைச் சுட்டிக் காட்ட நம்மால் முடியவில்லை.

இயல் துறையில் மேற்கூறிய மூன்று பெரும் புலவர்களைத் தவிர, சங்கப் புலவர்கள், சாத்தனார், திருத்தக்க தேவர், ஒட்டக்கூத்தர், புகழேந்தி முதலிய பல புலவர்களை நாம் அறிவோம்.

இசைத் தமிழ்த் துறையில் நாயன்மார்கள், ஆழ்வார்கள், மணிவாசகப் பெருமான், அருணகிரியார், அண்ணாமலை ரெட்டியார், இராமலிங்க வள்ளலார், முத்துத் தாண்டவர், கோபால கிருஷ்ண பாரதியார் முதலிய பல புலவர்களையும் நாம் அறிவோம்.

நாடகத் தமிழ்த் துறையில் நாம் பெருமை பேசிக் கொள்ளுவதற்கு பழங்கால முதல், பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் எவரும் தோன்றவில்லையென்பது வெளிப்படையான உண்மை.

''இலக்கியம் கண்டதற்கே இலக்கணம்'' என்பது மரபு. இதை வைத்துப் பார்க்கும்போது நாடக இலக்கியம் இல்லையானாலும், நாடக இலக்கண நூல்கள் தமிழில் ஏராளமாக இருந்திருப்பதாகத் தெரிகிறது. முறுவல், சயந்தம், செயிற்றியம், குணநூல், பரதம், அகத்தியம், பரத சேனாபத்யம், மதிவாணர் நாடகத்தமிழ் நூல் முதலிய பல்வேறு இலக்கண நூல்களின் பெயர்கள் தமிழ் இலக்கியங்களிலே காணப்படுகின்றன. இவற்றில் ஒரு நூலும் இப்போது இல்லை. இந்தக் குறையைப் போக்கும் முறையில் பரிதிமாற் கலைஞன் என்னும் வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரின் 'நாடக இயல்', விபுலானந்த அடிகளாரின் 'மதங்க சூளாமணி' ஆகிய புதிய இலக்கண நூல்கள் இப்போது இருக்கின்றன. மேற்குறிப்பிட்ட அழிந்துபோன இலக்கண நூற்களெல்லாம் நாட்டிய இலக்கணங்களே அன்றி நாடக இலக்கணங்கள் அல்ல எனவும் சில அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள். அதுவும் உண்மையாக இருக்கலாம். நாட்டியமும், நாடகமும் வெவ்வேறு கலைகளாகப் பண்டைக் காலத்தில் கருதப்படவில்லை. தமிழில் மட்டும் அன்று. உலகின் எல்லா மொழிகளிலுமே நாட்டியமும், நாடகமும் ஒரே கலையாகத்தான் கருதப்பெற்று வந்திருக்கிறது. இன்று அக்கலைகள் வளர்ச்சி பெற்றுவரும் நிலையில்தான் இசை நாடகம், நடன நாடகம், உரை நடை நாடகம், ஓரங்க நாடகம், மௌன நாடகம் என்றெல்லாம் பலவிதமாகப் பிரித்துப் பார்க்கிறோம்.

17ஆம் நூற்றாண்டின் இறுதியில் நாடகத்தின் கிளைகளாகச் சில இசை நாடகங்கள் தமிழில் தோன்றியிருக்கின்றன. பழனி நொண்டி நாடகம், திருக்கச்சூர் நொண்டி நாடகம், சீதக்காதி நொண்டி நாடகம் எனப் பல நொண்டி நாடகங்கள் தோன்றின. இவையனைத்தும் ஒரே கதையமைப்பைக் கொண்ட நாடகங்களாகும்.

'குறவஞ்சி நாடகம்' என்னும் ஒருவகை நாடகம் நாட்டியக் கலைஞர்களிடையே இன்னும் இருந்து வருகிறது. இவ்வகை நாடகங்களும் ஒரே கதையமைப்பைக் கொண்டவைதாம்.

அடுத்தபடியாக அருணசலக் கவிராயரின் 'இராம நாடகம்' கோபால்கிருஷ்ண பாரதியாரின் 'நந்தனர்' சரித்திரம்; இவை இரண்டும் சிறந்த இசை நாடகங்கள். இராம நாடகத்தையும், நந்தனரையும் மேடையில் நடித்தவர்கள் அனைவரும் இப்பெரியார்களின் பாடல்களைப் பாடியிருக்கிருர்கள்.

மகாகவி பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' நாடகப்போக்கில் அமைந்துள்ள ஒரு கவிதை இலக்கியம். இடையிடையே ஆசிரியன் வாக்காகச் சில கவிதைகள் இருந்தாலும் இதனை ஒரு கவிதை நாடகமாகக் கொள்ளலாம். இக் கவிதை நாடகம் என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. எஸ். வி. சகஸ்ரநாமம் அவர்களின் சேவாஸ்டேஜ் குழுவினரால், தமிழ்நாடு சங்கீத நாடகச் சங்கத்தின் உதவியோடு மேடை நாடகமாக அரங்கேறிப் புகழ் பெற்றது.

மேற்கூறியவற்றைத் தவிர ஒழுங்கான பாத்திரப் படைப்புகளைக் கொண்டு உருவாக்கப் பெற்ற இலக்கிய நாடகம் எதுவும் தமிழில் இல்லை. 'ஏன்? சிலப்பதிகாரம் இல்லையா' என்று கேட்கக் கூடும். சிலப்பதிகாரம் ஒரு நாடகக் காப்பியமே அன்றி, நாடக நூல் அல்ல வென்பது எல்லோருக்கும் தெரியும்.

**இலக்கியங்களில் நாடகங்கள் :**

ஆனல், தமிழ் இலக்கியங்களில் நாடகங்கள் நடைபெற்றதாகப் பல இடங்களில் பேசப்படுகின்றன. நூல்வடிவில் இலக்கியமாக வளராவிட்டாலும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகவே அரங்கில் நாடகங்கள் நடிக்கப் பெற்று வந்திருக்கின்றன என்பதற்கு ஏராளமான சான்றுகள் கிடைக்கின்றன. பழம்பெரும் நூலாகிய 'தொல்காப்பிய'த்திலேயே,

'வாடா வயவர் ஏத்தும் வள்ளி'

என்ற குறிப்பு வருகின்றது. உரையாசிரியர்கள் இதனை 'வள்ளிக் கூத்து' என்றே தெளிவாகக் கூறியுள்ளார்கள்.

வள்ளுவர் பெருமான் செல்வத்தின் நிலையாமையைப் பற்றிக் குறிப்பிடும் குறளில்,

''கூத்தாட்டு அவைக் குழாத் தற்றே
பெருஞ் செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று''

என்று கூறுகிருர். இதைக் கொண்டு பார்க்கும் போது, அவர் காலத்திலும் கூத்து நடைபெற்றிருக்க வேண்டுமெனத் தெரிகிறது. ஆம்; வள்ளுவரும் நாடகம் பார்த்திருக்கிருர். மக்கள் ஒருவர், இருவர், மூவராக வருவதையும், நாடகம் முடிந்ததும் திடீரென்று அத்தனைபேரும் மொத்தமாகக் கலைந்து செல்வதையும் கண்டிருக்கிருர். இதைத்தான் தமது குறட்பாவிலே உவமையாகக் குறித்திருக்கிருர் என்பதில் ஐயமில்லை.

'நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து
நான் நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும்
விரைகின்றேன்.'

என மாணிக்கவாசகப் பெருமான் பாடுகிருர். ஆம்; மாணிக்கவாசகரும் நாடகம் பார்த்திருக்கிருர் என்பதும், நாடகத்தைப் புனிதமான கலையாகக் கருதியிருக்கிருர் என்பதும் அவர் வாக்கிலிருந்து நமக்குப் புரிகிறது. வள்ளுவரும், மாணிக்கவாசகரும் நாடகம் பார்ப்பதானல் அஃது எத்தகைய உயரிய நாடகமாக இருந்திருக்க வேண்டும்! இவற்றைக்கொண்டு ஆராயும்போது, நாடகம் எழுதாக்கலையாக நின்று ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அரங்கில் வளர்ந்து வந்திருக்கின்றதேயன்றி, இலக்கியக் கலையாக ஏட்டில் இடம் பெறவில்லையென்ற முடிவுக்கே நாம் வர வேண்டியிருக்கிறது. ஆம்; நாடகங்கள் தமிழ் மொழியில் நடிப்பதற்காகவே எழுதப்பெற்றன. படிப்பதற்காக எந்த நாடகமும் எழுதப்பெருததால் அவை இலக்கியமாக ஏட்டில் இடம்பெறவில்லை.

**நாடக சபைகள் தோற்றம் :**

தமிழகத்தில் ஏறத்தாழ 19-ஆவதுநூற்ருண்டில் முறைகெட்டு, தரம்கெட்டு நடிக்கப்பெற்று வந்த நாடகங்களை முறைப்படுத்தி, ஒழுங்கு செய்து, பாடல்களும், உரையாடல்களும் அமைத்து, ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் பார்க்கலாம் என்ற நிலையை உண்டாக்கிய பெருமகனர் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் ஆவார். இவருடைய நாடகங்களே இன்றையத் தமிழ் நாடகத்திற்கு அடிப்படைச் செல்வங்கள் என்று சொல்லலாம். இவர் ஏறத்தாழ நாற்பது நாடகங்கள் எழுதியிருக்கிருர். பெரும்பாலும் புராண, இதிகாச நாடகங்கள்தாம். லட்சக்கணக்கான-கோடிக்கணக்கான மக்களைச் சுவைக்கச் செய்த தமிழ் நாடகங்கள் இவை. தமிழகத்தில் தொழில்முறையாகத் தோன்றிய நாடக சபைகள் பெரும்பாலானவற்றைத் தோற்றுவித்த பெருமை இவருக்கே உரியது. சுவாமிகள் வாழ்ந்த காலத்தில் தம்முடைய நாடகங்கள் எதையும் அச்சுஏற்ற அனுமதிக்கவில்லை. அவர் காலத்திற்குப்பின் பலர் அந் நாடகங்களில் சிலவற்றை மிகுந்த பிழைகளோடு அச்சிட்டிருக்கிருர்கள். இப்போதுதான் தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத்தின் உதவி மானியம் பெற்று சுவாமிகளின் 'அபிமன்யு சுந்தரி', 'சுலோசன' 'சதியனுசூயா' ஆகிய மூன்று நாடகங்களும் வெளிவந்திருக்கின்றன.

பயில் முறை நாடக சபைகளை அதாவது 'அமெச்சூர்' சபைகளைத் தோற்றுவித்த பெருமைக்

குரியவர் பத்மபூஷணம் பம்பல் சம்பந்தமுதலியார் ஆவார். இப் பெருமகனுர் தொண்ணூற்றுக்கு மேற்பட்ட நாடகங்களை எழுதியிருக்கிருர். ஷேக்ஸ்பியரின் ஆங்கில நாடகங்கள் சிலவற்றை மொழி பெயர்த்திருக்கிருர். காளிதாசரின் ''மாளவிகாக்னிமித்திரம்'' முதலிய சமஸ்கிருத நாடகங்களையும் தமிழில் தந்திருக்கிருர். இவருடைய நாடகங்கள் பெரும்பாலும் உரைநடை நாடகங்கள். இவர் எழுதிய மனுேகரா, இரண்டு நண்பர்கள், கள்வர் தலைவன், இரத்தினுவளி, வேதாள உலகம் முதலிய நாடகங்கள் சிலவற்றைத் தொழில்முறை நாடக சபையினர் எல்லோருமே நடித்திருக்கிருர்கள். இப்பெரியார், நாடகத்தைப் பற்றி நன்கு ஆராய்ந்து, தமது ஆராய்ச்சியின் முடிவினை 'நாடகத் தமிழ்' என்னும் நூலிலே வெளியிட்டிருக்கிருர். தமது நாடக வாழ்க்கை அனுபவங்களை யெல்லாம் 'நாடகமேடை நினைவுகள்' என்னும் தலைப்பில் ஆறு தொகுதிகளாக வெளியிட்டிருக்கிருர். 'நடிப்புக்கலையில் தேர்ச்சி பெறுவது எப்படி' என்னும் தலைப்பிலும் ஒரு நூல் வெளியிட்டிருக்கிருர். இவையெல்லாம் தமிழ் நாடகத்தைப்பற்றி ஆராய்வோருக்கு நன்கு பயன்படும்.

**நாடகாசிரியர்கள்:**

மேற்குறிப்பிட்ட சங்கரதாசரும், சம்பந்தரும் நாடாகாசிரியர்களாக மட்டுமல்லாமல் சிறந்த நடிகர்களாகவும் விளங்கியவர்கள் என்பது இவர்களுக்கு மேலும் சிறப்பைத் தருவதாகும். இன்றையத் தமிழ் நாடக உலகம் இவ்விரு பெரியார்களையும் தலைமையாசிரியர்களாக இதயத்தில் வைத்துப் போற்றி வருகின்றது. இவர்களைப் பின் பற்றி மற்றும் பல நாடாகாசிரியர்கள் தோன்றினுர்கள். இவர்களில் சதாவதானம் தெ. பொ. கிருஷ்ணசாமிப் பாவலர், 'கதரின் வெற்றி' முதலிய பல தேசிய நாடகங்களை எழுதியவர். தமிழ்நாட்டில் தேசீயத்தை முதன் முதலாக நாடகத்தில் புகுத்தி 1822-இல் அரங்கேற்றியவர் பாவலர் அவர்களே ஆவர். பாரத நாட்டில் சுதந்திரப் போராட்ட காலத்தில் நாகபுரியில் நடந்த கொடிப் போராட்டத்தைப் பின்னணியாக வைத்துத் 'தேசீயக் கொடி' என்னும் ஒரு நாடகத்தையும் இவர் மேடை ஏற்றினுர். அந் நாளிலேயே இவர் ஒரு தமிழ் நாடகக் குழுவை அமைத்துக்கொண்டு இங்கிலாந்துக்குச் சென்று இலண்டன் மாநகரில் தமிழ் நாடகங்களை நடத்தி வெற்றி கண்டவர். மகத்தான நெஞ்சுறுதியும், சிறந்த புலமையும் வாய்ந்தவர். இவர் மேலும் பதிபக்தி, பம்பாய் மெயில், பர்த்ருஹரி முதலிய நாடகங்களையும் எழுதினுர். இவருடைய நாடகங்கள், பேசாப்படங்கள் ஏராளமாக வந்த காலத்தில் அவற்றேடு வெற்றிகரமாகப் போட்டியிடுத் தமிழ் நாடகக்கலை அழியாமல் காத்து நின்றன.

மற்ருெரு நாடகாசிரியர் திரு. எம். கந்தசாமி முதலியார் அவர்கள். இவர், திரு. ஜே. ஆர். ரங்கராஜுவின் இராஜாம்பாள், இராஜேந்திரன், சந்திரகாந்தா, மோகனசுந்தரம், ஆநந்த கிருஷ்ணன், வடுவூர் துரைசாமி ஐயங்காரின் 'மேனகா' முதலிய நாவல்களை எல்லாம் மேடை நாடகமாக்கி அரங்கேற்றியவர். நடிப்புப் பயிற்சியளிப்பதில் மிகத் திறமை வாய்ந்தவர். மற்றும் சித்திரக்கவி சுப்பராய முதலியார், அப்பாவு பிள்ளை, ஏகை சிவசண்முகம் பிள்ளை, உடுமலைச்சரபம் முத்துச் சாமி கவிராயர், வீராசாமி வாத்தியார், சங்கர லிங்கக்கவிராயர். தம்புடுபாகவதர், மதுர பாஸ் கரதாஸ், உடையார்பிள்ளை முதலியவர்களெல்லாம் நாடகாசிரியர்களாக விளங்கிப் பல நாடகங்களையும், பாடல்களையும் எழுதியிருக்கிருர்கள்.

1942-இல் புலமைக்கடலான தமிழ் மூதாட்டி ஔவையார்' நாடகம் அரங்கேறியது. இந் நாடகம் அரங்கேறியதை ஒரு நாடகப் புரட்சி எனக் கூறலாம். ஔவையாரில் கதாநாயகன் என்று ஒரு பாத்திரமே இல்லை. காதல் காட்சிகள் கிடையா? நாடகம் முழுவதும் தொண்டு கிழவியான ஒரு மூதாட்டியே கதாநாயகி. தோன்றுதல், திரிதல், ஒடுங்கல் என்னும் நாடக இலக்கணத் திற்கே கட்டுப்படாத நாடகம் இது. இந்த ஔவையார் நாடகம் அழியாத இலக்கிய நாடகமாக இன்றுவரை பெருமக்களாலும், பிறமொழியினராலும், வெளிநாட்டினராலும் போற்றப்பட்டு வருகிறது. 1944-ஆம் ஆண்டு முதல் சமுதாய மறுமலர்ச்சி நோக்குடன் ஏராளமான நாடகங்கள் எழுதப்பெற்றன. இவற்றினைத் தொடர்ந்து பல நாடகங்கள் உருவாக்கப்பட்டன. 1960-க்குப்பின் தமிழ் நாடக மேடையில் ஏற்பட்டுள்ள ஒரு புதிய திருப்பம் ஒரே காட்சி அமைப்பில் நடைபெற்ற நாடகங்களாகும். இந்த அமைப்புக்கு அடிகோலியது 'சதுரங்கம்' என்னும் ஆங்கிலத் தழுவல் நாடகம்.

1965-ஆம் ஆண்டில் முதன் முறையாகச் சிறுவர்களுக்கென்று சிறுவர் சிறுமியரையே முதன்மையாகக் கொண்டு 'அப்பாவின் ஆசை' என்னும் நாடகம் அரங்கேறியது. இந் நாடகத்தை எழுதியவர் திருச்சி பாரதன் என்னும் குழந்தை எழுத்தாளர்.

**நாடகங்களின் பயன்:**

மேடையில் நூற்றுக்கணக்கில் நடைபெற்ற நாடகங்களில் எத்தனை நாடகங்கள் காலத்தினுல் அழியாமல் நிற்க முடியும் என்பதைக் காலந்தான் காட்ட வேண்டும். ஆனுல் தமிழ் நாடகம் நிச்சயமாக வளர்ந்திருக்கிறது என்பதையும், இந் நாடகங்களில் பல இலக்கியத் தரம் உடையன என்பதையும், நாட்டையும் மொழியையும், மக்களையும் உயர்த்துவதில் தமிழ் நாடகங்கள் பெரும் பங்கு பெற்றிருக்கின்றன என்பதையும் சொல்லிக் கொள்வதிலே நான் பெருமை அடைகிறேன்.

சர்க்காரின் சட்டங்களின் மூலம் மட்டும் சமுதாயத்தைத் திருத்திவிடவோ, ஒழுங்கை நிலை நாட்டவோ முடியாது. நாடகங்கள் சட்டத்திற்குத் துணையாக மக்களின் மனத்திலே நீதி நெறிகளை இயல்பாகப் பரப்பி வந்தால்தான் பொதுவான ஒழுக்கம் நிலைத்து நிற்கும்.

நல்ல பயன்தரும் நாடகங்கள்-மக்களை நல்வழிப் படுத்தக்கூடிய நாடகங்கள் எத்தனையோ தமிழரங்குகளில் நடிக்கப் பெற்றிருக்கின்றன.

மேடையில் இதுவரை நடிக்கப்பெருத 'மனேன் மணீய'த்திற்கு ஒப்பாகவோ, அதனை வெற்றி கொள்ளும் முறையிலோ, எந்த நாடகமும் இலக்கிய நாடகமாக இல்லை என்பது அறிஞர் களின் கருத்து.

கதை அமைப்பும், பாத்திரப் படைப்பும் மாத் திரம் நாடகத்தை இலக்கியமாக உருவாக்கிவிட இயலாதென்பதே பல அறிஞர்களின் கருத்து. கருணை வள்ளலான மகாத்மா காந்தி அடிகள் 'அரிச்சந்திரன்' நாடகத்தைப் பார்த்தார். அறிவு பெற்ருர். அதன்மூலம் தம் வாழ்வைச் செம்மைப் படுத்திக் கொண்டார்.

''அரிச்சந்திரன் நாடகம்தான் வாழ்க்கையில் என்னை சத்திய நெறிப்படி நடக்கத் தூண்டியது''— என்று சுயசரிதையாகிய 'சத்திய சோதனை'யில் கூறுகிருர். மகாத்மா காந்தியடிகளுக்கு சத்தியத் தைப் போதித்த சக்தி வாய்ந்த ''அரிச்சந்திரன்'' நாடகம் ஏன் இலக்கிய நாடகமாகக் கருதப்பட வில்லை?

**இலக்கிய - மேடை நாடகங்கள்:**

மகாகவி காளிதாசனின் ''சாகுந்தலமும்'' ''மாளவிகாக்கினி மித்திர''மும் இலக்கிய நாடகங் களாகும்போது, மகாகவி ஷேக்ஸ்பியரின் 'ஹாம் லெட்'டும், 'ஒத்தல்லோ'வும் இலக்கிய நாடகங் களாகும்போது நல்ல கதையமைப்பையும் பாத் திரப் படைப்பையும் கொண்ட அரிச்சந்திரன் ஏன் இலக்கிய நாடகமாக ஏற்கப்படவில்லை? இங்குதான் அறிஞர் பெருமக்கள் நன்கு சிந்திக்க வேண்டும்.

இராமாயணத்தை நடிக்கும்போது இலக்கிய மாகத் தோன்றவில்லை. மகாகவி கம்பன் வாக் காக வரும்போதுதான் இலக்கிய வடிவம் பெறு கின்றது. மகாபாரதத்தை நடிக்கும்போது அது இலக்கியமாவதில்லை. வில்லிபுத்தூரர் வாக்கிலே தான் இலக்கியமாகிறது. கண்ணகியை அரங்கிலே நடிக்கிருேம்; அது வெறும் நாடகம்தான். இளங் கோவின் வாக்கிலேதான் அது இலக்கியமாகிறது. எனவே, தமிழில் உயர்ந்த நாடக இலக்கியம் தோன்றவில்லையென்ருல், அது கதைகளின் குற் றமோ, பாத்திரப்படைப்புக்களின் தவருே அல்ல. ஏட்டில் இடம்பெறத் தக்க முறையில் ஒரு மகா கவிஞன் அதனை உருவாக்கவில்லையென்பதே உண் மையென எனக்குத் தோன்றுகிறது. கற்பனை வளம் செறிந்த கவிஞர் பெருமக்களின் கைவண் ணத்திலே உருவாகும் நாடகங்கள்தாம் அழியா இலக்கியமாக நின்று நிலைபெறும் என்பதில் ஐயமில்லை. மகத்தான நாடக இலக்கியங்களைத் தோற்றுவித்த ஷேக்ஸ்பியர், காளிதாசர், தாகூர் இவர்களுடைய நாடகங்கள் என்றும் நிலைத்து நிற்பவை. மகாகவிகளின் வாக்கிலே கதை அம்சம் குறைவாக இருந்தாலும் அவர் களுடைய கற்பனை வளத்தோடு இணைந்துவரும் போது அது இலக்கிய நாடகமாக உருப்பெற்று விடுகிறது. தாகூரின் பல நாடகங்கள் அப்படிப் பட்டவைதாம். 'உயிர்ப்பலி' போன்ற ஒரு சில நாடகங்கள்தாம் நாடகப் பண்பு கொண்டவை. ஏனைய நாடகங்கள் தாகூரின் கவிதை வளத்தால் ஏற்றம் பெறுகின்றனவேயன்றி, கதை அமைப் பிலோ, பாத்திரப்படைப்பிலோ நாடகப் பண்பு எதுவும் இல்லை.

கவிஞராக இல்லாத கற்பனை வளமிக்க எழுத் தாளர்களும் நாடகத் தமிழைப் போற்றும் முறை யில் நல்ல குணசித்திரப் பாத்திரங்களைப் படைத்து உரைநடையிலேயே தரமுள்ள உயர்ந்த நாடகங் களை எழுதலாம். உரைநடையில் வந்துள்ள பல நாடகங்கள் தமிழரை உயர்த்தியிருக்கின்றன. இந்த உண்மையைச் சென்ற 50 ஆண்டுகளாக இக் கலைத்துறையிலேயே தொடர்ந்து பணியாற்றிய அனுபவத்தில் அறிந்தவன் நான். அதனுல்தான் துணிவோடு கூறுகிறேன். உற்சாகத்தோடு மேடை நாடகத்தமிழை வளர்க்க முன்வாருங்கள். உங்கள் முயற்சி வெல்க.



கேடில் விழுச்செல்வம் கல்வி; ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

அ. சீனு. பாலு சகோதரர்கள்.




நிலைபேறு இல்லாத உலகில் நிலைபெற்று வாழ்வது கலை ஒன்றுதான். காலம் அழியும்; கலை அழியாது. மக்கள் உளங்கவர்ந்து உணர்வூட்டி இன்புறச் செய்யும் உயரிய கலை ஓவியக் கலை. அறுபத்துநான்கு கலைகளில் ஓவியக்கலை தலையாயது. பழைமையும், புதுமையும் புகலிடம் ஓவியமே. தமிழ்மொழியும், ஓவியக்கலையும் தமது இரு கண்களாகப் போற்று வளர்த்து வந்தனர் தமிழர்கள். ஒன்பான் சுவைகளையும் கண்மூலம் உள்ளத்தே ஊட்டி உணர்வு மயங்க வைப்பது ஓவியக்கலையே. தமிழர், அழியாத கலையை என்றுமே உள்ள இறைவனுக்கு அர்ப்பணித்து வாழ்ந்தனர். இத்தகைய உயர்ந்த தெய்வீகக் கலைகளுள் ஒன்று ஓவியக்கலை. மனிதமனத்தின் கற்பனை ஒன்றினுல் மட்டுமே காணக்கூடிய தனிச் சிறப்புக்களுடன் வாழ்வது ஓவியக்கலையே. தமிழ் நாட்டில் ஓவியக்கலை வளர்ந்து வந்ததற்கு நமது தமிழ் இலக்கியங்களும், ஒரு சில கோயிற்சித்திரங்களும், குகைச் சித்திரங்களும்தான் ஆதாரமாயுள்ளன.

கவிதைக்கலையை அனைவரும் அனுபவித்து மகிழ்தல் என்பது இயலாத காரியம். கவிதைக் கலையை அனுபவிப்பதற்கு 'மொழியறிவு' முதலியன தேவைப்படும். ஒரு சிலரே அனுபவிக்கக்கூடிய கவிதைக்கலையைப் பலரும் அனுபவிக்கக்கூடிய ஓவியக்கலையாக மாற்றத்தகும் பெருமை ஓவியக் கலைஞனையே சார்ந்தது. ஓவியன் தரும் வடிவமோ, வரிவடிவாலும் பலவண்ணத்தாலும் தீட்டப்படுகின்றது. அது யாவர்க்கும்-கல்லார்க்கும் கற்றவர்க்கும், சிறியார்க்கும் பெரியார்க்கும், நல்லார்க்கும் பொல்லார்க்கும், அறிவையும், ஆனந்தத்தையும், ஆற்றலையும் தருகிறது.

''காணப்பட்ட வுருவமெல்லாம்—மாணக்காட்டும் வகைமை நாடி—வழுவிலோ வியன் கைவினை போல எழுதப்படுவதுருவெழுத்தாகும்'' என்னும் யாப்பருங்கல இறுதிச் சூத்திர வுரையில் வரும் மேற்கோட் செய்யுளால் தமிழ்நாட்டில் சித்திர எழுத்துக்கள் (Hieroglyphics) வழங்கியிருக்கலாமென எண்ண வேண்டியிருக்கிறது. ஒவ்வு என்னும் வினையடியாகப் பிறந்த ஓவு, ஓவம், ஓவியம் என்னும் இம்மூன்று சொற்களும் சித்திரத்தையே குறிக்கின்றன. ஓவியத்தை ஒரு வெறுந்தொழிலாகக் கருதாது ஒரு யோக சாதனமாகவே கருதினர் தமிழர். தமிழ்நாட்டு ஓவியர்கள் புறக்கண் பார்த்ததை அகக்கண்ணுல் கண்டு, அதை உள்ளத்திலே தீட்டி, பின்னர்ச் சுவரிலோ, துணியிலோ வரைந்து வந்தார்கள். இதனை ''ஓவியனுள்ளத்துள்ளியது வியப்போன்'' எனக் கூறும் 'மணிமேகலை'யால் உணரலாம். 'சுவரை வைத்துச் சித்திரம் எழுத வேண்டும்' என்ற பழமொழி, சுவர்ச்சித்திரங்கள் பெரிதும் பயிலப் பட்டதால் வந்த வழக்காகும்.

'மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்' இன்றியமையாதன என்பது தமிழ் நாட்

டாருடைய கொள்கை. ஆலயங்களின் பிரகாரங்களிலும், விகாரங்களிலும், சுவர்களிலும், மதிற்புரங்களிலும், அரசர் தம் மாளிகைகளிலும் ஓவியங்களைத் தீட்டி வந்தனர்.

சங்ககாலத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, ஓவியக்கலை நம்நாட்டில் வளர்ச்சியடைந்திருந்தது என்பதற்குச் சங்கநூல்களிலே சான்றுகள் பல உள்ளன. ''சித்திரமெழுதுவார்க்கு வடிவின் தொழில்கள் தோன்ற எழுதுவதற்கு அரிது என்பது பற்றிச் செய்தியும் என்றார்; நோக்கினார் கண்ணிடத்தே தம் தொழிலை நிறுத்துதலின் கண்ணுள் வினைஞர் என்றார்'' என்பது நச்சினார்க்கினியர் உரை. வண்ணந்தீட்டாமல் வரைந்த ஓவியத்துக்குப் புனையா ஓவியம் என்று பெயர் கூறப்படுகிறது. இதனையே ஆங்கிலத்தில் (outline drawing) என்பர். 'புனையா ஓவியம் கடுப்ப' என்று நெடுநல்வாடை கூறுகிறது. ஓவியத் தொழிலுக்கு வட்டிகைச் செய்தி என்னும் பெயரும் உண்டு. வட்டிகை என்றால் துகிலிகை (Brush).

மாதவி, பல கலைகள் கற்றவள்; ஓவியக் கலையையும் பயின்று தேர்ச்சி பெற்றாள்; அவளை ''ஓவியச் செந்நூல் உரைநூற்கிடக்கையும் கற்றுத் துறைபோகிய பொற்றொடி மங்கை'' என்று மணிமேகலை கூறுகிறது. சிந்தாமணிக் காவியத்தை இயற்றிய திருத்தக்கதேவர் தமது காவியத்தில் ஓவியங்களைப் பற்றிச் சில இடங்களில் கூறுகிறார். மங்கையரின் அழகான உருவ அமைப்பைக் கூறும்போது,

> ''ஓவியர்தம் பாவையினோ
> டொப்பரிய நங்கை''
> என்றும் ''உயிர் பெற எழுதப்பட்ட
> ஓவியப்பாவை யொப்பாள்''
> என்றும் கூறுகிறார்.

''ஓவியத்து எழுதவொண்ணா உருவத்தாய்''
என்று இராமனைக் கம்பநாடன் புகழ்கிறான்.
''கூட்டினான் மணிபல தெளித்துக் கொண்டவன்
தீட்டினான் கிழிமிசைத் திலகவாள் நுதல்''
—சிந்தாமணி

''ஓவுறழ் நெடுஞ்சுவர்'' — பதிற்றுப்பத்து.
''ஓவியத்துறை கைபோய ஒருவனை'' —
நைடதம்.
''ஓவியன் உள்ளத்து உள்ளியது வியப்போன்—''
பரிபாடல்,
என்பன தமிழிலக்கியத் தொடர்கள்.

அரசர் மாளிகையில் மட்டுமல்லாது, தமிழர் தம் இல்லங்கள்தோறும் ஓவியங்கள் தீட்டிவைத்திருந்தனர் காவிரிப்பூம்பட்டினத்தில், என்றும் தெரிகிறது.

இப்போது நாம் காண்பவற்றுள் மிகப்பழைமை வாய்ந்தது பல்லவர் காலத்து ஓவியங்களே. மாமண்டூர் குகைகளின் வெளிமண்டபத்திலும், தூண்களிலும், மாமல்லபுரத்து ஆதிவராக மண்டபத்தில் துர்க்கை விக்ரகத்தின் மேலுள்ள விதானத்திலும் ஓவியங்கள் காணப்படுகின்றன. வடஆர்க்காடு மாவட்டம் விழுப்புரம் தாலுக்கா பனைமலை கோயிலின் பிரகாரச் சுவரில் காணப்படும் கந்தர்வர்களின் உருவங்களும், காஞ்சி கைலாச நாதர் கோயிலைச் சுற்றியுள்ள மண்டபங்களிற் சிலவற்றிலும் காணப்படும் சோமஸ்கந்தர் முதலிய உருவங்களும் இரண்டாவது நரசிம்ம பல்லவன் (680-720) காலத்தவை. அவனிபசேகரன் என்ற பாண்டியன் ஸ்ரீவல்லபன் காலத்தில் (830-862) சித்தன்னவாசல் அர்த்த மண்டபம் புதுப்பிக்கப்பட்டு, அதனுடன் குகை முழுதும் ஓவியங்கள் தீட்டப்பட்டன. தமிழ்நாட்டின் ஓவியக்கலையும், நாட்டியக்கலையும் ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் அடைந்திருந்த சிறப்பை எடுத்துக் காட்டுகிறது கோயிலில் நுழையும் போது தூண்களில் இருக்கும் நடனமாதர்களின் உருவங்கள்.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள கடயநல்லூருக்கு அருகில் உள்ள திருமலைபுரத்தில் இருக்கும் கோயிலில் உள்ள உருவங்கள், சித்தன்னவாசல் காலத்து ஓவியங்களே. பல்லவர்காலத்திலிருந்து வளர்ந்துவந்த ஓவியக்கலையின் ஒரு பகுதியைத் தஞ்சைப் பெருவுடையார் கோயிலின் கருப்பக் கிரகத்தைச் சுற்றியுள்ள சுவர்களில் தீட்டிய திரிபுர தகனம், சுந்தரர் வரலாற்றுக் காட்சிகளில் காண்கிறோம்.

தென்காசியை அடுத்த திருக்குற்றாலத்துச் சித்திரசபையில் காணும் ஓவியங்கள் மதுரையை ஆண்ட திருமலை நாய்க்கரது காலத்தில் (1623-'59) வரையப் பெற்றவை. மதுரை மீனாட்சி அம்மன் கோயில் பொற்றாமரைத் தடாகத்துக்கு மேற்கே உள்ள மண்டபத்து விதானத்தில் மீனாட்சி அம்மை திருக்கல்யாணமும், அஷ்டதிக்கு விஜயமும் வரையப்பட்டுள்ளன.

தஞ்சையை ஆண்ட மகாராஷ்டிர மன்னர்கள் காலத்திலும் ஓவியம் நன்கு வளர்க்கப்பட்டது. காகிதத்திலும், கண்ணாடியிலும் வரையப்பெற்றுள்ள சித்திரங்களை மேனாட்டார்கள் இன்றும் பாராட்டுகிறார்கள். சரபோஜி (1798-1833) நல்ல ஓவியங்களைச் சேகரித்ததோடு, நல்ல ஓவியர்களையும் ஆதரித்து வந்தார்.

நாட்டை மன்னர் ஆண்ட காலத்தைப் போல், எல்லோரும் இந்நாட்டு மன்னரானபிறகு கலை வளர்க்கும் கலைஞர்களுக்கு ஆதரவு இல்லை.

எதிர்த்தெழுந்த முடிமன்னர் கல்சுமக்க, கற்பரசியின் கலைக்கோயில் சமைத்ததுண்டு தமிழகம். கருப்பக்கிரகம், சயன அறை, சங்கீதக் கூடம், சதிராடும் மண்டபம், இவையாவற்றிலுமே பேசும் உருவங்கள் அமைத்துக் கலை வளர்த்ததுண்டு தமிழகம். மலைகுடைந்த மணிமாடம், கற்குடைந்த எழில் ரதம்—சித்திரமமைந்த மணித் தூண்கள், பொலிவுடன் ஒளிவிடும் கலங்கரை விளக்கங்கள் - இவை யாவற்றிலுமே கலை நுணுக்கமமைத்த சிங்காரப் பொன்னாடுதான்

புனை ஓவியம்

அரசனும் அமைச்சனும்

[ தஞ்சைப் பெருவுடையார் கோயில் சுவரில் உள்ளது.
காலம் : கி. பி. 11-ஆம் நூற்றாண்டு ]

டாருடைய கொள்கை. ஆலயங்களின் பிரகாரங்களிலும், விகாரங்களிலும், சுவர்களிலும், மதிற்புரங்களிலும், அரசர் தம் மாளிகைகளிலும் ஓவியங்களைத் தீட்டி வந்தனர்.

சங்ககாலத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, ஓவியக்கலை நம்நாட்டில் வளர்ச்சியடைந்திருந்தது என்பதற்குச் சங்கநூல்களிலே சான்றுகள் பல உள்ளன. ''சித்திரமெழுதுவார்க்கு வடிவின் தொழில்கள் தோன்ற எழுதுவதற்கு அரிது என்பது பற்றிச் செய்தியும் என்றார்; நோக்குவார் கண்ணிடத்தே தம் தொழிலை நிறுத்துதலின் கண்ணுள் வினைஞர் என்றார்'' என்பது நச்சினார்க்கினியர் உரை. வண்ணந்தீட்டாமல் வரைந்த ஓவியத்துக்குப் புனையா ஓவியம் என்று பெயர் கூறப்படுகிறது. இதனையே ஆங்கிலத்தில் (outline drawing) என்பர். 'புனையா ஓவியம் கடுப்ப' என்று நெடுநல்வாடை கூறுகிறது. ஓவியத் தொழிலுக்கு வட்டிகைச் செய்தி என்றும் பெயருண்டு. [illegible] வட்டிகை என்றால் தூரிகை (Brush).

[illegible] கலைகளையும் [illegible] தேர்ச்சி பெற்றவள், அவளை ''ஓவியச் செந்நூல் உரைநூல் [illegible] கற்றுத் துறைபோகிய பொற்றொடி மங்கை'' என்று மணிமேகலை கூறுகிறது. சிந்தாமணிக் காவியத்தை இயற்றிய திருத்தக்கதேவர் தமது காவியத்தில் ஓவியங்களைப் பற்றிச் சில இடங்களில் கூறுகிறார். மங்கையரின் அழகான உருவத்தைக் கூறும்போது,

> ''ஓவியர் தம் பாவையினோ
> டொப்பரிய நங்கை''

என்றும் ''உயிர் பெற எழுதப்பட்ட
ஓவியப்பாவை யொப்பார்''
என்றும் கூறுகிறார்.

> ''ஓவியத்து எழுதஒண்ணா உருவத்தாய்''
> என்று இராமனைக் கம்பநாடன் புகழ்கிறான்.

> ''கூட்டினான் மணியால் தெளித்துக் கொண்டவன்
> தீட்டினான் கிழிமிசைத் திலகவாள் நுதல்''
> —சிந்தாமணி

> ''ஓவுறழ் நெடுஞ்சுவர்'' — பதிற்றுப்பத்து
> ''ஓவியத்துறை கைபோய ஒருவனை'' —
> கந்தபுராணம்.
> ''ஓவியன் உள்ளத்து உள்ளியது வியப்போன்—''
> பரிபாடல்.

என்பன தமிழிலக்கியத் தொடர்கள்.

அரசர் மாளிகையில் மட்டுமல்லாது தமிழர் தம் இல்லங்கள்தோறும் ஓவியங்கள் தீட்டிவைத்திருந்தனர் காவிரிப்பூம்பட்டினத்தில், என்றும் தெரிகிறது.

இப்போது நாம் காண்பவற்றுள் மிகப்பழமை வாய்ந்தது பல்லவர் காலத்து ஓவியங்களே. மாமண்டூர் குகைகளின் வெளிமண்டபத்திலும், தூண்களிலும், மாமல்லபுரத்து ஆதிவராக மண்டபத்தில் துர்க்கை விக்கிரகத்தின் மேலுள்ள விதானத்திலும் ஓவியங்கள் காணப்படுகின்றன. வடஆர்க்காடு மாவட்டம் விழுப்புரம் தாலுகா பனைமலை கோயிலின் பிரகாரச் சுவரில் காணப்படும் கந்தர்வர்களின் உருவங்களும், காஞ்சி கைலாசநாதர் கோயிலைச் சுற்றியுள்ள மண்டபங்களின் சுவற்றிலும் காணப்படும் சோமாஸ்கந்தர் முதலிய உருவங்களும் இரண்டாவது நரசிம்ம பல்லவன் (680-720) காலத்தவை. அவனிபசேகரன் என்ற பாண்டியன் ஸ்ரீவல்லபன் காலத்தில் (830-862) சித்தன்னவாசல் அர்த்த மண்டபம் புதுப்பிக்கப்பட்டு, அதனுடன் குகை முழுதும் ஓவியங்கள் தீட்டப்பட்டன. தமிழ்நாட்டின் ஓவியக்கலையும், நாட்டியக்கலையும் ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் அடைந்திருந்த சிறப்பை எடுத்துக் காட்டுகிறது கோயிலில் நுழையும் போது தூண்களில் இருக்கும் நடனமாதர்களின் உருவங்கள்.

[illegible]

தென்காசியை அடுத்த திருக்குற்றாலத்துச் சித்திரசபையில் காணும் ஓவியங்கள் மதுரையை ஆண்ட திருமலை நாய்க்கரது காலத்தில் (1623-'59) வரையப் பெற்றவை. மதுரை மீனாட்சி அம்மன் கோயில் பொற்றாமரைத் தடாகத்துக்கு [illegible] விதானத்தில் மீனாட்சி அம்மை திருக்கல்யாணமும், அஷ்டசித்திகளும் வரையப்பட்டுள்ளன.

தஞ்சையை ஆண்ட மகாராஷ்டிர மன்னர்கள் காலத்திலும் ஓவியம் நன்கு வளர்க்கப்பட்டது. காகிதத்திலும், கண்ணாடியிலும் வரையப்பெற்றுள்ள சித்திரங்களை மேனாட்டார்கள் இன்றும் பாராட்டுகிறார்கள். சரபோஜி (1798-1833) நல்ல ஓவியங்களைச் சேகரித்ததோடு, நல்ல ஓவியர்களையும் ஆதரித்து வந்தார்.

நாட்டை மன்னர் ஆண்ட காலத்தைப் போல், எல்லோரும் இந்நாட்டு மன்னராகிவிட்டது, கலை வளர்க்கும் கலைஞர்களுக்கு ஆதரவு இல்லை.

எதிர்த்தெழுந்த முடிமன்னர் கல்சுமக்க, கற்பரசியின் கலைக்கோயில் சமைத்ததுண்டு தமிழகம். கருப்பக்கிரகம், சயன அறை, சங்கீதக் கூடம், சதிராடும் மண்டபம், இசைபாடாமலே பேசும் உருவங்கள் அமைத்துக் கலை வளர்த்ததுண்டு தமிழகம். மலைகுடைந்த மணிமாடம், கற்குடைந்த எழில் ரதம்—சித்திரமமைந்த மணித்தூண்கள், பொலிவுடன் ஒளிவிடும் கலங்கரை விளக்கங்கள் - இவை யாவற்றிலுமே கலை நுணுக்கமமைத்த சிங்காரப் பொன்னாடுதான்

தமிழகம். உயர்வான கலையார்வம் தமிழகத்தை எழில்ததும்பும் கலைக்கோட்டையாக்கியிருக்கிறது. ஓவியக்கலை வளர்க்கும் எண்ணம் ஓவியக் கலைஞனுக்கு மட்டுமே அந்த நேரத்தில் இருந்த தில்லை. நாடாளும் மன்னனுக்கும், திட்டம் தீட் டும் அமைச்சனுக்கும், ஆலயங்காக்கும் அறநெறி யாளர்களுக்குங்கூட அந்த எண்ணமும், ஆர்வ மும் இருந்திருக்கின்றன.

மடாலயம் சொன்னுல் மன்னன் இசைவான். மன்னன் கிளம்பினுல், மடாலயம் சாமரம் வீசும். இந்த ஒற்றுமை கலையார்வத்தில்தான் அதிகமாக இருந்திருக்கிறது தமிழகத்தில். இப்படி வளர்ந்த கலை தமிழகத்தைப் பொருத்தமட்டில் இடைக் காலத்தில் தடைப்பட்டுவிட்டது.

ஆனுல் அந்த நிலை இன்று முற்றிலும் மாறி விட்டது. தமிழகத்தின் கலையுலகில் மீண்டும் மறு மலர்ச்சி ஒளிவிடத் தொடங்கியிருக்கிறது. புதிய ஆர்வமும், புகழ் தேடும் முறையும் மீண்டும் வளரும்நிலை பிறந்திருக்கிறது. இலட்சியப்பாதை தெரிகிறது. மக்கள் இன்று கலையைத் தேடிப் போகின்றனர். சித்தன்னவாசல் சித்திரங்கள் இன்று மீண்டும் பெருமைப்படுகின்றன. இந்த நிலையைத்தான் மறுமலர்ச்சி நிலையென்கிறேம். இன்று தமிழகமெங்கும் கலையார்வம் மீண்டும் சிறப்புறத் தொடங்கியிருக்கிறது மட்டுமல்ல, புதிய அளவில் பல கலைப்பணிகள் பெருகிய வண்ணமும் இருக்கின்றன. பண்டையகாலத்திய புகழ் நிலை யோடு, இன்றைய புதிய முறைகள் சிலகாலம் வரையில் சரிநிகர் சமானமாய், போட்டியிட முடியாதென்ருலும், என்ருவது ஒருநாள், மீண்டும் நம் நாட்டுக் கலைகள் பொலிவு பெற்றுயரத்தான் செய்யும். அந்நிலை காணக் கலைஞர்கள் அயரா துழைப்பார்களாக!



## ஓவியர்மணி இரவிவர்மா

சந்திர னொளியை ஈசன் சமைத்து, அதுபருக வென்றே
வந்திடு சாத கப்புள் வகுத்தனன்; அமுதுண் டாக்கிப்
பந்தியிற் பருக வென்றே படைத்தனன் அமரர் தம்மை;
இந்திரன் மாண்புக் கென்ன இயற்றினன் வெளிய யானை.

மலரினில் நீல வானில் மாதரார் முகத்தில் எல்லாம்
இலகிய அழகை ஈசன் இயற்றினுன், சீர்த்தி இந்த
உலகினில் எங்கும் வீசி, ஓங்கிய இரவி வர்மன்
அலகிலா அறிவுக் கண்ணுல் அனைத்தையும் நுகரு மாறே.

மன்னர்மா ளிகையில் ஏழை மக்களின் குடிலில் எல்லாம்,
உன்னருந் தேசு வீசி உளத்தினைக் களிக்கச் செய்வான்.
நன்னரோ வியங்கள் தீட்டி நல்கிய பெருமான், இந்நாள்
பொன்னணி யுலகு சென்ருன் புவிப்புகழ் போது மென்பான்.

அரம்பைஊர் வசிபோ லுள்ள அமரமெல் லியலார் செவ்வி
திறம்பட வகுத்த எம்மான்! செய்தொழில் ஒப்பு நோக்க
விரும்பியே கொல்லாம் இன்று விண்ணுல கடைந்து விட்டாய்?
அரம்பையர் நின்கைச் செய்கைக்கு அழிதலங் கறிவை திண்ணம்.

காலவான் போக்கில் என்றுங் கழிகிலாப் பெருமை கொண்ட
கோலவான் தொழில்கள் செய்து குலவிய பெரியோர் தாமும்,
சீலவாழ் வகற்றி ஓர்நாட் செத்திடல் உறுதி யாயின்,
ஞாலவாழ் வினது மாயம் நவின்றிடற் கரிய தன்றே?

—பாரதியார்

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

சி. பாலசுப்பிரமணியன், எம்.ஏ., எம்.லிட்.
தமிழ் விரிவுரையாளர், சென்னைப் பல்கலைக் கழகம்

# தமிழகத்தின் தொன்மை

உலகம் தோன்றிப் பன்னெடுங்காலம் கழிந்து விட்டது. முதற்கண் உலகம் தோன்றிய காலத்தில் தீக்குழம்பாக இருந்த மண் முதலில் குளிர்ந்து அமைந்த நிலப்பகுதி தென்னகமே என்றும், உலகில் முதற்கண் தோன்றிய மக்களினம் இத் தென்னகத்தில்தான் வாழ்ந்திருத்தல் வேண்டும் என்றும் புவி இயல் ஆராய்ச்சியாளர் பலரும், வரலாற்றுராய்ச்சியாளர் பலரும் கருதுகின்றனர். வட இந்தியாவில் கங்கைச் சமவெளியில் மனித வாழ்வு தொடங்காத காலத்திலேயே, இப்போது இந்தியப் பெருங்கடல் உள்ள பகுதியில் பரந்த நிலமும், மலையும், ஆறும் இருந்து பிறகு கடல் கோளால் மறைந்தழிந்தன என்றும் கூறுவர். இந்தப் பெரிய நிலப்பரப்பு கிழக்கே பர்மா தொடங்கித் தென் சீனு வரையிலும், மேற்கே ஆப்பிரிக்காவின் கிழக்குத் தெற்குக் கரைகள் வரையிலும், வடக்கே விந்திய மலை வரையிலும் தெற்கே ஆஸ்திரேலியா[1] வரையிலும் பரந்திருந்தது. இந்நிலப்பரப்பினை ஆங்கிலேயர் **இலெமூரியா** (Lemuria) என்று அழைப்பர். நம் தமிழ் முன்னோர் இப்பகுதியினைக் **குமரிக் கண்டம்** என அழைத்தனர். இங்குத்தான் மனிதன் முதலில் தோன்றியிருக்கக்கூடும் என்று வரலாற்றுப் பேராசிரியர்கள் தம் நூலின்கண் புலப்படுத்தியுள்ளனர். எரிமலை வெடிப்பும், நிலநடுக்கமும் தென்னகத்தில் இல்லாத தன்மையைக்கொண்டும் இக் கருத்து வலியுறுகின்றது.[2]

பழந்தமிழ் இலக்கியங்களிலும் கடல்கோளைப் பற்றிய குறிப்புக்கள் உண்டு. தற்போதைய குமரி முனைக்குத் தென்பகுதியில் பஃறுளியாறு என்னும் ஆறு பாய்ந்து வளம் பெருக்கியதாகவும், பன் மலையடுக்கம் செறிந்து விளங்கியதாகவும், பின்னர் அவை கடல்கோளால் அழிந்தனவாகவும் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது[3]. புறநானூறு[4], இறையனுர் களவியல் உரை[5] முதலியனவும் இக்கருத்திற்குச் சான்று பகர்கின்றன. இவ்வாறு கடல்கொண்ட நிலப்பகுதியே மனித நாகரிகம் வளர்ந்த தொட்டில் (Cradle of human race) என்பர். சிலர் மத்தியதரைக் கடலை அடுத்த நிலப் பகுதியில் மக்கள் முதன்முதலில் தோன்றிப் பின் பல்வேறு நாடுகளில் சென்று குடியேறினர் என்பர். ஆயினும் 'பழந்தமிழ் நாட்டு மக்களே முதலில் தோன்றிய மனித இனம் என்றும், அவர்கள் வெவ்வேறு நாடுகளுக்குச் சென்று பிரிந்து வாழ்ந்த பின் வெவ்வேருக இனங்கள் வளர்ந்தன என்றும் கொள்வது பொருந்தும்' என்பது அறிஞர் கண்ட உண்மையாகும்.

வரலாற்றின் மிகப் பழங்காலத்திலே தென்னகத்தில் வாழ்ந்த மக்கள் தமிழர் என வழங்கப் பட்டதோடு, வரலாற்றுத் தெளிவு நோக்கித் திராவிடர்கள் என்றும் வழங்கப்பட்டார்கள். கிறித்துநாதர் பிறப்பிற்கு ஐயாயிரம் ஆண்டுகள் முற்பட்டதாகக் கருதப்படும் மொகஞ்சதரோ

அல்லது சிந்துவெளி நாகரிகம், வரலாற்றுப் பழமையும், புகழும் வாய்ந்த சுமேரிய நாகரிகத் திற்கு இணையான திராவிட நாகரிகத்தைக் கொண்டிருந்தது என்று சர் ஜான் மார்ஷல் முதலான தொல்பொருளியல் ஆராய்ச்சி அறிஞர் கள் துணிகின்றனர். அம்மக்கள் பேசிய பழந் திராவிட மொழியின் கூறுகள் தமிழ் மொழியில் காணப்படுவதால், தமிழ் மொழியே இன்று உலகில் வாழும் மொழிகளில் மிகப் பழமையான மொழியாகும் என்பர் மறைத்திரு. ஹீராஸ் பாதிரியார் அவர்கள்[6]. வடநூலார் தமிழரைத் திராவிடர் என வழங்கினர். தமிழகத்தைத் 'தமிரிகி' என்று உரோமர்களும், 'தெஹி மோளோ' என்று சீனர்களும் வழங்கினர்.

தமிழகத்தின் எல்லை மிகப் பழங்காலத்திலேயே வரையறுக்கப்பட்டுவிட்டதனைச் சங்க இலக்கியங் கள் எடுத்துக்காட்டுகின்றன.

வடாஅது, பனிபடு நெடுவரை வடக்கும்,
தெனாஅது, உருகெழு குமரியின் தெற்கும்,
குணாஅது, கரைபொரு தொடுகடல் குணக்கும்,
குடாஅது, தொன்றுமுதிர் பௌவத்தின்
குடக்கும்
—(புறநானூறு: 6 : 1-4.)

தென்குமரி வடபெருங்கல்
குணகுட கடலா எல்லை
—(புறநானூறு: 17 : 1-2.)

என்ற புறநானூற்றுத் தொடர்களும், 'ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியம்' தந்த தொல் காப்பியனாரின் ஒருசாலை மாணாக்கராகிய பனம் பாரனாரின் பாயிரமும்[7] பழந்தமிழ் நாட்டின் எல்லையினை நன்கு குறிக்கின்றன. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் உரையில் குமரிக்குத் தெற்கே அக்காலத்தே விளங்கிய நாற் பத்தொன்பது நாடுகளைப்பற்றிய குறிப்பையும் காண்கின்றோம்.

**தமிழினத்தின் தொன்மை:**

தமிழகம் தொன்மை மிகுந்ததுபோலவே இங்கு வழிவழியாக வாழ்ந்து வரும் தமிழினமும் தொன் மையும், சிறப்பும்கொண்டு துலங்குவதாகும்.

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே
— வாளொடு
முன்தோன்றி மூத்த குடி

என்று சேரர் ஐயனரிதனர் புறப்பொருள் வெண்பாமாலையில் தமிழினத்தின் பழமையினையும் வீரமேம்பாட்டினையும் விளக்கிக் கூறியுள்ளார்.

வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இன்று
—(திருக்குறள் : 955.)

என்ற குறளின் உரையில், உரையாசிரியர் பரிமேலழகர், ''தொன்றுதொட்டு வருதல்— 'சேர சோழ பாண்டியர்' என்றாற்போலப் படைப் புக் காலந் தொடங்கி மேம்பட்டு வருதல்'' எனக் கூறியுள்ளார். தமிழின் தொன்னூலாசிரியராம் தொல்காப்பியனார்,

. . . . . . . . . . . . . . . . உறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்
போந்தை வேம்பே ஆர்என வரூஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்
—(தொல்காப்பியம் - புறத்திணையியல்:
நூற்பா : 5.)

என்று சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் அடையாளப் பூக்களைச் சுட்டிக் கூறியுள்ளமை தமிழினத்தின் பழமையினைப் பரக்கப் பேசும்.

வடமொழியின் முதல் காவியமாகிய வான்மீகி ராமாயணத்தில் பாண்டிய மன்னன் பாராட்டப் பட்டிருக்கிறான். 'பின்பு, பொன் நிறைந்ததாயும், அழகுடைத்தாயும், முத்து மணி இவற்றால் அணியப் பட்டதாயும், நகரத்து அரணோடு இணைக்கப்பட்ட தாயும் உள்ள பாண்டியர் வாயிற் கதவை, வானரங்காள், போய்க் காண்பீர்'[8] என்று இராமன் கிட்கிந்தையிலிருந்த வானரப் படை யினர்க்குச் சொன்னதாக அக்காவியம் குறிப் பிடுகின்றது. வடநூல்களில் இருக்கு வேதமும், தைத்திரீயமும், வியாச பாரதமும் சேர அரசர் களைக் குறிக்கின்றன[9]. அசோகப் பேரரசன் கல் வெட்டுக்களும் சேரவேந்தரைப்பற்றிய குறிப்பை வெளியிடுகின்றன.

காலினும் கலத்தினும் பிரிந்து பழந்தமிழர் பொருளீட்டினர். அக்காலத்தே மேலைநாட் டினராகிய கிரேக்கர், யவனர், பாபிலோனிய நாட்டுக் கோசியர்கள் முதலியவர்கள் தமிழகத் தோடு வணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். யவனரைப்பற்றிய குறிப்பு தமிழிலக்கியங்களில் பத்து இடங்களில் வந்துள்ளன[10]. அலெக்சாண் டர் என்னும் பெருவேந்தனுக்குப் பின் செல்யூகஸ் நிகோட்டர் விடுத்த மெகஸ்தனீஸ் என்னும் மேலை நாட்டறிஞர் சந்திரகுப்த மன்னன் அவையில் தங்கியிருந்த நாளில் தாம் கேள்வியுற்ற செய்தி களைக் குறித்துவைத்தார். அக்குறிப்பினுள் தமிழகத்து மன்னர்களைப்பற்றியும், ஊர்களைப் பற்றியுமான செய்திகள் உள்ளன. எகிப்து நாட்டுத் தாலமிகள் தமிழகத்திற்குக் கடல்வழி காண முனைந்தனர். இப்பலாஸ் ( Hippalus ) என்னும் கிரேக்கன் இந்நாட்டில் அடிக்கும் தென்மேற்கு, வடகிழக்குப் பருவக்காற்றின் நிலை கண்டு உரைத்தபின் யவன வாணிகம் வளம்பெற நடந்தது. அராபியரும் மேலைக் கரை வழியே தமிழகம் வந்து வாணிகம் செய்தனர். சீன நாட்டுடனும், ஜாவா, சுமத்ரா, மலேயா முதலிய தீவுகளோடும் வாணிக உறவு ஓங்கியிருந்தது.

நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக
—(புறநானூறு: 66 : 1-2.)

என்று சோழன் கரிகாற் பெருவளத்தானை வெண்ணிக் குயத்தியார் பாடுவதிலிருந்து வரலாற்றின் பழங்காலத்திலேயே தமிழர் கடல் வாணிகம் செலுத்திய வன்மை புலப்படுகின்றது.

சேரநாட்டுத் தேக்கமரம் வெளிநாடுகள் பலவற்றிற்குச் சென்று அங்குப் பல கட்டடங்கள் எழும்பத் துணைகோலியுள்ளது. தமிழ் நாட்டு நீலிச் சாயத்தில் தோய்த்த மெல்லிய துணிகள் மூவாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டதாகக் கூறப்படும் எகிப்து நாட்டுக் கல்லறைகளில் காணப்பட்டதாகக் கூறுவர். எகிப்து மட்டுமன்றிச் சிரியா, பாபிலோனியா முதலிய நாடுகளோடும் தமிழகம் வணிக உறவு வைத்திருந்தது. கி. மு. பத்தாம் நூற்றாண்டில் அரசாண்ட சாலமன் என்ற ஹீப்ரு மன்னன் தமிழகத்திலிருந்து பொன், வெள்ளி, தந்தம், குரங்கு, மயில், அகில் முதலிய பொருள்களைப் பெற்றுக் கொண்டதாக வரலாறு குறிப்பிடுகின்றது. பைபிளில் (Bible) துக்கியம் என்ற சொல் மயிலைக் குறிக்கக் காணலாம். தமிழில் தோகை எனும் சொல்லே ஹீப்ரு மொழியில் 'துக்கியம்' ஆனது. இவ்வாறே தமிழகத்து அரிசி, கிரேக்கத்தில் ஒரிசியாகவும், சந்தனம் பல மொழிகளில் வழங்கிப் பின் ஆங்கிலத்தில் சந்தல் (Sandal) ஆகவும் ஆனது.

தென்பாண்டிக் கடல் முத்து உலகப் புகழ் பெற்றது. தமிழ் நாட்டு முத்து, அதைப்போல் மூன்று மடங்கு எடையுள்ள மாற்றுயர்ந்த பொன்னுக்கு நிகராக மதிக்கப்பட்டதாகவும், காயஸ் கிளாடியஸ் என்னும் மேற்புல மன்னனுடைய மனைவி, மூன்றுலட்சம் பவுன் மதிப்புள்ள முத்து அணிந்திருந்ததாகவும், தமிழ்நாட்டு முத்துக்களுக்கும், மணிகளுக்கும் ஈடாக இருபதுலட்சம் பெறும் உரோம் நாட்டுச் செல்வம் தமிழகத்திற்குக் கிடைத்ததாகவும் வரலாறு கூறுகின்றது. பிளினி (Pliny) என்ற வரலாற்றாசிரியர் இதனை வருந்திக் குறிப்பிட்டுள்ளார்[11].

சேர, சோழ, பாண்டியர் என்னும் முடியுடை மூவேந்தர் பெயர்களும், ஆர்க்காடு, கரூர், முசிறி, தொண்டி, கொற்கை, குமரிமுனை, பொதிகை, கோடிக்கரை முதலிய இடப்பெயர்களும், கிரேக்கர் முதலான மேனாட்டு மக்கள் குறிப்புக்களில் இடம் பெற்றுள்ள சிறப்பினைக் கால்டுவெல் காட்டுவர்[12]. கி. மு. 20-ஆம் ஆண்டில் பாண்டிய மன்னன் ஒருவன் ஐரோப்பாவில் அந்நாளில் புகழ் பெற்று விளங்கிய அகஸ்டஸ் மன்னனுக்குத் தூது அனுப்பினான். கி.பி. 225-ஆம் ஆண்டில் ஏற்பட்ட உரோம நாட்டுக் குறிப்புக்களின்படி (Peutingerian Tables of 225 A. D.) இரண்டாயிரம் உரோமநாட்டு வீரர்கள்கொண்ட படை ஒன்று முசிறித் துறைமுகத்தில் இருந்ததாக அறியப்படுகிறது. அகஸ்டஸ் பெயரால் ஒரு கோயிலும் கட்டப்பட்டிருந்ததாக அறியப்படுகிறது. பழைய உரோம நாணயங்கள் பல தமிழகத்தில் மேற்குக் கடற்கரைப் பகுதியில் கண்டெடுக்கப்பட்டுள்ளமை இக்கருத்துக்களுக்கு அரண் செய்கின்றது. ஸ்டிரபோவின் விவரணம், பெரிபுளூஸ் என்னும் நூல், பிளினியின் 'இயற்கை வரலாறு', தாலமியின் 'பூகோள விவரணம்' முதலியன தமிழர் நாகரிகச் சிறப்பை நன்கு விளக்குவனவாம். யவனரின் பாவை விளக்கு, புலிச் சங்கிலி, யவனப் பொறிகள் தமிழ் நாட்டில் இடம் பெற்று விளங்கின. வடநாட்டு வாணிகத்திலும் தென்னாட்டு வாணிகமே சிறந்திருந்தது என்று சாணக்கியர் தம் அர்த்தசாஸ்திரத்தில் புகழ்ந்துரைத்துள்ளார்[13].

### தமிழ் மொழியின் தொன்மை :

தமிழினம் போன்றே தமிழ் மொழியும் பழமையானது என்பது சொல்லாமலே விளங்கும். தொல்காப்பியத்தில் பலவிடங்களில் தொல்காப்பியனர் 'என்மனார் புலவர்', 'என்ப' எனக் குறிப்பிடுவதனின்று தொல்காப்பியத்திற்கும் முற்பட்டே தமிழ் மொழியில் இலக்கண, இலக்கிய நூல்கள் இருந்தமை புலனாகும். மாக்ஸ் முல்லர் என்னும் மொழி நூலறிஞர் தமிழே மிகவும் பண்பட்ட மொழி என்றும், தனக்கே உரிய வளம் வாய்ந்த இலக்கியச் செல்வங்களைப் பெற்றிருக்கும் மொழி என்றும் பாராட்டியுள்ளார்[14]. ஆற்றல் மிக்கதாகவும், சில சொற்களால் கருத்தைத் தெரிவிப்பதாகவும் விளங்குவதில் தமிழ்மொழியை எம்மொழியும் விஞ்ச முடியாது என்றும், உள்ளத்தின் பெற்றியை உள்ளவாறு எடுத்துக் காட்டுவதில் வேறு எம்மொழியும் இயைந்ததாக இல்லை என்றும் பெர்சிவல் என்னும் அறிஞர் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார்[15]. வடமொழி, எபிரேயம் (Hebrew), கிரேக்கம் ஆகிய மூன்று இலக்கிய மொழிகளில் தமிழ்ச் சொற்கள் கலந்திருக்கின்றன என்று ரைஸ்டேவிஸ் என்பார் கூறியுள்ளார்

இதுகாறும் கூறியவற்றால் தமிழகம் நிலம், இனம், மொழி ஆகிய முத்திறத் துறையிலும் தொன்மையுடையதாக விளங்குவதோடு, சிறப்பும் உடையதாகப் பலவாற்றாலும் தனிசிறந்து துலங்குகின்றது என்பது வெள்ளிடைமலை.

---

1. There is geological evidence to prove that in very early time South India formed part of a huge continent which extended from Burma and South China in the east, South Africa on the west, Vindhya Hills on the north and Australia on the south.

   —Rig Vedic India, p.91

2. Considering the fact that we have scarcely any trace of Volcanic eruptions or earth-tremors, as they frequently occur in North India, it may be said that South India was the part of the world to settle first as a land mass. It is probable that the original man might have come into existence first in South India.

   —V. R. Ramachandra Dikshitar, Pre-Historic South India, p.234.

3. வடிவேல் எறிந்த வான்பகை பொறுது
   பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
   குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
   —(சிலப்பதிகாரம், காடுகாண் காதை, 19-20.)

4. முந்நீர் விழவின் நெடியோன்
   நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே
   —(புறநானூறு: 9: 10-11.)

5. இறையனார் களவியல் உரை : பக்கம் 6.

6. Being Dravidians the inhabitants of Mohenjodaro in Northern India naturally spoke a Dravidian language in which the earliest proportion of the words used are found in Tamil. This confirms the common belief that Tamil is the oldest of the present languages.

—Rev. H. Heras, Light on the Mohenjodaro Riddle, p. 14.

7. வடவேங்கடம் தென்குமரி
ஆயிடை
தமிழ்கூறு நல்லுலகத்து
– (தொல்காப்பியம் : சிறப்புப்பாயிரம்.)

8. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், தமிழ் மொழி வரலாறு, பக்கம் 49.

9. P. T. Srinivasa Iyengar, History of the Tamils, pp. 29, 328.

10. முல்லைப் பாட்டு : 61 – 66; நெடுநல்வாடை : 31-35 ; புறம் : 56, 343 ; பெரும்பாண் : 316 ; பதிற்றுப்பத்துப் பதிகம் .. ; அகம் : 57, 149.

11. Pliny complained in 70 A.D. that India drained gold to the value of nearly a million pounds a year giving back her own wares, which are sold among as at fully a hundred times their first cost.

—P. T. Srinivasa Iyengar, History of the Tamils, p. 305

12. Dr. Caldwell, A Comparative Grammar of the Dravidian languages, Introduction, pp. 15-28.

13. K. A. Nilakanta Sastri, A History of South India, p. 81.

14. Tamil is the most highly cultivated language and possesses the richest stores of indigenous literature.

—Max Muller.

15. No language combines greater force with equal brevity than Tamil and it may be asserted that no human speech is more close and philosophic in its expression as an exponent of the mind than the same.

—Rev. Percival.

16. The three classic languages of the world namely Sanskrit, Hebrew and Greek contain Tamil words in the vocabulary.

—Rhys Davids.

## வள்ளுவர் வீரம்

புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து —(குறள்: 780)

விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றுங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது.

டாக்டர் மு. ஆரோக்கியசாமி
சென்னைப் பல்கலைக் கழகம்

# சிந்துவெளி நாகரிகம்



**முன்னுரை:**

சிந்துவெளி நாகரிகம் தமிழக வரலாற்றின் முதற் பாகம். சிந்துவெளியில் வாழ்ந்தவர் திராவிடர். திராவிடரும், தமிழர்களும் ஒரே மரபினரே. திராவிடர் என்போர் பழங்காலந் தொட்டு இந்தியாவில் வாழ்கின்றார்கள் என்பது இப்போது ஒப்புக்கொள்ளப்படுகிறது. 50 வருடங்களுக்குமுன் திராவிடர் எனப்பட்ட ஒரு வகுப்பினர் வரலாற்று அரங்கிலே வாழ்ந்தார்கள் என்பதே பலருக்குத் தெரியாது. இப்போதோ திராவிடர் பெருமையைப் பறை சாற்றும் பல பெரும் இயக்கங்கள் உருவாகியுள்ளன. இஃது ஒன்றே திராவிடரின் பெருமைக்கும், ஆராய்ச்சியின் வளர்ச்சிக்கும் சான்று பகர்வதாகும். ஆயினும் இன்னும் ஆராய்ச்சி உறுதிப்படவில்லை; திராவிடர் யார், இவர்கள் எங்கிருந்து வந்தார்கள் என்ற கேள்விகளுக்கு இன்னும் முடிந்த முடிவு கூற முடியாது என்ற நிலையிலேயே பெரும்பான்மையான ஆராய்ச்சியாளர்கள் இருக்கின்றார்கள். யான் அறிந்தவற்றை மட்டும் இதில் எழுத முன் வந்துள்ளேன். கற்றோர் இதைக் கவனித்து முடிவு செய்ய வேண்டுகின்றேன்.

**திராவிடர் யார்?**

திராவிடர் யார்? எங்கிருந்து வந்தார்கள்? என்ற கேள்விகள் மிக அடிப்படையான கேள்விகளாகும். இவை சாதாரணமாக ஒதுக்கிவிடப் படக் கூடியவையல்ல. இந்தியா என்ற பெயரே அவர்களிடமாய்ப் பிறந்த பெயராகத் தோன்றுகிறது. அவர்கள் நாகரிகந்தான் சிந்துவெளிப் பிரதேசத்திற்குப் பெருமை அளித்தது. இதைப் பார்த்த வேற்று நாட்டினர் இதையே இந்திய நாட்டின் பெருமையாகக் கொண்டனர். இதைக் கண்ட கிரேக்கர் இந்நாட்டிற்கே சிந்தியா என்று பெயரிட்டனர். அதுவே பிறகு இந்தியாவாக மாறியது. சிந்துவெளி நாகரிகம் திராவிடர் நாகரிகந்தானா என்ற கேள்வி உடனே பிறக்கின்றது. இதைப் பின்னர் விளக்குகின்றேன். தற்போது ‘இந்தியா’ என்ற பெயர் இருக்கட்டும். தமிழ் என்ற பெயர் திராவிடரைத்தான் குறிக்கின்றது என்பதில் விவாதத்திற்கு இடமில்லை. தமிழில் இருந்து திராவிடம் பிறந்தது என்று சிலர் கூறுகிறார்கள்; திராவிடர் என்பதிலிருந்து தமிழ் பிறந்தது என்று சிலர் கூறுகிறார்கள். ஆயினும் தமிழ் என்ற சொல்லுக்கும் திராவிடம் என்ற சொல்லுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்பதில் மட்டும் ஐயமில்லை. மொழியின் பெயர் முதலில் பிறந்தது; அதைப் பேசுபவர், தமிழ் மொழி அறியார் நாவில் திராவிடர் என்று பெயர் பெற்றனர் என்பதே ஏற்றதாகத் தெரிகிறது. இத்தகைய பெருமை வாய்ந்தவர்களைப்பற்றிய ஆராய்ச்சி இன்னும் முடிந்த முடிவுக்கு வரவில்லை யென்பது பொருந்தாது.

திராவிடர்கள் யார் என்பதைப்பற்றி மூன்று கொள்கைகள் உலவுகின்றன.

(1) திராவிடர் இந்தியாவிற்கே உரியவர்கள். அங்கேயே தோன்றி அங்கேயே வாழ்ந்தவர்கள்.

(2) ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா நாடுகளிலிருந்து தென்கிழக்கு மார்க்கமாய் இந்தியாவினுள் நுழைந்தவர்கள்.

(3) இந்தியாவின் வடமேற்கிலிருந்து பாபிலோன், பாரசீகம் முதலிய நாடுகள் வழியாக இந்நாட்டினுள் நுழைந்தவர்கள்.

இவற்றுள் திராவிடர் இந்தியாவிலேயே தோன்றியவர்கள் என்ற கொள்கை இப்போது அறிஞரால் கைவிடப்பட்டது. மற்ற இரண்டில் இப்போது அறிஞர் உலகில் ஆதிக்கம் கொண்டுள்ளது கடைசியாக நாம் குறித்த கொள்கையேயாகும். ஆப்பிரிக்காவின் ஆதிகுடிகள் சம்பந்தம் திராவிடரிடம் அதிகமாகக் காணப்படுவதில்லை; இதுகாறும் நடந்துள்ள புதைபொருள் ஆராய்ச்சியும் இதைக் காட்டுவதாக இல்லை. ஆனால் திராவிடர் பாபிலோன், பாரசீக நாடுகளில் பல காலம் தங்கிப் பின் இந்தியாவினுள் நுழைந்தவர்கள் என்பதற்குப் பல சான்றுகள் இப்பொழுது கிடைத்திருக்கின்றன.

**நாகரிகத் தொன்மை :**

சிந்து சமவெளியில் சர் ஜான் மார்ஷல் தலைமையின்கீழ் 1922-23-ஆம் ஆண்டுத் தொடங்கப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சி திராவிடர் வரலாற்றில் பெரும் வெளிச்சத்தை ஏற்படுத்தி உள்ளது. இதன்மூலம் திராவிடர்கள் யார் என்பதற்கு நமக்கு நல்ல அத்தாட்சிகள் கிடைத்திருக்கின்றன. கடந்த நூற்றாண்டின் கடைசிப் பகுதியிலேயே சேய்ஸ் (Sayes), ஹியூவிட் (Hewit) போன்ற ஆராய்ச்சி வல்லுநர் பாபிலோன் நாட்டின் தலைநகரோடு கி.மு. 2000 அளவில் தென் இந்திய மக்கள் வியாபாரம் செய்து வந்தார்கள்; தென் இந்தியத் தேக்கு மரம் அங்குள்ள கட்டடங்களுக்குத் துலாக் கட்டைகளாக இயங்கியுள்ளன; அந்தத் தலைநகரமும் ஊர் (Ur) என்ற தமிழ்ப் பெயராலேயே அழைக்கப்பட்டது என்பதைப் பாபிலோன் பிரதேசத்தில் செய்த புதைபொருள் ஆராய்ச்சி மூலம் கண்டு வெளியிட்டார்கள். ஆனால் அதை நம்பினோர் சிலர்; நம்பாதவர் பலர். வரலாற்று உலகில் இஃது எத்தகைய புரட்சியையும் ஏற்படுத்திவிடவில்லை. ஆனால் சிந்துநதிப்பள்ளத் தாக்கில் அகழ்ந்தெடுத்த கட்டடங்கள், சாலைகள், குளிக்கும் அறைகள், வேலைக்கார விடுதிகள் போன்றவை, இலாஞ்சனைகள், தெய்வ உருவங்கள், கல்வெட்டுக்கள் போன்றவை இவையாவும் இந்திய வரலாற்றில் மட்டுமல்ல, உலக வரலாற்றிலேயே ஒரு பெரும் புரட்சியை ஏற்படுத்தி உள்ளன.

இப்பொழுது திராவிடர்கள் யார் என்ற கேள்விக்கு நாம் ஒருவிதத்தில் பதில் கூறக்கூடும். அவர்கள் உலகத்தில் எழுந்த ஒரு பெரும் இனத்தைச் சேர்ந்தவர்கள். மத்தியதரைக்கடல் பிரதேசத்தினின்று எகிப்து, சுமேரியா நாடுகள் வழியாக ஏறக்குறைய கி.மு. 2000 அளவில் இந்தியாவில் அவர்கள் குடியேறி இருக்க வேண்டும் என்று நாம் கொள்ளலாம். ஹெராஸ் போன்ற அறிஞர்கள் திராவிடர் இந்தியாவிற்கே உரியவர்களென்றும், அங்கிருந்து பாரசீகம், சுமர் நாடுகளோடு அவர்கள் தொடர்பு கொண்டனர் என்றும் கூறுகின்றனர். இஃது இயைபுடையதாகத் தெரியவில்லை. சிந்து வெளியில் நாம் கண்ட கட்டடங்கள், பொருட்கள் முதலியவை அவற்றிற்குரியோர் அங்கே நிரந்தரமாகத் தங்கினவர்கள் என்பதைக் காட்டுகின்றன. அவர்கள் அங்குத் தங்கிய பிறகு அயல் நாடுகளோடு வணிகத் தொடர்பு கொண்டிருக்கலாம்; அதைத் தவிர அயல் நாடுகளின் கலாச்சாரத்தையே மாற்றக்கூடிய தொடர்பு கொண்டிருந்ததாகத் தெரியவில்லை.

**தொன்மைச் சான்றுகள் :**

மத்தியதரைக்கடல் பிரதேசத்தினின்று புதுக் கற்காலத்தில் பல இன மக்கள் வடமேற்காகச் சென்று எகிப்து, சுமேரியா, இந்தியா முதலிய பல நாடுகளில் தங்கியிருக்க வேண்டும். இவர்களில் முதல்வராக இருந்தவர்கள் திராவிடர். இவர்கள்பின் வந்தவர் சுமேரியர். இவர்களுக்குப்பின் வந்தவர்கள் எகிப்தியர் என்று கொள்ள வேண்டும். இது காரணம்பற்றியே எகிப்திய எழுத்துக்கள் சித்திர வடிவாகவும், சுமேரிய மொழி எழுத்துக்கள் அடையாள வடிவாகவும் (Cuneiform) திராவிட மொழி எழுத்துக்கள் இரண்டும் கலந்தன ஆகவும் இருக்கின்றன. ஒரு காலத்தில் உலகத்தின் முதல் நாகரிகம் எகிப்தில் தோன்றியது என்றனர் அறிஞர்; பின் அது சுமேரியாவில் தோன்றியது என்றனர். இப்பொழுது அஃது இந்தியாவில் தான் முதலில் தோன்றியது என்று கூற வேண்டிய தாயிருக்கிறது. சிந்துவெளி நாகரிகத்திற்கும், சுமேரிய, எகிப்திய நாகரிகத்திற்கும் உற்ற நெருங்கிய தொடர்புகளையெல்லாம் உன்னிப் பார்த்தால் இதன் உண்மை தெள்ளெனத் தெரிய வரும். சுமேரிய மொழியிலும் சிந்து சமவெளி மொழியிலும் தாய் என்பதற்கு 'அமா' என்ற ஒரு சொல்லே பயன்பட்டிருக்கிறது. 'பீடு' என்ற சுமேரியச் சொல்லைச் சிந்து சமவெளி மொழி 'வீடு' என்று குறிக்கின்றது. 'கலம்' என்ற சொல் சுமேரிய மொழியிலும் சிந்து சமவெளி மொழியிலும் 'நிலம்' என்ற நன்பொருளைத் தந்தது. 'குர்' என்ற சொல்லுக்கு இவ்விரண்டு மொழியிலும் 'மலை' என்பது பொருள். இவ்வழியேதான் தமிழில் நாம் பயிலும் 'குறிஞ்சி' என்ற சொல் வந்திருக்க வேண்டும். 'உழவன்' என்ற தமிழ்ச் சொல் மேற்கூறிய இரண்டு மொழிகளிலும் பயிர்த்தொழிலையே குறிக்கிறது. 'உழவன்' என்பது அக்காலத்து மன்னர் பெயராக விளங்கியது. (மக்கள் உணவு பெற வழி செய்தவன் மன்னன் என்று கருதப்பட்டான் போலும்.) சுமேரியா, சிந்துவெளி என்ற இரு பகுதிகளிலுள்ள கல்வெட்டுக்களிலும் 'நண்டு உழவன்' என்ற சொற்றொடர் வருகிறது. 'நண்டு' என்பது கடவுளைக் குறிக்கும் சொற்களில் ஒன்று என்பது ஆராய்ச்சியாளர் கருத்து. ஆகவே, இச்சொற்றொடர் கடவுளால் நியமிக்கப்பட்ட மன்னனைக் குறித்தது என்பர். கடவுளைப்பற்றி இருதிறத்தாரும் உயரிய கொள்கைகள் கொண்டிருந்தார்கள். 'ஆன்', 'அனில்',

அமா' என்ற சொற்கள் திராவிட மொழியில், கடவுள், அவரினின்று பிறந்த குமாரன், அம்மன் என்ற கருத்துக்களைக் குறித்தன. சுமேரிய மொழியில் இதே கருத்துக்கள் ஆன், என்லில், அமா என்ற சொற்களால் குறிக்கப்படுகின்றன. சிந்துவெளிக் கல்வெட்டுக்களில் சில சிவனையும் சக்தியையும் நாம் இணைத்துக் கூறுவதுபோல் 'அமான்' என்று இணைத்தும் கூறுகின்றன. சில கல்வெட்டுக்கள் கடவுளை 'எண்ணம்' என்றே குறிக்கின்றன. இதற்கும் நாம் கூறும் 'அந்தராத்மா' 'மனச்சான்று' என்ற கருத்துக்களுக்கும் உள்ள ஒற்றுமை, இவற்றில் உள்ள உயரிய கருத்து இவை யாவும் அறிஞர் கவனிக்க வேண்டியவை.

மேற்குறித்தபடி சுமேரியரும், சிந்துவெளி மக்களும் உழவுத்தொழிலுக்கு முதலில் வந்தனை செய்தனர். ஆனால் அவர்கள் கைத்தொழிலை மறக்கவில்லை. மறந்திருந்தால் அவர்கள் நமக்கு விட்டுச் சென்றிருக்கும் உயரிய வாழ்க்கைச் சின்னங்கள் நமக்குக் கிடைத்திருக்க மாட்டா. இரு நிறத்தாரும் வேலைக்காரரைத் தோள்தூக்குக் கொண்ட இரண்டு மனித உருவங்கள் மூலம் காட்டுகின்றனர். இஃது அன்றாடம் நாம் வாழ்க்கையில் காணும் ஒரு காட்சி. நாம் அவர்கள் மரபில் வந்தவர்கள்தானே. இன்னும் படம் எழுதுவது, வீணை வாசிப்பது போன்ற பல நுண்கலைகள் பயிலப்பட்டு வந்தன என்பதை எகிப்து, சுமேரியா, சிந்து சமவெளி ஆகிய இம்மூன்று இடங்களில் உள்ள ஓவியங்களின் வாயிலாய் நாம் அறிகிறோம். இவர்கள் செங்கல்லைச் சுட்டுக் கட்டடங்கள் கட்டினார்கள் என்பதை அவர்கள் விட்டுச் சென்ற இடிந்த கட்டடங்கள் காட்டுகின்றன. சுமேரியர் செங்கல் சுட்ட முறை விவிலிய நூலின் முதல் பகுதியாகிய ஜெனசிஸில் அழகாகக் குறிக்கப்படுகிறது. யூபரடீஸ், டைகரிஸ் நதிகளின் சமவெளியை அடைந்தவுடன் சுமேரியர் அங்குள்ள குடிசைகளைப் பார்த்து ''வாருங்கள், நாம் செங்கல் கட்டடம் கட்டுவோம்'' என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்களாம். இது மோயீசன் வாய்மொழியாக 'ஜெனசிஸ்' என்ற நூலில் வருகின்றது. இந்தச் செங்கல்லின் வரலாறே ஒரு தனி வரலாறாகும். சங்ககாலத்தில் தமிழ் நாட்டில் சுடுமண்கொண்டு பெரியதும் சிறியதுமான மாளிகைகள் கட்டினார்கள் என்று வருகிறது.

> '' குறியவு நெடியவுங் குன்று கண்டன்ன
> சுடுமண் ணோங்கிய நெடுநிலைக் கோட்டம்''
> — மணிமேகலை

இந்தச் 'சுடுமண்' செங்கல்லேதான். இவ்விதமே சுமேரியரும், திராவிடரும் ஒரே மாதிரியான மண்பாண்டங்கள் செய்தார்கள். பலவிதமான மண்பாண்டங்கள் மிகப் பழங்காலத்தில் சிந்து சமவெளியிலிருந்து சுமர் நாட்டிற்குச் சென்றன என்பதை ஆராய்ச்சியாளர்கள் காட்டிப் போந்தனர்.

## ஆரியமா ? திராவிடமா ?

இனி வருவது மிக முக்கியமான கேள்வி. சிந்து சமவெளி நாகரிகம் திராவிட நாகரிகம்தான் என்பதை நாம் எப்படி ஒப்புக் கொள்வது? இஃது ஆரிய நாகரிகம் என்று ஒரு சிலர் கூறுகிறார்களே என்று சிலர் கேட்கக்கூடும். ஆரிய நாகரிகச் சின்னம் ஒன்றையேனும் சிந்து சமவெளியில் நாம் காண்பதில்லை. அவர்கள் இந்தியாவில் நுழைந்த காலம் கி.மு. 2000 என்று இப்பொழுது யாவராலும் அறுதியிட்டுக் கூறப்படுகிறது. அப்பொழுதும் அவர்கள் நாடோடிகளாகவே இந்தியாவினுள் நுழைந்தார்கள். சிந்து சமவெளியிலோ நாம் கி.மு. 3000 அளவில் நகர வாழ்க்கையைத் திறம்பட நடத்திய ஒரு கூட்டத்தினரைக் காண்கின்றோம். ஆரியர் நம் நாட்டினுள் நுழைந்தபோது இயற்கையையே தெய்வமாக வணங்கினார்கள். சிந்துவெளி நாகரிகத்தை அமைத்தவர்கள் இதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே மிக உயர்ந்த கடவுட் கொள்கைகள் கொண்டவர்கள். இன்றும் நாம் இங்குக் காணக்கூடிய அரசு முறைகள், ஒழுங்கு முதலியவை ஆரிய நாகரிகத்திற்கு அப்பாற்பட்டவை. சிந்துவெளி நாகரிகம் ஆரிய நாகரிகமன்று என்பதில் யாதொரு தடையுமில்லை.

"If some day it were proved that the Aryas had invaded India thousands of years before the date generally assigned to Mohenjo-Doro, we should still be compelled to admit that, though not pre-Aryan it was certainly non-Aryan."

என்று காலஞ்சென்ற ஹெராஸ் அடிகள் குறிப்பிடும் திண்மை நோக்கற்பாலது.

இஃது ஒருசிலர் கூற்று. ஆனால் மிகப்பலர் சிந்துவெளி நாகரிகம் ஆரியருடையதுமன்று, திராவிடருடையதுமன்று, திராவிடரை ஒத்த வேறோர் இனத்தாருடையது என்று கூறுகிறார்கள். இவர்கள் நுணுக்கம் தெரிந்தவர்கள். இவர்கள்தான் நமக்கு இவ்வினத்தினர் யாவர் என்று கூறவேண்டும். இவ்வளவு உயரிய நாகரிகத்தை உண்டு பண்ணினவர் யார் என்பதைப்பற்றி இந்தச் சமவெளியில் அகழ்ந்தெடுத்த பொருட்கள் நமக்கு ஒரு சிறிதாவது காட்டவேண்டும். இந்த நிலையில் வைத்துப் பார்த்தால் இவர்கள் திராவிடரே என்பது நன்கு புலப்படும். இருக்குவேத காலத்திலிருந்து பல திராவிடப் பழங்குடிகள் சிந்து சமவெளியிலும், ஏன், மத்திய இந்தியாவிலும் வாழ்ந்தார்கள் என்பதற்குச் சான்றுகள் இந்த வேதத்திலேயே இருக்கின்றன. அலினு, அஜா, சிக்ரு என்ற திராவிடப் பழங்குடிகளைப்பற்றி இருக்குவேதம் குறிக்கின்றது. குயவன் என்ற திராவிடத் தலைவன் தன் இரு மனைவிமார்களையும் பாலில் குளிக்கச் செய்தானும். என்னே அவனது பெருமை! மீனர்கள் என்ற ஓர் இனத்தைப்பற்றிச் சிந்துவெளிக் கல்வெட்டுக்கள் பல இடங்களில் கூறுகின்றன. இவர்கள் திராவிடர்கள். பிற்காலத்தில் இராஜஸ்தான் பிரதேசத்தில் மத்சியாஸ் என்ற பெயருடன் இவர்கள் விளங்குகிறார்கள். புராணங்களும், இதிகாசங்களும் குறிக்கும் எகுவுகள், எட்காலிகள், குடகர் என்ற திராவிடக்குடிகளின் பெயர்களை இந்தச் சமவெளிக் கல்வெட்டுக்களில் நாம் காண்கின்றோம். மகாபாரதத்தை எழுதிய வியாசரே மேற்குறித்த மத்சிய குடியைச் சேர்ந்தவர் என்றும், மகாபாரதத் தலைவன் தருமன் திராவிடனே என்றும் சில பெரும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

இந்தச் சமவெளியை ஆராய்ச்சியாளர் அகழ்ந்த பிறகு 1940-41-இல் சனுதாரோ என்ற இடத்தி லும் இந்தச் சமவெளி நாகரிகமே காணப்பட்டது. இது திராவிடர் தெற்கு நோக்கிச் சென்றதை வலியுறுத்துவதாகும்.

**சிந்துவெளியில் தமிழ் ஒலிகள்:**

இந்த நிலையிலே சிந்துவெளி திராவிடரைப் பின்பற்றி வந்த அவர்தம் இனத்தவர் நம் நாட் டில் யார் இருக்கின்றார்கள் என்ற கேள்வி பிறக் கின்றது. ஹெராஸ் போன்ற ஆராய்ச்சியாளர்கள் திராவிடர் ஒரு காலத்தில் இந்தியாவெங்கும் பரவியிருந்தார்கள் என்று கூறுகின்றார்கள். வட நாட்டில் இருந்தவர்கள் ஆரியரோடு அதிகமாகக் கலந்து உருமாறிப் போனாலும் தென்னாட்டில் திராவிட நாகரிகம் இன்றும் முழுப் பொலிவுடன் விளங்குகின்றது என்பதில் எவ்வித ஐயப்பாடும் வேண்டுவதில்லை. நான் முன்னரே கூறியதுபோல், தமிழுக்கும் சிந்து சமவெளி மொழிக்கும் நெருங் கிய தொடர்பு இருப்பதைக் காணலாம். நாய், காலாள், அவர் போன்ற நல்ல தமிழ்ச் சொற்களை மேற்குறித்த மொழியில் அறிஞர் கண்டிருக்கிறார் கள். ஜன்னல் என்ற போர்த்துக்கீசிய மொழிவழி வந்த தமிழ்ச்சொல், சிந்து சமவெளி மொழியில் நல்ல தமிழிலே கண் என்று கூறப்படுகிறது. இதிலிருந்தே தமிழில் பலகணி என்ற சொல் பிறந்திருக்க வேண்டும். சிந்து சமவெளியில் கடவுளைக் குறித்த ஆன், குமரன் என்ற சொற்கள் தாம் ஆண்டவன், குமரக்கடவுள் என்று மாறின. தமிழ் நாட்டில் வேல், சூலம் என்பவற்றைச் சிவ பெருமான் கையிலும், ஐயனார் என்ற கிராமக் கடவுள் கையிலும் பொருத்தியே நாம் காண்கின் றோம். இவ்விதமே சிந்து சமவெளி ஆன் உருவங் களும் காணப்படுகின்றன. சிந்து சமவெளி மக்கள் கடலை நன்றாகக் கண்டு தங்கள் வாணிகத்திற் காக மிகப் பயன்படுத்தினர். பழங்காலந்தொட்டே கடல் வாணிகம் தமிழ் நாட்டில் நடந்தது; அதுவும் சுமர் பிரதேசத்தோடே நடந்தது என்று வரலாறு கூறுவது இந்தப் பின்னணியில்தான் மிகப் பொருத்தமாயிருக்கிறது.

**திராவிடர்களே தமிழர்:**

சிந்து சமவெளி நாகரிகத்தைக்கொண்டே நாம் பழங்காலத் தமிழர் நாகரிகத்தை நன்கு அறிய முடியும். தமிழ் மூவேந்தர்கள், பழங்கால மன்னர்கள், கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே தோன்றின பழங்குடிகள் இவர்கள் என்று புலவர் ஐயனரிதனார் கூறினாரென்றால், அது சிந்துவெளி நாகரிகத்தையே குறிக்கும். பாண்டியன் சின்னம் மீன் என்பதை நாம் அறி வோம். இதையே அரசுச் சின்னமாகச் சிந்து சம வெளிக் கல்வெட்டுக்களும் காட்டுகின்றன. தமிழ் மொழி உலக மொழிகளில் மிகப் பழமையானது. இதுவும் சிந்துவெளி நாகரிகத்தோடு நம்மைக் கலக்கின்றது. சிந்து சமவெளி நாகரிக காலத்தில் தமிழ் இல்லையென்றாலும் தமிழ் ஒலிகள் இருந்தன என்பது முற்கூறியவற்றால் பெறப்பட்டது. கி.மு. 500-இல் தொல்காப்பியம் பிறந்ததென்றால் கி.மு. 1000-த்திலாவது தமிழ் பிறந்திருக்க வேண்டும். இதற்கும் சிந்து சமவெளி மொழிக்கும் தொடர்பு உண்டு என்று கூறுவதில் வியப்பில்லை. இதே காலத்தில்தான் திரமிலி என்ற பெயரால் ஆசியா மைனர் பிரதேசத்திலிருந்த திராவிடர் அழைக்கப் பட்டனர் என்று நாம் அறிகிறோம். தமிழ்-திரமிலி —திரமிளர்—திராவிடர் என்று இப்பெயர் பிறந் திருக்க வேண்டும். இனித் தமிழ் என்ற சொல் எப்படிப் பிறந்தது என்ற கேள்விக்கு யாழ்ப்பாண அறிஞர் ந. சி. கந்தையா பிள்ளை சூரியக் கடவுளைக் குறிக்கும் தாமுலம் என்ற சுமேரியச் சொல்லின் அடிப்படையில் தமிழ் என்ற சொல் பிறந்தது என்று கூறுகிறார்கள். சூரியக் கடவுளைச் சுமேரி யரும், திராவிடரும் சிறப்போடு வணங்கினார்கள் என்பதில் ஐயமில்லை. சங்க காலத்திலும் தமிழ் நாட்டில் சூரிய வணக்கம் இருந்தது என்பதையும் யாவரும் அறிவர். ஆயினும் தமிழ் இனிமை என்ற பிங்கலம் கூறும் பொருளிலோ 'தனித்து' நிற்பது என்ற பொருளிலோ வந்தது என்று சொல் வதே மிகவும் பொருத்தமாகத் தெரிகிறது. பழங் காலத் தமிழர் மிகக் கருத்தோடு பெயர் வைத்தவர் கள் என்ற காரணத்தாலேயே நான் இதைக் கூறுகிறேன். இஃது எங்ஙனமாயினும் தமிழ் என்ற சொல்லிலிருந்தே திராவிடர் என்ற சொல் பிறந் தது. மகாபாரதப் போரில் பழங்காலத் திராவிடர் பெரும் பங்கு கொண்டனர் என்பது இப்பொழுது ஆராய்ச்சியாளர்கள் கருத்து. நமது சேர மன் னர்களில் (மிகப் பழமையான) பெருஞ்சோற் றுதியன் சேரலாதனும் இதில் கலந்து கொண் டான் என்று புறநானூறு கூறுவதில் இப்பொழுது எவ்வளவு பொருத்தம் இருக்கிறது பாருங்கள். பழங்காலத் திராவிடர்தான் தற்காலத் தமிழர் என்பதில் என்ன முரண்பாடு இருக்கக்கூடும்?

சிந்துவெளித் திராவிடரும், தற்காலத் தமிழரும் ஒரே மரபைச் சேர்ந்தவர்கள் என்பதற்கு ஆணித் தரமான ஆதாரம் தமிழ் நாட்டில் நடந்துள்ள புதை பொருள் ஆராய்ச்சியே தருகின்றது. வேல்ஹவுஸ் (Walehouse), புரூஸ்வுட் (Bruce Foote) போன்ற புதை பொருள் ஆராய்ச்சியாளர்கள் மொஹஞ்சதாரோ, ஹாரப்பா ஆராய்ச்சிக்குச் சுமார் 20 ஆண்டுகளுக்கு முன்னதாகவே தமிழ் நாட்டின் பல இடங்களில் தோண்டித் தமிழ் நாட்டிற்கும் சைப்பிரஸ் போன்ற மத்தியதரைக் கடல் பகுதிக்கும் கி. மு. 2000 அளவிலேயே நெருங்கிய பண்பாட்டுத் தொடர்பைக் காட்டிப் போந்தனர். அவர்கள் அகழ்ந்தெடுத்த தாழிகள், உலகத்தின் இவ்விரு பகுதிகளிலும் ஒரே மாதிரி யான பல பொருட்கள் ஒரே சமயத்தில் உபயோகத் திலிருந்தன என்பதைக் காட்டுகின்றன. இது தவிர, தமிழ் நாட்டுத் தாழிகளில் மற்ற பகுதி களில் காணப்படாத பொன்வாய்க்கட்டுகள், வேல்கள் முதலியவை காணப்படுவதால் சிந்து வெளி நாகரிகத்தையும் குமர வழிபாட்டையும் இவை சுட்டிக் காட்டுகின்றன. இதனால் கி.மு. 2000 அளவில் தமிழ் நாட்டில் இருந்தவர்கள் சிந்து வெளி மக்களே என்பது தெரிகிறது. திராவிடர் பிற நாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வந்தார்களேயன்றி இந்தியாவிலிருந்து பிறநாடு களுக்குச் செல்லவில்லை என்பதையும் இவை காட்டு கின்றன.

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

ச. திருஞானசம்பந்தன்
அண்ணமலை நகர்




முன்னுரை :

தொன்மையும் சிறப்பும் மிக்க தமிழகத்தின் நீண்ட வரலாற்றில் சோழர் ஆண்ட காலப்பகுதி—கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதி முதல் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி வரையுள்ள காலம்—குறிப்பிடத்தக்கதொன்றாகும். சோழர் மரபு தோற்றுவிக்கப்பட்ட காலம் இன்னும் வரையறுக்கப்படவில்லை. கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பரிமேலழகர் 'சோழர் மரபினர் படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வரும் குடியினர்' என்று தாம் எழுதிய திருக்குறள்[1] உரையில் கூறியுள்ளமை இம்மரபின் தொன்மையைப் புலப்படுத்தும். கி.மு. 4-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த காலத்தியாயனர் என்னும் வடமொழி அறிஞர் சோழர் என்னும் பெயருக்கு இலக்கணம் கூற முயன்றுள்ளார். சங்ககால இலக்கியங்களும் இடைக்கால இலக்கியங்களும் சோழர் பெருமையை விரித்துக் கூறுகின்றன. கி.மு. 3-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மௌரியப் பேரரசனாகிய அசோகனின் கல்வெட்டுக்கள் இரண்டனுள் சோழர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். தமிழ்நாடு, ஆந்திரம், கன்னட தேயம், இலங்கை ஆகியவற்றில் உள்ள பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுக்கள் பிற்காலச் சோழர் வரலாற்றை அறிவதில் பேருதவி புரிகின்றன. கி.பி. 10, 11-ஆம் நூற்றாண்டுகளில் வெளியிடப்பட்ட செப்பேடுகளும் பிற்காலச் சோழ மன்னர்கள் வரலாற்றை ஆராய்வதற்குப் பேருதவி புரிவதோடு அவர்களின் முன்னோரைப்பற்றியும் குறிப்பிடுகின்றன.

சங்ககாலச் சோழர்கள் :

சங்ககாலச் சோழர் வீரம், வண்மை, ஆட்சித் திறன் ஆகியவற்றைப் புறநானூறு, அகநானூறு, பத்துப் பாட்டு போன்ற சங்க இலக்கியங்களும் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகியவையும், பிற்காலத்து எழுந்த கலிங்கத்துப்பரணி, மூவர் உலா ஆகியவையும் விளக்கம் செய்கின்றன. இளஞ்சேட்சென்னி, சோழன் கரிகாலன், நலங்கிள்ளி, கிள்ளிவளவன், செங்கணான் ஆகியோர் அவர்களுள் குறிப்பிடத்தக்க பெருமை வாய்ந்தவர்கள். சோழன் கரிகாலன்[2] காலம் சங்ககாலச் சோழர் வரலாற்றில் மிகவும் சிறந்ததாகும். இம்மன்னன் வாழ்ந்த காலம்பற்றி அறிஞர்கள் பல கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர். கி.பி. 2-ஆம் நூற்றாண்டு என்று சிலரும், கி.பி. 5-ஆம் நூற்றாண்டு என்று வேறு சில அறிஞர்களும் கருதுகின்றனர். கலியாண்டு மூவாயிரத்துத் தொண்ணூறில் கரிகாலன் காவிரிக்குக் கரையமைத்தான் என்று கூறும் ஒரு பழைய வெண்பாவினால் கரிகாலனின் காலம் கி.மு. முதல் நூற்றாண்டு[3] என்று அறுதியிட்டுக் கூறலாம்.

இம்மன்னனின் பெருவீரம், ஆட்சித் திறன் முதலியவற்றைப் பொருநர் ஆற்றுப்படை, பட்டினப்பாலை, சிலப்பதிகாரம், விக்கிரம சோழன் உலா முதலான இலக்கியங்களில் பரக்கக் காணலாம். பட்டினப்பாலையில் குறிக்கப் பெற்றுள்ள கடலின் அண்மையிலிருந்த பல்வகைப் பொருள்

கள் சேமித்து வைக்கப்படும் மாளிகை ஒன்றின் கடைகாற் பகுதிகளை அண்மையில் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள்[4] பண்டைய காவிரிப்பூம்பட்டினத்தின் ஒரு பகுதியாகிய கீழையூரில் கண்டு பிடித்துள்ளனர். மேலும் கரிகாலன் காலத்தைச் சேர்ந்தவையாகக் கருதப்பெறும் காசுகளும் இப் பகுதியில் அண்மையில் கிடைத்துள்ளன[5]. கரிகாலனின் வடநாட்டு வெற்றிகள் பற்றி வரலாற்றறிஞர்கள் ஐயம் கொண்டாலும் காலஞ்சென்ற மு. இராகவ ஐயங்கார் அவர்கள் தமது கட்டுரை ஒன்றில் கரிகாலனின் வடநாட்டுப் படையெழுச்சி நம்பத்தக்கதொன்றே என்று நிறுவியுள்ளனர்[6]. மேலும் பட்டினப்பாலை ஆசிரியர் கடியலூர் உருத்திரன் கண்ணனருக்குப் பரிசிலாக அளிக்கப்பெற்ற பதினறுகால் மண்டபம் ஒன்று கி.பி. 13-ஆம் நூற்றாண்டிலும் இருந்தமை இங்குக் கருதத்தக்கதாகும்[7].

**சோழன் கோச்செங்கணன் :**

சங்க காலத்தில் சிறப்புற்று வாழ்ந்த மற்றொரு வேந்தன் செங்கணன் ஆவான். இவன் வாழ்ந்த காலத்தைப்பற்றி அண்மையில் அறிஞர்கள் தெரிவித்துள்ள கருத்துக்கள்[8] ஏற்புடையன அல்ல. கோச்செங்கணன்பற்றிய குறிப்புக்கள் பலவற்றைத் தேவாரங்களிலும், திருமங்கையாழ்வார் பாடியுள்ள திருநறையூர்ப் பதிகத்திலும்[9] காணலாம். இக்கருத்துக்கள் செங்கணன் சிறப்புற்ற பெருவேந்தன் என்பதை உணர்த்துவதால் கி.பி. 5-ஆம் நூற்றாண்டில் அவன் வாழ்ந்திருக்க இயலாது. ஏனெனில் அந்நூற்றாண்டு களப்பிரர் வலிவுடன் இருந்த காலமாகும். அப்பரடிகள் பாடியருளிய அடைவு திருத்தாண்டகத்தில் தமது காலத்தில் நிலவிய எழுபத்தெட்டு மாடக் கோயில்களைக் குறிப்பிட்டுள்ளனர். அவை யாவும் கோச்செங்கணன் அமைத்தவையே என்பது தேவாரப் பதிகங்களால் தெளிவாகப் புலப்படுகின்றது[10]. பெருங்கோயில், தூங்கானை மாடம் ஆகியவை அவற்றைச் சேர்ந்தவை.

இனி, செங்கணன் புதல்வன் நல்லடிக்கோன்[11] என்பவனை அகநானூற்றுப் பாடல் ஒன்று[12] குறிப்பிடுகின்றது. சைவ சமய வளர்ச்சிக்குக் கோச்செங்கணன் ஆற்றிய தொண்டுகள் பலவாகும். அவைபற்றியே திருத்தொண்டத்தொகையுள், 'தென்னவனாயுல காண்ட செங்கணார்க் கடியேன்' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளால் போற்றப் பெறும் பேறு இவனுக்குக் கிடைத்தது. இம்மன்னனைப் பின்பற்றியே முதல் மகேந்திரவர்மன் கோயில்கள் அமைத்தான் என்பது பொருத்தமாகும்.

**பிற்காலச் சோழர் :**

செங்கணனுக்குப் பிற்பட்ட காலத்தில் தமிழகத்தின் பல பகுதிகளிலும் களப்பிரர் ஆதிக்கம் ஏற்பட்டது. இக்காலப் பகுதியில் சில அறிஞர்கள் கருதி உள்ளதுபோல் அல்லாமல் சோழர் மரபினர் திருச்சி, தஞ்சைப் பகுதிகளில் வதிந்துள்ளமை பெரியபுராணத்தாலும், பல்லவர் செப்பேடுகளாலும், கல்வெட்டுக்களாலும் அறியக்கிடக்கின்றது. பிற்காலச் சோழர் மரபு சோழன் விசயாலயன் காலம் முதல் விளக்கம் பெற்றது. விசயாலயன் சோழர் பேரரசுக்கு அடிகோலியவன் ஆவான். அவன் புதல்வன் முதல் ஆதித்தன் காலத்தில் சோழர் அரசு வலுப்பெற்றது. பின்னர் வந்த முதல் பராந்தகன் காலத்தில் தொண்டை மண்டலத்தில் பல்லவர் ஆட்சி அடியோடு அழிக்கப் பெற்றுச் சோழர் ஆதிக்கம் நெல்லூர் மாவட்டம் வரை வலுப்பெற்றது. பாண்டி மண்டலமும் இவன் ஆளுகையின்கீழ் வந்துவிட்டது. எனினும் இவன் ஆட்சியின் பிற்பகுதியில் இராட்டிரகூட மன்னனாகிய மூன்றாம் கிருட்டிண தேவனின் படையெழுச்சியின்போது நிகழ்ந்த தக்கோலப் போரின் (கி.பி. 949) பயனாகச் சோழர் பேரரசு வலுவிழந்து தெற்கே வீரபாண்டியன் சுயேச்சையெய்துவதற்கு வழிகோலியது. சோழ நாடு தவிர மற்ற பகுதிகளைச் சோழர் பேரரசு இழந்துவிட்டது.

இவன் பின் வந்த மன்னர்கள் கண்டராதித்தன்[13] அரிஞ்சயன், இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன், உத்தம சோழன் ஆவர். இவர்களுள் அரிஞ்சயன், சுந்தர சோழன் ஆகியோர் காலங்களில் தொண்டை மண்டலம் மீண்டும் சிறிது சிறிதாகச் சோழர் ஆட்சியின்கீழ் வந்தது. பிற்காலச் சோழர் காலத்திய செப்பேடுகளுள் காலத்தால் முற்பட்ட அன்பில் செப்பேடுகள் சுந்தர சோழன் காலத்தைச் சேர்ந்தவையாகும்[14]. தனது பெருமதிப்பிற்குரிய அமைச்சன் அன்பில் அநிருத்த பிரமாதிராசனுக்குத் திருவழுந்தூர் நாட்டிலுள்ள கருணாகர மங்கலம் என்னும் ஊரினை இறையிலியாக இவ்வேந்தன் வழங்கியதை இச்செப்பேடுகள் கூறுகின்றன.

இம்மன்னனின் மூத்த புதல்வன் ஆதித்த கரிகாலன் பாண்டியர் ஆட்சித் தலைவர்கள் சிலரால் கொல்லப்பட்டான்[15]. பின்னர் அரியணையேறிய உத்தம சோழன், கண்டராதித்த சோழன்-செம்பியன் மாதேவி ஆகியோரின் புதல்வனாவான். சென்னைப் பொருட்காட்சிச் செப்பேடுகள்[16] எனப்படும் சோழர் செப்பேடுகள் இவன் காலத்தவையாகும். இக்காலப் பகுதிகளில் சோழகுலப் பேரரசி செம்பியன் மாதேவியார் ஆற்றிய சிவத்தொண்டுகள் பலவாகும். புதிய கற்றளிகள் பல அமைத்தும், பழையவற்றைப் புதுப்பித்தும், அணிகலன்கள், நிலங்கள் அளித்தும் சைவ சமயத்தைப் போற்றியமை இவ்வம்மையாரின் அருஞ்செயலாகும்.

**பிற்காலச் சோழர்களின் உச்சநிலை :**

உத்தம சோழனுக்குப்பின் அரசாண்ட சோழ மன்னர்களில் முதல் இராசராசன், முதல் இராசேந்திரன், அவன் புதல்வர்கள், முதல் குலோத்துங்கன், விக்கிரம சோழன், இரண்டாம் இராசராசன், இரண்டாம் இராசாதிராசன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசேந்திரன் முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். சோழப் பேரரசன் முதல் இராசராசன் காலம் சோழர் பேரரசின் வளர்ச்சிக்காலம் ஆகும். தென்னிந்தியாவில் தமிழகம், கேரளம், கன்னட தேயம், ஆந்திரம் ஆகியவையும், சிங்களம், முன்னீர்ப்

பழந்தீவு பன்னீராயிரம் ஆகியவையும் இப்பேரரசில் அடங்கும். கல்வெட்டுக்களின் முற்பகுதியில் மெய்க்கீர்த்திகளை அமைக்கும் வழக்கம்[17] இப்பேரரசன் ஆரம்பித்ததே ஆகும். இவன் வழியினரும் பிற்காலப் பாண்டியரும் இம்முறையைப் பின்பற்றினர். வரலாற்று ஆராய்ச்சிக்குப் பேருதவிபுரியும் இவ்வருஞ் செயல் பதிற்றுப்பத்தில் உள்ள பதிகங்களைப் பின்பற்றி இப்பெருவேந்தன் காலத்தில் இயற்றப்பட்டது. தஞ்சைப் பெரிய கோயில் இவனுடைய இறவாத புகழைக் காட்டும் அருங்கலைக் கருவூலமாகத் திகழ்வது யாவரும் அறிந்ததொன்றே. இவ்வேந்தன் காலத்தில் இவனது ஒரே புதல்வனுகிய இராசேந்திரன் பஞ்சவன் மாராயன் என்னும் பட்டமெய்தித் தன் தந்தை சார்பில் பல போர்கள் நிகழ்த்தி வெற்றி கொண்டான். இவ்வெற்றித்திறனைச் சோழர் கல்வெட்டுக்களும்[18] மேலைச்சளுக்கியர் கல்வெட்டு[19] ஒன்றும் குறிப்பிடுகின்றன. ஆனைமங்கலச் செப்பேடுகள்[20] என்பவை முதல் இராசராசனின் இருபத்தொன்றும் ஆட்சியாண்டில் வெளியிடப் பெற்றவையாகும். இராசராசனுக்குப் பின்வந்த முதல் இராசேந்திரன் ஆட்சிக்காலம் இவன் தந்தையின் ஆட்சிக் காலத்திலும் பலவகையினும் மேம்பட்டதாகும்.

இம்மன்னன் காலத்தில் நிகழ்ந்த வடநாட்டுப் படையெழுச்சியும், கடாரப் படையெழுச்சியும் வரலாற்றுப் புகழ் பெற்றவை. வடநாட்டுப் படையெழுச்சியில் தலைமை தாங்கியவன் இம்மன்னனின் முதற் புதல்வனுகிய இராசாதிராசனே யென்பது ஒட்டக்கூத்தர் இயற்றிய விக்கிரம சோழன் உலாவினுல் உய்த்துணரக் கிடக்கின்றது.[21] வடநாட்டுப் படையெழுச்சியின் முடிவில் கங்கைகொண்ட சோழன் என்னும் பெயரை இவ்வேந்தர் பிரான் எய்தினுன். சோழர் பேரரசின் தலைநகராக நீண்ட காலம் விளங்கிய கங்கைகொண்ட சோழபுரம் கங்கைகொண்ட சோழனுகிய இவ்வேந்தர் பெருந்தகை அமைத்ததேயாகும். சிற்பச் சிறப்பமைந்த கங்கைகொண்ட சோழேச்சுரமும், சோழ கங்கம் என்னும் ஏரியும் இவ்வூரில் இப்பெருவேந்தனுல் அமைக்கப்பட்டன. தமிழ் நாட்டின் தென் பகுதியில் சோழ பாண்டியர் ஆட்சியை இவன் தோற்றுவித்தான். இவ்வேந்தன் காலத்திற்குப்பின் ஒருவர்பின் ஒருவராகப் பட்டம் பெற்ற இவன் புதல்வர்கள் முதல் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், வீரராசேந்திரன் ஆகியோராவர். இவர்கள் காலங்களில் சோழர் சளுக்கிய போர் உச்ச நிலையடைந்தது. இலங்கைத் தீவிலும் பல போர்கள் நிகழ்ந்தன. இவற்றுல் சோழர் பேரரசு அளவில் சுருங்கவில்லை.

**அதிராசேந்திரன் :**

சோழர் மரபு அதிராசேந்திரனுடன் கி.பி. 1070-இல் முடிவுற்றது. பின்னர்க் கீழைச் சளுக்கிய அரசிளங்குமரன் இராசேந்திரன் சோழச் சக்கரவர்த்தியாகித் தனது மரபைத் தமிழ் நாட்டில் நிலைபெறச் செய்தான். கி.பி. 1070, இவ்வேந்தன் ஆட்சித் தொடக்கமாகும். 'தவிராத சுங்கம் தவிர்த்த' பெருமை இவனுடையது. இவன் காலத்தில் மேலைச் சளுக்கியர், பாண்டியர், கலிங்க வேந்தர்கள் ஆகியோருடன் நிகழ்ந்த போர்கள் பலவாகும்.[22] இவற்றில் குறிப்பிடத்தக்க வெற்றிகள் பெற்ற இவன் தனது ஆட்சியின் பிற்காலத்தில் போர் நிகழ்ச்சிகளைக் குறைத்துக் கொண்டுவிட்டமையால் சில பகுதிகளைப் பகைவர்கள் கைப்பற்றி விட்டனர். ஈழமும் இவன் ஆட்சியில் விடுதலை பெற்றது. சேர பாண்டியர் நாடுகளில் நிலவிய சோழ பாண்டியர் ஆட்சி முறையை இவன் பின்பற்றுமல் நிலைப்படையைத் தென்னுட்டில் அமைத்தான். பாண்டியர் ஓரளவுக்கு விடுதலை பெற்றுத் தம் நாட்டைத் தாமே ஆள முற்பட்டதும் இக்காலத்தில்தான். இவ்வேந்தன் ஆட்சியின் இறுதிக் காலத்தில் உள்நாட்டுப்போர் ஒன்று நிகழ்ந்ததென்று அறிஞர் சிலர் கருதுகின்றனர். அன்னேர் கருத்தை வலியுறுத்தும் சான்றுகள் போதிய அளவில் கிடைக்கவில்லை. பின்னர் விக்கிரம சோழனும் அவன் வழியினரும்[23] ஆட்சி புரிந்தனர். அவர்கள் காலத்தில் தில்லைத் திருப்பணிகள் சிறப்புற நடைபெற்றன. தில்லை நகரின் மாண்பு அதிகரித்தது. இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் பாண்டிய நாட்டில் நிகழ்ந்த உள்நாட்டுப் போரில் சோழர் தலையீடு ஏற்பட்டது. அது மூன்றும் குலோத்துங்கன் காலத்திலும் நீடித்தது.

**மூன்ரும் குலோத்துங்கன் :**

சோழர் பேரரசின் இறுதிக் காலத்தில் வாழ்ந்த கடைசிப் பேரரசன் மூன்றும் குலோத்துங்கன் ஆவான். இப்பெருவேந்தன் தன் காலத்திய தென்னுட்டு வேந்தர் பலரையும் ஈழவேந்தனையும் போர்களில் புறங்கண்டு சிறப்பெய்தினுன். சோழர் பேரரசின் சிற்றரசர்கள் தமது வலிமையைச் சிறிது சிறிதாகப் பெருக்கிக் கொண்டு வந்து கி.பி. பதின்மூன்றும் நூற்றுண்டில் தமது தனியுரிமையை வலுப்படுத்திக்கொண்டு சோழர் குடியின் வீழ்ச்சிக்குக் காரணமாயினர். இக்காலத்தில் எழுச்சியுற்ற பாண்டியர் பேரரசு படிப்படியாக வளர்ச்சியுற்றுப் பதின்மூன்றும் நூற்றுண்டின் பிற்பகுதியில் மிக்க வலிவுடனும், செல்வத்துடனும் விளங்கியது. முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன், முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் ஆகியோர் மூன்றும் இராசேந்திரனைப் பல போர்களில் வென்று இறுதியில் இராசேந்திரன் இறந்த பின்னர் சோழநாட்டைத் தமது நேராட்சிக்கு உட்படுத்திவிட்டனர்.

மேற்கூறியவாற்றுல் சோழர் பேரரசின் தோற்றமும் வளர்ச்சியும் வீழ்ச்சியும் ஒருவாறு வெளியாகும். கி.பி. ஒன்பதாம் நூற்றுண்டின் இடைப் பகுதியிலிருந்து பதின்மூன்றும் நூற்றுண்டு இறுதி வரை தமிழகமும் அதைச் சார்ந்த பகுதிகள் பலவும் ஒரே மரபினர் ஆட்சியில் இருந்தன. சோழர் மரபு கி.பி. 1279-இல் முடிவுற்றுலும் அன்னேர் வழி வழியே ஆண்ட நாடு பிற்காலத்திலும் தனது பெயரை இழக்கவில்லை. அதைச் சார்ந்த கடற்கரை சோழமண்டலக் கரை என்றே பிற்காலத்தில் வழங்கப்பட்டது.

முடிவுரை :

சோழ மன்னர்கள் கட்டிய கோயில்களும், அவர்கள் கடைப்பிடித்த ஆட்சி நெறிக் கொள்கைகளும் கல்வெட்டுக்கள், செப்பேடுகள் வாயிலாக விளக்கம் பெறுகின்றன. விரிந்த அளவில் சோழர் கால அரசியல் பற்றி ஆராய்வார்க்கு அவை மிகவும் பயன்படும். சங்ககாலந் தொட்டு நாட்டில் வளர்ச்சியுற்ற ஆட்சி முறையில் நாட்டின் பல பகுதிகளில் மக்கள் பெரும் பங்கு பெறும் முறை முதல் பராந்தகன் காலத்திய உத்தரமேரூர்க் கல்வெட்டுக்களாலும், பதின்மூன்றும் நூற்றுண்டைச் சார்ந்த சேய்ஞலூர் கல்வெட்டாலும் வெளியாகின்றது. நாட்டு நிலைக்கேற்பப் பல திருத்தங்களை மகாசபையினர் அவ்வப்போது நிறைவேற்றினர்- தேர்தல் முறையில். முதல் இராசராசன், முதல் குலோத்துங்கன், மூன்றும் குலோத்துங்கன் ஆகியோர் காலங்களில் நாடு அளக்கப்பட்டது[24]. வாணிகத் துறையிலும் நாடு சிறப்பெய்தியிருந்தமையைக் கல்வெட்டுக்கள் புலப்படுத்துகின்றன. கட்டடக்கலை, சிற்பம், ஓவியம் ஆகியவற்றின் வளர்ச்சி[25] மிகவும் குறிப்பிடத்தக்க வகையில் சோழர் காலத்தில் அமைந்திருந்தது. கற்படிமங்கள், உலோகத்தில் அமைக்கப் பெற்ற படிமங்கள் பல இன்னும் தமிழ்நாட்டுத் திருக்கோயில்களிலும், பொருட்காட்சிச்சாலைகளிலும் உள்ளன. அவற்றுள் ஒடேந்து செல்வர், உமையொரு பாகர், சண்டேசுரானுக்கிரக மூர்த்தி, ஆடவல்லான், திருமகள் உமா பரமேசுவரி ஆகிய அருட்டிரு மேனிகள் அமைப்பு காண்போர் வியக்கும் வனப்பு மிக்கவை. கும்பகோணத்தையடுத்துள்ள தாராசுரத்தில் இரண்டாம் இராசராசன் கட்டிய திருக்கோயிலில் சைவ சமய அடியவர்கள் படிமங்கள் கீழே விளக்கக் குறிப்புக்களுடன் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். சோழர் காலத்திய தமிழிலக்கிய வளர்ச்சியும் குறிப்பிடத்தக்கதாகும். வீரசோழியம், கம்பராமாயணம், திருத்தொண்டர் புராணம், கலிங்கத்துப்பரணி, தக்கயாகப் பரணி, மூவர் உலா, குலோத்துங்க சோழன் பிள்ளைத் தமிழ், தண்டியலங்காரம், நன்னூல் ஆகியவற்றின் சிறப்பு எல்லோரும் அறிந்ததே. கி.பி. பதின்மூன்றும் நூற்றுண்டு சிவஞான போதம் இயற்றிய மெய்கண்ட தேவரும், அவர் தம் மாணவரும் வாழ்ந்த காலமாகும். அடியார்க்கு நல்லார், பேராசிரியர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் போன்ற உரையாசிரியர்கள் வாழ்ந்ததும் சோழர் காலத்தேதான். சமய வேறுபாடுகள் காரணமாக மக்கள் எத்தகைய இன்னலுமின்றி வாழ்ந்த காலம் சோழர் காலமாகும். இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தில் நிகழ்ந்த சில செயல்கள் அரிதாக நிகழ்ந்தவையே. ஆகவே பல வகையிலும் சிறப்புற்ற சோழர்காலம் தமிழக வரலாற்றில் ஒரு பொற்காலம் என்றே கூறலாம்.

---

1. திருக்குறள், ஒழிபியல், குடிமை 5.
2. கரிகாலன் என்னும் பெயருடைய சங்ககால அரசர் ஒருவரா, இருவரா, மூவரா என்ற மயக்கம் அறிஞருக்குள் உள்ளது. திரு. K. N. சிவராஜ பிள்ளையவர்கள் கரிகாலர் இருவர் என்றும், திரு. சுப்பிரமணிய ஆச்சாரியார் அவர்கள் கரிகாலர் மூவர் என்றும், பேரறிஞர் துரையரங்கனர் போன்றேர் கரிகாலன் ஒருவனே யென்றும் கருதுகின்றனர்.
3. பிற்காலச் சோழர் சரித்திரம் — மூன்றும் பகுதி-அரசியல் பக்கம் 85.
4. Indian Archaeology 1962-63 a Review P-13.
5. „ „ 1961-62 a Review P, P-26-27.
6. ஆராய்ச்சித் தொகுதி பக்கங்கள் 182, 183, 184.
7. Ins. 197 of 1938-39.
8. இராசமாணிக்கனர் - பெரிய புராண ஆராய்ச்சி, பக்கங்கள் 92, 93.

   திரிகடுகம், சிறுபஞ்சமூலம் — வையாபுரிப் பிள்ளையவர்கள் பதிப்பு (சென்னைப் பல்கலைக் கழகம்), பக்கங்கள் 110-11 75.

   K. A. N. History of South India (3rd Edition) P-129.
9. நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் - திருநறையூர்ப் பதிகம், எட்டாம் பாடல்.

   திருநறையூர்ப்பதிகத்தில் செங்கணனின் சிறப்பியல்புகள் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.
10. கல்வெட்டுக்களால் அறியப்படும் உண்மைகள்— பண்டாரத்தார்—பக்கம் 103.
11. Epigraphia Indica Vol. xv no. 5.
12. அகநானூறு, 356-ஆம் பாடல்.
13. சிவஞான கண்டராதித்தர் என்று ஒரு கல்வெட்டில் புகழப்பெறும் இவ்வேந்தன் பாடிய பதிகம் ஒன்று ஒன்பதாம் திருமறையில் உள்ளது. நம்பியாண்டார் நம்பி என்னும் பெரியாரும் ஆதித்தன், பராந்தகன் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்தவர் ஆவர்.
14. E. I. Vol. XV No. 5.
15. பிற்காலச் சோழர் சரித்திரம் முதல்பகுதி (மூன்றும் பதிப்பு) பக்கங்கள் 79-81.
16. S. 11 Vol. III No. 128.
17. பிற்காலச் சோழர் சரித்திரம், முதல்பகுதி, பக்கம் 100. இம்மன்னனின் மெய்க்கீர்த்தி 'திருமகள் போலப் பெருநிலச்செல்வியும்' என்று தொடங்குவதாகும்.
18. பிற்காலச் சோழர் சரித்திரம், முதற்பகுதி, மூன்றும் பதிப்பு, பக்கம் 109.
19. Epigraphia Indica Vol. XVI Page 74.
20. Epigraphia Indica Vol. XXII No 34.
21. 'வங்கத்தை முற்று மூரணடக்கி மும்மடி போய்க் கல்யாணி செற்றதனி யாண்மைச் சேவகனும்'
    —விக்கிரமசோழன் உலா, வரிகள் 36-38
22. 'பாடற் பெரும் பரணித் தேடற் கருங்கவி கவிச் சக்கரவர்த்தி'யாகிய சயங்கொண்டார் இவ்வேந்தனின் வடகலிங்க வெற்றியைப் பாராட்டி இயற்றியதே கலிங்கத்துப் பரணியாகும்.
23. இவர்களுள் விக்கிரம சோழன் புதல்வனுகிய இரண்டாம் குலோத்துங்கனே வைணவ நூல்கள் கூறும் திருமிகண்ட சோழன் ஆவன்.
24. பிற்காலச் சோழர் சரித்திரம்—மூன்றும் பகுதி, சோழர் அரசியல் பக்கங்கள் 68, 71, 73.
25. தஞ்சைப் பெரிய கோயிலில் உள்ள சோழர்கால ஓவியங்கள் இங்கே கருதத்தக்கன. சோழர்காலக் கலை வளர்ச்சிபற்றி அண்மையில் திரு. S. R. பால சுப்பிரமணியன் அவர்கள் ஆங்கிலத்திலும், தமிழிலும் சிறந்த நூல்கள் எழுதியுள்ளார். (Earlv Cnola Art—Part I) திரு. Douglas Barret என்பாரும் சோழர் படிமக்கலை பற்றிய நூல் ஒன்றை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார்.



வள்ளுவர் வீரம்

விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு —(குறள்: 775)

அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல.

சுப. அண்ணாமலை, எம்.ஏ., எம்.லிட்.
தியாகராசர் கல்லூரி, மதுரை.




வரலாற்றுக் காலத்திற்கு முன்பிருந்து கி.பி. 17-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதிவரை தமிழகத்தின் தென்பகுதியான பாண்டி நாட்டைப் பாண்டியர் ஆண்டனர். சங்க காலத்தில் ஆட்சி புரிந்த பாண்டியப் பேரரசு அன்றிப் பிற்காலத்திலும் காலமிடையிட்டு இரண்டு பாண்டியப் பேரரசுகள் பெரும்புகழும், பேராற்றலும் பெற்று விளங்கின. இவ்வரசுகளின் வரலாற்றையும் அவற்றின்கீழ் நிலவிய சமுதாய, வாணிக, இலக்கிய, சமய வரலாறுகளையும் அறிந்து கொள்ளுதற்குச் சங்க இலக்கியம் முதலிய நூல்களும், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், நாணயங்கள் முதலியனவும் அயல் நாட்டார் எழுதிய குறிப்புக்களும் பேருதவி புரிகின்றன.

### அரசியல் வரலாறு :

'பாண்டியன்' என்னும் சொல் எவ்வாறு பிறந்தது என அறிதல் அரிதாக உள்ளது. 'பண்டையோன்' என்னும் சொல் இவ்வாறு திரிந்தது என்பாரும், பாண்டவரின் தந்தையாகிய 'பாண்டு'வின் பெயரே இதற்கு முதல் என்பாரும், கிரேக்க மன்னன் 'எர்க்கினிசு'வின் மகள் 'பண்டேயியா' என்பவளின் வழித்தோன்றல்களே பாண்டியர் என்பாரும் உளர். இவற்றுள் எதுவும் பொருந்துவதின்று. இந்து மாக்கடல் பொங்கி எழுந்து தமிழகத்தின் இற்றைத் தென்னெல்லைக்குத் தெற்கே இருந்த பெருநிலப்பகுதியை அழித்தது என்னும் இலக்கியச் செய்தியும்[1] மறைந்த இலெமூரியாபற்றிய 'ஸ்காத்து எலியட்டு' என்பாரின் வரலாறும் பாண்டிய நாடு, பாண்டிய அரசு ஆகியவற்றின் தொன்மையை அறிவுறுத்துவன.

தொல்காப்பியம் கி.மு. 6-ஆம் நூற்ருண்டுக்கு முந்தியது என்பது அறிஞர் கருத்து[2]. அது நிலந்தரு திருவிற் பாண்டியன் என்னும் பெயரை உடைய வடிம்பலம்ப நின்ற பாண்டியனின் அவையில் அரங்கேற்றப்பட்டது. இவன் பாண்டியர் குடி முன்னேன் என மதுரைக் காஞ்சி கூறுகிறது[3]. இவன் வழியில் தோன்றிய 'பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி' புறநானூற்றில் பாராட்டப் பெற்ருன். இவர்கள் இருவருமே கடைச் சங்க காலத்திற்கு முந்திய பாண்டிய வேந்தர்களுள் சிறந்தவர்கள்.

கடைச் சங்க காலம் என்பது கி.மு. முதல் நூற்ருண்டு முதல் கி.பி. 3-ஆம் நூற்ருண்டு முடிய நிலவிய காலம் ஆகும். இக்காலப் பாண்டியர்களைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் சங்க இலக்கியங்களில் உள்ளன. இவர்கள் எத்துணைப் பேர் எனத் தெரியக்கூடவில்லை. 18 பாண்டியர்களின் பெயர்கள் சங்க இலக்கியங்களுள் காணப்படுகின்றன. அவர்களுள் ஆட்சித் திறனும், பெருவீரமும் படைத்தவர்கள் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் என்னும் இருவருமே ஆவர். இக்காலப் பாண்டியர்கள் மதுரையைத் தலைநகராகக்கொண்டு, கடல் கோளால் அழிந்தவை போக எஞ்சிய பாண்டிய நாட்டையும் தம்

வீரத்தாற் கொண்ட மற்ற நாட்டுப் பகுதிகளையும் ஆண்டனர். செழியன், வழுதி, மாறன் என்பவை இவர்களுக்குப் பொதுப் பெயர்களாக வழங்கின.

**களப்பிரர் இடையீடு :**

கி.பி. மூன்றும் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 6-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை 'களப்பிரர்' என்னும் அயலவர் பாண்டிய நாட்டையும், தமிழகத்தின் வேறு சில பகுதிகளையும் வென்று ஆண்டனர். அவர்களை வென்று பாண்டிய அரசை மீண்டும் கி.பி. 575-இல் நிறுவியவன் கடுங்கோன் என்பவன். இது 'வேள்விக்குடிச் செப்பேடு'களால் அறியப்படும் செய்தி.

**பாண்டியரின் முதற் பேரரசு (கி. பி. 575-900) :**

கடுங்கோன் நிறுவிய பாண்டியப் பேரரசு மூன்று நூற்றாண்டுகள் புகழுடன் விளங்கியது. கி.பி. 790 வரை இருந்த பாண்டிய மன்னரின் வரிசையையும், சிறப்பையும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறும். இவற்றை வெளியிட்டவன் 765-790-இல் ஆண்ட நெடுஞ்சடையன் பராந்தகன் என்னும் பாண்டியப் பேரரசன். இவற்றுடன் இம்மன்னனின் சீவர மங்கலச் செப்பேடுகளும் இக்கால வரலாற்றை அறிய உறுதுணை புரிகின்றன. இக்காலப் பாண்டியர் பதினொருவர். இவர்கள் 'சடையவர்மன்', 'மாறவர்மன்' என்னும் பட்டங்களை ஒருவர்பின் ஒருவராக மாறிமாறிப் புனைந்து கொண்டனர். இவர்களுள் குறிப்பிடத்தக்க பெரு மன்னர்கள் அறுவர். இவர்களின் காலத்தில் பாண்டிய அரசு விரிவடைந்தது. வடக்கே தொண்டை நாட்டை ஆண்ட பல்லவப் பெரு மன்னர்க்கு அடங்காமல் இவர்கள் அரசு புரிந்தனர்.

இவருள் மாறவர்மன் அரிகேசரி போர்ப் புகழோடு சமயப் புகழும் வாய்ந்தவன். சைவ சமயக் குரவருள் முன்னவராகிய திருஞானசம்பந்தர் மதுரைக்கு வந்து சமண சமயத்தானாகிய இவனைச் சைவ சமயத்திற்கு மாற்றினார். இவனை 'நெல்வேலி வென்ற நின்ற சீர் நெடுமாறன்' என்று சுந்தரமூர்த்திகள் 'திருத்தொண்டத் தொகை'யுள் பாராட்டுவர்[4]. இவன் காலத்தில் சீன யாத்திரிகன் 'யுவான் சுவாங்' பாண்டிய நாட்டிற்கு வந்தான். இந்நாட்டு வணிகச் சிறப்பையும், வீரச் சிறப்பையும் பற்றி நேரில் அறிந்து எழுதி வைத்தான்.

இரணதீரன் என்னும் பாண்டிய மன்னவன் சளுக்கிய மன்னன் முதல் விக்கிரமாதித்தியனை வென்றான் என்பர் அறிஞர் துப்ரே. மற்றொரு சைவ சமயக் குரவராகிய சுந்தரமூர்த்திகள் இவன் காலத்தவர். பராங்குச மாறவர்மன் என்னும் பாண்டியன் பல்லவமல்லன் என்னும் சிறப்புப் பெயருடைய நந்திவர்மனை வென்றான். இவர்கள் இருவருக்கும் பல போர்கள் நிகழ்ந்தன. இவற்றுள் சிலவற்றில் பல்லவன் வென்றான்.

நெடுஞ்சடையன் பராந்தகன் என்னும் பாண்டியன் மிக்கப் புகழ் படைத்து விளங்கினான். பல்லவ, சேர, கொங்கு மன்னர்களை வென்றான். வைணவ ஆழ்வார்களுள் பெரியாழ்வார் இவன் காலத்தவர். இவனும் பரம வைணவன். இவன் கொங்கு நாட்டை வென்று இன்றைய கோயமுத்தூருக்கு அருகில் உள்ள பேரூரில்[5] திருமாலுக்குக் கோயில் எடுத்தான். வடமொழிப் பட்டங்கள் பலவற்றை இவன் புனைந்து கொண்டான். கல்வெட்டுக்கள் பலவற்றையும் - சிறப்பாக வேள்விக்குடிச் செப்பேடுகளையும் வெளியிட்டான்.

முதலாம் வரகுணன் சோழ நாட்டைப் பல்லவனிடமிருந்து கைப்பற்றி ஆண்டான். தொண்டை மண்டலத்தின் தென்பகுதியையும் அவனிடமிருந்து கைப்பற்றினான். இங்ஙனம் மும் மண்டலங்களையும் ஆண்ட பெருமை இவனுக்கு உண்டு. சைவ சமயக் குரவரான மாணிக்கவாசகர் இவன் காலத்தவர் என்பர். இவனுடைய கல்வெட்டுக்கள் பல ஊர்களில் உள்ளன. இவற்றால் இவன் 43 ஆண்டுகள் ஆட்சி புரிந்தான் என்று அறியலாம்.

சீமாறன் சீவல்லபன் என்னும் பாண்டியன் ஈழநாட்டின்மீது படையெடுத்துச் சென்று வென்றான். அப்போரில் இலங்கை மன்னன் முதலாம் சேனன் தன் செல்வமெல்லாம் இழந்து சிறுமையுற்றான் என்று இலங்கை வரலாறான மகாவமிசம் கூறுகிறது. ஆயின், இவன் இலங்கையை ஆளவில்லை. சேனனுடன் உடன்படிக்கை செய்து கொண்டு அவனுக்கே அதன் அரசுரிமையை வழங்கினான். பல்லவ மன்னன் மூன்றும் நந்திவர்மனுடன் தெள்ளாறு என்னும் இடத்தில் பொருது தோற்றான். குடமூக்கு என்னுமிடத்தில் மீண்டும் நிகழ்ந்த போரில் அவனை வென்றான்.

கி.பி. 900-இல் பட்டம் எய்திய இராசசிம்ம பாண்டியன் சின்னமனூர்ச் செப்பேடுகளை 916-இல் வெளியிட்டான். இவனுக்கும் முதற் பராந்தக சோழனுக்கும் நடந்த வெள்ளூர்ப் போரில் இவனுக்குத் துணையாக இலங்கையரசன் ஐந்தாம் காசிபன் வந்தும் இவன் தோற்றான். பாண்டிய நாடு சோழர் வசமாயிற்று. திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம், குமரி முதலிய மாவட்டங்களிற் காணப்படும் முதற் பராந்தக சோழனின் கல்வெட்டுக்கள் இதனை உணர்த்துகின்றன. அடுத்து ஆட்சிக்கு உரிமை படைத்த வீரபாண்டியன் ஆட்சியைச் சோழரிடமிருந்து கைப்பற்றி 966 வரை ஆண்டான். பிறகு 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கம் வரை பாண்டிய அரசு சோழர்க்கு அடங்கிய சிற்றரசாக இருந்தது.

**பாண்டியரின் இரண்டாம் பேரரசு :**

கி.பி. 1216-இல் ஆட்சிக்கு வந்த முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியன் 1219-இல் சோழ நாட்டின்மீது படையெடுத்து, மூன்றும் இராசராச சோழனை வென்று சோழ நாட்டைக் கைப்பற்றினான். சோழ மன்னன் நாட்டைவிட்டு ஓடிச் சில்லாண்டுகளின் பின் போசள மன்னன் வீர நரசிம்மனின் உதவியால் மீண்டும் நாட்டைப் பெற்றான். சுந்தர பாண்டியன் தன் வீரத்தால் இரண்டாம் பாண்டியர் பேரரசை நிறுவினான். இப்பேரரசு கி.பி. 1310 வரை நிலவியது. இவனும் முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன், முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் என்போரும்

இக்காலத்தில் ஆட்சி புரிந்தவர்களுள் குறிப்பிடத் தக்க பேரரசர் ஆவர்.

முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன் பேராண்மை வாய்ந்தவன். பாண்டியர் பேரரசை விரிவுபடுத்தினன். இவன் கல்வெட்டுக்கள் வடக்கே நெல்லூர், கடப்பை மாவட்டங்கள் முதல் தென் குமரி வரை காணப்படுகின்றன. ஆகவே, இப் பகுதிகள் அனைத்தும் இவன் ஆட்சிக்கு அடங்கின என்பது தெளிவு. இதனால் 'எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தர பாண்டிய தேவர்' என இவன் வழங்கப்படுகிறான். சேர, சோழ நாடு களைத் தன்னடிப்படுத்தினன். சோழராட்சி மீண்டும் எக்காலத்தும் தலையெடுக்காதவாறு ஒடுங்கியது. இவன் இலங்கையரசனையும் வென்றான்.

முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் காலத்தில் இத்தாலிய நாட்டு வெனிசு நகரத்தானாகிய 'மார்க்க போலோ' பாண்டிய நாட்டிற்கு வந்தான். இவன் பாண்டிய நாட்டு நகரங்களைப்பற்றியும், அரசைப்பற்றியும் தன் நூலில் எழுதியுள்ளான். இந்நாட்டை ஐந்து பாண்டியர்கள் ஆண்டனர் என்றும், அவருள் மூத்தவன் குலசேகரனே என்றும், வாணிகம் செய்வோரிடமும், அயல்நாட்டு மக்களிடமும் இவன் பேரன்பு செலுத்தி வந்தான் என்றும் குறிப்பிட்டுள்ளான். மகமதிய யாத்திரிகனாகிய 'வாசப்' என்பானும் இந்நாட்டைப் பார்வையிட்டு இவ்வாறே புகழ்ந்துரைத்தான். குலசேகர பாண்டியன் ஈழநாட்டு மன்னன் மூன்றாம் பராக்கிரம பாகுவை வென்று, அந்நாட்டில் இருந்த பெருஞ் செல்வத்தையும், சிறப்பு வாய்ந்த புத்த தேவரது பல்லையும் கைப்பற்றிச் சென்றான் என்று மகாவமிசம் கூறும். இவன் தம்பியர் நால்வரும் இவன் வென்ற நாடுகளில் அரசப் பிரதிநிதிகளாய் இருந்து ஆண்டனர்.

குலசேகர பாண்டியனின் புதல்வர்களான சுந்தர பாண்டியன், வீரபாண்டியன் என்பவரிடையே ஆட்சியுரிமை பற்றி 1310 முதல் போட்டி ஏற்பட்டது. போர்கள் நிகழ்ந்தன. பாண்டிய நாட்டின் இரு வேறு பகுதிகளை இவர்கள் ஆண்டனர். சுந்தர பாண்டியன் அலாவுதீன் கில்ஜியின் படைத் தலைவன் மாலிக்காபூரைப் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வருமாறு அழைத்தான் என்று 'வாசப்' கூறுகிறான். பாண்டிய நாடு மகமதிய வீரர்களால் கொள்ளையிடப் பெற்றது. மக்கள் பல்வகை இன்னல்கட்குள்ளாயினர். அறநிலையங்களும், கோயில்களும் அழிவுற்றன. பாண்டிய நாட்டுக்கு அடங்கியிருந்த சிற்றரசர்கள் தனியரசு புரியத் தொடங்கினர். பாண்டியப் பேரரசு வீழ்ந்தது.

பாண்டிய நாட்டில் மகமதியரின் ஆட்சி 1330 முதல் 1378 வரை நடைபெற்றது. பின்பு விசய நகர அரசன் குமார கம்பணன் மகமதியரை வென்று, பாண்டி நாட்டைக் கைப்பற்றினன். பதினைன்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பாண்டிய மன்னர் மதுரையை விடுத்துத் திருநெல்வேலி மாவட்டத்திற்குச் சென்று தென் பாண்டி நாட்டை ஆண்டு வந்தனர். 17-ஆம் நூற்றாண்டு முடிய அவர்களின் அரசு நிலவியது. கொற்கை, தென்காசி, கரிவலம் வந்த நல்லூர் ஆகியவற்றை அவர்கள் தம் தலைநகர்களாகக் கொண்டனர். இவர்களுள் 1422 முதல் 1463 வரை ஆண்ட சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் குறிப்பிடத்தக்க பெருமை வாய்ந்தவன். இவன் சேர மன்னனை வென்றான். தென்காசியில் இவன் எழுப்பிய சிவன் கோயில் வரலாற்றுப் புகழ் வாய்ந்தது.

தென் பாண்டிய அரசும் நாளடைவில் சிறுகி, இறுதியில் ஓர் ஊர்த்தலைமை (ஜமீன்) ஆகியது. வரலாற்றுக் காலத்திற்கு முன் தொடங்கிய பாண்டிய அரசு இடையிடையே பொற்காலங்களைக் கண்டு, பேரும் புகழும் நிறுவி 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் குன்றி மறைந்தது.

### அரசியல் முறை :

பாண்டிய நாடு அல்லது பாண்டி மண்டலம் என்பது மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களும் புதுக்கோட்டைப் பகுதியில் வெள்ளாற்றிற்குத் தெற்கே உள்ள பகுதியும் ஆகும். ஆட்சி வசதிக்காக இந்நாட்டை வளநாடுகள் என்றும், நாடுகள் என்றும் உட்பிரிவுகளாகப் பிரித்திருந்தனர். பாண்டியரின் அரசியல் அதிகாரிகள் சிலரின் பெயரும், பணியும் இங்குக் குறிக்கத் தக்கவையாகும். அரையர் என்போர் உள்நாட்டு அரசியலைக் கண்காணிக்கும் மேலதிகாரிகள். 'புரவு வரித்திணைக் களத்தார்' என்போர் இக்காலத்தில் உள்ள வருவாய்க் குழுவினரை ஒத்தவர். 'வரியிலார்' என்போர் ஊர்கள்தோறும் எல்லா வரியாலும் அரசுக்கு வரவேண்டிய தொகைக்குக் கணக்கு வைத்திருப்பவர்.

நில வரியும், தொழில் வரியும் சிறப்பான வரிகள். பல்வேறு தொழில்கட்கும், அவற்றின் பெயரைக் குறிக்கும் வரிகள் விதிக்கப்பட்டன. சான்றாகத் 'தறியிறை' என்பது நெசவாளர் வரி. 'தட்டார்ப் பாட்டம்' என்பது தட்டார் வரி.

நிலம் அளப்பதற்குச் 'சுந்தர பாண்டியன் கோல்', 'குடிதாங்கிக் கோல்' முதலிய அளவு கோல்கள் பயன்படுத்தப்பட்டன. பொன்னாலும், செம்பாலும் செய்த காசுகளும், பணங்களும் வழங்கின. சீமாறன் சீவல்லபன் காலத்து ஒரு நாணயம் 'அவனிப சேகரன் கோளகை' என்றும், முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்து ஒரு நாணயம் 'சோணாடு கொண்டான்' என்றும் வழங்கின.

ஊர்தோறும் கிராம சபை அமைந்து ஊராட்சியை நடத்திற்று. இச்சபை உறுப்பினர் ஆண்டுதோறும் மக்களால் குடவோலை முறைப்படித் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நிலமும், சொந்த மனையும், கல்வியறிவும், நல்லொழுக்கமும் உடையவர்களே தேர்தலில் போட்டியிட உரிமையுடையோர்.

### வாணிக, தொழிலியல் வரலாறு :

பாண்டிய நாட்டில் தொழிலும், வாணிகமும் சங்ககாலம் முதலே சிறந்திருந்தன. வெளிநாடுகளுடன் வணிகத் தொடர்பு நிலவியது. அராபியர், உரோமர் முதலிய வெளிநாட்டு வாணிகர் பாண்டி நாட்டுக் கொற்கை நகரில்

குளிக்கப்பட்ட முத்துக்களை விரும்பி வாங்கினர். இந்நகரமே பெருந் துறைமுகப் பட்டினமாக வும், மதுரைக்கு முன் பாண்டியர் தலைநகராகவும் இருந்தது. இங்கிருந்து மதுரைக்குத் தலைநகர் மாறிய செய்தியைக் கிரேக்கப் பூகோள ஆசிரியன் தாலமி குறிப்பிடுகின்றான்.

''தன் கடற் பிறந்த முத்தின் ஆரமும்'' என் னும் அகநானூற்று வரி[6], முத்தும் அதனை எடுத் தற்கிடமான கடலும் பாண்டியனுக்கு உரியன வாயிருந்ததைப் புலப்படுத்தும். 'பெரிபுளூஸ்' என்னும் நூலின் ஆசிரியரும், பிளினியும் இக் கொற்கைக் கடலில் முத்து எடுக்கப்பட்டமையைக் குறிப்பிடுகின்றனர். முத்துக்கள் தவிரத் தந்தம், வாசனைப் பொருள்கள் ஆகியவற்றை வாங்குவதற் கும் வெளிநாட்டு வாணிகர் பாண்டிய நாட்டிற்கு வந்தனர். உரோம் நாட்டு மன்னன் கிளாடிய சுவின் நாணயம் மதுரை மாவட்டத்தில் புதை பொருளாகக் கிடைத்தது. வெளி நாட்டு வணிகரைத் தமிழிலக்கியம் 'யவனர்' என அழைத்தது. இவ்வணிகர் வழியாக மதுரையின் சிறப்பு வெளி நாடுகளிற் பரவியிருந்தது.

### கல்வி, இலக்கிய வரலாறு :

கடைச் சங்க காலத்திலேயே பாண்டிய நாட்டில் கல்வி சிறந்திருந்தது. கற்றோர் பெரிதும் மதிக்கப் பெற்றனர். அவர்தம் அறிவுரைகட்கு மன்னரும் செவிசாய்த்தனர். ஊர்தோறும் தொடக்கப்பள்ளி கள் இருந்தன. அவற்றின் ஆசிரியர் 'பாலாசிரியர்', 'இளம் பாலாசிரியர்', 'கணக்காயர்' என்று அழைக்கப்பட்டனர். மதுரையில் தமிழ்ச்சங்கம் பெருஞ்சிறப்புடன் திகழ்ந்தது. இலக்கியப்படைப் புக்களை இச்சங்கம் ஆராய்ந்து இசைவு வழங்கியது. சில பாண்டிய மன்னர்கள் பெரும் புலவராக விளங்கினர். அவர்களின் பாடல்கள் சங்க இலக் கியத்தில் உளளன. சங்கப் பாடல்களைத் தொகுக் கும் பணியும் பாண்டியர் காலத்திலேயே நடை பெற்றது. அகநானூற்றைக் கானப்பேர் கடந்த உக்கிரப் பெருவழுதி தொகுப்பித்தமையைச் சான் ருகக் குறிப்பிடலாம். திருக்குறள் சங்கத்தில் அரங் கேற்றப்பட்டதா அன்ரு என்பது தெளிவாகத் தெரியவில்லை. எனினும், திருவள்ளுவமாலையில் பல சங்கப் புலவர்கள் அதனைப் பாராட்டிப் பாடியுள் ளனர். இப்பாராட்டு நூலின் 3 பாடல்கள் 'மாற' எனப் பாண்டியனை விளித்துப் பாடப்படுகின்றன. வழுதி மனம் மகிழத் திருவள்ளுவர் முப்பால் இயற்றினுர் என்றே ஒரு பாடல் கூறுகிறது. நாலடியாரில் பாண்டியர்க்கு அடங்கிய 'முத் தரையரை'ப்பற்றிய குறிப்புக்கள் உள்ளன. ஐந் திணை ஐம்பதை இயற்றியவர் பாண்டிய குலத் தைச் சேர்ந்த 'மாறன் பொறையனுர்' என்பவர்.

பாண்டியரின் முதற் பேரரசில் திருஞானசம் பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் சைவ சமயக் குரவர் நால்வரும் பாண்டிய நாட்டையும், மதுரையையும் தேவார திருவாசகங் களால் சிறப்பித்துப் பாடியுள்ளனர். சுந்தரர் மதுரையைக் குறித்துப் பாடிய பாடல்கள் கிடைக்க வில்லையாயினும், திருப்பரங்குன்றத்தைப் பாடிய பாடல்கள் கிடைத்துள்ளன. மாணிக்கவாசகர் மதுரையில் முதலமைச்சராகப் பணியாற்றினுர். பெரியாழ்வாரும், ஆண்டாளும் இக்காலத்திலேயே நிலவினர். இறையனுர் களவியல் உரையில் மேற் கோளாகக் காட்டப் பெறும் 'பாண்டிக் கோவை' இக்காலத்தில் பாடப் பெற்றிருத்தல் வேண்டும். இக்களவியல் உரையும் நூலாக உருப்பெற்றது இக்காலமே.

இரண்டாம் பாண்டியர் பேரரசில், பாண் டியரின் சிற்றரசனுகிய சந்திர வாணனைப் புகழ்ந்து பொய்யாமொழிப் புலவர் 'தஞ்சைவாணன் கோவை' பாடினுர். தென்காசிப் பாண்டியருள் அதிவீரராம பாண்டியன் நைடதமும், வரதுங்க ராம பாண்டியன் கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி முதலிய நூல்களும் இயற்றினர்.

### சமய வரலாறு :

பாண்டியருள் பலர் சைவர். சங்க காலத்தில் சமயப் பொறுமை சிறந்திருந்தது. இடைக்காலத் திலும் பல பாண்டியர் அப்பொறுமையைப் பெற் றிருந்தனர். பாண்டியர் தாம் படைகொண்டு சென்ற நாடுகளிலும் கோயில்கட்குத் தானமும், நிவந்தமும் அளித்தனர். முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன் தில்லைக் கோயிலிலும், திருவரங் கக் கோயிலிலும் பொன்வேய்ந்தான். தில்லைக் கோயிலின் மேலைக் கோபுரம் 'சுந்தர பாண்டியன் கோபுரம்' என வழங்குகிறது. கோயில்கள் வாயி லாக இசை, சிற்பம், நடனம் முதலிய கலைகள் வளர்ந்தோங்கின. சில கோயில்களில் நூலகங் களும் இருந்தன. மக்களின் பொருளுதவியால் அவை நடைபெற்றன. கோயில்களே நம் நாட்டு வரலாற்றுக் களஞ்சியங்களான கல்வெட்டுக்களைச் சிதையாமல் தம்மகத்து வைத்துக் காத்துக் கொண்டிருக்கின்றன. திருப்பணி செய்யுந்தோறும் இக்கல்வெட்டுக்கள் சிதைந்து போகாமல் பாது காக்கப்பட்டன. பாண்டியர் காலத்தில் கட்டப் பெற்ற கோயில்களுள் மதுரைக் கோயிலும், ஆவுடையார் கோயிலும், தென் காசிக் கோயிலும் குறிப்பிடத்தக்க கலைக் கருவூலங்களாகும். இவற் றுள் மதுரைக் கோயில் மகமதியர் படையெடுப் பின்போது சிதைய, நாயக்க மன்னர் மீண்டும் அதைப் புதுப்பித்துக் கட்டினர்.

---

1. '49 நாடுகள் அழிந்தன' என்பர் அடியார்க்கு நல்லார் (சிலப்பதிகார உரை)
2. டாக்டர். சி. இலக்குவனுர், தொல்காப்பிய ஆராய்ச்சி 1961, பக். 31.
3. மதுரைக் காஞ்சி: 60-61.
4. பெரிய புராணம்.
5. காஞ்சிவாய்ப் பேரூர் என்பது பழைய பெயர்.
6. அகநானூறு: 13

மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

டி. ஆர். இராமச்சந்திரன், எம்.ஏ., எம்.லிட்.
பச்சையப்பன் கல்லூரி, சென்னை




பல்லவர் காலம் தமிழக வரலாற்றில் மிக முதன்மை பெற்றதொரு காலமாகும். பல்லவர்கள் ஏறத்தாழ ஏழு நூற்றாண்டுகள் தமிழ் நாட்டில் பேரரசர்களாக ஆண்டு, புகழ் பெற்றனர். இவர்களைப்பற்றிய இலக்கியங்களும், பட்டயங்களும், கல்வெட்டுக்களும் கிடைத்திருந்தும் அவர்களுடைய பண்டைக்குலம் இன்னதென்று நாம் உறுதியாகக் கூற இயலாது. இவர்கள் வடமேற்கு நாட்டிலிருந்து வந்த அயல் நாட்டவர்கள் என்றும், தமிழகத்திலேயே இருந்து வந்த மக்கள் என்றும் பலவாறாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். பல்லவர் என்ற சொல் ஓர் அரச குடும்பத்தைக் குறிக்கிறதேயொழிய ஒரு மரபினை அல்லது மக்கட் பிரிவினைக் குறிக்கவில்லை என்ற கருத்தினைப் பொதுவாக அனைவருமே ஏற்றுக் கொள்ளுகின்றனர்.

### பிரிவும் காலமும் :

பல்லவ மன்னர்களை மூன்று பிரிவுகளாகப் பிரித்துள்ளார்கள். அவர்களில் முற்காலப் பல்லவர்கள், ஏறத்தாழ கி.பி. 250 முதல் 340 வரை ஆண்டு வந்தனர். அவர்கள் தங்களுடைய பட்டயங்களைப் பிராகிருத மொழியில் வெளியிட்டார்கள். இடைக்காலப் பல்லவர்கள், கி.பி. 340 முதல் 575 வரை ஆண்டனர். அவர்கள் செப்பேடுகளை வடமொழியில் வரைந்தனர். பிற்காலப் பல்லவர்களுடைய காலம் கி.பி. 575 முதல் 900 எனக் கூறுகிறார்கள். இக்காலப் பல்லவர்கள் செப்புப் பட்டயங்களையும் கல்வெட்டுக்களையும் பெருமளவில் வெளியிட்டனர். இவை கிரந்த-தமிழ் மொழியில் வெளியிடப் பெற்றன.

இம்மூவகைப் பல்லவ மன்னர்களுக்கு இடையே ஏற்பட்டிருந்த உறவு முறையைப்பற்றி நாம் ஒன்றும் திண்ணமாகக் கூற இயலாது. எனினும், ஒன்று மட்டும் நாம் உறுதியாகக் கூறமுடியும். அஃதாவது, முற்காலப் பல்லவர்கள் ஆந்திரப் பேரரசு அழிவுறத் தொடங்கியபோது தங்களுடைய செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டனர் என்பதாகும். நாளடைவில் அவர்களது ஆதிக்கம் காஞ்சி தொடங்கிக் கிருட்டிணா நதி முடியப் பரவியது. இடைக்காலப் பல்லவர்கள் 5-ஆம், 6-ஆம் நூற்றாண்டுகளில் செல்வாக்குப் பெற்றிருந்தனர். அவர்கள் காலத்தில் பல்லவர்களுள் ஒரு பிரிவினர் காஞ்சியிலிருந்தும் மற்றொரு பிரிவினர் ஆந்திர நாட்டிலிருந்தும் ஆட்சி புரிந்து வந்தனர். பிறகு பிற்காலப் பல்லவர்களுள் முதல்வரான சிம்ம விஷ்ணு இவ்விரு அரச குடும்பங்களையும் இணைத்துப் பல்லவர்களின் செல்வாக்கினைப் பெருக்கியதாகக் கருதப்படுகிறது.

### பிற்காலப் பல்லவர் :

பிற்காலப் பல்லவர்கள் காலம்தான் மிகச் சிறப்பான காலமாக எண்ணப்படுகிறது. சிம்ம விஷ்ணு,

பல்லவ ஆதிக்கத்தைக் காவிரிக்கரை வரை விரிவு படுத்தினர். அவருக்குப்பின் வந்த மகேந்திர வர்மன் (கி.பி. 600-630) காலத்தில் பல்லவர்களுக்கும் சளுக்கியர்களுக்கும், பல்லவர்களுக்கும் பாண்டியர்களுக்கும் இடையே போர் மூண்டது. பல்லவர்கள் வெங்கியை இழந்தார்கள். அவருக்குப் பின்னர் பட்டத்திற்கு வந்த நரசிம்மவர்மன் (கி.பி. 630-668) பல்லவ அரசர்களுள் தலைசிறந்த வராவார். இவரது சேனைத் தலைவர், சளுக்கிய அரசரான இரண்டாம் புலிகேசியைத் தோற்கடித்து வாதாபியைக் கைப்பற்றினர்; நரசிம்ம வர்மன் மேலும் இலங்கைக்குத் தன் கப்பற் படையை அனுப்பி வைத்தார். இவர் காலத்தில் யுவான்சுவாங் என்ற சீன யாத்ரிகர் காஞ்சிக்கு வந்தார். இவருக்குப்பின் ஆண்ட சிறந்த அரசர் இரண்டாம் நரசிம்மவர்மன் (680-720) ஆவார். அவருக்குப் பின்னர் அரியணையேறிய இரண்டாம் நந்திவர்மன் (731-796) சளுக்கியர், பாண்டியர், கங்கர் ஆகியவர்களுடன் போர் செய்ய வேண்டியிருந்தது. மூன்றும் நந்திவர்மன் (கி.பி. 845-860) தெள்ளாற்றுப் போரில் பாண்டியரை வென்றுர். கி.பி. 875-ஆம் ஆண்டு அரியணையேறிய அபராஜிதப் பல்லவர் காலத்தில் சோழ அரசரான ஆதித்தியர், தொண்டை மண்டலத்தைப் பல்லவர்களிடமிருந்து கைப்பற்றினர். இவருக்குப் பின்னர் பல்லவர் ஆதிக்கம் அழிவுற்றது.

### ஆட்சி முறை :

பல்லவர்கள் காலம் பல துறைகளிலும் சிறப்புப் பெற்றிருந்தது. நன்கு வரையறுக்கப்பெற்ற ஆட்சிமுறை அவர்கள் காலத்தில் தொடர்ந்து விளங்கிற்று. அரசரே மத்திய அரசுக்குத் தலைவராக விளங்கினர். பெரும்பாலும் பல்லவ அரச வாரிசு முறை, தந்தைக்குப்பின் மூத்த மகன் என்பதாகக் கருதப் பெற்றது. சில நேரங்களில் மக்களே அரச மரபில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து முடி புனைந்தனர் என்பதற்குப் போதிய சான்று உள்ளது. பல்லவர்கள், 'மகாராசன்', 'தரும மகாராசன்', 'மகாராசாதி ராசன்' போன்ற பட்டங்களைச் சூடி வந்தனர். இவையன்றிப் பல்லவர்கள் பெற்றிருந்த விருதுப் பெயர்கள் மிகப்பலவாகும். அவர்கள் பெரும்பாலும் கல்வி, கலை ஆகியவற்றில் தேர்ச்சி பெற்றவர்களாயிருந்தனர். மதப்பற்றுடையவர்களாக விளங்கினர். அரசியல் துறையில் அவர்களுக்கு உதவிபுரியப் பல அமைச்சர்கள் இருந்தனர் என்பதை நாம் பெரியபுராணத்தின் வாயிலாக அறிகிறோம். வைகுந்தப் பெருமாள் கோவில் கல்வெட்டில் அமைச்சர் குழு ஒன்று இருந்து வந்ததாகக் குறிப்பொன்று காணப்படுகிறது. தலைமை அமைச்சர் பதவி இருந்தது என்பதற்கும் போதிய சான்று நமக்குக் கிடைத்துள்ளது. இவர்களன்றிப் பல்லவ மன்னர்களுக்கு உதவியாகப் பல செயல் தலைவர்கள் இருந்தனர். காசக்குடிச் செப்பேட்டில், வாயில் கேட்பார் என்ற அதிகாரியின் பெயர் குறிப்பிடப் பெற்றிருக்கிறது. இவரைச் செயல் தலைவராக (Chief Secretary) ஒரு சிலர் கருதுகின்றனர். பல்லவ மன்னரிடம் உள்படு செயல் தலைவர் (Private Secretary) இருந்தார் என்பதைச் சில பட்டயங்கள் வாயிலாக அறிகிறோம். பல்லவக்கருவூலத்தைப் பராமரிப்பதற்காகத் தனிப்பட்ட அதிகாரிகள் அமர்த்தப் பெற்றனர். அவர்களுள் கோச அத்தியக்ஷகர்கள், மாணிக்கப் பண்டாரம் காப்பான், கொடுக்கப் பிள்ளை என்பவர்கள் முக்கியமானவர்கள்.

### நீதி முறை :

நீதி வழங்கும் துறைக்கு அரசரே தலைமை வகித்தார். கிராமங்கள், மாவட்டங்கள் ஆகியவற்றில் செயல்பட்டு வந்த மன்றங்கள் அவர் ஆணைக்கு உட்பட்டிருந்தன. பெருநகரங்களில் இயங்கிவந்த அறங்கூறும் அவைகளை 'அதிகரணங்கள்' என்று அழைத்து வந்தனர். சில வேளைகளில் இந்நீதி மன்றங்கள் நல்ல முறையில் நீதி வழங்கவில்லை என்பதும் தெரிய வருகிறது. இவையன்றி, அரசரின் நேர் மேற்பார்வையில் 'தருமாசனம்' என்ற பெயருடைய நீதிமன்றமும் செயல்பட்டு வந்தது. 'அதிகரணம்', குற்ற வழக்குகளை விசாரிக்கும் மன்றம் எனவும், 'தருமாசனம்' என்பது பிற வழக்குகளை விசாரிக்கும் மன்றம் எனவும் சிலர் கூறுகின்றனர். பூசல்களை ஆட்சி, ஆவணம், அயலார் காட்சி என்பவற்றைக்கொண்டு தீர்த்து வைத்தனர்.

### வரி வாங்கிய முறை :

பல்லவர்கள் பல திறப்பட்ட வரிகளைப் பெற்று வந்தனர். அவற்றுள் முதன்மை வாய்ந்தது நில வரியாகும். வரி வாங்குவதற்காக நிலத்தைச் செவ்வையாக அளந்தனர். கிராம அதிகாரிகளும், மாவட்ட அதிகாரிகளும் நில உரிமைகளைப்பற்றிய குறிப்புக்கள் அனைத்தையும் எழுதி வைத்திருந்தனர். சில நிலங்கள் வரி செலுத்துவதினின்றும் விலக்குப் பெற்றிருந்தன. விளைச்சலில் அரசர் பங்கு எவ்வளவு என்பதை நாம் திட்டவட்டமாகக் கூற இயலாது. இஃதன்றிப் பல்வேறு வகையான வரிகள் வாங்கப் பெற்றன. கள் இறக்குபவர், கொல்லர், வண்ணுர், ஆடை நெய்பவர், ஆடை விற்பவர், நூல் நூற்பவர், வலைஞர், ஓடக்காரர், தரகர், செக்கார், போன்ற பல தொழிலாளர்களிடமிருந்து அரசினர் தொழில் வரி வாங்கினர். திருமணக் காலத்தில் அரசருக்கு மக்கள் வரி செலுத்தி வந்தனர். நீதி மன்றங்கள் விதித்த தண்டத் தொகை அரசருடைய வருவாய்களுள் ஒன்ருக இருந்தது. மேலும், அரசினர் உப்பு, சர்க்கரை போன்ற பொருள்களை உற்பத்தி செய்யும் முழு உரிமையைப் பெற்றிருந்தனர். இதனுல் அவர்களுக்குப் பெருத்த ஊதியம் கிடைத்தது. அறுவடைக் காலங்களில் அரசியல் திறையாக நெல்லைப் பெற வந்த அதிகாரிகட்கு ஊரார் உணவளித்தல் வழக்கம். அதற்கென்று ஊராரிடம் பெற்று வந்த தொகை ஒருவகை வரியாகக் கருதப் பெற்றது.

### படை :

பல்லவர்கள், போர்கள் பல புரிய வேண்டிய நிலை ஏற்பட்டதன் விளைவாக வலிமை பொருந்திய பெரும்படையொன்றை அமைத்திருந்தனர். அப்படை யானை, குதிரை, காலாள் ஆகிய பிரிவுகளை உட்கொண்டிருந்தது. போர் யானைகளை

வைத்துப் பராமரிப்பதில் மிகுந்த அக்கறை காட்டி வந்தனர் என்பது வைகுந்தப் பெருமாள் கோவிலில் காணப் பெறும் சிற்பங்கள் வாயிலாக அறியலாம். பல்லவர் கடற்படையும் போர்த்திறனில் இளைத்த தன்று.

**ஒழுங்கான ஆட்சி :**

ஒழுங்கான ஆட்சி ஏற்படுத்துவதற்கெனப் பல்லவப் பேரரசு பல மண்டலங்களாகப் பிரிக்கப் பெற்றிருந்தது. ஒவ்வொரு மண்டலமும் பல கோட்டங்களாகவும், கோட்டம் பல நாடுகளாகவும் பகுக்கப் பெற்றது. கிராமங்கள் அடிப்படை ஆட்சிமுறைக் கூறுகளாக விளங்கின. நாடுகளில் நாட்டார் என்ற சபையும், கிராமங்களில் 'ஊர்' என்ற சபையும் ஏற்படுத்தப் பெற்றன. ஊரார் ஆட்சி முறை எப்படி இருந்தது என்பதைத் தெளிவாக அறிதற்குரிய சான்றுகள் நமக்குக் கிடைக்கவில்லை. கிராம அவைகளைச் சபை, மகாசபை என்றும் அழைத்தனர். அவையுறுப்பினர்கள், பெருமக்கள் என்று அழைக்கப் பெற்றனர். ஒவ்வொரு சபையும் நியாயம் வழங்குதல், நீர்ப் பாசனம், உழவு, வரிதண்டுதல், கோவில் திருப்பணி போன்ற பல வேலைகளை நிறைவேற்றி வந்தது. ஊர் ஆட்சியைத் திறம்பட நடத்துவதற்காக அவை பல உட்பிரிவுகளாகப் பிரிக்கப் பெற்றது. அவை வாரியம் என்று அழைக்கப்பட்டன. ஒவ்வொரு வாரியமும் ஒரு குறிப்பிட்ட பணியினை மேற்கொண்டது. இவையன்றி, ஆளுங்கணத்தார் என்ற பெயருடன்கூடிய சிறு பிரிவுகள் கிராமங்களில் செயல்பட்டு வந்தன. இவையாவும் அரசரின் பிரதிநிதியாக இருந்து ஊர் அவையின் வேலையைக் கண்காணித்து வந்தன. அமிர்தகணத்தார் என்பவர் கோவில் பணிகளைக் கவனித்து வந்தனர். நகரங்களில்கூட இத்தகைய அவைகள் செயல்பட்டு வந்தனவாக நாம் அறிகிறோம்.

பயிர்த்தொழில் அக்கால மக்களது பொருளாதார வாழ்வில் முக்கியமான பங்கு பெற்றிருந்தது. அத்தொழிற் பெருக்கத்திற்காகப் பல்லவர்கள் பல ஏரிகளையும், கிணறுகளையும் வெட்டினர்கள். பாலாறு, காவிரி முதலிய ஆறுகளிலிருந்து நீரைக் கொண்டுசெல்லப் பல கால்வாய்கள் இருந்தன. இவற்றைக் கவனித்து வேண்டிய திருத்தங்களை ஏரிவாரியப் பெருமக்கள் செய்து வந்தனர். தென்னை, பனை, கமுகு ஆகிய மரங்களைப் பயிரிட்டு வந்தனர். கிராமங்கள்தோறும் பல வகையான கைத்தொழில்களும் நடைபெற்று வந்தன. உள்நாட்டு வியாபாரமும், அயல் நாட்டு வியாபாரமும் செழிப்புற்று இருந்தன. மாமல்லபுரம் சிறந்த துறைமுகமாக இக்காலத்தில் விளங்கியது. விவசாயம், தொழில், வாணிகம் ஆகியவை வளர்ச்சியுற்றிருந்த போதிலும், நாட்டில் அவ்வப் பொழுது பஞ்சங்கள் ஏற்பட்டன. பல்லவர்கள் பஞ்சவாரியம் ஏற்படுத்தி இயன்றவரை குடிமக்களுக்குத் துன்பம் உண்டாகாமற் காத்து வந்தனர்.

**சமயம் :**

பல்லவ காலத்து மக்கள் சைவம், வைணவம், பௌத்தம், சமணம் ஆகிய மதங்களைப் பின்பற்றி வந்தனர். இடைக்காலப் பல்லவர்கள் காலத்தில் சமண மதம் தழைத்தோங்கி இருந்தது. ஆனல், பிற்காலப் பல்லவர் காலத்தில் மகேந்திரவர்மன் சமண மதத்தைத் துறந்து சைவம் சார்ந்தமை, சைவ, வைணவ சமயத் தலைவர்கள் தோற்றம் ஆகிய நிகழ்ச்சிகள் பௌத்த, சமண மதங்கள் அழிவுறக் காரணமாயிருந்தன. ஆயினும் பௌத்தர்களும், சமணர்களும் தொடர்ந்து இருந்து வந்தனர். பல்லவர் காலத்தில் மக்களது சமய வாழ்க்கை கோவில்களுடன் பிணைக்கப் பெற்று இருந்தது. அதன் காரணமாகப் பல கற்றளிகள் எழுப்பப் பெற்றன. பல்லவர்கள் கற்றளிகளை உண்டாக்குவதற்குப் பெரும்பாடு பட்டனர். பௌத்த மடங்களும், சமண மடங்களும் ஆங்காங்கே ஏற்படுத்தப் பெற்றிருந்தன.

**இலக்கியம் :**

பல்லவர் காலம் சமயத்துறையில் சிறப்புற்று விளங்கியதுபோல், இலக்கியத்துறையிலும் சிறந்து விளங்கியது. வடமொழி வளர்ச்சிக்குப் பல்லவர்கள் பெரிதும் உதவினர்கள். மகேந்திரவர்மன் எழுதிய மத்தவிலாசப் பிரஹசனம், குடுமியாமலையில் காணப்பெறும் கல்வெட்டு ஆகியவை, வடமொழி இவர்கள் காலத்தில் அடைந்த மேன்மையைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. வடமொழிப் புலவர்கள் பாரவி, தண்டி ஆகியோர் பல்லவர்களால் போற்றப் பெற்றனர். நாடக மேடையில் நடித்துக் காட்டுவதற்கேற்றவாறு பாசருடைய நாடகங்கள் இக்காலத்தில்தான் சுருக்கியமைக்கப் பெற்றனவாகக் கூறப்படுகிறது. தமிழ் இலக்கியமும் இக்காலத்தில் வளர்ச்சியுற்றது. நாயன்மார்களும், ஆழ்வார்களும் பாடிய சமயப் பாடல்களும், சுந்தரரின் திருத்தொண்டத் தொகையும், நந்திக்கலம்பகம் முதலிய தமிழ் நூல்களும் இக்காலத்தனவாகும்.

**கலைகள்-இசை :**

பல்லவர்கள் பற்பல கலைகளைப் போற்றி வளர்த்து வந்தனர். இவர்கள் காலத்தில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் பல்வகைப் பண்களுக்கிணங்கப் பாடி மக்களைப் பரவசப்படுத்தினர். கோவில்களில் தேவாரப் பதிகங்களைப் பண்ணுடன் பாடும் வழக்கம் இக்காலத்திலேதான் தொடங்கப் பெற்றது. மகேந்திரவர்மன் தாள வகைகள் ஐந்தனுள் 'சங்கீர்ண' தாளத்தை அமைத்ததாகக் கருதப்படுகிறது. இராசசிம்மரும் இசையில் வல்லவர் என்பதை அவர் மேற்கொண்ட பட்டப் பெயர்கள் வாயிலாக அறிகிறோம். பல்லவர் காலத்தின் இசையைப்பற்றிய கல்வெட்டுக்கள் குடுமியா மலையிலும், திருமயத்திலும் காணக் கிடக்கின்றன.

**நடனம்-ஓவியம்-சிற்பம் :**

பல்லவர்கள் நடனக் கலையையும் போற்றி வளர்த்தனர். சித்தன்னவாசல் ஓவியங்கள் நடனக் கலை எய்திய மேம்பாட்டினையும் நடனக் கலைக்கும் ஓவியக் கலைக்கும் இடையே ஏற்பட்டிருந்த நெருங்கிய உறவினையும் எடுத்துக் காட்டுகின்றன.

மேலும், பல்லவர்கள் பழங்காலத்திலிருந்து வந்த கூத்துக்களைவிடச் சாத்திர முறைப்படி ஆடும் நடனத்தையே போற்றினர் என்பதும் விளங்கு கிறது. ஆண்களும், பெண்களும் சேர்ந்து கூட்டு நடனமாடினர் என்பதனை வைகுந்தப் பெருமாள் கோவிலில் காணப்பெறும் சிற்பங்கள் வாயிலாக அறிகிறோம். கோவில்களிலும் நடனக் கலைக்கு இடமளிக்கப் பெற்றிருந்தது. ஏனெனில், பல்லவர்கள் நடனக் கலையினைத் தெய்விகக் கலையாகவே எண்ணினார்கள். ஆங்காங்கே நடனக்கலையின் திறனை விளக்கும் வகையில் சிற்பங்களையும், ஓவியங்களையும் தீட்டி நடனக் கலையினைப் பாமர மக்களின் கலையாக மாற்றுவதற்குப் பல்லவர்கள் பெருந்துணை செய்துள்ளார்கள். பல்லவர் கால ஓவியச் சிறப்பினை நன்கு எடுத்துக் காட்டத்தக்க இடம், சித்தன்னவாசல் ஒன்றேயாகும். அவ்வாறே அக்காலச் சிற்பக் கலையின் சிறப்பினைக் காட்டத்தக்க இடம் மாமல்லபுரம் ஒன்றேயாகும். மாமல்லபுரத்தைப் பல்லவர் சிற்பக்கூடம் என்று கூறுவது மிகையாகாது.

பல்லவர் காலம் மற்றொரு வகையிலும் மேன்மையுற்று விளங்கியது. இவர்கள் காலத்தில்தான் கற்றளிகள் தமிழகத்தில் எழுந்தன. மகேந்திரவர்மன் காலத்தில், குகைக் கோவில்கள் குடையப் பெற்றன. நரசிம்மவர்மன் காலத்தில் தனிப் பாறைகளிலும், ஒற்றைக்கற்களிலும் கோவில்கள் செதுக்கி வடிக்கப் பெற்றன. இராசசிம்மன் காலத்தில் மாமல்லபுரக் கரையோரத்தில் எழுப்பப் பெற்ற கோவிலின் வளர்ச்சியே, தஞ்சைக் கோவில் விமானமாகும். இதனின்றும் பல்லவர்கள் கட்டடக் கலைக்கு ஆற்றிய தொண்டை நன்கு அறியலாம்.

**கல்வி:**

இசை, நடனம், சமயம், இலக்கியம், ஓவியம், சிற்பம், கட்டடக் கலை ஆகியவற்றில் மக்கள் சிறந்து விளங்குவதற்கு ஏற்ற கல்வி அக்காலத்தில் வளர்ச்சியுற்றிருக்க வேண்டும் என்பது திண்ணமாகும். பல்லவர் கோநகரான காஞ்சியிலும், சோளிங்கபுரம், பாகூர் போன்ற ஏனைய இடங்களிலும் கல்லூரிகள் அல்லது கடிகைகள் ஏற்படுத்தப் பெற்றிருந்தமைபற்றி நாம் பலவாறாக அறிகிறோம். கோவில்களும், சைவ, வைணவ, பௌத்த, சமண மடங்களும் கல்விக்கூடங்களாக விளங்கின.

**முடிவுரை :**

இதுகாறும் கூறியவற்றால் பல்லவர் காலம் தமிழக வரலாற்றிலே மிக முதன்மையான ஒரு காலம் என்பதும், தமிழர்களுடைய பண்பாடு நன்கு வளர்ச்சியுறத் தொடங்கிய காலம் என்பதும் நன்கு புலப்படும்.



அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந்தாமனார், எம். ஏ.
சென்னை




**முன்னுரை :**

தொன்மை மிக்க தமிழக வரலாற்றில் நாயக்கர் காலம் கி.பி. 16-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்து 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரைக்கும் இருந்த அரசியல் நிலையைப் படம் பிடித்துக் காட்டுவது; மூன்று முசுலீம் படையெடுப்புகளால் அழியும் நிலையிலிருந்த சைவ, வைணவ சமயங்களையும், தமிழகப் பண்பாட்டையும் விழிப்பாக இருந்து வழிவழி அவை வளர்ந்துவர நாயக்கர்கள் எடுத்து வந்த அரிய முயற்சியைத் தெரிவிப்பது; தமிழகத்தில் வர முயன்று கொண்டிருந்த முசுலீம் படையெடுப்புகளைத் தடை செய்ய நாயக்கர்கள் முயன்ற போராட்டைத்தையும் காண்பிப்பது; விசயநகரப் பேரரசின் ஆட்சியோடு பின்னிப் பிணைந்ததையும் பின்பு விடுதலை பெற்று விளங்கியதையும் புலப்படுத்துவது. தமிழகத்தில் இந்த நாயக்கர் காலம் சோழர் காலத்தைப் போலப் பொற்காலமாக இல்லாவிடினும், நற்காலமாக இருந்ததை ஒருவரும் மறுக்க முடியாது.

**நாயக்கர் - சொல் விளக்கம் :**

நாயக்கர் என்னும் சொல் நாயக என்னும் சொல்லின் திரிபாகும். இச்சொல் தலைவன் என்னும் பொருளில் வழங்கி வந்து பின்பு படைத் தலைவனைக் குறிக்கலாயிற்று. விசயநகரப் பேரரசில் அதன் பகுதிகளாக இருந்த மதுரை, தஞ்சை, செஞ்சி, வேலூர் இவற்றை அரசப் பிரதிநிதியாக ஆண்டு, பின்னர் முழுவுரிமை வேந்தர்களாகிவிட்டவர்களைக் குறிப்பதாயிற்று. பிற்காலத்தில் இச்சொல் சாதிப்பெயராக வழங்கத் தொடங்கிவிட்டது. படையாட்சிகளுக்குச் சாதிப் பட்டமாக வழங்கும் நாயகர் என்னும் சொல்லினும் நாயக்கர் எனுஞ்சொல் வேறுபட்டது. நாயக்கர் என்னும் சொல் இக்காலத்தில் மருவி நாய்க்கர் என்றும் வழங்கப்படுகிறது. நாயக்கர்கள் வடுகர்கள்; நாயகர்கள் தமிழர்கள்.

**தோற்றமும் வளர்ச்சியும் :**

தமிழகத்தில் நாயக்கர் ஆட்சி எப்பொழுது தோன்றியது என்பதை அறிவது இன்றியமையாதது. பாண்டிய வீரப்பரம்பரை விழுந்து எழுந்து வாழ்ந்து கி.பி. 1310-இல் ஏற்பட்ட மாலிக்காபூர் படையெடுப்பாலும், 1317-இல் வந்த குசுருகான் படையெடுப்பாலும், 1324-இல் நேர்ந்த உலூகான் (மகமதுபின் துக்ளக்) படையெடுப்பாலும் மறைந்து தென்காசிப் பகுதிக்குப் போய் விட்டது. மதுரை நாட்டில் கொடுமை மிக்க சுல்தான் ஆட்சி ஏறக்குறைய 48 ஆண்டுகள் நடைபெற்றது. இந்து சமயத்தைப் பாதுகாக்கவும், முசுலீம் படையெடுப்பைத் தென்னகத்தில் தடுத்து நிறுத்துவதற்கும் கி.பி. 1336-இல் துங்கபத்திரை

ஆற்றின் தென்கரையில் ஆனைக்குந்திக்கு எதிரில் தோன்றி வளர்ந்து விரிவடைந்திருந்த விசய நகரத்தை ஆட்சி செய்த புக்கர் காலத்தில், இவருக்குப் புதல்வரான இரண்டாம் கம்பணர் முசுலீம் ஆதிக்கத்தை ஒழிக்கக் கருதித் தெற்கே படையெடுத்து வந்து தொண்டை நாட்டில் புகுந்து ஆங்கே இருந்த இராச கம்பீரராச்சியத்தை ஆண்டு கொண்டிருந்த இராச நாராயண சம்புவ ராயனை 1363 நவம்பர் திங்களில் வென்று, அவனை விசயநகரப் பேரரசுக்கு அடங்கி ஆளுமாறு செய்தார்; பின்பு அச்சம்புவராயனது உதவியோடு மதுரையை நோக்கிப் படையெடுத்துச் சென்று அங்கு மகமது துக்ளக்கின் பேரரசினது 23 மாநிலங்களுள் ஒன்றாய்க் காவிரியாற்றின் தென் கரையிலிருந்து இராமேசுவரம் வரை பரவியிருந்த மதுரை நாட்டில் ஏறக்குறைய 48 ஆண்டுகளாகக் கொடுங்கோல் ஆட்சி புரிந்து கொண்டிருந்த சுல் தான் ஆட்சியை 1371-இல் ஒழித்துக் கட்டினார். 1378 வரையிலும் மதுரை நாட்டின் ஒரு பகுதி யில் முசுலீம் ஆட்சி நடைபெற்றது. சுல்தான் ஆட்சி 1378-இல் சிக்கந்தர் என்ற சுல்தானோடு முடிவுற்றது.

முதலில், தொண்டை நாடும், பின்பு கடலூரும், சிதம்பரமும், மதுரைநாடும் விசயநகரப் பேரரசில் இணைந்தன. கொங்குநாடு இதற்கு முன்னரே இணைக்கப்பட்டது. இறுதியாகத் தஞ்சை நாடும் விசயநகரப் பேரரசில் புகுந்தது. ஆகத் தமிழ் நாடு முழுதும் வடுகர்களான விசயநகர வேந்தர் களின் ஆட்சியில், விசுவநாதர் நேரடி ஆட்சியைத் தொடங்குவதற்கு முன்பு, ஏறக்குறைய 159 ஆண்டுகள் இருந்தது என்பது அறியத்தக்கது.

கிருட்டிண தேவராயர் காலத்தில் விசுவநாத நாயக்கரின் தந்தையாரான நாகம நாயக்கர் மதுரை நாட்டுக்கு மகாமண்டலேசுவரராய் (Viceroy) இருந்தார். இவர் தமது பெருவேந்தரின் கட்டளையை மதுரை நாட்டில் நிறைவேற்றமறுத்து விட்டதாலோ, இராயருக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ததாலோ, கிருட்டிணதேவர் இவரைப் பதவி யிலிருந்து நீக்கிவிட்டுத் தம்முடைய அன்புக்கும், நம்பிக்கைக்கும் தகுந்தவராயிருந்த விசுவநாதரை அந்நாட்டுக்கு 'மண்டலேசுவர'ராக (Governor) நியமித்தார். விசுவநாதர் 1529-இல் மதுரைக்கு வந்து அந்நகரைத் தலைமைப் பீடமாகக்கொண்டு, அருந்திறல் மிக்க பெருவீரரான அரியநாத முதலியாரைத் தளவாயாக ஏற்று, மதுரை நாட்டை 1564 வரை 35 ஆண்டுகள் மாட்சியுறப் பெருவேந்தருக்கு அடங்கி ஆட்சி செய்தார். இவர் காலத்தில் மதுரை நாடு என்பது இன்றைய திருச்சி, மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி, சேலம், கோயம்புத்தூர் மாவட் டங்கள் அடங்கியதாய் இருந்தது.

ஆளுநர் வடுகர்; ஆளப்பட்டவர் தமிழர். பாண்டியர்கள் ஆண்ட பாண்டிய மண்டலத்தில் சிலர் பாண்டியர் ஆட்சியை மறுபடியும் நிறுவக் கலகம் நடத்தினர்கள். இந்நிலையில், மதுரையில் நல்லாட்சியையும் வல்லாட்சியையும் நிறுவ விரும்பி விசயநகரக் கண்காணிப்பில் ஏற்படுத்தியிருந்த அமர நாயக முறையையும், காகதீய நாட்டில் இரண்டாம் பிரதாபருத்திரன் (1296-1322) காலத்தில் இருந்த 77 பிரிவு முறையையும் தழுவி மதுரை நாட்டில் விசுவநாதரும், தளவாய் அரிய நாதரும் சேர்ந்து 72 பாளையப்பட்டு முறையை வகுத்து வடுகரையும், கன்னடரையும், தமிழர்களை யும் சேர்த்து நாட்டில் அமைதியை நிலைநாட் டினர். பாண்டியர் பரம்பரையைச் சேர்ந்தவர் களும் சிற்றரசர்களாயிருந்தவர்களும் பாளையப் பட்டினராஞர்கள். பாளையக்காரர்கள் தாங்கள் ஆளும் பாளையங்களிலிருந்து கிடைக்கும் வருவா யில் மூன்றில் ஒரு பகுதியை மதுரை நாயக்கருக்கு வரியாகச் செலுத்த வேண்டும்; மற்றொரு பகுதி யைப் படைவீரர்களுக்குச் செலவிட்டு, இன்னொரு பகுதியைச் சொந்தச்செலவுக்கு எடுத்துக்கொண்டு, இவர்கள் தங்கள் பகுதியைப் பாதுகாத்து, மக்கள் வழக்குகளை விசாரித்து நீதிவழங்கி, போர்க்காலங் களில் மதுரை நாயக்கருக்குப் படைத்துணை புரிய வேண்டும். அரசியல், பொருளாதார, இராணுவ நோக்கங்களோடு ஏற்பட்ட இப்புத்தாட்சி முறை பெருமளவு நன்மை செய்தது என்பதில் ஐயமில்லை. இப்பாளையப்பட்டு முறை, ஆங்கில நாட்டுப் பழைய பீடல் முறையை (Feudal System) ஓரளவு ஒத்திருந்தது எனலாம். இம்முறையால் அமைதிக் கால ஆட்சியும், போர்க்காலப் படையாட்சியும் கலந்த நல்ல வல்லாட்சி ஏற்பட்டது.

விசுவநாதர் திருச்சிராப்பள்ளியில் இப்பொழு துள்ள தெப்பக் குளத்தை வெட்டுவித்தார்; தாயு மானர் கோயிலைச் செப்பனிட்டார்; காவிரியாற் றின் இருமருங்கிலும் இருந்த காடுகளை அழித்துச் சாலைகளை அமைத்துக் கள்ளர் தொல்லையை ஒழித் தார். திருவரங்கப் பெருங்கோயிலைச் சீர்திருத்தி, அக்கோயிலைச் சுற்றித் தெருக்களை அமைத்து. வீடுகளைக் கட்டி மக்களைக் குடியேற்றினர். இச் சீர்திருத்தங்களால் மதுரை நாட்டின் வட எல்லையாய் இருந்த திருச்சிராப்பள்ளியில் ஒழுங் கும், அமைதியும் ஏற்பட்டன. தென்பாண்டி நாட் டிலும் தாம்பிரபரணி ஆற்றின் இருமருங்கிலும் இருந்த காடுகள் அழிக்கப்பட்டுச் சாலைகள் போடப்பட்டன. நெல்லை நகரம் விரிவாக்கப் பெற் றது. அங்குள்ள நெல்லையப்பர் கோயிலும் பழுது பார்க்கப்பட்டது. நீர்ப்பாசன வசதிகளும் செய்யப் பட்டதால், பயிர்த்தொழில் வளர்ச்சியுற்றது. மதுரையிலும் விசுவநாதர் சீர்திருத்தங்கள் செய் தார். மதுரையில் பாழ்பட்டுக்கிடந்த மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலையும் விசுவநாதர் தம் கைப் பொருளைச் செலவிட்டுக் கட்டினர். அதிவீரராம பாண்டியர் (1564-1604) விசுவநாதருக்கு அடங் கித் தென்காசியை ஆண்டார்.

விசுவநாதருக்குப் பின் வந்த முதலாம் கிருட்டி ணப்பர் (1564-72) எட்டு ஆண்டுகள் ஆட்சி செய்தார்; தும்பிச்சி நாயக்கர் செய்த கலகத்தை அடக்கினர். இதனல், பாளையப்பட்டுக்காரர்கள் நாட்டில் கலகம் செய்ய அஞ்சினர்கள். இவர் நெல்லைக்கு மேற்கே, தம் பெயரால் கிருட்டிண புரத்தை ஏற்படுத்தி, அங்குத் திருவேங்கடநாதர்

கோயிலைக் கட்டினர்; மதுரை மீனுட்சியம்மன் கோயிலிலும் திருப்பணிகள் செய்தார்.

ஆமதுநகர், கோல்கொண்டா, பீரார், பீடார் ஆகிய நான்கு நாடுகளின் சுல்தான்கள் ஒன்று சேர்ந்து 1565-இல் விசயநகரப் பேரரசராயிருந்த சதாசிவராயரோடு ராட்சசி - தங்கடியில் போர் தொடுத்துத் தாக்கியபோது, முதலாம் கிருட்டி ணப்பர் பேரரசுக்குத் துணைபுரியப் பெரும்படை யோடு தளவாய் அரியநாதரை அங்கே அனுப்பி வைத்தார். இப்போரில் விசயநகரம் தோல்வியுற்று அழிந்தது. ஆனுல், விசயநகரப் பேரரசு முற்றும் மடியவில்லை. சதாசிவராயர் தெற்கே வந்து பெனு கொண்டாவைக் கோநகராகக்கொண்டு சிதைந்த விசயநகரப் பேரரசை ஆட்சி புரியலானுர். சில காலமான பின்பு அமைச்சராயிருந்த திருமலை என்பவர் சதாசிவராயரைத் தள்ளிவிட்டுச் சிதைந்த பேரரசுக்கு மன்னரானுர். இந்நிலையில் தஞ்சை நாயக்கரும், செஞ்சி நாயக்கரும் சிதைந்த விசயநகரப் பேரரசின் ஆதிக்கத்தை உதறித்தள்ளி முழுவுரிமை வேந்தர்களாகி விட்டார்கள். ஆனுல், இக் கிருட்டிணப்பர் அவ்வாறு செய்யாமல் திரு மலைக்கு உண்மையாயிருந்து திறை செலுத்தி வந்தார்.

இவருக்குப்பின் வந்த வீரப்பர் (1572-'95) ஏறக்குறைய 23 ஆண்டுகள் ஆட்சியாளராய் இருந்தார்; வாணுதிராயன் கலகத்தை அடக்கி ஞர்; தில்லைக்கூத்தப் பெருமான் கோயிலிலும் மதுரை மீனுட்சியம்மன் ஆலயத்திலும் திருப்பணி கள் நடத்தினுர்; நீதிமுறை வழுவாது ஆட்சி புரிந்தார். இவர் காலத்திற்றுன் மதுரை நாட்டில் ஏசுகழகச் சமயத்தொண்டர்கள், 1592-இல் பெர் ஞண்டஸ் என்ற போர்த்துகீசியப் பாதிரியார் தலைமையில் மதுரைச் சமயப்பணிக் கழகத்தை நிறுவி, நாயக்கரிடம் இசைவுபெற்று மதுரையில் மாதாகோவில் ஒன்று கட்டிக் குருமார் குழுவை ஏற்படுத்திப் பதினுன்கு ஆண்டுகள் சமயப் பிரச்சாரம் செய்து உயர்குல இந்துக்களைக் கிறித் தவ சமயத்தில் சேர்ப்பதற்கு முயற்சி செய்து தோல்வியடைந்தார்கள். நாட்டில் அமைதி குலையாமல் இருந்தது.

அடுத்து ஆட்சியை ஏற்ற இரண்டாம் கிருட்டி ணப்ப நாயக்கர் (1595-1601) 5 ஆண்டுகளும் 9 திங்களுமே மதுரை நாட்டை ஆட்சி புரிந்தார். இவரும் சிதைந்த விசயநகரப் பேரரசுக்குத் தலைவராயிருந்த இரண்டாம் வேங்கடருக்கு அடங் கியே நாட்டை ஆண்டார். விசுவநாதர், முதலாம் கிருட்டிணப்பர், வீரப்பர், இரண்டாம் கிருட்டி ணப்பர் ஆகிய நால்வருக்கும் தளவாயாக இருந்து, பேருதவி புரிந்து வந்த அரியநாதர் முதுமையால் காலமானது இவர் காலத்தில் நடந்த குறிப்பிடத் தக்க நிகழ்ச்சியாகும்.

இரண்டாம் கிருட்டிணப்பருக்குப்பின் ஆட்சிக்கு வந்தவர் முத்துக் கிருட்டிணப்ப நாயக்கர் (1601-1609) ஆவார். இவர் 9 ஆண்டுகள் மதுரை நாட்டை ஆண்டார். தளவாய் அரியநாதர் உயிரோடிருந்த வரைக்கும் அடங்கி அமைதியாய் இருந்த இராமநாதபுரச் சீமையில், அவர் இறந் ததும் மறவர்கள் கலகம் செய்யத் தொடங்கினுர் கள். கிழக்குக் கடற்கரை ஓரங்களில் வாணிகம் செய்துவந்த போர்த்துகீசியர்கள் எந்தச் சிற்றரசர் இசைவும் பெருது பரதவர்களைக் கிறித்தவர் களாக்கியது மட்டுமல்லாமல் அப்பரதவர்களைத் தங்களுக்கு அடங்கியவர்களாகக்கொண்டு அவர் களிடம் வரி வாங்கியும் முத்து வாணிகத்தின் பயனை அனுபவித்தும் வந்தார்கள். முத்துக் கிருட்டி ணப்பர் இராமநாதபுரத்தில் கலகத்தை அடக்கி அமைதி நிலவ ஏற்பாடு செய்ததுமல்லாது போர்த்துகீசியரது அரசியல் செல்வாக்கையும் அடக்கி வைத்தார். இவர் காலத்தில் ராபர்ட்-டி-நொபிலி என்ற உரோமன் கத்தோலிக்கப் பாதிரி யார் இத்தாலி நாட்டிலிருந்து மதுரைக்கு வந்து உயர்குடி இந்துக்கள் சிலரைக் கிறித்தவர்களாக் கினுர். முத்துக்கிருட்டிணப்பர் இதனை வெறுக்கவு மில்லை; எதிர்க்கவுமில்லை. எனவே, இவர் காலத் தில் கிறித்தவ சமயம் வெற்றிப் பாதையை நோக்கி நடக்கத் தொடங்கியது. இவரும் விசயநகரப் பேரரசர் இரண்டாம் வேங்கடருக்குத் திறைப் பணம் செலுத்தி அடங்கியே ஆண்டு வந்தார். இவரும் கோயில்களுக்குக் கோபுரங்கள் கட்டுவித் தும், குளங்கள் வெட்டுவித்தும், நகரங்களை அமைத் தும் மக்களது இன்பவாழ்விற்கு வழிகோலினுர்.

இவருக்குப்பின் வந்த முதலாம் முத்துவீரப்பர் (1609-1623) 14 ஆண்டுகள் ஆட்சி புரிந்தார்; சிதைந்த விசயநகரப் பேரரசின் ஆதிக்கத்தைப் புறக்கணித்து முழுவுரிமை மன்னராக வித்திட் டார். இவரே மதுரை தலைநகராய் இருந்ததை மாற்றித் திருச்சிராப்பள்ளியைக் கோநகராக் கினுர்.

முதலாம் முத்து வீரப்பர் சந்ததியின்றி இறந் தமையால், இவருக்குத் தம்பியான திருமலை நாயக்கர் (1623-'59) மதுரை நாட்டின் ஆட்சியை ஏற்று என்றும் தமிழகம் மறவாது நினைக்குமாறு மதுரை மாநகரை விழாநகரமாகவும், கலைநகரமாக வும் செய்து மறைந்தார். இவர் திருச்சிராப்பள்ளி யிலிருந்த தலைநகரைத் திரும்பவும் மதுரைக்கு மாற்றினுர். இவர் ஐந்து பெரும் போர்களை நடத்தி வெற்றி கண்டார். மைசூர் நடத்திய முதல் படையெடுப்பில் வெற்றியுற்றுர்; திருவிதாங் கூர் வழக்கமாகக் கட்ட வேண்டிய திறைப் பணத்தைக் கட்டாமையால் அதனேடு போர் புரிந்து வாகை சூடினுர்; இராமநாதபுரத்தில் சேதுபதியுடன் போர் புரிந்து திறை செலுத்தி அடங்கியாட்சி புரியுமாறு செய்தார்; மறுமுறை யும், மைசூர் வேந்தர் மதுரைமீது படையெடுத்து வந்தபோது அவனை வெற்றி கண்டார்; தமக்கு எந்த வகையிலும் உதவாதிருந்த விசயநகரப் பெருவேந்தனுன மூன்றும் ஸ்ரீரங்கன் தம்மைத் திறைப் பணம் கட்ட வற்புறுத்தவே, அவனேடு போராடி வாகை சூடி முழுவுரிமை மன்னரானுர். இப்படிப் போரில் ஈடுபட்டிருந்தும் திருமலை மன் னர் கலையார்வத்தாலும், இறைப்பற்றுலும் கலைச் சிற்பங்கள் மிகுந்த புது மண்டபத்தையும், தென் னகத்துத் தாஜ்மகால் என்று பாராட்டப்படும் மகாலையும் கட்டியதோடு, மதுரைக் கோயிலிலும்

கள்ளழகர் ஆலயத்திலும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயிலிலும் திருவரங்கப் பெருமாள் பெருங் கோயிலிலும் பற்பல திருப்பணிகள் செய்து முடித்தார்; தெப்பக்குளத்தை மதுரைக் கிழக்குப் பகுதியில் வெட்டுவித்து, அழகான மைய மண்டபத்தை அமைக்கச் செய்து, தாம் பிறந்த நாளான தைப்பூசத்தன்று அதில் தெப்பத் திருவிழா நடத்த ஏற்பாடு செய்தார்; அறச்சாலைகளை அமைத்து ஆதரவற்றவர்களுக்கு உணவளித்தார்; நெடுஞ்சாலைகளை அமைத்தும், கண்மாய்களை வெட்டுவித்தும், பாசன வசதிகளைச் செய்தும் மக்களுக்கு நன்மை செய்தார். இறுதியில் இவர் தமது 75-ஆவது வயதில் கி.பி. 1659 பிப்ரவரியில் இறவாப் புகழை நிறுவி மறைந்தார். இவரால் மதுரையம்பதியும் தென் தமிழ் நாடும் பெருமையடைந்தன. இவருக்கு ஆண்டுக்கு 91 இலட்சம் ரூபாய் வருவாய் வந்தது.

திருமலை நாயக்கருக்குப்பின் வந்தவர்கள் முழுவுரிமை மன்னர்களாகவே விளங்கினர்கள். அவருக்குப்பின் வந்த இரண்டாம் முத்து வீரப்பர் (1659) நான்கு திங்களே ஆண்டாலும், முசுலீம் படையெடுப்பைத் தடுத்து நிறுத்தி வீரவாழ்வு வாழ்ந்து மாண்டார்.

அடுத்து மதுரை நாட்டு மன்னராக வந்த சொக்கநாத நாயக்கர் (1659-'82) 23 ஆண்டுகள் ஆட்சி செய்து, தமது செருக்காலும், பிடிவாதப் பண்பாலும், நிலையற்ற வெளிநாட்டுக் கொள்கையாலும், திறமையற்ற செயலாலும் நாட்டை அழிவுப் பாதையில் புகுத்திவிட்டார். நாட்டில் புரையேறிவிட்டது. சில பகுதிகள் பகைவர் வசமாய்விட்டன. இவர் தமக்குப் பெண்கொடுக்க மறுத்த தஞ்சை நாயக்க மன்னர் விசயராகவரோடு போரிட்டு அவர் குடும்பத்தோடு மடியுமாறு செய்துவிட்டார். மீண்டும் திருச்சிராப்பள்ளியைக் கோநகராக்கினர். அரசி மீனுட்சி காலம் வரையிலும் திருச்சியே தலைநகராக அமைந்து விட்டது.

சொக்கருக்குப் பின் வந்த மூன்றும் முத்து வீரப்பர் (1682-'89) 7 ஆண்டுகளே ஆட்சி புரிந்தாலும் தம் திறமையாலும், செம்மை நிறைந்த பண்பாலும் தம் தந்தையார் இழந்த பகுதிகளை மீட்டு, மதுரைப் பெருநாட்டை மேலும் அழியாதவாறு செய்தார்; தணியாத ஊக்கமும், தளராத துணிவும்கொண்டு விளங்கினர். இவர் ஒழுக்கத்தோடு ஒரே மனைவியுடன் வாழ்ந்தது குறிப்பிடத் தக்கது.

மூன்றும் முத்து வீரப்பர் இறந்தபோது அவர் மனைவி கருவுற்றிருந்தாள். குழந்தை பிறந்தபின்பு அவர் மனைவி முத்தம்மாள் பன்னீர் குடித்து இறந்துவிட்டாள். குழந்தையை மதுரைக்கு அரசனுக்கிப் பாட்டி மங்கம்மாள் (1689-1706) அக்குழந்தையின் சார்பில் 17 ஆண்டுகள் மாட்சியுற ஆட்சி புரிந்தாள். இக்குழந்தையே மங்கம்மாளுக்குப்பின் ஆட்சியேற்ற விசயரங்க சொக்கநாதர் என்றறிக. இவள் காலச் சூழ்நிலைக்கு ஏற்றவாறு நடந்துகொண்டு மக்கள் உள்ளம் குளிர நல்லாட்சி புரிந்தாள்.

விசயரங்க சொக்கநாதர் (1706-'32) பதினேழு வயதானதும் மங்கம்மாளிடமிருந்து நாட்டாட்சியை ஏற்று நடத்தினர். இவர் திருத்தல யாத்திரை புரிந்து கொண்டிருந்ததால், நாட்டாட்சி அவலநிலையடைந்தது.

விசயரங்க சொக்கநாதர் இறந்ததும் திறமையற்ற இவர் மனைவி அரசி மீனுட்சி (1732-'36) நாட்டை ஆட்சி செய்ய எண்ணிக் காலச் சூழ்நிலைக்கு இரையாகிச் சந்தாசாகிப்பின் வஞ்சனைக்கு ஆளாகி நாட்டை இழந்து, நஞ்சுண்டு காலனிடம் தஞ்சம் புகுந்தாள். மீனுட்சி அரசி மாண்டதோடு நாயக்கர் பரம்பரையும் மறைந்தது. விசயநகரப் பேரரசின் கடைசிச் சின்னமும் அழிந்தது.

இனித் தஞ்சையிலும், செஞ்சியிலும் இருந்த நாயக்கர்கள் ஆட்சியைக் குறித்துச் சிறிது தெரிந்து கொள்வோம். 1532-இல் தஞ்சையில் நாயக்கர் ஆட்சி தொடங்கியது. இதைத் தொடங்கி வைத்தவர் கேசவப்ப நாயக்கர். கிருட்டிணதேவராயருக்குப்பின் பேரரசரான அச்சுதராயர் தம் சகலர் செவ்வப்ப நாயக்கரை (1541-'80) தஞ்சைக்கு மண்டலேசுவரராக நியமித்தார். இவர் ராட்சசி-தங்கடிப் போருக்குப்பின் முழுவுரிமை மன்னராகி விட்டார்; என்றாலும் பேரரசின் வேந்தருக்கு நண்பராகவே இருந்து வந்தார். இவர் மகன் அச்சுதப்பன் (1580-1600) என்பவரும் பேரரசருக்குத் துணை புரிந்தார். இவர் மகன் இரகுநாத நாயக்கர் (1600-1634) தஞ்சையை ஆண்டார். இவ்வேந்தரின் மகனுன விசயராகவ நாயக்கர் (1633-'73) இறைப்பற்று மிக்கவர்; வைதிக வாழ்க்கை நடத்தியவர். இவர் நாளும் 12,000 பார்ப்பனர்களுக்கு உணவளித்த பின்னரே தாம் உண்ணும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். மதுரைச் சொக்கநாதருக்குப் பெண் கொடுக்க மறுத்ததால் அவர் நடத்திய போரில் ஈடுபட்டுக் குடும்பத்தை வெடிவைத்து அழித்துவிட்டுத் தாமும் மாண்ட பெருமை இவருக்குண்டு. சொக்கர் தஞ்சையை வென்ற பின்பு அதற்கு அழகிரி நாயக்கனை அரசப் பிரதிநிதியாக நியமித்தார். இவன் முழுவுரிமை மன்னனுக விரும்பிச் சொக்கரின் வெறுப்புக்கு ஆளானுன். இந்நிலையில் இவனிடம் இராயசமாயிருந்த வெங்கண்ணு என்ற சூழ்ச்சி வல்லான், எப்படியோ தப்பிப் பிழைத்து நாகப்பட்டினத்தில் ஒரு வணிகனிடம் வளர்ந்து வந்தவனும், விசயராகவனின் பேரனுமான செங்கமலதாசனைப் பிஜபூர் சுல்தான் உதவியுடன் தஞ்சைக்கு மன்னனுக்கினன். பிஜபூர் சுல்தானிடம் படைத்தலைவனுயிருந்த ஏகோஜியே அச்சுல்தான் கட்டளைப்படி தஞ்சையை வென்று செங்கமல தாசனுக்கு அளித்தவன். வெங்கண்ணுவுக்குச் செங்கமலதாசனிடமும் வெறுப்பு ஏற்பட்டது. அதனுல், இவ்வெங்கண்ணு ஏகோஜியைத் தஞ்சையைக் கவரும்படி தூண்டினன். ஏகோஜி தஞ்சையைக் கைப்பற்றிவிட்டான். இவனேடு தஞ்சை நாயக்கர் ஆட்சி 1676-இல் முடிவுற்றது.

செஞ்சியும் 1526-இலிருந்து விசயநகரப் பேரரசின் ஆட்சியில் இருந்தது. கிருட்டிணதேவராயர் காலத்தில் வையப்ப நாயக்கர், பேரரசுக்கு அடங்கிய நாயக்கர் ஆட்சியைச் செஞ்சியில் தொடங்கி வைத்தார். அடுத்து ஆட்சிக்கு வந்தவர் முதலாம் கிருட்டிணப்ப நாயக்கர். 1649-இல் பிஜபூர் படைத் தலைவன் செஞ்சியைக் கைப்பற்றிப் பிஜபூர் சுல்தானுக்கு உரியதாக்கினன்.

வேலூர் பிற்காலத்தில் மூன்றும் ஸ்ரீரங்கனுக்குத் தலைமைப் பீடமாக இருந்தது. பிஜபூர் சுல்தான் 1646-இல் வேலூரைக் கைப்பற்றினன். ஸ்ரீரங்கன் அங்கிருந்து மைசூருக்கு ஓடி அங்கே சில காலம் வாழ்ந்து மாண்டான்.

1646-இல் வேலூர் நாயக்கர் ஆட்சியும் 1649-இல் செஞ்சி நாயக்கர் ஆட்சியும் 1675-இல் தஞ்சை நாயக்கர் ஆட்சியும் மறைந்தன. எஞ்சியிருந்த மதுரை நாயக்கர் ஆட்சியும் 1736-இல் முடிவடைந்துவிட்டது. மதுரை நாட்டில் மட்டும் நாயக்கர் ஆட்சி 207 ஆண்டுகள் (1529-1736) நிலவியது.

## ஆட்சி முறை :

இனி நாயக்கர் ஆட்சி முறை, நாட்டு நிலை முதலியவற்றைக் காண்போம். நாயக்கர் விருப்பம் போல் ஆட்சி செய்வோராய் இருப்பினும், நாட்டு வழக்க பழக்கங்களுக்கும், மக்கள் கருத்துக்கும் மதிப்பளித்தே பெரும்பாலும் நல்லாட்சி செய்தார்கள். அமைச்சர் குழுவும் இவர்களுக்குத் துணை புரிந்தது. நாட்டில் ஆட்சி முறையில் தளவாய் மிகவும் முக்கியமானவர். தலைமையமைச்சர் பதவியும், படைத்தலைவர் பதவியும் சேர்ந்த பதவியே தளவாய்ப் பதவியாகும். பொதுவாக, உள்நாட்டு அமைதியை நிலைநாட்டும் பொறுப்பு, தளவாய்க்கு இருந்தது. அடுத்த முக்கியமான பதவி வகித்தவர் பிரதானி. இப்பதவி இக்கால நிதியமைச்சர் பதவியாகும். அடுத்த பதவி இராயசப் பதவி. இராயசம், அரசாங்க முதன்மைச் செயலாளர். அடுத்து முக்கியமான பதவி வகித்தவர்கள் அரசாங்கக் கணக்கரும், ஸ்தானுதிபதியும் ஆவார்கள். மாநில அதிகாரிகள் வேறு இருந்தார்கள். இவ்வதிகாரிகள் அனைவரும் தளவாய்க்குக் கட்டுப்பட்டவர்கள். மாநில அதிகாரிகளுக்குக்கீழ் பெரிய பாளையப்பட்டுக்காரர்கள் இருந்தார்கள். இவர்கள் சிறிய பாளையங்களைக் கண்காணித்து வந்தார்கள்.

சிற்றூர் ஆட்சி சோழர் காலத்து ஆட்சியிலிருந்து முற்றும் மாறிவிட்டது. மணியகாரர், கணக்கர், தலையாரி ஆகியவர்கள் நடத்திய ஆட்சி முறையே சிற்றூர்களில் ஏற்பட்டிருந்தது. ஊர்க் காவல் வேலை தலையாரிக்கு இருந்தது. பஞ்சாயத்தார் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளித்தனர். களவுக்குக் கடுமையான தண்டனை அளிக்கப்பட்டது.

நாயக்கர் காலத்தில் நிலவரி விளைவில் பாதியாக இருந்ததாம். நிலவரி முதலில் பணமாகவும், பண்டமாகவும் வாங்கப்பட்டது. பிற்காலத்தில் நிலவரி பணமாகவே வாங்கப்பட்டது. நாயக்கர் காலத்தில் அயல்நாட்டு வாணிகம் டச்சுக்காரர்களிடமும், போர்த்துகீசியரிடமும் இருந்தது. நாயக்கர்கள் வைணவர்களாயினும் பிற சமயங்களை வெறுக்காமல் சமயப் பெருநோக்குடையவர்களாகத் திகழ்ந்தார்களெனினும், சைவத்தையும், வைணவத்தையும் வளர்த்தார்கள்.

## முடிவுரை :

நாயக்கர் பரம்பரை அழிந்தது மதுரைக்கு ஐயமின்றிப் பெருநன்மையாகும் என்றூர் நெல்சன். டாக்டர் கால்டுவெல் மதுரை நாயக்கர் ஆட்சி ஆடம்பரங்களால் மறைத்துக் காட்டிய குறை மிகுந்த ஆட்சி என்றூர். இப்படிக் கூறியது அனுதாபம் இன்றிச் சொன்னது. நாயக்கர் ஆட்சி தமிழகத்தில் ஏற்படாதிருந்தால் தமிழகப் பண்பாடும், சமயங்களும் முற்றும் மறைந்தோ, தேய்ந்தோ, மாறியோ போயிருக்கும். நெல்லைக் குறிப்பேட்டில் ஏ. ஜி. ஸ்டுவர்ட் என்பவர் நாட்டு வருவாய் அனைத்தையும் நாட்டு மக்கள் நன்மைக்காகப் பயன்படுத்தி இருப்பதை நாயக்கர்கள் செய்த பாசன வசதிகள் காட்டுகின்றன என்றும், மக்கள் உளநிறைவுள்ளவர்களாயும் வளமுள்ளவர்களாயும் வாழ்ந்தார்கள் என்றும் குறிப்பிட்டிருப்பது மற்ற நாட்டு நாயக்கர்களுக்கும் பொருந்தும். பொதுவாக நாயக்கர் காலம் தமிழகத்தின் நற்காலம் என்று கூறுவது மிகையாகாது.





நாயக்க மன்னர்களின் உருவச் சிலைகளுடன் திருமலை நாயக்கரால்
கட்டப்பட்ட மதுரைப் புதுமண்டபத்துள் உள்ள அணிவெட்டுக் கால் வரிசை

பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற.

நுண்கலைச் செல்வர்
**சாத்தன்குளம் திரு. அ. இராகவன்**



# பாண்டிய நாட்டுக் காசுகள்

முற்காலத்தில் தமிழ் மக்கள் வாழ்ந்த நிலப் பரப்பு தமிழகம் என்று அழைக்கப்பட்டது. பிற் காலத்தில் அது தமிழ் நாடு என்று கூறப்பட்டது. இத்தமிழ் நாடு குடபுலம், குணபுலம், தென்புலம் என்று மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந் தது. இதனைச் சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவேந்தர்கள் ஆட்சி புரிந்து வந்தனர். இவர்கள் ஆட்சி புரிந்து வந்த நிலப்பகுதிகள் முறையே சேர மண்டலம், சோழ மண்டலம், பாண்டிய மண் டலம் என்று சொல்லப்பட்டன.

பாண்டிய மண்டலம்:

பாண்டிய மண்டலம் பாண்டிய நாடு என்றும் வழங்கப்பட்டது. தமிழகத்தை ஆண்ட மூவேந் தர்களில் பாண்டியர்கள் வரலாற்றுக் காலந் தொட்டு மேன்மையுற்றுவரும் பழம் பெரும் குடியினர். இவர்கள் தொன்றுதொட்டு இந்த நிலப்பகுதியிலே வாழ்ந்து வருகின்றனர்.

வட மொழியினரின் ஆதிகாவியம் என்று கூறும் வான்மீகி இராமாயணத்தில் பாண்டிய நாட்டுப் பழம்பெரும் தலைநகர் 'கபாடபுரம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கபாடபுரம் பொன் னுலும், மணிகளாலும் அணி செய்யப்பட்ட கோட்டை வாயிலின் கதவுகளை உடையது என்று சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. கி.மு. நான்காம் நூற்றுண்டில் வாழ்ந்தவராகக் கூறப்படும் வட மொழிப் புலவர் கார்த்தியாயனர் பாண்டியர் என்னும் மொழிக்கு இலக்கணம் கூறியுள்ளார். அசோக மன்னன் கல்வெட்டுக்களில் பாண்டியர் களின் பெயர்கள் காணப்படுகின்றன. பௌத்தர் களால் வரையப் பெற்ற பழம்பெரும் இலங்கை யின் வரலாற்று நூலாகிய மகாவம்சம் கி.மு. 478-இல் வாழ்ந்த இலங்கை வேந்தன் விசயன், பாண்டிய நாட்டு இளவரசியை மணந்தான்; அவன் தோழர்கள் பாண்டிய நாட்டு அரசாங்க அதிகாரிகளின் பெண்மக்களை மணந்துகொண்டு பாண்டிய நாட்டுப் பெரிய மரக்கலத்தில் ஏறி வந்தார்கள் என்று கூறுகிறது. கி.மு. மூன் ரும் நூற்றுண்டில் கிரேக்க நாட்டினின்று சந்திர குப்தன் அரசவைக்குப் போந்த அரச தூதுவனுகிய மெகஸ்தனிஸ் பாண்டிய நாட்டின் வரலாற் றைக் குறிப்பிட்டுள்ளான். உரோம் நாட்டில் கி.மு. முதல் நூற்றுண்டில் வாழ்ந்த அகஸ்டஸ் என்னும் பேரரசன் அரசவைக்குப் பாண்டியன், தன் அரசத் தூதுவரை அனுப்பி நட்பு வளர்த்து இரு நாடுகளும் அரசத் தூதுவர்களைப் பரிமாறிக் கொள்ளச் செய்தான். அதனுல் இரு நாடுகளுக்கு மிடையே வாணிகம் வளர்ந்தது. கி.பி. எழுபதாம் ஆண்டில் வாழ்ந்த பிளினி என்ற மேனுட்டு வரலாற்றாசிரியன் பழம் பாண்டியரின் வரலாற் றைக் குறிப்பிட்டுள்ளான். ''பாண்டி நாடே பழம் பெரும் நாடு'' என்று தேவார ஆசிரியர்கள் புகழ்மாலை சூட்டியுள்ளனர்.

## நாகரிகம் :

பாண்டிய நாடு கிறித்தவ ஊழி எழுவதற்குப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னரே நனிசிறந்த நாகரிகத்தைப் பெற்றுவிட்டது; கழகங்கள் கண்டு கருத்தோடு தமிழ்க் கருவூலத்தை வளர்த்து வந்தது. பாண்டிய நாட்டில் மகேச சூத்திரம் என்னும் பேரிலணக்கம், களவியல் என்னும் ஐந்திணை அகநூல், அகத்தியம், முதுநாரை, முதுகுருகு, ஐந்திரம், பரதம், கூத்தநூல், இசை நுணுக்கம், தொல்காப்பியம், திருக்குறள் போன்ற எண்ணற்ற இலக்கியங்கள் எழுதப் பெற்றன. அஃது அறநெறிபற்றி ஆட்சி நடத்தும் அரசர்களையும், அரும் பெரும் அரசியல் அமைப்பையும் பெற்று விட்டது. பாண்டிய நாட்டில் கலைகளும், மொழியும், எழுத்தும், செல்வமும், கைத்தொழில்களும், பயிர்த் தொழில்களும் வளம் பெற்றெழுந்தன. வணிகம் வளர்ந்தது. போக்குவரத்துச் சாதனங்கள் பெருகின. கலங்கள் கட்டப்பட்டன. யவனர்களோடு பெரும் அளவில் கடல் வாணிகம் நடைபெற்றது.[1] இருமீன்கள் தீட்டிய பாண்டிய நாட்டுக் கொடிகள் பறந்த நாவாய்கள் ஆழ்கடல் தாண்டி வெளி நாடுகள் போந்து மீண்டும் வந்தன.

## கோநகர் :

பாண்டிய நாட்டிற்குப் புறநகர் (துறைமுகப் பட்டினம்) கொற்கையாகவும் பின்னர், பழையகாயலாகவும் இருந்து வந்தது. அகநகர் (கோநகர்) மதுரையாக இறுதிக் காலத்தில் இருந்து வந்தது. கோநகரில் அரசர் இருந்து ஆட்சி புரிந்து வந்தார். இளவரசர் கொற்கையில் இருந்து மன்னர்க்குத் துணைபுரிந்து வந்தார். கொற்கை அருகே கடலில் ஏராளமான முத்துக்கள் கிடைத்தன. கொற்கை, முத்துக் குளிக்கும் மூதூராக விளங்கியது. கொற்கைத் துறைமுகத்தில் யவனர்கள், அரேபியர்கள் கப்பல்களும், பாண்டியர்களின் பல்வேறு வகையான படகுகளும், தோணிகளும், அம்பிகளும், நாவாய்களும் ஏராளமாக இருந்து வந்தன. யவனர்கள் பொற்காசுகளையும், பொற்கட்டிகளையும் கொடுத்து முத்து, மிளகு, சந்தனக் கட்டை முதலிய பொருள்களை வாங்கிச் சென்றனர்.

## அஃக சாலை :

பாண்டியர்கள் உள்நாட்டுச் செலாவணிக்கும் அயல் நாட்டுச் செலாவணிக்கும் ஏராளமான காசுகளை வெளியிட்டு வந்தனர். பாண்டியர் அரசாங்கத்திற்குப் பொன், வெள்ளி, செம்பு ஆகிய தாதுப் பொருள்களில் காசு வெளியிடும் அஃகசாலைகள் கொற்கையிலும் மதுரையிலும் இருந்து வந்தன. காசு வெளியிடும் இடத்திற்கு அஃகசாலை என்று பெயர். காசு வெளியிடும் நிலையம் இருக்கும் தெருவிற்கு அஃகசாலைத் தெரு என்று பெயர். கொற்கையில் காசு வெளியிடும் தெருவும் நிலையமும் அழிந்துவிட்டன. ஆனால் அத்தெருவில் உள்ள பிள்ளையார் கோயில் இன்றும் இருந்து வருகிறது. அப்பிள்ளையாரை மக்கள் அஃகசாலை விநாயகர் என்று அழைத்து வருகிறார்கள். உரோமர்கள், பாண்டியர்கள் அனுமதி பெற்று மதுரையருகே குடியேறித் தங்கள் செலாவணிக்குச் செப்புக் காசுகள் வெளியிட்டிருக்கலாம் என்று சில அறிஞர்கள் கருதுகிறார்கள்.

## பழம் பாண்டியர்களின் காசுகள் :

பாண்டியர்கள் வெளியிட்ட காசுகள் மதுரை, கொற்கை முதலிய இடங்களில் மட்டுமின்றி இலங்கையிலும் ஏராளமாகக் கிடைத்து வருகின்றன. அண்மையில் மைசூர் நாட்டுப் பகுதியில் பழம் பாண்டியர்களின் காசுகள் பல கிடைத்திருப்பதாக மைசூர் புதைபொருள் ஆராய்ச்சித் துறையினர் வெளியிட்ட ஆண்டு அறிக்கையின் மூலம் நன்கறிகின்றோம். இப்பொழுது மூவேந்தர்களின் காசுகளும் ஏராளமாகக் கிடைத்துள்ளன. ஆனால், இன்று கிடைத்துள்ள காசுகளில் பாண்டியர்கள் காசுகளே மிகத் தொன்மையானவை. பாண்டியர்கள் முதன்முதலாக, கி.பி. முதல் நூற்றாண்டில் காசுகள் வெட்டியிருக்கலாம். ஆனால், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வெளியிட்ட பழம் பாண்டியர்கள் காசுகள்தான் இப்பொழுது ஏராளமாகக் கிடைத்துள்ளன[2]. சேரர், சோழர் காசுகளில் கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காசுகள் கிடைக்கவில்லை. அண்மையில் காவிரிப்பூம்பட்டினத்தில் கரிகாலன் காசுகளைக் கண்டெடுத்ததாகக் கூறப்படுகிறது. அவைகளை நான் பார்வையிட்டேன். அவை சோழர் காசுகள் என்று என்னால் திட்டவட்டமாகக் கூற முடியவில்லை. அண்மையில் வடஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள ஆண்டிப்பட்டியில் சில பழங் காசுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை சங்க காலக் காசுகள் என்று பத்திரிகைகளில் எழுதப்பட்டன. இவற்றில் எதையும் நான் பார்த்ததில்லை. இவை சங்க காலத்தில் உள்ள தமிழக மன்னர்கள் வெளியிட்ட காசுகளா என்று காசு ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டுள்ள அறிஞர்கள் ஆராய்ந்து முடிவு கட்ட வேண்டும். இதைப்பற்றி அறிஞர்கள் இன்னும் முடிவு காணவில்லை.

## நீண்ட சதுரக்காசுகள் :

பழம் பாண்டியர்களின் காசுகள் இப்பொழுது ஏராளமாகக் காணக்கிடக்கின்றன. அவை அனைத்தும் செம்பினால் செய்யப்பட்ட அடிகாசுகளாகும். அவை அனைத்தும் சதுரமாகவும், நீண்ட சதுரமாகவும் உள்ளன.

பெரும்பாலான காசுகளில் முன்புறம் யானை வடிவம் தீட்டப்பட்டுள்ளது. சிலவற்றில் யானையோடு அருகில் தொட்டியும், மரமும் உள்ளன. சிலவற்றில் யானையின் மேற்புறம் இருபக்கங்களிலும் மலைகளும், நடுவில் புட்பக விமானம் போன்ற உருவமும் உள்ளன. மலைகளைப் பௌத்த சைத்தியம் என்பாரும் உளர். பல காசுகளில் அடியில் யானை உருவமும், அதன்மேலே சிறிய உருவில் சக்கரம், சுவத்திகம், குடம், கொடி, கண்ணாடி, தொரட்டி, இணைக்கயல்கள் போன்ற அட்ட மங்கள உருவங்கள் (எட்டு மங்களச் சின்

னங்கள்) உள்ளன. சிலவற்றில் 2, 3, 4 உருவங்கள் மட்டும் உள்ளன. சில காசுகளில், நந்தி, கடப்பமரம், குதிரை போன்ற உருவங்கள் தனித் தனியாகக் காணப்படுகின்றன. இக்காசுகளின் பின்புறம் மீன் சின்னம் போன்ற குறியீடுகள் காணப்படுகின்றன. இக்காசுகள் மொகஞ்சதாரோ, அரப்பா முத்திரைகளை ஒத்ததாகக் காணப்படுகின்றன.

யானை உருவம் பொறிக்கப்பட்ட பழம் பாண்டியர் காசுகள், பாண்டிய மன்னர்கள் பௌத்த நெறியைத் தழுவி இருந்த காலத்தில் வெளியிட்ட காசுகளாக இருக்கலாம் என்று எண்ணுகின்றனர். இந்தக் காசுகள், இலங்கையில் ஏராளமாகக் கிடைப்பதினின்று, இலங்கையைப் பாண்டியர்கள் வென்று அந்நாட்டின் செலாவணிக்காக வெளியிடப்பட்ட காசுகள் என்றும், இலங்கை மக்களில் பெரும் பாலோர் பௌத்த மதத்தைத் தழுவி இருந்ததால் அவர்களின் ஆதரவைப் பெறப் பௌத்தச் சின்னமாகிய யானை உருவம் தீட்டப் பெற்றது என்றும் கூறப்படுகிறது. சிலர், பாண்டியர்கள் சிவ நெறியைத் தழுவியிருந்த காலத்தில் இந்த யானைக் காசுகள் வெளியிடப்பட்டன என்றும், யானை உருவம் தமிழர்கள் பண்பாட்டிற்கு மாறானதன்று என்றும், சிந்துவெளி நாகரிகத்தில் காணப்படும் யானை உருவந்தீட்டப்பட்ட முத்திரைகளே இதற்கு ஏற்ற எடுத்துக்காட்டு என்றும் கூறுகிறார்கள். இந்தப் பழம் பாண்டியர்களின் நீண்ட சதுரக் காசுகள் சிறிதும் பெரிதுமாகப் பல்வேறு உருவங்களில் உள்ளன. இதில் வரிவடிவங்கள் எதுவும் இல்லை. பழம் பாண்டியர்களின் காசுகள் கி.பி. 10-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவையாம்.

### இடைக்காலப் பாண்டியர் காசுகள்:

இடைக்காலப் பாண்டியர்களின் காசுகள் என்று கூறப்படுபவை கி.பி. 10-ஆம் நூற்றாண்டிலிருந்து 14-ஆம் நூற்றாண்டு வரையுள்ள காசுகளாகக் கருதலாம். இக்காசுகள் பொன், வெள்ளி, செம்பு முதலிய தாதுப் பொருள்களில் உள்ளன. இவை வட்டவடிவமாக அமைந்துள்ளன. இன்று, பொற்காசுகள் சிலவே கிடைத்துள்ளன. அதில் முன்பக்கம் இரு மீன்களும் இருமருங்கினும் வலப்புறம் விளக்கும், இடப்புறம் சாமரமும், மேலே அரசகுடையும் உள்ளன. பின்புறம் தேவநாகரி வடிவம்போல் எழுத்துக்கள் காணப்படுகின்றன; ஆனால் சரியாகப் படிக்க முடியவில்லை. வெள்ளிக் காசுகள் கிடைப்பது அரிதினும் அரிது. என்னிடம் ஒரேயொரு வெள்ளிக் காசு இருந்தது. அது கொற்கையில் கிடைத்தது. இப்பொழுது சென்னையில் உள்ள தமிழக அரசின் தொல் பொருட்காட்சிச் சாலையில் உள்ளது.

இப்பொழுது பாண்டியர்களின் வட்டவடிவமான செப்புக்காசுகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. சோழர்களின் பெரும்பாலான காசுகளில் தேவநாகரி வரிவடிவம் பொறிக்கப்பட்டுள்ளது. பாண்டியர்களின் பெரும்பாலான காசுகளில் தமிழ் வரிவடிவம் தீட்டப்பட்டுள்ளது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இவை பெரும்பாலும் 60 கிராம் எடைக்கு உட்பட்டவையாக இருக்கின்றன. காசுகளின் பெயர்களும், மதிப்பும் தெளிவாகக் காண முடியவில்லை. சில கல்வெட்டுக்களின்றும், செப்பேடுகளின்றும் அக்காலத்தில் ஒரு காசுக்கு என்னென்ன பண்டங்கள் எவ்வளவு பெற முடியும் என்று அறிய முடியும். சில காசுகளில் முன் தீட்டப்பட்ட உருவங்கள்மீது பாண்டியர்களின் சின்னமாகிய மீன்களின் உருவங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இது பாண்டிய நாடு மாற்றவர் ஆட்சியினின்று மீட்கப்பட்டதைக் குறிக்கும் என்று கருதப்படுகிறது.

பாண்டியர் காசுகளில் பெரும்பாலானவற்றில் மன்னர்களின் சொந்தப் பெயர்கள் குறிப்பிடப்படவில்லை. விருதுப் பெயர்களே காணப்படுகின்றன. குறிப்பாக, அவனீப சேகர கோளகன், அவனீபேந்திரன், கோதண்டராமன், கலியுக ராமன், கச்சி வழங்கும் பெருமாள் சேரகுலராமன் பூதல, பூதலவீரன், எல்லாந்தலை, எல்லாந் தலையானான், சோணாடு கொண்டான், ஜெகவீர, சமர கோலாகலன், கனிய வி. பெ., கோனேரி (ராயன்?) கோனேரி ராயன், புவனேகவீரன், வாளால் வழிதிறந்தான் (குளிகை) என்ற விருதுப் பெயர் பொறித்த காசுகள் காணப்படுகின்றன. இஃதன்றி, மன்னர்கள் பெயர் பொறித்தவை—அதாவது குலசேகரன், வேமப் பெருமாள் வீரபா, வீரபாண்டியன், சு, சுந், சுந்தரன், சுந்தர்பாண்டியன் போன்ற பெயர்கள் உள்ள நாணயங்களும் உள்ளன. சுந்தரபாண்டியன், குலசேகரன் போன்ற பெயர்களுள்ள மன்னர்கள் பலர் பாண்டிய நாட்டில் இருந்து வந்ததால் இக்காசு குறிக்கும் பெயர் முதலாம் சுந்தர பாண்டியனா, இரண்டாம் சுந்தர பாண்டியனா, முதலாம் குலசேகரனா, இரண்டாம் குலசேகரனா என்று அறிய முடியாமல் இருக்கிறது.

மேற்கூறிய பாண்டியர்களின் காசுகள் பெரும்பாலும் ஒன்பதாம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டை ஆண்ட சீமாறன் சீவல்லபன் (கி.பி. 815-862) காலத்திலிருந்து, சடையவர்மன் வீர பாண்டியன் (கி.பி. 1175-1180), முதல் சடையவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1190-1218), முதல் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி. 1216-1238), முதல் சடையவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி. 1251-1271), சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1267-1281), முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியன் (கி.பி. 1268-1311), மூன்றாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி. 1303-1309) வரை ஆட்சிபுரிந்த மன்னர்கள் வெளியிட்ட காசுகளாகக் காணப்படுகின்றன.

### பிற்காலப் பாண்டியர் காசுகள் :

கி.பி. 14-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 17-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை ஆண்டு வந்த பாண்டியர்கள் வெளியிட்ட காசுகளைப் பிற்காலப் பாண்டியர்களின் காசுகள் என்று

கூறலாம். பிற்காலப் பாண்டியர்களிற் பலர் தென் பாண்டி நாட்டில் ஆட்சி புரிந்து வந்தனர். பாண்டியப் பேரரசு வீழ்ந்ததும், சில பாண்டிய இளவரசர்கள் தென்பாண்டிய நாட்டில் பல இடங்களில் சிற்றரசர்கள்போல் ஆட்சி புரிந்து வந்தனர். அவர்களில் சிலர் கொற்கையில் இருந்து ஆட்சி புரிந்து வந்ததோடு அங்குள்ள அஃகசாலை யில் காசுகளும் வெளியிட்டு வந்தனர்.

கொற்கைப் பாண்டியர் காசுகள் முற்காலத் தில் மட்டுமல்ல பிற்காலத்தும் ஒரு தனித்தன்மை வாய்ந்தனவாக மிளிர்கின்றன. இவை மதுரைப் பாண்டியர் காசுகளினின்று எளிதில் வேற்றுமை காணக்கூடியனவாக இருக்கின்றன. கொற்கையில் அறிஞர் லோவந்தால் அவர்களுக்குக் கிடைத்த யானை உருவம் பொறித்த காசுகளும், நந்தி உருவம் பொறித்த காசுகளும்கூட ஒரு தனித் தன்மையுடையனவாய்க் காணப்படுகின்றன. மேலும், தாமரை மலர், ஞாயிறு, தண்பொருநை, சுவத்திகம், அன்னம், வைணவர்களின் நாமம், சிவபார்வதி உருவம் தீட்டிய காசுகளாகவும், அரச உடையில் நிற்கும் மனித உருவம், மனித உருவத்தின் அருகே கோடரி போன்ற உருவங்கள் தீட்டிய கொற்கைப் பாண்டியர்கள் காசுகளாக வும், மதுரைப் பாண்டியர்களின் காசுகளுக்கு முற்றிலும் மாறுபட்டனவாகவும் காணப்படு கின்றன.

பிற்காலப் பாண்டியர்கள் வெளியிட்ட கொற்கைக் காசுகளில் பல வைணவச் சின்னங்கள் காணப்படுகின்றன. எனவே, பிற்காலப் பாண் டியர்கள், வைணவர்களின் திருத்தலங்களான ஆழ்வார்திருநகரி, சீர்வைகுந்தம் முதலிய ஊர் களின் அருகேயுள்ள கொற்கையில் இருந்ததால் நிலைகுலைந்த தங்கள் ஆட்சிக்குப் புத்துயிர் தரு மாறு வைணவர்களாகி, திருமாலை வேண்டி யிருக்கிறார்கள் என்று தெற்றெனத் தெரிகிறது. பிற்காலப் பாண்டியர்கள் பலர் வைணவப் பெயர் களைக் கொண்டிருப்பது, இதனை உறுதிப்படுத்து கின்றது. எடுத்துக்காட்டாகச் சடைய வர்மன் அதிவீரராமபாண்டியன் (கி.பி. 1564-1604), வரதுங்கராமபாண்டியன் (கி.பி. 1588), வரகுண ராம குலசேகர பாண்டியன் (கி.பி. 1613), வரகுண ராம பாண்டிய குலசேகரதேவ தீட்சிதர் (கி.பி. 1748) போன்ற பெயர்களைக் கூறலாம். சில பாண்டியர்கள் பிராம்மணீயத்தைத் தழுவி வேத விதிப்படி வேள்விகள் செய்தும் வந்தனர். எடுத்துக்காட்டாக வரகுணராம குலசேகர பாண் டியன் (கி.பி. 1615), குலசேகர சோமாசியார் என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டார்[3]. என்ன செய்தும் பாண்டியர்கள் ஆட்சி நிலைக்கவில்லை. சீரிய நிலையில் இருந்த பாண்டியர் ஆட்சி 14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தாழ்ந்த நிலையை அடையத் தொடங்கிற்று.

#### பாண்டிய நாட்டில் அன்னியர் ஆட்சி:

பாண்டிய நாட்டு இளவரசர்களின் அறிவின்மை யால் கி.பி. 1330-ஆம் ஆண்டு முதல் 1378-ஆம் ஆண்டுவரை மதுரையில் முஸ்லிம் ஆட்சி எழுந்தது. அவர்களின் பெயரால் அரபி எழுத்துப் பொறித்த நாணயங்களை வெளியிட் டுள்ளனர். பாண்டிய மன்னர்கள் பல தலைமுறை களாகத் தேடிவைத்த பொன்னும், மணியும், முடியும், கொடியும், செங்கோலும், அரச கட் டிலும், பிற விலையுயர்ந்த பொருள்களும் டில்லி யில் அரசாண்ட மொகலாயக் கொள்ளைக்காரர் களால் சூறையாடப்பட்டு டில்லிக்குக் கொண்டு போகப்பட்டன[4]. அப்பால் விசயநகர நாயக்க மன் னர்கள் பாண்டிய நாட்டின்மீது படையெடுத்து வந்து, மொகலாய ஆட்சியை விரட்டிவிட்டு நாயக் கர்களின் தளபதிகள் மதுரையில் இருந்து ஆட்சி புரிந்தனர். நாயக்கர்கள் மதுரையிலிருந்து, "பழநி, மதுரை, விருபாசி, திருமல" என்ற தமிழ் வரி வடிவம் பொறித்த காசுகளை வெளியிட்டுள்ளனர். அப்பால் 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் கிழக் கிந்தியக் கும்பினியார்கள் பாண்டிய நாட்டில் காசுகளை வெளியிட்டனர். அக்காசுகளில் தமிழ், ஆங்கில எழுத்துக்கள் காணப்படுகின்றன. 19-ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பாண்டிய நாட்டில் ஆங்கில ஆட்சி நன்றாகக் கால் ஊன்றிக்கொண்டு ரூபாய், அணா, பை, துட்டு என்னும் பெயர்களால் நாணயங்களை ஆங்கில எழுத்தில் வெள்ளி, செம் புத் தாதுப் பொருள்களில் வெளியிட்டனர். 1947-ஆம் ஆண்டில் இந்திய சுதந்திர ஆட்சி எழுந்து காசுகளை வெளியிட்டு வருகிறது.

இடைக் காலத்தில் சேது என்ற தமிழ் எழுத் துக்கள் பொறிக்கப்பட்ட காசுகள் சில பாண்டிய நாட்டிலும், ஈழ நாட்டிலும் கிடைத்தன. இதை யாழ்ப்பாணத் தமிழ் மன்னர்கள் வெளி யிட்டிருக்கலாம் என்று நல்லூர் ஞானப் பிரகாச அடிகள் கருதுகிறார். இராமநாதபுரம் அரசர்கள் தங்கள் முன்னோர்கள் வெளியிட்ட காசுகள் என்று கூறுகிறார்கள். சர். டப்ளியூ. எலியட், சேதுக் காசுகள் பாண்டியர்கள் வெளியிட்ட காசுகளாக இருக்கலாம் என்று கருதுகிறார்.

பிற்காலப் பாண்டியர்கள் செப்புக் காசுகளை மட்டுந்தான் வெளியிட்டுள்ளனர். பிற்காலக் கொற்கைப் பாண்டியர்கள் குறைந்த மதிப்புள்ள மிகச்சிறிய அளவுள்ள செப்புக் காசுகளை வெளியிட் டிருக்கின்றனர்.

#### காசுகளின் பெயர்கள்:

பாண்டிய நாட்டில் நாணயங்கள் காணம், கழஞ்சு, காசு, பொன், குளிகை, பணம் என்ற பெயர்களால் வழங்கப்பட்டன. 10 பொன் கொண் டது 1 காசு. 10 காணம் கொண்டது ஒரு கழஞ்சு. 1 பொன் 1 காணம் எடையுள்ளது.

#### காசு ஆராய்ச்சி இயல் (Numismatalogy):

காசு ஆராய்ச்சி இயலை 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தமிழகத்தில் அறிஞர்களான சர் வால்டர் எலியட், லயனல் வில்பர்ட், ஐ. சி. எஸ்., லோவந்தால் (Rev. Loventhal), டாக்டர் ஜே. ஆர். ஹெண்டர்சன் போன்றவர்கள் ஆரம் பித்து வைத்தனர். சர். டி. தேசிகாச்சாரி, திவான்

பகதூர் இரங்காச்சாரி, வி. சொக்கலிங்க முதலியார் போன்றவர்கள் காசியலை வளர்க்க முன்வந்தனர். ஆனுல், அடிப்படையிட்டு 80 ஆண்டுகள் ஆகியும் தமிழகத்தில் காசு ஆராய்ச்சித்துறை சிறிதும் வளரவில்லை-ஏன்? இன்று அந்த அடிப்படைகூடத் தகர்ந்துவிட்டது என்பது ஆராயத்தக்கது.

## காசு ஆராய்ச்சி-ஏன்?

காசு ஆராய்ச்சி நாட்டின் கலை வளர்ச்சியை எடுத்துக்காட்டும் ஓர் அரும் பெரும்துறை. அது நாட்டின் வரிவடிவத்தின் அபிவிருத்தியை நன்கு விளக்குவதாகும். காசுகளின் அமைப்பு, அதில் காணும் சின்னங்களின் சிறப்பு மக்களின் நாகரிகத்தைப் பிரதிபலிக்கும் கண்ணுடியாகும். பழங்காசுகள், எல்லாவற்றிற்கும் மேலாக, நாட்டின் உண்மையான வரலாற்றை வரைவதற்கு உற்ற-உயரிய கருவியாக ஒளிர்கின்றன. மேலும், காசுகள் நாட்டின் அவ்வக்காலப் பொருளாதார நிலை உணர்த்தப் போதிய சான்ருகத் திகழ்கின்றன.

## முடிவுரை :

தமிழர்களின் விழிப்புணர்ச்சியின் பயனுக எழுந்த உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்கும், தமிழ் மக்களின் தவப்பேருக இன்று தமிழகத்தில் துளிர்த்துள்ள தமிழர் ஆட்சியும் காசு ஆராய்ச்சித்துறை வளர்ச்சிக்கு ஆவன செய்யும் என்று நம்புகிறோம். தமிழகத்தின் வரலாற்றை விரைவில் காணநாடும் நமது தமிழக ஆட்சியினருக்குக் காசு ஆராய்ச்சி மிகமிக இன்றியமையாதது என்று நினைப்பூட்டிக் கொள்கின்றோம்.

---

1. "யவனர் தந்த வினைமா ணன்கலம்
பொன்னேடு வந்து கறியோடு பெயரும்"
—அகம் 149

2. From the brief survey made of the coins that may be attributed with a fair amount of certainty to the Pandian Kings it is found that except the very old coins issued possibly during the first centuries of the Christian era. South Indian coins – Sir T. Desikachari.

3. The last of these Kings of whom we have authentic epigraphical evidence perfomed a vedic sacrifice in A. D. 1615 and assumed the titles Somayaji and Diksitar —Pandyan Kingdom - K. A. Neelakanta Sastri. (London) 1929. p. 252

4. பாண்டிய மன்னர்களுக்கு உரிய 612 யானைகளும், 20,000 குதிரைகளும், 96,000 மணங்கு பொன்னும், முத்துக்களும் அணிகலன்களும் அடங்கிய பல பெட்டிகளையும் மாலிக்கபூர் கொள்ளையடித்துச் சென்ருன் என்று பார்னி கூறியுள்ளது அறியத்தக்கது.

(Elliot and Dowson - Vol. III p. 204.)

South India and her Mohammadan Invaders by Dr. S. Krishnaswamy Iyengar.



# பாண்டியர் காசுகள்




படமும் விளக்கமும்: தமிழக அரசின் தொல்பொருள் துறை

அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.

வித்துவான் மு. சண்முகம் பிள்ளை
(இளநிலைக் கண்காணிப்பாளர்
தமிழ் வளர்ச்சித் துறை, தமிழக அரசு)




ஒரு மொழியில் உள்ள நூல்களின் வரலாற்றை முற்றும் உணர்வதற்குரிய கருவி நூல்களாகப் பயன்படுவன நூல் தொகுப்பு விளக்க அட்டவணைகள். தமிழகத்தில் நூல்களைத் தொகுத்துப் போற்றும் முயற்சி பழங்காலம் முதற் கொண்டே தொடர்ந்து வந்திருக்கிறது. சங்கத் தொகை நூல்களை இவ்வகை முயற்சியின் முதற் படி எனலாம். பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களை அடுத்து அறங்களையும், அகப்பொருள், புறப்பொருள்களையும் பொருளாகக்கொண்ட பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என்னும் தொகுப்பைக் காண்கிறோம். காப்பியங்களை எடுத் துக் கொண்டால், அவையும் முன்பே ஐம்பெருங் காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம் என வகைப்படுத்தி வைக்கப்பட்டுள்ளமை தெரியவருகிறது. சைவ சமயத் துதிநூல்கள் முதலியவை 'திருமுறை' என்னும் பெயரால் பன்னிரு திருமுறைகளாகத் தொகைவகை செய்யப்பட்டுள்ளன. வைணவ சமயப் பக்தி நூலாகிய நாலாயிரத் திவ்யப்பிர பந்தத்தில் ஆழ்வார்கள் அருளிய இருபத்து நான்கு பிரபந்தங்கள் அமைந்துள்ளன. இப்பிரபந்தங் களும் இசைப்பா, இயற்பா என்னும் பாகுபாட் டில், இசைப்பா முதல் மூன்று ஆயிரங்களாகவும் இயற்பா நான்காவது ஆயிரமாகவும் அமைக்கப் பட்டுள்ளன. சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் பதினான்கு 'மெய்கண்ட சாத்திரம்' எனக்கோவை செய்யப் பெற்றுள்ளன. இங்ஙனமே இத்துறையில் 'பண்டார சாத்திரங்கள்' பதினான்கின் கோவை யும் தனியாக உளது. தமிழில் வழங்கும் சிறு பிரபந்தங்களையும் கணக்கிட்டுத் தொண்ணூற் றாறு எனக் கூறும் மரபும் முன்பே உள்ளது.

எனினும் காலந்தோறும் வெளிவரும் நூல்களை யெல்லாம் பொருளடைவிலும், கால அடைவிலும் முறைப்படுத்திக் கோவை செய்து பார்க்கும் போதுதான் தமிழில் வெளிவரும் நூல்களின் உண் மையான மதிப்புப் புலனாகும். ஆதலால், முறை யான நூலடைவுகள் செய்யும் எண்ணமும், முயற்சி களும் அவ்வப்போது நடைபெற்று வந்திருக்கின் றன. நூல்களை எவ்வெவ் வகைகளில் அடைவு செய்யலாம் என்பது குறித்துப் பேராசிரியர் சுந் தரம் பிள்ளை அவர்கள் செய்த 'நூற்றொகை விளக்கம்' ஒரு முதல் வழிகாட்டி.

பழைய ஏட்டுச் சுவடிகளைப் பொறுத்தவரை யில் தமிழகத்திலுள்ள சுவடி நிலையங்கள் தத்தம் நிலையங்களில் உள்ள சுவடிகளுக்கு விளக்கமான பட்டியல்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளன. தஞ்சைச் சரசுவதி மகாலில் உள்ள தமிழ்ச்சுவடி களை நன்கு ஆராய்ந்து, தக்க நூற்பொருட் குறிப்புக்களுடன் ஆராய்ச்சி முறையில் மூன்று பெருந் தொகுதிகளாகக் காலஞ்சென்ற தமிழ்ப் பேராசிரியர், எல். உலகநாத பிள்ளை அவர்கள் அச் சிட்டு வழங்கியுள்ளார்கள். சென்னையில் உள்ள தமிழக அரசாங்கத்தின் பழஞ்சுவடிகள் பாது காப்பு நிலையத்தினரால் (Oriental Manuscript Library) சுவடிகளுக்குரிய விளக்கமான அட்ட வணைகள் பல அவ்வப்போது வெளியிடப்பட்டுள் ளன. அடையாற்றில் விளங்கும் டாக்டர் உ.வே.

சாமிநாதையர் நூல் நிலையத்தில் சேமிக்கப் பெற்றுள்ள சுவடிகளுக்கும் விரிவான முறையில் விளக்க அட்டவணைகள் இருபெருந் தொகுதிகளில் வெளிவந்துள்ளன. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உள்ள நூற்பட்டிகை அச்சில் உள்ளதேனும், அது தமிழாராய்ச்சியாளருக்குப் பயன்படும் வகையில் வெளியிடப் பெறவில்லை என்று தெரிகிறது. பழஞ் சுவடிகள் பற்றிய வெளியீடுகளிலிருந்து தமிழில் இதுவரை அச்சில் வெளிவந்த நூல்களையும், இன்னும் சுவடி நிலையிலே இருப்பனவற்றையும் நாம் அறிய முடியும்.

ஓலைச்சுவடிகளின் நிலை இவ்வாறாகக் காகிதப் பிரதிகளுக்கும், அச்சிடப் பெற்ற நூல்களுக்கும் ஆன தொகுப்பு முயற்சியின் அளவை நோக்குவோம். காகிதம் புழக்கத்திற்கு வந்தபின் எழுதப் பெற்றவற்றுள் சிலவற்றை ஓலைச் சுவடிகளைப் பாதுகாக்கும் நிலையங்களே பாதுகாத்து வருகின்றன.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கர்னல் மெக்கன்ஸி என்பார் மதுரையிலும், மற்றுள்ள இடங்களிலும் தக்கவர்களைக்கொண்டு கிடைக்கும் பழஞ்சுவடிகளைத் தேடித் தொகுத்தார். இதுபோன்றே வடமொழி, தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஒரியா முதலிய மொழிகளில் உள்ள பழம் பிரதிகளையும் தொகுத்தார். இதன்பின், தமிழ் நூல் அச்சுப்படிகளுக்கு எனத் தனிப்பட்ட ஓர் அட்டவணையை ஜான் மர்டாக் என்பார் தொகுத்து கி.பி. 1865-இல் வெளியிட்டுள்ளார். இவருக்கு வழிகாட்டியாய் அமைந்தது, வங்காள மொழி நூல்களுக்கு அப்பொழுது வெளியான நூற்றொகையே. இவருடைய நூற்றொகை பொருளடைவில் சிறப்பான விளக்கங்களுடன் அமைந்துள்ளது. இந்நூலுக்கு இவர் எழுதியுள்ள நூற்றொரு பக்கங்கள் கொண்ட முகவுரை தமிழ் மொழி, தமிழ் இலக்கியம் பற்றிய ஓர் ஆய்வுரையாகும். இதுவே தமிழ் நூல்களுக்கு என அமைந்த தனி நூற்றொகைகளில் முதலாவது நூல். கி.பி. 1865-ஆம் ஆண்டிற்கு முன் அச்சிடப் பெற்ற நூல்களைக் குறித்து அறிவதற்கு இன்று நமக்குக் கிடைத்துள்ள கருவி நூல் இஃது ஒன்றே. தமிழாராய்ச்சியாளர்க்கு இஃது ஒரு முதல் நூல்.

கி.பி. 1867-இல் இந்திய அரசாங்கம் புத்தகப் பதிவுச் சட்டத்தைக் கொண்டு வந்தது. அச்சிடப் பெற்ற நூல்கள் இந்தச் சட்டப்படிப் பதிவுசெய்யப் பெற்றன. மூன்று மாதங்கட்கு ஒரு முறை அரசிதழின் (Gazette) வாயிலாக அவ்வக் காலாண்டுப் பகுதியில் பதிவான நூல்களைக் குறித்து ஓர் அட்டவணையும் வெளியிட்டு வரலாயிற்று.

கி.பி. 1870-ஆம் ஆண்டு மூன்றாவது காலாண்டுப் பகுதி தொடங்கிப் புத்தகம், சிறு வெளியீடு, கதம்பம் (Miscellaneous) எனப் பாகுபடுத்தி, மொழிவாரியாக இம்மூன்று வகை நூல்களும் அவ்வப்பகுதியில் தரப்பட்டுள்ளன.

கி.பி. 1872-ஆம் ஆண்டு இரண்டாம் காலாண்டுத் தொடக்கமாக மேற்கூறிய மூன்று பாகுபாடுகளோடு பத்திரிகைகள் என்று ஒரு தனிப் பாகுபாடும் வகுக்கப்பட்டிருக்கிறது. எனவே, இது முதற்கொண்டு புத்தகங்கள், சிறுவெளியீடுகள், கதம்பம், பத்திரிகைகள் என நான்கு பகுதிகள் காணப்படுகின்றன. கி.பி. 1900-ஆம் ஆண்டு நான்காவது காலாண்டுத் தொடக்கமாக நூல்களின் பெயர்கள் ஆங்கிலத்தில் தரப்பட்டிருத்தலோடு, அந்தந்த மொழிகளுக்குரிய எழுத்துக்களிலும் கொடுக்கப்பட்டுள்ளன. பின்னர், 1905-ஆம் ஆண்டு நான்காவது காலாண்டுப் பகுதி தொடங்கி நூல்கள் பொருள் வகையிலும்[1] அடைவுபடுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு பொருள் பற்றிய நூல்களும் அவ்வத்தலைப்பின்கீழ் ஆசிரியர் அகரவரிசையில் அமைக்கப்பட்டுள்ளன.

அரசிதழில் புத்தக விவரங்களைச் சென்ற நூற்றாண்டு முழுதும் பல தலைப்புக்களில் பத்திபத்தியாக அமைத்து வெளியிட்டு வந்திருக்கின்றனர். புத்தகத் தலைப்பு, புத்தகத்தில் அமைந்துள்ள மொழி, அதன் ஆசிரியர், மொழி பெயர்ப்பாசிரியர், பதிப்பாசிரியர் விவரம், நூற்பொருள், பதிப்பித்த அச்சகமும் ஊரும், பதிப்பித்தோரும் வெளியீட்டாளரும், அச்சிட்டு வெளிப் போந்த தேதி, புத்தகத்தின் இதழ்கள் அல்லது பக்கங்கள், புத்தகத்தின் வடிவம், பதிப்பு விவரம், பதிப்பிக்கப் பெற்ற பிரதிகளின் எண்ணிக்கை, அச்சிடப் பெற்றதா படியெடுக்கப் பெற்றதா (Lithographed) என்னும் குறிப்பு, உரிமையாளரின் பெயரும், முகவரியும் ஆகியவற்றை அமைத்து, இறுதியாகச் சிறுகுறிப்பும் (Remarks) எழுதப் பெற்றிருக்கிறது. பதிவு எண் முதலில் அமைக்கப் பெற்றிருக்கிறது. புத்தகம், சிறுவெளியீடு, பத்திரிகைகள், கதம்பம் என்னும் பாகுபாட்டில் ஒவ்வொரு பகுதிக்கும் தொடர் எண்ணும் முதலில் தரப் பெற்றிருக்கிறது. பதிவு எண், தொடர் எண் ஆகியவை சில ஆண்டுகளில் முந்தியும் பிந்தியுமாக முதற்கண் மாறிமாறிக் காணப்படுகின்றன. பொதுவாக மேற்குறித்த செய்திகள் எல்லாம் தலைப்புக்களாக மேலேவர, தனித்தனி நெடும் பத்திகளாக வகுத்துச் செய்திகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்த இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கமாக, நூல் விவரங்களையெல்லாம் நெடும் பத்திகளாக (Columns) வரிசை வரிசையாகக் கொடுக்கும் முறையைவிடுத்துப் பிறிதொரு முறையில் வெளியிடத் தொடங்கினர். அதாவது நூல் விவரங்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்துவர ஒவ்வொரு நூலுக்கும் ஒரு தனிப்பத்தியாக அமைத்து வெளியிடலாயினர். இது நவீன நூற்றொகை முறையைப் பெரிதும் ஒத்த ஓர் அமைப்பாகும். செய்திகளின் அடைவுமுறை தலைப்பில் தரப்பட்டிருக்கிறது[2].

இந்த அடைவு முறையும், செய்திகளும் சிற்சில காலங்களில் ஒரு சில மாற்றங்களைப் பெற்ற போதிலும் பெரும்பான்மையும் இவ்வகை அமைப்பே தொடர்ந்து அமைந்துள்ளது.

கி.பி. 1894-இல் நூற்பதிவாளர் அலுவலகம் சென்னை மாநிலத்தில் பதிவு செய்யப் பெற்ற அனைத்துமொழி நூல்களுக்குமான ஒரு நூற்பட்டிகையை வெளியிட்டுள்ளது. (A Classified

Catalogue of the Public Reference Library) இதில் கி.பி. *1867* முதல் கி.பி. *1889* வரை வெளிவந்த நூல்களின் பட்டியல் அமைந்துள்ளது. இதில் பதிவு எண், நூற் பெயர், நூல் வெளியான ஆண்டு, காலாண்டுப் பகுதி, நூலாசிரியர் அல்லது நூல் வெளியீட்டாளர் பெயர் ஆகியவை அமைந்துள. இது உரோமன் எழுத்தில் உள்ளது.

இலண்டன் மாநகரில் உள்ள பிரிட்டிஷ் பொருட்காட்சிக்கூடத்தில் அமைந்துள்ள நூலகத்தில் தொகுத்து வைக்கப்பட்டுள்ள தமிழ் நூல்களுக்கு கி.பி. *1909*-இல் ஒரு நூலடைவு வெளியிடப்பட்டிருக்கிறது. இது தமிழ்ப் பேராசிரியராக விளங்கிய போப் பாதிரியாரால் தொடங்கப் பெற்று, L. D. பார்னெட் என்பாரால் முற்றுவிக்கப் பெற்றது[3]. இதன் பின்னர், கி.பி. *1931*-இல் இதற்கு அனுபந்தத் தொகுதி ஒன்றும் வெளியாகியுள்ளது[4]. இவற்றுல் தமிழகத்திலும், புதுச்சேரியிலும், ஈழநாட்டிலும், பர்மா, மலேயா முதலிய நாடுகளிலும் அச்சிடப் பெற்றனவும், ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பெற்றனவுமான பற்பல தமிழ் நூல்களைக் குறித்த விவரங்கள் தெரிய வருகின்றன. நூல்கள் நூலாசிரியர்களைக் குறித்த வரலாற்றுக் குறிப்புக்கள், ஒரு நூலின் முதல் நூல், மொழிபெயர்ப்பு முதலிய விவரங்கள், நூலுக்குரிய உரை நூல்கள், அவைபற்றிய தொடர்புடைய பிற செய்திகள் என்று இவ்வாறு பற்பல நுட்பமான செய்திகளும் தக்கமுறையில் அமைத்துத் தரப்பட்டிருக்கின்றன.

தமிழக அரசின் நூற்பதிவாளரால் பதிவு செய்யப்பெற்ற நூல்கள் கி.பி. *1952*-இல் அரசாணைப்படித் தமிழக அரசின் தொல்லேட்டு அலுவலகத்தில் பாதுகாக்கும் பொருட்டுச் சேர்ப்பிக்கப் பெற்றன. அதன் பின்னரும் உரிமைப் பதிவு செய்யப் பெறும் நூல்களை இந்த அலுவலகத்திற்கே அவ்வப்போது அனுப்பி வருகின்றனர். கி.பி. *1894*-இல் நூற்பதிவாளரால் வெளியிடப் பெற்ற அட்டவணையைத் தொடர்ந்து, அதன் பின்னர்ப் பதிவான நூல்களுக்கும் அட்டவணை தயாரிப்பதில் தொல்லேட்டு அலுவலகம் ஈடுபட்டுள்ளது. இது தமிழகத்தில் அச்சிட்டுப் பதிவான அனைத்துமொழி நூல்களுக்கும் உரோமன் எழுத்தில் அமைக்கப் பெறும் அட்டவணையாகும். இப்பொழுது கி.பி. *1890* முதல் *1900* வரையில் ஒன்றும், கி. பி. *1901* முதல் *1910* வரையில் ஒன்றும், கி.பி. *1911-1915* வரையில் ஒன்றும், கி.பி. *1916-1920* வரையில் ஒன்றும் ஆக நான்கு தொகுதிகள் அச்சிடப்பட்டுள்ளன. மேற்கொண்டும் ஐந்தாண்டுத் தொகுப்புக்களாக இந்த நூற்பட்டிகை முயற்சி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

*1948*-இல் நிறைவேறிய சென்னைப் பொது நூலகச் சட்டத்தின் விதிமுறைகளின் தொடர்பு கொண்டு சென்னை மாநிலத்தில் *1951*-ஆம் ஆண்டில் வெளியான தமிழ் நூல்களின் தொகை ஒன்று 'தமிழ் நாட்டு நூற்றொகை' ((Madras State Bibliography-Tamil, 1951) என்னும் பெயரில் கல்வித் துறையினரால் வெளியிடப் பெற்றது. தொடர்ந்து *1954*-இல் முதல் மூன்று மாதங்களில் வெளியான தமிழ் நூல்களுக்கான ஒரு தொகுதியும், இரண்டாவது மூன்று மாதங்களுக்கான ஒரு தொகுதியும் வெளிவந்துள்ளன. நிர்வாகச் சிக்கல்களால் நின்றுபோன இது *1964* சனவரி முதல், மாதந்தோறும் வெளியிடப்பட்டு, ஆண்டுக்கு ஒரு முறை ஆண்டுத் தொகுப்பாக வெளிவரவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

கி.பி. *1956*-இல் தமிழ் ஆட்சி மொழிச் சட்டம் தமிழக அரசினரால் கொண்டுவரப்பட்டது. கி.பி. *1959*-ஆம் ஆண்டு சனவரி தொடங்கிப் படிப்படியாகப் பல அலுவலகங்களிலும் தமிழ் ஆட்சி மொழியாகப் பயன்பட்டு வருகிறது. கல்லூரிகளில் பயிற்று மொழியாகவும் கி.பி. *1960-1961*-இல் தமிழ் மொழி கொண்டுவரப்பட்டுள்ளது. இத்திட்டங்கள் நிறைவேறத் தமிழகத்தில் அச்சிடப்பட்ட தமிழ் நூல்களின் விளக்கப்பட்டியல் அமைத்தல் வேண்டும் என்னும் கருத்துத் தோன்றியது.

இம்முயற்சியின் முதற்படியாகத் தமிழகத்தில் பதிவு செய்யப்பெற்ற தமிழ் நூல்களின் விளக்கம் காணும் பணி தொடங்கப் பெற்றது. முதன் முதலில் தொல்லேட்டு அலுவலகத்தில் உள்ள அனைத்து மொழி நூல்களினின்றும் தமிழ் நூல்களைத் தனிப்படப் பிரித்து வைக்கத் தமிழக அரசு ஆணை பிறப்பித்தது. பின்னர், அவற்றிற்கு நூல் விளக்க அட்டவணை தயாரிக்கவும் *1960*-ஆம் ஆண்டு செப்டம்பர் முதல்நாள் தொடக்கமாகத் தனி அலுவலகமும் தோற்றுவிக்கப் பெற்றது. இது தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தின் ஒரு பிரிவாக அமைக்கப் பெற்றதாகும்.

இப்பொழுது இவ்வலுவலகம் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநரின் கண்காணிப்பில் உள்ளது.

இனிச் சென்ற ஏழாண்டுகளில் இந்நிலையத்தின் வளர்ச்சிப் பணிகளை நோக்குவோம். கி.பி. *1867*-ஆம் ஆண்டுப் புத்தகப் பதிவுச் சட்டப்படி (Books Registration Act, 1867) பதிவு செய்யப் பெற்ற தமிழ் நூல்களின் விவரம் எழுதித் தொகுக்கும் பணி இங்கு நடைபெற்று வருகிறது.

இத்தமிழ் நூல் விவர அட்டவணைகள் கால அளவை வரையறுத்துக் கொண்டு தொகுதி தொகுதியாக அமைத்து அச்சிடப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு தொகுதியும் ஆயிரத்திற்கு மேற்பட்ட பக்கங்கள் கொண்டனவாக அமைதலால் அவை தனிப் பகுதிகளாகவும் பிரித்து வெளியிடப்பட்டு வருகின்றன.

முதல் தொகுதி (கி.பி. *1867-1900*) ஐந்து பகுதிகளாக வெளியிடப்பட்டிருக்கிறது. இவற்றுள் முதல் மூன்று பகுதிகள் தொல்லேட்டு அலுவலகத்திலிருந்து கிடைக்கப் பெற்ற நூல்களுக்குரியன. நான்காம், ஐந்தாம் பகுதிகள் இக்காலப் பகுதியில் கிடைக்கப் பெறாத நூல்களுக்கு உரியன.

ஒவ்வொரு தொகுதிக்கும் பொருளகராதி, ஆசிரியர் அகரவரிசை, நூல் அகரவரிசை, முதலியன தனித்தனியே தரப்பட்டுள்ளன. இவை கிடைக்கப் பெற்ற நூல்களுக்குத் தனியாகவும், கிடைக்கப் பெறாத நூல்களுக்குத் தனியாகவும் நூல்பற்றிய விவரங்களின்பின் சேர்க்கப்பட்டுள்

ளன. ஆசிரியர் அகரவரிசையில் ஆசிரியர் பெயரின் கீழ் அவர்தம் நூல்கள் அகராதியடைவில் கொடுக் கப்பட்டிருக்கின்றன. நூல் அகரவரிசையில் நூற் பெயரை அடுத்து ஆசிரியர் பெயரும் தரப்பட் டிருக்கிறது.

இரண்டாம் தொகுதி 1901 முதல் 1910-ஆம் ஆண்டு வரை பதிவான நூல்களுக்குரிய விவரங் களின் தொகுப்பு. இதில் கிடைக்கப் பெற்ற நூல் களுக்கு இரு பகுதிகளும் கிடைக்கப் பெறுதவற் றிற்கு ஒரு பகுதியுமாக மூன்று பகுதிகள் உள. இவற்றுள் முதற் பகுதி அச்சில் வெளிவந்துள்ளது. இரண்டாவது பகுதியின் அச்சு வேலை முடிவுற்று வெளிவரும் நிலையில் உள்ளது. இக்காலப்பகுதியில் கிடைக்கப் பெறுத நூல்களின் விவரம் தரும் மூன்ருவது பகுதி அடுத்து அச்சாக இருக்கிறது.

வரவரத் தமிழ் நூல்களின் எண்ணிக்கை மிக அதிகமாகிக்கொண்டே வருவதால்கி.பி.1910-ஆம் ஆண்டிற்குப் பின்னர் உள்ள காலப்பகுதிகளுக்கு ஐந்தாண்டுகளுக்கு ஒரு தொகுதியாக அமைக்க வேண்டும் எனக் கொள்ளப் பெற்றிருக்கிறது. அதோடு இவற்றை மூன்று பகுதிகளாக, அதாவது கிடைக்கப் பெற்ற நூல்களுக்கு இரண்டும் கிடைக் கப் பெறுத நூல்களுக்கு ஒன்றுமாக அமைத்துக் கொள்வதென்றும் உறுதி செய்யப் பெற்றிருக் கிறது. மூன்றும் தொகுதி (1911-1915), நான் காம் தொகுதி (1916-1920) ஆகிய இரண்டற் கும் உரிய கையெழுத்துப்படிகள் அச்சிடும் பொருட்டு அரசாங்க அச்சகத்திற்கு அனுப்பி வைக்கப் பெற்றிருக்கிறது.

இப்பொழுது ஐந்தாம் தொகுதிக்கான (1921-1925) கையெழுத்துப்படி எழுதும் பணி நடை பெற்று வருகிறது. ஆறும் தொகுதிக்கான (1926-1930) தொகுப்புப் பணியும் தொடர்ந்து நடை பெற்றுவருகிறது.

மேலும், தமிழ் நூற்பட்டியல்பற்றி ஏனையோர் செய்துவரும் பணிகளும் சில உள. இங்குக் குறிப்பிடத் தக்கது கல்கத்தாவிலுள்ள தேசிய நூலகத்தாரின் பணி. பாரத நாட்டின் பல்வேறு மொழிகளில் வெளியிடப்பெறும் அனைத்து நூல்களும் கல்கத்தாவிலுள்ள தேசிய நூலகத்திற்கும், மற்றும் டில்லி, பம்பாய், சென்னை ஆகிய இடங்களில் உள்ள அரசாங்க உயர் நூலகங் களுக்கும் அனுப்பி வைக்கப்பட வேண்டும் என ஒரு சட்டம் கி.பி. 1954-இல் கொண்டுவரப்பட் டது. 'டெலிவரி ஆப் புக்ஸ் ஆக்ட்' (Delivery of Books Act) 1956-இல் 99-ஆம் எண் திருத்தத் துடன்கூடிய 1954-ஆம் ஆண்டுச் சட்டமே இதற்கு வழி செய்கிறது. இதன்படி தம் நிலையத்திற்கு வரும் எல்லா மொழி நூல்களுக்குமான ஒரு நூல் விவரப்பட்டியலைத் (Indian National Bibliography) தேசிய நூலகம் உரோமன் எழுத்தில் 1958-ஆம் ஆண்டு முதல் ஆண்டுதோறும் வெளியிட்டு வருகிறது. இந்தப் பட்டியல் பொருளடைவில் வகுத்தும் தொகுத்தும் தரப்படுகிறது. தனிப் பட்டவர்கள், நூல் வெளியீட்டாளர்கள், தனி யார் நிறுவனங்கள், மாநில, இந்திய அரசினரால் வெளியிடப் பெறும் நூல்கள் ஆகியவை எல்லாம் இதில் இடம் பெறுகின்றன. பாடப் புத்தகங் களுக்கு விளக்கம் தரவந்த வெளியீடுகளும், வணிகரின் விலைப்பட்டியல்களும், தற்காலிக மதிப்புடைய சிறு நூல்களும் (Ephimeral Publication) இதன்கண் சேர்க்கப்படுவதில்லை.

இன்னும் இந்நூலகம் மாநில அரசுகளின் ஒத் துழைப்புடன் அவ்வம்மொழி நூல்களை, அவ்வம் மொழிகளில் தனித்தொகுதியாக வெளியிடவும் உதவி வருகிறது. 'இந்திய தேசிய நூல் விவரப் பட்டியலி'ன் தமிழ்ப்பகுதிகள் 1958 முதல் 1962 வரையில் இப்பொழுது தனித்தனித் தொகுதி களாக வெளிவந்துள்ளன.

சென்னையில் உள்ள தமிழக அரசின் பொது நூலகமாகிய கன்னிமாராப் பொது நூலகத்தி லிருந்து குழந்தைகளுக்கான தமிழ் நூல்களின் தொகுப்பு ஒவ்வோர் ஆண்டிற்கும் வெளியிடப் பெற்று வருகிறது. இந்நிலைய வெளியீடாகிய "குழந்தை நூற்றொகை"யின் (Children's Bibliography) முதல் நூல் 1963 ஆம் ஆண்டிற்கு அச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கிறது. மேலும், இப் பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

இது போன்றே விஞ்ஞானம் முதலிய அறிவியல் துறைகளுக்கும் தனித்தனி நூற்றொகை விளக்கங் கள் வெளிவருமாயின் அவ்வத்துறைகள் தமிழில் அடைந்திருக்கும் வளர்ச்சியை உலகிற்கு எடுத்துக் காட்டும் வாயிலாக அமையும். புதுப் புதுத்துறை களில் நூல்கள் வெளிவருவதற்கும் இந்நூலடைவு கள் தூண்டுகோலாகப் பெரிதும் உதவும் என்பது ஒருதலை.

---

1. Art, Biography, Drama, Fiction, History, Language, Law, Medicine, Miscellaneous, Philosophy, Poetry, Politics, Religion, Science-Mathematical, Science-Natural etc.,

2. Author and title, brief subject including the age of the book where same is obscure, number of pages, Publisher and place of publication, date given on the title page with the name of era-when other than christian era, date of issue from the press or publication, size, edition, and Price.

3. A Catalogue of the tamil Books in the Library of the British Museum-1909.

4. A supplementary Catalogue of the Tamil Books in the British Museum-1931.

5. Madras Record Office: Classified Catalogue of Books Registered from

1890-1900 at the Office of the Registrar of Books, Published, 1961

| | | | |
|---|---|---|---|
| ,, 1901-1910 | ,, | ,, | 1964 |
| ,, 1911-1915 | ,, | ,, | 1965 |
| ,, 1916-1920 | ,, | ,, | 1966 |



வள்ளுவர் வீரம்

என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை
முன்நின்று கல்நின் றவர் —(குறள்: 771)

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து

இரா. நடராசன், பி.ஏ.
துணையாசிரியர், தமிழ்க் கலைக் களஞ்சியம்

# தமிழில் செய்தி இதழ்கள்



### தோற்றுவாய் :

உலக அரசியல், சமூகம், கல்வி, விஞ்ஞானம், வாணிகம், சமயம் முதலிய எல்லாத் துறைகளிலும் கண்டுபிடிக்கப்படும் புதிய தகவல்கள், நிகழும் புதிய நிகழ்ச்சிகள் அனைத்தும் செய்திகளேயாகும். இச்செய்திகளைத் தாங்கி வருபவை செய்தி இதழ்களாகும். இவை அவ்வத்துறை பற்றியனவாகவோ, அன்றி எல்லாத் துறைகளையும்பற்றியனவாகவோ அமையலாம். எடுத்துக்காட்டாக, வாணிகம் பற்றிய இதழ்களில் வாணிகம், அதனுடன் தொடர்புடைய பொருளாதாரம் இவைபற்றிய செய்திகள் மட்டுமே இடம் பெறுகின்றன. சில பெரிய நாளிதழ்களில் அரசியல், சமூகவியல், கல்வி, விஞ்ஞானம், வாணிகம், சமயம் ஆகிய எல்லாத் துறைகளையும் பற்றிய செய்திகள் இடம் பெறுவதைக் காணலாம்.

### செய்தி இதழ்கள் :

இன்றையச் செய்தி இதழ்களை இருவகையாகப் பிரிக்கலாம் : (1) நாளிதழ்கள் ( News papers ) (2) பருவ இதழ்கள் ( Periodicals ).

நாளிதழ்களுக்கும் பருவ இதழ்களுக்கும் சில முக்கிய வேற்றுமைகள் உண்டு. உலகில் அன்றாடம் நடைபெறும் அரசியல், சமூக நிகழ்ச்சிகள், புதிய விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள், சாதனைகள் போன்ற புதிய செய்திகளுக்கே நாளிதழ்கள் சிறப்பிடம் அளிக்கின்றன. வெளியாகவிருக்கும் சில நிமிடங்களுக்கு முன்வரை வரும் செய்திகளையும் அச்சடிக்க வேண்டிய நெருக்கடியில் மிக விரைந்து மனோவேகமாகச் செய்திகளை எழுதும் அல்லது மொழி பெயர்க்கும் கட்டாயம் ஏற்படுவதால் ஆர அமர இருந்தெண்ணி இலக்கிய இன்பத்தை வளர்க்கும் வாய்ப்பு நாளிதழ்களில் இல்லை. இவற்றின் வார மலர், ஆண்டுமலர் முதலியவற்றில் மட்டுமே இவ்வாய்ப்பு உண்டு.

நாளிதழ்களைப்போல் நாளும் நேரத்துடன் போட்டியிட வேண்டிய அவசியம் பருவ இதழ்களுக்கு இல்லை. செய்திகளுக்குரிய பின்னணியையும், முன்வரலாற்றையும், விளக்கப்படங்களையும் நிதானமாகத் தேடிச் சேகரித்து, ஆராய்ந்து கட்டுரை வடிவில் இலக்கிய நயம் மிளிர எழுதி அச்சடித்து வெளியிடப் போதிய காலம் இவ்விதழ்களுக்கு உண்டு.

தமிழில் இப்பொழுது நாளிதழ்களும், மற்றும் பல்வகைப் பருவ இதழ்களும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. பருவ இதழ்களில் வார இதழ்கள், மாதமிரு முறை இதழ்கள், மாத இதழ்கள் குறிப்பிடத்தக்கன.

### 1900க்குமுன் :

தமிழ் நாட்டில் 1830 வரையில் தமிழில் தனி இதழ்கள் தொடங்கப் பெறவில்லை. இத்துறையி

லும் முதல் முயற்சி மேற்கொண்டவர்கள் பாதிரி மார்களேயாவர். சென்னையிலிருந்த கிறித்தவ சமயப் பிரச்சாரக் கழகம் (Religious Tract Society) 1831-இல் செய்தி இதழ் ஒன்றை முழுவதும் தமிழில் தொடங்கியது. அடுத்து 1832-இல் 'மெட்ராஸ் கிரானிக்கிள்' (Madras Chronicle) என்ற பெயரில் தமிழிலும், தெலுங்கிலும் இதழ்கள் வெளியிட மூவர்கூட்டாக அரசினரிடம் அனுமதி வேண்டினர். இது 1835-இல் வெளி வந்ததாகத் தெரிகிறது. இதுதான் தமிழில் முதலில் வெளிவந்த செய்தி இதழ் என மார்க்ரெட் பார்ன்ஸ் என்பவர் குறிப்பிடுகிறார். ஆனால், 1833-இலேயே 'விருத்தாந்தி' என்ற பெயரில் தமிழிலும், தெலுங்கிலும் செய்தி இதழ்கள் வெளிவந்து கொண்டிருந்ததாக ஜே. லாங் என்பவர் கூறியுள்ளார். இதற்கு அரசினர் (கிழக்கிந்தியக் கம்பெனி) ஆதரவு இருந்தும், 1838-க்குப் பிறகு மறைந்துவிட்டது. அடுத்து வெளிவந்த தமிழ் இதழ்களில் முக்கியமானது 'ராஜவர்த்தி போதினி' ஆகும். இது 1855-இல் தொடங்கி மாதம் மும்முறை வெளிவந்தது. இதில் ஆங்கில இதழ்களில் வெளியான செய்திகளின் மொழி பெயர்ப்புக்கள் மட்டுமே இடம்பெற்றன. அதே ஆண்டில் 'தினவர்த்தமானி' என்னும் இன்னொரு தமிழ் வார இதழை மேதகு. பி. பெர்சிவல் ( Rev. P. Percival ) என்பார் நிறுவினர். இது மக்களிடையே நல்ல செல்வாக்குப் பெற்று விளங்கியது.

1857-இல் முதலாவது இந்தியக் கிளர்ச்சி (சிப்பாய்க் கலகம்) ஏற்படுவதற்கு முன்பு தமிழில் தோன்றிய செய்தி இதழ்கள் மிகச்சிலவே. அவற்றில் ஒன்றிரண்டுதான் 1860, 1870 வரை நீடித்து வாழ்ந்தன.

1857 கிளர்ச்சிக்குப் பிறகு அடிமைத் தளையில் கட்டுண்டு கிடந்த மக்கள் விழிப்படைந்தனர். இக்காலத்தில் பல செய்தி இதழ்கள் தோன்றுவதற்கு வாய்ப்பு ஏற்பட்டது. அதே நேரத்தில் 1879-இல் இயற்றப்பட்ட நாட்டுமொழிச் செய்தி இதழ்கள் சட்டமும், எழுத்துரிமையை வலிறுத்தி இந்திய மொழிகளில் பல புதிய இதழ்கள் தோன்ற ஊக்கமளித்தது. தமிழ் நாட்டில் நூற்றுக்கும் மேலான செய்தி இதழ்கள் வெளிவந்தன. இவற்றில் பல்வேறு பகுதிகளைத் தன்னகத்தேகொண்ட இதழ்கள் சில. சமய விளக்கங்களும், மறுப்புக்களும் சில இதழ்களில் வெளிவந்தன. சில சமய வளர்ச்சிக்கும், சில பெண்கள், ஆசிரியர், இளைஞர், சிறுவர் பகுதிக்கும், சில தத்துவம் போன்றவற்றுக்கும் சிறப்பாகப் பயன்பட்டன. 1831-இலிருந்து 1900வரை தோன்றிய தமிழ்ச்செய்தி இதழ்களில் வேறு சில பின்வருமாறு (அடைப்புக் குறிக்குள் தொடங்கிய ஆண்டு)[1].

1) தமிழ்ப்பத்திரிகை (1831-மாத இதழ்); 2) பால தீபிகை (1840-52, மும்மாத இதழ்); 3) சிறுபிள்ளையின் தேசத்தோழன் (1849—சிறுவர் இதழ்); 4) நற்போதகம் (1848 - மாத இதழ்); 5) தர்ம பள்ளி போதகம் (1850-61, மாத இதழ்) 6) தேசோபகாரி (1860 - மாத இதழ்); 7) தத்துவ போதினி (1864 - மாத இதழ்); 8) அமிழ்தவசனி (1860-பெண்களிதழ்); 9) கலாவர்த்தனி (1866 - மாத இதழ்); 10) சுகத்திய வர்த்தமானி (1870 - மாத இதழ்); 11) ஜனவினோதினி (1870); 12) தேசாபிமானி (1877); 13) நடுத்தர, உயர்தரப் பள்ளி நண்பன் (1879); 14) சித்தாந்த ரத்நாகரம் (1880); 15) பரதத்வ பிரகாசிகை (1881); 16) சைவ உதயபானு (1882 - வார இதழ்); 17) மகாவிகடதூதன் (1882); 18) சுகுணபோதினி (1883); 19) ஞானாமிர்தம் (1883); 20) சன்மார்க்க போதினி (1885); 21) மனோரஞ்சித விநோதம் (1886); 22) கலாதரங்கிணி (1886-89, வார இதழ்); 23) திராவிட ரஞ்சனி (1887-மாத இதழ்); 24) பிரமவித்தியா (1887); 25) சுகசீவனி (1887); 26) லோக ரஞ்சனி (1887 - மாத இதழ்); 27) சத்திய தூதன் (1887 - மாத இதழ்); 28) ஸ்ரீலோகரஞ்சனி (1887 - மாத இதழ்); 29) உபாத்தியாயர் (1887); 30) கிராம வியவஹாரினி (1889); 31) மாதர் மித்திரி (1889); 32) கோயம்புத்தூர் கலாநிதி (1890-மாத இதழ்); 33) சிவபக்தி சந்திரிகை (1890-93); 34) திரிபுரத்தமிழ்ச் செல்வன் (1890-வார இதழ்); 35) ஞான நிலலோசனி (1890-வார இதழ்); 36) சிவரத்ந மகுடம் (1891); 37) சுகாதார போதினி (1891); 38) பெண் மதி போதினி (1891); 39) விவேக சிந்தாமணி (1892 - மாத இதழ்); 40) மாதாந்தர சட்டப் பத்திரிகை (1893 - மாத இதழ்); 41) விசயத்துவம் (1893); 42) போலீசுத்தூதன் (1893 - மாதமிருமுறை); 43) ஞானபானு (1894 - மாத இதழ்); 44) திருச்செங்கோட்டு விவேகா திலகன் (1894 - வார இதழ்); 45) ஷண்முக விஜயம் (1894); 46) பகவத்கீதா பாஷ்யார்த்த போதினி (1895); 47) சோமரவி (1895 - மும்மாத இதழ்); 48) மாணவர் போதகம் (1895-மாத இதழ்); 49) லோகோபகாரி (1896 - வார இதழ்); 50) ஞானபோதினி (1897-1905); 51) சித்தாந்த தீபிகை (1897 - மாத இதழ்); 52) பிரபஞ்ச மித்திரன் (1898 - வார இதழ்); 53) மாதர் மனோரஞ்சனி (1899 - மாத இதழ்); 54) கிராமாதிகாரி (1900 - மாத இதழ்); 55) விநோத விசித்திரப் பத்திரிகை (1900); 56) ஞானப்பிரியன் (1900).

மேற்கண்ட தமிழ் இதழ்களில் பெரும்பாலன காலமெனும் கடுங்காற்றில் எதிர் நிற்க மாட்டாமல் தலைசாய்த்துவிட்டன. ஆட்சியாளர்களின் கண்காணிப்பும், கட்டுப்பாடுகளும் இவற்றின் மறைவுக்கு முக்கிய காரணமாயின. சென்ற நூற்றாண்டின் தலைவாயிலில் செய்தி இதழ் உரிமையாளர், ஆசிரியர் ஆகியோர்பற்றிய குறிப்புக்களை இதழின் கடைசிப் பக்கத்தில் அச்சிட வேண்டுமென்ற ஆணையை வைஸ்ராய் ( Viceroy ) பிறப்பித்தார். மேலும், மாநிலக் கவர்னரும் பல்வேறு கட்டுப்பாடுகளை உண்டாக்கியும், தளர்த்தியும், வளர்த்தும் வந்ததால், அவற்றால் செய்தி இதழ்களுக்கு நலிவும், தாழ்வும் உண்டாயின. ஒரு சில இதழ்கள் சில ஆண்டுகள் வெற்றி முரசு

கொட்டி வாழ்ந்தன. இவற்றுள் ஒன்றையும் இன்று காண்பது அரிதாகிவிட்டது. 'சுதேசமித்திரன்' நாளிதழ் மட்டும் இதற்கு விதிவிலக்காய், தோன்றிய நாள்தொட்டு (1882) இன்றுவரை நம்மிடையே வாழ்ந்து வருகின்றது.

1885-இல் இந்திய தேசீயக் காங்கிரசு தோன்றியதும் நாட்டின் அரசியல் துறையில் புதிய வேகம் பிறந்தது. இந்தியச் செய்தி இதழ்களின் வரலாற்றில் புதிய அத்தியாயம் துவங்கியது. சாதாரண மக்களுக்கும் நாட்டு நடப்பை உணர்த்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அப்போதுதான் தாய்மொழி இதழ்களின் முக்கியத்துவம் உணரப்பட்டது. தமிழ் நாட்டில் இத்தேவையை முதலில் உணர்ந்து, அதை நிறைவு செய்யும் முயற்சியில் முனைந்தவர் திரு. ஜி. சுப்பிரமணிய ஐயராவார். இவர் ஏற்கெனவே 'இந்து' ஆங்கில இதழை 1878-இல் துவங்கி அதன் ஆசிரியராகவும் பணியாற்றி வந்தார். 1882-இல் 'சுதேசமித்திரன்' இதழைத் துவங்கினர். இந்திய நாட்டின் அரசியல் துறையை மூடியிருந்த திரையை விலக்கி, தமிழ் மக்களுக்கு உண்மை நிலையைப் படம் பிடித்துக் காட்டும் ஒரு சாதனமாக இவ்விதழ் அமைந்தது. தமிழ் மக்களின் உணர்ச்சிகளையும், உள்ளக்கிடக்கைகளையும் எடுத்துரைக்கும் கருவியாகவும் இது விளங்கியது. ஆரம்பத்தில் வார இதழாகத் தொடங்கிய இது, மிக விரைவில் மக்களின் பேராதரவைப் பெற்றது. அப்போதிருந்த எல்லாத் தமிழ் இதழ்களிலும் விற்பனையில் இதுவே முதலிடம் பெற்றது (1500 படிகள்). இதற்கு அடுத்தபடியாக அதிகம் விற்பனையான தமிழ் இதழ் 'தினவர்த்தமானி' (784) ஆகும். அதே காலத்தில் வேறு 13 தமிழ் இதழ்களும் உலவின. அவற்றுள் விகடதூதன், வெற்றிக் கொடியான், பாரியான், ஆரிய ஜன பாரியான் ஆகியவை குறிப்பிடத்தக்கன. இவற்றிலெல்லாம் அரசாங்கத்திற்கு மிகவும் ஆபத்தானதெனக் கருதப்பட்டது சுதேசமித்திரனேயாகும்.

அந்நியராட்சியில் உழன்று, விடுதலைக்குத் துடித்துக் கொண்டிருந்த ஒரு சமுதாயத்தின் உள்ளக்கிடக்கையை — மனக்கொந்தளிப்பைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழ்ச் செய்தி இதழ்கள் விளங்கின. அவை எப்படித் தோன்றினும், யாரால் தொடங்கப்பெறினும், அவை அக்கால மக்களின் உள்ளத்தைத் தொடுவனவாய், உறங்கிக்கிடந்த நாட்டுணர்வைத் தட்டி எழுப்புவனவாய், அவ்வுணர்ச்சிகளின் வடிகாலாய் விளங்கின. 1857 கிளர்ச்சிக்குப்பின் ஏற்பட்ட இந்திய மறுமலர்ச்சி, இந்திய தேசீயக் காங்கிரசின் துவக்கம், தாய்மொழி இதழ்களின் தோற்றம் இவை அனைத்தும் நாட்டில் எழுச்சி பெற்ற புதிய சக்திகளின் சின்னங்களாய் இலங்கின. செய்தி இதழ்கள் தெரிவித்த கருத்துக்களும், மக்களின் கருத்தைத் திரட்டுவதில் அவைகொண்ட பங்கும், அரசாங்கத்திற்கும் செய்தி இதழ் உலகிற்குமிடையே உருவான பெரும் போராட்டத்திற்கு அடிகோலின. அதோடு அரசியல் சமூகச் சீர்திருத்தங்களில் இவ்விதழ்கள் கொண்ட பங்கும் மகத்தானது.

**20ஆம் நூற்றாண்டில்......**

இருபதாம் நூற்றாண்டு தொடங்கியபோது மதுரைத் தமிழ்ச்சங்கம் போன்ற பல சங்கங்கள் தமிழை வளர்க்கத் தோன்றின. அரசியல், சமயம். தொழில், வாணிகம் என்ற எல்லாத் துறைகளிலும் ஊர்தோறும் சங்கங்கள் எழுந்தன. இச்சங்கங்களில் மாத இதழ்களும், பிற வெளியீடுகளும் வெளியாயின. இவற்றுள் சில நீண்டு வாழாமற் போனாலும், அவை அவ்வப்போது தோன்றித் தமிழை வளர்த்தன. ஞானபானு, தமிழ்ப் பொழில், செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, ஞான சாகரம், சித்தாந்தம் என்று எத்தனையோ இதழ்களைத் தமிழ்நாடு கண்டுள்ளது.

ஆனால், அவற்றில் அந்நாளில் உயிர்த்துடிப்பைக் காண்பது அரிது. கட்டுரைகளே முதலில் செய்தி இதழ்களில் வெளிவந்தன. சமயம், இலக்கியம், அவ்வப்போது உண்டான அரசாங்கச் சட்டங்கள், விதிகள், விளக்கங்கள் இவைபற்றியனவாகக் கட்டுரைகள் இருந்த நிலைமாறி எல்லாத் துறைகளிலும் அவை பரவலாயின. அரசியல் போராட்டம் பொதுமக்கள் போராட்டமாக வளர்ந்தபொழுது, அந்த உயிர்த்துடிப்போடு பல செய்தி இதழ்கள் தோன்றின. பாரதியார் தமது சுதந்திர தாகத்தை வெளியிடுவதற்குச் சொந்தமாக ஓர் இதழ் தேவை என உணர்ந்ததும், ஒரு தேச பக்தரின் உதவியால் 1907 ஏப்ரலில் 'இந்தியா' என்னும் இதழைத் துவங்கினர். பாரதியின் 'இந்தியா', பாவலரின் 'இன்றைய சமாச்சாரம்', திரு. வி. க. வின் 'தேசபக்தன்' ஆகியவை ஓர் புதிய இலக்கிய நடையை செய்தி இதழ் உலகில் பரவவிட்டன. திரு. வி. க. இந்த வகையில் நிகழ்த்திய புரட்சி நிலைபேறடைந்து விட்டது. எல்லோருமே இந்நடையைப் பின்பற்றத் தொடங்கினர். திராவிட இயக்கத்தின் வெளியீடான 'திராவிடன்', 'குடியரசு' இதழ்களும் இந்த முறையையே பின்பற்றின. பல வார இதழ்களும் தமிழறிவிற் சிறந்த எழுத்தாளர்கள் கையில் வளர்ந்து ஓங்கின. திரு .வி. க. வின் 'நவசக்தி', பாவலரின் 'பாரதி', அவரது 'தேச பக்தன்', வடிவேலுச் செட்டியாரின் 'லோகோபகாரி', இராஜாஜியின் 'விமோசனம்' முதலியவற்றை இங்குக் குறிப்பிடலாம். திரு. வி. க.' வினிடத்தில் பயிற்சி பெற்ற ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) முதலில் ஆனந்தவிகடனிலும், பின்னர்க் கல்கியிலும் (1941) தொண்டாற்றிப் புகழ் நாட்டினர்; பாரதியார் தொடங்கிய தமிழ் மறுமலர்ச்சியைச் சிறந்த முறையில் வளர்த்துப் பாதுகாத்து நன்கு பலன் தரும்படி செய்தார். மக்களுக்கு எப்படி எழுதினால், எதை எந்த வகையில் சொன்னால் மனத்துக்குப் பிடிக்கிறது என்றெல்லாம் ஆராய்ந்து செய்தி இதழ் உலகில் பல புதிய உத்திகளை வகுத்தார். செய்தி இதழ்களின் வாயிலாகத்தான் எழுத்து நடையில் காணப்பெறாத நகைச்சுவை, மேடைப் பேச்சிலிருந்து 20-ஆம் நூற்றாண்டில் இலக்கியத்தில் நுழைந்தது எனலாம். விகடத்திற்கென்றே பல வார இதழ்கள் தோன்றின. விகடரத்தினம், விஜயவிகடன், ஆனந்த விகடன், பிரசண்ட விகடன் முதலிய பெயர்களே இதற்குச் சான்று பகரும்.

இந்தியச் சுதந்திரப் போராட்டம் உச்சக்கட்டத்தை அடைந்திருந்த சமயம் (1942) சில சிறந்த நாளிதழ்களும், பல பருவ இதழ்களும் தமிழகத்தில் வெளியாகின. இவற்றில் 'தினமணி', டாக்டர் பி. வரதராசுலு நாயுடுவின் 'தமிழ் நாடு', திரு. டி. எஸ். சொக்கலிங்கத்தின், 'தினசரி', திரு. எம். பக்தவத்சலத்தின் (தமிழக முன்னாள் முதலமைச்சர்) 'பாரததேவி' ஆகிய மூன்று நாளிதழ்களும் குறிப்பிடத்தக்கன.

**வெளிநாடுகளில்.....**

தமிழ் நாட்டில் மட்டுமின்றி இலங்கை, மலேயா, சிங்கப்பூர் முதலிய வெளி நாடுகளிலும் தமிழ் இதழ்கள் பல தோன்றின. இலங்கையில் முதன்முதலில் தமிழ் இதழ் தோன்றியது 1841-இல் ஆகும். அவ்விதழின் பெயர் 'உதய தாரகை'. இது யாழ்ப்பாணத்திலிருந்து மாதம் இருமுறை வெளிவந்தது. இது பத்தாண்டுகள் வாழ்ந்ததாகத் தெரிகிறது. கொழும்பிலிருந்து 1848-இல் 'இலங்கை நேசன்' என்ற மாத இதழ் வெளியாகியது. யாழ்ப்பாணத்தில் 1876-இல் தோன்றிய 'சத்தியவேத பாதுகாவலன்' என்ற இதழும், 1889-இல் வெளியான 'இந்து சாதனம்' என்னும் சைவசமய இதழும் இன்னும் நற்றொண்டாற்றி வருகின்றன. 'ஞானதீபம்' என்ற மாத இதழ் கண்டியிலிருந்து 1892-இல் வெளிவந்தது. 'ஞானசித்தி' என்ற இதழ் யாழ்ப்பாணத்தில் 1908-இல் தொடங்கிச் சில ஆண்டுகள் நிலை நின்றது. 1922-இல் 'தமிழ்' என்னும் மாத இதழ் தொடங்கியதாகத் தெரிகிறது. அக்காலத்தில் 'தமிழ்போதினி', 'கலாவல்லி' என்ற இதழ்களும் தொடங்கப் பெற்றன. 'வீரகேசரி', 'ஈழ கேசரி' என்ற இதழ்கள் 1930-இல் கொழும்பில் தோன்றின. 1932-இல் 'தினகரன்' வெளி வரலாயிற்று. 1933-இல் கலா நிலையத்தாரால் 'ஞாயிறு' என்ற இதழ் வெளியிடப்பெற்றுச் சிறிது காலத்தில் நின்றுவிட்டது. ஆரிய திராவிட பாஷா விருத்தி சங்கத்தினர் 'கலாநிதி' என்ற முத்திங்களிதழைத் தொடங்கினர். இப்பொழுது கொழும்பிலிருந்து வீரகேசரி, மித்திரன் (மாலைப்பதிப்பு), தினபதி, தினகரன் ஆகிய நாளிதழ்கள் வெளியாகின்றன. வார இதழ்களில் செய்தி (கண்டி), சுதந்திரன் (கொழும்பு), ஈழநாடு (யாழ்ப்பாணம்) ஆகியவையும், மாத இதழ்களில் கலைச்செல்வி, விவேகி, மல்லிகை (யாழ்ப்பாணம்), இளம்பிறை (கொழும்பு) முதலியனவும் குறிப்பிடத்தக்கனவாகும்.

மலேயாவில் தமிழ் இதழ்கள் தோன்றுவதற்கு வழிகாட்டியது பினாங்கு நகராகும். அங்கு 1888-இல் 'இந்துநேசன்' தொடங்கப்பெற்றது. அதே ஆண்டில் 'பினாங்கு விஜய கேதனன்' என்ற இதழ் தோன்றி 1889 வரை வாழ்ந்தது. 'பினாங்கு வர்த்தமானி', 'உலகநேசன்' என்ற இரு இதழ்களும் 1897-இல் வெளிவந்தன. பேராக்கிலிருந்து 'தேஜோபிமானி' என்ற இதழ் 1896-97-இல் வெளிவந்தது. சிங்கப்பூரில் 'சிங்கைநேசன்' 1887-இல் தோன்றி 1890 வரை வெளியாயிற்று. இப்பொழுது திரு. கோ. சாரங்கபாணியின் தமிழ் முரசு (சிங்கப்பூர்), தமிழ் மலர் (சிங்கப்பூர்), தமிழ்நேசன் (கோலாலம்பூர்) ஆகிய நாளிதழ்களும், பொன்னி (கோலாலம்பூர்), மனோகரன் (சிங்கப்பூர்) ஆகிய மாத இதழ்களும் செல்வாக்குடன் விளங்குகின்றன.

**இன்றைய நிலை :**

பொதுவாக இந்தியாவிலும், குறிப்பாகத் தமிழ் நாட்டிலும் செய்தி இதழ்களின் இன்றைய நிலையை இங்குக் கூறுவது பொருந்தும். 1966-ஆம் ஆண்டின் இறுதி நிலவரப்படி இந்நாட்டில் 46 மொழிகளில் நாளிதழ்களும் பருவ இதழ்களுமாக மொத்தம் 10,977 இயங்கி வருகின்றன[2]. தமிழகத்தில் ஆங்கிலம் தெலுங்கு, உருது, கன்னடம், மலையாளம், இந்தி குஜராத்தி, மராத்தி ஆகிய ஒன்பது மொழிகளில் மொத்தம் 759 செய்தி இதழ்கள் வெளிவருகின்றன. இவற்றில் தமிழில் வெளியாகும் இதழ்கள் மட்டும் 457. இவற்றுள் நாளிதழ்கள் - 30; வார இதழ்கள் - 59; மாதம் இருமுறை இதழ்கள் - 95; மாத இதழ்கள் - 214.

**முடிவுரை :**

சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றி இன்று தமிழ்நாட்டில் பேச்சு இலக்கியத்துக்கு அடுத்தபடியாகச் சிறந்த இலக்கியச் செல்வங்களாகச் செய்தி இதழ்கள் உருப்பெற்றிருக்கின்றன. நாட்டின் முதுகெலும்பாகவும் இவை கருதப்படுகின்றன. செய்தி இதழானது எல்லோருக்கும் விளங்க எழுதி வரவேண்டும். அப்போதைக்கப்போது உலகில் நிகழும் செய்திகளையும், புதிய புதிய மாறுதல்களையும், கருத்துக்களையும் எழுதி வரவேண்டும்.

இக்காலச் செய்தி இதழ்களில் சில சிறு நிகழ்ச்சியையும் உணர்ச்சியூட்டும் வகையில் பெரிது படுத்தி எழுதி ( Sensationalism ) வருகின்றன. இந்த முறை பல சமயங்களில் மக்களிடையே அச்சத்தைப் பரப்புவதாகவும், அவர்களைத் தவறான வழியில் செலுத்துவதாகவும், அமைகிறது. எனவே, இம்முறையினைச் செய்தி இதழ்கள் கூடியவரை தவிர்க்க வேண்டும். தமிழகச் செய்தி இதழ் உலகம் குழவிப் பருவத்தைக் கடந்து இன்று காளைப்பருவத்தை எட்டிவிட்டது என்றாலும், இத்தொழில் ஒரு திட நிலையை அடைந்துவிட்டதாக இதற்குள் கூறிவிட முடியாது. சில தராதரங்களை வகுத்துக்கொண்டு, அதன் வரம்புக்குள் நின்று, ஆக்க முறையில் தொண்டு செய்வதற்குரிய நேரிய வழியினை வகுத்துக் கொடுக்க வேண்டியது இன்றைய தமிழ் இதழ்களின் கடமையாகும்.

---

1. 'பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரை நடைவளர்ச்சி' -அ. மு. பரமசிவானந்தம்.

2. Press in India—1966 : Report of the Registrar of Newspapers for India.

இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்.

**வை. நடராசன், ஐ.ஏ.எஸ்.**
கிராம வளர்ச்சித்துறை இயக்குநர், தமிழக அரசு.




பஞ்சாயத்து அல்லது ஊராட்சி என்பது தமிழகத்திற்குப் புதியது அல்ல.

ஒவ்வோர் ஊர் மக்களும், தங்களுடைய பொதுநல வாழ்க்கையைப் பரிபாலிப்பதற்காகத் தேர்ந்தெடுத்து அமைக்கும் ஊராட்சியே பஞ்சாயத்து.

கிராம சபை அல்லது ஊர்ச் சபை என்று தமிழ் நாட்டில் வழங்கப்பட்ட இப்பஞ்சாயத்து, மத்திய இந்தியாவில் ''பஞ்சமண்டலிகள்'' என்ற பெயராலும், பீகாரில் 'கிராம ஜன பாதங்கள்'' என்ற பெயராலும், இராஜஸ்தானில் ''பஞ்ச குலங்கள்'' என்ற பெயராலும் வழக்கத்தில் இருந்து வந்தது.

தமிழ்நாட்டில் சேர — சோழ — பாண்டியருடைய முடியாட்சி நடைபெற்றாலும், ஒவ்வொரு கிராமத்திலும் ஊர்ச்சபை என்ற பெயரில் குடியாட்சி நடைபெற்றது. பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே மக்களாட்சி முறை இவ்வகையில் நிலவியது உண்மையில் நாம் பெருமைப்படத்தக்கதாகும். கால வேறுபாடு, அரசியல் நிலவரம், அக்காலச் சூழ்நிலை ஆகிய பல்வேறு காரணங்களால் அந்த ஆட்சியின் பெயரிலும், பொறுப்புக்களிலும் வேறுபாடு காணப்பட்டாலும் அதன் அடிப்படைத் தத்துவம் ஒன்றுதான்.

ஊராட்சி முறை நம் நாட்டில் எவ்வளவு பழைமையானது என்பதை அறுதியிட்டுக் குறிப்பிட ஒரு சில சான்றுகள் உள்ளன. பழைய வரலாற்றுச் சாசனங்களின் துணைகொண்டு பார்த்தால் கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்தே ஊராட்சி முறை செயல்பட்டு வந்திருப்பது தெரிகிறது. அதற்கு முன்னதாகவும் இது வழக்கில் இருந்து வந்ததென்பதற்குப் பழந்தமிழ் இலக்கியங்களான சங்க நூல்கள் சான்று கூறுகின்றன.

சிலப்பதிகாரம், மணிமேகலை, மதுரைக்காஞ்சி ஆகிய நூல்களில் அரசனுக்கு உறுதுணையாக ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்ற இரண்டு பேரவைகள் இருந்துவந்தன என்று கூறப்பட்டுள்ளன. மேலும் சங்க நூற்களில் ''மன்றம்'', ''பொதியில்'' ஆகியவை பற்றிய குறிப்புக்களும் காணப்படுகின்றன. இந்த ''மன்றம்'', ''பொதியில்'' ஆகியவற்றிற்கு, 'ஊருக்கு நடுவே எல்லோரும் இருக்கும் மரத்தடி' என்று விளக்கமும் தந்துள்ளார்கள். இத்தகைய மன்றங்களே பிற்காலத்தில் வழக்கில் இருந்த கிராம சபைகளின், அதாவது இன்றைய பஞ்சாயத்துக்களின் முன்னோடிகளாகும்.

மூவேந்தர்களின் நாடுகள் நிர்வாக வசதிக்காகப் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அந்தப் பிரிவுகள் இயற்கை அமைப்பை ஒட்டி இருந்தன.

சோழப் பெருநாடு பல வளநாடுகளாகவும், ஒவ்வொரு வளநாடும் பல நாடுகளாகவும், ஒவ்வொரு நாடும் பல ஊர்களாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. சிற்றூராயின், பலவூர் சேர்ந்தும், பேரூராயின் தனித்தும் ஊர் என்னும் அடிப்படை ஆள்நில உறுப்பாக வகுக்கப்பட்டிருந்தது.

பாண்டியப் பெருநாடு பல நாடுகளாகவும், ஒவ்வொரு நாடும் பல கூற்றங்களாவும். ஒவ்வொரு கூற்றமும் பல கூறுகளாகவும் அல்லது ஊர்களாகவும் வகுக்கப்பட்டிருந்தது. ஊர் என்பதற்குப் பதிலாகப் பிற்காலத்தில் 'கிராமம்' என்ற வடசொல் வழங்கப்பட்டது.

சேரப் பெருநாடும் பாண்டியப் பெருநாடு போன்றே வகுக்கப்பட்டிருந்தது.

இந்த ஊர் அல்லது கிராமத்தின் நிர்வாகத்தைக் கவனிக்க அரசனின் ஆணைப்படி அந்த ஊரில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சபை இருந்தது. அதை ஊர் என்ற பெயராலேயே வழங்கி வந்தனர். அச்சபையார்க்கு ''ஆளுங்கணம்'' என்றும் ''கணப்பெருமக்கள்' என்றும் 'வாரியப் பெருமக்கள்' என்றும் 'கணவாரியப் பெருமக்கள்' என்றும் பெயர்.

ஊர்ச்சபையானது, ஊராட்சி பற்றிய பல்வேறு காரியங்களைக் கவனிப்பதற்குப் பல்வேறு வாரியங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. வாரியம் என்பதற்கு 'மேற்பார்வை' அல்லது 'மேலாண்மை' என்பது பொருள். பெரும்பாலான கிராமங்களில் குறைந்த அளவு ஏழெட்டுக் குழுக்களாவது இருந்து நிர்வாகத்தை நடத்தி வந்தன. அவை

1. ஆட்டை வாரியம்
2. தோட்ட வாரியம்
3. ஏரி வாரியம்
4. கழனி வாரியம்
5. பஞ்சவார வாரியம்
6. கணக்கு வாரியம்
7. கலிங்கு வாரியம்
8. தடிவழி வாரியம்
9. பொன் வாரியம்

என்பனவாகும்.

'சம்வத்சர வாரியம்' என்று வடமொழியில் கூறப்பட்ட ஆட்டைவாரியம், ஊரைப் பற்றிய பொதுக்காரியங்களையும், அறமுறை, குற்றத் தீர்ப்பு முதலியவற்றையும் கவனித்தது. இது மற்றெல்லாக் குழுக்களைக் காட்டிலும் உயர்ந்ததும், முக்கியமானதுமாகும். இதில் பன்னிரண்டு பேர் உறுப்பினராக இருந்தார்கள். இவர்களது பதவிக் காலம் முந்நூற்றறுபது நாட்கள் என்று கல்வெட்டுக்கள் திட்டவட்டமாகக் குறிப்பிடுகின்றன. இதில் உறுப்பினராக இருக்கச் சில தகுதிகள் உண்டு. தோட்ட வாரியத்திலும், ஏரி வாரியத்திலும் அங்கத்தினராக இருந்து அனுபவம் பெற்றவராகவும், அறிவிலும், வயதிலும் முதிர்ந்தவராகவும் இருக்க வேண்டும். ''வித்யா விருத்திரையும் வயோ விருத்தர்களையும்'' என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

தோட்டம், தோப்பு, புன்செய் முதலியவற்றைக் கவனிப்பது தோட்ட வாரியமாகும். மேற்கூறியவற்றை ஒழுங்காகப் பராமரித்து வருவதும், இவற்றில் இருந்து கிடைக்கும் மகசூல்களை விற்று முதலாக்குவதும் அதைச் சரியான வழியில் பயன்படுத்துவதும், கிராமப் பூங்காக்களைப் பராமரித்துச் சுத்தமாக வைத்திருப்பதும் இவ்வாரியத்தின் பொறுப்புக்களாக இருந்தன. இதில் பன்னிரண்டு உறுப்பினர்கள் இருந்தார்கள்.

ஏரி, குளம், ஆறு, முதலிய நீர்நிலைகளைக் கவனிப்பது ஏரிவாரியம். தேவையான சமயங்களில் தண்ணீர்ப் பந்தல் அமைத்து, குடிதண்ணீர் வழங்கச் செய்வதும் இதன் பொறுப்பாக இருந்தது. இதில் ஆறுபேர் உறுப்பினராக இருந்தார்கள்.

நன்செய் நிலங்களைக் கவனிப்பது கழனி வாரியம் ஆகும். இதிலும் ஆறு உறுப்பினர்களே இருந்தார்கள்.

வளமையான காலங்களில் பணமாகவோ, தானியமாகவோ செலுத்தப்பட்ட நிலத்தீர்வையைச் சேமித்து, பஞ்சகாலத்தில் பயன்படும்படித் தொகுத்து வைப்பது பஞ்சவார வாரியமாகும்.

பெரும்பாலான கிராமங்களில் நிர்வாகத்தை நடத்த ஐந்து குழுக்கள் இருந்தனவென்று அறிகிறோம். மேற்பார்வையிட ஒரு தனிக்குழு இருந்தது. அதுவே பஞ்சவார வாரியம் என்று அழைக்கப்பட்டதென்று ஆராய்ச்சியாளர் சிலர் கூறுவர்.

கணக்கு வாரியம், ஊர்ச்சபைக் கணக்குகளைக் கவனித்து வந்தது. ஏரி, குளங்களில் உள்ள கலிங்கு, மதகுகளைக் கவனிப்பது கலிங்கு வாரியமாகும்.

ஊரிலும், அக்கம் பக்கத்திலுமுள்ள பெருவழிகளைக் கவனிப்பது தடிவழி வாரியமாகும். ஊர்க் காவல் வேலைகளையும் இக்குழுவினர் செய்து வந்தார்கள்.

ஊரில் வழங்கும் நாணயங்களைக் கவனித்து நற்காசுகளைச் செலாவணி ஆக்குவது பொன் வாரியத்தின் பொறுப்பாக இருந்தது. குடும்பு வாரியம் நிலங்களை உழுது பயிரிடுவோருடைய நலன்களைப் பாதுகாத்து வந்த குழுவாகும்.

மேலே கூறப்பட்ட குழுக்களைத் தவிர, கிராமத்தில் உள்ள கோவில்களை நிர்வாகம் செய்ய கோவில் வாரியமும் இருந்தது.

ஒவ்வொரு வாரியமும் தனிச்சபை அல்லது சிறுகுறி என்றும், எல்லா வாரியமும் சேர்ந்து மகாசபை அல்லது பெருங்குறி என்றும் கூறப்படும். இந்தக் குழுக்களின் கூட்டங்கள் கோவில் மண்ட

பத்தில் நடைபெற்றன. தாரை, காளம் முதலிய கருவிகளை முழக்கி உறுப்பினர்களைக் கூட்டங்களுக்கு வரவழைப்பது வழக்கமாகும்.

ஊர்ச்சபைக் கணக்கெழுதுபவன் 'கரணத்தான்' என்றும், ஊர்க்காவல் செய்பவன் ''பாடிகாவல்'' என்றும் அழைக்கப்பட்டனர். கொடிக்கால்கள் தோட்டந்தோப்புக்கள் ஆகியவற்றின் வேலிகளைக் கவனிப்பதற்கு ''வேலிநாயகம்'' என்ற அலுவலாளனும், ஊர்ச்சபை வேலைக்காக ''வெட்டி'' என்ற வெட்டியானும் இருந்தனர்.

பழைய ஊராட்சிக் குழுக்களின் தேர்வு முறை பற்றியும் ஆதாரங்கள் கிடைத்துள்ளன.

செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த உத்திரமேரூர் சதுர்வேதிமங்கலத்தில் உள்ள வைகுண்டப் பெருமாள் கோவிலில் காணக்கிடக்கும் கல்வெட்டுக்கள் இத்தேர்தல் முறைபற்றி விவரமாகத் தெரிவிக்கின்றன.

ஒவ்வோர் ஊரிலும் ஆண்டுதோறும் சபைத் தேர்தல் நடைபெற்றது. சபையின் பதவிக்காலம் முடிவடையும் சமயத்தில் அதனைக் கண்காணிக்கும் நாட்டதிகாரிக்கோ, ஊரதிகாரிக்கோ ஊர்ச் சபைத் தேர்தலை நடத்திவைக்கும்படி அரசினிடமிருந்து ஆணை வரும். ஆணைபெற்ற அதிகாரி உடனே அதை ஊர்ச் சபைக்குக் காட்டுவார். சபையினர் அதைத் தலைமேற்கொண்டு கண்ணிலொற்றி அதன்படிச் செய்யத் தொடங்குவர்.

ஒவ்வோர் ஊரும் தேர்தல் காரணமாகப் பல தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும். உத்திரமேரூர் முப்பது தொகுதிகளையும், தஞ்சை மாவட்டத்தில் இன்று 'செந்தலை' என்று வழங்கப்படும் சந்திரலேகை சதுர்வேதி மங்கலம் அறுபது தொகுதிகளையும் கொண்டிருந்தன.

இப்போது நடப்பதுபோல் அதிகமான வாக்குகள் பெற்றவரையே தேர்ந்தெடுக்கும் முறை அந்த நாளில் இல்லை. தவிர, வேட்பு மனு தாக்கல் செய்தல், தேர்தல் பிரச்சாரம், கட்சி பிரதிநிதி, கட்சி ஆகியவை இல்லாமலேயே தேர்தல் நடந்தது. ஆனால் ஊர்மக்கள் முக்கியமாகக் கவனிக்க வேண்டியிருந்தவை வாரியத்திற்கு உறுப்பினர் ஆகத் தகுந்தவர் யார், தகுதி அற்றவர் யார் என்பதேயாகும். தகுதிபெற்றவர் அனைவர் பெயரையும் எழுதித் திருவுளச் சீட்டுப்போட்டு அவர்களினின்று நியமனம் செய்யும் முறையே வழக்கில் இருந்தது.

சிறந்த கல்வியுடையவர்,

காரியங்களைச் செய்து முடிக்கும் ஆற்றல் உடையவர்,

சொந்த மனையில் கட்டிய வீட்டில் குடியிருப்பவர், நியாயமான வழியில் பணம் சம்பாதித்தவர்,

ஒழுங்காகத் தீர்வை செலுத்தப்படுகிற கால் வேலி நிலம் உடையவர்,

முப்பத்தைந்து வயதுக்கு மேல் எழுபத்தைந்து வயதுக்குள் உள்ளவர்கள்,

முந்திய மூன்று ஆண்டுகளில் எந்த வாரியத்திலும் இல்லாதவர் ஆகியோரே தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுதி உடையவராவார்.

தேர்ந்தெடுக்கத் தகாதவர் யார் என்பதற்கும் விளக்கம் உண்டு.

எந்த வாரியத்திலாவது இருந்து கணக்குக் காட்டாதவர்,

பஞ்சமாபாதகம் செய்தோர்,

ஊர்க் குற்றப் புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டோர்,

குற்றம் காரணமாகக் கழுதைமீது ஏற்றப்பட்டோர்;

கையூட்டு வாங்கியவர், முறை கெட்ட மணம் செய்து கொண்டவர்கள்,

மேற்கண்டவர்களின் உறவினர்கள்,

இவர்களெல்லாம் தேர்ந்தெடுக் கப்படுவதற்கு உரியவர்களல்லர்.

தேர்தல் நாளில் ஒவ்வொரு தொகுதியிலுமுள்ளவர்கள் அத்தொகுதியில் மையமான இடத்தில் கூடுவார்கள். அந்த இடத்தில் வாய்ப்பாகம் குறுகிய ஒரு மட்குடம் வைக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு ''குடும்பிலும்'' தகுதியுள்ளவர்களின் பெயர்களை ஓலைகளில் எழுதி ஒரு கட்டாகக் கட்டி, குடத்தில் இடுவர். (குடம்—தற்கால Ward)

அன்று பெரியோர் சிறியோர் உள்பட கிராம மக்கள் அனைவரும் கோயில் மண்டபத்திலோ அல்லது வேறு பொது இடத்திலோ கூடுவார்கள்.

இக்கூட்டத்திற்குக் கிராமக் கோயில்களில் பூசை செய்யும் நம்பிமார்கள் அனைவரும் வந்திருப்பார்கள். குடவோலைக் குடங்கள் கூட்டத்தின் நடுவில் வைக்கப்படும். நம்பிமார்களில் முதியவர் எழுந்து ஒவ்வொரு குடத்தையும் எடுத்து, உயரே தூக்கி, அனைவருக்கும் தெரியும்படி காட்டிவிட்டுக் கீழே வைப்பார். இந்தக் குடங்களுக்குப் பக்கத்தில் காலியான ஒரு மட்குடமும் வைக்கப்பட்டிருக்கும். பின்னர் அம்முதியவர் நன்மை தீமை தெரியாத ஒரு சிறுவனைக் கொண்டு குடவோலை உள்ள குடங்களில் ஒன்றைக் குலுக்கி, அதிலுள்ள நறுக்குகளில் ஒரு நறுக்கை எடுக்கச் செய்வார். இந்த நறுக்கை வாங்கும்போது தன் வலக்கை ஐந்து விரல்களையும் விரித்து வாங்கி, அதில் வரையப்பட்டுள்ள பெயரை உரக்க படிப்பார்.

பிறகு அதைக் கூடியுள்ள நம்பிமார் ஒவ்வொரு வரும் வாங்கிப் படிப்பார்கள். அதன் பிறகு அந்தப் பெயர், கரணத்தானுல் ஓர் ஓலையில் குறிக்கப்படும். இதேபோல் ஓர் ஊரில் முப்பது தொகுதிகள் இருந்தால் முப்பது தொகுதிக்கும் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

அவர்களில் வயதிலும் அறிவிலும் முதிர்ந்தவர்களும், ஏற்கெனவே ஏரி வாரியம், தோட்ட வாரியம் ஆகிய குழுக்களில் இருந்தவர்களுமாகப் பன்னிரண்டு பேர் முதலாவது ஆட்டை வாரியத்திற்குத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். மீதியிருப்பவர்கள் மற்ற வாரியத்தினராகத் தகுதிப்படி அமர்த்தப்படுவார்கள்.

ஓராண்டுப் பதவிக்காலம் உள்ள இந்த உறுப்பினர்களுக்கு எவ்வித ஊதியமும் இல்லை. கடமை தவறியவரும் குற்றம் செய்தவரும் உடனே குழுவிலிருந்து நீக்கப்பட்டு, குற்றப் புத்தகத்திற் பதிவு செய்யப்படுவர்.

கிராம பரிபாலனத்திற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஊர்ச்சபையினர் நீதி வழங்கிய முறையும் பெருமைக்குரிய செய்தியாகும்.

பரம்பரை வழக்கம், எழுத்து மூலமான ஆதாரம், சாட்சி ஆகிய மூன்றின் துணைகொண்டு வழக்கு விசாரணைகள் நடைபெற்றன.

பெரிய புராணத்தில் அந்தணனுக வந்த இறைவனுக்கும், நம்பி ஆரூரனுகிய சுந்தரமூர்த்தி நாயனுருக்கும் ஏற்பட்ட வழக்கை, திருவெண்ணெய் நல்லூர்ச் சபையினர் விசாரித்தது நாம் அறிந்ததே.

பல சமயங்களில் ஊர்ச்சபையினரே கல்விச் சாலைகள் நடத்தி வந்தனர். புதுச்சேரிக்குப் பக்கத்தில் உள்ள வாகூரிலும், அதற்குப் பக்கத்தில் உள்ள திரிபுவனி, எண்ணுயிரம் என்ற இடங்களிலும் கல்விச் சாலைகளை ஊர்ச்சபையினரே நடத்தி வந்தனர் என்று அறிகிறோம்.

செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள திருமுக்கூடலில் திருமால் ஆலயத்தையொட்டி ஒரு ஆதுலர் சாலை — அதாவது மருத்துவ நிலையம் இருந்தது. அங்கே மாணவர்களுக்கு மருத்துவமும் கற்பிக்கப்பட்டு வந்தது. இந்த மருத்துவ நிலையத்தைக் கோயில் வாரியத்தினரே நடத்தி வந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கிரேக்க நாட்டு நகரக் குடியரசு (Greek City States) களைப்போன்று நமது பழங்காலப் பஞ்சாயத்துக்கள், கிராமக் குடியரசாகத் திகழ்ந்து வந்தன. நாட்டில் அரச பரம்பரைகள் ஒன்றன் பின்னர் ஒன்ருக மறைந்தாலும், அடுத்தடுத்துப் பல அரசியல் மாறுதல்கள் ஏற்பட்டாலும், இக் கிராமப் பஞ்சாயத்துக்கள் நாட்டில் நிர்வாக ஒழுங்கைச் சிறப்பாகக் காப்பாற்றி வந்தன என்பது தமிழகத்தின் தனிப்பெரும் சிறப்பாகும். இடையில் பல ஆண்டுக்காலம் நமது நாட்டின் வரலாறு மங்கிப்போய்க்கிடந்தது. நாடு விடுதலை பெற்றபின், இன்று புதியதோர் எழுச்சியினை நாம் காண்கிறோம். ஊராட்சி முறையில், மக்களுக்கு நலம் தரும் பணிகளில், பழைய பெருமைகளை நிகர்க்கும் புதிய சாதனைகளை நாம் அடைய வேண்டும். இன்று மக்கள் தொகை பெருகியுள்ளது. வாழ்க்கைத் தேவைகள் பெருகியுள்ளன. மக்களின் மேலான வாழ்வுக்கு உதவக்கூடிய புதுப்புதுச் சாதனங்கள் வந்துவிட்டன. இவற்றையெல்லாம் பயன்படுத்தி, ஒளிமயமான வருங்காலத்தை உருவாக்கப் பணியாற்றுவோமாக.



இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்

அ. ச. ஞானசம்பந்தன்

# தமிழும் சமயமும்



இப்பரந்த உலகிடைத் தோன்றிய மனிதன் தான் வாழும் சூழ்நிலைகட்கேற்பப் பல்வேறு மொழிகளைத் தோற்றுவித்தான். அவற்றுள் சில நன்கு வளர்ச்சியடைந்துள்ளன. அச்சிலவற்றுள்ளும் உயர்தனிச் செம்மொழி என்று கூறத்தக்க வகையில் சிலவாய மொழிகள் சிறப்படைந்துள்ளன. அவற்றுள் ஒன்று நம் தமிழ் மொழி. இம்மொழியில் சமய இலக்கியங்கள் நிரம்ப உண்டு.

## சமயம் வேண்டுமோ?

சமயம் என்றால் என்ன? சமைக்கப்பட்டது சமயம். மனிதன் தன் வாழ்வு வளம் பெறவும், மாக்கள் தன்மையிலிருந்து விடுதலை பெற்று மக்கள் தன்மை பெறவும் வழியாகச் செய்யப்பட்டது அல்லது சமைக்கப்பட்டதுதான் சமயமாகும். வேறு வகையாகக் கூறுமிடத்து, மனிதனைப் பண்பாடுடையவனாக ஆக்குவது சமயம். பல்வேறு வகையான காட்சி நல்கும் இப்பரந்த உலகையும் அதில் உள்ளவற்றையுங் காணும் ஒருவன், இவ் வேற்றுமையில் மயங்காமல், இவற்றிடையே ஓர் ஒற்றுமையைக் காண முயல்கிறான்; அனைத்திற்கும் ஆணி வேராய் அமைந்த ஒன்றை அறிகிறான்; அவ்வறிவுக்கு அப்பாற்பட்ட பொருள்கள் உண்டு என்பதையும் அவை அனைத்தும் ஒரு வரன்முறைக் குட்பட்டு இயங்குவதையும் காண்கிறான்.

விஞ்ஞானியும் இதே காட்சியைக் காண்கிறானெனினும் அவ்வரன்முறைபற்றிய ஆய்விலேயே தன் முழுக் காலத்தையும் செலவிட்டுவிடுகிறான். மெய்ஞ்ஞானி வரன்முறையின் தோற்றத்திற்கு ஒரு கருத்தா இருத்தல் வேண்டும் என்ற முடிபில் ஒன்றிவிடுகிறான். இவ்வெண்ணமே சமய வாழ்வின் அடிப்படையாய் அமைந்துவிடுகிறது. சமயம் வெறும் குறிகளும், அடையாளமும் அன்று. சமயம் என்பது இவற்றைக் கடந்து நிற்பது. குறிகள், அடையாளங்கள் ஆகிய ஒன்றையும் போற்றாமலே சிறந்த சமயவாதியாக வாழ முடியும். இவை அனைத்தையும் மேற்கொண்டும் சமய விரோதியாய் வாழ முடியும். மனித மனத்தின் மாசை அகற்றி, பண்புடையவனாய், ஒழுக்கம் உடையவனாய், பிறர்க்குப் பயன்படுபவனாய் வாழ முற்படுவதே சமய வாழ்க்கையாகும். இவற்றிற்கு அப்பால் அனைத்தையுங் கடந்து நிற்கின்ற ஒன்றை - கடவுள் என்ற ஒன்றை - மனத்தில் ஏற்றுக்கொள்பவனாய் வாழ்பவனே சமயவாதியாவான்.

## பல்வேறு சமயங்கள் ஏன்?

எனவே, கடவுள், மனித வாழ்வு என்ற இவை இரண்டினிடையே உள்ள தொடர்பு, இவ்வாழ்விலிருந்து கடவுளை அடையும் நெறி என்பவைபற்றிப் புகட்டுவதே சமயம் எனப்படும். இதுவே, சமயம் எனில் பல்வேறு சமயங்கள் தோன்ற வேண்டிய இன்றியமையாமை யாது என்ற வினா எழலாம். மக்கள் அனைவரும் ஒருபடியினராக இல்லையன்றோ? அவரவர்கள் வாழும் இடம், அதன் தட்ப வெப்ப நிலை, சுற்றுச் சூழ்நிலை என்ப

வற்ருல் பாதிக்கப்படுவது ஒரு புறம். மேலும், இவை அனைத்தும் ஒன்ருக உள்ள நிலையில் வாழும் பல்வேறு மனிதரை எடுத்துக் கொண்டாலும் அவர்கள் வளர்ச்சியும் பல்வேறு படிகளில் இருக்கக் காணலாம். எனவே, இவர்கள் அனைவர்க்கும் ஒரே சமயம் பயன்படுமாறில்லை. ஆகவேதான், ஒவ்வொரு கருத்தை வலியுறுத்திக் கூறும் பல்வேறு சமயங்கள் அவ்வக் காலத்துக்கு ஏற்பவும் இடத்துக்கு ஏற்பவும் தோன்றலாயின.

**தமிழில் சமயம் :**

இந்த அடிப்படையை மனத்துட்கொண்டு தமிழ் மொழியின் பரப்பைக் காண்டல் வேண்டும். பிற்காலத்தில் வேற்று நாடுகளில் தோன்றி இந் நாட்டில் குடிபுகுந்த கிறித்தவம், இசுலாம் ஆகிய இரண்டும் தவிர ஏனைய சைவம், வைணவம், சைனம், பௌத்தம் ஆகிய நான்கும் இம்மொழியில் மிகுதியான இடம் பெற்றுள்ளன. கிறித்தவமும், இசுலாமும் பிற்காலத்தே இந்நாட்டில் பரவினமையின் அதற்கேற்ற முறையில் குறைந்த அளவு இம்மொழியில் இடம் பெற்றுள்ளன.

ஓர் இன மக்கள் பேசும் மொழிக்கு மட்டும் இலக்கணம் வகுக்காமல் அம்மக்கள் வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்த பெருமை உலக மொழிகளுள் தமிழ் மொழி ஒன்றுக்கு மட்டுமே உண்டு. வாழ்வுக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியம் வாழ்வு நடைபெறுதற்கு நிலைக்களமாயுள்ள இவ்வுலகையே ஐந்து பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு கடவுளைக் கூறிச் செல்கிறது.

குறிப்பிட்ட ஒரு சமயத்தின் சாயல் பெருமல் கடவுட் கொள்கைபற்றிப் பேசுதலின் தமிழரின் ஆதி நூல் என்று பேசப்பெறும் தொல்காப்பியத்தில் சமயம் இடம்பெறுகிறது எனக் காண்கிறோம். இதனை யடுத்துத் தோன்றிய திருக்குறளிலும் தனியொரு சமயத்தின் சாயல் இன்றிக் கடவுட் கொள்கையும், சமயமும் பேசப்பெறுதலை அனைவரும் அறிவோம்.

இனி, இக்குறளுக்கு முன்னர் இருநூறு ஆண்டுகளின் இடைப்பட்டுத் தோன்றிய சங்க இலக்கியங்களில் கடவுட் கொள்கையும், கடவுளர் பெயரும் விரிவாகப் பேசப்படுதலையும் அறிய முடியும். 'நீலமேனி வால் இழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகை உலகும் முகிழ்த்தன முறையே' (ஐங்குறு-1) என்ற பாடலிலிருந்து புறம், அகம் ஆகியவற்றில் ஆங்காங்கே கடவுட் பெயர்கள் பேசப்படுதலைக் காண்கிறோம். எல்லாவற்றையும் கடந்து நிற்கும் முழுமுதற் பொருளாயினும் அப்பரம்பொருள் கருதுவான் அறிவின் எல்லைக்கேற்ப வடிவும், உருவுந் தாங்கி நிற்கும் தனிப்பட்டவன் வழிபடு கடவுளாகக் (Perosnalised God) காட்சி தருவதைச் சங்கப் பாடல் அறிவுறுத்துகிறது. ஆலமர் செல்வன், முருகன், திருமால், கொற்றவை என்ற பல பெயர்களில் பரம்பொருள் பேசப்பெறுகிறது.

சங்கப் பாடல்களுள் ஒன்ருய பத்துப் பாட்டுள் திருமுருகாற்றுப்படை இடம் பெற்றிருப்பதும், எட்டுத் தொகையுள் பரிபாடல் இடம் பெற்றிருப்பதும் இத்தமிழ் மொழியில் சமயம் எந்த அளவிற்கு ஊடுருவி நின்றது என்பதை அறிவுறுத்தும். கடவுளைப்பற்றியே பேசும் மேற்கூறியவை தவிர, புறநானூறு போன்ற உதிரிப் பாடல்களிலும் தனிப்பட்ட கடவுளர் பெயர், இயல்பு போன்றவை பேசப்படுகின்றன.

> 'நன்ருய்ந்த நீள் நிமிர்சடை முது முதல்வன்'
> (புறம்–166)
>
> 'கறைமிடற்று அண்ணல்' (புறம்–55)

என்பன போன்ற குறிப்புகள் இறைவனையும், புறம் 14, 16, 23, 120, 125 – ஆகிய பாடல்கள் முருகனையும் குறிப்பிடுகின்றன. மேலும், அவனுக்குக் கோயில் இருந்தமையைப் புறம் 299-ஆம் பாடலும் இன்றும் தமிழர்க்குச் சிறந்த இடமான திருச்செந்தூரில் அன்றே முருகனுக்குக் கோயில் இருந்தமையை,

> 'வெண்தலைப் புணரி அலைக்கும் செந்தில்
>
> நெடுவேள் நிலைஇய காமர் வியன்துறை' (புறம் –55) என்னும் அடிகளும் பேசிச் செல்கின்றன.

கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பையும், இறைவனிடம் மனிதன் வேண்டுவது யாது என்பதையும் பரிபாடலின் ஒரு பாடல் மிகச் சிறந்த முறையில் அறிவித்துச்செல்கிறது.

> '................யாஅம் இரப்பவை
>
> பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின் பால்
>
> அருளும் அன்பும் அறனும் மூன்றும்
>
> உருள்இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே'
> (பரிபாடல்-5-80)

—அந்தப் பழங் காலத்திலேயே இத்தமிழர் பயன் கருதி இறைவனை வழிபடும் காமிய வழிபாட்டை மறுத்துப் பயன் கருதாத வழிபாட்டை வேண்டி நின்றனர் என்பது விளங்குகிறது. 'அருளும், அன்பும், அறனும்' மூன்றும் வேண்டும் என்று கடவுளிடம் வேண்டும் இத்தமிழர் சமய வாழ்க்கையின் உச்சிக்கே சென்றுவிட்டனர் என்று கூறிஞல் மிகையாகாது.

> 'மாநிலம் சேவடி யாகத் தூநீர்
> வளைநரல் பௌவம் உடுக்கை ஆக
> விசும்பு மெய்யாக திசை கையாக
> பசுங்கதிர் மதியமொடு சுடர் கண்ணுக
> இயன்ற எல்லாம் பயின்று அகத்தடக்கிய
> வேத முதல்வன் என்ப' —(நற். 1) —என்ற

நற்றிணைப் பாடல் இவர்களது பரந்துபட்ட கடவுட் கொள்கையையும் அனைத்திலும் நிறைந்திருப்பவன் இறைவனே என்ற கருத்தையும் அறிவுறுத்துகிறது. இதே சங்கப் பாடல்களில் சுவர்க்கம், நரகம் என்பவைபற்றியும், இந்திர

உலகம் போன்ற போக பூமிகள்பற்றியும் குறிப்புகள் வருகின்றன.

**சமயக் கருத்துகள் கடன் வாங்கியவையா?**

என்றாலும், இங்குக் காணப்பெறும் சமயக் கருத்துகள் இந்நாட்டிற்கே சொந்தமானவை என்பதை மறத்தலாகாது. இமயம் முதல் குமரி வரை அறிந்திருந்த இத்தமிழர் 'முத்தீ விளக்கில் துஞ்சும் பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்றே' (புறம்–2) என்று பாடினாலும் இவர்களுடைய சமயக் கொள்கை பிற நாட்டிலிருந்தோ, பிற பகுதிகளிலிருந்தோ கடன் வாங்கியவை அன்று. மேலும், சங்க காலச் சமயம் இறையுணர்வை வலியுறுத்தியது போலச் சடங்குகள், குறிகள், அடையாளங்கள் என்பவற்றை வலியுறுத்தவில்லை என்பதும் சிந்திக்கத்தக்கது. சமயம் என்பது வாழ்வின் வேறானதாய், வேண்டுமான பொழுது மேற்கொள்வதாய் அமைந்த ஒன்று என்ற கருத்தை அற்றைத் தமிழர் ஏற்கவில்லை என்றே தோன்றுகிறது.

இதனால்தான் இரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய சிலப்பதிகாரம் எல்லையற்ற சகிப்புத் தன்மையுடன் எல்லாச் சமயங்களைப்பற்றியும், அச்சமயக் கடவுளர்பற்றியும் பேசுகிறது. சிவ பெருமான், திருமால், கண்ணன், பலராமன், கொற்றவை, முருகன், அருகதேவன் ஆகிய அனைவரையும் வேறுபாடற்ற நிலையில் பேசுவதுதான் சிலம்பின் தனிச் சிறப்பாகும். இத்தகைய சமய சகிப்புத் தன்மை இரண்டாம் நூற்றாண்டு முடியத் தமிழ்நாட்டில் நிலவி வந்தது எனலாம். மூன்றாம் நூற்றாண்டையொட்டிக் களப்பிரர் படையெடுப்பின் பின்னரே சமயச் சகிப்பற்ற ஒரு நிலை இவண் உண்டாயிற்று. களப்பிரர் வருவதற்கு முன்னரே கூட அருக, பௌத்த சமயங்கள் தமிழ்நாட்டில் நன்கு நிலைபெற்றுவிட்டன எனினும் போராட்டம் தோன்றவில்லை. களப்பிரரும் அருகரேயாயினும் அவர்கள் இந்நாட்டில் கால் கொண்ட பின்னர் சமய மாறுபாடுகள் முகிழ்த்தன.

**பூசல் தோன்றக் காரணம் :**

சமணமும், பௌத்தமும் களப்பிரர் வரவுக்கு முன்னும் தமிழ்நாட்டில் இருந்தன எனினும், பகைமைக்கு இடமில்லை. ஆனால், களப்பிரர் வரவின் பின்னர் சமயத்தின் பேரால் பூசல் தோன்றிற்று என்றால் என்ன பொருள்? அரசியல் போராட்டத்திற்குச் சமயத்தைப் போர்வையாகக் கொண்டனர் என்பதே பொருள். நூற்றுக்குத் தொண்ணூறு அரசியற் போராட்டங்கள் சமயத்தின் பெயராலேயே நிகழ்த்தப் பெற்றன. தமிழ்நாடும் இதற்கு விலக்கன்று. களப்பிரர் வருகைக்கு முன்னர்ப் பலவாய சமயங்கள் நாட்டில் நடமாடினாலும் தம்முள் எவ்விதக் காழ்ப்புமின்றித் தமிழை வளர்த்தன. அதைவிடச் சிறப்பொன்றும் உண்டு. வடநாட்டில் தோன்றிய சமணமும், பௌத்தமும் தமிழ் நாட்டில் புகுந்தவுடன் இங்கு இயல்பாகவே தோன்றி வளர்ந்த சைவ, வைணவங்களோடு மாறுபாடின்றிக் கொண்டு கொடுத்துக் கொண்டன.

வேற்று நாட்டவர் வரவும், தங்கலும் இந்த நல்ல சூழ்நிலைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டன. சகிப்பற்ற தன்மையும், போராட்டமும், காழ்ப்பும் தமிழர்களிடையே கால் கொள்ளலாயிற்று. இந்த நிலையைத்தான் மணிமேகலையில் முதன் முதலில் காண்கிறோம். ஒரு குடிகாரன் சமணத் துறவியை எள்ளி நகையாடியதாக மணிமேகலை பாடிச் செல்கிறது. காழ்ப்புக் காரணமாகப் பிற சமயத்தை எள்ளி நகையாடும் தீய பழக்கத்திற்கு வித்திட்ட பெருமை மணிமேகலையையே சாரும்.

சிலம்பின் காலம் வரைச் சமயம் மக்கள் வாழ்வில் ஊறி இடம் பெற்றுவிட்ட ஒன்றாயிருந்தது. மக்களை மாக்கள் கூட்டத்திலிருந்து பிரிக்கும் கருவியாகச் சமயம் அமைந்திருந்தது. அவர்கள் உணர்வில் இடம் பெற்றிருந்த சமயம் அவ்வுணர்வின் வெளிப்பாடாகிய மொழியிலும், இலக்கியத்திலும் இடம் பெற்றிருந்தது. வாதத்திற்கும் போராட்டத்திற்கும் அங்கு இடமே இல்லை. உதாரணமாக ஒன்றைக் கூறலாம். மாடல மறையோன் கவுந்தி அடிகளாகிய சமணத் துறவிக்கு மதுரை செல்லும் வழியை விவரித்துக் கூறுகிறான். இன்ன இன்ன குளங்களில் (புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி) மூழ்கினால், இன்ன இன்ன பயன் விளையும் எனப் பேசுகிறான். ஆனால், அதனை ஏற்றுக்கொள்ள விரும்பாத சமணத் துறவியார் மிகக் கண்ணியமாக அது தேவை இல்லை என மறுக்கிறார். சமயப் பூசலைக் காட்டாமல் கண்ணியத்துடன் ஒருவர் கருத்தை மறுக்கும் இந்த அளவுக்குப் பண்பட்டிருந்த சமயம் வாழ்வின் ஒரு பகுதியாக அமைந்திருந்தவரை இதே அளவு பண்பாட்டுடன் இலங்கிற்று. சமயம் என்பது அறிவின் துணைகொண்டு ஆயப்படுவதொன்று அன்று; உணர்வின் துணைகொண்டு அனுபவிக்கப்படுவது. இது கருதியேபோலும் ஞானசம்பந்தர் 'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா, சுடர் விட்டுளன் எங்கள் சோதியான்' (3-54) என்று கூறிப்போனார்.

அறிவினால் ஒன்றை ஆயும் வரை, ஆயும் அறிவு, ஆயப்படும் பொருள், ஆய்தலாகிய தொழில் என மூன்று பொருள் இருந்தே தீரும். இந்நிலை உள்ள வரை சமய அனுபவம் கிட்டாது. உணர்வு வழிப்பட்ட சமய அனுபவத்தில் அனுபவிப்பவன், அனுபவப்பொருள், அனுபவம் என்ற மூன்றும் அற்று அனுபவம் ஒன்றே எஞ்சும்.

சங்க இலக்கியம் முழுதும் உணர்வின் அடிப்படையில் தோன்றிய கவிதைகள். அதனால், அங்குச் சமயப் போராட்டத்திற்கு இடமில்லை. திருக்குறள் அறிவின் அடிப்படையில் இயற்றப்பெற்றதாயினும், சமயத்தின் இந்தச் சிறப்பை உணர்ந்து, அதனை அறிவின் துணைகொண்டு ஆய முற்படாமல், உணர்வின் துணைகொண்டு ஏற்றுக்கொண்டு, அதனைக் கொண்டு செலுத்தும் வழிதுறைகளை மட்டும் கூறிச்சென்றது.

சங்கப் பாடல், சிலம்பு, குறள் என்பவற்றுடன் சமய உணர்வு மங்கி அந்த இடத்தில் சமய **அறிவு**

வளரலாயிற்று. இதன் பிறகு ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் சமயத்தை நிறுவ அறிவின் உதவியையே நாடினர். இதன் உண்மையை அறிய அதிகத் தூரம் செல்ல வேண்டா. 'ஏதுக்களானும், எடுத்த மொழியானும் மிக்குச் சோதிக்க வேண்டா' என்று சமயக் குரவருள் ஒருவராகிய ஞானசம்பந்தரே கட்டளை இட்டிருப்பவும், சைவர்கள் சிவஞான போதம், சித்தியார் முதலிய அளவை நூல்களால் தம் சமயத்தின் பெருமையைப் பறைசாற்ற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. உணர்வின் துணை கொண்டு, 'பொருள் ஒன்று' என்று உணர்வது போக, 'அத்வைதம்' என்பதற்கு அறிவின் துணை கொண்டு பொருள் காண முனைந்தனர். 'இரண்டு அல்ல', 'இரண்டுதான்' என்பன போன்ற வாதங்கள் தோன்றலாயின.

**பக்தி இலக்கியங்கள் :**

பழைய மரபில் நன்கு ஊறிய காரணத்தால் போலும் இந்தச் சமயப் பூசல்கள் தமிழில் அதிகம் பரவவில்லை. வடமொழியில் தடைவிடை நூல்கள் மலிந்திருப்பதுபோலத் தமிழில் இல்லை. தமிழ் மொழியைப் பொறுத்த மட்டில் அளவைகளின் உதவிகொண்டு சமயத்தை நிறுவுவதைக் காட்டிலும் அகத்தே நிகழும் உணர்வுகொண்டே சமயத்தைப் பரப்பும் நூல்களே மிகுதியாகும். அதனால் தான் போலும், சமய இலக்கியம் என்ற பெயரில் பக்தி இலக்கியங்களே தமிழில் மிகுதியும் தோன்றின. உலக மொழிகளில் பக்தி இலக்கியம் என்று எடுத்துக்கொண்டால், தமிழ் மொழியின் அருகில் வரக்கூட எந்த மொழிக்கும் உரிமை இல்லை. இரண்டாவது இடத்தை ஹீப்ரூ மொழியும், மூன்றாவது இடத்தைச் சமஸ்கிருதமும் பெறும். சிவஞான போதம், சித்தியார் போன்ற ஒரு சில சாத்திரங்கள் தவிர சைவத்திலாகட்டும், வைணவத்திலாகட்டும் சாத்திர நூல்கள் குறைவுதான். வடமொழியிலிருந்து தமிழாக்கம் செய்யப்பெற்ற நூல்களும் சில உண்டு. தோத்திர நூல்கள் இத்துணை மிகுதியாகப் பெற்றுள்ள தமிழ்மொழி சாத்திர நூல்களை மிகுதியும் பெறாத காரணம் ஒன்றுண்டு என்று நினைக்கத் தோன்றுகிறது. அன்பு வழியாலும், பக்தி நெறியாலும் மட்டுமே சமயத்தை வளர்க்க முடியும். விவகார ஞானத்தாலும், வாதத்தாலும் சமயத்தை நிறுவ முயலலாமே தவிர, வளர்க்க முடியாது. அறிவுக்கு அப்பாற்பட்ட ஒன்றை, அறிவின் துணைகொண்டு ஆய்ப்புகுவதைத் தமிழர் விரும்பவில்லை என்றே தோன்றுகிறது. இது கருதியேபோலும்

> 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்'
>
> —(திருமந். 3059)

என்று பழைய திருமந்திரமும்,

> அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
> அன்பெனும் குடில் புகும் அரசே
>
> —(அருட்பா)

என்று புதிய அருட்பாவும் பறைசாற்றுகின்றன.

> 'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
> புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்'

என்று திருநாவுக்கரசரும்,

> 'ஆடி ஆடி அகங் கரைந்து, இசை
> பாடிப்பாடிக் கண்ணீர் மல்கி எங்கும்
> நாடிநாடி நரசிங்கா என்று......'
>
> (நாலாயிரம்-2818)

என நம்மாழ்வாரும் அருளிப்போயினர்.

நம் காலத்து வாழ்ந்த வள்ளலாரும்

> 'நினைந்துநினைந்(து) உணர்ந்(து) உணர்ந்து
> நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே
>
> நிறைந்துநிறைந்(து) ஊற்றெழுங்கண்
> ணீரதனால் உடம்பு
>
> நனைந்துநனைந்(து) அருளமுதே
> நன்னிதியே ஞான
>
> நடத்தரசே என்னுரிமை
> நாயகனே என்று
>
> வனைந்துவனைந்(து) ஏத்துதும்நாம்
> வம்மினுல கியலீர்.

— என்று அன்பின் வழியினாலன்றிச் சமய வாழ்க்கை கைகூடாதென்றும், இறைவனை அடைய முடியாது என்றும் கூறினர்.

**சமயமின்றித் தமிழில்லை :**

இந்த அடிப்படையை மனத்துட் கொண்டு பார்த்தால், தமிழ் மொழியில் சாத்திரங்கள் அதிகம் தோன்றாமல் தோத்திரங்கள் அதிகம் தோன்றியதற்கு உரிய காரணத்தை ஒருவாறு அறிய முடியும். என்றாலும் தமிழில் தோன்றிய பேரிலக்கியங்கள் அனைத்தும் சமயத் தொடர்புடனேயே உள்ளன என்பதை மறத்தலாகாது.

பிற மொழிகளில் பல்வேறு துறைகளில் இலக்கியம் உண்டு; அவற்றுள் சில சமயம் பற்றியும் இருக்கும். ஆனால், இத்தமிழ் மொழியில் இலக்கியம் என்ற பெயரைப் பெறக்கூடியவை அனைத்துமே சமயத் தொடர்புடையவையாய் இருத்தல் அறிதற்குரியது. சமயத் தொடர்பற்ற நூல்கள் தமிழிலும் தோன்றி இருக்கலாம். ஆனால், அவற்றிற்குக் காலத்தை வென்று நிலைபெறும் வன்மை இல்லைபோலும். எனவே, அவை இன்று வரை நின்று நிலவவில்லை. பேரிலக்கியங்கள் ஒருபுறம் இருக்கச் சிற்றிலக்கியங்களாகிய பிள்ளைத் தமிழ், குறவஞ்சி, பள்ளு, உலா ஆகியவையுங் கூடச் சமயத் தொடர்புடையனவாகவே அமைந்துள்ளன. ஆதலால்தான் 'சமயமின்றித் தமிழில்லை' என்று கூறுவது பொருள் பொதிந்த மொழியாக அமையக் காண்கிறோம்.

எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

மகா வித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர்



# பக்தி இலக்கியங்கள்

இனிமையும், எளிமையுமே அன்புக்குப் பிறப்பிடம். அன்பு தமிழ்ச்சொல். பக்தி வடசொல். (1) அன்பு உடல்கொள் உயிர்க்குணம். நேயம், நார், விழைவு, கனிவு, குழைவு முதலிய சொற்கள் அன்பு என்னும் பொருளை உணர்த்துவனவாயினும் அடிப்படையான காரணங்களால் வேறுபடுவன. அன்பு என்பது மனநெகிழ்ச்சி; உலகில் உள்ள ஒவ்வொரு பொருளிடமும் காணப்படும் தனிப்பண்புகள் நம் மனத்தைக் கவரும்போது சுரக்கும் குணம்.

தாய், தந்தை, மகன், மாமன், கடவுள் யாரிடம் செலுத்தினுலும் அன்பு அன்புதான் என்று கருதிய தமிழன் தனிச்சிறப்புடையவன். அவன் எங்கும் கண்டது ஒரு தன்மையை; அதனுல் கனிந்த உளத்துச் சுரப்பன அனைத்தையும் அன்பு என்ருன். இடம் நோக்கி மாற்றுப் பெயர் வைத்தது வடமொழி. அதில் பக்தி என்பது சிறந்த முனிவர், தாய், தந்தை, கடவுள், குரு முதலியோர் பால் செலுத்தப்பெறும் அன்பு.

## அன்பே சிவம் :

இவ்வன்பு உயிர் உள்ள எல்லாப் பொருளினிடத்துங் கலந்து இருத்தலானும், இன்பத்தை விளைவித்தலானும் இதனைச் சிவம் என்ருன் தமிழன். (2) 'அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலார்' என்றுகூடச் சொல்கிருர் திருமூலர். இங்ஙனம் இறைத்தொடர்பை இயல்பாகவே உடையது அன்பு; ஆதலின் அதனை வேறு வேறு சொற்களால் குறிக்க முற்படவில்லை தமிழ்மொழி.

## பக்திமொழி—தமிழ்

இங்ஙனம் அன்பு என்ற சொல் தமிழ்க்கே உரியதானுற் போலக் குணமும் தமிழர்க்கே உரியது. பத்மபுராணம் வடமொழியிலுள்ள பதினெண் புராணங்களில் ஒன்று. அது கூறுகிறது, "மூன்று பெண்கள் துவாரகைக்குப் பயணம் சென்றனர். வழியில் நாரதர் அவர்களைச் சந்தித்தார். 'நீங்கள் யார்?' என்று வினவினுர். அவர்களுள் ஒருத்தி "நாங்கள் இருப்பது திராவிட தேசம்; என் பெயர் பக்தி; இவர்கள் ஞானமும், வைராக்கியமும். இவர்கள் என் பெண்கள். நான் தாய்" என்ருள். இதைக்கேட்ட நாரதர் 'நீ தாயா! அவர்கள் உன்பெண்களா! உன்னைப் பார்த்தால் இளமையாக இருக்கிறதே! அவர்கள் உன்னில் மூத்த கிழவிகளாகத் தோன்றுகின்றனரே என்ருராம்'' இதிலிருந்து அறியப்படும் உண்மை என்ன? பக்தி என்ற குணத்தின் பிறப்பிடம் திராவிடமாகிய தமிழகம் என்பதுதானே! ஆகவே, கனிந்த உள்ளமும், கசிவந்த சொல்லும் உடைய மொழியே பக்தி இலக்கியங்கள் தோன்ற இடந்தருவன என்பது துணியப்பெறும். இத்தகைய மொழி எது? செந்தமிழ் மொழி; அதுவே அன்பிலக்கியங்களுக்கு உரிய மொழி எனலாம்.

**அன்பு இலக்கியங்களின் வித்து :**

இலக்கியங் கண்டு அதற்கு இலக்கணம் இயம்புதல் முறை. ஆனால், செந்தமிழ்க்கோ இலக்கணம் இருக்கிறது. இலக்கியங்கள் அவ்வளவாக அகப்படுதல் இல்லை. ஆதலால், தொல்காப்பிய இலக்கணம் தரும் விதையை மட்டும் ஆராயின், பாடாண்டினைக்குரிய அறுவகை வாழ்த்தைச் சார்ந்த கடவுள் வாழ்த்தே அவர்தந்த விதை. இதுவே யுயர்ந்தது; மறுமைப் பயனைத் தருவது என்பர் நச்சினார்க்கினியர். தன் பொருட்டானும், பிறர் பொருட்டானும், ஆக்கத்தின்மேற் காமுற்று வாழ்த்தின் அஃது அவர்க்குப் பயன்தரும் என்பது கருதப்பெற்றது. ஆகவே, 'அமரர்கண் முடியும் அறுவகை வாழ்த்து' என்பதே அவர்தந்த வித்து. இதனைக்கொண்டு எழுந்தன கடவுட் பாடல்கள்.

**பக்தி இலக்கியங்களின் வகைகள் :**

அன்றியும் 'நில்லாவுலகம் புல்லியநெறித்தே' என உலக நிலையாமையை யுணர்த்தி அதன் வாயிலாக நிலையுதலுடைய பொருளாகிய கந்தழி அல்லது அருவான கடவுளிடத்து அன்பைத் தோற்றுவிக்கிறது. இது காஞ்சியென்னும் புறத்திணையாகும். இதனைப் பொருளாகக்கொண்டு எழுந்த பக்தி இலக்கியம் மதுரைக்காஞ்சி.

மூன்றாவதாகக் கடவுளை அல்லது கடவுளிடத்து அன்பனை ஆற்றுப்படுத்தும் ஆற்றுப்படை மருங்கினும் அன்பிலக்கியங்கள் எழுந்தன. அவற்றுள் ஒன்று திருமுருகாற்றுப்படை. இது முருகனுடைய தோற்றம், வீரம், இடம், அருட்செயல் முதலிய வற்றைத் தொகுத்துச் சொல்லி நம் மனத்தில் அன்பு சுரக்கச் செய்கிறது.

நான்காவது பரிபாடல் இது இன்பத்தையே பொருளாகக் கொண்டுவரும் கடவுள் வாழ்த்து ஆகும். இது முருகன், திருமால், பலதேவன் முதலிய தேவர்களின் திருவுருவ அமைப்பையும் வழிபாட்டு முறையையும் வகுப்பது.

சிலம்பில் ஞாயிறு வாழ்த்து, திங்கள் வாழ்த்து, மாமழைவாழ்த்து என்ற வகையில் உருக்கொண்டு, நூலிடையிலே திருமால், சிவன், இந்திரத் தெய்வம் முதலியவற்றைப் பாராட்டும் பாடல்களாக விரிந்து பரந்தன. சிந்தாமணியிலே அருகதேவர் வாழ்த்தாகவும், அவர் உதவும் ஞானச்சிறப்பைப் பாராட்டும் பாடல்களாகவும் அரும்பின.

மணிமேகலை முதலிய நூல்கள் முழுதும் சமயத் தத்துவக் கொள்கைகளை விளக்குவனவாக அமைந்தனவேயன்றிப் பக்தியை விளக்கும் இலக்கியங்களாக வளரவில்லை எனலாம்.

பின்பு, சங்க நூல்களில் எட்டுத்தொகையின் தலைப்பாட்டாகத் திகழும் பக்திப் பாடல்களைப் பார்க்கிறோம். அவை இறைவனுடைய பொது இயல்பு, திருமேனியமைப்பு, உடையணிமாலை இவற்றின் தோற்றம் இவற்றைக் கூறி உள்ளக்கிழியில் உரு எழுதுகின்றன. ''உலகம் ஏமவைகல் எய்தின்று'', ''மூவகையுலகம் முகிழ்த்தன முறையே'', ''தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே'' எனப் பயனையும், எல்லாவற்றையும் தன்னகத்தடக்கிக் காக்குந் தகைமையையும் குறிக்கின்றனவாகப் பக்திப் பாடல்களாயின.

புறநானூறு முதலிய புறப்பொருள் இலக்கியங்களிலே, புலவர்கள் தம்மைப் புரந்த புரவலரது நன்றியை வியப்பாராக 'இறைவன் இவர்கட்கு நலம் பல தந்து காக்க' என்ற வாயுறை வாழ்த்தும் பக்திப் பாடல்களாக அமைந்தவையே. திருக்குறளிலே கடவுளை வாழ்த்துதல் தனி மனிதனுடைய அறம் என்ற முறையில் விதியாக வளர்ந்தது.

**சமயச் சார்பால் பக்திப் பாடல்கள் வளரல் :**

சைண பௌத்த வளர்ச்சிக் காலத்தே அருகனைப் பற்றியனவும், புத்தர் பெருமானைப் பற்றியனவுமான வரலாறுகளை அடியாகக்கொண்ட பக்திப் பனுவல்கள் தோன்றின. அவற்றுள் இன்றிருப்பன சிந்தாமணியும், சூளாமணியும், சிலப்பதிகாரமும், யாப்பருங்கலம், தொல்காப்பியம் இவற்றின் உரையில் வரும் சில பாடல்களும் ஆம்.

பின்னர், கி.பி. 3-ஆம் நூற்றாண்டு முதல் 9-ஆம் நூற்றாண்டு வரை வரலாற்று இலக்கியங்களின் வளர்ச்சி சிறிது குறைந்து, அன்பு நெறியிலக்கியங்கள் ஆக்கம் பெற்றன எனலாம். இந்தக் காலமே சமயாசாரியர்களும், ஆழ்வார்களும் தோன்றிப் பக்திப் பனுவல்களைப் பலவாக இயற்றிய காலம். பக்தியிலக்கியங்கள் பதினாயிரக்கணக்கில் பதிகங்களாகவும், பத்துக்களாகவும் குவிந்தன. இக்காலத்தெழுந்த இலக்கியங்களில் பக்திச் சுவை மக்கள் உள்ளத்தே நிலைக்க இறையியல்பேயன்றி, இறைவன் அவ்வப்போது மக்களுக்குச் செய்த உபகாரம், வீரச் செயல்கள், அருட் செயல்கள் முதலிய புராண வரலாறுகளும் கலந்தூட்டப்பட்டன. அதனால் படிப்பவர் மனமும், பக்கம் நின்று கேட்பவர் மனமும் பரவசப்பட்டன.

**இறைவனை அணுகும் முறைகள்:**

இறைவன் ஆண்டான்; நாம் அடிமை என்ற அனுபவத்தெழுந்த இலக்கியங்களின் போக்கு முதிர்ந்து, இறைவன் என் தோழன்; இறைவன் என் தாய்; என் தந்தை என்ற உறவின் முறையில் வைத்து அனுபவிக்கும் பக்திப் பனுவல்களாகவும் அமைந்தன.

பின் அந்நிலையும் முதிர்ந்து, இறைவன் என் காதலன் என்ற முறையில் போற்றப் பெறும் அனுபவமும் உண்டாயிற்று. இதற்கு அடிப்படையான வித்து தொல்காப்பியம் சொல்லும் கடவுள்மாட்டுக் கடவுட் பெண்டிர் நயப்பும், கடவுள்மாட்டு மானிடப் பெண்டிர் நயப்புமான இரு புறத்துறைகளே எனலாம். இதன் விளைவே நாயன்மார்களும் ஆழ்வார்களும் நாயகன் நாயகியாகப் பாவித்துப் பரவும் பக்திப் பாடல்களின் தோற்றம்.

இதன் முதிர்ச்சி திருக்கோவையாரில், இறைவனை நுகரப்படு பொருளாகிய தலைவியாகவும், தான் நுகர்வோனுகிய தலைமகனுகவும் இருந்து அனுபவிக்கும் நிலையாக மாறிற்று. இதனுல் எழுந்தன பல கோவைப் பிரபந்தங்கள். பின்பு சந்தமும்-வண்ணமும் குழிப்புமாகிய (ஜதிப்)பாடல்கள் பக்தியைப் பரப்புங் கருவிகளாயின. அதனுல் அருணகிரிநாதர் தோன்றிப் பக்திப் பனுவல்களின் அமைப்பை மாற்றினுர். அவர் செய்தன திருப்புகழ்.

பின்பு, மக்களுக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பை விளக்கும் வரலாற்று நூல்களாகிய பல புராண இலக்கியங்கள் பக்திப் பனுவல்களாக மலர்ந்தன.

கடவுள் தொடர்பு 'குழவி மருங்கினும் கிழவதாகும்' ஆதலால், தெய்வங்களைக் குழந்தைகளாகப் பாவித்துப் பாடப்பட்ட பிள்ளைத்தமிழ் நூல்கள் பிறந்தன. இரட்டை மணிமாலைகள், மும்மணி மாலைகள், மும்மணிக் கோவைகள், நான் மணிமாலைகள், அந்தாதிகள் எல்லாம் பக்திப் பனுவல்கள்.

இத்துணை நூல்களும் அன்புச்சுவையை மட்டும் அளிப்பன ஆதலால் மக்கள் மனம் அவ்வளவில் அமையவில்லை; ஏனைய கலப்புச் சுவையை விரும்புவதாயிற்று. அதனுல் காதல், உரையாடல், இழிசினர் காதல், வீரம் முதலியனவும் கலந்த கலம்பகங்கள் எழுந்தன.

இவை அனைத்தும் உயர்ந்த நடையில் செந்தமிழ்த் திறம் குன்ருது இயற்றப்பட்டவை. உலகம் எளிய நடையில் ஆழமான பொருளமைதியையுடைய புரட்சிகரமான கவிதைகளை விரும்பிற்று. அந்த நிலையில் சாதி சமய சாத்திரச் சழக்கற்ற தேன் போலும், இனிய பக்திப் பனுவல்கள் பலவற்றைப் படைத்து உதவினுர்கள் வடலூர் இராமலிங்க வள்ளலார்.

நாம் வாழும் இந்த நூற்ருண்டிலே மகாகவி சுப்பிரமணிய பாரதியார் கண்ணன் என் காதலி, கண்ணன் என் தோழன், ஓம் சக்தி, முத்துமாரியம்மன் முதலான பல பனுவல்களைத் தந்து பக்தி இலக்கியப் பண்பை வளர்த்தார்.

இன்றும் எத்தனையோ பதிகங்கள், பத்துக்கள், உலாக்கள் எழுந்து அன்பு நெறியை வளர்க்கின்றன.

'சொல்லியவே சொல்லி ஏத்துகத்தல்' இறைவன் இயல்பாதலின் இறைவன் புகழ்மாலைகளாகிய பக்திப் பனுவல்கள் மனபரிபாகத்திற்கு ஏற்ற சிறந்த துணையாக வளர்ந்து வருகின்றன.





திரிபுவனம் கோயிலின் முன்கோபுரம்

படம்: தமிழக அரசின் தொல்பொருள் துறை

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி.

திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,
ஆசிரியர் : "திருக்கோயில்"




**முன்னுரை :**

**த**மிழகம் எண்ணற்ற பல திருக்கோயில்களை உடையது. தமிழகம்போல, மிக்க பழமையும், பெருமையும் வாய்ந்த கோயில்களை உடைய நாடு, பிறிதெதுவும் இல்லை எனலாம்.

**சிறப்பு :**

இராசசிம்ம பல்லவன் (கி.பி. 685-705) கட்டிய காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயில், இரண்டாம் பரமேசுவர வர்மன் (கி.பி. 705-710) கட்டிய வைகுண்டப் பெருமாள் கோயில், இராசராச சோழன் (கி.பி. 985-1016) எடுப்பித்த தஞ்சைப் பெரிய கோயில், இராசேந்திர சோழன் (கி.பி. 1012-1044) எழுப்பிய கங்கைகொண்ட சோழபுரம் கோயில், இரண்டாம் இராசராசன் (கி.பி. 1147-1173) அமைத்த தாராசுரம் கோயில், மூன்றும் குலோத்துங்கன் (கி.பி. 1178-1223) தோற்றுவித்த திரிபுவனம் நடுக்கந்தீர்த்த நாதர் கோயில் முதலியன, தமிழகத்தின் சிற்பக் கலைத்திறனிலும், கட்டடக்கலைத் துறையிலும் எல்லையற்ற பெருஞ்சிறப்பு வாய்ந்தவை.

**சிற்ப, கட்டடக் கலைகள் :**

தமிழகத்துக் கோயில்கள் பண்டைக் காலத்தில் பல்வேறு அமைப்புக்களைக்கொண்டு விளங்கின. அமைப்பு முறைகளை ஒட்டிக் கோயில்கள் பல வகைப் பெயர்களைப் பெற்றிருந்தன. ஆரூர்ப் பூங்கோயில், கச்சூர் ஆலக்கோயில், கடம்பூர்க் கரக்கோயில், மீயச்சூர் இளங்கோயில், வைகல் மாடக்கோயில், கருப்பறியல் கொகுடிக்கோயில் என இற்றைக்கு ஏறத்தாழ 1300 ஆண்டுகளுக்கும் முன்னரே இருந்து வந்த பலவகைக் கோயில்களின் பெயர்களைத் திருநாவுக்கரசர் குறிப்பிடுகின்றார். தமிழகக் கோயில்களின் கட்டடக் கலைச் சிறப்பும் பெருமையும், சுமத்திரா, ஜாவா, பாலி, போர்னியோ, பர்மா, மலேயா, இந்தோனிசியா, சயாம், கம்போடியா, சம்பா முதலிய கடல் கடந்த நாடுகளிலும் பரவி விளக்கமுற்றன. ஜாவாவிலுள்ள போராபுதூர் (கி.பி. 750-850) புத்தர் கோயிலும், கம்போடியா அங்கோர்த்தாம் (கி.பி. 802-820) சிவன் கோயிலும், அங்கோர் வாட் (கி.பி. 1110-1150) பெருமாள் கோயிலும், தமிழகக் கோயிற் கட்டடக் கலை - சிற்பக்கலைகளினுடைய வளர்ச்சியின் சிறப்பையும், பரவலையும் விளக்குவனவாகும்.

**ஓவியமும் காவியமும் :**

தமிழகக் கோயில்கள் ஓவியம், காவியம் என்னும் கலைகளின் நிலைக்களமாகத் திகழ்ந்தன. மாமண்டூர்க் குகைக்கோயில் வெளிமண்டபத் தூண்களிலும், மாமல்லபுரம் ஆதிவராக மண்டபத்தின் விதானத்திலும், தஞ்சைப் பெரிய கோயிலின் கருவறை வெளிச் சுற்றுப்புறச் சுவர்களிலும், நார்த்தாமலை விசயாலய சோழீச்சுரம்

கோயிலிலும், சித்தன்னவாசல் முதலிய இடங்களிலும் காணப்படும் பழமை மிக்க சிறந்த அழகிய ஓவியங்கள் கண்டு களிக்கத் தக்கவை.

ஒவ்வொரு கோயிலுக்கும், அதனைச் சார்ந்த தலத்திற்கும் எனக் கோவை, உலா, தூது, மாலை, அந்தாதி முதலிய சிற்றிலக்கியங்களும், தல புராணங்களும் போன்ற எண்ணற்ற இலக்கியச் செல்வங்களாகிய காவியங்கள் மிகப்பலவாகத் தோன்றி விளங்கி வருகின்றன.

இசை :

கோயில்களில் இசைக்கலை பெரிதும் தழைத் தோங்கி வளர்ந்து வந்தது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் 'நாளும் இன்னிசையால்' தமிழ் பரப்பி வந்தனர். கோயில்களில் வகைவகையான தோற்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, துளைக் கருவி ஆகிய இசைக்கலைக் கருவிகள் பயிலப் பெற்றன. குடுமியான்மலைச் சிகாநாதர் கோயிலில் உள்ள மகேந்திரனின் கல்வெட்டு, இசைக்கலை உண்மைகள் பலவற்றை அறிவிக்கின்றது. மதுரைக் கோயில் திருச்சுற்றில் கூத்தப்பிரான் முன்னிலையில் உள்ள தூண் ஒன்றில் 35 வகையான தாளங்கள் குறிக்கப் பெற்றுள்ளன.

நடனம் :

கோயில்களில் இசைத் தமிழே அன்றி, நாடகத் தமிழும் போற்றி வளர்க்கப் பெற்று வந்தது. கதை தழுவி வரும் நாட்டிய நாடகம், மெய்ப் பாடுகளாகிய உணர்ச்சிக் கூறுகளை வெளிப்படுத்தும் நிருத்தியம், தாளத்தை அடிப்படையாகக் கொண்ட நிருத்தம், இவற்றோடு தொடர்புடைய கவுத்துவம் முதலியன கோயில்களில் போற்றி வளர்க்கப்பட்டன. திருவண்ணாமலை, சிதம்பரம், தஞ்சாவூர் முதலிய கோயில்களில், சிவபிரான் ஆடியருளும் தாண்டவத்தின் 108 கரண வகைகள் சிற்பமாக வடித்துத் தரப்பெற்றுள்ளன. கோயில்களில் ஆடரங்கும், நாடகசாலைகளும் இருந்தன. இசையிலும், நாடகத்திலும் வல்ல நாடக மாராயன், சாக்கைக் கூத்தன், கானம்பாடி, வாத்தியமாராயன் முதலியோர் இருந்தனர்.

கல்வெட்டு:

நம்முடைய முன்னோர்களின் வரலாற்றுச் செய்திகள், வாழ்க்கைத் திறன்கள், அறச் செயல்கள், ஆட்சி முறைகள் முதலியவற்றை அறிந்துகொண்டு நாம் பயன் பெறுவதற்கும், கோயில்கள் பெரிதும் துணை புரிகின்றன. கோயில்களில் காணப்பெறும் பல்லவர், சோழர், பாண்டியர் ஆகிய அரசர்கள் பற் பலரும் அமைத்து வைத்த பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுக்கள், பண்டைக்காலத் தமிழகத்தின் சமயம், சமுதாயம், வரலாறு, இலக்கியம், மக்களின் வாழ்க்கைநிலை, பழக்கவழக்கப் பண்பாடுகள் முதலியவற்றை அறிவித்து உதவும் பெரும் சான்றுகளாக நின்று நிலவுகின்றன.

உத்தரமேரூர் வைகுந்தப் பெருமாள் கோயிலின் மேற்குச் சுவரிலுள்ள முதலாம் பராந்தக சோழனின் கல்வெட்டுக்கள் இரண்டு (கி.பி.919-921) இந்நாளில் போல ஊராட்சிமுறை, ஊராட்சி வாரியங்கள், ஊராட்சித் தேர்தல் முறை, உறுப்பினர் ஆதற்குரிய தகுதிகள், உறுப்பினர் ஆக விரும்புபவர்பால் இருக்கக்கூடாத குற்றங்கள் என்பவற்றைப்பற்றிய செய்திகளையெல்லாம் தெளிவுற விளக்குகின்றன.

கலைவளர் கழகம் :

கோயில்களில் புராணங்கள் முதலிய இலக்கியங்களைப் படித்து விளக்கும் படன மண்டபம், நடன மண்டபம், நாடக மண்டபம், தருக்க மண்டபம் முதலியவை இருந்தன. திருவொற்றியூர்க் கோயிலில் 'வியாகரணதான வியாக்கியானதான மண்டபம்' என ஒன்று இருந்ததாகக் கல்வெட்டு கூறுகின்றது. இவற்றிலெல்லாம் பல்வேறு கலைகளும், நூல்களும், பயிலவும், ஆராயவும், பரப்பவும் பெற்று வந்தன.

பண்டைக் காலத்தில் கோயில்கள், பல்வேறு கலை நூல்களையும் ஓலையேட்டில் எழுதிவைத்துப் பாதுகாக்கும் நூலகங்களாவும்; விற்றல், வாங்கல் முதலியனவற்றிற்குரிய பத்திரப்பதிவுகள் செய்யும் ஆவணக் களரிகளாகவும் பயன்பட்டு வந்தன. இவைகள் சரசுவதி பண்டாரம், திருக்கைக்கோட்டி என்னும் பெயர்களைப் பெற்றிருந்தன.

நீதிமன்றம் :

பொதுமக்களின் குறைமுறைகளைக் கேட்டு விசாரித்துத் தீர்ப்பு வழங்கும் நீதிமன்றங்களாகவும் கோயில்கள் பணியாற்றி வந்தன. சுந்தரர்க்கும், இறைவனுக்கும் நேர்ந்த வழக்கு திருவெண்ணெய் நல்லூர்க் கோயிலிலும்; நீலி என்பவளுக்கும், வணிகன் ஒருவனுக்கும் நேர்ந்த வழக்கு பழையனூர்த் திருவாலங்காட்டுக் கோயிலிலும் விசாரிக்கப் பெற்றன என்னும் இலக்கியச் செய்திகள், இங்கு நாம் நினைவுகூரத்தகும். திருமாற் பேறு, கூகூர், திருவெறும்பியூர், திருப்பனந்தாள் முதலிய தலங்களின் கல்வெட்டுக்களும், கோயில்கள் ஒருவகையில் நீதிமன்றங்களாகத் திகழ்ந்து வந்ததனை உணர்த்துகின்றன.

அறச்சாலை :

கோயில்கள் பலவகை அறச்செயல்கள் நடைபெறுவதற்குரிய நிலைக்களமாக இருந்தன. கோயில்களை அடுத்துப்பல திருமடங்களும், அறச்சாலைகளும் தோன்றி நடைபெற்று வந்தன. திரிபுவனம், எண்ணாயிரம், திருமுக்கூடல், பாகூர் முதலிய இடங்களில் சிறந்த கல்வி நிலையங்களும், அவற்றில் பயிலும் மாணவர்களுக்கு இலவச உண்டி, உறையுள் வசதிகளும் மிகப்பெரிய அளவில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளமை கல்வெட்டுக்களால் புலனாகின்றது.

மருத்துவ மனை :

மக்களின் மலப்பிணிப்பை அகற்றி, உயிர் நோயைத் தீர்ப்பதற்கென அமைந்த கோயில்களில், அவர்களின் உடற்பிணிகளைத் தீர்த்து உதவுவதற்கும் தக்க வசதிகள் செய்யப் பெற்

றிருந்தன. திருமுக்கூடல், திருவாவடுதுறை, திருவாமாத்தூர் முதலிய பல தலங்களில் மருத்துவ மனைகளும், திக்கற்றோர் இல்லங்களும் நடத்தப் பெற்றன.

### நிதி நிலையம் :

தமிழகக் கோயில்கள், இந்நாளைய நிதிவைப்பு நிலையங்களாகிய வங்கிகள் போலவும் பொது மக்களுக்குப் பணிபுரிந்து வந்தன. திருப்புத்தூர், குமாரமார்த்தாண்டபுரம், காஞ்சி இராசசிம்மேசு வரம் முதலிய கோயில்களின் கல்வெட்டுக்களால் இவ்வுண்மையை அறியலாம். கோயிலுக்கு வரும் நன்கொடைகளைப் பெறவும், கோயில் பண்டாரத் திலிருந்து பொருள்களைக் குறித்த வட்டிக்குக் கடன் தரவும், இவற்றின் தொடர்பான பத்திரங் களைப் பாதுகாக்கவும், கோயில் தொடர்புடைய வேலைகள் பலவற்றைக் கவனிக்கவும் 'அமிர்தகணத் தார்' என்னும் குழுவினர் இருந்தனர்.

### தொழில் நிறுவனம் :

பொதுமக்கள் நலனுக்கு இன்றியமையாத சிறந்த பல உதவிகளைச் செய்வதில் கோயில்கள் முனைந்து நின்றன. இந்நாளைய தொழில் தரும் நிறுவனங்கள்போலக் கோயில்கள் பண்டைய நாளில் விளங்கின. பண்டாரகர், கணக்கர், மெய் காப்பாளர், பரிசாரகர், திருவிளக்கிடுவோர், மாலைகட்டுவோர், திருமுறை ஓதுவோர், வண்ணம் இடுவோர், சுண்ணம் தீற்றுவோர், சோதிடர், தச்சர், தட்டார், கன்னர், குயவர், நாவிதர், வண்ணார் முதலிய தொழிலாளர்கள் பற்பலர் கோயில்களில் அமர்த்தப் பெற்றிருந்தனர். இவர் களுக்குப் பரம்பரையாக வேலையும், மானியமும் அளிக்கப்பட்டன.

### பணி நிலையம் :

கோயில்கள், படையெடுப்புக்கள் நிகழும் போதும், போர்கள் ஏற்படும்போதும், மக்களுக்குப் புகலிடம் அளிக்கும் அரண்களாகவும், வலிமை வாய்ந்த கோட்டைகளாகவும், படைவீடுகளாக வும் பயன்பட்டன. நாட்டில் பஞ்சம் முதலிய தீங்குகள் ஏற்படும்போது, தமது பண்டாரத்தி லிருந்து உணவளிப்பும், பொருளுதவிகளும், பிறவும் செய்யும் பணிநிலையங்களாகவும் கோயில்கள் திகழ்ந்து வந்தன.

இதுகாறும் கூறி வந்தவாற்றால், நம் தமிழ் நாட்டிற் பழங்காலத்திற் கோயில்களே கல்விக் கூடங்களாகவும், கலை வளர்ச்சிக் கழகங்களாகவும், ஆவணக்களரிகளாகவும், அறங்கூறவையங்களாக வும், அறச்சாலைகளாகவும், மருத்துவ மனைகளாக வும், மக்களுக்குத் தொழில் தரும் நிறுவனங்களாக வும், பொருள் கொடுத்தும், வாங்கியும் உதவும் நிதி நிலையங்களாகவும், மன்பதை நலம் வளர்க் கும் பணி மன்றங்களாகவும், இன்ன பிறவாகவும் விளங்கி வந்தமை உணரலாம்.

### தத்துவ நுட்பங்கள் :

கோயில்கள் என்பது வெறும் கட்டடங்கள் அல்ல. கோயில்களின் அமைப்பு முறைகள் எத் தனையோ பல தத்துவ நுட்பங்களையும், யோக ஞான அனுபவச் செய்திகளையும் உட்கொண்டன வாகத் திகழ்கின்றன. பண்டைய நம் தமிழ்ச் சான்றோர்களாகிய திருமூலர் போன்ற தவஞான யோகச் செல்வர்கள்,

உள்ளம் பெருங்கோயில்; ஊன்உடம்பு ஆலயம்;
வள்ளற் பிரானார்க்கு வாய்கோபுர வாசல்;
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்;
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே

என்பன போன்ற பாடல்களினால், கோயில் அமைப்பு முறைகளில் உட்கிடையாக உள்ள தத்துவ நுட்பங்கள் பலவற்றை விளக்கியுள்ளனர்.

நம் தமிழ்ச் சான்றோர்கள், யோகஞான நுண் உணர்வால் தமது உடம்பையே ஒரு கோயிலாகக் கண்டுணர்ந்தனர். அதனால் கோயில்களை ஓர் உடம்பு போல அமைத்து வைத்தனர். நம் உடம் பின் கண் முதன்மையான ஆறு இடங்கள் உள்ளன எனவும், அவை மூலம், கொப்பூழ், மேல்வயிறு, நெஞ்சம், மிடறு, புருவநடு என்னும் ஆறும் ஆகும் எனவும் கண்டறிந்தனர். யோக நூல்கள் இவற்றை மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களாகக் கூறும். மூலம் என்பது எருவாய் கருவாய்க்கு இடையே நிலத்தின் தன்மையும், கொப்பூழ் நீரின் தன்மையும், மேல்வயிறு நெருப் பின் தன்மையும், நெஞ்சம் வளியின் தன்மையும், மிடறு விசும்பின் தன்மையும் உடையதாக விளங் கும். புருவநடு என்பது இடை, பிங்கலை, சுழுமுனை நாடிகள் கலக்கும் இடமாகத் திகழும். இவ்விடங் களில் இறைவனின் அருள் விளக்கத்தைக் கண்டு தொழுது வழிபட்டனர் நம் தமிழ்ச் சான்றோர்கள். தமிழகத்தின் திருக்கோயில்கள்பற்றிய இன்னோர னைய நுட்பச் செய்திகள் மிகப்பல.

### முடிவுரை :

இத்தகைய சிறப்பு மிக்க கோயில்களே, நம் முடைய நலங்கருதி நமக்காக நம் முன்னோர்கள் அமைத்து வைத்து அளித்துச் சென்ற அரும்பெரும் கலைச் செல்வங்களாகும்.

''சேலேறியவயல் தென்காசி ஆலயம், தெய்வச் செய
லாலே சமைந்தது; இங்குஎன் செயல்அல்ல; அதனை இன்னும்
மேலே விரிவு செய்தே புரப்பார் அடிவீழ்ந்து, அவர்தம்
பால் ஏவல் செய்து பணிவேன் பராக்ரம பாண்டியனே''

எனத் தென்காசிக் கோயிலைக் கட்டிய பராக்கிரம பாண்டியன் (கி.பி. 1422-1463) பாடிய உருக்கம் மிக்க கல்வெட்டுச் செய்யுள் போன்றவை, நாம் நம் கோயில்களைத் தம் பண்டைப் பெருமை யில் சிறிதும் குன்றாமல், போற்றிக் காத்து வளர்த்து வரவேண்டிய பொறுப்பையும், கடமையையும் உணர்த்துவனவாம்.



தஞ்சைப் பெரிய கோயில்



கங்கை கொண்ட சோழபுரம் கோயில்



காஞ்சி கைலாசநாதர் கோயில்

படம் : தமிழக அரசின் தொல்பொருள் துறை

ஒழுக்காறுக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு

பேராசிரியர் ஔவை சு. துரைசாமி பிள்ளை,
தியாகராயர் கல்லூரி, மதுரை.

# சமணர் வளர்த்த தமிழ்

### தோற்றமும், வளர்ச்சியும் :

சமணம் என்பது நமது பாரத நாட்டுப் பழஞ் சமயங்களுள் ஒன்று; இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்குமுன் தோன்றிய பௌத்த சமயத்துக்குச் சில ஆண்டுகள் முன்னையது என்பர். இதனை முதலில் வர்த்தமான மகாவீரர் தோற்றுவித்தார். இச்சமயம் பொதுவாகச் சமணம் என வழங்கும்; இதனைத் தமிழகத்திற்குக் கொணர்ந்து பரப்பியவர் சமணத் துறவிகளான சமணராதலால், அவர் பெயரால் இச்சமயம் சமணம் எனத் தமிழ் மக்களிடையே வழங்குவதாயிற்று.

தமிழகத்தில் இன்று நிலவும் தமிழ் நூல்களுள் மிகப் பழமையானது தொல்காப்பியம். அதன் காலம் கிறித்துவுக்கு 1500 ஆண்டுகள் முற்பட்டது. அது தமிழ் மொழிக்கு உரிய இலக்கணமேயன்றி இலக்கியமோ, சமய நூலோ அன்று; ஆகவே, அதுகொண்டு அக்காலத்தே நிலவிய சமயத்தை நன்கு அறிவதற்கு இல்லை. ஆயினும், ''அகத்தெழு வளியிசை அரில் தப நாடி, அளவிற் கோடல் அந்தணர் மறைத்தே'' என்றும், ''கபிலை கண்ணிய வேள்வி நிலை'' என்றும் வரும் வைதிக சமயக் குறிப்புக்கள் ஒழிய, பௌத்தரின் பிடகமோ, சமணரின் ஆகமங்களோ உரைக்கும் கருத்துக்கள் தொல்காப்பியத்தில் காணப்படவில்லை. ஆதலால், சமணமும், பௌத்தமும் தொல்காப்பியர் காலத்துக்குப் பின்பே தமிழகத்திற் புகுந்தனவாம்.

சமணமும், பௌத்தமும் புதிதாகப் புகுந்து பரவிக் கொண்டிருக்கையில் திருக்குறள் தோன்றுவதாயிற்று. அகப்பொருட்கட்குச் சிறப்பளித்து ஓங்கிய சங்ககாலக் குறிக்கோளைச் சிறிது மாற்றிப் புறமாகிய அறம் பொருட்கட்கு முதலிடம் தந்து இன்பமாகிய அகப்பொருளையும் கைவிடாதொழுகும் காலத்தில் திருவள்ளுவருடைய திருக்குறள் பிறந்தது. சமய வாழ்வுக்கேற்ற துறவறம் கூறுமிடத்தும், திருவள்ளுவர், வைதிகம், சமணம், பௌத்தம் என்ற சமயவழிச் செல்லாது, தமிழகத்தில் வரலாறறியாக் கால முதலே நிலவிய பழங் கருத்துக்களையே மேற்கொண்டுள்ளார்.

கி.பி. இரண்டாம் நூற்றூண்டில் சமண சமயம் தமிழகத்தில் ஓரளவு இடம் பெற்றது. தமிழ் மக்களோடு இனிது கலந்து பயிலும் வாய்ப்பும் தோன்றியது. மக்கள் சமண் சமயத்தை மதித்து அதற்குரிய கோயில்கள் அமைத்திருந்ததை அக் காலத்தில் பிறந்த சிலப்பதிகாரம் காட்டுகிறது. வைதிக பௌராணிக சமயக் கடவுளோடு ஒப்பச் சமண் சமயக் கடவுட்குக் கோயில்கள் காவிரிப் பூம்பட்டினத்தில் இருந்ததைச் சைவனுன செங் குட்டுவன் தம்பி இளங்கோவடிகள் எடுத்துரைக் கின்றூர். இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம், தொடக்கத்தில் வைதிக சமயத்தையும், இடையில் சமணம், வைணவம் சைவமாகிய சமயங்களையும் காட்டிச் சமயப் பொதுநூலாக அமைந்துவிடு

கிறது. கோவல கண்ணகியரைச் சமண் சான்றோ ரிடம் கண்டதனுல் மாதரி என்ற ஆய்மகள் அவர்களைச் சமண்சமயத்துச் சாவகர்களாகக் கருதுகிருளேயன்றி வேறன்று.

இளங்கோவடிகள் காலத்துக்குப்பின், தமிழக வரலாற்றில் இருள் படிந்துவிடுகின்றது. தமிழர் வாழ்வே ஒன்றும் புலப்படாதவாறு மறைந்தொழி கிறது. பிற்கால வரலாற்றுக் குறிப்புக்களால், களப்பிரர் என்னும் நாடோடிக் கூட்டம் தமிழகத் திற் புகுந்து தமிழ் வரலாற்றைச் சீரழித்துவிட் டமை தெரிகிறது. அக்காலத்தே, பௌத்தமும், சமணமும் செல்வாக்குப் பெற்றுள்ளன. கி.பி. ஐந்து, ஆறும் நூற்றுண்டுகளில் பல்லவர் ஆட்சி தோன்றித் தமிழகத்தின் வட பகுதியாகிய தொண்டை நாட்டில் செவ்விய இடம் பெற்றது. பௌத்தம் பொன்னும், பொருளும் நிறைந்த மடங்கள் பல அமைத்துச் சமயப்பணி புரிந்தது. சமண் சமயம் பௌத்தர்களோடு போராடுவ தோடு நில்லாமல், பாண்டிய நாடு புகுந்து பண்பு மேம்பட்டது. சமணச் சான்ருேர் சிலர் மதுரைக்கு அருகில் வச்சிரநந்தி என்ற சமண் சான்ருேர் தலைமையில் சமண் சங்கம் ஒன்றை நிறுவிச் சமயப் பணியும், தமிழ்ப்பணியும் புரிவதாயினர். வச்சிர நந்தியின் தமிழ்ச் சமணச் சங்கம் கி.பி. ஒன்பது, பத்தாம் நூற்றுண்டு வரை இருந்ததெனச் சீவக சிந்தாமணி பற்றிய வரலாற்ருல் அறிகின்ருேம்.

**கல்விப் பணி :**

கல்விப்பணி மேற்கொண்ட சமண் சான்ருேர், தங்கள் தவப்பள்ளிகளில் கி.பி. ஆறும் நூற்றுண் டில் கூடம் அமைத்து மக்கட்குக் கல்வியறிவு வழங்கலாயினர். அக்காலம் முதல் தமிழகத்தில் கல்விச்சாலைகட்குப் பள்ளிக்கூடம் என்ற பெயர் தோன்றி வழங்குவதாயிற்று. இப்பள்ளிக்கூடங்கள் வடமொழி பெரிதும் தமிழ் சிறிதுமாகக் கற் பித்து வந்தன. இக்காலத்தில் தமிழ் பயில்வதற் காகச் சிறு நூல்களைச் சமண் சான்ருேர் செய் தளித்தனர். அவருள் முன்றுறையரையர் பழ மொழி நானூறும், காரியாசான் சிறுபஞ்ச மூலமும், மதுரைத் தமிழாசிரியர் மாக்காயனர் மாணக்கர் கணிமேதாவியார் ஏலாதியும், திணை மாலை நூற்றைம்பதும் இயற்றியுதவினர். வேறு சமண் முனிவர் சிலர், நாலடியாரைச் செய்தளித் தனர். பிற்காலத்தே பத்தாம் நூற்றுண்டில் இத் தமிழ்ச் சமண் சங்கத்தார் பழைய நூலான திரு வள்ளுவர் செய்த திருக்குறளையும், ஏனைச் சமயத் தவர் செய்த கார் நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, கைந் நிலை என்ற அகப்பொருள் கூறும் நூல்களையும் களவழிநாற்பது, இன்னநாற்பது, இனியவை நாற்பது, நான்மணிக்கடிகை, திரிகடுகம், ஆசாரக் கோவை, முதுமொழிக்காஞ்சி ஆகிய பதின்மூன் றையும் கூட்டிப் பதினெண் கீழ்க்கணக்கு என்ற பெயரால் தொகுத்து உதவினர்.

**சமயப் போராட்டங்களிடையே சமணம் :**

கி.பி. ஏழாம் நூற்றுண்டில் தமிழகம் பௌத்த, சமண, சைவ சமயப் போராட்டங்களுக்கு இட மாயிற்று. கி.பி. நான்காம் நூற்றுண்டில் சீத்தலைச்சாத்தனர் செய்த மணிமேகலையால் வீறு பெற்றுச் செல்வச் சிறப்பெய்திய பௌத்தம் குண் டலகேசி என்ற பெயரால் சமணத்தைத் தாக்கவும் சமணம் நீலகேசி, அஞ்சனகேசி, காலகேசி என்ற நூல்களையும்கொண்டு பௌத்தத்தைத் தாக்கிற்று. அக்காலத்தே தொண்டை நாட்டையாண்ட பல்லவ வேந்தன மகேந்திரவர்மன் ''மத்த விலாசம்'' என்ற நாடகமொன்றை வடமொழியில் எழுதிப் பௌத்த சமயத்தை வலியழித்தான். இதனுலும், வேறு காரணங்களாலும் பௌத்தம் நிலையழிந்து கெட்டது. சமணம் செழித்தது. இவ் வாறே பாண்டிய நாட்டிலும் அது வேந்தனைத் தன்வயமாக்கி நாடு முற்றும் தன்புகழே நிலவச் செய்தது. இளைஞர்க்காக நரிவிருத்தம், எலிவிருத் தம், கிளிவிருத்தம் முதலிய சிறு நூல்களைத் தோற்றுவித்தது. இவ்வகையில் சமயக் கல்விக்கு இடம் கிடைத்ததும், அருங் கலச் செப்பு என்னும் சமண் சமயக் கருத்துக்களைக் குறட்பாக்களால் தரும் நூல் பிறந்தது. முனைப்பாடியார் என்ற சமண் சான்ருேர் அறநெறிச்சாரம் என்ற நூலை எழுதினர்.

இங்ஙனம் சமணம், தொண்டை நாட்டிலும், பாண்டிய நாட்டிலும் அரசைக் கைப்பற்றி, அரசர், செல்வர் முதலியவரின் ஆதரவு பெறவும், தமிழகத்தே வரலாறறியாக் கால முதலே இருந்து வரும் சைவத்தோடு போராட வேண்டியதாயிற்று. சோழ நாட்டிலும், நடுநாட்டிலும் ஞானசம்பந் தரும், நாவுக்கரசரும், நம்பியாரூரரும் தோன் றித் தொண்டை நாட்டுப் பல்லவ வேந்தனையும், பாண்டிய நாட்டுப் பாண்டி வேந்தனையும் சைவர் களாக்கிச் சமணத்தைத் தலை சாய்த்தனர். தமிழ் மக்கள் உள்ளம் ஞானசம்பந்தர் முதலியோர் பாடிய பண்டைய இசைத்தமிழைச் சேர்ந்த தேவாரப் பாட்டுக்களைக் கேட்டு மக்கள் ஆர்வம் பெருகிச் சிவநெறியைப் பின்பற்றக் கண்ட சமண் சான்ருேர், தமிழ்ச் செய்யுள் இலக்கணத்தை ஆராய்ந்து தொல்காப்பியம் காட்டிய பழைய செய்யுள் இலக்கணங்களை எளிமைப்படுத்தும் முயற்சியில் இறங்கினர். ஒருசிலர் எழுத்தும், சொல்லும், பொருளும், ஆய்ந்து நூல்கள் எழுதினர்.

**சமணர் எழுதிய நூல்கள் :**

**அவிநயம் :** இதனை எழுதியவர் அவிநயனர். இஃது எழுத்து, சொல், பொருள், யாப்பு என்ற இலக்கணங்களைக் கூறுவது. இது கி.பி. பதினைந் தாம் நூற்றுண்டுவரை இருந்து மறைந்து போயிற்று.

**செயிற்றியம் :** இதனை எழுதியவர் செயிற் றியனர். இஃதும் அவிநயம்போல எழுத்து, சொல் முதலிய இலக்கணங்களைக் கூறுவது. சமணர் குழுவிலேயே வழங்கி இடைக்காலத்தில் இறந்து விட்டது.

**தக்காணியம் :** இதன் ஆசிரியர் பெயர் தெரிந் திலது. எழுத்தும், சொல்லும் கூறுவது.

அணியியல் : ஆசிரியர் பெயர் தெரியவில்லை. செய்யுள் இலக்கணம் கூறும் இந்நூலாசிரியர், வெண்பாக்களைச் செப்பல், வெண்கூ, அகவல் என மூவகைப்படுத்துரைக்கும் இனத்தைச் சேர்ந் தவர்.

வாய்ப்பியம் : வாய்ப்பியனார் செய்தது; எழுத்து, சொல், யாப்பு மூன்றும் கூறுவது.

மொழிவரி : இதன் ஆசிரியர் நல்லாறனார். இஃது எழுத்துக்கும், சொல்லுக்கும் இலக்கணம் கூறுவது.

கடிய நன்னியம் : இதன் ஆசிரியர் கடிய நன்னியனார். இது செய்யுளிலக்கணம் ஒன்றே கூறுவது. இந்நூல் மருட்பாவின் ஈற்று அயலடி முச்சீர் பெறுதல் வேண்டா என்பது.

காக்கை பாடினியம் : ஆசிரியர் காக்கை பாடினியார். இந்நூல் செய்யுளிலக்கணம் கூறுவது. இவர் சங்க இலக்கியத்தில் வரும் காக்கை பாடினி யார் அல்லர். இவரைக், ''காக்கை பாடினியார் முதலாகிய மாக்கவிப்புலவோர்'' என்று சான் றோர் பாராட்டுவர். இவ்வாறே நக்கீரர் நாலடி நானூறு, நத்தத்தனார் பாடிய நத்தத்தம், பல் காயரது பல்காயம், பனம்பாரனாரது பனம்பாரம் ஆகிய நூல்களும், சிறுகாக்கை பாடினியம், சங்க யாப்பு, செய்யுளியல், செயல்முறை, பெரிய பம்மம், மாபுராணம், யாப்பியல், நாலடி நாற்பது என்பனவும் செய்யுளிலக்கணமே கூறுவன. கையனார் செய்த இலக்கணமும் இவ்வகையைச் சேர்ந்ததாகும்.

இனிப் பாட்டியல் கூறும் நூல்களாக இந்திர காளியார் செய்த இந்திரகாளியமும், பரிமாணனார் செய்த பரிமாண நூலும் நிலவின. அறிவுடை நம்பி என்ற சமண் சான்றோர் சந்தப் பாக்களுக்கு வகுத்த இலக்கணமான சந்த நூல் பேணுவாரற்று இறந்தது.

இவற்றின் வேறாகத் தத்துவ தரிசனம் என்ற சமண் சமயப் பொருள் நூலும், பாவைப்பாட்டு என்ற நூலும் தோன்றிச் சில நூற்றாண்டுகள் வாழ்ந்து இறந்தன.

கி.பி. எட்டாம் நூற்றாண்டில் தோலாமொழித் தேவர் என்ற சமண் சான்றோர் சூளாமணி என்ற தமிழ்க் காப்பியத்தை எழுதினார். அது விசயன், திவிட்டன் என்ற இருவரது வரலாற்றுக் காப்பிய நலமெல்லாம் ஒருங்கு விளங்க அமைந்தது. இப்போது அச்சாகி நிலவுகிறது. இக்காலத்தில் தான், திவாரக முனிவர் திவாகரம் என்ற சொற் பொருளுரைக்கும் நூலை எழுதினார்.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் கொங்கு நாட்டுப் பெருந்துறைக்கு அருகிலுள்ள விசயமங்கலத்தில் தோன்றிய கொங்கு வேளிர் என்ற சமண் சான் றோர் உதயணன் வரலாற்றை மணிமேகலைபோல அகவற்பாவில் பெருங் காப்பியமாக எழுதித் தமிழ்ப்பணி செய்தார். அதன்கண் வரும் உவமை நலங்களும், இயற்கைக் காட்சிகளும் திருத்தக்க தேவர்க்குப் பெருந்துணை செய்துள்ளன. சூளா மணியும், நீலகேசியும் போலச் சமண் சமயத்துக் கெனவே அமையாது, எச்சமயத்தாரும் விரும்பி யேற்கும் முறையில் கொங்குவேளிரது பெருநூல் அமைந்து இன்பம்நல்குகிறது.

கி.பி. பத்தாம் நூற்றாண்டில் சோழர் குடித் தோன்றலான திருத்தக்கதேவர் என்ற சமண் சான்றோர் சீவக சிந்தாமணி என்ற பெருங்காப் பியத்தை எழுதினார். சூளாமணிபோலச் சமண் சமயத் துறவொழுக்கங்களையுரைத்தற்கே இச் சிந்தாமணி முடிவில் சிறந்துளதெனினும், தமிழ் வளத்தால் இலக்கிய நலத்தால், கம்பர் முதலிய புலவர் பெருமக்கள் விரும்பிப் பின்பற்றும் மேதகவு சான்றது.

இக்காலத்தேதான், சமண்சான்றோரான அமுத சாகரர் யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்ற செய்யுள் இலக்கணத்தை எழுதினார். யாப் பருங்கலம் விரிந்த உரையால் மேம்படினும், காரி கையே நாட்டினரின் பேராதரவு பெற்று இன்றும் பயிலப்பட்டு வருகின்றது. அந்நாளில் அரசுபுரிந்த சோழவேந்தர், அதனை வியந்து பாராட்டிச் சோழ நாட்டில் காரிகைப் புத்தூர் என்றோர் ஊரை அவர்க்களித்த சிறப்பைக் கல்வெட்டுக் களால் அறிகின்றோம்.

கி.பி. பதினோராம் நூற்றாண்டில் தீபங்குடியில் தோன்றிய சயங்கொண்டார். கலிங்கம் வென்ற சோழ வேந்தனையும், அவன் தளபதி கருணாகரத் தொண்டைமானையும் சிறப்பித்துக் கலிங்கத்துப் பரணி என்ற நூலைப் பாடினார். அதனை ஒப்பதும், மிக்கதுமாகிய பரணி இல்லாமையால், அவர் கவிச்சக்கரவர்த்தி என்ற சிறப்புப் பெற்றார்.

இக்காலத்தில் தொல்காப்பியத்துக்கு இளம் பூரணர் என்ற சான்றோர் முன்னோர் கூறிவந்த உரைகளைத் தொகுத்தும், விளக்கியும் காண்டிகை யுரை வழங்கினார். முன்னோர் பலர் இருந்திருப் பினும் இளம்பூரணரையே பலரும் உரையாசிரியர் எனக் கருதிப் பாராட்டுவதுண்டு.

கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் குணவீர பண்டிதர் என்ற சமண் சான்றோர், எழுத்தும், சொல்லுமாகிய பரந்த இலக்கணத்தை நேமி நாதம் என்று பெயரிட்டு வெண்பா யாப்பில் பாடினார். இவரே யாப்பருங்கலக் காரிகைக்கு உரை கண்டவர் என்று கருதுவோருமுண்டு. நேமி நாதம் பாடிய காரணத்தால் இக்குணவீர பண் டிதரை நேமிநாதர் என்று உரைப்பதும் உண்டு. இக்குணவீரரின் ஆசிரியர் வச்சணந்தி என்னும் சான்றோராவர். இவர் இந்திர காளியத்தையும், சமண் பெரியார் வகுத்த இந்திர காளியத்தையும், பிறவற்றையும் முதலாகக்கொண்டு வெண்பாப் பாட்டியல் என்ற பெயரால் பாட்டியல் வகையும், இலக்கணமும் எழுதியுதவியுள்ளார். இந்நூல் தோன்றியபின் ஏனைப் பாட்டியல் நூல்கள் சிறப் பிழந்து மறைந்தன.

இந்நாளில்தான் கொங்கு நாட்டில் அடியார்க்கு நல்லார் தோன்றிப் பண்டைய இசையும் கூத்தும் உரைக்கும் நூல்கள் சிலவற்றையும், பழைய அரும்பதவுரையையும் துணையாகக்கொண்டு சிலப்பதிகாரத்துக்கு விரிந்த உரை கண்டனர். இவரது பேருரை சுவாமி விபுலானந்தர் அவர்கள் பல்லாண்டு ஆராய்ந்து எழுதிய யாழ்நூலுக்குப் பெருந்துணை புரிந்தது. இவரையும் இவரை ஆதரித்த பொம்மண்ண காங்கேயர் என்ற செல்வ ரையும், சமணர் என மதுரைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர். திரு. தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் கூறுகின்றுர்.

**கி.பி. பதின்மூன்ரும் நூற்ருண்டில்** நாற்கவி ராசநம்பி என்ற சமண புலவர், தொல்காப்பியம் கூறும் அகப் பொருட் பகுதிக்கு இளம்பூரணர் கண்ட உரை துணையாக அகப்பொருள் விளக்கம் என்ற இலக்கண நூலை எளிய சொற்களால் இயன்ற சூத்திர யாப்பில் எழுதியுதவினுர். அஃது இன்றும் தமிழ் மாணவர்களால் விரும்பிப் படிக்கப்படு கிறது எனின், அதன் சிறப்புக்கு, வேறு கூறுவது மிகை. இந்நூற்ருண்டில் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினுர்க்கினியர் சீவக சிந்தா மணியின் பொருட்டுச் சமணராகி அதற்கு இனிய உரையெழுதினுர் என்பர்.

**கி.பி. பதினுன்காம் நூற்ருண்டில்** சனகா புரத்துப் பவணந்தி என்ற சமண சான்ருேர் தொல்காப்பியம், நேமிநாதம், தொல்காப்பிய இளம்பூரணம் ஆகியவற்றை ஆராய்ந்து நன்னூல் என்னும் இலக்கணத்தை அந்நாளைய அரசியல் தலைவனுன சீயகங்கன் விருப்பத்திற்கு இசைந்து சொற் சுருக்கமும், பொருள் விளக்கமும் இனிது அமைய எழுதியுதவினுர்.

**கி.பி. பதினைந்தாம் நூற்ருண்டில்** தொண்டை மண்டலத்தவரான மயிலைநாதர் என்ற சமணப் புலவர் நன்னூலுக்குத் தெளிவான உரையெழுதி னுர். இக்காலத்தில் சமண சான்ருேர் புராணங் களையும், சிற்றிலக்கியங்களையும் எழுதலாயினர். அவற்றுள் வாமன முனிவர், மக்கள் தாம் செய்யும் வினைக்கேற்ப மாறி மாறிப் பிறந்துழலும் திறத்தை விளக்கும் மேருமந்தர புராணத்தை எழுதி அளித் தார். சாந்தி புராணமும் இக்காலத்ததே என்பர். இவ்வாமன முனிவரே நீலகேசிக்கு மணிப்பிரவாள நடையில் உரையெழுதியவர் என்பாரும் உண்டு. உத்சி என்பவர் திருக்கலம்பகத்தையும், அவிரோதி யார் திருநூற்றந்தாதியையும் பாடி இளைஞர்க்குத் தமிழறிவு வழங்கினர்.

**கி.பி. பதினுரும் நூற்ருண்டில்** வெண்ணுவலு டையார் வேள் என்ற சமண் புலவர், யசோதர காவியத்தைப் பாடினுர். இது வடமொழியில் புட்பந்தர் எழுதிய யசோதர சரிதையைப் பின் பற்றியது என்பர். இதுபோலவே, உதயணகுமார காவியம், நாககுமார காவியம் என்பன சமண் பள்ளிகளில் தமிழ் பயிலும் சிறுவருக்கென எழுதப் பட்டவனவாகும். நாககுமார காவியம் இப்போது கிடைப்பதில்லை. இக்காலத்தில்தான் பதினெண் கீழ்க்கணக்கு என்றும், ஐம்பெருங்காப்பியம் என் றும், ஐஞ்சிறு காப்பியம் என்றும் கூறப்படும் தொகுப்பு முறை, கல்வி முறை பற்றித் தோன் றிற்று. வச்சிரநந்தி தோற்றுவித்து நடப்பித்த தமிழ்ச்சங்கத்தார் பதினெண் கீழ்க்கணக்கு என்ற தொகுப்பை வழங்கியிருக்கலாம் என்று நினைப் பவரும் உண்டு.

**கி.பி. பதினேழாம் நூற்ருண்டில்** கல்வி பயிலும் இளஞ்சிருர்க்கென முன்னுளில் வழங்கிய நெல் லிலக்க வாய்பாடு, சிறுகுழி வாய்பாடு, கீழ்வாய் இலக்கம், பெருக்கல் வாய்பாடு எனக் கணக்கியல் நூல்கள் பல சமண ஆசிரியர்களால் செய்யப் பட்டன. சினேந்திரமாலை என்ற சோதிட நூலும் இந்நாளில் தோன்றிற்று.

**கி.பி. பதினெட்டாம் நூற்ருண்டில்** முகமதிய, ஐரோப்பிய, கிறித்துவ சமய ஆட்சியாலும் மக்கள் வாழ்வில் தோன்றிய மாறுதல்களாலும் சமணர் கள் இயற்றியதாகக் குறிப்பிடத்தக்க இலக்கிய நூல்கள் எதுவும் தென்படவில்லை.

**கி.பி. பத்தொன்பதாம் நூற்ருண்டில்** ஆங்கில மொழியும் கிறித்தவ சமயமும். மக்களிடையே சிறப்பிடம் பெற்றதனுல், மக்கட்கு வாழ்வு தர வேண்டித் தமிழ்க்கல்வி தளர்ச்சியுற்றது. தமிழ் கற்ருேர்க்குப் பொருளாதாரத்தில் சிறுமையுண் டாயிற்று. சமயக் கல்வி சிறப்பிழந்தமையால் சமண் சமயம் ஒளி மழுங்கிற்று.

முடிவுரை :

இதுகாறும் கூறியவாற்ருல், நூற்ருண்டு தோறும் சான்ருேர்களை உயர்த்தி உயரிய நூல் களைப் படைத்துத் தமிழ் வளர்த்துப் புகழ் நிறுவி நின்ற சமண் சமயம், பத்தொன்பதாம் நூற் ருண்டிலே வீழ்கதிர் ஞாயிருகி விளக்கம் இழந்தது. எத்தனையோ சமண சமயத் தமிழ் நூல்கள் பெயர் தெரியாவகையில் இறந்து போயின. இந்நூற்ருண் டில் சமணரையுள்ளிட்ட யாவர்க்கும் அரசியற் செல்வாக்கே சமயம்; எந்நெறியிலேனும் பொருள் ஈட்டுவதே சமய ஒழுக்கம், என்று ஆகிவிட்டது இனிச் சமயம் செய்தற்குரிய தமிழ்ப்பணியை காலம்தான் முடிவு செய்ய வேண்டும்.

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு

ஆராய்ச்சி அறிஞர், மயிலை சீனி. வேங்கடசாமி




## மொழிக்கலப்பு :

ஒரு மொழியைப் பேசுவோர் வேறு மொழியைப் பேசுகிறவர்களோடு கலந்து உறவாடுகிறபோது, தங்கள் தாய்மொழியில் இல்லாத சொற்களை வேறு மொழியிலிருந்து எடுத்துக் கொள்கிறார்கள். தங்கள் தாய்மொழியில் ஏதேனுங் கருத்தைத் தெரிவிக்கும் சொல் இல்லாமலிருந்து, அக்கருத்தை வெளியிடத்தக்க சொல் வேறு மொழியில் இருக்குமானால் அச்சொல்லை அஃது இல்லாத மொழியினர் ஏற்றுக் கொள்வது வழக்கம். இது தொன்றுதொட்டு இன்றுவரையில் உலகமெங்கும் நடந்து வருகிற இயற்கையாகும்.

மொழி அதைப் பேசுகிறவரின் கருத்துக்களை வெளியிடுகிற கருவியாக இருப்பதனாலே ஒருவருக்கு ஒரு புதிய கருத்துத் தோன்றினால், அக்கருத்தை அவர் தம்முடைய தாய்மொழியிலே வெளியிடுகிறார். ஒரு கருத்து வேறு மொழியிலிருந்து பெறப்படுமானால், அக்கருத்தைக் குறிக்கும் அயல் மொழிச் சொல்லை எடுத்து வழங்குவர். வேற்று மொழிச் சொற்களை எடுத்துத் தம்முடைய மொழியில் வழங்குகிறவர், அந்த அயல் மொழிச் சொற்களை அந்த உருவத்திலேயே வழங்காமல் தம்முடைய தாய்மொழியின் இயற்கைக்கு ஏற்ப மாற்றியும், திரித்தும் வழங்குவர். உதாரணம்: ரகர ஒலி இல்லாத சீனர் அந்த ஒலிக்குப் பதிலாக லகர ஒலியை வழங்குகிறார்கள். (அமெரிகா—அமெலிகா.) ழகர ஒலி இல்லாத மொழியினர், ழகரத்துக்குப் பதிலாக ளகரத்தையும், லகரத்தையும் ஒலிக்கின்றனர். (தமிழ — தமிள. விழிஞம்—விலிஞம்). க்ஷகர ஒலி இல்லாத தமிழர் அதற்குப் பதிலாகக் ககர ஒலியை ஒலிக்கின்றனர். (பக்ஷி—பக்கி, பிக்ஷு — பிக்கு, அக்ஷரம் — அக்கரம்). இவ்வாறு அந்தந்த மொழிக்குத் தக்கபடி வேறு மொழிச் சொற்களைத் திரித்து அமைத்துக் கொள்வது எல்லா மொழிகளுக்கும் இயற்கையாகும்.

இந்த இயற்கைப்படி, உலகத்தில் வழங்குகிற எல்லா மொழிகளிலும் வேறு மொழிச் சொற்கள் (சிறிதளவாகவோ பெரிதளவாகவோ) கலந்துள்ளன. முக்கியமாக வாணிகம், மதம், அரசு (ஆட்சி), நட்புறவு இவற்றின் மூலமாக ஒருமொழிச் சொற்கள் இன்னொரு மொழியில் கலக்கின்றன. இந்த இயற்கைப்படியே தமிழ் மொழியிலும் அயல் மொழிச் சொற்கள் கலந்துள்ளன.

## தமிழும் பிறமொழிகளும் :

சங்க காலத்திலே யவனர் (கிரேக்கர்) தமிழ் நாட்டுடன் கடல் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தபடியால் கிரேக்க மொழிச் சொற்கள் சில தமிழ் மொழியிலும், தமிழ் மொழிச் சொற்கள் சில கிரேக்க மொழியிலும் கலந்துள்ளன. பௌத்தம், சமணம், வைதீகம் ஆகிய சமய மதங்களின் சார்பாக வடநாட்டாருக்கும் தமிழ் நாட்டாருக்

கும் தொடர்பு ஏற்பட்ட காரணத்தினல் தமிழ் மொழியில், பாலி, சூரசேனி முதலிய பாகத (பிராகிருத) மொழிச் சொற்களும், வடமொழிச் சொற்களும் கலந்துவிட்டன. அதுபோன்று தமிழ் மொழிச் சொற்கள் சில பிராகிருத வட மொழிகளில் கலந்துவிட்டன.

முஸ்லிம் (நவாபு) ஆட்சி காரணமாகவும், இஸ்லாம் சமயத் தொடர்பு காரணமாகவும் அரபு, பாரசீகம், உருது, இந்தி மொழிச் சொற்கள் சில தமிழில் கலந்துள்ளன. போர்ச்சுகீசியர் தமிழகத் துடன் வாணிகத்துறையிலும், சமயத்துறையிலும் தொடர்பு கொண்டிருந்தபடியால் போர்ச்சுகீசு மொழிச் சொற்கள் சில தமிழில் கலந்தன. ஆங்கி லேயரின் வாணிகத் தொடர்பும், ஆட்சித் தொடர்பும், சமயத் தொடர்பும் ஏற்பட்டிருந்த காரணத்தினல் தமிழில் ஆங்கில மொழிச் சொற் கள் சில கலந்தன. அவ்வாறே, தமிழ் மொழிச் சொற்கள் சில அந்த மொழிகளிலே கலந்துவிட் டன. இது தவிர்க்க முடியாத பொதுவான இயற்கை. சில சமயங்களில், ஒரு மொழி இன் னெரு மொழிமேல் ஆதிக்கம் செலுத்த நேரிட் டால், ஆதிக்கம் பெற்ற மொழி வளர்ந்தும் ஆதிக் கத்துக்குள்ளான மொழி தாழ்ந்தும் போவதைக் காண்கிறேம். ஆகையால், தங்கள் தாய்மொழி யின்மேல் வேறு மொழி ஆட்சி (ஆதிக்கம்) செலுத் தாதபடி பார்த்துக் கொள்வது ஒவ்வொரு மொழியினரின் கடமையாகும்.

பௌத்தம், சமணம் என்னும் சிரமண சமயங் களுக்கும், வைதீக சமயமான பிராமண சமயத்திற் கும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இருந்தே தமிழ் நாட்டுடன் தொடர்பு இருந்த படியால் அந்தச் சமயங்களின்மூலமாகத் தமிழில் பிராகிருத மொழிச் சொற்களும், வடமொழிச் சொற்களும் கலந்துவிட்டன. பௌத்தம், சமணம் என்னும் சமயங்களில் ஒன்றுன பௌத்த மதத் தின் தொடர்பினல் தமிழ் மொழிக்கு ஏற்பட்ட சிறப்புகளைக் கூறுவோம்.

**பௌத்தமும் தமிழும் :**

இற்றைக்கு இரண்டாயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னே, கி.மு. மூன்றும் நூற்றூண் டில், அசோகச் சக்கரவர்த்தியின் காலத்தில் பௌத்த சமயம் முதன்முதலாகத் தமிழகத்துடன் தொடர்பு கொண்டது. இச்செய்தியை அசோகச் சக்கரவர்த்தி எழுதியுள்ள பாறைக் கற்சாசனங் களிலிருந்து அறிகிறேம். சௌராஷ்டிர தேசத் தில் கிர்னர் நகரத்திற்கு அருகில் ஒரு கற்பாறை யில் எழுதப்பட்ட அசோக சாசனம், சோழ பாண்டிய சத்தியபுத்திர கேரளபுத்திர நாடு களுக்கு அவர் பௌத்த பிக்குகளை அனுப்பிய செய்தியைக் கூறுகிறது. இந்தச் செய்தியையே, பிஷாவர் நகரத்திற்கு அருகில் இருக்கிற இன் னெரு சாசன எழுத்து கூறுகிறது.

பௌத்த சமயம் 'மிஷனரி' சமயம். அஃதாவது எல்லா நாட்டிலும் தன் சமயக் கொள்கையைப் பரப்புகிற சமயம். கி.மு. மூன்றும் நூற்றுண்டில் தமிழகத்துக்கு வந்த பௌத்த பிக்குகள் (துறவி கள்) தங்கள் சமயப் பணியைத் தொடங்கித் தொடர்ந்து நடத்தினர்கள். அதனல் பௌத்த சமயம் தமிழ் நாட்டில் பரவிச் செழித்து வளர்ந் தது. பிறகு, கி.பி. 7-ஆம் நூற்றுண்டு முதல் 9-ஆம் நூற்றுண்டு வரையில் பக்தி இயக்கத்தினல் எதிர்க்கப்பட்டுச் சிறிது தாழ்ச்சியடைந்தபோதி லும் பௌத்த சமயம் கி.பி. 12-ஆம் நூற்றுண்டு வரையில் தமிழ் நாட்டில் நின்று நிலவிற்று. இவ் வாறு பதினைந்து நூற்றுண்டுகளாகத் தமிழகத் தில் நிலைபெற்று இருந்த பௌத்த சமயத்தினலே தமிழ்மொழிக்குச் சில நன்மைகளாவது ஏற்பட் டிருக்கக்கூடுமல்லவா? அவற்றை இங்குக் காண் போம்.

எந்தெந்த நாட்டில் எந்தெந்த மொழி பேசப் படுகிறதோ அந்தந்த மொழியில் பௌத்த சமயப் பிரச்சாரம் செய்ய வேண்டுமென்று கௌதம புத்தர் கட்டளையிட்டார். பகவன் புத்தர் உயிர் வாழ்ந்திருந்த காலத்தில் இரண்டு சீடர்கள் அவரிடம் சென்று, பகவனுடைய போதனைகளை வடமொழியில் எழுதிவைப்பது நல்லது என்று கூறினர்கள். இந்த யோசனையைக் கௌதம புத்தர் வன்மையாகக் கண்டித்தார். மக்கள் பேசாத, யாரோ படித்தவர் சிலர் மாத்திரம் அறியும் வட மொழியில் நாட்டு மக்களுக்குப் போதித்தால், மக்கள் அதைப் புரிந்து கொள்ள மாட்டார்கள். ஆகையால், மக்கள் பேசுகிற தாய்மொழியிலேயே பௌத்த சமயத்தைப் போதிக்க வேண்டும் என்று பகவன் புத்தர் கட்டளையிட்டார் என்று சுல்ல வக்கம் என்னும் பௌத்த நூலில் கூறப்பட்டிருக் கிறது. இந்தக் கட்டளைப்படி தமிழ் நாட்டுக்கு வந்த பௌத்த பிக்குகள் தமிழ் மொழியிலேயே தமிழர்களுக்குப் பௌத்த சமயத்தைப் போதித் தார்கள். பௌத்த நூல்களைத் தமிழிலேயே எழுதினர்கள்.

பௌத்த பிக்குகள் தமிழ் நாட்டில் பௌத்த சமயக் கருத்துக்களைத் தமிழில் பரப்பியபோது பாலி மொழிச் சொற்கள் தமிழில் கலந்தன. பாலி என்னும் பிராகிருத மொழிக்கு மாகதி என்றும் பெயர் உண்டு. பாலி என்னும் மாகதி மொழி வடநாட்டில் பகவன் புத்தர் காலத்தில் பேசப்பட்டது. ஆகவே, பாலி மொழியில் கௌதம புத்தர் தம்முடைய அறவுரைகளைக் கூறினர். அவருடைய அறவுரைகள் பாலி மொழி யில் எழுதப்பட்டன. அவற்றிற்குத் திரிபிடகம் என்பது பெயர். பௌத்தர் திரிபிடகத்தைத் தமிழில் உரைத்தபோது, பாலி மொழிச் சொற்கள் சில தமிழில் கலந்தன. தமிழில் கலந்துள்ள சில பாலி மொழிச் சொற்களைக் கூறுவோம். இவை பௌத்த நூலாகிய மணிமேகலை, குண்டல கேசி முதலிய நூல்களில் காணப்படுகின்றன; அநித்தம், அனுத்மம், ஆராமம், கருணை, சமணன், சேதியம், சயித்தியம், சக்கரவாளம், சீலம், கந்தம், உபாசகர், சுகதன், தேரன், தேரி, துக்கம், பீடிகை, பாரமிதை, பிக்கு, பிக்குணி, தூபி, முதிதை, மைத்திரி, போதி, வேதிகை, விகாரை, நியமம் முதலியன. இங்குச் சிலவற்றை மட்டும் எடுத்துக் காட்டினேம். தமிழ் மொழியையும்

மாகத (பாலி) மொழியையும் நன்கு கற்றவர் இந்தச் சொல் ஆராய்ச்சியில் ஈடுபடுவது விரும்பத் தக்கது.

மேலே காட்டப்பட்ட பாலி மொழிச் சொற்கள், வடமொழிச் சொற்கள்போலக் காணப்படுகிறபடியால், இவை வடமொழிச் சொற்களின் திரிபு என்று சிலர் கூறுவர். இப்படிக் கருதுவது தவறு. இவை பாலி மொழிச் சொற்களே. பிராகிருத மொழிச் சொற்கள் பௌத்த சமயத்தின்மூலமாகவும் சமண சமயத்தின்மூலமாகவும் முதன்முதலாகத் தமிழில் கலந்தன. அதற்குப் பின்னரே வடமொழிச் சொற்கள் தமிழில் கலக்கத் தொடங்கின. இது வரலாற்று முறைப்படி கிடைக்கிற சான்றாகும். ஆகவே, வரலாற்று முறைப்படி ஆராயாமல் கண்ணை மூடிக்கொண்டு பிராகிருத மொழிச் சொற்களையெல்லாம் வடமொழிச் சொற்கள் என்று கருதுவது தவறாகும்.

**பௌத்த சமயக் கல்விப்பணி :**

பௌத்த சமயப் பிக்குகள் சமயப் பேருரை செய்வதோடு மட்டும் நின்றுவிடவில்லை. சிற்றூர்ச் சிறுவர் சிறுமிகளைத் தங்கள் பள்ளிகளில் அழைத்து அவர்களுக்குக் கல்வி கற்பித்தார்கள். இதனால் தான் பாடசாலைகளுக்குப் பள்ளிக்கூடம் என்னும் பெயர் ஏற்பட்டது. அந்தப் பெயர் இன்றளவும் நின்று வழங்குகிறது. (பள்ளி என்பது பௌத்தக் கோவிலுக்கும், பிக்குகள் இருக்கும் விகாரை என்னும் கட்டடத்துக்கும் பெயர்.) பள்ளியில் பாடசாலையை அமைத்துக் கல்வி கற்பித்தபடியால் பள்ளிக்கூடம் என்னும் பெயர் ஏற்பட்டது. பர்மா, இலங்கை முதலிய பௌத்த சமயம் உள்ள நாடுகளில் கல்வி கற்றவர் தொகை அதிகமாக இருக்கிறது என்று ஆங்கிலேயர் சென்ற நூற்றாண்டில் எழுதியுள்ள அறிக்கை கூறுகிறது. பௌத்த சமயம் அக்காலத்தில் தமிழ் நாட்டில் கல்வியைப் பரவச் செய்வதில் அதிகமாகப் பாடுபட்டிருக்கிறது. பௌத்த பிக்குகள் மற்றவருக்கு வாழ்த்துக் கூறும்போது 'அறிவு உண்டாவதாகுக' என்று வாழ்த்தினார்கள் என்று மணிமேகலை காவியத்தினால் அறிகிறோம். (குறிப்பு: பௌத்த மதத்தைப் போலவே சமண மதமும் நாட்டுச் சிறுவர்களுக்குக் கல்வி கற்பித்து வந்தது என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும்.) பௌத்தப் பள்ளிகள் நாடெங்கும் இருந்தன. ஆகவே நாடெங்கும் பாடசாலைகள் இருந்தன.

**இலக்கியப் பணி :**

கல்வியை வளர்த்த பௌத்தர்கள் தமிழில் பல நூல்களையும், காவியங்களையும் இயற்றினார்கள். அந்தச் சமயம் சிறப்படைந்திருந்த காலத்தில் பௌத்த நூல்கள் பல தமிழில் இருந்தன என்பதற்குச் சான்றுகள் உள்ளன. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு, பௌத்தம் தமிழ் நாட்டில் வீழ்ச்சியடைந்து மறைந்துபோன காலத்தில் அந்த நூல்கள் போற்றப்படவில்லை. சமயப் பகை காரணமாக பௌத்த நூல்கள் அழிக்கப்பட்டன. அழிந்து போனவை போக இப்போது முழுநூலாகக் கிடைத்திருப்பவை இரண்டு நூல்களே. அவை மணிமேகலை என்னும் காவியமும், வீரசோழியம் என்னும் இலக்கண நூலும் ஆகும்.

முழு நூலாகக் கிடைக்காமல் பெயர் மட்டும் கேட்கப்படுகிற சில பௌத்த நூல்கள் உள்ளன. அவையாவன: **குண்டலகேசி காவியம்:** பேர் போன இந்தக் குண்டலகேசி காவியம், சென்ற நூற்றாண்டிலேதான் மறைந்து போயிற்று. இந்த நூலில் இருந்து சில செய்யுட்கள் வேறு நூல்களில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. நீலகேசி என்னும் சமண நூலின் உரையிலும், வீரசோழியம் என்னும் இலக்கண நூலின் உரையிலும் இதன் செய்யுட்கள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. புறத்திரட்டு என்னும் நூலிலும் குண்டலகேசிச் செய்யுட்கள் சில தொகுக்கப்பட்டுள்ளன. குண்டலகேசி காவியத்தை எழுதின ஆசிரியரின் பெயர் நாதகுப்தனார் என்பது. இவருக்கு நாகசேனர் என்னும் பெயர் இருந்ததென்று விமதி வினோதனீ என்னும் பாலிமொழி நூல் கூறுகிறது.

**சித்தாந்தத் தொகை :** பௌத்த சமயச் சித்தாந்தத்தைக் கூறுகிறது, இந்நூல் என்பது இதன் பெயரிலிருந்தே அறியலாம். (சித்தாந்தம் முடிந்த முடிவு.) சிவஞான சித்தியார் என்னும் சைவ சமய நூலுக்கு ஞானப்பிரகாசர் எழுதிய உரையில் (பரபக்கம், சௌத்திராந்தகன் மதம். 2, 31-ஆம் பாட்டுக்களின் உரை) இந்த நூலிலிருந்து ஒரு செய்யுள் மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது. இந்த நூலைப் பற்றி வேறு ஒன்றும் தெரியவில்லை.

**திருப்பதிகம் :** பௌத்த சமயத் தெய்வங்களின்மேல் பாடப்பட்ட தோத்திரப்பாடல்கள் என்று இதன் பெயரிலிருந்து தெரிகிறது. சிவஞான சித்தியாருக்கு ஞானப்பிரகாசர் எழுதிய உரையில் இந்நூற் செய்யுள் மேற்கோள் காட்டப்படுகிறது. (பரபக்கம், சௌத்திராந்தகன் மதம். 2-ஆம் செய்யுள் உரை, ஷை மறுதலை. 8-ஆம் செய்யுள் உரை.)

**விம்பசாரக் கதை:** பிம்பசாரன் என்னும் அரசன் புத்த பகவன் இருந்த காலத்தில் மகத தேசத்தை அரசாண்டவன். பௌத்த சமயத்தை ஆதரித்தவன். அவனைப்பற்றிய காவியம் இது. நீலகேசி என்னும் சமண நூலின் உரையிலும் (190-ஆம் பாட்டு உரை), சிவஞான சித்தியார் என்னும் சைவ நூல் உரையிலும் (பரபக்கம், சௌத்ராந்தகன் மறுதலை 5-ஆம் செய்யுள் உரை) விம்பசாரக் கதையிலிருந்து சில செய்யுள் அடிகள் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இந்நூலைப்பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

**புத்த ஜாதகக் கதைகள்:** புத்தருடைய பழம் பிறப்புச் செய்திகளைக் கூறுவது புத்த ஜாதகக் கதைகள். பாலி மொழியில் உள்ள இந்தக் கதைகளைத் தமிழில் செய்யுளாகவும், உரைநடையாகவும் எழுதியிருந்தனர் என்பது தெரிகின்றது. நூல் முழுவதும் கிடைக்கவில்லை. சில செய்யுட்கள் மட்டும் நீலகேசி உரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன.

**வீரசோழியம்:** இஃது இலக்கண நூல். முழுவதும் கிடைத்திருக்கிறது. வீரசோழன் என்னும் சோழ அரசன் பெயரால் இயற்றப்பட்டது. இதன் ஆசிரியர் புத்தமித்திரர் என்பவர். இவருடைய மாணவராகிய பெருந்தேவனார் இதற்கு உரை எழுதியிருக்கிறார். கி.பி. பதினோராம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நூல் இது. வீரசோழியக் காரிகை என்னும் பெயரும் இதற்கு உண்டு. எழுத்ததிகாரம், பொருளதிகாரம், யாப்பதிகாரம், அணி அதிகாரம் என்னும் அதிகாரங்களை உடையது. இதற்கு எதிர் நூல் என்று வேறு பெயரும் உண்டு.

வீரசோழியம் வழக்கிழந்து போன நூல். இதில் வடமொழி இலக்கணத்தையும் புகுத்தியிருக்கிறபடியால் இதைத் தமிழர் ஏற்றுக் கொள்ளவில்லை. பெயரளவுக்கு ஒரு நூலாக இருந்து வருகிறது.

தமிழ் நாட்டிலிருந்த பௌத்தர் பாலி மொழியிலிருந்து சில நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளனர். அவற்றைச் சம்பு என்னும் நடையில் எழுதியதாகத் தெரிகின்றது. சம்பு என்பது செய்யுளும் உரையும் கலந்த நடை. இந்த நூல்களை இயற்றுவதற்காகப் பௌத்தர், கிரந்த எழுத்து என்னும் ஒரு வகை எழுத்தை உண்டாக்கினார்கள். (கிரந்த எழுத்தை உண்டாக்குவதற்குப் பௌத்தர் காரணமாக இருந்தது போலவே, சமண சமயத்தாரும் இந்த எழுத்தை உண்டாக்கக் காரணமாக இருந்தார்கள்.) இந்தக் கிரந்த எழுத்து பிராகிருத மொழி நூல்களைத் தமிழில் எழுத உதவியாக இருந்தது. பிற்காலத்தில் வடமொழி நூல்களை எழுதவும் இது பயன்படுத்தப்பட்டது. (ஒரு காலத்தில் தென்னிந்தியாவில் வடமொழி நூல்களை எழுதவும், படிக்கவும் உபயோகப்படுத்திய இந்தக் கிரந்த எழுத்து இக்காலத்தில் மறைந்து வருகிறது. கிரந்த எழுத்துக்களுக்குப் பதிலாக இப்போது நாகரி எழுத்துகளைப் பயன்படுத்துகிறார்கள். அடுத்தத் தலைமுறையில் கிரந்த எழுத்து அடியோடு மறைந்து போகும் என்று துணிந்து கூறலாம்.)

கிரந்த எழுத்துக்களின் உதவியினால் பௌத்தர் மணிப்பிரவாள நடையில் சில நூல்களை எழுதினார்கள். அந்த நூல்கள் இப்போது, ஏனைய நூல்களைப் போலவே மறைந்துவிட்டன. சமணரும் மணிப்பிரவாள நடையில் ஸ்ரீபுராணம் முதலிய நூல்களை எழுதியுள்ளனர். அந்த நூல்கள் இப்போதும் கிடைக்கின்றன. பௌத்தரும் சமணரும் உண்டாக்கிய கிரந்த எழுத்து மணிப்பிரவாள நடையைத் தமிழர் ஏற்றுக் கொள்ளவில்லை. பிற்காலத்தில் வைணவர் மணிப்பிரவாள நடையில் நாலாயிரப் பிரபந்தத்துக்கு உரை (வியாக்கியானம்)யும் குருபரம்பரப்பிரபாவம் முதலிய நூல்களையும் இயற்றினார்கள். வடமொழியும் அல்லாமல் தமிழும் அல்லாமல் இரண்டுங் கலந்த கலப்பட மொழியில் எழுதப்பட்டபடியால் அந்நூல்களை வடமொழியாளரும் படிப்பதில்லை. தமிழ் மொழியாளரும் படிப்பதில்லை. இரண்டு மொழிகளையும் கற்ற வைணவ பக்தியுள்ள ஒரு சிலர் (நூற்றுக்கு ஒருவர் இருவர்) பாராயணம் செய்து வருகிறார்கள். மணிப்பிரவாள வியாக்கியானம் பலருக்கும் பயன்படாதபடியால் இப்போது அவற்றைத் தமிழில் எழுதிச் சென்னைப் பல்கலைக் கழகத்தார் வெளியிட்டிருக்கிறார்கள். எனவே, பௌத்தர் (சமணர்) உண்டாக்கியமைத்த மணிப்பிரவாள நடை மறைந்து வருகிறது.

**பெருந்தொண்டு :**

பௌத்தர் (சமணருங்கூட) தமிழ் மொழிக்குச் செய்த பெருந் தொண்டு என்னவென்றால், அவர்கள் தமிழில் விருத்தப்பாக்களைப் புதிதாக அமைத்ததுதான். சங்க காலத்தில் இல்லாத விருத்தப்பாக்களை இவர்கள் புதிதாக அமைத்துக் கொடுத்தார்கள். பிற்காலத்துத் தமிழ் நூல்கள் எல்லாம் பெரும்பாலும் விருத்தப்பாக்களினால் இயற்றப்பட்டவை. விருத்தப்பா அமைப்பையும் அப்பாக்களினால் புதிய இலக்கியங்களை எழுதும் முறையையும் வகுத்தவர் பௌத்தரும், சமணருமாவர். இதற்காகத் தமிழுலகம் அவர்களுக்கு என்றென்றும் கடமைப்பட்டுள்ளது.



ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்

'திருக்குறள் பீடம்'
குருகுலம் அழகரடிகள் (இளவழகனார்)



# நாயன்மார் கண்ட மெய்ந்நெறி

## நாயன்மார் :

நாயன்மார் என்போர், பொதுமக்களுக்கு நாயகமாக, பின்பற்றக்கூடிய தலைவர்களாக விளங்குவோர். இந்தியத் தமிழகத்தில், சிறப்பாகச் சைவ சமயத் தலைவர்களே 'நாயன்மார்' என்று அழைக்கப்படுகின்றனர்.

சைவ சமயத்துக்கே குரவராய் விளங்கிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள் என்னும் தேவார ஆசிரியர் மூவரும், மாணிக்கவாசகர் என்னும் திருவாசக ஆசிரியர் ஒருவருமாகிய நால்வர், முதன்மையாகப் போற்றப்படுகின்றனர். இந்நால்வர் கருத்துக்களும் வழிபாட்டு முறைகளும், போதனைகளும் ஒரே மாதிரியானவை. இவற்றிற் கருத்தூன்றினால் 'நாயன்மார் கண்ட மெய்ந்நெறி' புலப்பட்டுவிடும். ஏனை நாயன்மாரின் கருத்துக்களும், பெரிய புராண நாயன்மாருள் நூலாசிரியராக விளங்கிய காரைக்காலம்மையார், திருமூலர் கழறிற்றறிவார் என்னும் சேரமான் பெருமாள், ஐயடிகள் காடவர்கோன் போன்றாருடைய நூல்களின் உட்பொருள்களும் மேற்கூறிய நால்வர் கருத்துக்களுள் அடங்கும்.

இனி, நாயன்மார் கண்ட மெய்ந்நெறிகள் எவை என்பதைக் கவனிக்கலாம்.

## முப்பொருள் :

அருளால் எவையும் உணரும் நாயன்மார், தாம் தோன்றியருளிய இம்மண்ணுலகையும் ஏனை அண்டங்களையும் உயிர்களையும் அவற்றின் வாழ்க்கையியலையும் கண்டு, மொத்தத்தில் இந்த இயற்கையமைப்பு, மூன்று முதற்பொருள்களால் இயங்குகின்றதென்னும் உண்மையைக் கண்டு கொண்டனர்.

> ''சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்
> மூன்றுள; மறையெலாம் மொழிய நின்றன
> ஆன்றதோர் தொல்பதி; ஆருயிர்த் தொகை;
> வான் திகழ் தளை; என வகுப்பர் அன்னவே.''
>
> -(கந்த புராணம்)

ஒரு கடவுள், பல உயிர்கள், அவ்வுயிர்களின் அறிவு ஆற்றல் செயல்களை மறைக்கும் தளையாகிய மலம் என்னும் இம்மூன்றையும் மூல முதற்பொருளாக உணர்ந்ததோடு, அவை ஒன்றோடொன்று, தொடர்பு கொண்டவையாய் இயங்கிக் கொண்டிருத்தலாலும் இந்த உலகியலுக்கு வேறு காரணம் எதுவும் எவராலும் இதுகாறும் காணப்படாமையாலும் எந்தக் காலத்தும் அழியாதவை என்றும், அழியாதன ஆனதனால் எந்தக் காலத்திலும் ஆக்கப்படாதன என்றும், இவை மூன்றும் இயற்கை முதல்களே என்றும் துணிந்தனர்[1].

## இயைபுகள் :

கடவுள், வினையின் நீங்கி விளங்கிய நிலையினர், உயிர்த் தொகைகள், வினையில் தொடக்குண்டு

மயங்கிய நிலையின; வினைக்கு ஏதுவான மலம், உயிர்களை அறியாமைப் படுத்துவதனுல், அஃது, இருள் நிலையதாதல் வேண்டும்.

உயிர்களின் அறிவு, சிறுமையுடையதாய் இருப்பதனுல், அவ்வுயிர்கள் எதைச் சார்ந்தாலும் அதன் இயல்பிற் படிந்துவிடும் என்று துணிய வேண்டியிருக்கிறது. ஆதலால், விளங்கிய பேரறிவின் காரணத்தால் மலத்தால் தொடக்குருத பேராற்றல் மிக்க கடவுளை உயிர்கள் சார்ந்து நடப்பதாயிருந்தால், கடவுள் துணையால் அவை மலத்தின் தொடக்கிலிருந்து விடுபட வாய்ப்பிருக்கிறது. கடவுள் பேரறிவினராதலால், அதற்கேற்ற பெருங்கருணையும் உடையவராயிருப்பர்; உயிர்கள் இங்ஙனம் தம் நிலையையும் தலைவனுகிய கடவுள் நிலையையும் உணர்ந்தொழுகினுல் உயிர்கள் கவலையின் நீங்கிச் செம்மை நலம் அடையலாம். தம்மையுணர்ந்து தமையுடைய தன்னை உணர்தல் பற்றிச் சிவஞானபோதம்[2] கூறும்.

கொன்று செய்த கொடுமையாற் பல சொல்லவே
நின்ற பாவ வினைகள்தாம் பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் தேவர்பிரான் இடம்
கன்றினேடு பிடிசூழ் தண் கழுக்குன்றமே[3].

**நான்மறை :**

உயிர்கள் தம் தலைவன் கடவுளே என்று உணர்ந்து அவன் சார்பில், 'சார்பு உணர்ந்து சார்பு கெட'[4] ஒழுகுவதாயிருந்தால், உயிர்களின் வாழ்க்கையில் நல்ல திருப்பம் உண்டாகும்[5]. கடவுள், தம் வல்லமைகளை, உயிர்கள் ஏற்கும் அளவுக்கு அவற்றின் உணர்விற் பதியச்செய்து அவை உய்வதற்கு உதவுவார். அதனுல் மலத்தின் வலிமை, அவ்வுயிர்களின் வகையில் செல்லாது. உயிர்கள் உலக வாழ்க்கையிற் சிறந்த தெளிவை அடையும். அடைந்து, வாழ்வாங்கு வாழ்ந்து உய்யும். தெளிவுக்குரிய இவ்வாழ்க்கை யடிப்படை உண்மைகள் நான்கு.

*(1)* சூழலிலுள்ள உலகப் பொருள்களை உயிர்கள் தாம் பெற்றிருக்கும் அளவாற்றலால் தம் வழியிற் கையாளும்.

*(2)* கையாளும்போது அவற்றில் பொருந்தியிருக்கும் அழகியல்புகளைக் கண்டு இன்புறும்.

*(3)* அழகியல் என்பது 'அறம்' என்னும் ஓர் ஒழுங்கு முறையே என்று தெளிந்து, பண்டங்களிலும் அவற்றின் பயன்படு திறத்திலும் காணும் அவ்வொழுங்கு முறையாகிய அறநெறியை உணர்ந்து உணர்ந்து வியக்கும்.

*(4)* இன்பந்தரும் அவ்வழகியல்பாகிய ஒளி, இருளாகிய மலப்பொருள்களின் இயல்பாதல் இயலாதே என்றும், பெருங்கருணை வாய்ந்த எல்லாம் வல்ல இறைவனது திருவருள் இயல்பே உயிர்களின் பொருட்டு அம்மலப் பொருள்களிலும் மறைந்தாவது தங்கிக்கொண்டு இப்படி அழகொளிகளாய் விளங்குதல் வேண்டும் என்றும் தெள்ளத் தெளிய உணர்ந்து, இறைவனிடம் உருக்கமும் நன்றிப் பெருக்கும் மேலிட்டு, பண்டங்களிற் பற்றின்றி, அப்பண்டங்களிற் பதிந்த திருவருட் பாதமே பாவித்துப் பாச விடுதலையும் சிவப்பேறும் எய்தும்[6].

பொருள், இன்பம், அறம், வீடு என்னும் இந் நான்கு இயல்புகளின் நெறியே இங்ஙனம் உயிர்களின் நல்வாழ்க்கைக்கு வழிகாட்டும் நான்மறை நெறிகளாயின[7]. தெய்வத் திருக்குறள், உலக மக்களுக்கு இந்நான்மறை நெறி விளக்கும் உலகப் பொதுமறையாய் நின்று உதவுகிறது; நால்வர் பெருமக்களின் தேவார திருவாசகங்கள், சிறப்பு மறைகளாய் நின்று, இந்நான்மறை நெறிகாட்டி உயிர்களை உய்விக்கின்றன.

சுழிந்த கங்கை தோய்ந்த திங்கள் தொல்அரா நல் இதழி
சழிந்த சென்னிச் சைவவேடம் தாள் இணைத்து ஐம்புலனும்
அழிந்த சிந்தை அந்தணுளர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு
மொழிந்த வாயான் முக்கண் ஆதி மேயது முதுகுன்றே[8].

**வினையியல் :**

நான்மறை நெறியில் ஒழுகும் பேறு பெற்றேர், வினைபற்றிய செய்தியில் நான்கு அடிப்படை உண்மைகளை உறுதியாய்த் தெளிந்திருப்பர். *(1)* செய்யும் வினைகள்; *(2)* வினைகளைச் செய்வது உயிர்களே; *(3)* வினைகள் விதியாகிக் கட்டாயம் பயன் விளைத்தே தீரும்; *(4)* அப்பயனை, அறியாமைத் தன்மையுடைய வினைகள் தாமே அறிந்து விளைத்தல் இயலாதாகலின் அப்படிக் கொடுக்க வல்லவன் இறைவனெருவனே!

செய்வினையும் செய்வானும் அதன்பயனும் கொடுப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லை என
உய்வகையாற் பொருள் இவன் என்றருளாலே உணர்ந்தறிந்தார்[9].

சைவ நாயன்மார், 'செய்வினை' என்னும் மலமும், 'செய்வான்' என்னும் உயிரும், 'கொடுப்பான்' என்னும் இறையும் என முப்பொருளுண்மை அறிந்தவராதலோடு, 'பயன்' என்னும் இருமை நலங்களும் உடையவராய் விளங்கி, முடிவில் வீடு பேற்றுப் பயனையும் அடைவர்.

**கடவுளியல் :**

கடவுள் ஒருவர்; பலர் என்றுல் அவருள் உயர்வு தாழ்வும் அவற்றிற்குக் காரணமான வேற்றுமைகளும் பெறப்படும்; வழிபாடும் பலமுகப்பட்டு ஒருமையாற்றல் நிலைகுலையும். ஆதலின், ஒப்புயர்வற்ற ஒருவரே கடவுள் என்பது நாயன்மார் துணிபு. தலைவன் என்பவன் ஒருவனுகவே இருக்க முடியுமாதலின்,

''ஒருவன் என்னும் ஒருவன் காண்க''[10]

என்று முடிவாகத் திருவாசகம் திட்டப்படுத்தும்.

ஆற்றலில் ஒருவரைவிட ஒருவர் உயர்ந்தவராக உலகத்தில் மக்களும் சிற்றுயிர்களும் காணப்படு கின்றனர்; 'இவரைவிட அவர் பெரியவர், அவரைவிட இன்னெருவர் பெரியவர்' என்று இப்படியே கூறிக்கொண்டு போனல் இதற்கு முடிவிடம் ஒன்று திண்ணமாய் வேண்டப்படும்; அத்தகைய முடிந்த பெரியவரே கடவுள் என் பது![11] ''தனக்குவமை இல்லாதான்''[12].

பெரியோர் சிறியோர்க்கு உதவியாயிருப்பதும், ஆவன செய்து கொடுப்பதும் கண்கூடு; ஆதலின், முடிந்த பெரியோராகிய கடவுளும் உயிரினங்களுக் குத் துணைபுரிவதும், வேண்டுவன உண்டாக்கிக் கொடுப்பதும் இயல்பாகும்[13]. அதோடு, மற்றப் பெரியோரைப்போலன்றித் தமக்குமேற் பெரியோ ரில்லாத தனியரே கடவுளாதலின், தமக்கொன்று உண்டாக்கிக் கொடுப்பவரை அவர் உடையவரல் லர், மேலும் பேரறிவும் பெருநிலையும் உடையவ ராதலின், அவர்க்குத் தேவையென்பதும் ஒன் றில்லை.[14]

உலகத்தில், பொருள்களும் உயிர்களும் ஒன் றைவிட ஒன்று நுட்பமானவை; மேன்மேல் நுட்ப மான பொருள்கள் மேன்மேற் பரவலாக இடங் கொண்டிருக்கின்றன; நிலத்தைவிட நீர் நுட்ப மானதென்றுல், நிலத்திலும் நீர் பரவலாயிருக்கக் காண்கிறேம். வளியைவிட வெளி நுட்பமான தென்றுல், வளி இல்லாத இடங்களிலும் பரவலாய் வெளி இடங்கொண்டிருத்தலை அறிகிறேம். பொருள்களையும் உயிர்களையும்விடக் கடவுள் நுட்பமானவரென்றுல் அவர் இல்லாத இடம் என்பதே இல்லையென்று துணியலாம். ''எங்கும் ஈசன் என்னுதவர்க்கு இல்லையே''[15].

அறிவுள்ள உயிரினங்களெல்லாம் ஆண் பெண் என்னும் இருபிரிவில் உள்ளன; ஆதலால் பேரறிஞுன கடவுளும் அம்மையப்பராகவே இருத்தல் வேண்டும்; அதாவது, இருபிரிவின் ஒருவனுய், மாதொரு பாகனுகத் திகழ்தல் வேண் டும்.

கண்ணின் நல் லஃதுறு கழுமல வளநகர்

பெண்ணின்நல் லாளொடும் பெருந்தகை

இருந்ததே![16]

அம்மையப்பராகிய இவ்விருதிறத்தை நினைந்தே 'சிவ' என்னும் ஈரெழுத்து ஒரு பெயர்; 'சி' அப் பனையும், 'வ' அம்மையையும் குறிக்கும். பெயருணர்த்தும் 'சிவ' என்னும் ஒரு மொழியே சைவ சமயத்தில் மறைமொழியாகவும் போற்றப் படுகிறது. மேலும், முழுமுதற் கடவுளின் இயல்பு களையெல்லாம் ஒருங்குணர்த்தும் அழகிய பெயரே 'சிவம்' என்பது; உண்மை, நன்மை, அழியாமை யாகிய மங்கலம், பேரின்பம், செம்மை முதன்மை முதலிய பல நல்ல கருத்துக்களை இப்பெயர் உடையது. தென்னுட்டவராகிய சைவர் இறை வனுக்கு இவ்வொரு பெயரைச் ''சீர்கொள் நாமம்''[17] என்று தேர்ந்து வழங்கத் துணிந்தனர். ''தென்னுடுடைய சிவனே போற்றி''[18]. ''சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம் மேனி எம்மான்''[19].

## வழிபாடு :

கடவுள் உயிரில்லாத பொருள்களிலும் உயிருள் ளவற்றிலுமாக எங்கும் கலந்திருப்பவரேயானு லும், உயிருள்ளனவெல்லாம் அறிவுள்ளன ஆனத ஞலும் அவற்றுள்ளும் சான்ருேராயுள்ள மக்கள் மிக்க அறிவும் பண்புமுடையவர் ஆனதனுலும் அவரிடத்தில் மிக அணுக்கமாகக் கலந்திருப்ப தோடு அவரது அன்பையறிந்து அருள் செலுத் துதலும் கடவுளின் இயல்பாயுள்ளது[20].

உயிர்களின் அறிவு அன்பாய்க் கனிதலுடையது; உயிர்களின் கனிந்த இயல்பு அன்பென்றுல், கடவுளின் கனிந்த இயல்பு அருள்! உயிர்கள் கடவுள் சார்பினராய் உருக்கங் கொண்டொழுகி ஞல், அவற்றின் உணர்வில் இறைவனது அருள் நிரம்பி வரும்.

அன்பு என்னும் சொல் 'அன்று' என்னும் பொருளுடையது! 'எதுவும் தனக்கன்று, அனைத் தும் பிறர்க்கே என்று கருதி ஒழுகுதற்கு ஏதுவான உயிரின் இயல்பு![21] இப்பண்புடையவரிடத்தில் தெய்வத் திருவருள், 'பள்ளந்தாழ் உறுபுனல் போல்'[22] பாய்ந்து நிறைகின்றது. தந்நலம் அற்ற நிலையிற் பயன் கருதாத தொண்டுகள் இத்தகைய பெரியோரால் உலகத்தில் இனிது நடைபெறு கின்றன. தொண்டுகளை அறச்செயல்கள் என்றும் சொல்வதுண்டு.

'அன்பு நெறி', 'அற நெறி அல்லது தொண்டு நெறி' என்னும் இவை நாயன்மார் வாழ்க்கை நெறிகள்! தொண்டுக்குரிய காரணம் அன்பு! தொண்டு செய்வோர் தொண்டர்; அன்பின் பயன் தொண்டுதான். எல்லா உயிர்களுக்கும் இன்பம் அளிப்பது தொண்டு; அன்பினுல் இங் ஙனம் இன்பம் உண்டாதலின், 'அன்பே சிவம்' என்பர் பெரியோர். ''அன்பே சிவமாய் அமர்ந் திருந்தாரே''[23] சிவம் என்னும் சொல் இன்பம் என்றும் பொருள்படும்.

இறைவனுக்கு வழிபாடு என்பது, இறைவன் வழியில் நிற்பது என்னுங் கருத்துடையது. இறைவன் ஆருயிர்களை உய்விக்க 'இமையாதும் உயிராதும்'[24] எந்த நேரமும் தொண்டாற்றி வருகிறுன்; இறைவன் வழியில் நிற்போரும் அவ் வாறே ஆருயிர்த் தொண்டராய் நடந்துகொள்வர். அதனுல் இறைவன் கருத்து நிறைவேறவும் அதனுல் இறைவனுக்கு அணுக்கராய்த் தொண் டர்கள் முன்னேறவும் வாய்ப்புள்ளது.

ஆருயிர்களுக்கு நலம்புரிவோர், தொண்டராங் உயர்கின்றனர். அத்தொண்டர்க்குத் தொண்ட ராய்ப் பணிபுரிவோர் மேலும் உயர்ந்து திருத் தொண்டராகின்றனர். இறைவனுக்குப் பிறரால்

ஆகவேண்டிய உதவி என்பது ஏதும் இல்லாமை யால், இறைவனது நன்றியை நினைந்து பாமாலை யாலும் பூமாலை முதலியவற்றாலும் அவனைச் சிறப் பிப்பது திருத்தொண்டர்க்கு இயல்பாகவே அமைந்துவிடுகிறது.

இங்ஙனமெல்லாம் அன்பினாலும் தொண்டு களாலும் இறைவழிபாடு நிறைவுறுகிறது. முடிவில், உலகையும் தம்மையும் மறந்து இறை யுணர்வாய் இரண்டற்ற நுகர்வுநிலையிற் சிறத் தலால் உயிர்களுக்கு இருமை நலங்களும் வீடு பேறும் எய்த இடமுண்டாகின்றது.

''அன்பினில் விளைந்த ஆரமுதே'' என்னும் மாணிக்கவாசகம் இவ்வுண்மைகளை யெல்லாம் நமக்கு இனிதுணர்த்தும்.

கடவுளை நன்றியறிதலுடன் நினைந்து நெகிழ்ந்து உருகும்போது, அவ்வழிபாட்டில் நாயன்மார்க்குக் கடவுள் ஒருவனது உணர்வே விஞ்சி நிற்கும். நாயன்மார் பாடல்களில், மறந்துங்கூடப் பிறரை விளித்துப் பாடும் இடம் காணமுடியாது. அம்மை, முருகன், பிள்ளையார், அணுக்கத்தொண்டர் முதலியோரைப் பாராட்டிப் போற்ற நேருங் காலங்களிற்கூட அவர்களை இறைவன் திறத்தில் அடக்கி இறைவனுக்கே முதன்மை கொடுத்து இறைவனை விளித்தே பாடுவர்; எதனையும் நாடுவர்.

''நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்''[25] என்னும் அப்பர் திருமொழியில் முருகனையும் அவனை ஈன்றருளிய அம்மையையும் கூற நேர்ந்த போது, அவரனைவரையும் 'பங்கினன்' என்னும் சொல்லால் முடித்து எல்லாம் வல்ல இறைவ னுக்கே முதன்மை தந்தமை காணப்படும்.

''தனதடி வழிபடுமவர்
இடர்கடி கணபதி வர அருளினன், மிகுகொடை
வடிவினர் பயில் வலிவலம் உறை இறையே''[26]
என்பதிற் கணபதியும்,

''பங்கயச்செல்வி பாண்டிமாதேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழல் உருவன்''[27]

என்பதில் மங்கையர்க்கரசியாரும் கூறப்பட்டிருப் பினும் இவ்விரண்டிலும் சிவபெருமானே முதன் மையாய்ப் போற்றப்படுகிறார்.

இங்ஙனம், முழுமுதற் கடவுளாகிய செம் பொருட்சிவத்தின் வழியினர் நாயன்மார்.

---

1. ''முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅநு போகத்தைத் துய்த்தல் அணு—
மெத்தவே
இன்பம் கொடுத்தல் இறை இத்தைவிளை
வித்தல்மலம்''
(—மனவாசகம் கடந்தார்-உண்மை விளக்கம்)
செம்மை நலம் அறியாத சிதடரொடும் திரிவேனை
மும்மை மலம் அறுவித்து முதலாய முதல்வன் தான்
(—மாணிக்கவாசகர்—திருவாசகம்)
2. அவையடக்கச் செய்யுள்.
3. சுந்தரர்—தேவாரம்
4. திருவள்ளுவர்-திருக்குறள்; திருக்கடவூர் உய்ய வந்த தேவ நாயனார்—திருக்களிற்றுப்படியார்.
5. ''சார்ந்தவர்க்கு இன்பம் கொடுக்கும் தழல் வண்ணன்''—திருமூலர்—திருமந்திரம்.
6. ''மற்றுப் பற்று இன்றி நின் திருப் பாதமே மனம் பாவித்தேன்'—சுந்தரர்—தேவாரம்.
7. ''பண்டு நால்வருக்கு அறம்உரைத் தருளிப் பல் உலகினில் உயிர்வாழ்க்கை கண்ட நாதனார்''
(—சம்பந்தர்—திருக்கேதீச்சரம்)
8. சம்பந்தர்—தேவாரம்.
9. சேக்கிழார்—பெரியபுராணம்.
10. மாணிக்கவாசகர்—திருவாசகம்
11. ''மேலோர்க்கு மேலோர்க்கு மேலோய் போற்றி'' (—அப்பர்—திருவாரூர்)
12. திருவள்ளுவர்—திருக்குறள்.
13. ''துப்பனவும் உய்ப்பனவும் தோற்று வாய் நீ'' (—அப்பர்—தேவாரம் பொது)
14. ''ஆக்கம் அளவு இறுதி இல்லாய்,
அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய்
அருள்தருவாய்''
''தாயுமிலி தந்தையிலி தான்தனியன்''
(—மாணிக்கவாசகர்—திருவாசகம்)
15. அப்பர்—தேவாரம்
16. சம்பந்தர்—தேவாரம்.
17. அப்பர்—தேவாரம்-பொது
18. மாணிக்கவாசகர்—திருவாசகம்
19. அப்பர்—தேவாரம்-பொது
20. ''உணர்வார்க்கு உணர்வுடை ஒருவர்''
(—சம்பந்தர்—திருப்பாம்புரம்)
''உணர்வென்னும் ஊர்வது உடையாய் போற்றி'' (—அப்பர்-திருக்கயிலை)
21. ''அன்பிலார் எல்லாம் தமக்குரியர்,
அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு''
(—திருவள்ளுவர்—திருக்குறள்)
22. மாணிக்கவாசகர்—திருவாசகம்
23. திருமூலர்—திருமந்திரம்
24. அப்பர்—தேவாரம்.
25. அப்பர்—தேவாரம்.
26. சம்பந்தர்—தேவாரம்.
27. சம்பந்தர்—தேவாரம்.



**வள்ளுவர் வீரம்**

கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது —( குறள் : 772 )

அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்

ஜீவபந்து T. S. ஸ்ரீபால்



# சைனர்கள் கண்ட மெய்ந்நெறி

**சை**ன சமயம் உலகுக்கு உதவிய மெய்ந்நெறி
க்ள் மக்கள் நல மேம்பாட்டிற்கும் வாழ்க்கைப்
பண்பாட்டிற்கும் உலக அமைதிக்கும் இன்றியமை
யாதவை. சைன சமய மெய்ந்நெறிகளை அறிய,
தமிழ் இலக்கியங்கள் பெரிதும் உதவுகின்றன.
தமிழ் நூல்களிலேயே தொன்மை வாய்ந்தது
தொல்காப்பியம். எனவே தொல்காப்பியத்தினின்
றும், சைனர்கள் கண்ட மெய்ந்நெறிகளை ஆராய்ந்
தறிவோம். தொல்காப்பியத்தில் சைன சமய
நெறிகளே பெரிதும் காணப்படுகின்றன. அந்நெறி
களைப்பற்றி ஆசிரியர் குறிப்பிடும் போதெல்லாம்,
'நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினர்' என்
றும், 'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டனர்'
என்றும் உயர்வாகக் கூறிச் செல்கின்றார்.

**உலகம் :**

இவ்வுலகம் ஆதியும் அந்தமும் அற்றது;
''மொழி முதற் காரணம், அணுத்திரள்
ஒலி'' என்னும் நன்னூல் கொள்கை போன்று
அணுத்திரள்களாலாயது; எக்கடவுளாலும்
படைக்கப்படாதது; இயற்கையின் பாற்பட்டது;
நிலம், தீ, காற்று, நீர், வெளி ஆகிய ஐந்தின்
சேர்க்கையையுடையது. இவ்வாறு சைன சமயம்
உலகைப்பற்றிக் கூறுகிறது. இக்கொள்கையையே
தொல்காப்பியர் தமது தொல்காப்பியம் மரபியல்
89-ஆவது சூத்திரத்தில்,

> ''நீலம், தீ, நீர், வளி, விசும்போடைந்தும்
> கலந்த மயக்கம் உலகமாதலின்''

என உலகத்தின் இயல்பை நன்கு விளக்கியுள்
ளார். நிலம், தீ, நீர், வளி, வெளி ஆகிய ஐந்
தில், வெளி, மற்ற நான்கைப் போன்று நிறமோ,
சுவையோ, மணமோ, உடையதன்று; உலகில்
உள்ள பொருள்கள் ஒதுங்குவதற்கும், அசைவதற்
கும், இடம்விட்டுப் பெயர்வதற்கும் இடம் அளிப்
பது. எனவே வெளி, உலக வெளி, அலோக
வெளி என இருவகைப்படும். உலக வெளி,
புறஉலகப் பொருள்களுக்கு இடம் தருவது.
இதற்கு மேலும் எல்லையில்லா வெளி இருக்
கிறது. இதுவே அலோகாகாயம் என அழைக்கப்
படுகிறது. அவ்வகண்ட வெளியில் பல்லாயிரக்
கணக்கான கோள்கள் உலவுகின்றன. இவ்விருப
தாம் நூற்றாண்டில் நம் கண்களின் முன்னே இரஷ்ய
வீரர்களும், அமெரிக்க வீரர்களும் வானவெளி
யெங்கும் இராக்கெட்டில் சுற்றி வந்ததைக் கண்டு
களித்தோம். எனவே உலகத்தைப்பற்றிய சைன
சமயக் கொள்கைக்கு அரண் செய்வது போன்று
உலகம் கடவுளால் படைக்கப்பட்டதன்றுவென்
பதையும் இயற்கையின் பாற்பட்டதென்பதையும்
தொல்காப்பியமும் இன்றைய உலகமும் ஏற்றுக்
கொள்ளும் வகையில் அமைந்திருப்பதைக் காண்
கிறோம்.

**உயிர்வகைகள் :**

சைன சமயம் அகிம்சை நெறியை அடிப்
படையாகக்கொண்டு விளங்குவதால் அஃது
உயிர்வகைகளைப்பற்றி ஆராய்ந்து உலகுக்கு

அறிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறது. இக்கடமை உணர்ச்சியை சைன அறவோர்கள் நன்கு உணர்ந்து உள்ளார்கள். அவர்களின் உயிரியல் ஆராய்ச்சி அறிவுக்கு விருந்தாகும்; புலன்களுக் கேற்ப உயிரியல் உலகை வகுத்திருக்கின்றார்கள். அந்த உயிர்களுக்கு அமைந்துள்ள புலன்களின் எண்ணிக்கைகளைக்கொண்டு அவை வகுக்கப்பட்டிருக்கின்றன. இப்பிரிவுகளின்படி, தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்பதை அறிவித்திருக்கின்றனர் சைன அறவோர்கள். இந்த உயிரியல் தத்துவத்தைத் தொல்காப்பியர் நன்கு விளக்கியுள்ளார். இவ்வாறே 'தத்து வார்த்த சூத்திரம்' என்னும் வடமொழிச் சைன நூலில் உயிரியல் தத்துவம் மிக விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இவை தவிர, கண்களுக்குப் புலனாகாத உயிரணுக்கள் இருக்கின்றன; அவற்றிற்கு உணர்ச்சிப்புலன் மட்டும் உண்டு என்று கூறப்பட்டிருக்கிறது. மண்ணை உடலாக உடைய உயிர்கள், நெருப்பை உடலாக உடைய உயிர்கள், நீரை உடலாக உடைய உயிர்கள், காற்றை உடலாக உடைய உயிர்கள், மரம், செடி, கொடிகளை உடலாக உடைய உயிர்களும் இருக்கின்றன. இவை உலகெங்கும் பரவிக்கிடக்கின்றன. இவ்வுயிரியல் தத்துவ விளக்கம் மேருமந்தர புராணத் தமிழ் இலக்கியத்திலும் தத்துவார்த்த சூத்திரம் என்ற வடமொழி நூலிலும் நன்கு விளக்கப்பட்டுள்ளது. இவ்வகை உயிர்களில் உயர்ந்த இனத்திற்கு ஐவகைப் புலன்களுண்டு. அவற்றுடன் மனமும் ஒன்றாகும். இஃது இந்திரியத்தின் உருவம் எனப்படும். மனித இனம் இவ்வுயிர் வகைகளுக்கெல்லாம் தலையாயது; நன்மை தீமைகளை உணர்ந்து நல்லறங்களைப் பின்பற்றும் இயல்பு அமைந்துள்ளதால் மனிதன் ஆறறிவு படைத்தவன் எனப் போற்றப்படுகிறான்.

## விஞ்ஞான அறிஞரின் விளக்கம் :

மேலே கூறிய சைன சமயக் கொள்கையை வலியுறுத்திப் பாரத நாட்டு விஞ்ஞானி ஜெகதீஸ் சந்திர போஸ் ஜெர்மனியில் நடந்த அகில உலக விஞ்ஞான மகாநாட்டில், மரம், செடி, கொடிகளுக்கு உணர்ச்சியுண்டு என்பதை விஞ்ஞானக் கருவி மூலம் விளக்கிக் காட்டுகையில் ''யான் செய்துள்ள இவ்வாராய்ச்சி உண்மையைப் பாரத நாடாகிய எங்கள் நாட்டின் மிகத் தொன்மை வாய்ந்த சமயமாகிய சைன சமயந் தான் உலகுக்கு அளித்தது; யான் கண்டு பிடித்தது மரம், செடி, கொடிகளுக்கு உயிர் உண்டு என்னும் சைன சமயக் கொள்கையை நிரூபிக்கும் இக்கருவியே ஆகும்'' எனக்கூறி அதற்கு ஆதாரமாக சைன சமய நூல்களாகிய ஆசாரங்க சூத்திரம், ஜீவாபிகம் சூத்திரம் என்னும் இரு வடமொழி நூல்களைப் படித்துக் காண்பித்தார்.

## உயிர் வேறு உடல் வேறு :

உயிர் வகைகள் யாவும் தனித்தனி உடல்களையே உடையவை. உயிர் வேறு, உடல் வேறு என்னும் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது சைன சமயம். இக்கொள்கையையும் தொல்காப்பியர்,

> ''சென்ற உயிரின் நின்ற யாக்கை''
>
> ''காலம், உலகம், உயிரே, உடம்பே''
>
> (தொ. பொ. கிளவி: 58.)

என அறுதியிட்டுக் கூறியுள்ளார்.

## அறிவுக் கலை :

இனி சைன சமயம் அறிவுக்கலையை எவ்வாறு வகுத்துள்ளது எனக் காண்போம். சைன அறவோர்கள் அறிவினால் அறியப்படும் செயலை ஐந்து பிரிவுகளாக வகுத்திருக்கிறார்கள். ஐம்புலன்களால் அறியும் அறிவைப் புலன் அறிவு (மதி ஞானம்) என்றும், நூல்களின் வாயிலாகப் பெறும் அறிவை நூல் அறிவு (சுருதஞானம்) என்றும், வெகுதொலைவிலுள்ள பொருட்களையும் நிகழ்ச்சிகளையும் அறிந்து கொள்ளும் அறிவை அவதிக் ஞானம் என்றும், பிறர் மனத்திலுள்ள உணர்ச்சிகளைத் தெரிந்து கூறும் அறிவை மனப்பரியை ஞானம் என்றும், ஐந்தாவது கேவலக் ஞானம் என்றும் அழைக்கப்பெறும். இவ்வையறிவுகளில் மூன்றாவது அறிவாகிய அவதிக்ஞானம் சாதாரணப் புலன்களால் அறியப்படுவதன்று. மனோதத்துவ ஆராய்ச்சியாளர்கள் தூரமனோதிருஷ்டி என்றும், இவ்வறிவு ஒவ்வொரு மனிதனிடமும் மறைந்து கிடக்கும் ஓர் ஆற்றல் என்றும் கூறுகிறார்கள். நான்காவதாக மனப்பரியை ஞானமும் மிகச்சிறப்புடையது. இவ்வறிவை அறிவுத்துறை ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக் கொள்கின்றனர். அது மட்டுமன்று! அப்பேரறிவை ''டெலிபதி'' என்றும் அழைக்கின்றனர். அருமை மிக்க இவ்வறிவை முற்றுந்துறந்த முனிவர்கள் தங்கள் கடுந்தவத் தாலடைந்து, கர்மத்தைக் கெடுத்து வீடு பேற்றை அடைவார்கள். தீர்த்தங்கரர்களும், முனிபுங்கவர்களுமே கேவலக் ஞானத்தைப் பெற்று விளங்கினர். இவர்களில் முதல்வராக விளங்கிய பகவான் விருஷபதேவரையே தொல்காப்பியர் ''வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்'' எனப் போற்றியுள்ளார். அது மட்டுமன்று, இம்முதல்வரின் பற்றற்ற நிலையைக்கொண்டே இவரைக் கந்தழி எனவும் புகழ்ந்துள்ளார். கந்தழி எனில் பற்றற்றவர் எனப்பொருள்படும். சிலப்பதிகாரத்தில் இப்பெருமான் கோயிலை இளங்கோவடிகள் நிக்கந்தக் கோட்டம் எனப்போற்றியுள்ளதினின்றும் அறியலாம்.

எனவே நல்லொழுக்கத்தினாலும் தூய தவத்தினாலும் மக்கள் பலரும் அறிவும், பண்பும் பெற்றுயர்ந்து வினையின் நீங்கி வீடுபேற்றினை அடையலாம் என்னும் ஆத்மீகக் கலையை சைன அறவோர்கள் உலகுக்கு வழங்கினர். இதனால் ஒவ்வொரு மனிதரும் தன்னுடைய சொந்த முயற்சியாலும் ஒழுக்கத்தாலுமே உயர்வடைய வேண்டும் என்பதைத் தெளிவாக்கியுள்ளனர். இவ்வுண்மையை,

> ''நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும்—தன்னை
> நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்

மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்!''

என நாலடியாராலும், ''தன்னைச் சிறுவனுகச் செய்வானும் தானே, தன்னை இறைவனுகச் செய் வானும் தானே'' என்னும் அறநெறிச்சாரத் தாலும் அறியலாம்.

**அறிவுரைகள் :**

மக்கள் பலரும் தங்கள் ஆன்மாவின் ஆற்றலை அறிந்து இந்தப் பிறவித்துன்பத்தினின்றும் நீங்கிப் பிறவாமையாகிய வீடு பேற்றை அடைய வேண்டும் என்ற பரந்த நோக்கங் கொண்டு சைன அறவோர்கள் மக்களுக்குப்பல அறநெறிகளையும் வகுத்தளித்தனர். அவ்வாறு அறங்கூற வந்த சைன ஆன்ருேர்கள் உண்மையைக் கையாண்டனர். உண்மை என்னும் அடிப்படையில் ஆராயும்போது மக்கள் அனைவரும் அகிம்சை என்னும் அருளறத்தின் வழிநிற்க வேண்டியவர்களாகி விடுகிருர்கள். இவ்வுண்மையை முதன் முதல் அறிந்து உலகுக்கு உரை செய்தவர் பகவான் விருஷபதேவர். இப்பெருமகனையே திருக்குறள் ஆசிரியர், ஆதிபகவன் எனப் போற்றினர். பகவான் விருஷபதேவர் தாம் வகுத்த அறநெறிகளை இல்லறம், துறவறம் என இருவகைகளாகப் பிரித்தார். இவ்விரு அறநெறிகளும் ஒன்றையொன்று சார்ந்து நிற்பவை. இதனை அறநெறிச் சாரம்,

நோற்பவர் இல்லவர்க்குச் சார்வாகி இல்லவரும்
நோற்பவர்க்குச் சார்வாயறம் பெருக்கி—
யாப்புடைக்
காழுங் கடுகும் போல் நிற்கும் கயக்கின்றி
ஆழி சூழ் வையத்து அறம்''

என நன்கு விளக்கியுள்ளது.

மேலும் தொல்காப்பியர்,

''காமம் சான்ற கடை கோட் காலை
ஏமம் சார்ந்த மக்களொடு துவன்றி
அறம் புரி சுற்ற மொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே'' —என

விளக்கியுள்ளார். இச்சூத்திரத்தில் இல்லற இன்பங்களைப் பூரணமாக அனுபவிக்க வேண்டும் என்பதும், பின்னர்க் கிழவனும் கிழத்தியும், துறவறத்திற்கான ஒழுக்கங்களை இல்லறத்திலேயே பயில வேண்டும் என்பதும் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

**இல்லற நெறிகள் :**

பொருளதிகாரம், புறத்திணை இயலில், 21-ஆம் சூத்திரத்தில்,

''கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை யானும்
இடையில் வண்புகழ்க் கொடையினுனும்
பிழைத்தோர்த் தாங்கும் காவலானும்
பொருளொடு புணர்த்த பக்கத்தானும்''

என்ருர்.

எனவே இல்லறமும் ஆத்மீகத்துறைக்கு அடிகோலும் பேரிடமாகும். இதனற்ருன் இல்லற நெறியைத் தவத்திற் கொப்பாகவும் போற்றப் பட்டுள்ளது.

''நற்றவம் செய்வார்க்கிடம்
தவம் செய்வார்க்கும் ஃதிடம்''

எனத் திருத்தக்க தேவரும் சீவக சிந்தாமணியில் விளக்கியுள்ளார். மேலும் திருக்கலம்பகத்தில், கூறியபடி கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிறர்மனை நயவாமை, ஊனுண்ணுமை, மிகுபொருள் விரும்பாமை, கள்ளுண்ணுமை, குரவரை இகழாமை போன்ற அறங்களும் இல்லறத்தார் மேற்கொள்ளவேண்டிய இன்றியமையா நல்லொழுக்கங்களாகும். இவற்றை அணுவிரதம் எனப்போற்றுவர்.

இவ்வற நெறிகளை முதன் முதல் உலகுக்கு உரை செய்த பகவான் விருஷப தேவர் அவற்றைச் சமயம் அல்லது மதம் என்று அழையாமல் அறம், அறம் என்றே போற்றினர். அப்பெருமகன் மக்கள் சமுதாயத்தில் உயர்வு தாழ்வுகளைக் கற்பிக்காமல் அனைவரும் ஒன்றே என்ற முறையில் வாழுமாறு பணித்தார். தொழில் முறையால் வேறுபடினும் பிறப்பினுல் மக்கள் பலரும் ஒரு குடும்பத்தினர் போன்றவர்களாகையால் அவர் தம் அறநெறி அன்பின் அடிப்படையில் மக்கள் சமுதாயத்திற்கே உரியதாக அமைந்திருந்தது.

**நான்கு சாதனங்கள் :**

இல்லறத்தார் கடைப்பிடிக்க வேண்டிய நான்கு தானங்கள் வகுக்கப்பட்டுள்ளன. அன்ன தானம், அபய தானம், மருந்து தானம், கல்வி தானம் ஆகிய நான்கையும் மக்கள் வாழ்க்கை நலத்திற்கு உதவி புரியும் வகையில் இல்லறத்தாருக்குப் பணித்துள்ளார்கள்.

**மும்மூடங்கள்:**

இப்பெற்றிய நல்லறங்களை மேற்கொள்ளத் தடையாய் இருப்பவை மூடநம்பிக்கைகள். அவை தேவமூடம், உலகமூடம், பாசண்டிமூடம் என மூன்று வகைப்படும். தேவமூடம் என்பது தன்னைத் தெய்வம், வாழ்விக்கும் என மயங்கி அதனை வழிபடுதலும், கோபமும் கொடூரமும் வாய்ந்த தெய்வங்கள் உண்டென அச்சங்கொண்டு வணங்குதலும் ஆகியவை. உலக மூடம் என்பது புண்ணியம் பெறலாமென மலைமீதேறி வீழ்ந்து இறத்தலும், கற்பனையாக உலகில் கூறும் பல போலிக் கொள்கைகளை ஆராயாமல் நம்பிப் பின்பற்றுவதும் ஆகியவைகளாகும், பாசண்டி மூடம் என்பது துறவுகளுக்குரிய அறநெறிகளைப் பின்பற்ருமலும், தியாகமும், அறிவுமின்றித் தன்னலங் காரணமாகத் துறவி வேடம் புனைந்து ஏமாற்றும் போலித் துறவிகளை வணங்கி வாழ்த்துதலுமாம்.

இம்மூன்று மூடங்களினின்றும் நீங்கியவனே அறிவுடையவன், அவனே மயக்கமற்ற மாசறு

காட்சியுடையவன். அத்தகையாரே நல்லறங்களை உறுதியுடன் கடைப்பிடிப்பவர் என அறுதியிட்டுக் கூறியுள்ளார்கள்.

**மும்மணிகள் :**

உலகியல் துறையில் மக்கள் வாழ்க்கையைப் பண்படுத்தியது போன்றே ஆத்மீகத் துறைக்கும் வழிகோலினர் சைன அறவோர்கள். ஆத்மீக முன்னேற்றத்திற்கு இன்றியமையாதனவாகிய நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்னும் மூன்று மணிகளை வழங்கினுர்கள். நற்காட்சி என்பது உண்மைப் பொருளை ஆராய்ந்தறிதல் என்பதாகும்.

''மெய்ப்பொருள் தேறுதல் நற்காட்சி
[என்றுரைப்பர்
எப்பொருளும் கண்டுணர்ந்தார்''

என அருங்கலச் செப்பு அறைகின்றது. கண்கள் எவ்வாறு புறப்பொருள்களை ஆராய்ந்து அறிகின்றனவோ அவ்வாறே நூற்பொருள்களின் உண்மைகளை ஆராய்ந்து ஏற்கவேண்டும் என்பதாகும். 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும்' என்னும் குறளே நற்காட்சிக்கு நற்சான்ருகும். தமிழ் நூல்களில் காணும் மாசறு காட்சி, பொய்தீர் காட்சி போன்றவைகளெல்லாம் நற்காட்சியையே குறிக்கும். இவ்வாறு ஆராய்ந்தறிந்த நூற்பொருளில் அறிவைச் செலுத்துதல் நன்ஞானம் என்றும் அப்பொருளின் வழி ஒழுகுதல் நல்லொழுக்கம் என்றும் அறிவுறுத்தினர்.

உலகியல் வாழ்க்கை சிறப்புற எவ்வாறு இல்லற நெறிகளை வகுத்தருளினுர்களோ அவ்வாறே ஆத்மீக வளர்ச்சிக்குரிய துறவற நெறிகளையும், ஊழ்வினைபற்றிய விளக்கங்களையும், தத்துவக்கலையின் மேன்மையையும், சியாத்வாதக் கொள்கையையும் சைன அறவோர்கள் உலகுக்கு மெய்ந்நெறிகளாக வழங்கியுள்ளனர்.

''வாழிய நல்லறம்.''



எனைத்துணையர் ஆயினு மென்னும் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல்

பி. ஸ்ரீ.




இராமானுசர் நெறியை ஸ்ரீவைணவம் என்று குறிப்பிடுகிறோம். பரம்பொருளாக, மேலொரு பொருளும் இல்லா மெய்ப் பொருளாக, விஷ்ணுவை வழிபடுவோர் வைணவர். விஷ்ணு என்ற வட சொல்லுக்கு எங்கும் பரந்து நிறைந்திருப்பவன் என்று பொருள். இறைவன் என்ற தமிழ்ச் சொல்லின் பொருளும் இதுவே. விஷ்ணுவைப் பகவானாக வழிபடுவதால் வைணவர்களைப் பாகவதர் என்றும் குறிப்பிடுவர். வள்ளுவர் 'ஆதிபகவன்' என்பதும் ஒப்பு நோக்கத் தக்கது. இச்சமயத்தின் அடிப்படை வேதாந்தத்திற்கு விசிஷ்டாத்வைதம் என்று பெயர். அனைத்துலகும் இறைவனுக்கு உடம்பு என்பது இராமானுசர் நிலைநாட்டிய 'ஸ்ரீ வைஷ்ணவ விசிஷ்டாத்வைதத்தின் உயிர்நிலைக் கொள்கை. உலகில் உள்ள அனைவரும் ஆண்டவனுக்கு அன்பராக, அடியவராக, உரிமையுள்ளவர்களே என்பது இக்கொள்கையின் உட்பொருள்.

**ஒரு பொதுநோக்கு :**

அனைத்துலகும் உடலாகக்கொண்டு இறைவன் உள்நின்று பாதுகாப்பதால் அன்பர்பணி என்ற பாகவத கைங்கரியத்தில் உலகப்பணியும் அடங்கும். இறைவனுக்குப் பணிபுரிவதைக் காட்டிலும் அன்பர்பணி முக்கியமானது. அன்பும் பணியுமாகிய 'இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்' என்ற மன உறுதியுடன் தன்னைச் சரணமடையும் அன்பர் இம்மையிலேயே பேரின்பம் துய்க்குமாறு இறைவன் இங்கேயே எல்லா நலன்களையும் அளித்து வாழ்வித்தருளுவான். 'நன்னெஞ்சே! நம் பெருமான் நமக்கருள்தான் செய்வானே' என்ற நம்பிக்கை இன்றியமையாதது.

அவன் அடியவர்களின் உள்ளத்தைத் தன் அன்பாலும் அழகாலும் வசீகரித்து அவர்களை முடிவில் அன்பர் பணிக்கு ஆளாக்கிவிடுகிறான். வாழ்க்கை அன்புமயமாகும்போது இன்பமாகிறது. தொண்டு நெறி, இந்த அடியவர்கள் தம்மிடத்திலும் பிறரிடத்திலும் ஒரு நிகரான புத்தியுடைய சமத்வ நிலையில் இருப்பார்கள் என்ற குறிப்பை, இராமானுசர் பகவத்கீதையின் பத்தாவது அத்தியாயத்தில் ஐந்தாம் சுலோகத்தில் வரும் 'ஸமதா' என்பதன் பொருளை விவரிக்கும்போது வெளியிட்டுள்ளார். அதற்கு மேலும் விளக்கம் தருகிற வேதாந்த தேசிகர், 'தன்னிடத்திலும், தன் நண்பர்களிடத்திலும், தன்னிடம் பகைமை கொண்டுள்ளவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியுடையவனே வைணவன்' என்று பொருள்படும் விஷ்ணு புராண வசனத்தை எடுத்துக் காட்டுகிறார், மேற்கோளாக.

தம் காலத்திலுள்ள சமயக் கொள்கைகளையும் தத்துவக் கருத்துக்களையும் அலசி ஆராய்ந்து இராமானுசர் தமது 'ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைத சித்தாந்த'த்தை ஒரு முழுக் கட்டடமாக

உருவாக்கியுள்ளார் என்பது, இவரது வாழ்க்கை வரலாறுகள் தரும் முக்கியமான ஒரு செய்தியாகும். இம்முழுக் கட்டுக்கோப்பையும் அவர்தம் பேருரையாகிய ஸ்ரீ பாஷ்யத்தில் மட்டும் கண்டு கொள்வதற்கில்லை; இவரது வாழ்க்கையும் உபதேசங்களும் பற்றிய குருபரம்பரைச் செய்திகளை ஒழுங்குபடுத்தி ஆராய்ந்தும் பார்க்க வேண்டும்.

இராமானுசர் ஸ்ரீபாஷ்யத்தாலும், தம் வாழ்க்கையாலும், வாக்காகிய அருளுரைகளாலும், தனிப்பெரும் பணிகளாலும் காட்ட முயலும் மெய்ப்பொருள், மூளைக்கும் தத்துவ சிந்தனைகளுக்கும் தேவைப்படும் தெய்வம் அன்று; மக்களின் இதயமும் ஆன்மாவும் காதலாகிக் கசிந்துருகித் தேடித் தவிக்கும் அன்புருவாகிய அருள் நிதி. அருளாளனுகிய அழகனைச் சரணமடைவோர் அனைவரும் வைணவர்கள் என்பது இராமானுசரின் தேர்ந்த கொள்கை.

**வாழ்க்கையும் வாக்கும் :**

'திக்குற்ற கீர்த்தி இராமானுசன்' என்று இராமானுசரின் காலத்தவரான திருவரங்கத்து அமுதனுர் தாம் இயற்றிய இராமானுச நூற்றந்தாதியில் குறிப்பிடுகிறுர். இது, இவர்தம் சீடரான கூரேசன் முதலானவர்களுடன் காஷ்மீரம்வரை சென்று தம் கொள்கைகளைப் பரப்பியதையும், தம் காலத்திற்குமுன் தம் பக்திநெறிக் கொள்கைக்கு இசைந்ததாக வழங்கிய வியாக்கியானத்தைக் காஷ்மீரத்தில் கண்டுபிடித்துத் தம் நெறியின் அடிப்படையை உறுதிப்படுத்திப் புகழ்பெற்றதையும் நினைவூட்டுகிறது. கூரேசனை இராமானுச நூற்றந்தாதி 'வஞ்சமுக்குறும்பாம் குழியைக் கடத்தும் நம்கூரத்தாழ்வான்' எனச் சிறப்பித்துக் காட்டுகிறது.

சாதிச் செருக்கு, கல்விச் செருக்கு, செல்வச் செருக்கு ஆகிய இவற்றை 'வஞ்ச முக்குறும்பு' என்பர். காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மூன்றையும் சாதாரணமாக 'முக்குறும்பு' எனக் குறிப்பிடுவதுண்டு. சாதியும், கல்வியும், செல்வமும் நல்லவைபோலத் தோன்றி மதியை வஞ்சித்து அல்லல் விளைப்பதால் இவற்றை 'வஞ்சமுக்குறும்பு' என வரையறுத்துக் குறிப்பிடுகிறுர் அமுதனுர். வஞ்சமுக்குறும்பாம் படுகுழிகளைக் கடந்து தொண்டு நெறியில் நிலைபெறுவோன் ஸ்ரீவைணவன் என்பது குறிப்பு. எழுபத்துநான்கு சிம்மாசனுதிபதிகளும் (ஸ்ரீவைஷ்ணவ சமய பீடங்களில் வீற்றிருந்தவர்களும்), எழுநூறு ஏகாங்கிகளும், பன்னீராயிரம் பாகவதர்களும் ஒரே குழாமாய்த் தொண்டாற்றுமாறு இராமானுசர் தம் திருநெறியைப் பரந்த உள்ளத்துடன் பரப்பி வைத்ததாகக் குருபரம்பரை வரலாறுகள் ஒருமுகமாய் அறிவிக்கின்றன.

கதியற்றவர்களுக்கெல்லாம் கதியாக வேண்டும் என்ற நோக்குடன் இராமானுசர் நாற்பாற்குலத்திற்கும் கீழ்ப்பட்டவர்கள் என்று ஒதுக்கப்பட்டிருந்தவர்களைத் 'திருக்குலத்தார்' என்ற அழகிய தமிழ்ப் பெயரால் அழைத்துத் திருத்திப் பணி கொள்ள முயன்றதும் இவரது பரந்த உள்ளத்திற்கு ஒரு பெருஞ்சான்றுதான். 'ஆலயப்பிரவேசம்' என்று காந்தியடிகள் அண்மையிற் செய்த புரட்சிகரமான சீர்திருத்தத்தையும் இராமானுசர் அன்றே எதிர்பார்த்ததுபோல் திருக்குலத்தாரை மேலைக்கோட்டை என்ற திருநாரயணபுரத்துக் கோயிலுக்குள் அனுமதித்த அந்த வழக்கம் ஆண்டுதோறும் மூன்று தினங்களில் தொடர்ந்து நடைபெற்று வந்திருப்பதைப் பலரும் அறிவர்.

புறச்சமயிகளான சமணர்களையும் பௌத்தர்களையும் இவர் தம் பாகவதப் பெருந்திரளில் சேர்த்துக் கொண்டார். சோழ அரசினரால் துன்பம் நேர்ந்தபோது திருவரங்கத்திலிருந்து மைசூர்ச் சீமைக்கு நடந்து சென்று அங்குள்ள சமண அரசனை வைணவனுக்கி அவனுதவியால் தமது சமயத்தை அந்தப் பகுதிகளிலும் பரவச் செய்தார். முகமதியருடனும் நட்புக்கொண்டு 'செல்வப்பிள்ளை' என்ற பெருமாள் விக்கிரகத்தை மீண்டும் மேலைக்கோட்டையில் பிரதிட்டை செய்து வைத்தார். இச்செயலை இராமானுசரின் உலகியற் பேரறிவுக்கு ஒரு சிறந்த சான்ருகக் காட்டலாம்.

வேதாந்தியாக இருந்ததுடன் இராச தந்திரியாகவும் நிர்வாகத்திறன் வாய்ந்தவராகவும் வாழ்ந்த வித்தகர் இவர். கோயில்களின் நிர்வாகத்தைத் திருத்தி அமைத்து அவை பக்திப் பண்ணைகளாகத் திகழ்ந்திருந்ததுடன் சமுதாய வாழ்க்கையின் மேம்பாட்டுக்கு உரிய வளர்ப்புப் பண்ணைகளாகவும் திகழுமாறு செய்தார். பெரிய கோயில் என்று வைணவர்கள் கொண்டாடும் திருவரங்கத்தை ஸ்ரீவைணவத்தின் தலைநகரமாக விளங்கச் செய்தார்.

இத்தகைய வாழ்க்கைக்கும் குணுதிசயத்திற்கும் உரியதோர் இமயச் சிகரமாக மதிக்கத்தக்கது, திருமந்திரத்தையும் அதன் இரகசியப் பொருளையும் இவர் எல்லாருக்கும் வழங்கினுர் என்ற வரலாறு. குருவின் ஆணையைமீறி அவர் தமக்கு உபதேசித்த திருமந்திரப் பொருளைத் திருக்கோட்டியூர்ச் சந்நிதியின் மேல்தளத்திலிருந்து அனைவருக்கும் உதவினுர்.

இச்செயலைத் திருக்கோட்டியூர் நம்பி மனமாரவாயாரப் பாராட்டினுர். பக்தி வழியில் ஒரு புது உலகத்தையே இராமானுசர் கண்டு பிடித்துக் காட்டியதுபோன்ற ஓர் அதிசய உணர்வு குருவின் உள்ளத்திலும் உதித்தது.

> தன்னுயிர் தன்னைக் கொண்டு
> தான் பிழைத் திடுவ தன்றி
> மன்னுயிர்க்கு இரங்கித் தன்னை
> மைந்தனே! மாய்க்கப் புக்கார்
> இந்நிலத்து இல்லை, இல்லை;
> ஏழுல கத்தும் இல்லை!

என்பது குருவின் பாராட்டுரை.

தனி மனிதனுடைய விடுதலையைக் குறிக்கோளாகக் கொண்டிருந்த தத்துவ உலகிலே

சமுதாயப் பெரும் பணிக்கு இன்றியமையாத தோர் அடிப்படை வேதாந்தத்தை இராமானு சரது திருமந்திரதான மனப்பான்மையில் நாமும் கண்டு கொள்ளலாமென்று தோன்றுகிறது. ஆன் மாவுக்காக உலகத்தைத் துறக்குமாறு உபதேசித் தார் முன்னோர் என்றால், உலகத்திற்காக ஒருவன் தன் ஆன்ம நாசத்திற்கும் தயாராகிவிடலாம், தன் முத்திப் பேரின்பத்தையும் துறந்துவிடலாம் என்பது இராமானுசர் கண்ட புதிய வைணவப் பெருநெறி எனலாம்.

நம்மாழ்வாரின் கருணை குறித்து, 'பிறர் துயரம் (பராநர்த்தம்) நெஞ்சிலே படுகையாலே நாட்டுக் காகத்தாம் மன்றாடுகிறார்' எனக் கூறுவதுண்டு. இந்த ஆழ்வாரை ஸ்ரீவைணவத்தின் 'முதல்தாய்' என்றும் இராமானுசரை 'இதத்தாய்' (வளர்ப்புத் தாய்) என்றும் கூறுவர். நம்மாழ்வாரைப் பாரதம் பாடிய வில்லிபுத்தூரார் 'தத்துவத்தின் முடிவு கண்ட சதுமறைப் புரோகிதன்' என்கிறார். இராமானுசரை, அதே தத்துவத்தின் முடிவை ஸ்ரீபாஷ்யத்திலும், வேறு நூல்களிலும், வாழ்க்கை நெறியிலும், பல்வேறு அருளுரைகளிலும், நிர்வாகத் திறனிலும்கூட நிலைநாட்ட முயன்ற நிகரற்ற 'புரோகிதர்' எனலாம்.

இராமானுசரின் கருணை மக்களிடையே அகப் புரட்சிவிளைத்துப் புதியதொரு விழிப்பைத் தோற்றுவித்தது. இக்கருணை, நஞ்சிட்டுக் கொல்ல முயன்றவர்களையும் மன்னித்து ஆட்கொண்டது; வஞ்சித்துக் காசி யாத்திரையில் கொல்ல முயன்ற பழைய ஆசிரியரான யாதவப் பிரகாசரையும் ஆட்கொண்டு கோவிந்த ஜீயராக்கி வாழ்வித்தது; எதிரிகளையும் அன்பராக்கி அணைத்துக்கொள்ள எப்போதும் சித்தமாக இருந்தது.

இதே கருணைதான், 'இத் தஞ்சமாம்பாள் வாழ்க்கைத் துணைவியாகாள்!' என்று மூன்று தவறுகளுக்காக மனைவியை விலக்கி வைத்தது. இப்பெருந்தவறுகளில் ஒன்று, குருவின் குலத்தை இகழ்ந்தது. அடுத்த தவறு, 'ஒரு பாகவதரை இகழ நினைத்து இருந்த இடம் சுத்தம் பண்ணி'யது என்கிறது மூவாயிரப்படி குருபரம்பரை. பாக வதரும் சாதி கருதுவதே இகழ்வதுதான் என்பது குறிப்பு. மூன்றாம் தவறு, 'பசித்தார்க்கு ஊன் இருக்க, இல்லை என்றது; பசித்து வந்தவர் ஏழைத் தொழிலாளியான ஒரு பாகவதர் என்பது குரு பரம்பரை நூல்களின் செய்தி. அன்பும் துறவும் இப்படி இரண்டறக் கலந்து நின்றது இந்த அருளாளரின் நீண்ட பெருவாழ்விலே.

இராமானுசர் மறையும்போது, தொண்டு ஒன்றே நெறி என்றும், தொண்டர்களை இகழ் வதே மோட்சவிரோதம் என்றும் சுருங்கக்கூறி விளங்க வைத்தார் என்று குருபரம்பரைக் கதை கள் கூறுகின்றன. தான் அறப் பெய்து மாய்ந்து போகும் மேகம் இறுதியில் சில அமுதத்துளிகள் சிந்தி மறைவதைப்போல், இராமானுசர் அருகிலிருந்தவர்களை நோக்கி எண்பத்திரண்டு வார்த்தைகள் சொன்னதாகப் பிரபந்தாம்ருதம் என்ற நூல் தெரிவிக்கிறது. இவற்றுள் முதலாவது வார்த்தை, இறைவன் தொண்டிலும் அடியவர் தொண்டிலும் குருவின் தொண்டிலும் ஏற்றத் தாழ்வு கொள்ளாமல் சமபுத்தி கொள்ள வேண் டும் என்பது. பாகவதர்கள் ஒருமுகமாய் ஒரு நோக்குடன் ஒருகுலம்போல் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது இராமானுசரின் இந்த எண் பத்திரண்டு வார்த்தைகளாகிய இறுதிவாக்கின் சாரம்.

### இவர் கண்ட வேதாந்த நெறி :

'தமிழ் ஒரு மூன்றும், சுருதிகள் நான்கும், எல்லையில்லா அறநெறி யாவும் தெரிந்தவன்' என்று இராமானுசரைக் குறிப்பிடுகிறது இராமானுச நூற்றந்தாதி (பாட்டு — 44). இவரது ஸ்ரீ வைணவ நெறியை 'உபய வேதாந் தம்' எனக் கூறுவதுண்டு. இந்த உபய வேதாந் தத்தை முதலாழ்வார் மூவருள் முதல்வரான பொய்கையார் நம் தமிழகத்தில் ஓர் அழகிய மங்கல விளக்காக ஏற்றி வைத்தார் என்பது திருவரங்கத்து அமுதனார் கருத்து. 'எம் பொய் கைப் பிரான் மறையின் குருத்தின் (வேதாந்தத் தின்) பொருளையும், செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்றத் திரித்து அன்று எரித்த திருவிளக்கைத் தன் திருவுள்ளத்தே இருத்தும் பரமன் இராமானு சன்' என்பது அமுதனார் வாக்கு (இரா. நூ. பாட்டு—8). மற்ற ஆழ்வார்களின் வாக்கும் இராமானுசருக்கு வழிகாட்டியது என்பதையும் விவரமாகக் குறிப்பிடுகிறார் இவர். தம் அந்தாதி யின் முதற் பாட்டிலேயே அமுதனார் இராமானு சரை நம்மாழ்வாரின் 'அடிபணிந்து உய்ந்தவன்' என்று அறிமுகப்படுத்துகிறார்.

'உளன் கண்டாய், நன்னெஞ்சே! உத்தமன்' என்று பொய்கையார் காட்டும் இறைவனை 'உயர்வற உயர்நலம் உடையவன்' என்று நம் மாழ்வார் எல்லையற்ற அழகிய குணங்களுடனும் 'அழியா அழகு' என்ற வடிவுடனும் காட்டுகிறார். அழகனுக்கு ஆயிரம் பெயர். இங்கே ஆயிரம் என்றால் எண்ணிறந்தவை. இப்பெயர்களெல்லாம் இறைவனது தூய நற்குணங்களுக்குத் 'தமர் உகந்த' நினைவுக்குறிகள் என்பர். 'பேரும் பல பலவே' என்பது நம்மாழ்வார் வாக்கு. இந்த ஆழ்வார்களின் கொள்கைகளை இராமானுசர் வழி காட்டியாகக்கொண்டு 'மறையின் குருத்து' என்று மதிக்கப் பெறும் உபநிடதங்களுக்குப் பொருள் கொள்ளுகிறார்.

பரம்பொருளுக்குக் குணம் உண்டா, இல்லையா? உண்டு என்று கூறும் உபநிடத வாக்கியங்களும் உண்டு; இல்லை என்று கூறும் வாக்கியங்களும் உண்டு. குணம் உண்டு என்பதற்கு எல்லா நற் குணங்களும் உண்டு எனப் பொருள் கூறுகிறார் இராமானுசர். குணம் இல்லை என்ற கூற்றுக்கு தீயகுணம் இல்லை என்று பொருள் கூறுகிறார். இப்படிப் பொருள் கொண்டு உபநிடதங்களில் முரண்பாடு என்ற குற்றம் இல்லை என்கிறார்.

அம்மையப்பனாகிய அழகனை அடைவிப்பது அன்புநெறி என்ற பக்திநெறியின் உயிர்நிலையாகிய அடைக்கலம் புகுதல் என்ற சரணாகதி. இக்கொள்

கையை இராமானுசர் 'சரணுகதிகத்யம்' என்ற பிரபந்தத்திலே பின்பற்றிக் காட்டியுள்ளார். இந்த நெறியைப் 'பிரபத்திநெறி' என்றும் இந்த நெறியில் செல்வோரைப் 'பிரபன்னர்' என்றும் கூறுவதுண்டு. இந்நெறியில் பக்தி, காதலாக மலர்ந்து, தொண்டாகக் கனிகின்றது. இப் பேற்றை அடைவதற்கு உபாயம் அவன் அருள் தான்.

ஆழ்வார்களின் வாக்கிலே அர்ச்சாவதாரம் என்ற விக்கிரக வழிபாடு அழியாப் புகழ் பெற் றிருக்கிறது. ஆழ்வார்களின் பக்தி சிறப்பாகத் தென்னுட்டுத் திருக்கோயில்களுக்கு என்றும் வாடாத பொலிவைத் தந்திருக்கிறது. இவர்கள் முனிவர்களைக்காட்டிலும் சிறந்தவர்கள் என்றும், இவர்களை 'மால் உகந்த ஆசிரியர்' என்றும் வேதாந்த தேசிகர் கூறியுள்ளார். இந்தத் தமிழ்த் திருத்தொண்டர்கள், இறைவனை நேரில் அவன் காட்டக் கண்டு அனுபவித்து, அந்த அனுபவத் தைத் தமிழாக்கியவர்கள் என்பது ஸ்ரீ வைணவர் களின் நம்பிக்கை. இவர்கள் பாடல்களை ''ஆழ் வார்கள் செந்தமிழ்' என்கிறோம். இந்த ஆழ்வார் களில் நம்மாழ்வாரைக் குலபதி என்றும் பரமா சாரியன் என்றும் கூறுகிறார்கள். இவரது திருவாய் மொழியை இவரே 'பாலேய் தமிழர், இசை காரர், பத்தர் பரவும் ஆயிரம்' என்கிறார். இந்த ஆயிரத்தைத் தமக்கு வழிகாட்டியாகக் கொண் டவர் இராமானுசர்.

ஆழ்வார்களின் புகழ் தமிழகத்தைக் கடந்து பரவியிருந்தது என்பதற்குப் பாகவத புராணமும் சான்று தருகிறது. பக்தியே தென்னகத்தில் சிறப் பாகத் தோன்றித் திகழ்ந்தது என்ற கருத்தையும் இப்புராணத்தில் காணலாம். உபயவேதாந்தம் என்ற செம்பொருளைச் செந்தமிழால் அளித்த ஆழ்வார்களுள் நம்மாழ்வாரை 'மறைகளை ஆயிரம் இன்தமிழால் செய்தற்கு உலகில் வரும் சடகோபன்' எனச் சிறப்பித்துப் பேசுகிறது இராமானுச நூற்றந்தாதி. நம்மாழ்வாரின் இந்த ஆயிரம் இன்தமிழ்' தான் திருவாய் மொழி. 'வாய் மொழி' என்ற சொல் வேதம் என்ற பொருளில் வருகிறது பத்துப்பாட்டுள் ஒன்றுகிய பரிபாடல் என்ற சங்க இலக்கியத்திலே. வாய்மொழி = வாய்மை + மொழி = உண்மை வாக்கு. திருமாலை 'வாய்மொழி முதல்வன்' என்று குறிப்பிடுகிறது பரிபாடல். தமிழ் வேதமாகிய திருவாய் மொழியைத் தெளிய ஓதினல் தெளியாத மறைகளான வடமொழி வேதங்களையும் தெரிந்து தெளியலாம் என்று 'சந்த மிகு தமிழ் மறையோன்' என்று தம்மைத் தாமே சொல்லிக் கொள்ளும் வேதாந்த தேசிகர் கூறியுள்ளார். இராமானுசரும் இவ்விதமாகத் தெளிவு பெற்றே தம் வேதாந்த நெறியைக் கண்டு பிடித்தார் எனக் கருதுவது மிகையாகாது.

**நெறி தரும் செந்தமிழ் :**

நம்மாழ்வார் வாக்கை 'நெறிதரும் செந்தமிழ் ஆரணம்', என்று அமுதனர் தம் நூற்றந்தாதியில் குறிப்பிடுவதைக் காண்கிறோம். திருமாலை .முழு முதற் கடவுளாகக்கொண்டு வழிபடும் ஸ்ரீவைண வம் ஆழ்வார்களுக்கு முன்பே நம் தமிழகத்தில் தழைத்திருந்தது. இதைத்தக்கதொரு தத்துவ அடிப்படையில் நிலைநிறுத்திய பெருந்தமிழர்களில் தலைசிறந்தவர் நம்மாழ்வார். சங்க இலக்கியங் களில் சிறப்பாகக் குறிக்கப்படும் கண்ணன் வழி பாடு பரிபாடலிலே ஏறத்தாழ நம்மாழ்வாரின் ஸ்ரீவைணவக் கொள்கைகளை நன்கு நினைவூட்டும் முறையில் வளர்ந்திருப்பதைக் காண்கிறோம்.

ஆயர்குலமகளிர் கண்ணனிடம் காதல் கொண் டிருந்ததையும் தொல்காப்பியர் அறிந்து குறிப் பிடுவதுபோலத் தோன்றுகிறது. 'காமப் பகுதி' என்று தொல்காப்பியனர் குறிப்பிடுவது, ஆழ் வார்களின் காதற்பாசுரங்களை நினைவூட்டுகிறது. கண்ணன் காதல் என்ற பக்திப் பெருங்கொள்கை நீண்ட காலமாகத் தமிழகத்தில் வேரூன்றிக் கற் பகமாகி வளர்ந்து நம்மாழ்வாரின் திருவாய் மொழியைக் கொம்பிலே கனிந்த கனியாகத் தந் திருக்கிறது.

திருவாய் மொழியைத் தந்திருக்கும் செந் தமிழை 'நெறிதரும் செந்தமிழ்' என்பது பொருத் தமே. வேதாந்த உலகில் இராமானுசருக்கு ஒளி காட்டி ஸ்ரீவைணவ நெறியும் காட்டியது இவரது 'நெறிதரும் செந்தமிழ்'க் குலதனமே என்பது இன்றைய ஆராய்ச்சியாளர் கருத்து.

உண்ணது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னச்சொல் நோற்பாரின் பின்.

திரு. சி. வேங்கடசாமி, எம். ஏ.
மக்கள் தொடர்பு அலுவலர், தமிழக அரசு

# மத்துவர் நெறி

## மெய்யுணர்வு :

"என்றும் உள தொன்மொழியாம் தீந்தமிழில், தத்துவ நூல்கள் உண்டா?'' என்று சிலர் கேட்பதுண்டு. இதற்குத் தமிழ்ச் சான்ருேர் திரு.வி.க., ஞானியாரடிகள், கா. சுப்பிரமணியம் பிள்ளை, டாக்டர் மு. வரதராசனுர் முதலான பேரறிஞர்கள், தக்க விளக்கம் தத்துள்ளனர். ''தத்துவம்'' என்பதற்கு, 'மெய்யுணர்வு' என்ற சொல்லைத் திருவள்ளுவர் கையாண்டிருப்பதைக் காணலாம். குறிப்பாகத் திருக்குறளில் உள்ள 'மெய்யுணர்தல்', 'அவாவறுத்தல்', 'துறவு', 'நிலையாமை', 'ஊழ்', முதலிய அதிகாரங்களில் காணப்படும் குறட்பாக்கள், உயர்ந்த தத்துவக் கருத்துக்களின் கருவூலமாகும் என்பதை ஆராய்ச்சியாளர் ஆய்ந்துணர இயலும்.

## இருவேறு உலகத்து இயற்கை :

தத்துவக் கொள்கைகளுக்கும், சமய நெறிகளுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை, ஐயம் திரிபறத் தெளிவுபடுத்திக் கொள்வது இந்த ஆராய்ச்சிக்கு மிகவும் இன்றியமையாததாகும். 'சமயம்' என்பது, நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது; உணர்ச்சிக்கு முதலிடம் தருவது; மரபுவழி வந்த சடங்குகளில் ஈடுபாடு கொண்டது. ஆனல், 'தத்துவமோ', அறிவுக்கே முதலிடம் தருவது; பகுத்தறியும் ஆராய்ச்சியை மட்டுமே அடிப்படையாக ஏற்று இயங்குவது; மூடநம்பிக்கைகளுக்கு எதிரிடையான விஞ்ஞான ஆய்வையே அளவுகோலாக ஏற்றுக்கொள்வது.

நமது நாட்டு முன்னேர் வாழ்க்கையில் சமயக் கொள்கைகளும், தத்துவக் கோட்பாடுகளும் தனித்தனியே பிரிந்திருந்தன என்று சொல்வதற்கில்லை. ஆழ்ந்த நம்பிக்கைக்குரிய கொள்கைகளும், ஆராய்ச்சியின் விளைவாகப் பெற்ற தெளிவான மெய்யுணர்வு முடிவுகளும், மக்களின் வாழ்க்கையோடு இணைந்திருந்த செய்தியை, பண்டைத் தமிழ் நூல்களின் ஆராய்ச்சி வாயிலாகக் கூர்ந்து அறியலாம். இன்றுள்ள மக்களின் வாழ்க்கையில் கூட, தத்துவம், சமயம் ஆகியவற்றின் தனித்தன்மைகளைப் பிரித்துக் காட்டுவது, எளிதான செயலன்று. ஒரு மலரின் நிறம், மணம் ஆகிய பண்புகள் போன்று அவை உள்ளன. எனவே, மக்களின் அன்ருட வாழ்வில் அவை மிக நெருங்கிய தொடர்பு கொண்டு, பல்வேறு கருத்துவேறுபாடுகளுக்கு இடமளித்து வருகின்றன.

நமது தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களில் தத்துவக் கருத்துக்கள் பரவலாகச் சிதறிக்கிடப்பதைக் காணலாம். ''ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்'' என்ற திருமூலர் திருவாக்கு, பழந்தமிழரின் தத்துவ நெறியைக் கோடிட்டுக் காட்டுகிறது. அதற்கும் முன்பே, தொல்காப்பியச் சூத்திரம்,

''கொடிநிலை, கந்தழி, வள்ளியென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே''

என்று, மெய்யுணர்வு நெறியைக் குறிப்பிடுகிறது. சிறப்பாக, 'கந்தழி' என்ற சொல்லுக்கு, உச்சி மேல் புலவர்கொள் நச்சினர்க்கினியர், ''ஒரு பற்றுக்கோடின்றி, அருவாகி, தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள்'' என்று உரை விளக்கம் தருகிறர். இவை தவிர, சிலப்பதிகாரம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு முதலான நூல்களில், கடவுள் வாழ்த்து இருப்பது அனைவரும் அறிந்ததே.

இந்திய நாட்டின் வரலாறு, இங்கே வாழ்ந்த ஆட்சியாளர்களின் பட்டியலோடு நின்றுவிடுவதில்லை என்பது, ஆராய்ச்சியாளர் கருத்து. காலச் சக்கரத்தின் சுழற்சியிலே, மக்களின் சமுதாய வாழ்விலும், சமய மரபிலும், சிந்தனை நெறியிலும், மாற்றமும், ஏற்றமும் ஏற்படுத்திய அறநெறிச் சான்றோர்க்கும், நாட்டு வரலாற்றில் சிறப்பிடம் உண்டு. அவ்வாறு நோக்கும்போது, பாரத நாட்டின் ஆன்மீக ஆராய்ச்சிப் பணியில் திருவள்ளுவர், சங்கப் புலவர்கள், ஆழ்வார், நாயன்மார் ஆகியோரை அடுத்து, மத்துவர், இராமானுசர், சங்கரர், மெய்கண்டார், ஆகிய தென்னாட்டுப் பேராசிரியப் பெருந்தகையினர்க்கு உலக அறிஞர் அனைவரும் உயர்தனிச் சிறப்புத் தந்துள்ளனர்.

### மத்துவர் பிறப்பும், வரலாறும் :

இந்தியாவின் மேற்குக் கடற்கரையைச் சார்ந்த தென்கன்னட மாவட்டத்தில், உடுப்பி நகரை அடுத்த 'கல்யாணபுரம்' என்ற ஊரில், மத்துவர் பிறந்தார். இவர் தந்தையார், திருமத்யகேஹபட்டர் என்பவர், 'துளு' மொழி பேசும் அந்தணர். மத்துவர் பிறந்த காலம், கி.பி. பன்னிரண்டாம் நூற்றுண்டு என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். 79 ஆண்டுக் காலம் வாழ்ந்த இம் மூதறிஞர் கி.பி. 1197-இல் பிறந்தவரென ஆராய்ச்சியாளர் கணக்கிட்டுள்ளனர்.

பல நூற்றுண்டுகளுக்கு முன்பு, பரம்பொருள், உயிர்ப் பொருள் ஆகியவற்றை விளக்கும் அறிவுலகப் பேழையாக, வடமொழியில் (சமஸ்கிருதம்) அமைந்தவையே, உபநிடதங்கள், பிரம்மசூத்திரம், பகவத்கீதை ஆகிய மூன்று முக்கிய நூல்கள். இவை, தத்துவத்துறையில் தனிச் செங்கோல் செலுத்தி வருவன. இவற்றில் கூறப்படும் கருத்துக்களுக்கு ஏற்ற விளக்கம் தந்து, மனித சமுதாயத்துக்குத் தேவையான வாழ்க்கை நெறியினை அமைத்துத்தர முயன்ற சான்றோர்களுள் 'துவைத' நெறியை — ''இருபொருள்'' விளக்கத்தைத் — தெளிவுபடுத்திய பெருமை, மத்துவரையே சாரும்.

மத்துவர் கொள்கையையே மேலும் வலியுறுத்தும் வகையில், பேராசிரியர்களான விஜயேந்திரர், வியாசராஜர், ஜெயதீர்த்தர், சீனிவாசதீர்த்தர், வாதிராஜர் முதலியோர் பல்வேறு நூல்களை இயற்றியுள்ளனர். இவையெல்லாம் மெய்யுணர்வுத்துறையில் உலக ஆராய்ச்சியாளர் சுவைத்து இன்புறத்தக்கன.

### எளிய மக்களுக்கு ஏற்றவழி :

மத்துவர் கண்ட நெறி, சாதாரண மக்களின் அன்றாட வாழ்க்கைக்கு ஊன்றுகோலாக அமைந்த எளிய வழி என்று கூறலாம். 'நான் பரம்பொருள்' (அஹம் பிரம்மோஸ்மி) என்ற அத்துவைதக் கொள்கைக்கு எதிரிடையாக, ''நான் தொண்டன்'' ('அஹம் தாஸ்யோஸ்மி') என்ற பொருள் கூறி, புதிய சிந்தனைக்கு வழி வகுத்தவர், மத்துவர். உலகியல் நெறிக்கும், சமுதாய வாழ்வுக்கும் உண்மையாக உள்ள தொடர்பை வெளிப்படுத்தி, அறிவுத்துறையில் அதை உறுதியாகவும், தெளிவாகவும் நிலைநாட்டினர். உள்ளதை உள்ளபடி அறிந்து போற்றும் ஆய்வு முறையை 'யதார்த்த வாதத்தை' (Realism) 'பிரமாண' நெறியை — அவர் தத்துவ ஆராய்ச்சியில் கையாண்டார். 'தன்மை நவிற்சி' அணியை இலக்கிய உலகிலே கவிஞர்கள் பயன்படுத்தியதைப் போல, மெய்யுணர்வுத் துறையிலே யதார்த்த வாதத்தை, அவர் பயன்படுத்திச் சிறந்த வெற்றி கண்டார். இலக்கண, தர்க்க முறைகளுக்குப் பொருத்தமான பல்வேறு உதாரணங்களை எடுத்துக்காட்டி, ''பரம்பொருள், உயிர்ப் பொருள் ஆகிய இரண்டும் தனித்தனியே இயங்கும் வேறுபட்ட நிலையான இரு பொருள்கள்'' என்பதைத் தெளிவுபடுத்தினர். குறிப்பாகத் 'தத்வமசி' என்ற சொல்லுக்கு, 'அதத்தவமசி' என்ற புரட்சிகரமான பொருளை, வடமொழி இலக்கண முறையையொட்டி அவர் வெளியிட்டார். ''நான் அதுவாக உள்ளேன்'' என்ற அத்வைதப் பொருளுக்கு மாருக, ''நான் அது அல்ல'' என்ற புதிய பொருள் கூறினர், மத்துவர்.

### ''வித்தகம் பேசவேண்டாம், பணிசெய்ய வாரீர்''

இக்கருத்தை, நமது தமிழ் நூல்களில் விரிவாகக் காணலாம். ''மாயோன் மேய காடுறை உலகமும்'' என்று இலக்கணம் வகுக்கிறர் தொல்காப்பியர். ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்ற அப்பர் வாக்கு, உயிர்ப்பொருளின் இலக்கணத்தைத் தெளிவாக வெளியிடுகிறது. அதையடுத்து, 'தன் கடன் அடியேனையும் தாங்குதல்' என்கிறர் திருநாவுக்கரசர். 'தந்ததுன் தன்னை, கொண்டது என் தன்னை, சங்கரா யார் கொலோ சதுரர்' என்கிறதுஓர் அருள்மொழி. ''ஒருவனே போற்றி....தருக நின் பாதம் போற்றி'' என்று உள்ளம் குழையப் போற்றுகிறர், மாணிக்க வாசகர். ''அடியோமோடும், நின்னேடும், பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு'' என்று வாழ்த்துகிறர், பெரியாழ்வார். ''உளன் கண்டாய் நன்னெஞ்சே, உத்தமன், என்றும் உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து'' என்கின்றனர், முதலாழ்வார்கள். ''உயர்வற உயர்நலம் உடைய பரம்பொருளே சர்வ உத்தமன்'' என்கிறர் மத்துவர். பிறவிப் பெருங்கடலில் தவிக்கும் உயிர்ப் பொருளுக்கு மயர்வற மதிநலம் அருளும் ஆற்றல், இறைவனுக்கே உண்டு என்றும், பணிபுரிந்த பணிவோடு வாழ்வதே உயிர்ப் பொருளான ஜீவனின் கடமை என்றும் தெளிவுபடுத்துகிறது, மத்துவர் கண்ட 'துவைத' நெறி. இதையே ''வித்தகம் பேச

வேண்டாம், பணி செய்ய வாரீர்'' என்று, இறைவனே சுந்தரருக்கு உணர்த்துவதாகச் சேக்கிழார் பெருமான் எடுத்துக் காட்டியுள்ளார்.

அறிவுத்துறையில் ஏற்படும் இந்தத் தெளிவு, சமுதாய வாழ்வில் பக்தி நெறியாகவும், அடியாரின் தொண்டாகவும், சமுதாயப் பணியாகவும், படிப்படியே வளர்ந்து, ஆன்ம நேயம் பெருக வழிபிறக்கும். இதற்கு, எதிரிடையான ''யானே இறைவன்'' என்று கூறும் அத்துவைதக்கொள்கை, சாதாரண மக்களுக்கு மயக்கம் ஏற்படுத்தி, நடைமுறையில் தடுமாற்றம் ஏற்படுத்தும்'' என்பது மத்துவர் கூறும் எச்சரிக்கையாகும்.

### விஞ்ஞான ஆய்வுக்கும் ஈடுகொடுக்கின்ற ஆற்றல் :

பழங்காலத்தில் தத்துவ உலகிலே ஏற்பட்ட புரட்சிகரமான கொள்கைகள், இன்றைய சூழ்நிலையில் புதிய விளக்கம் பெற வேண்டியுள்ளன. ஏனெனில், இன்றிருப்பது, விஞ்ஞான உலகம். இன்றுள்ள தத்துவ மேதைகள் விஞ்ஞானத்தை அளவு நூலாகக் கொண்டு, மெய்யுணர்வுக் கொள்கைகளை ஆராய்கின்றனர். 'பெட்ரண்ட் ரஸ்ஸல்' (Betrand Russell) என்ற மேனாட்டுத் தத்துவப் பேராசிரியர், ''விஞ்ஞானம், மூடநம்பிக்கையா?'' (Is Science Superstitious ?) என்ற கேள்வியைத் தமது நூல் ஒன்றில் (Let the People Think) ஆராய்ந்துள்ளார். பகுத்தறிவுக்கு முடிவே இருக்க முடியாது. ''உள்ளது சிறத்தல்'' (Evolution) என்ற இயற்கை நெறி-'பரிணாமக்' கொள்கை-கால வெள்ளத்தில் என்றும் மிதந்து செல்லும் ஆற்றல் வாய்ந்தது; பயில் தொறும் இன்பமூட்டும் பண்பு பெற்றது. மத்துவரின் 'இருபொருள்' கொள்கை, இன்றைய உலகியல் விஞ்ஞான ஆராய்ச்சிக்கும் ஈடுகொடுத்து நிற்க முடியும். குறிப்பாக, 'ஈன்ஸ்டன்' கண்ட 'காலதத்துவ ஒப்புமைக் கொள்கை'யோடு இதை நுட்பமாக ஆராய இயலும்.

### தலைவர் - தொண்டர் தொடர்பு விளக்கம் :

பரம்பொருள், உயிர்ப்பொருள் ஆகிய இரண்டின் தனித்தன்மையும் சார்பு நிலையும் ஆழ்ந்த ஆராய்ச்சிக்கு இடம் தருகின்றன. எந்த ஓர் அமைப்பிலும் (Institution), அடிப்படையான இரண்டு பொருள்கள் இருப்பதைக் காணலாம். ஒன்று, ஆட்சி புரிவது (Governing Body); மற்றொன்று, பணி செய்யும் பொறுப்பேற்றுள்ளது (Subordinate Staff). இவை இரண்டுக்கும் உள்ள தனிநிலையும், தொடர்பும், நுட்பமான சிந்தனைக்கு உரியன. தானே இயங்கும் ஆற்றலோடு, சுதந்திரம் பெற்று, உயர்ந்து விளங்குவது ஒன்று. மற்றொன்றோ, வகுக்கப்பட்ட கடமைகளை ஒழுங்காக நடத்தும் பொறுப்பை மேற்கொண்டு, முன்னதன் விருப்பத்திற்கிணங்கச் செயல்படுவது. எனவே, இந்த இரண்டுக்கும் உள்ள உண்மையான நிலையிலோ, தொடர்பிலோ, அணுவளவும் ஐயம் திரிபு ஏற்படக்கூடாது என்பது மத்துவரின் கொள்கை. எளிதாக இதை விளக்குவதற்கு எடுத்துக் காட்டாக, மாபெரும் இயக்கத்தைச் சார்ந்த ஒரு தனிப்பெரும் தலைவருக்கும், சாதாரணத் தொண்டர் ஒவ்வொருவருக்கும் உள்ள தொடர்பை ஆராயலாம்.

### திருக்குறளில் 'இருபொருள்' கொள்கை :

தொண்டராய்ப் பணிபுரியும் நிலையிலுள்ளவர், தனக்கென உள்ள கடமையை உவந்து செய்வதிலே, பெருமகிழ்ச்சி காண முடியும். இது உலகியல் வாழ்வில் அறிந்து உணரக்கூடிய உண்மை நிலை. இந்த நிலைமையைத்தான், பரம்பொருள் ஆராய்ச்சியிலே, தத்துவ முறைப்படி, மத்துவர் விளக்கினர். திருக்குறளும், இதற்கு அரண் செய்வதாகப் பொருள் கொள்ளலாம். எவ்வாறெனில், ''ஆதிபகவன் முதற்றே உலகு'' என்று அறுதியிட்டு உறுதியோடு உணர்த்தத் தொடங்கிய திருவள்ளுவர், ''இறைவன் அடிசேராதார், பிறவிப்பெருங் கடல் நீந்தார்'' என்று தெளிவாக ஆணையிட்டு, பொய்யாமொழி வகுத்துள்ளார். மேலும், இறைவனின் உயர்பண்புகளை 'எண் குணத்தான் என்று தொகுத்துக்கூறி, அந்தக் குணங்களை முறையே, 'ஆதி பகவன்', 'வாலறிவன்', 'மலர் மிசை ஏகினன்', 'வேண்டுதல் வேண்டாமை இலான்', 'இறைவன்', 'பொறிவாயில் ஐந்தவித்தான்', 'தனக்கு உவமை இல்லாதான்', 'அறவாழி அந்தணன்' எனத்தெள்ளிய தீந்தமிழில் வகுத்துக் கூறியுள்ள நயம் அறிந்து இன்புறத்தக்கது. தத்துவ நெறியின் செறிவும், செந்தமிழின் சுவையும் இங்கே கைகோத்துக் களிநடம் புரிவதைக் காணலாம்.

### தெளிவு வேண்டும்; மயக்கம் வேண்டாம் :

தொண்டராய் உள்ள ஒவ்வொருவரும் தமக்குரிய பணியையும் பொறுப்பையும் மறந்து, தலைவரைப்போல் நடக்கத் தொடங்கினல், அல்லது நடிக்க முற்பட்டால், எத்தகைய விபரீதங்கள் ஏற்படும் என்பதை அனுபவத்தில்தான் காண முடியும். நாடகத்தில்கூட, அதை இயக்கும் ஒருவரின் (டைரக்டர்) கட்டளைப்படி, மற்றெல்லா நடிகர்களும் இயங்கினல்தான், நாடகமும் சிறந்த முறையில் நடைபெற முடியும். ஒழுங்கு முறையின்றி, ஒவ்வொரு நடிகரும் — பெரிய நடிகராக இருந்தாலும் சரி — தமக்குரிய பங்கை மறந்து, இயக்குநரின் எதிரிடையாக நடப்பதால், தவறுகள் நேரும் என்பது கண்கூடு. கலைத்துறைக்குச் சொன்ன இந்த எடுத்துக்காட்டு, சமுதாயம், அலுவலகம், குடும்பம் முதலான எந்த அமைப்புக்கும் பொருந்தும்.

இந்த வகையில், மத்துவர் கண்ட பகுத்தறிவு நெறி, ஒவ்வொருவரும் தமது கடமையை, தாம் வாழும் சூழ்நிலையில், உள்ளது உள்ளபடி அறிந்து கொண்டு, திறம்படச் செயலாற்ற மிகவும் துணை புரியத் தக்கதாகும். இருக்கின்ற உண்மை நிலையை மறந்து, தனக்கு இல்லாத உரிமை, ஆற்றல் முதலியன இருப்பதாக எண்ணி மயங்கி, மதி கெட்டுச் சிந்தை குழம்பிச் சீரழியாமல், தனக்குள்ள கடமைகளையும், பொறுப்புக்களையும் செம்

மையாக நிறைவேற்ற, இந்த 'யதார்த்த'க் கொள்கை உதவி புரிவது திண்ணம்.

**பரம்பொருளின் அருள் வெளியீடு :**

பிறவிப் பிணியால் வாடும் உயிர்களுக்கு 'விடுதலை' ஏற்படுவதை, 'முக்தி', 'மோட்சம்' 'வீடு', 'வீடு பேறு' என்று பலர் பலவாருகக் கூறுவர். இறைவனுடைய திருவருளின் விளைவாக வும், பக்தியின் பயனுகவும் ஏற்படுவதே, இந்த வீடு பேறு. இந்த வீடு பேற்றை உயிர்கள் பெற விரும்புவதைப் பக்திப் பனுவல்களில் நிரம்பக் காணலாம்.

'வாளால் அறுத்துச்சுடினும் மருத்துவன்பால்

மாளாத காதல் நோயாளன் போல்'

என்று, இந்த வேட்கை நிலையைக் குறிப்பிடுகிருர் குலசேகர ஆழ்வார். முதுபேரறிஞர் இராசாசி அவர்கள், நம்மாழ்வார் பாசுரம் ஒன்றின் வாயி லாக, இதே கருத்தை 'வேதாந்தம்' என்ற பெயர் கொண்ட ஆங்கில நூல் ஒன்றில் மேலும் நுட்ப மாக விளக்கியுள்ளார். அதாவது, ''நன்ருய் ஞானம் கடந்து'' என்று தொடங்கும் திருவாய் மொழியில்'', ''இன்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்ருல், அன்றே அப்போதே வீடு, அதுவே வீடு, வீடாமே'' என்ற மெய்யுணர்வைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

**இரு பறவைகள் உருவகக்கதை :**

''ஓங்கி உயர்ந்து வளர்ந்த மரத்தின் உச்சியில் ஒரு பறவை இன்பக்கடலில் ஆழ்ந்து அமைதியாக வீற்றிருக்கிறது. மற்ருெரு பறவையோ, அதே மரத்தின் கீழ்க்கிளைகளில் அலைந்து திரிந்து அல்லல் படுகிறது. உச்சிக்கிளையில் உள்ள பறவையைக் காணும்போது, உயர்ந்து செல்லும் நோக்கம் பிறக்கிறது. இவை இரண்டும் பறவைகளே என் ருலும், இவற்றின் நிலையிலும் பண்பிலும் எவ் வளவு வேற்றுமை! — 'முண்டக உபநிடதம்'' கூறும் இந்த உருவகமே, மத்துவரின் ''இரு பொருள்'' நெறிக்கு வேராக அமைந்தது என்பர் ஆராய்ச்சியாளர்.

**மத்துவ நெறியினர் திருப்பணி :**

மத்துவர் நெறியைப் பின்பற்றுவோர் மாத்து வர் எனப்படுவர். அவர்கள் பக்தி நெறியிலும் வேத முறையில் அமைந்த சமயச் சடங்குகளிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்களாய்ப் பலதுறை களிலும் சிறந்து பணிபுரிந்து வருவதைக் காண லாம். உடுப்பியிலுள்ள மத்துவர் மடம், சென்னை முதலான இடங்களில் காணப்படும் 'உத்தராதி மடம்' முதலியன மத்துவர் நெறியை உள்ளன் போடு போற்றி, உலகெங்கும் பரப்பி வருகின்றன.

**வேகமும் விவேகமும் :**

'மத்வாசாரியார்' என்று மிகவும் பக்தியோடு அழைக்கப்படும் இப்பேரறிஞர், 'வாயு' தேவரின் அம்சம் என்றும், அவர் சீடர்களும் நம்புகின்றனர். அதற்கேற்ப, அவர்களிடையே 'ஆஞ்சநேயர்' வழி பாடும் உண்டு. வாயுவின் வேகமும், 'சொல்லின் செல்வ'னை அனுமனின் விவேகமும், மத்துவர் வாதத்தில் கலந்து வீசியதில் வியப்பில்லை என்று கூறுவர்.

''தேருங்கால் தேவன் ஒருவனே'' என் பதும், அந்த ஒருவனை பரம்பொருள் ''ஸ்ரீமந் நாராயணனே'' என்பதும், மத்துவரின் கொள்கை. ''நாரயணு என்ன நாவென்ன நாவே'' என்ற சிலப்பதிகார (ஆய்ச்சியர் குரவை) எதிரொலியை இதில் காணலாம். ஆயினும், தத்துவத்துறையில், இராமானுசரின் 'விசிஷ்டாத்வைத' நெறியை, மத் துவர் ஏற்க மாட்டார்கள். சமயச் சடங்குகளிலும் இருசாராரிடையேயும் வேற்றுமைகள் உண்டு.

சுருங்கச்சொன்னுல், 'ஆணவமில்லாமல், பணி வோடு, மக்களுக்கு அன்புப் பணிபுரிந்து வாழ் வதே, மத்துவர் கண்ட மெய்யுணர்வு நெறியின் குறிக்கோள்' என்று கூறலாம்.



ஏவவுஞ் செய்கலான் தான்தேருன் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய்.

முத்து. இராசாக்கண்ணனர்
முதல்வர், அரசினர் கலைக்கல்லூரி, சென்னை



# துறவிகளின் தமிழ்த் தொண்டு



## துறவறச் சிறப்பு:

இல்லறத்தில் ஈடுபடுகின்ற மக்கள் அந்த இல்லற வாழ்வுப் பயனை முழுவதும் அடைவது துறவறத்திலேதான். இல்லறம், துறவறம் எனுமிவை இரண்டும் மாறுபட்டவை போலத் தோன்றினும் ஒன்றற்கொன்று துணையாகவே அமைந்திருக்கின்றது. பற்று வளர்வதற்கு இடமாவது இல்லறம். பற்று விலகுவதற்கு இடமாவது துறவறம்; எனினும் இல்லறத்தில் நின்றவரே துறவறத்தினை அடைவதற்குரியராவர் எவ்வாறு ?

வாழ்க்கைத் துணையைத் தேடி நன்மக்களைப் பெற்று வாழ்கிற இல்லறத்தான் அன்பினையும், அறத்தினையும் பெற்று வாழ வேண்டியவனுகவும் ஆகின்ருன். அன்பினை வளர்க்குந் தொறும் துறந்தார்க்கும், துவ்வாதார்க்கும், தென்புலத்தார்க்கும், விருந்தினர்க்கும், ஒக்கலாவோர்க்கும், மற்றும் பிறர்க்கும் அவன் துணை நிற்கின்ருன். இச் செயல் தாய், தந்தையர், மனைவி, மக்கள் ஆகியோரிடத்து மட்டும் சென்ற நெஞ்சம் விரிந்த பேரளவில் உலகத்தினரோடும் ஒட்டி உறவாடத் துணை புரிகின்றது. எனவே, இல்லற அன்பு துறவற அருளை விளைக்கின்றது என்று சொன்னல் அது மிகையாக மாட்டாது.

இவ்வளவும்,

''காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே''
(தொல். கற்பியல் 51)

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின் வாயிலாகப் பெறப்படும். தலைவனும், தலைவியும் உரிமைச் சுற்றம் சூழ இல்லறத்தில் ஈடுபட்டு, மக்களோடு கலந்து வாழ்ந்து, காம உணர்வினை வென்று, அறம், பொருள், இன்பத்தினும் சிறந்த வீட்டு நலத்தினைப் பெறுதற்கு, ஏமம் சான்றவற்ெருடு கலந்துறைதல் இல்லறத்தின் பயனுகும் என்பது மேற்கூறிய நூற்பாவினுல் பெறப்படும் கருத்தாகும்.

பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும் மருட்சி நீங்கிப் பொருட்டன்மையின் உண்மை நிலையை உணர்கின்ற இயல்பு, துறவு நிலையிலே தான் உண்டாகின்றது. யான், எனது என்னும் செருக்கு அறுபடுகிற வேளையிலே பொருட் கூறுபாடுகள் தெளிவாக அறிந்து கொள்ளப்படுகின்றன. நடுவுநிலைமை, இத்துறவறத்தில்தான் சிறத்தல் இயலும்.

''முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது
அடிகள் நீரே யருளுக''—(சிலம்புப்பாயிரம்)

எனும் அடிகள் ஒரு துறவியே பற்றற்ற உண்மை நிலையிலிருந்து ஒருதலைச் சார்பின்றி அறத்தொடு பட்டு, நேர்மையில் நின்று செய்திகளை உள்ளவாறு கூறுதல் இயலும் என்பதனை வெளிப்படுத்துகின்றன.

இல்லறத்திலுள்ளார் இவ்வாறு பொருட் கூறுபாடுகளை உணர்தல் இயலாதோ? இயலும். எப்போது? மண் ஒட்டினையும், செம்பொற்றகட்

டினையும் ஒன்றெனமதிக்கும் ஒப்புயர்வற்ற உள்ளத்தினராக இல்லறத்தினர் அமைகின்றபோது இயல்வதே.

**துறவியரின் தமிழ் அன்பு:**

துறவிகள் உலகைத் துறந்தும், உண்மையை உணர்ந்தும் பற்றொழித்து இறைவனடியில் சிந்தையைச் செலுத்தியும் தம் தாய்மொழியிடத்தே தனி அன்புகாட்டி வாழ்ந்தனர்.

''தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்ற
டடாதகா தேவியென் றொருபேர்
தரிக்கவந் ததுவுந் தனிமுத லொருநீ
சவுந்தர மாறனா னதுவுங்
குமரவேள் வழுதி யுக்கிர னெனப்பேர்
கொண்டதுந் தண்டமிழ் மதுரங்
கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக்
கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்''

—மதுரைக் கலம்பகம், 92

என்று குமர குருபரர் தம் மொழியாம் தமிழ் மொழிமீது கொண்ட பேரார்வத்தினை விளக்குகின்றார். உலகு வியக்கும் அரிய தொல்காப்பியத்தினைத் தந்த தொல்காப்பியர்,

''பல்புகழ் நிறுத்த படிமை யோனே''

எனப் பனம்பாரனாரால் பாராட்டப்படுகிறார். 'படிமையோன்' எனும் சொல் — அவ்வறிஞரின் துறவறநிலையைக் குறிக்கின்றது. இவரைப் போன்று இலக்கணம் வகுத்த துறவிகளாகப் புத்தமித்திரர், அமித சாகரர், குணவீர பண்டிதர், பவணந்தி முனிவர் முதலியோரைக் குறிக்கலாம். எம்முயிர் எனத் தமிழர் போற்றிக் கொள்ளும் பேரிலக்கியங்களாகிய திருக்குறள், சிலப்பதிகாரம், திருமுருகாற்றுப்படை, பெருங்கதை, சீவகசிந்தாமணி, சூளாமணி, திருத்தொண்டர் புராணம், தேம்பாவணி முதலியவற்றைப் பாடித்தந்த பாவாணர்கள் துறவுநிலையைத் தழுவிய தூயோரே. தத்துவத் துறையில் திருமூலர், திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார், திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார், மெய்கண்டார், அருணந்தி சிவாச்சாரியார், திருவதிகை மனவாசகங் கடந்தார், உமாபதி சிவாச்சாரியார், கண்ணுடைய வள்ளல், நாதமுனிகள், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், மறைஞான சம்பந்தர், பிள்ளை லோகாச்சாரியர் முதலியோர் அருந்தமிழ்த் தொண்டு செய்துள்ளனர். திவாகர முனிவர், பிங்கல முனிவர், மண்டல புருடர், கயாதரர் முதலியோர் நிகண்டுகளைப் பாடித் தமிழ்மொழியின் சொற்பொருள் விளக்கத்திற்கு விளக்கம் தந்தனர்.

தமிழ்மொழி பெற்றுள்ள சமயநூற்கள் எண்ணிக்கையில் எளிதில் அடங்கா. அவற்றையருளிய ஞானியரின் பெயர்ப்பாட்டியலும் மிக நீண்டது.

ஓரேருழவர், முதலாழ்வார் மூவர், காரைக்காலம்மையார், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி அடிகள், மாணிக்கவாசகர், திருமழிசை ஆழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், நாதமுனிகள், பட்டினத்தடிகள், ஐயடிகள் காடவர்கோன், கருவூர்த்தேவர், நம்பியாண்டார் நம்பி, கச்சியப்ப சிவாச்சாரியார், சித்தர் பதினெண்மர், அருணகிரியார், குமரகுருபரர், சிவப்பிரகாசர், தாயுமானவர், சிவஞான முனிவர், மஸ்தான் சாகிபு, இராமலிங்க அடிகள், ஆறுமுக நாவலர், ஞானியார் அடிகள், விபுலாநந்தர், மறைமலையடிகள் முதலிய மெய்யறிவர் தமிழகத்து வாழ்ந்தோருள் சிலராவர்.

**ஞானியார் அடிகள்:**

குறிக்கப்பட்டவர்களுள் சிவத்திரு ஞானியார் அடிகளைத் தமிழ்கூறு நல்லுலகம் என்றென்றும் நன்றியுணர்வுடன் போற்றிப் புகழும். இவ்வரிய ஞானியார் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள் என்றும், சுருக்கமாக ஞானியார் அடிகள் என்றும் அழைக்கப் பெற்றவர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் ஊர்கள் தோறும் சென்றருளித் தமிழ் மொழியினையும், சிவநெறியினையும், மக்களிடையே பரப்ப அயராது உழைத்த அருந்தொண்டர் ஆவார் இவர்.

ஞானியார் மடலாயத்து முதல் குருமூர்த்திகளாக வாழ்ந்தவர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக மெய்ஞ்ஞான சிவாச்சாரியார்களாவார். இவர் பிறந்த காலம் கி.பி. 1688 ஆகும். இவர்களே திருக்கோவலூர் ஆதீனத்தைத் தொடங்கி வைத்த முதல் ஞானியர் ஆவர். இவ்வடிகளார் இயற்றிய நூல்களாக முப்பத்தொரு நூல்கள் இந்நாள்வரை அறியப்பட்டவை. அந்நூல்களுள் நிட்டாநுபூதிசாரம் எனும் நூல் அறிஞர்கள் யாவராலும் பாராட்டப் பெற்றது:

''நலங்கொள்சிவ யோகமண நாற்றிசையு
மணக்கும்
ஞானமணங் கந்திக்கு மோனமண நாறும்
விலங்கலில்சித் தாந்தமணம் பரிமளிக்கு
மின்பா
வேதாந்த மணங்கமழும் வேதமணம் வீசும்
தலங்கொளுமெய் யத்துவிதத் திருமணமும்
பரவும்
தனிமுத்துக் கிருட்டினப்பேர் தங்கிய நம்
பிரமம்
வலங்கொளு நன்னிட்டாநு பூதியெனு
நூற்கே
வாய்மலர்ந்த வுரையெனுமோர் மாமலரி
னிடத்தே''

என்பது வடலூர் இராமலிங்க அடிகளார் இந்நூல் உரைக்கு அளித்த சாற்றுக் கவியாகும்.

திருக்கோவலூர் ஆதீனத்து ஐந்தாம் பட்டத்து அடிகளாகத் திகழ்ந்த ஞானியார் அடிகள் ஸ்ரீமுக ஆண்டு வைகாசித் திங்கள் (17-5-1873) இம்மண்ணில் தோன்றியவர் ஆவர். இவர் தந்தையார் அண்ணாமலை ஐயர்; தாயார் பார்வதி அம்மையார். பிறந்த ஊர் திருநாகேசுவரம். திருநாகேச்சுரத்து மக்கள் அடிகள் பிறந்த வீட்டினை ஐயர் வீடு என்றழைப்பர். 'ஐ' என்பது தலைமை என்னும் பொருளையுடையது. பல

மொழித் தலைமை, அறிவுத் தலைமை, ஞானத் தலைமை ஆகிய எண்ணில் தலைமைகளைப் பெற்று விளங்கும் அடிகளார் தலைமையையுடையார் (ஐயர்) வீட்டில் பிறந்தமை நினைவு கூர்தற்பாலது.

**தொண்டுகள்:**

தமிழ் வளம், தெலுங்கின் சிறப்பு, ஆங்கில மொழியறிவு, வடமொழியின் வன்மை ஆகிய வற்றால் பொலிவுற்ற அடிகள் தமிழகத்திற்குச் செய்திருக்கும் தொண்டுகள் சொல்லிலும், எழுத்திலும் அடங்குவன அல்ல. இற்றைக்கு எழுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர்த் தமிழ்நாடும், தமிழ்மொழியும் அடைந்திருந்த நிலைமை எத்தகைத்து என்பதை யாவரும் அறிவர். வடமொழியின் வழிமொழி தமிழ் என்று நாக்கூசாது கூறிய மக்களே எங்கும் இருந்தனர். அன்றியும் ஆங்கிலப் புயலில் தமிழ்ப்பயிர் அலையுண்டிருந்தது! கூட்டங்களில் தமிழில் பேசுவோர் அரியர் என்பது உறுதி. அத்தகைய நாள்களில் மொழிப் பெருமையைப் பரப்புவதற்குக் கழகங்கள் மிகுதியும் வேண்டின என்பதை அடிகள் அறிந்தனர். மற்றவர்களிடம் கூறிக் கழகங்களை நிறுவுமாறு செய்தும் தாமே அச்செயலை மேற்கொண்டும் தமிழ் மொழியை வளர்க்கும் வழிகாட்டியாக நின்றனர். சோபகிருது ஆண்டில், வாணி விலாச சபை என்னும் பெயருடன் தமிழ்க் கழகம் ஒன்றை மடத்திலேயே தொடங்கி வைத்தனர். பல கழகங்கள் நாட்டில் சின்னாள் தோன்றி நின்று அழிகின்றன. அவ்வாறின்றி அக்கழகம் இன்று வரை நடந்து வருவது எண்ணத்தக்கது. டாக்டர் உ. வே. சாமிநாதய்யரவர்கள், நான்காம் மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவியோரும் தமிழ்ப் பணியே எந்தம் தலைப்பணி என்று அப்பணியை மேற்கொண்ட சிற்றரசருமாகிய பாண்டித்துரைத் தேவர் முதலிய பேரறிஞர்களே முதலாண்டு முதலாக நடந்த ஆண்டு நிறைவுவிழாவில் தலைமை தாங்கினர். இவ்வாறு தமிழறிவு பெற்றோரும் தமிழ்ப் பற்றுச் சிறந்தோரும் தலைவர்களாக விளங்க, ஆண்டு நிறைவு விழாக்கள் நடந்து வந்திருக்கின்றன.

தமிழ் நாட்டு மக்களிடையில் மொழிப்பற்றையும், நாட்டுப் பற்றையும், செவ்வன் பரப்புதற்கு முற்படும் அறிஞர்களிடம் அடிகளுக்கு அளவிலா மகிழ்ச்சியுண்டு. மேலும் மேலும் அன்னார் தமக்கு ஊக்கத்தை ஊட்டி அவர்தம் முயற்சியைப் பாராட்டுவர். கரந்தைச் சங்கத்தின் உயிர் நாடியாகி ஒப்பற்ற வழக்கறிஞராக உழைத்த உயர்தனிப் பெரியாராகிய உமாமகேசுவரன் பிள்ளையவர்களுக்குத் 'தமிழ்ப் புரவலர்' என்னும் உயரிய மிகப் பொருத்தமான பட்டத்தை அடிகளார் தம் அறுபானுண்டு நிறை விழாவில் தந்தமையே இதற்குச் சான்றாகும்.

**சொற்பொழிவுத்திறன் :** அடிகள் சொற்பொழிவால் தோட்கப்படாச் செவி தமிழ்நாட்டில் இல்லை என்பது உறுதி. சொற்பொழிவாளர்களுக்குப் பேரெல்லையாய்க் கலங்கரை விளக்கமாக அடிகள் விளங்கி நின்றனர். எளியவும் இனியவுமாகிய சொல்லம்புகளால் கேட்போருளத்து இருட் பகைவனையழிக்கும் வீரச் செல்வம் அடிகட்குண்டு. சொற்பொழிவினைக் கேட்டுக் கொண்டிருப்போர் 'தன்னை மறந்தாள் தலைப்பட்டாள்' என்ற சொல்லரசர் சொற்களுக்கு இலக்காய் அவர்தம் பேருரையாகிய உறையினுள் அடங்கிக் கிடப்பர். ஐம்பொறிகளும் வேறு தொழிலில் ஈடுபட மாட்டா; கண்கள் அவர்தம் திருமுக மண்டலத்தினின்றும் பெருகும் கருணைக் கடலில் நீந்தி நிற்கும்; காதுகள் அவர்கள்தம் திருவாயினின்றும் வெளிவரும் சொல்லமிழ்தை மாந்திக் களிக்கும்; உள்ளம் ஒன்றினையும் உன்னாது அடிகளார் சொல்லிச் செல்லும் நெறிவழி இயைந்து நிற்கும்; கல்லாத எளிய மக்களுள்ளத்திலும் கற்ற அறிஞரிடத்திலும் தமிழன்னை வேறுபாடின்றி எழுந்தருளி, ஆகும் இன்பங்களை அவரவர் அறிவுநிலைக்கேற்பவும், உணர்வுநிலைக்கேற்பவும் ஊட்டுமாறு போல, அடிகளாரும் கற்றவர், கல்லாதவர் என்ற இருதிறத்தினரும் ஒரே காலத்தில் அறிந்து மகிழச் சிறக்கப் பேசும் பெருமையினர். அவர்கள் சொற்கள் கேட்டார் செவியில் என்றும் ஒலித்துக் கொண்டிருக்கும்.

**பாடங் கற்பித்தல்:**

மாணவர்களுக்குத் தமிழ் கற்பிக்கும் ஆற்றல் அடிகளிடத்தில் காணப்படும் உயர் சிறப்புக்களுள் ஒன்றாகும். ஒரு செய்யுளை ஒரு முறை சொல்லி விட்டுவிடும் வழக்கம் அவர்கள்பாலில்லை. அவர்களிடத்துக் கற்றோர் கற்ற நூல்களின் நுண்பொருள்களையும், மாண் பொருளையும் கனவிலும் தவறின்றிக் கூறுவர். ஏன்? பிண்டம், பொழிப்பு, பதவுரை, மேற்கோள் முதலியவற்றை மேற்கொண்டு கேட்போர் உளங்கொளக் கூறிவைப்பர். அடிகள்பால் ஒரு செய்யுளை ஒரு முறை கேட்பின், அச்செய்யுளின் முழுக் கூற்றினையும் நன் மாணவர் அறிந்து கொள்வர். சொற்பொழிவிலும் அவர்கள் செய்யுளைப் படித்துக் காட்டிக் கூட்டிப் பிரித்துக் காட்டிச் சொற்பொருள், சொல்நயம், பொருள்நயம், அமைந்துள்ள இலக்கணச் சிறப்புக்கள் ஆகியவற்றைக் கூறக் கேட்டோர் மறவார் என்றால், பாடம் கற்பிக்கும் நெறியினைப்பற்றிச் சொல்லுதலும் வேண்டுமோ? தம்பால் கற்கும் மாணவர்களின் முன்னேற்றத்தில் அடிகள் அளவிறந்த கருத்துடையவர்கள். பல பெரும் புலவர்களை ஆக்கிய ஞானப் புலவராக அடிகள் வீற்றிருந்தனர்.

பாடம் நடந்து கொண்டிருக்கும் காலத்தில் எவரேனும் அடிகளைக் காணவரின், அவர்களும் பின்பற்றும் நெறியில், நடந்து கொண்டிருக்கும் பகுதியின் முற்பகுதியைச் சுருக்கிக்கூறி அவர்களையும் உடனிருந்து கேட்டு மகிழும் வண்ணம் செய்வர். மாணவர்களுக்குப் பாடம் கற்பித்தலுக்குக் காலவரையறையை அடிகள் கொண்டது எந்நாளும் இருந்ததில்லை. கால் எலும்பு முறிந்து, நடக்கும் தொழில் முயற்சியும் இன்றி இருந்த காலத்திலும் குன்றாத ஊக்கத்துடன் அலர்ந்த தாமரையினை வென்ற முகப் பொலிவுடன் பாடம் கற்பித்துக் கொண்டிருந்தனரெனின் இவர்களின் கைம்மாறறியாக் கடப்பாட்டினை எச்சொல் கொண்டெழுதுவது!

**கல்விப்பணி:**

கல்வி ஒன்றே மக்களின் கண்களைக் கூர்ந்து நோக்கச் செய்யும் வன்மையது; உள்ளத்து மயக்கத்தை ஒழிக்கும் ஒளிக்கடவுள்; ஆணவம் முதலியவற்றை அராவும் அரம் என்று சிறப்புற அடிகள் உணர்ந்தனர். அந்நாளில் கல்வி பணமுடையார்க்கே; ஏழைக்குக் கல்வி நீண்ட தொலைவிலிருந்தது; ஆதலின் ஏழை மாணவர்கள் தம் தாய் மொழிப் பயிற்சியையும் சிறிது ஆங்கிலத்தையும், கணிதத்தையும் பிறவற்றையும் அறிதற்குக் கருவியாகத் தம் மணிவிழா நாளில் ஒரு கலாசாலையைத் திறந்தனர். அதன் செலவிற்கென ரூ. 10,000 ஒதுக்கி வைத்தனர். செல்வந்தனுக்கு இட்ட உணவினைப் போலாது மிகப் பசித்த ஏழைக்கு இட்ட அமுதினைப் போல் அக்கழகம் இன்றும் விளங்குகின்றது.

**பண்புகள் சில:**

அடிகளார் தோற்றப் பொலிவு, கண்டோர் கண்களை விட்டு என்றும் அகலாது. அடிகள் அவையில் பேசுதற்கென முற்படுகின்ற அளவிலேயே அவையிலுள்ளோர் தம் வீண் பேச்சுக்களைச் சட்டென முடித்துக் கொள்வர். அடிகள் முகத்தையே நோக்கி நிற்பர். திருநீற்றின் ஒளியும், மகர குண்டலங்களின் வனப்பும், பரந்த நெற்றியும், ஆழ்ந்தொளிரும் கண்களும், அவர்கள் அளிக்கும் செவி விருந்தின் முன்னர்க் கண்விருந்தென விளங்கும்.

மற்றவர்கள் பேச்சு நிலைக்கும் அடிகளின் பேச்சு நிலைக்கும் உள்ள பெரிய வேறுபாடு ஒன்றைக் குறிக்காதிருத்தற்கில்லை. பிறர் ஒரு நாழிகையளவு பேசுவதற்குள் பால் முதலியவற்றை வேண்டுவர்; அடிகள் 15 நாழிகை (6 மணி அளவு) யளவிற்குக் குறையாமல் பேசுவர். அக்காலத்தில் ஒரு வாய் நீரும் அருந்த மாட்டார்கள். இச்சலியா நிலையில் வேறொருவரையும் காண்கின்றேனல்லேன்.

அடிகள் பேசும் பொருள் யாதாயிருந்தாலும், எடுத்துக் கொண்ட அப்பொருளில் நாடோறும் மக்கள் வாழ்வில் பயன்படுவனவாக உள்ளவற்றைத் தேர்ந்தெடுத்துக் காட்டி, அவற்றைச் செயல் முறைக்குக் கொண்டுவரும் நெறியினையே வற்புறுத்துவர். முடிவுரையில் அடிகளின் வழிபடு கடவுளாகிய முருகனைப் பற்றிய வாழ்த்துச் செய்யுள் கூறுவர். செய்யுளை மட்டும் கூறி முடிக்க மாட்டார். அச்செய்யுள் கருத்தினையும் விளக்கமாக எடுத்துக் காட்டி உள்ளத்தில் பதிய வைப்பர். 'இல்லறத்தானல்லேன்' என்னும் செய்யுளைக்கூறி 'உயர்ந்த திருப்போரூரா, என்றே நான் ஈடேறுவேன்' என்ற இறுதியடியில் அமைந்துள்ள வினாவினைக் கூறிக் காட்டுவர். பின்னர் விடையாக, 'திருப்போரூரா என்றே, நான், ஈடேறுவேன்,' என்று விடையையும் கூறுவார். அக்காலத்தில் கேட்டு நிற்போர், 'ஆ' என்று தம்மையே மறப்பர். 'உருவாய்,' என்று தொடங்கும் அனுபூதிச் செய்யுளை மந்திரமாகக் கொண்டு கூட்டிக் கூறுவதை மறப்போரும் உளரோ? ஆகவே, அடிகளின் முடிவுரை, கடவுள் நடமிடும் இடமாக விளங்கும்.

1938ஆம் ஆண்டில் தமிழகத்து மக்கள் இந்தியைக் கட்டாயமாகப் பயிலுதல் வேண்டும் என்பது அந்நாளைய அரசின் ஆணையாயிற்று. அது தமிழ் மக்களுக்குப் பேரிடியாகவே, தமிழ்நாட்டில் அவலமும் கவலையும் தலைதூக்கின. அவர்கள் மனத்துயரைப் போக்குதற்கு வேண்டிய முயற்சிகளை மறைமலை அடிகளார், அருணகிரிநாதர், ஈழத்தடிகள், சண்முகானந்த அடிகள் ஆகியோர் மேற்கொள்ள முன்வந்தனர். அக்காலத்தே ''இந்தியின் வருகை தமிழ்மொழிக்கு எவ்வாற்றானும் கேட்டினைத் தருவதே; ஆகவே எங்ஙனமேனும் இந்தித் திணிப்பை எதிர்த்தலே நலம் பயக்கும் செயல்'' என்று கூறியும், இந்தி எதிர்ப்பு இயக்கத்திற்குத் துணையாக நன்பொருள் உதவியும் தமிழ்காக்கும் முதன்மைத் தொண்டிற்கு வித்திட்ட மூதறிஞர் ஞானியாரடிகள் ஆவர். இந்திக் கிளர்ச்சியினை ஒடுக்க வேண்டுமென அந்நாளைய அரசு திரு. சி. டி. நாயகம் அவர்களை முதல் முதலாகச் சிறை செய்தது. அந்நாளில் 'இன்றே தமிழர் வாழத் தொடங்கும் நன்னாள்' என மனமுருகிக் கூறிய அடிகளார் கூற்று அவர் முழுதும் உணர்ந்த மெய்ஞ்ஞானத் தமிழ்த் தொண்டர் என்பதைப் புலப்படுத்திவிட்டது. அருளுருவப் பெருஞானியராகிய அடிகளார் மறைந்து (1-2-1942) இருபத்தைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. எனினும், அவர்கள் நெஞ்சில் கனிந்த தமிழ் தழைத்துச் சீரிய பொலிவைப் பெறுகிற பெருமிதப் பெருமையை இவ்வுலகத் தமிழ் விழாவில் காண்கிறோம்.

கடலினை ஆய்வார் அதனை முடிவுறக் காண மாட்டார். அவ்வாறே அருந்தமிழ்க் கடலை ஆழ்ந்து கண்ட தமிழ்த் துறவியர் அருந்தமிழ்த் தொண்டினை முழுதுறக் கூறவல்லார் யார்?

நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

டாக்டர் பு. மு. வேணுகோபால்
தனி அலுவலர், சித்தமுறைப் பாடநூற்குழு, சென்னை.



# சங்க இலக்கியத்தில் சித்த மருத்துவம்

அமிழ்தினும் இனிய நம் தமிழ் மருத்துவ அன்னை ஒதுக்கப்பட்டிருந்த நிலைமாறி, மீண்டும் ஆட்சியேறி, நடாத்தத் தொடங்கிய உலகத் தமிழ் மாநாடு புதுநாளிலே தமிழன்பரும், சித்த மருத்துவரும் புத்துணர்வும் புதுவாழ்வும் பெறுமாறு தமிழர்தம் முன்னைய பெருஞ்சீரை விளக்கும் இக் கட்டுரையை வழங்குகிறேன்.

வீரமும், தீரமும், அருளும், ஆண்மையும், பண்பும், பாவும், பாவலரும், இசையும், இசைப் போரும், அரசும், நாடும், மக்களும், மன்னரும் மருத்துவமும், சமயமும், தத்துவமும் உயிர்ப்புடன் உலவுகின்ற காட்சியைச் சங்க இலக்கியங்களைப் படிப்பார் தத்தம் மனக் கண்முன் கண்டு களிக்கலாம். நெஞ்சிலே நிறைந்து நிழலாடும் அக் காட்சிகள் கோழையையும் குன்றென நிமிர்ந்து நிற்கச் செய்யும்; முதிராத சிறுபருவத்தாரையும் சீறியெழும் சிறுத்தையெனச் செம்மாந்து உலவச் செய்யும். புத்துணர்வும் புதுவாழ்வும் பெறத் துடிக்கும் புதுமைத் தமிழ் மருத்துவத்திற்குச் சங்க இலக்கியங்களில் கிடைக்கும் மருத்துவம் ஒரு சிறந்த அறிவுப் புதையலாகும்.

சித்தமருத்துவம் பயில்வோர் முதற்கண் அறிய வேண்டிய நூற்களைக் கீழ்க்கண்ட பாவால் உணரலாம்.

"சோதிடம், பஞ்சபட்சி துலங்கிய
சரநூல் மார்க்கம்
கோதறு வகார வித்தை
குருமுனி ஓது பாடல்
தீதிலாக் கக்கிடங்கள்
செப்பிய கன்ம காண்டம்
ஈதெலாம் கற்றுணர்ந் தோர்
இவர்களே வைத்தியராவர்."

(சித்தர் நாடி நூல் 18)

"பாண்டிதனியலுள பண்டித கணமே"
என்று தேரையர் மகா கரிசலிலும் கூறியுள்ளார்.

ஆகவே, சித்த மருத்துவத்தில் சிறந்து விளங்கும் மெஞ்ஞானம், விஞ்ஞானம், உடல் தத்துவம், சமயம், சோதிடம், பஞ்சபட்சி, சரம், மருந்து, மருத்துவம், பரிகாரம் போன்றவைகளை ஐயந்திரிபறக் கற்றுணர வேண்டும். சங்க இலக்கியங்களில் மருத்துவத்திற்கு அடிப்படையான பொருள்கள் தெற்றென உள்ளதைச் சான்றுகளுடன் கூறுவாம்.

## மெய்யுணர்வு, உடல்தத்துவம் முதலியன:

மண், நீர், தீ, காற்று என்னும் நான்கு பொருள்களேயன்றி வான் என்னும் ஐந்தாவது பொருளும் உண்டு. அவற்றின் மூலமாகிய வேறு

மேல் நிலைப் பகுதியும் உண்டு. இவ்வெல்லாற்றிற்கும் வேருக, அறிவு விளக்கத்துக்கு ஏதுவான உயிரும் உண்டு என்னும் கொள்கையை

''மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலை இயதீயும்
தீமுரணிய நீரும் என்ருங்கு
ஐம்பெரும் பூதத்தியற்கை''

புறம் 2)

''வளியிடை வழங்கா வானம்''

(புறம் 35)

''உயர்நிலை யுலகம் அவன்புக''

(புறம் 249)

''உடம்பொடு நின்ற உயிர்''

(புறம் 292)

என்னும் திரு மொழிகளின் வாயிலாய் உணரலாம்.

காலத்தின் உண்மையும் முற்றறிவுடைய முதல்வன் உண்மையுங் கிளக்கும் முடிவை,

''ஞாலங் காக்கும் காலம்''

(புறம் 56)

''பெரும்புலவர் வைகறைச் சீர்''

(புறம் 177)

''நன்ருய்ந்த நீள் நிமிர் சடை
முது முதல்வன்

(புறம் 196)

என்னுஞ் செய்யுட் பகுதிகளில் மிளிர்ந்து கொண்டிருப்பதைக் காணலாம்.

உயிர்கள் சிற்றறிவுடையன என்று தோன்றுதலால் முற்றறிவுடைய முதல்வன் ஆணைப்படி அதை தத்தம் வினைக்கு ஈடாகப் பற்பல பிறவிகளில் மாறிமாறிப் பிறந்த இம்மை மறுமை இன்ப துன்பங்களைத் துய்த்து முடிவில் உணர்விறந்ததொரு பெருநிலையில் தம்மை மறந்து நிற்கின்றன. அதனை,

'பேதமையல்லது ஊதியம் இல்லென
முன்னும் அறிந்தோர் கூறினர்

(புறம் 28)

''பெரிய ஓதினும் சிறிய உணராப்
பீடின்று பெருகிய திருவின்
பாடில் மன்னர்''

(புறம் 375)

''எல்லா உயிர்கட்கும் ஏமமாகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோன்''

(புறம் 1)

என்பதலால் உணரலாம்.

இனி, இவ்வறுவகைச் சமயக்கருத்துக்கள் அத்தனையுஞ் சேர்த்து மேலும் வாழ்வு விரிந்து ஒவ்வொரு கருத்திலும் தெளிவு திகழ்ந்து நிறைவுற்றுச் சமயம் என்னும் மெய் உணர்வுப் பேறு பண்டைக் காலத்தில் மிக நுட்பமாகவும் திட்பமாகவும் வீற்றிருந்தமைக்குப் புறநானூற்றில் பற்பல குறிப்புக்கள் காணப்படுகின்றன. எடுத்துக் காட்டாக,

''அருந்திறற் கடவுள்காக்கும் உயிர் சிமைப்
பெருங்கல் நாடன்''

(புறம் 158)

''கடவுள் ஆலத்து''

(புறம் 199)

முழுமுதற் கடவுள் ஒன்றே என்பதை

''பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீலமணிமிடற்று ஒருவன்''

(புறம் 91)

என்ற செய்யுளாலும்

உயிர்கள் பல என்று துணிந்திருந்ததை

''உயிர்தவப் பல''

(புறம் 235)

என்ற அடியாலும் உணரலாம்.

நீர் இன்றி வாழாது உடல்; அவ்வுடலுக்கு உணவு கொடுத்தவர் உயிர் கொடுத்தவரும் ஆவர். உணவால் ஊளதாவதுதான் மனித உடல். உணவே நிலத்தின் விளையும் நீரும் ஆகும் என்பதை'

''நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே,
உண்டி முதற்றே உணவின் பிண்டம்;
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரி யோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னேரே

என்று இயம்புகின்றன.

(புறம் 18)

''குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்
ஆள்அன்று என்று வாளின் தப்பார்''

(புறம் 74)

என்றதினுல் தசைப் பிண்டத்தை **'ஊன் தடி''** என்று கூற அறிந்திருந்தனர் என்பதை இதன் வாயிலாய் உணரலாம். அழியாது என்றும் உடலொடு நிலைத்திருக்கும் உயிரென ஒன்றும் கிடையாது. இது தெளிந்த உண்மை. மாயம் எதுவும் இதில் இல்லை. சடமும் சத்தியும் ஒன்றறக் கலந்துள்ளதை

''உடம் பொடு நின்ற உயிரும் இல்லை''

(புறம் 363)

''உயர்திணை யென்மனர் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனர் அவரல பிறவே''

(தொல்காப்பியம்)

''ஒன்றறிவதுவே உற்றறிவதுவே
இரண்டறிவதுவே அதனேடு நாவே
மூன்றறிவதுவே அவற்ருேடு மூக்கே
நான்கறிவதுவே அவற்ருேடு கண்ணே
ஐந்தறிவதுவே அவற்ருேடு செவியே
ஆறறிவதுவே அவற்ருேடு மனமே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப் படுத்தினரே''

(தொல்காப்பியம்)

தொல்காப்பியர் ஆறு வகையான உயிர்களைக் கூறுகிருர்.

''புல்லும் மரனும் ஓரறிவே
பிறவுமுளவே யக்கிளைப் பிறப்பே
நந்துமுரளு மீரறிவினவே
பிறவு முளவேயக்கிளைப் பிறப்பே
சிதலும் எறும்பும் மூவறி வினவே
பிறவுமுளவே யக்கிளைப் பிறப்பே
நண்டு தும்பியு நான்கறி வினவே
பிறவுமுளவே யக்கிளைப் பிறப்பே

மாவும் புள்ளும் ஐயறி வினவே
பிறவுமுளவே யக்கிளைப் பிறப்பே

மாக்க டாமே யாறறி வுயிரே
பிறவுமுளவே யக்கிளைப் பிறப்பே''

பிறவாவது தேவர், அசுரர், இயக்கர் முதலாயினர் என்று ஒவ்வொரு வகையிலும், உதாரணங்களாக அவ்வப் பகுதியின் சீவன்களைக் கூறியுள்ளார்.

(தொல்காப்பியம் - பொருளதிகாரம்)

உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசினேரே'

(புறம் 18)

உணவே நிலத்தையாதியாகக் கொண்டு ஐம்பூதக் கூட்டுறவால் உண்டாயது எனப்பட்டது.

**குணபாடம் :**

1) திரிகடுகம் என்ற தொடர், சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்றையும் குறிக்கும். எனவே சுக்கு, மிளகு, திப்பிலியாலாகிய திரிகடுகம் என்னும் மருந்து உடல் நோய் நீக்கி மக்கட்கு நலம் புரிவதுபோல் அன்னேர்க்குறுதிப் பொருள்களை அறிவுறுத்தி அறியாமையாகிய மனவிருளைப் போக்கி இம்மை மறுமை இன்பங்களை அளிக்க வல்லது இத்திரிகடுகம் என்னும் நூல்.

2) சிறு பஞ்சமூலம் : கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சி ஆகிய ஐந்தின் வேர்கள் சிறந்த மருந்தாகி மக்கள் உடற்பிணியைப் போக்கி நலம் புரிவதைப் போல் ஒவ்வொரு வெண்பாவிலும் சொல்லப்பட்டுள்ள ஐந்தைந்து பொருள்கள் கற்போரின் உள்ளப்பிணியாகிய அறியாமையை நீக்கி நன்னெறியில் ஒழுகச் செய்து இம்மை மறுமை இன்பங்களை அளிக்க வல்லனவாதலின் சிறுபஞ்சமூலம் என்ற பெயரினை எய்தியது.

3) ஏலாதி: ஏலம் ஒரு பங்கும் இலவங்கப் பட்டை இரண்டு பங்கும், நாககேசரம் மூன்று பங்கும் மிளகு நான்குபங்கும் சுக்கு ஆறுபங்கு மாகச் சேர்த்துச் செய்யப் பெற்ற ஏலாதி சூரணம் மக்களுடைய நோயை நீக்கி உடலுக்கு வலிமையளித்தல் போல' பாடல் தோறும் ஆறு பொருள்கள் அமைந்த ஏலாதி என்னும் இந்நூல் அன்னரின் அறியாமையைப் போக்கி உயிர்க்கு உறுதி பயக்கும் மெய்யுணர்வை அளிக்க வல்லது என்பது இந்நூற் பெயரால் அறியக்கிடப்பதோர் உண்மையாகும்.

**மருத்துவம் :**

மருந்து என்னும் அதிகாரத்தில் பத்து குறட்பாக்களால் மருத்துவத்தைத் திருவள்ளுவர் மிகவும் அழகாக விளக்கியுள்ளார்.

''மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளி முதலா எண்ணிய மூன்று''

—(குறள். 941)

''திருத்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய
மருந்து போல், மருந்தாகி, மனன் உவப்பப்
பெரும் பெயர் மீளி....''

(கலித்தொகை-17)

நோய் வருவது இயற்கை. அப்போது மருந்துண்பதும் இயல்பு. ஆனல் உடல் நல்ல உடலாக இருந்தால்தான் மருந்து விரைவில் உடலில் கலந்து நோய் தீர்க்கும். உடல் மிகக் கெட்ட நிலையிலே நோய் வருமானல் மருந்து ஏதும் பயன் தருவதில்லை என்று தோழி கூறுகிருள்.

''அழிந்து, அயல் அறிந்த எவ்வம் மேற்படப்,
பெரும்பேதுறுதல் களைமதி பெரும!
வருந்திய செல்லல் தீர்த்த திறன்அறி ஒருவன்
மருந்து அறை கோடலின் கொடிதே யாழ நின்
அருந்தியோர் நெஞ்சம் அறிந்து உகவிடினே,

தலைக்குத்தல் தீர்வதற்குரிய மருந்தை மருத்துவ மேதை தாமோதரனர் கூறியுள்ளதை,

''சிந்திநீர்க் கண்டம் தெரிசுக்குத் தேன்அளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில் — காந்தி
மலைக்குத்தும் மால்யானை வள்ளுவர்முப் [பாலால்
தலைக்குத்துத் தீர்வு சாத்தற்கு.''

என்ற பாடலால் நன்கு உணரலாம்.

**அறுவை மருத்துவம் :**

''மீன்றேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடு வெள்ளூசி
நெடு வசி பரந்த வடு''

(பதிற்றுப்பத்து.)

பதிற்றுப்பத்து என்ற நூலில் (5-ஆம் பத்து 2ஆம் பாடல்) வரும் அடிகள் தையலைப் பற்றிய

குறிப்புகளைத் தம்முள் அடக்கியுள்ளன. போரில் ஏற்பட்ட, பிளவுபட்ட காயத்தைத் தையலிடும் போது ஊசி சதையுள் புகுந்து பின் வெளிவரும் காட்சி மீன் கொத்திப் புள் நீருள் வாழும் மீனைக் கொத்தி எழும்போது அதன் அலகு எவ்வாறு நீருள் சென்றுபின் மீளுமோ அவ்வாறு காணும் எனக் கூறப்பட்டுள்ளது.

**உடல் கூறு :**

''குடரும் கொழுவும் குருதியும் என்பும்
தொடரும் நரம்பொடு தோலும்—
இடையிடையே
வைத்த தடியும் வழும்புமாம்''

(நாலடியார்.)

**குடல் :**

சிறுகுடல், பெருங்குடல் ஆகிய இரண்டைக் குறிக்கும்.

**கொழு :**

இது மேலே இரைக் குழலுடனும் கீழே சிறு குடலின் முற்பங்கோடும் தொடுக்கப்பட்டதாய் சற்று அகன்று காணும். இது உழவு ஏரின் கொழு போன்றிருப்பதால் இதை கொழு என்றழைத்தனர்.

''தோற்போர்வை மேலும் துளைபலவாய்
பொய்ம் மறைக்கும்
மீப்போர்வை மாட்சித்து உடம்பானால்''

(நாலடியார்)

யாக்கையின் மேற்போர்வை தோல், உடல் கூறுகளனைத்தும் தோலால் பொதியப்பட்டு அநேக விலங்குகளுக்கும் மனிதனுக்கும் உடலாகின்றது. இவைதவிர, மிக நுண்ணிய துளைகளான வியர் வைத்துவாரங்களும் தோலில் நிறைந்து காணும்.

பல்லென்பு, பழுவென்பு, கமிழ்தார் இடுதலை—உதிர்ந்த தாடை என்பு போன்றவைகளை நாலடியார் பாக்களில் நாம் காணலாம்.

**நஞ்சு நூல் :**

''கடிகொள் இருங்காப்பில் புல்லினத்து ஆயர்
குடிதொறும் நல்லாரை வேண்டுதி — எல்லா
இடுதேள் மருந்தோ, நின் வேட்கை?''

கடுமையான காவலுடையவர் ஆட்டிடையர். அவர் குடிதோறும் உள்ள மகளிரை யெல்லாம் நீ விரும்புகின்றாயே? உன் வேட்டை என்ன தேட்கடி மருந்தோ? எனக் கேட்கின்றான். இதன் வாயிலாய் தேள்கடிக்கு மருந்திட்டுள்ளனர் பண்டு என்பதை அறியலாம்.

**கோள்நூல் (சோதிடம்) :**

''ஆடியில் அழற்குட்டத் (து)
ஆரிருள் அரையிரவில்
பங்குனி உயர்அழுவத்து
பாசி செல்லாது ஊசி முன்னாது
கனையெரி பரப்பக் காலெதிர்பு பொங்கி
ஒரு மீன் விழுந்தன்றால் விசும்பினானே
அதுகண்டு, யாழும் பிறரும் பல்வேறு இரவலர்
அஞ்சினம், எழுநாள் வந்தன்(று) இன்றே''

என்ற அடிகளில் பங்குனி மாதத்தில் கார்த்திகை நட்சத்திரம் நிகழும்நாளிற் சட்டி அல்லது சத்த மிசித்திதியாக இருக்குமாதலாற் பாதியிரவில் இருள் நிறைந்திருக்கும் என்று கூறியதையும் பங்குனித் திங்களில் நட்சத்திரம் வீழ்தல் அரசர்க்கு அழிவு காட்டும் என்பதையும் கூறுவதால் சோதிட நூலையும் அக்காலத் தமிழ் மக்கள் அறிந்திருந்தனர் என்பதை உணரலாம்.

''மாக விசும்பின் வெண்டிங்கள்
மூவைந்தான் முறை முற்ற''

(புறம் 400)

பதினைந்து நிலைகளை மதி அடைகிறது என்பதையும்

''வெள்ளி தென்புலத்துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை''.

வெள்ளியாகிய மழைக்கோள் தெற்கே விலகி யிருப்பது மழையில்லாமைக்கு அறிகுறி யென்பதையும்,

''மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கில் வெள்ளி ஓடினும்
வயலக நிறையப் புதற்பூ மலர''

(புறம் 117)

என்ற அடிகளால் கோள்களைப் பற்றியும் கூறியுள்ளதைக் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால் சங்க இலக்கியத்தில் சிறந்து விளங்கும் உடல் தத்துவம், மருத்துவம், அறுவை மருத்துவம், உடல்கூறுகள் போன்றவைகள் ஆங்காங்குக் குவிந்துகிடப்பதைத் தெற்றெனக் கண்டோம். தோண்டத் தோண்ட ஊறு நீர் போல் சங்க இலக்கியத்தைப் பயில்வார் மேலும் மருத்துவச் சான்றுகளைக் கண்டுகளிக்கலாம்.

வாழிய தமிழ்! வளர்க சித்த மருந்து!

நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.

டாக்டர் ஆ. சண்முகவேலன்
சித்த மருத்துவ ஆராய்ச்சிப் பேராசிரியர், தஞ்சாவூர்

# திருமூலர் அருளிய மருத்துவத் திருமந்திரம் எண்ணாயிரம்



### ஆதிசக்தி :

ஆதிசக்திதன் அருளால் தோன்றியது இவ்வுலகம். ''சக்திதான்யென்றும் சமைந்து உருவாகுமே'' என்றார் திருமூலர். எனவே உலகம் தோன்றுவதற்குக் காரணமாய் இருந்தவள் ஆதி பராசக்தி யென்று திருமூலர் கூறுகின்றார்.

### ஆதி மருந்து :

சக்தியின் அருள் பெற்ற மனிதர்களே சித்தி பெற்றவர்கள் ஆவர். அவ்வாறு சித்தி பெற்றவர்களே சித்தர்கள். கி.மு. பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் உலகம் உய்ய ஆதி மருந்தை அருள் செய்தார் நம் அருந்தமிழ்ச்சித்தர்.

### சித்தர்வாழ் தமிழகம் :

சித்தர்வாழ் நாடென்று நம்நாடு போற்றப்படுகிறது. திருவாவடுதுறை நவகோடி சித்தர் புரம்; பழனிமலை, சித்தன்வாழ் மலையெனப்படும். கஞ்சமலைச்சித்தர் கோயில் காலாங்கிச் சித்தரோடு தொடர்புடையது. எண்வகைச் சித்திகளும் கைவரப் பெற்ற சித்தர்களுடைய வரலாற்றுக் குறிப்புக்கள் நம் பண்டைத் தமிழ் நூல்களில் இடம் பெற்றுள்ளன. ஆதிமருந்தை அடிப்படையாகக் கொண்டு சித்த மருத்துவம் பண்டைக்காலந் தொட்டு தமிழ்நாட்டில் பயிலப்பட்டு வருகின்றது. இத்தகைய பெருமை வாய்ந்த மருத்துவ முறை தமிழ்நாடு தோற்றுவித்த உயர்தனிக்கலைச் செல்வமாகத் திகழ்கின்றது.

### சித்த மருத்துவத்தின் தந்தை :

திருமூலர் தவம்செய்த திருவாவடுதுறை சித்த மார்க்கத்தின் முதல் நிலையம் எனப் போற்றப்படும். ''முந்தி உதிக்கின்ற மூலன்மடைவறை'' யென்னும் திருமந்திரத்தின் சிறப்புப் பாயிரத்தால் இது விளங்கும்.

சித்த மார்க்கம் பரவுவதற்குத் திருமூலர் காரணமாயிருந்தார் என்று சொல்லலாம். அதனாலேதான் அகத்திய வர்க்க சித்தர் என்று கூறாமல் மூலவர்க்க சித்தர், நந்திவர்க்க சித்தரென்று சித்தாதி நூல்கள் கூறுகின்றன.

### திருமூலர் எண்ணாயிரம் :

திருமூலர் இயற்றிய தமிழ் மூவாயிரம் தவிர எண்ணாயிரம் என்ற மற்றொரு நூலின் பெயரையும் கேள்விப்படுகிறோம். தமிழ் மருத்துவத்துறையின் ஆதி நூல் இது. இன்னும் வெளியிடப்படாத நூல். விலைமதிப்பில்லாத திருமூலர் எண்ணாயிரம் முற்றும் நமக்குக் கிடைக்கவில்லை. திருமூலர் கருக்கிடையில் இரசக்குளிகை பற்றிக் கூறும் ஓர் இடத்தில்,

''தேடித்திரிந்து திகையாதே மாந்தரே
பாடினே(ன்) எண்ணாயிரத்தினிற்
பார்த்திடே''.

என்று கூறப்பட்டுள்ளது.

